உங்களைப்
போன்றவர்களை
திருப்தி செய்ய
சார்மினாரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினார் புகைப்

சட்டபூர்வமான எச்சரிக்கை: சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது
STATUTORY WARNING: CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

90 பைசாவுக்கு 10

* அதிகபட்ச விலை, தலவரிகளைப் பொறு

CASVS-259-182 TAM

Main Dealer: M/S. Cigarette Traders,



# பைசா நகரத்துக் கோபுரங்கள்

தெரு தெளிக்கிற ஓசையில்தான் அன்றைக்கு சௌதாமினிக்கு விழிப்பு வந்தது. மணி என்ன இருக்கும் என்பதை யோசித்தாள். அறையில் இரவு விளக்கு அணைக்கப்பட்டுவிட்டதால் அவனின் கைக்கடிகாரத்தில்கூட மணி பார்க்க முடியாது. ராத்திரி அவள்தான் அவனிடம் கெஞ்சி விளக்கை அணைத்துவிடச் சொன்னாள். அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் விளக்கை அணைக்க அவனுக்குப் பிடிக்காது. லேசான அந்த மங்கல் வெளிச்சத்தின் துணை அல்லது உதவி அவனுக்கு நிச்சயமாய் வேண்டும். அதில் அவளது தாழம்பூ நிற மேனி பளபளப்பதை அவனுக்குப் பார்க்க வேண்டும். அவளின் தேக வாகுகூட நீளமாய் தாழம்பூ வாகுதான். சில சமயங்களில் அவளிடமிருந்து தாழம்பூ வாசனை வீசுவதாகக்கூட அவனுக்குள் ஒரு பிரமை ஏற்பட்டதுண்டு. அந்த அழகைக் கொஞ்சம் கொஞ்சமாக ரசிக்காமல் மை இருட்டில் கரிக் கறுப்பில் ஒட்டுமொத்தமாக அனுபவித்துவிட்டுப் போய்விடுவதில் அவனுக்குப் பிரியமில்லை.

இந்துமதி

ஆனல் அவள் அதற்கு அவனை அனுமதித்ததே இல்லை, விளக்கை அணைக்காமல் கட்டிலில் உட்காரக் கூடச் சம்மதிக்க மாட்டாள்.

'முதல்ல நீங்க விளக்கை அணைச்சிட்டு வாங்க, அப்புறம்தான்...' என்பாள்.

'இது என்ன பிரகாசமான விளக்கா மினி...? கை விளக்கு மாதிரி லேசான சின்ன வெளிச்சம்தானே...?' என்று கெஞ்சுவான் அவன்.

'ம்ஹூம். முடியாது. விளக்கை அணைச்சாத்தான்.'

ராத்திரியும் அவனின் முயற்சிகள் தோற்றுப்போய் விளக்கை அணைத்துப் பின், 'ஆனலும் உனக்கு ரொம்பப் பிடிவாதம்...' என்ற முணுமுணுத்த குற்றச்சாட்டுடனே அவளை நெருங்கினன்.

தினமும் அந்த விஷயத்தில் தான் ஜெயிப்பதை சற்றுப் பெருமையுடன் நினைத்து மல்லாந்து படுத்திருந்தவள் உதட்டில் ஓடிய சிரிப்புடன் ஒருக்களித்து அவனைப் பார்த்தாள். அந்தப் பார்வைக்கு இருட்டிலும் ஆகர்ஷண சக்தி இருந்திருக்க வேண்டும். அவன் கண்களைத் திறக்காமலே வலது கையை அவள் மீது போட்டு தன்னோடு சேர்த்து அணைத்துக்கொண்டதும் அவள் மெதுவாக அந்தக் கையை விலக்கி எழுந்துகொள்ள முயற்சித்தாள். அவன் அத்தனை சுலபமாக அவளை விடுவித்துவிட மனமில்லாதவனாக இன்னும் சற்று வலிமையுடன் அணைத்து காதருகில் முகத்தைக் கொண்டுபோய் ரகசியம் பேசுகிற குரலில்,

''வெளிய ரொம்பக் குளிரு மினி. சும்மாப் படுத்துக்க...'' என்றான்.

''வெளியதானே குளிர். உள்ள இல்லையே...'' என்று குறும்புச் சிரிப்பாகச் சிரித்து அவன் கேசத்தில் விரல்களால் அளைந்தாள் அவள்.

''ஐயயோ... வெளிய வி... உள்ளத்தான் ரொம்பக் குளிரு...''



''உள்ளன்னு...?''

''உள்ளத்தான்...'' என்று அந்த வார்த்தைக்குத் தனி அழுத்தம் கொடுத்து முற்றிலும் தூக்கம் கலைந்து அவள் முகத்தைக் கைகளால் வருட ஆரம்பித்து அந்தக் கை முகத்தை விட்டு கழுத்திற்கு இறங்கத் தொடங்கினதும்,

அவள் அவனை உதறிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள்.

''ராத்திரி முழுதும் தூங்க விடலை. விடியற்காலையிலயும் ஆரம்பிச்சுட்டீங்களா...? சமையற்கட்டுல பாத்திர சத்தம் கேட்குது. அத்தை எழுந்துட்டாங்க போல இருக்குது.''

''எழுந்தா எழுந்திருக்கட்டுமே...'' என்று அவள் கையைப் பற்றி உடம்பை இழுத்துத் தன் மீது சரித்துக்கொண்டு கேட்டான்.

''ஏன் மினி, அம்மா மட்டும் என்ன, மாமியாராகவேவா பிறந்துட்டாங்க...? அவங்களும் உன்னை மாதிரி புதுக்கல்யாணப் பொண்ணு இருந்தவங்கதானே...?''

– அவன் கைகள் இடையை இறுக்கினதும் அவளும் சற்று உணர்ச்சி வசப்பட்டுப் போனாள். இந்தக் கரங்களின் ஸ்பரிசத்திற்கு மட்டும் எங்கிருந்து இப்படி ஒரு காந்த சக்தி வருகிறது என்று ஆச்சரியப்பட்டாள். வீணையின் தந்தியை மீட்டினாற்போல் நரம்புகளின் இயக்கத்தில் மனதிற்குள் மெலிதான ராகங்களும், சிலிர்ப்பும் எவ்வாறு ஏற்படுகிறது...? மூன்று மாதங்களுக்கு முன்பு இதே குளிருக்கு ஒடுங்கி தங்கையின் கை இதுபோல தன்னைக் கட்டிக்கொண்டு படுத்த



போது ஏற்படாத உணர்வும், நெகிழ்வுகளும் இப்போது மட்டும் ஏன் ஏற்படுகின்றன...?

அவள் குனிந்து அவன் முகத்துடன் தன் முகத்தைப் பதித்து மென்மையாய் மிகுந்த கொஞ்சலுடன் சொன்னாள்.

''இன்னும் கூட என்ன புதுக் கல்யாணப் பொண்ணு...? கல்யாணமாகி மூணு மாசமாகப்போவுது தெரியுமில்லே...?''

''மூணு வருஷந்தான் ஆகட்டுமே. ஒரு குழந்தை பிறக்கறவரைக்கும் புதுக்கல்யாணப் பொண்ணுன்னுதான் சொல்லுவாங்க...''

அதைக்கேட்டு அவள் தீவிரமான யோசனையுடன் சற்று பேசாமல் இருந்தாள். ராத்திரி படுக்கையறைக்கு வருவதற்கு முன்புகூட 'வியாழனோடு வியாழன் எட்டு, வெள்ளி ஒன்பது, சனி பத்து' என்று கைவிரல்களை மடக்கி எண்ணி இந்த மாதம் எத்தனை நாட்கள் தள்ளிப் போயிருக்கிறது என்பதைக் கணக்கிட்டாள். இருபத்தெட்டு நாட்களில் வருவது முப்பத்தைந்து நாட்களாகியிருந்தன. அதை அப்போது அவனிடம் பகிர்ந்துகொள்ளலாமா என்று யோசித்துப் பின் இப்போது வேண்டாம் என்று முடிவு செய்தாள். இப்படி அவசரமாகச் சொல்லிவிட்டுப் போய்விட வேண்டிய விஷயமில்லை அது என்றும் தோன்றியது.

ராத்திரி நேரத்தின் நிதானத்தில் அவனைத் தன் மடியில் கிடத்திக் கொண்டு அடர்த்தியான கேசத்தில் விரல்களை அளையவிட்டு மெதுவாகக் குனிந்து முன் நெற்றியில் முத்தமிட்டு அவனைச் சீண்டிவிடுகிற தொனியில், 'இனிமேல் இதெல்லாம் இவருக்கில்லையாம்...' என்று ஆரம்பித்து,

'பின்னே, யாருக்காம்...?' என்று அவன் கோபப்படுவதை ரசித்து –

'வேறு யாருக்கோதானும்...' என்று இன்னமும் கோபத்தை அதிகப்படுத்துகிறாற்போல் பேசி அப்புறம் மெதுவாய்...

அதைக் கேட்டு அவன் என்ன செய்வான்...?

தன்னைக் குழந்தையாக்கித் த–டாமாலை சுற்றுவான்...?

'நீயே குழந்தை. உனக்கு ஒரு குழந்தையா...?' என்று வெள்ளை வெளேரென்றிருக்கும் தன் வயிற்றைத் தடவிக்கொடுப்பான்...?

இல்லாவிட்டால் –

'மூணு மாசம் கூட ஆகலே. அதுக்குள்ளேயா...?' என்று பொய்க்கோபப் படுவான்.

அதுவும் இல்லாது போனால் –

'மூணே மாசம்தான். ஐயா எத்தனை சாமர்த்தியசாலி பார்த்தியா...?' என்று தானே தன் வீர்யத்தைச் சொல்லிக்கொள்வான்...?

## ஏ.ஸி. சாராயக்கடை




கஸ்டமர்களைக் கவர்ந்திழுக்க 'குளுகுளு' ஏ. ஸி.யுடன் சொகுசான சாராயக்கடை இருக்கிறது. எங்கே? சென்னையில் உள்ள தங்கசாலையில்.

கோழி, முட்டை, மீன், கறி இப்படி எல்லா வகையான ஸைட் டிஷ்களும் இங்கே உண்டு. அது மட்டும்தானா? டெலிவிஷன் வசதியுடன் ஸ்டீரியோ மியூசிக்கும் முழங்குகிறதாம் இங்கே.

இவ்வளவு வசதி இருந்தும் என்ன பயன்? தண்ணி அடித்ததும் கொண்டுவந்த பொருள்களை விட்டுவிட்டுப் போய்விடுகிறார்களாம். இதுபோன்ற ஏர்கண்டிஷன் சாராயக்கடை வேறு எங்காவது இருக்கிறதா?

படம் – தகவல்: வி. கோவிந்தராமானுஜம்

அத்தனைக் கொஞ்சல்களுக்கும் விளையாட்டுக்களுக்கும் இடம் கொடுத்து சாவதானமாகச் சொல்ல வேண்டிய விஷயத்தை இப்படி வேகமாகவும், அவசரமாகவும், அழகில்லாமலும் சொல்லிவிட்டுப் போய்விடக் கூடாது...

தீர்மானப்படுத்திக்கொண்ட பின்பு தன் உணர்வு பெற்றவளாக அவனை விட்டு விலகி புடவையையும், தலையையும், கழுத்தோரம் ஒதுங்கின சங்கிலியையும், விரல் பருமனுக்குப் புதிதான மஞ்சளில் பளபளத்த மாங்கல்யக் கயிற்றையும் சரிபண்ணிக் கொண்டு இயல்பான தன் குழந்தைச் சிரிப்போடு அவசரமாகக் கட்டிலை விட்டு இறங்க எத்தனித்து பின் சற்று நிதானித்து ஏமாற்றமும் கோபமும் நிறைந்திருந்த அவனின் முகத்தைப் பார்த்தாள்.

''என்ன கோபமா என் ராசாவுக்கு...?'' என்று கன்னங்களை வருடினாள்.

அவன் பதில் சொல்லவில்லை.

''திரும்ப இன்னிி ராத்திரிக்கு... என்ன...?'' என்றாள்.

அப்போதும் அவனிடமிருந்து பதில் வராமற் போகவே அவளின் குரலில் வருத்தம் மிகுந்தது.

''பேசாமல் இருந்தால் கோபம்னு தான் அர்த்தம். நான் கூட கொஞ்ச நாழி இல்லேன்னு நீங்க கோவிச்சுக் கறீங்க. இருந்தால் அத்தை கோவிச்சுக்கறுங்க. தினமும் காலைல அறையை விட்டு வெளியில் போனதும் என்ன சொல்றுங்க தெரியுமா...?''

''என்ன சொல்றுங்க...?''

''நாலு குடித்தனத்துக்கு நடுவில் இருக்கோமாம். யாரும் சிரிக்காம நடந்துக்கணுமாம். உங்க தங்கச்சி கோகிலாவும் விவரம் தெரிஞ்ச பொண்ணு யிடுச்சாம். அவளைக் கட்டிக்கொடுக்கிற வரைக்கும் கொஞ்சம் இலை மறைவு காய் மறைவா நடந்துக்கம்மா. ராத்திரி அது படுக்கப்போனப்புறம் நீ படுக்கப்போம்மா. காலையில அது முளிச்சுக்கறதுக்குள்ள எழுந்திருச்சு வந்துடுங்கறுங்க...''

''அப்ப கோகிலாவுக்குக் கல்யாணம் பண்ணிவச்சிட்டு எனக்குக் கல்யாணம் பண்ணியிருக்கலாமில்ல...?''

''சரிங்க. அத்தை சொல்றதில என்ன தப்பு இருக்கு? எதுக்கும் வேளை வரணுமில்ல? கோகிலாவுக்கும் பார்த்துக்கிட்டேதானே இருக்காங்க. அது வரைக்கும் நாம கொஞ்சம் கட்டுப்பாடா நடந்துக்கிட்டாதான் என்ன...?''

''அது சரி. உன்னை மாதிரி அழகான பொண்ணைப் பார்த்து கல்யாணத்தையும் பண்ணிவச்சிட்டு, குளிர் காலத்தையும் கூட வரவழைச்சு, சும்மா கட்டுப்பாடா இரு, கட்டுப்பாடா நடந்துக்கன்னு எப்பிடி நடந்துக்கறதாம்...?''

□□□

சினிமாவில் முதல் கிஸ்

சினிமாவில் முதல் முதலாக முத்தக் காட்சி அரங்கேறியது 1896-ல் தாமஸ் எடிஸன் தயாரித்த 'The Kiss' என்னும் திரைப்படத்தில். ஜான் சி. ரைஸ் என்னும் நடிகரும் மே இர்வின் என்னும் நடிகையும் முத்தமிட்டார்கள். முத்தக் காட்சி நேரம்: 30 வினாடிகள்.

– என். வி. நாதன்

□□□

''இதோ இப்படித்தான்.'' – அவள் அவன் கைகள் இரண்டையும் அவனுடைய மார்பின் குறுக்காக மடக்கி வைத்து, போர்வையை எடுத்துப் போர்த்தி,

''கொஞ்ச நேரம் நிம்மதியாத் தூங்குங்க. நான் அப்புறம் காப்பி கலந்துக்கிட்டு வந்து எழுப்பறேன்.''

சத்தப்படுத்தாமல் அறையின் கதவைச் சாத்திக்கொண்டு வெளியில் வந்தபோது கூடத்தில் கோகிலா தலையிலிருந்து கால் வரை போர்த்திக் கொண்டு தூங்குவது தெரிந்ததும் கொஞ்சம் நிம்மதியாயிற்று. நல்ல வேளையாகக் காலையில் எழுந்த உடனே மாமியாரின் முகத்தை சிணுங்கவைக்க வில்லை.

அதுவே அன்றைய முதல் சந்தோஷ நிகழ்ச்சியாய் அமைய, கோகிலாவின் பக்கத்தில் மணி தன் போர்வை விலக பாயை விட்டும் தரையில் நகர்ந்து குளிர் தாங்காமல்

இரண்டு கைகளையும் கால்களுக்கிடையில் கொடுத்து உடம்பை ஒடுக்கிக் கொண்டு படுத்துக் கிடப்பதைப் பார்த்து அவனருகில் போய் அவனைத் தூக்கி நேராகப் படுக்க வைத்துப் போர்த்தினாள்.

சற்றுத் தள்ளி மர பெஞ்சில் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த மாமனாரைப் பார்த்தாள். அருகில் கீழே மாமியாரின் பாய் காலியாகக் கிடப்பது கவனத்தில் பட்டதும் உடம்பில் மீண்டும் ஒரு சுறுசுறுப்பு வர சுவரோரமாகக் கொடியில் தொங்கின துணிகளில் தன் உடைகளை இனம் பிரித்து எடுத்துக்கொண்டு குளிக்கப் போனாள்.

தினமும் எழுந்ததும் முதல் வேலையாகக் குளித்துவிட வேண்டும் என்பது மாமியாரின் சட்டம். படுக்கை அறையை விட்டு வந்ததும் தலை குளிக்காமல் சமையலறைக்குள் நுழைவது என்பது மாமியாருக்குப் பிடிக்காத விஷயம். இந்த மாதிரி மாமியாருக்குப் பிடிக்காத விஷயங்கள் நிறைய. வீட்டிற்குள் காலடி எடுத்து வைத்த முதல் நாளே அவளைக் கூப்பிட்டு உட்காரவைத்துத் தலையைப் பின்னி விடுகிற சாக்கில் பட்டு கத்தரித்த மாதிரி பட்டியல் போட்டே சொல்லி விட்டாள் மாமியார்.

‘‘ஆமாம்! சௌதாமினி, இதென்ன பேரு...? நம்ம பக்கத்துப் பேராத் தெரியலையே...?’’

‘‘அப்பா ஸ்கூல் வாத்தியாராச்சா. தாகூர்னு அவருக்கு ரொம்ப இஷ்டம். அவரது கவிதையொன்றில் இந்தப் பேரு வருதாம். அவருக்குப் பிடிச்ச பேரு. அதனால, எனக்கு அதையே வைச்சுட்டாரு...’’

‘‘அது யாரு தாகூரும் பூகூரும்...? உன்னோட பேரு எனக்கு மறந்து மறந்து போவுது. அதனால யார் உன்னை எப்பிடி கூப்பிட்டாலும் நான் வேற பேர் வச்சுத்தான் கூப்பிடப் போறேன்...’’

‘‘கூப்பிடுங்களேன் அத்தை.’’

‘‘என்ன பேரு வைக்கலாம்...? சொர்ணம்னு வைக்கட்டுமா...? உன்னுடைய நிறத்துக்கும் அழகுக்கும் பொருத்தமாக்கூட இருக்கும். என்ன சரியா...?’’

‘‘சரி அத்தை.’’

அப்புறம் பட்டியல் வாசிக்கப் பட்டது:

1. குடித்தனக்காரர்களிடம் அனாவசியமாகப் பேசக்கூடாது.
2. தெருவாசலில் காரணமற்று நிற்கக் கூடாது.
3. உடம்பு தெரிகிற நைலான், நைலக்ஸ் உடுத்தக்கூடாது.
4. தலைமயிரைக் கத்தரித்து விட்டுக் கொள்ளக் கூடாது.
5. சின்னஞ் சிறுசுகள் எதிரில் புருஷனிடம் இழையக் கூடாது.
6. பகல் தூக்கம், வெட்டிப் பேச்சு, சோம்பேறித்தனம் கூடவே கூடாது.
7. முக்கியமாக ‘எங்கம்மா வீட்ல’ என்கிற வார்த்தை பேச்சின் நடுவில் ஒருபோதும் வரக்கூடாது.

‘‘கிரிக்கெட் ஆட்டக்காரரைக் கல்யாணம் செய்துகிட்டது தப்பாப் போச்சு!’’

‘‘ஏன்? என்ன ஆச்சு?’’

‘‘பின்னே பாரேன்! கோபத்தில எதைத் தூக்கி எறிஞ்சாலும் அவர் ‘கேட்ச்’ பிடிச்சுடறார். அவர் மேல ஒண்ணுகூடப் படமாட்டேங்குது!’’

– சம்பத்குமாரி



''என்ன பார்க்கறே...? நான் கல்யாணம் பண்ணிக்கிட்டு வந்த போது எங்க மாமியார் இன்னும் எத்தனைக் கண்டிஷன் போட்டாங்க தெரியுமா...? அத்தனைக்கும் அடங்கி நடந்ததனால்தான் குடும்பம் இன்னிக்கு இந்த அளவிற்கு முன்னேறியிருக்கு.

''நான் வந்தபின்புதான் நாலு நாத்தனார்மாருங்களுக்குக் கல்யாணமாச்சு. ரெண்டு மச்சினங்களும் கல்யாணம் பண்ணிக்கிட்டுப் போனாங்க. எல்லாத்துக்கும் காரணம் நான் தான்னு மாமியாரும், மாமனாரும் அடிக்கடி சொல்லுவாங்க. அவங்க கண் எதிர்ல குடும்பம் நல்லபடியா வளர்ந்து கரையேறிச்சு. அவங்களும் ஒவ்வொருத்தரா என் மடியிலே பிராணனை விட்டாங்க. எதுக்கு இத்தனையும் சொல்றேன்னு கேட்டியானா - நீ அதே மாதிரி நல்ல பேர் எடுக்கணும். இருக்கிற ஒரு நாத்தனாரையும், மச்சினனையும் கரையேத்தணும். என் உசிரும் உன் மடியிலயே போகணும்...''

அதுவரை மௌனமாகக் கேட்டபடி தலை பின்னி, பூ வைத்து, கண்ணாடியைப் பார்த்து நெற்றியின் நடுவில் சின்னதாகப் பொட்டிட்டுக்கொண்டிருந்த சௌதாமினி திரும்பினாள்.

''நீங்க சொன்ன அத்தனையும் ஒரு பேச்சு விடாமல் நடக்கும் அத்தை. ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் நடக்காது...''

அவ்வளவு தீர்க்கமாக அவள் மறுப்பதைக் கேட்டு முதலில் மாமியாரின் கண் சிடுசிடுத்தது

''அது என்ன விஷயம்...?''

''நீங்க கண்மூடற விஷயம். அதுக்கு இப்ப என்ன அவசரம் வந்திடுச்சு...? மணிக்குக் கல்யாணமாகி அவனோட பேரன் பேத்திகளை மடியில வச்சு கொஞ்சிட்டு -''

சிடுசிடுத்த கண்கள் சந்தோஷச் சிரிப்பால் அகன்று பேச்சிலும் அந்த சந்தோஷம் எட்டிப்பார்த்தது.

''ஏன், அவங்க பேரன் பேத்தி எடுத்து கொள்ளுப்பேரன் கொள்ளுப் பேத்திங்களையும் பார்க்கணுமின்னு சொல்லுவே போல இருக்கே...''

''அட, அதையேதான் அத்தை சொல்லவந்தேன். நீங்களே சொல்லிட்டீங்க. நில்லுங்க அத்தை. ஒரு தரம் கால்ல விழுந்து கும்பிடறேன். நீங்க சொன்னமாதிரி நடக்கணுமின்னு ஆசீர்வாதம் பண்ணுங்க...''

குளிக்கும்போது மீண்டும் ஒரு முறை அதெல்லாம் ஞாபகத்திற்கு வந்து அவளைப் புன்சிரிப்பாகச் சிரிக்க வைத்தது. இந்த மூன்று மாதங்களைப் போலவே நாட்கள் போகுமானால் அதெல்லாம் அவ்வளவு கஷ்டமான விஷயங்கள் இல்லை என்று தோன்றிற்று. இன்னும் இருபது, இருபத்தைந்து வருடங்களுக்குப் பின்னால் தானும் யாராவது ஒரு பெண்ணிற்குத் தலைவாரிப் பின்னிக்கொண்டே அத்தை தன்னிடம் சொன்னதை அப்படியே சொல்வோமோ என்ற எண்ணம் வந்ததும் அந்தக் காட்சி கண்முன் விரிய, தலை சற்று நரைத்து, உடம்பு லேசாய் ஊதிப் போய், கண்களில் இருக்கும் குழந்தைத்தனமும், குறும்புத்தனமும் மறைந்து ஒரு அடித்து நிறுத்துகிற பார்வை வந்து -

'யாரும் மாமியாராகவே பிறக்கிறதில்லைதான்...'

கறுப்பில் பூ போட்ட வாயில் புடவையும், கறுப்பு ரவிக்கையும், ஈரம்



''ஐயா...''

''பிச்சைபோட ஒண்ணுமில்லேப்பா...''

''பிச்சை வேண்டாங்க .. கிரிக்கெட் ஸ்கோர் என்னன்னு சொல்லுங்க, போயிடறேன்!'' - ராஜேஸ்வரி

உலர தலையில் முடிச்சிட்ட வெள்ளைத் துவாலையுமாக அவள் காலை வேலை களுக்குத் தயாராக சமையலறைக்குள் நுழையப் போனவள் மணி படுத்திருப் பதைப் பார்த்துச் சற்றுத் தயங்கி நின்றாள்.

'நாளைக் காலையில அஞ்சு மணிக்கு என்னை எழுப்பிடுங்க அண்ணி. டெஸ்ட் இருக்கு படிக்கணும்.'

இரவு படுக்கப்போகுமுன் அவன் சொல்லிவிட்டுப் போனது நினைவிற்கு வர, அவனருகில் போய் நீண்டநேரம் தட்டியும், உலுப்பியும் அவனை எழுப் பினாள்.

''பல்தேய்ச்சு முகம் கழுவிக் கிட்டுப் போய் படிக்க உட்காரு மணி. இதோ சூடா காப்பி கலந்து எடுத்துக் கிட்டு வரேன்.''

சமையலறைக்குப் போய் பால் காய்ச்சி, டிகாக்ஷன் இறங்குவதற் குள், குழாயடியில் தவலைப் பூக்கள் மஞ்சள் மஞ்சளாக இன்னும் பூக்க ஆரம்பிக்காதது நினைவிற்கு வர முதலில் ஒரு தவலைத் தண்ணீர் பிடித்துக் கொண்டு வந்துவிடலாமென்று கவலை யுடன் வெளியில் வந்தபோது–

மணி தாழ்வாரத்தின் சுவரோரம் சரிந்து சற்றே பெரிதான குரலில் படிப்பதைக் கேட்டாள்.

'பைஸா நகரத்து கோபுரம் சாய்ந்த கோபுரம்.

மற்ற கோபுரங்களைப் போல் இல் லாமல் இது சாய்ந்தே இருக்கிறது.

பைஸா நகரத்து கோபுரம் சாய் வாக இருக்கும்.

பைஸா நகரத்து...'

கீறல் விழுந்த இசைத்தட்டாகத் திரும்பத் திரும்ப அவன் படித்த அந்த வாக்கியம் அவள் மனதிற்குள்ளும் கீறலாக விழுந்து அவளை யோசிக்க வைத்தது. அந்த யோசனை மாறாமல் தண்ணீர் பிடித்து, காப்பி கலந்து, மணிக்கும், மாமியாருக்கும் கொடுத்து கணவனுக்குக் கொடுப்பதற்காகக் காப்பி டம்ளரை டபராவினுள் வைத்து எடுத்துக்கொண்டு அறைக்குள் போனாள் அவள்... — தொடரும்

---

### பார்த்தபோது




கவிஞர் சுப்பு ஆறுமுகம் சொல்லக் கேட்டவர்: சாபுசங்கர்

''வில்லுப்பாட்டு நடந்த ஒரு கிராமத்துக்குப் போயிருந்தேன். நன்கு வளர்ந்து வரும் கிராமம் அது. பல வசதிகளைப் பெற்றுவிட்ட கிராமம். அங்கே ஒரு நூல் நிலையம். ஆசையுடன் உள்ளே ஓடினேன்; பரபரவென்று புத்தகங்களைத் தேடினேன்...

கிடைத்துவிட்டது! நான் எழுதி வெளியான புத்தகம் அந்த நூல் நிலையத்தில் வைக்கப்பட்டி ருந்தது! முப்பது புத்தகங்கள் எழுதியிருக்கும் நான், அது புத்தகமாக வெளியானதைவிட, பிறரால் படிக்கப்படும்போதுதான் மிகவும் மகிழ் வேன். அந்த வகையில் என் புத்தகம் பலராலும் படிக்கப்படும் வசதியில் அந்த நூல்நிலையத்தில் இருந்தது கண்டு மிக மகிழ்ந்தேன். ஆனால் இதென்ன... இவ்வளவு சுத்தமாக, கொஞ்சம்கூட அழுக்காகாமல் இருக்கிறதே... அப்புத்தகம் மட்டு மல்ல, வேறு பிரபல எழுத்தாளர்களின் புத்தகங்கள் சிலவும் அதே கதியில்தான் இருந்தன.

எனக்கு ஞானோதயம் பிறந்தது. புத்த கங்கள் எல்லா மக்களையும் போய் அடைவதில்லை. நூல்நிலையம் இருந்தாலும், வந்து படிக்கும் வாச கர்கள், குறிப்பாக என் புத்தகம் படிக்கும் வாச கர்கள் மிகக் குறைவே. மீதிப்பேரை நேரில்தான் சந்திக்கவேண்டும் என்று தீர்மானித்தேன். எற் கனவே நான் நடத்திவந்த வில்லுப்பாட்டு நிகழ்ச்சி களின் எண்ணிக்கை அதிகரித்தது.''

இந்துமதி

# பைசா நகரத்துக் கோபுரங்கள்

காப்பி டம்ளருடன் செளதாமினி உள்ளே நுழைந்தபோது நந்தகுமார் தூங்கிக்கொண்டுதான் இருந்தான். இவள் போய்த் தொட்டதும் சடாரென்று எழுந்து உட்கார்ந்து கொண்டான். காப்பி டபராவை நீட்டினபோது செளதாமினிக்கு மற்றவர்களுக்காக மாமியார் போட்ட பட்டியலின் முதல் கட்டளை ஞாபகத்திற்கு வந்தது.

1. எழுந்தவுடன் பல் தேய்க்காமல் யாரும் பெட்காப்பி குடிக்கக் கூடாது.

ஆனல் நந்தகுமார் மட்டும் இதற்கு விதிவிலக்கு. இதுபோல் நிறைய விஷயங்களில் அவனுக்குத் தனிச் சலுகைகள் உண்டு. அதற்கு மாமியார் சொல்கிற காரணங்கள் – அவன் மூத்த பையன். இந்த 24 வயதிலும் தனக்கு அடங்கி நடப்பவன். நிறம், குணம், உருவம் எல்லாவற்றிலும் தன்னையே கொண்டிருப்பவன். அந்தக் குடும்பத்தைச் சார்ந்த இவன் வயதுப் பையன்களெல்லாம் எஸ். எஸ். எல். சி. யும், பி. யு. சி. யும் ஃபெயிலாகி வேலை எதுவும் கிடைக்காமலும், பயிரையும், வியாபாரத்தையும் கவனித்துக்கொண்டிருக்கிறபோது இவன் மட்டும் பி.காம். முடித்து பாங்க் வேலை பார்ப்பவன்.

அவனிடத்தில் மாமியாருக்கு ஏதாவது குறை இருக்கும் என்ருல்



அது பட்டிணத்து பாங்க் எதிலாவது வேலையில் அமராமல் இப்படி ஒரு பட்டிக்காட்டு பாங்க்கைத் தேடி வந்து உட்கார்ந்திருக்கிறனே என்பதுதானே தவிர வேறில்லை. அதற்காக அம்மா விற்கும் பிள்ளைக்குமிடையில் அடிக்கடி நடக்கும் வாக்குவாதத்தை நினைத்துச் சிரித்தவள், தான் நீட்டின டம்ளரை வாங்காமல் அவன் தன் முகத்தையே இமைக்காமற் பார்த்துக்கொண்டிருப் பதைக் கவனித்தாள்.

''இப்படி என் முகத்தையே பார்த் துக்கிட்டிருந்தா காப்பி ஆறிடப் போவுது...''

''இப்பவே ஆறித்தான் போயி ருக்கும்.''

''இல்லீங்க. பொங்கின பால்ல சூடாக இறங்கின டிகாக்ஷனை விட்டு கலந்துகிட்டு வரேன்...''

''அடுப்பிலேருந்து இறக்கி எடுத் துக்கிட்டு வந்தால்கூட உன் கை பட்டதுன்னு சில்லுனு ஐஸ் கட்டியா குளிர்ந்து போகுதே மினி...''

''காலையில எழுந்து இப்படி பேசிக் கிட்டு நில்லுங்க, அப்புறம் என்னாலத் தான் நேரமாச்சுன்னு சத்தம் போடுங்க...''

''வேணும் தாயே. இதோ கிளம் பிடறேன்...''

அவன் காப்பி டம்ளரை வாங்கிப் பாதி குடித்து பின் அவளைப் பார்த்து, ''நீ குடிச்சியா மினி...?'' என்று கேட் டான்.

''நீங்க குடிக்கிறதுக்கு முன்னால நான் எப்போ குடிச்சிருக்கேன்?''

''சரி, இந்தா. இதில் நீ பாதி. நான் பாதி.''



''வேணுங்க. அதுவே சின்ன டம்ளருங்க.''

''ஆமாம். இதைவிட சின்ன விஷயங்களையெல்லாம் பகிர்ந்துக்கலையா?''

''சீ! போங்க. நீங்க ரொம்ப மோசங்க'' என்று சிணுங்கி தன் தோளில் கை போட்டு அணைத்து உதட்டில் அவன் வைத்த காப்பியைக் குடித்தவள் டம்ளரை வாங்கிக்கொண்டு சிறிது தயங்கி நின்றாள்.

அந்தத் தயக்கம் புதிதாகத் தெரியவே, பரிவோடு அவளின் தேவை என்ன என்பதைத் தெரிந்துகொள்கிற ஆர்வத்துடன் கேட்டான் அவன்.

''என்ன மினி?''

''ஒண்ணுமில்லீங்க. எனக்கு ஒரு சின்ன சந்தேகங்க.''

''என்னது?''

''பைசா நகரத்து கோபுரம் எங் கேங்க இருக்கு?''

''என்ன மினி இது. எஸ். எஸ். எல். சி. பாஸ் பண்ணிட்டு இந்த மாதிரி ஒரு கேள்வி கேட்கறே...?''

''எப்பவோ படிச்சது மறந்திடுச்சுங்க.''

''எப்பவோ படிக்கலே. இப்பதான் ரெண்டு வருஷமாவுது நீ பாஸ் பண்ணி. ஆமா, பூகோளத்துல நீ எப்பவுமே கோளமா?''

''அப்படியே வச்சுக்கிட்டு சொல்லுங்க.''

''பைஸான்றது ஒரு ஊரு மினி. இத்தாலியில் இருக்கு. அடுத்து இத்தாலி எங்கே இருக்குன்னு கேட்க மாட்டியே. ஆமா, திடீர்னு உனக்கு ஏன் பிஸா ஞாபகம் வந்தது?''



''மணி பைஸா நகரத்து கோபுரம் சாய்வானதுன்னு படிச்சுக்கிட்டிருக்கான். சாய்வாக ஒரு கோபுரத்தை எப்படிக் கட்டினாங்கன்னு யோசிக்கறேன்...''

''மண்டு. அதை சாய்வாகக் கட்டலே. நேராகத்தான் கட்டினாங்க. பாரம் தாங்காமல் அதுவே கொஞ்சம் கொஞ்சமாகச் சாய்ஞ்சு இப்போ சாய்வாகவே நிக்குது. எந்த நேரமும் கீழே விழலாம் என்ற பய[illegible] இருக்கு. அதனால் அதன் பக்க[illegible]

யாருமே போறதில்லே. நாய்கூட அதை அண்டறதில்லே. யாராலும் சீந்தப்படாமல் அது பாழ்பட்டு பரிதாபமா நின்னுட்டிருக்கு. அதனுலதான் நம்ம பெரியவங்க ஒவ்வொண்ணுக்கும் ஒவ்வொரு லட்சணத்தை வச்சிருக்காங்க. கோபுரம்னுல் அது கோபுரமாக இருக்கணும். அதில்லாமற் போனுல் இப்படித்தான் சாய்ஞ்சு, சரிஞ்சு, யாரும் கிட்ட நெருங்கக்கூட பயப்படும்படியான ஒரு நிலைமைக்கு வந்துடும்.''

அதைக் கேட்டதும் அவளுக்குள் சொல்லத் தெரியாததாக ஒரு சங்கடம் ஏற்பட்டது. பாழடைந்து, அருகில் யாரும் போகப்படாமற் சரிந்து நிற்கிற கம்பீரமான ஒரு கோபுரத்தின் நிலைமையை அவளால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லே. அப்படி சரியும்படிக் கட்டினது யார் என்பதைக் கேட்க வாயெடுத்தபோது, அவன் தன் சோப்புப்பெட்டியையும், துவாலேயையும் எடுத்துக்கொண்டு குளிக்கத் தயாரானவன் அவளேப் பார்த்துவிட்டு நின்றுன்.

''இது என்ன மினி... காலேல எழுந்து எங்கோ சாய்ஞ்சு நிற்கிற கோபுரத்தைப் பற்றி வேண்டாத கவலே. போய் வேலேயைக் கவனி. நான் இதோ நிமிஷத்துல குளிச்சிட்டு வந்துடறேன்.''

அவன் குளித்து, உடை மாற்றி அழகாய் பளிச்சென்று சமையலறைக்குள் வந்து நின்றபோது அவள் ஒரு விஞடி அவனேயே பார்த்துக்கொண்டு நின்றதும் அவன் குறும்பாகச் சிரித்துக்கொண்டே கேட்டான்.

''என்ன அப்படிப் பார்க்கறே. வேணும்னு ஆபீசுக்கு லீவ் போட்டுடட்டுமா?''

''ஷ்...'' என்று உதட்டில் விரலே வைத்து அடக்கி சமையலறைக்கு வெளியில், கீரைக்கட்டை ஆய்ந்து



கொண்டிருந்த அவனுடைய அம்மாவைக் காட்டினுள்.

''அம்மாதானே... இருக்கட்டுமே. நீ இப்படி பார்த்தியானுல் வேற எ... செய்யறதுன்னு அம்மாவையே ... கலாம் வரியா.''

''ஐயோ... பேசாம சாப்பிட உக்காருங்க'' என்று இரகசியமான குரலில் கெஞ்சி, உள்ளே வந்த மணியைப் பார்த்து, ''வா மணி. நீயும் உக்காரு'' என்று சூடாக இட்லிகளே வைத்து சட்னி போட்டு, இரண்டாவது தரம் குடிப்பதற்கு காப்பி கலந்து கொண்டிருந்தபோது வெளியில் மாமியாரின் குரல் கேட்டது.

''வாங்க சம்பந்தி, வாங்க. உட்காருங்க.''

அப்பா!

அவள் தன் ஆர்வத்தையும், சந்தோஷத்தையும் அடக்க முடியாதவளாக சமையலறையிலிருந்து எட்டிப் பார்த்தாள். அதைக் கவனித்த மாமியார்,

''என்ன எட்டிப் பார்க்கறே? உங்கப்பாவிற்கு பலகாரம் காப்பி கொண்டு வா.''

அவருக்கும் சேர்த்து கா...ப கலந்து கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு ''வாங்கப்பா'' என்று சிரித்தாள்.



''போனஸ் பணத்திலே கிரைண்டர் வாங்கப் போறேன்.''

''ஏண்டி வீணுகை செலவு செய்கிறுய்... அடுத்த மாதம் தான் உனக்கு கல்யாணம் ஆகப்போகுதே!''

– சி. கே. இளமுருகன்

பிலிம் சென்ஸார் போர்டின் தலைவராகப் பணிபுரியும் ஹரிகேஷ் முக்கர்ஜி திரைப்பட சம்மேளனங்களுக்கும், தயாரிப்பாளர்களுக்கும் சமீபத்தில் ஒரு சுற்றறிக்கை அனுப்பினார்.

அதில், ''பெண்களை மட்டம் தட்டிப் படமெடுப்பது ஆட்சேபத்துக்குரியது. பெண்மையை இழிவுபடுத்தி இனி யாராவது படமெடுத்தால் அது சென்ஸார் போர்டினால் நீக்கப்படும். தயாரிப்பாளர் இதற்கு மறுத்தால் சென்ஸார் சர்ட்டிபிகேட் கொடுக்கப்படமாட்டாது'' என்று எச்சரித்திருக்கிறார் முக்கர்ஜி.

– ரமேஷ்

''என்னம்மா, நல்லா இருக்கியா?''

''இருக்கேம்பா. நீங்க எப்படி இருக்கீங்க? அம்மா, அபிராமி எல்லாம் சௌக்கியமா?''

''அவர் பதில் சொல்ல ஆரம்பித்தபோது நந்தகுமாரும், மாமனாரும் வரவே அவள் சமையலறையின் நிலைப்படி ஓரமாக ஒதுங்கி நின்றாள். அப்பா அவர்களை விசாரித்தபின் தான் வந்திருக்கிற காரணத்தைத் தெரியப் படுத்தினார்.

''கல்யாணமாகி மூணும் மாசம் மாங்கல்யக் கயிற்றைப் பிரிச்சுக் கோர்க்கணும். வர்ற வெள்ளிக்கிழமை நல்ல நாளாக இருக்கு. நீங்கள்ளாம் குழந்தையையும் கூட்டிக்கிட்டு வந்து நல்லபடியா நடத்தி வைக்கணும்.''

''அதுக்கென்ன செய்திட்டாப் போச்சு. ஆனால் வெள்ளிக்கிழமைக்கு நடுவில இன்னும் ஒரே நாள்தானே இருக்குன்னுதான் யோசனையா இருக்கு.''

''அதுக்கு என்னங்க யோசனை? ...ன் என்ன தள்ளியா இருக்கேன்? இ...தர் ஓரடி. காலை பஸ்ஸைப் பிடிச்சால் பகல் சாப்பாட்டிற்கு அங்கே இருக்கலாம். யோசிக்கக்கூடாது. எல்லாம் நல்லபடியா நடந்தமாதிரி பெரியவங்க நீங்க வந்து இதையும் நல்லா நடத்தித் தரணும்.''

''சரி. வரோம்.''

''ரொம்ப சந்தோஷம். குழந்தைக்கும், மாப்பிள்ளைக்கும் பிடிச்ச மாதிரியாகப் புடவையும், வேஷ்டியும் எடுத்துக்கிடட்டும் என்று பணமாகவே கொண்டு வந்திருக்கேன். சிரமம் பார்க்காமல் இன்னிக்கு சாயந்திரமே எடுத்துக்கிட்டு வந்துட்டாங்கன்னா நீங்க எல்லாரும் நாளைக்கே கிளம்பி வந்துடலாம்...''

''அப்படியே செய்திட்டாப் போச்சு.''

''அப்ப நான் வரேன்'' — அவர் எழுந்துகொண்டதும் மாமியாரின் குரல் பளிச்சிட்டது.

''நல்லா இருக்கு. வந்துட்டு சாப்பிடாமப் போவாங்களா... இருந்து சாப்பாட்டுக்கப்புறம் கிளம்பலாம்.''

''இல்லீங்க. அங்க நிறைய வேலை இருக்கு. அறுப்பு வேற நடந்துட்டிருக்கு. உங்களைக் கூப்பிடணும்னுதான் ஓடி வந்தேன். மாப்பிள்ளை பாங்குக்குப் போறபோது ஸ்கூட்டர்லயே கூட்டிக்கிட்டுப் போய் பஸ் ஸ்டாப்புல இறக்கிவிட்டார்னா சௌகர்யமாக இருக்கும்.''

''அதுக்கென்ன மாமா. கிளம்புங்க. விட்டுட்டுப் போறேன்.''

மீண்டும் ஒரு முறை அழைத்து விட்டு அவர் நந்தகுமாருடன் கிளம்பினபோது மாமியார் வாசல்வரை போய் சொல்லி அனுப்பினாள்.

''சாயந்திரம் சீக்கிரமா வந்துடு குமார். அவளையும் தயாராக இருக்கச் சொல்றேன். ரெண்டு பேருமாகப் போய் துணிமணி சாமான்களை வாங்கிட்டு வந்துடுங்க. என்ன...?''

''சரிம்மா.''

ஆனால் அன்று மாலை அவன் வருவதற்கு நேரமாயிற்று. அதற்குள் வாசல் நடைமிலேயே காத்திருந்த மாமியார், 'என்ன பிள்ளை இவன்...' என்று சலித்துக்கொண்டாள்.

''காலையிலேயே சீக்கிரம் வரச் சொல்லி சொல்லி அனுப்பியும் இப்படி

**ஹை பவர் ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவை–
அது வெட்டவெளிச்சம்.**

தூசி, அழுக்கு, எதனையும் சுவடு தெரி-
யாமல் அகற்றி வெளுக்கும் அதிக டிட்டர்-
ஜென்ட் சக்தி—அதுதான் ஹை பவர்
ஸர்ஃப். படு அழுக்கான துணி-
களுக்கும் பளிச்சிடும் வெண்மை.
கேட்பானேன், வேறெந்த
சலவைப் பவுடரையும் விட
ஸர்ஃப் உபயோகிக்கும்
தாய்மார்களே அதிகம்.






**வேறெந்த சலவைப் பவுடரையும்
விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SU-220-1710 TM

நேரம் கடத்தருனே. பெரிய தெரு மார்க்கெட் என்ன பக்கத்துலயா இருக்கு! பதினைஞ்சு மைல் போய் திரும்ப வேணும்! உன்னையும் வேற கூட்டிக்கிட்டு ஒத்தையில போக ணுமே...?'' என்று கடிந்துகொண்டிருந்தபோதே ஸ்கூட்டர் சப்திக்க வந்தான் அவன். வாசல் புழுதி மண்ணிலேயே ஸ்கூட்டரை நிறுத்தி படியேறினபோது,

''ஏண்டா. சீக்கிரம் வரக்கூடாது? காலையில சொல்லி அனுப்பலை?'' என்று அவனிடமும் கோபித்துக் கொண்டாள்.

''சீக்கிரம் தாம்மா கிளம்பினேன். வழியிலே ஸ்கூட்டர் மக்கர் பண்ணிடுச்சு.''

''இப்ப பெரிய கடைத்தெரு வரைக்கும் போகுமா, போகாதா?''

''தாராளமாகப் போகும்மா.''

''சரி. சீக்கிரம் ஏதாவது சாப்பிட்டு கிளம்பு. அவ எத்தனை நேரமா காத்துக்கிட்டிருக்கா பாரு.''

அவன் உள்ளே வந்து அலங்கரித்துக்கொண்டிருந்த அவளைப் பார்த்து மெலிதாகச் சீட்டியடித்தான்.

''நாம இப்போ கடைத்தெருவிற்குப் போருேமா, இல்லே கந்தர்வ லோகத்திற்குப் போருேமா?''

''ஏங்க?''

''இல்லே, உன்னைப் பார்த்தால் ஏதோ கந்தர்வக்கன்னி மாதிரி இருக்கு.''

''சரி, சரி. சீக்கிரம் கிளம்புங்க. இன்னும் நேரமானல் அத்தை திட்டு வாங்க.''

அவன் காப்பி மட்டும் குடித்து, முகம் கழுவி, உடை மாற்றிக் கொண்டு கிளம்பினபோது லேசாக இருட்டி, காற்று சிலுசிலுத்து மழை வரப்போவதை அறிவித்தது. வாசல் வரை கூட வந்த மாமியார்,

''மழை வரும் போல இருக்கேடா குமார். நாளைக்கு வேணும்னு போறீங்களா?'' என்ருள்.

சௌதாமினியின் கையைப் பற்றி, அவளுடம்போடு உராய்ந்து, பெரிய கடைத் தெருவின் ஓட்டல் ஒன்றில் காரமும் ஸ்வீட்டும் வாங்கித்தந்து, அவளுக்குப் பிடித்த புடவையாகத் தேர்ந்தெடுத்து, அதில் சந்தோஷமடைகிற அந்த முகத்தைப் பார்த்துப் பூரிப்படைந்து...

'அதை நாளைக்கு ஒதுக்கிப் போடுவதா...?'

''வேணும்மா. இன்னிக்கே போயிட்டு வந்துடருேம்.''

''சரி. குடையாவது எடுத்துக் கிட்டுப்போ.''

அவன் உள்ளே வந்து குடையை எடுத்து சௌதாமினியிடம் கொடுத்து ஸ்கூட்டரை உதைத்துக் கிளப்பி பின்ஞல் உட்கார்த்தி வைத்துக்கொண்டு கிளம்பின நேரத்தில் மெலிதான தூற்றலில் லேசாக மழை பெய்ய ஆரம்பித்தது.

— தொடரும்



ஒவ்வோர் ஆண்டும் ஜூன் மாதம் 19 - ந் தேதி அதிகாலை 5 மணிக்கு பைசா நகரப் பல்கலைக்கழக அறிவியல் அறிஞர்கள் பலவிதமான அளக்கும் கருவிகளுடன் பைசா நகர சாய்ந்த கோபுரத்தை நோக்கிச் செல்வதைக் காணலாம். அடுத்த 80 ஆண்டுகளில் இக்கோபுரம் விழுந்துவிடும் என்று கருதப்படுகிறது. ஒவ்வோர் ஆண்டும் இதன் சாய்வைத் துல்லியமாக அளந்து வருகின்றனர். இதன் உச்சியில் இருக்கும் 7 கோவில் மணிகள் 29 டன் எடையுள்ளது. இவை ஓசையெழுப்பினல் பைசா நகரம் முழுவதும் ஓசை கேட்கும். இப்படி ஏற்படும் ஓசையால் கோபுரத்திற்கு ஆபத்து ஏற்படலாம் என்ற அறிவியல் அறிஞர்களின் கருத்திற்கிணங்க அவை 1959 முதல் அமைதி கொண்டுவிட்டன.

# கடலோர நகரத்துக் கோபுரங்கள்

## இந்துமதி

முகத்தைத் தாக்கின மழைத் தூறலில் நந்தகுமாரின் சந்தோஷமும், ஸ்கூட்டரின் வேகமும் அதிகமாயிற்று. அதைப் பார்த்து பயந்துபோன சௌதாமினி,

''வேணுங்க. கொஞ்சம் மெது வாப் போங்க...'' என்று கெஞ்சினுள்.

''உனக்கு பயமாக இருந்தால் ன்னேச் சேர்த்து இறுகக் கட்டிக்க னி...''

''ஓஹோ. அதுக்குதான் இந்தத் ந்திரமா?''

''எதுக்கு?''

''சிவபெருமான் ஒருதரம் என்ன சய்தாராம் தெரியுமா...? பார்வதி ல் இருந்தபோது அவளுக்குத் ாமல் கைலயங்கிரியை மெது ாக அசைச்சாராம். அதைப் பார்த்து யந்துபோன பார்வதி ஓடிப்போய் வபெருமானேச் சேர்த்துக் கட்டிக் காண்டாளாம். அந்தமாதிரி இல்லே ருக்கு நீங்க இப்போ ஸ்கூட்டரின் வகத்தை அதிகப்படுத்தறது...''

''உன்னேவிட அந்தப் பார்வதி வ்வளவோ தேவலே. நீ படு எமன். தை அசைச்சாலும் உன்கிட்டே டக்காதே...''

''தெரியறதில்லே. அதனுல் காஞ்சம் நிதானமாகவே ஓட்டுங் ளேன்.''

''ஏற்கனவே நேரமாயிடுச்சு. இன்னும் நாம் சித்தாஞரைக்கூடத் தாண்டலே. இங்கயே இத்தனேத் தூறினுல் பெரிய கடைத் தெருவில் எப்படி மழை பெய்யிதோ! அதுல கடை கடையாக ஏறி இறங்கி அத்தனே சாமான்களேயும் வாங்கிக்கிட்டுத் திரும்ப வேணும்...?''

''நேரமாயிடுச்சுன்னு வீட்டை விட்டு கிளம்பறபோதே தெரியுமில்லே. அத்தைகூட நாளேக்கு வேணும்னு போங்களேன்னு சொன்னுங்க





''அரசே... நமது ராஜகுமாரியை இரவிலிருந்து காண வில்லையாம் அந்தப்புரத்தில்...''

''அவள் காதலித்த புலவர் மகன் இருக்கிறனு வீட்டில், பார்த்து வாரும்.''

"இல்லே அரசே. அவன் அதிகாலேயில் எங்கோ வேகமாகக் குதிரையில் முன்னுல் ஒரு இளம் பெண் ணுடன் போவதைப் பார்த்தேன்.''

''அந்தப்பெண் நமது ராஜகுமாரி சாயலில் இருந் தாளா?''

"இல்லே... நமது மகாராணி மாதிரி இருந்தாள்...''

– என். எஸ். வி. குருமூர்த்தி

---

இல்லே...? பேசாம நானே காலேயில கிளம்பி வந்திருந்தா என்னவாம்...? ரெண்டு நாள் சேர்ந்தாப்போல லீவு தான் எடுத்திருக்கீங்களே.''

''ஆனுலும் சில சந்தோஷங் களேத் தள்ளிப் போடக்கூடாது மினி. சந்தர்ப்பம் கிடைக்கிறபோதெல்லாம் அனுபவிச்சுடணும்.''

''கடைத் தெருவுக்குப் போறது ஒரு பெரிய சந்தோஷமா?''

''கடைத் தெருவிற்குப் போறது சந்தோஷமில்லே. ஆனல் உன்கூட இப்படி மழையில் நனேஞ்சுகிட்டுப் போறது எத்தனே சந்தோஷம்! அது மட்டுமில்லாமல் கடைத்தெருவில் வேறு எவ்வளவு சந்தோஷங்கள் காத் துக்கிட்டிருக்கு.''

''அங்க வேற அப்படி என்ன காத்துக்கிட்டிருக்கு?''

''குடையில் இரண்டு பேரும் ஒண்ணு தோளோடு தோள் இடிச்சுக் கிட்டுப் போறது, கடை கடையாப் பார்த்துப் பிடிச்ச புடவையா எடுக்க றது, அய்யர்கடை ஓட்டலில் மசால் தோசையும், மைசூர் போண்டாவும் சாப்பிடறது, மறுபடியும் அத்தனே சாமான்களேயும் தூக்கிக்கிட்டு, குடைக் குள்ள ஒடுக்கிக்கிட்டு ஸ்கூட்டர் வரை நடந்து வர்றது...''

அவன் சொன்ன மாதிரியெல்லா[ம்] செய்தும் காட்டினன். பெரிய கடை[த்] தெரு சமீபித்ததும் மழை சற்று வ[லு] வடையவே கடைகளின் ஆரம்பத்[தி] லிருந்த ஆலமரத்தடியில் ஸ்கூட்ட[ரை] நிறுத்திப் பூட்டிவிட்டு குடைக்குள் ஒ[டுங்] டியபடி நடந்தது அவனுக்கும் பு[து] அனுபவமாகவே இருந்தது. இ[ந்த] மாதிரியான சின்னச் சின்ன வி[ஷ] யங்களில் வாழ்க்கையின் பெரி[ய] பெரிய சந்தோஷங்கள் அடங்கியிருப்[ப] தாக நினேத்தாள். நல்ல வேளேயா[க] அவைகளே அனுபவிக்கத் தெரிந்த கண[வ] வன் கிடைத்தது தான் பெற்ற அதிர்[ஷ்] டங்களில் இன்னுமொரு அதிர்ஷ்ட[ம்] என்பதையும் சேர்ந்தே நினேத்தவ[ள்] அதனுல் ஏற்பட்ட புன்சிரி[ப்புடன்] அவன் முகத்தை ஏறிட்டுப் ப[ார்த்] தாள்.

''என்ன மினி, முதலில் புடவை[யா,] வேஷ்டி எடுத்துடலாமா?''

புடவையையும், வேஷ்டியையு[ம்] தேர்ந்தெடுத்து வாங்கிக்கொண்[டு] மாமியார் சொல்லியனுப்பின சின்ன[ச்] சின்ன சாமான்களே சேகரித்து கூடை[யி] யில் நிரப்பிக்கொண்டு அய்யர் கடை[] ஓட்டலில் அவன் ஆசைப்பட்ட[து] போலவே மசால் தோசையும், மைசூ[ர்] போண்டாவும் சாப்பிட்டுவிட்[டு] சாமான்களே ஸ்கூட்டரின் பையி[ல்] திணித்து குடையை மடக்கி வை[த்] துக்கொண்டு கிளம்பினபோது கடை[த்] தெருவின் பாதிக் கடைகள் பூ[ட்] டப்பட்டு மீதிக் கடைகளுக்கும் ப[ல] கைக் கதவை அடுக்க ஆரம்பித்திருந்[த] னர். அதைக் கவனித்த சௌதாமி[னி] கேட்டாள்.

''ஏங்க, நிஜமாகவே மணி ஆ[யி] டுச்சா? இல்லே, இந்த மழைநி[...] இருட்டிலும் யார் வரப்போருங்க[ன்னு] கடைகளே மூட்ருங்களா?''

அவன் ஸ்கூட்டர் கிட்டியிருந்[து] டார்ச்சை எடுத்து ஒளி பரப்பி தன[து] கைக்கடிகாரத்தில் மணி பார்த்தான்.

9-10.

சொன்னல் அவன் நேரமான[தை] குறித்து பயந்துவிடப் போகிருளே[ா] என்று மணியைக் குறைத்து [...] சொல்லி,

''மழைக்காக சீக்கிரம் மூடி[...] ருங்க மினி. நீ கொஞ்சம் ஜாக்கி[ர] தையா உட்காரு. ஸ்கூட்டரி[ல்]

வேகத்தை அதிகப்படுத்தப் போறேன்.''

அவள் கை அவன் தோளில் பலமாக இறுகிற்று. எதிர் இருட்டு அவள் மனத்தை சற்று சங்கடப்படுத்த,

''ஏங்க, இருட்டைப் பார்த்தா பயமா இல்லீங்க...? அத்தை சொன்ன மாதிரி நாளைக்கே வந்திருக்கலாங்க...



● நன்றாக வீணை வாசிக்க குறைந்தது பன்னிரண்டு ஆண்டு களாவது பயிற்சி பெறவேண்டும் என கலைமேதையான டாக்டர் ஆனந்த குமாரசுவாமி கூறு கிறார். — செல்வி

---

இப்போது அவனுக்குக் கோபம் வந்தது. அவள் சொன்னது சரி என்று உள்மனதிற்குப் பட்டாலும் அதை ஒப்புக்கொள்ளாதவனாக சிடுசிடுக்க ஆரம்பித்தான்.

''இப்போ என்ன ஆயிடுச்சுன்னு இப்படியெல்லாம் பேசறே...? கொஞ்ச நேரம் பேசாமல் வந்தியானால் இன் னும் ஒரு மணி நேரத்தில் வீட்டில் இருக்கலாம்.''

''சரிங்க, பேசலீங்க.''

எதிராக ஒரு வார்த்தை பேசாமல் இப்படி உடனடியாகத் தழைந்து போகிற இந்தக் குணம்தான் அழ கிற்கு அடுத்தபடியாக அவளிடம் அவனுக்குப் பிடித்த விஷயம். அதுவே அம்மாவையும் கவர்ந்த குணம் என்பதை அம்மா சொல்லியே கேட்டிக்கிறான்.

'அழகு, படிப்பு, பணம் எல்லாத் தையும் விடுடா. அதெல்லாம் உன் கிட்ட கூடத்தான் இருக்கு. ஆனால் ஒரு வார்த்தை சொன்னால் அதற்கு மறு வார்த்தை பேசாமல் அப்படியே கீழ்ப்படிகிற குணம் எத்தனை பேருக்கு வரும்? அது இருக்குடா அவகிட்ட. அது ஒண்ணு போறுதா குடும்பத்துல நிம்மதியும், அமைதியும் சேர்க்க...?'

அம்மா சொன்னபோதெல்லாம் அத்தனை ஆழமாகப் புரியாதது அப் போது புரிந்தது. தன் சிடுசிடுப்பை எதிர்வார்த்தை பேசி அதிகமாக்காமல், 'சரிங்க, பேசலீங்க' என்று அமரிக்கை யாக முடித்தது...

அவன் மெல்லத் திரும்பி, ''என்ன மினி பேசாமல் வரே, கோபமா?'' என்று கொஞ்சலாகக் கேட்டதும் அவள் இன்னும் அமைதி யாக பதில் சொன்னாள்.

''இல்லீங்க. மனசுக்கு பயமாக இருக்குன்னு கந்த சஷ்டி கவசம் சொல லிக்கிட்டிருக்கேன்.''

அவன் அவளுக்குத் தைரியமூட்டு கிற வகையில் சற்றுப் பெரிதாகவே சிரித்தான்.

''பைத்தியம். என்ன பயம்? உன் கூடத்தான் நான் இருக்கிறேனே?''

''ஆனாலும் இந்த இருட்டையும் மழையையும் பார்த்தா பயமாகத் தாங்க இருக்கு. சாலையிலயும் ஒரு ஈ காக்கா காணோம் பாருங்க.''

''ஈயும், காக்காவும் ராத்திரி நேரத்துல கண்ணுல படுமா மினி? இந்த ரோடு எப்பவுமே இப்படித்தான். மனுஷ சந்தடி இருக்காது. வெளியூர் போகிற இரண்டொரு பஸ்கள் போனால்தான் உண்டு. சந்தைன்னால் மட்டும் மாட்டுவண்டிகளும், சைக்கிள் களும் என்னை மாதிரி மூணு, நாலு ஸ்கூட்டர்களுமாக அமர்க்களப்படும். ஆனாலும் இந்த ரோடுல எந்த பயமும் இல்லே மினி. ராத்திரி பதினொரு மணிக்குக்கூட நான் தனியா வந் திருக்–''

அவன் அந்தக் கடைசி வார்த் தையை முடிப்பதற்குள் ஸ்கூட்டரி லிருந்து படீரென்று பெரிதாக ஒரு சத் தம் கேட்டு மேலே போகாமல் சட் டென்று நின்றுவிட்டது. ஏற்கனவே பயத்தில் இருந்த அவள்,

''என்னங்க...?'' என்று பதறி னாள்.

''என்னமோ தெரியலே. கொஞ் சம் கீழே இறங்கு மினி பார்க்கலாம்.''

அவள் கீழே மழையினால் சதசத வென்றிருந்த செம்மண் சாலையில் இறங்கினாள். அவன் ஸ்கூட்டரை உதைத்து உதைத்துக் கிளப்பப் பார்த்து முடியாமல் அதிகம் வியர்த்து,

'மினி, ஸ்கூட்டர் பையில டார்ச் லைட் இருக்கு. எடுத்து கொஞ்சம் போட்டுக்கிட்டே வா. நான் ஸ்கூட்டரைத் தள்ளிக்கிட்டு வரேன். பத்தடியில ஒரு மண்டபம் இருக்கு. முதல்ல மழையில நனையாமல் அங்கே ஒதுங்கிக்குவோம். அப்புறம் ஸ்கூட் டர்ல என்ன கோளாறு என்பதை கவனிப்போம், என்ன...?''

அவள் பதில் பேசாமல் டார்ச் லைட்டை அடித்து அந்த மழைக்கு நடு வில் ஒளி காட்ட, அவன் கூடவே ஸ்கூட்டரைத் தள்ளியபடி நடந்தான். 'அந்தனை நேரத்திற்குப் பின்பு அன்று கடைத்தெருவிற்குக் கிளம்பியிருக்கவே வேண்டாம்' என்பதை நினைத்து உள் ளுக்குள் சங்கடப்பட்டான்.

— தொடரும்

# பைசா நகரத்துக் கோபுரங்கள்






சௌதாமினியும், நந்தகுமாரும் ஸ்கூட்டரைத் தள்ளியபடி மழைக்கு ஒதுங்குவதற்காக அந்த மண்டபத்தை நெருங்கினபோதே அவன் அங்கே இருந்தான். மண்டபத்தினுள் நின்றுகொண்டிருந்தவன் சற்று தூரத்தில் டார்ச் வெளிச்சம் தெரிவதையும், யாரோ இரண்டு பேர்கள் வருவதையும் கவனித்து சரசரவென்று படியிறங்கி பக்கத்து மரத்தடி இருட்டில் ஒதுங்கினான். அவர்கள் வருவதற்குள் பற்றவைத்துக்கொண்ட சிகரெட்டின் நுனியை உதட்டில் பொருத்தி அவசரமாக ஒரு முறை இழுத்து பின் பற்றவைத்த பகுதியை மரத்தில் லேசாகத் தேய்த்து அணைத்து மீதி சிகரெட்டை மீண்டும் பாக்கெட்டில் போட்டுக்கொண்டான்.

அந்த நேரத்தை அவனுக்குக் கொடுத்தபின்பே அவர்கள் மண்டபத்தை நெருங்கினார்கள். ஸ்கூட்டரைப் படி ஓரமாக ஸ்டாண்ட் போட்டு நிறுத்தின நந்தகுமார், குளிரினாலும், பயத்தினாலும் நடுங்கிக்கொண்டு நின்ற அவளைப் பார்த்துச் சொன்னான்.

''அந்த டார்ச் லைட்டை என்கிட்ட கொடுத்திட்டு நீ மண்டபத்துக்குள்ள போய் நின்னுக்க மினி.''

''இல்லைங்க. நான் உங்களுக்கு லைட் அடிக்கிறேன். நீங்க சீக்கிரமா ரிப்பேர் பண்ணுங்க.''

''சொன்னாக் கேளு மினி. இது



அவ்வளவு சீக்கிரமா ரிப்பேர் ஆகாது. அதுவரை இப்படி மழையில நனைஞ்சு கிட்டு நின்னா உனக்கு உடம்புக்கு ஒத்துக்காது. பேசாம உள்ள போயி நில்லு. நான் சரிபார்த்திட்டு கூப்பிட றேன்.''

அவள் மறுபடியும் தயங்கி, ''அங்க தனியா நிற்க எனக்குப் பயமா இருக்குங்க'' என்றாள்.

''பயம் என்ன மினி. இதோ ஒரடியிலே நான் ஸ்கூட்டரை ரிப்பேர் பண்ணப் போறேன். நிமிஷத்துக்கு ஒருதரம் திரும்பிப் பார்த்து குரல் கொடுக்கிறேன். என்ன...?''

அதற்கு மேலும் மறுத்துச் சொன்னால் அந்த சந்தர்ப்பத்தில் அவனுக்கு நிச்சயமாகக் கோபம் வரும் என்பதைப் புரிந்துகொண்டவள் மெதுவாகத் தலையாட்டி டார்ச் விளக்கையும் கொடுத்து விட்டு மேலே போய் நின்றாள்.

அங்கு நின்ற சிறிது நேரத்திற் கெல்லாம் மரத்தடியில் பளிச்சிட்ட அந்த சின்ன வெளிச்சம் கண்ணில் பட, அதனால் ஏற்பட்ட பயத்துடனும், பதட்டத்துடனும் நான்கு படிகளை ஒன்றாகக் கடந்து கணவனருகில் ஓடி வந்து மூச்சிறைக்க நின்றவளைத் திரும்பிப் பார்த்துக் கேட்டான் நந்தகுமார்.

''என்ன மினி அப்படி ஓடி வரே?''.

''அதோ அந்த மரத்தடியில யாரோ இருக்காங்க. இப்போ தீக்குச்சி கொளுத்தற வெளிச்சம் வந்ததுங்க.''

ஸ்கூட்டரின் பக்கச் சுவரைக் கழற்றி, சிறிதாக இருந்த டார்ச் விளக்கின் உதவியோடு என்ன தவறு என்பது புரியாமல் ஆராய்ந்துகொண் டிருந்த அவனின் பார்வை மரததடிக் குச் சென்று மீண்டது.

''நம்மை மாதிரி யாராவது மழைக்கு ஒதுங்கியிருப்பாங்க மினி.''

''மழைக்கு ஒதுங்கறவங்க மண்ட பத்துலதானே ஒதுங்கியிருக்கணும். பக்கத்து மரத்தடியில என்ன வேலை?''

''ரொம்ப நல்லா இருக்கு நீ சொல்றது. இங்கதான் ஒதுங்கணும்னு சட்டம் ஏதாவது இருக்கா என்ன? சும்மா இப்படி தொந்தரவு செய்தா நான் எப்படி வேலையை கவனிக்கிறது?''

''இல்லீங்க. இனிமே தொந்தரவு செய்யலே. ஆனால் நான் இங்கயே உங்க பக்கத்துல நிக்கறேங்க. அங்க அந்த இருட்டுல தனியா நிக்கமாட்டேன்.''

''சரி, நில்லு.'' – குரலில் எரிச்சல் மிகச் சொன்னான் அவன்.

அதற்குள் மரத்தடியில் இருந்தவன் அவர்கள் தன்னைப் பார்த்துவிட்டதைப் புரிந்துகொண்டு அந்த இடத்திலிருந்து வெளிப்பட்டு மிகவும் நிதானமாக இருட்டிற்குப் பழக்கப்பட்டவனாக நடந்து படியேறிப் போய் மண்டபத்தின் கடைசிப் படியில் உட்கார்ந்து கொண்டான். மீண்டும் சிகரெட் ஒன்றைப்பற்ற வைத்துக்கொண்டு அப்போதுதான் பார்க்கிற மாதிரி அவர்களைக் கவனித்தான்.

கிட்டத்தட்ட அரை மணி நேரமாகத் தேடியும் எந்த இடம் பழுதடைந்திருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்க முடியாததால் நந்தகுமார் தன் இயலாமையை அவள்மீது கோபமாகக் காட்டினான்.

''கொஞ்சம் இரு. பக்கத்துல யாராவது ஸ்கூட்டர் மெக்கானிக் கிடைப்பாங்களான்னு அந்த ஆளைக் கேட்டுக்கிட்டு வரேன்.''

''வேணாங்க. நாம ஸ்கூட்டரைத் தள்ளிக்கிட்டே போயிடலாங்க.''



''என்ன வெளையாடறியா நீ? ஊருக்கு இன்னும் பத்து மைல் போக ணும். அந்தப் பத்து மைலும் தள்ளிக்கிட்டே நடந்து வாடா பாவின்றியா...?''

''அய்யய்யோ. நான் அப்படி யெல்லாம் சொல்லலீங்க.''

''பின்னே, எந்த வழிக்கும் போக விடாமல் என்னைத் தடுத்தியானல் எப்படி? இப்போ யாரிடமாவது உத விக்குப் போய்த்தானே ஆகணும். இப் படியே நின்னுக்கிட்டிருக்க முடியுமா? இல்லே, ராத்திரி முழுதும் இந்த மண்டபத்துல தங்கிடத்தான் முடி யுமா? யாரையோ தேடிப் போறதை விட எதிர்ல இருக்கிற இவனே தேவலே இல்லேயா?''

''சரிங்க.''

''என்ன சரிங்க. எதற்கும் உன் வாய்லேருந்து முதல்ல தடங்கல்தான் வரும். இனிமேல் வீட்டு வாசற்படியை





''ஏம்பா கரும்பு ஒண்ணு என்ன விலை?''

''மூணு ரூபாய் சார்!''

''என்னய்யா, காய்ந்து கட்டை போல இருக்கே?''

''அதனாலதான் சார் மூணு ரூபாய். இல்லேன்னா ஒரு ரூபாய்தான்!''

– கே. எம். சம்பத்குமார்

---

மிதிக்கிற வரைக்கும் வாயைத் திறந்தியானால் பாரு.''

''திறக்கலேங்க.''

அந்தப் பதிலில் சற்றே இரங்கிப் போய் மெதுவாகப் புன்னகை செய்தான் அவன்.

''இரு. அந்த ஆளைப் போய் கேட்டுக்கிட்டு வரேன்.''

ஒரே விநாடியில் படிகளைக் கடந்து அவனெதிரில் போய் நின்று கேட்டான்.

''ஏங்க, இங்க யாராவது ஸ்கூட்டர் மெக்கானிக் இருப்பாங்களாங்க?''

அவன் உடனே பதில் சொல்லிவிடாமல், இருட்டிற்குப் பழக்கப்பட்ட கண்களை உபயோகித்து நந்தகுமாரை ஆராய்ந்தான்.

அவனுடைய மெளனமான பார்வையில் சங்கடப்பட்ட நந்தகுமார் தயங்கி,

''ஏங்க, உங்களைத்தாங்க. பக்கத்துல ஸ்கூட்டர் மெக்கானிக் யாராவது கிடைப்பாங்களா?'' என்பதை மறுபடியும் கேட்டதும் அவன் யோசிக்கிற தொனியில் சொன்னான்.

''இங்க யாரு கிடைப்பாங்க. பக்கத்துல சிங்கானூர்ல இருக்கலாம்.''

''சிங்கானூர் வரை தள்ளிக்கிட்டே போக முடியாதுங்களே. பக்கத்துல யாருமே கிடையாதுங்களா?''

''ம்...'' என்று யோசித்த அவன் ''ரெண்டு பர்லாங் தூரத்துல அரசூர்ல ஒருத்தன் இருக்கான்னு நினைக்கிறேன். எதுக்கும் அங்க போயி கேட்டுப் பாருங்க.''

''அரசூர்லயா...?'' என்று தயங்கி சில விநாடிகள் யோசித்து ''தாங்ஸ்ங்க'' சொல்லித் திரும்பி வந்த நந்தகுமார், ''அரசூர் பக்கம் போனாத்தான் யாரும் கிடைப்பாங்களாம் மினி. அந்த ஊரு அவ்வளவு நல்ல ஊரு இல்லே. விளக்கு வைக்கிற நேரத்துக்கு மேல ஆம்பிளைங்க தனியாகப் போனாலே நாலாளாகச் சேர்ந்து அடிச்சுப் போட்டு கையில இருக்கிறதைப் பிடுங்கிட்டுப் போயிடுவாங்க. அதனால நீ கொஞ்சம் தைரியமா இங்கயே இருக்கறியா மினி. நான் போய் சீக்கிரமா ரிப்பேர் பண்ணிக்கிட்டுத் திரும்பிடறேன்.''

''இங்கயா! அய்யய்யோ... தனியா இருக்கிறதானாக்கூட இருந்துடுவேங்க. ஆனா அந்த ஆளு இருக்கிற எடத்துல ஒரு நிமிஷம்கூட நிற்க மாட்டேன். அவனைப் பார்த்தாலே எனக்கு பயமா இருக்கும் –''

அவள் முடிக்காமல் பக்கத்தில் அவன் இறங்கி வந்து நடந்து போவதைப் பார்த்து சடாரென்று நிறுத்தினாள். அவர்களைக் கடந்து சற்று வேகமாகவே போன அவன் அவளின் பேச்சு மனதில் விழ ஒரு விநாடி நின்று திரும்பிப் பார்த்து பின் மேலே நடக்க ஆரம்பித்ததும்,

நந்தகுமார் அவளைப் பார்த்துச் சிடுசிடுத்தான்.

''பார்த்துப் பேச மாட்டியா நீ? நான்தான் உன்னை வாயைத் திறக்கக் கூடாதுன்னு சொன்னேனில்லே? அவன் என்ன செய்தான்னு இப்படி பயப்படறே?''

''என்னவோ அவனைப் பார்த்தாலே பயமா இருக்குங்க.''

''யாரைப் பார்த்தாலும் உனக்கு பயம் வந்துடும். அவன்தான் போயிட்டானே. இனிமேல நீ இங்கே இருப்பே இல்லே?''

''இல்லீங்க. கூடவே வந்துட றேங்க.''

''வந்துத் தொலே. எந்த நேரத் துக்கு இன்னிக்குக் கிளம்பினேனே, இப்படி நாயாக அலேயறேன். இந்தா, டார்ச் விளக்கைக் காட்டு. நான் கூடவே ஸ்கூட்டரைத் தள்ளிக்கிட்டு நடக்கறேன்.''

டார்ச்சை அவளிடம் கொடுத்து வாகனத்தின் பக்கச் சுவர்களேப் பொருத்தி எதையாவது விட்டுவிட்டோமா என்பதைச் சரிபார்த்துக் கொண்டு மண்டபத்தை விட்டு ஒரு பர்லாங் தூரம் மூச்சிறைக்க, பயத்தினல் உடல் வியர்த்துக் கொட்ட நடந்ததும், வெகு தூரத்தில் பொட்டு பொட்டாக விளக்கொளி தெரிந்தது.

''அதோ அதான் அரசூரு மினி. கொஞ்சம் வேகமா நடந்தியானு சீக்கிரம் போயிடலாம் –'' என்று அவன் நடை துரிதமானபோதுதான் அது நடந்தது.

சாலேயின் பக்கத்திலிருந்த புதர்களிலிருந்து பெரிதான இரண்டு கம்புகள் நீண்டு அவர்களேத் தடுத்தது.

''யாரது...?'' என்று அவன் குரல் எழும்புவதற்கு முன், முகம் தெரியாத அவர்கள் இரண்டு பேரும் புதர் மறைவிலிருந்து வெளிப்பட்டு தங்கள் கைகளிலிருந்த கத்தி பளபளக்கப் பேசினர்கள்.

''சத்தம் போட்டே, ஒரே குத்தாகக் குத்திட்டு தூக்கிட்டுப் போயுடுவோம்!''

'தூக்கிட்டுப் போயிடுவாங்களா...?'



நீளமாக முடி வளர்த்திருந்த இளேஞர்கள் இருவரும் அரைமணி நேரமாக கட்டைவிரலேக் காட்டி லிஃப்ட் கேட்டும் யாரும் காரை நிறுத்தவில்லே. யோசித்தார்கள். காரணம் புரிந்தது. ''நாங்கள் சலூனுக்குப் போகவேண்டும்!'' என்று உரத்த குரலில் கத்தினர்கள். உடனே லிஃப்ட் கிடைத்தது.

– எம். ஆர். மனேகர்

---

கையிலிருந்த டார்ச் நழுவிக் கீழே விழ அவனின் முதுகுப் பக்கமாக ஒடுங்கிக்கொண்ட சௌதாமினி அவனின் கைகளேத் தேடிப் பற்றிக் கொண்டபோது அந்தக் கரமும் லேசாக நடுங்கிக்கொண்டிருப்பதை உணர்ந்தாள்.

''என்ன வேணும் உங்களுக்கு, பணமா? நகையா...? எல்லாத்தையும் எடுத்துக்குங்க. சௌதாமினி, கழற்றி எல்லாத்தையும் குடுத்துடும்மா...''

சொல்லிக்கொண்டே அவன் தன் பாக்கெட்டில் கைவிட்டு பர்ஸை எடுக்கப்போனபோது ஒருவனின் கத்தி அதைத் தடுத்து நிறுத்தியது.

''உன் பணத்தையோ, நகைகளேயோ கொண்டுவரச் சொல்லி எங்களுக்கு உத்தரவு இல்லே.''

ஒருவர் :
''அந்த டைரக்டருக்கு இன்னிக்கு நீங்க கம்பெனி கொடுக்கப்போறீங்களாமே?''

நடிகை :
''சேச்சே, நான் நடத்திக்கிட்டிருக்கிற கம்பெனியை அவருக்கு விலேக்குக் கொடுக்கப் போறேன்!''



''பின்னே...'' என்று அவன் தடுமாறினபோதே அவர்களின் பார்வை சௌதாமினியின் பக்கம் திரும்பியதும், அடிவயிற்றில் சிலீரென்று பயம் இறங்க, அவன் மிகவும் யோசிக்காமல் எப்படியாவது சௌதாமினியைக் காப்பாற்றிவிட வேண்டும் என்ற வேகத்தில் தன்னிடம் ஆயுதம் எதுவுமற்றதை உணராமல் போராட்டத்தில் இறங்கினவன் திடீரென்று நினைவு பெற்றவனாக பயத்தினாலும், அதிர்ச்சியினாலும் உறைந்து போய் நின்றுகொண்டிருந்த அவளிடம் கத்தினான்.

''மினி. அந்த ஸ்கூட்டரின் பக்கச் சுவர் கழற்ற வரும். கொஞ்சம் சீக்கிரமா அதைக் கழற்றி என் பக்கம் தூக்கிப் போடு, சீக்கிரம் மினி...''

அவளை அதைக் கழற்ற விடாமல் முரடனில் ஒருவன் சண்டை போடுவதை விட்டு ஓடிவந்து தடுத்து காவல் நிற்க மற்றொருவன் அந்த இருட்டில் மழையினால் சேறாகக் கிடந்த மண் தரையில் நந்தகுமாரைப் புரட்டி எடுத்தான்.

மூக்கிலும், கன்னத்திலும், மார்பிலும் விழுந்த பலமான குத்துக்களின் வலி தாங்க முடியாததாகத் தெரிய, படிப்பு, வேலை, வீடு தவிர வேறு விளையாட்டுகள் எதிலும்கூடக் கலந்து கொள்ளாமல் மிகவும் மென்மையானவனாகவே வளர்த்துவிட்ட அம்மாவை சபித்துக்கொண்டே முரடனின் தாக்குதலில் இருந்து தப்பிக்க பாதையை விட்டு பக்கவாட்டில் புரண்டதில் முட்புதர்களின் முட்களால் முதுகும் பக்கங்களும் கீறப்பட்டு எரிச்சல் தாங்க முடியாததால் முனகின அதே சமயத்தில்—

அதுவரை கம்போ, கத்தியோ எடுக்காமலிருந்தவன் கைகளில் கம்பை சுழற்றிக்கொண்டு தன்மீது பாய்வைப் பார்த்து விலகிக்கொள்ளக்கூட வலுவிழந்து நின்றபோது தலையில் விழுந்த ஆக்ரோஷமான அந்த அடியில் — அவர்களைத் தாக்க முற்பட்ட பதினைந்தாவது நிமிடத்தில்—முரட்டுத்தனமாக அடிபட்டு கீழே சரிய—

பெரிதாக அலறி ஓட முயன்ற சௌதாமினி மிகச் சுலபமாகப் பிடிக்கப்பட்டு, ஒரு சின்ன ஆட்டுக்குட்டியைத் தூக்கிக்கொண்டு ஓடுகிற லாவகத்தில் அவர்களில் ஒருவன் அவளைத் தூக்கிக்கொண்டு ஓட மற்றவன் மிகவும் சந்தோஷமாகப் பின்தொடரலானான்...

— தொடரும்

அமெரிக்காவில் சமீபத்தில் 'ஸ்ரீ சின்மாய் டிரியாத்லோன்' என்ற விசித்திர ஓட்டப் போட்டி நடந்தது. இதை ஏற்பாடு செய்தவர் சின்மயானந்தா என்ற இந்தியத் துறவி. இதில் முன்னூறு பேர் ஆர்வத்துடன் கலந்து கொண்டனர். முதலில் இரண்டு மணி நேர நீச்சல், பிறகு அறுபது மைல் சைக்கிள் சவாரி, அதற்கும் பிறகு நாற்பத்தைந்து மைல் தூர ஓட்டம்.

— ராதா





**நீ**ண்ட நேரத்திற்குப் பின் கண்விழித்த சௌதாமினி தான் ஒரு கயிற்றுக் கட்டிலில் படுத்துக்கிடப்பதையும், காலடியில் நீளமான இரும்புக்கம்பியில் லாந்தர் ஒன்று தொங்கிக் கொண்டிருப்பதையும் கவனித்தாள். எங்கே இருக்கிறோம், தனக்கு என்ன நேர்ந்தது என்ற எதுவும் புரியாமல் நினைவுபடுத்திப் பார்க்கிற முயற்சியில் மெல்ல எழுந்து கட்டிலின் மீதே உட்கார்ந்து கொண்டாள். கரி ஏறின லாந்தர் விளக்கின் மங்கல் வெளிச்சத்தில் அந்த இடம் மெலிதாகக் கண்ணில் பட்டது. நிறைய இடங்களில் ஓடு பிரிந்து, சுவரின் காரை உதிர்ந்து, தரை பெயர்ந்து அது ஒரு பாழடைந்த வீடாகத் தெரிந்தது.

புகைத்து விசிறிப்போட்ட சிகரெட் துண்டுகளும், கிழித்து எறிந்த காகிதங்களும், சாப்பிட்டு முடித்த இலைச் சருகுகளுமாக அந்த இடம் சுத்தப்படுத்தப்படாமல், வசிப்பதற்குத் தகுதியற்றதாகத் தோற்றம் அளித்தது. ஆனால் அங்கே யாரோ தங்கியிருப்பதற்கான நிறைய அடையாளங்கள் தெரிந்தன. சுவர் ஓரமாக ஒன்றன்மீது ஒன்றாக இரண்டு டிரங்குப் பெட்டிகள் இருந்தன. அதன்மீது பாயும், தலையணையும் சுருட்டி வைக்கப்பட்டிருந்தது. சிறிது தள்ளி ஒரு கெரஸின் ஸ்டவ், நாலைந்து அலுமினியப் பாத்திரங்கள், அதன் பக்கத்தில் அவை எல்லாவற்றையும்விட ஆச்சரியம் அளிப்பதாய், அந்த இடத்திற்கு முற்றிலும் பொருத்தமற்றதாய் சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு சின்ன மர

## நகரத்துக் கோபுரங்கள்



அலமாரி முழுதும் ஒழுங்காக அடுக்கப் பட்ட புத்தகங்கள்...

அந்த முரண்பாட்டைக் கவனித்து சற்று சந்தேகம் தோன்ற அவள் அதற்கு எதிர்ப்பக்கமாகத் திரும்பின போதுதான் அவன் அவளின் கண்ணில் பட்டான். ஒரு மர நாற்காலியில் கால் மேல் கால் போட்டபடி உட்கார்ந்து கொண்டிருந்தான். நல்ல உயரமும், நிறமுமாகத் தெரிந்தான். சின்னதாகத் தாடி வைத்துக்கொண்டிருந்த அவ னின் முக அமைப்பு கண்ணியமாகத் தோற்றமளித்ததுடன், அந்த இடத் திற்கு முற்றிலும் அந்நியமானவ னுகவும் பட அவனை எங்கோ பார்த்த ஞாபகம் வந்தது அவளுக்கு. எங்கே...? அவள் புருவங்கள் சுருங்க யோசித் தாள்.

பிடித்துக் கொண்டிருந்தான். அவன் வேண்டுமென்றே அப்படி இருப்பது புரிய அவளுக்குள் நிறைய கேள்விகள் எழுந்தன.

'யார் இவன்...? நாம் எதற்காக இவனிருக்கிற இந்த இடத்திற்கு வந்திருக் –'

சடாரென்று அந்தக் கேள்வி பாதி யிலேயே நின்று தானுக அங்கு வர வில்லை என்பதும், நந்தகுமார் தாக்கப் பட்டு கீழே சரிந்ததும் அலற நினைத்த தன் வாயில் துணியடைக்கப்பட்டு, ஒரு ஆட்டுக்குட்டியைத் தூக்கித் தோளில் போட்டுக்கொள்கிற மாதிரி போட்டுத் தன்னை அந்த முரடன் தூக்கி வந்ததும் நினைவிற்கு வர, நிச் சயமாய் இவன் அந்த முரடர்க ( ) ஒருவனில்லை என்பது தெரிய அடி



அவள் கண்விழித்து எழுந்து உட்கார்ந்திருப்பது தெரிந்தும், தன்னைப் பார்த்துவிட்டது புரிந்தும் அவன் அவளைத் திரும்பிக்கூடப் பார்க் காமல் மிக அலட்சியமாகப் புகை

வயிற்றில் சிலீரிட்ட பயத்துடன் அவனை நிமிர்ந்து பார்த்துக் கேட்டாள் அவள்.

''யார் நீ...? எதுக்காக என்னை இங்கே தூக்கிட்டு வந்திருக்கே...?''

அப்போதும் அவன் அவளைக் கவனிக்காதவனாக அதே அலட்சியத்துடன் சிகரெட் சாம்பலைத் தட்டிவிட்டு மீண்டும் புகைக்க ஆரம்பித்தபோது அவளுக்குள் ஏற்பட்ட பயம் மறைந்து அதற்குப் பதிலாக வெறுப்பும், கோபமுமே மிகுந்தது.

''உனக்கு நான் கேட்டது காதுல விழலையா...? இல்லே, காதே கேட்காத செவிடா நீ...?''

அப்போதுதான் அவளைக் கவனித்தமாதிரி திரும்பின அவன்



முகத்தில் எந்த பாவமுமற்று,

''என்ன கேட்டே...?'' என்றான்.

''யார் நீ...? எதுக்காக என்னைத் தூக்கிட்டு வரச் சொன்னேன்னு கேட்டேன்...?''

''இந்த இரண்டிற்கும் உனக்கே பதில் தெரியும். நான் சொல்ல வேண்டிய அவசியமில்லே...''

''அவசியம் என்கிறதால்தான் கேட்டேன். இல்லாவிட்டால் கேட்டிருக்கப் போறதில்லே.''

''அப்படியானால் நிஜமாக உனக்குத் தெரியாது...?''

''சத்தியமாகத் தெரியாது.''

''மண்டபத்துல என்னைப் பார்த்த நினைவில்லே...?''

''மண்ட –'' சட்டென்று அவன் யார் என்பது நினைவிற்கு வர அதற்கு மேல் வார்த்தைகள் வராமல் தடுமாறினாள் அவள். மீண்டும் பயம் ஐஸ்கட்டிகளாக வயிற்றையும், நெஞ்சையும் தாக்க, குரல் நடுங்க மெதுவாகக் கேட்டாள் அவள்.

''நீ...யா அது...?''

அந்தக் கேள்வியில் திடீரென்று சீறினான் அவன்.

''பின்னே யாருன்னு நினைச்சே...? பார்க்கவே பயமா இருக்குன்னு உன் வீட்டுக்காரன்கிட்டே சொன்னியே, அதே மூஞ்சிதான் இது. மண்டபத்து இருட்டுல சரியாப் பார்க்காமலே சொல்லிட்டியேன்னுதான் இங்கே தூக்கிட்டு வரச்சொன்னேன். இந்த ராந்தல் வெளிச்சத்துல பார்த்துச் சொல்லு. இப்பவும் என்னைப் பார்க்க பயமாகவா இருக்கு...?''

அவள் உறைந்துபோன மாதிரி அவனையே பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்ததும் அவன் இன்னும் பெரிய குரலில் அதட்டினான்.

''பேசாமல் இருந்தியானால் என்ன அர்த்தம்...? இப்பவும் என்னைப் பார்க்க பயமாகவா இருக்கு...?''

வார்த்தையே வராமல் அவள் ஆமாம் என்று தலையாட்டினதும் அவன் முகத்தில் உக்கிரம் ஏறிற்று. கண்களிலும், நெஞ்சிலும் குபீரென்று நெருப்பு பற்றிக் கொண்டது.

''வாயில என்ன கொழுக்கட்டையா...? கொஞ்ச நேர முன்னை

அவ்வளவு பேசினியே, அந்த வாய் இப்போ எங்கே போச்சு...? என்னைப் பார்த்தா பயமா இருக்கா, இல்லி யான்றதை வாயைத் திறந்து சொல் லப்போறியா இல்லையா இப்போ...?''

அவனின் அந்தக் கோபத்தையும், அதட்டலையும் சிறிதும் எதிர்பார்க்காத அவள் மடமடவென்று சொன்னாள்.

''இப்பவும் பயமாத்தான் இருக்கு. சொல்லப்போனால் இப்பத்தான் இன் னும் பயமாக இருக்கு. உனக்கு என்ன வேணும்...? இந்த நகைங்கதானே... இந்தா, எடுத்துக்க. தாலிக் கயிற்றைத் தவிர மற்ற எல்லாத்தையும் கழற்றித் தரேன். என்னை விட்டுடு...''

ஒவ்வொரு நகையாகக் கழற்றி அவள் அவனது காலடியில் வீசிப் போட்டபோது அவன் பெரிதாகச் சிரித்துக்கொண்டே எழுந்து நின்றான்.

''எனக்கும் இதெல்லாம் வேண்டி

முடிந்தது. அவர்கள்தான் வழிமறித்து அவள் கணவனை அடித்துப் போட்டு அவளையும் தூக்கிக்கொண்டு வந்தவர்கள். கணவனின் ஞாபகத்தில் இன்னமும் துவண்டுபோனாள் அவள். எங்கே அடிபட்டு எப்படி இருக்கிறானே என்று தோன்றியது. இதற்குள் மயக் கம் தெளிந்து எழுந்து தன்னை இந்த இடத்திற்கே தேடிக்கொண்டும் வர லாம் என்ற எண்ணத்தில் மெலிதாகப் படர்ந்த நம்பிக்கையில் அவர்களைப் பார்க்கப் பிடிக்காமல் முகத்தைத் திருப்பிக்கொண்டபோது அவனின் அழுத்தமான குரல் கேட்டது.

''டேய் சோமு, நாகராஜா. இந் நகைங்கள்ல ஒரு திருகாணிகூட எனக்கு வேணும். அப்படியே எல்லாத் தையும் நீங்க எடுத்துக்குங்க...'' என்றதும் அவர்கள் மிகவும் ஆர்வமாக ரொட்டித்துண்டிற்கு அலைகிற



''நானும் என் கணவரும் வாய்ச்சண்டையே போட் டுக்கொள்ளமாட்டோம்.''

''அப்படித்தானிருக்கவேண்டும்.''

''சின்ன விஷயமாக இருந்தாலும் கைகலப்புதான் செய்துகொள்ளுவோம்!''

– மணிமுக்து

யதுதான். வழக்கமா, ஸ்கூட்டர் கெட்டுப்போய் நீ வந்த அதே மண்ட பத்துல நின்னு உன்னை மாதிரி யாரா வது போனால் கத்தியைக் காட்டி பயமுறுத்தி ஒவ்வொரு நகையாகக் கழற்றி வாங்கி, கையில் இருக்கிற பணத்தையும் பறிச்சுக்கிறதுதான். ஆனால் இப்போ எனக்கு இவையெல் லாம் தேவையில்லே. இவைதான் எனக்குத் தேவைன்னா இதை மண்ட பத்துலயே என்னால பறிச்சுக்கிட்டிருக்க முடியும். அதற்காக உன்னைத் தூக்கிக்கிட்டு வர வேண்டிய அவசிய மில்லே. உன்னைத் தூக்கிக்கிட்டு வந்தது வேற விஷயத்துக்காகத்தானே தவிர இதற்காக இல்லே. இதற்கு ஆசைப் படறவங்க வெளியில இருக்காங்க. இரு. அவங்களைக் கூப்பிடறேன்.'

அவன் குரல் கொடுத்ததும் ஓடி வந்த அந்த இருவரையும் அவளால் அடையாளம் கண்டுபிடித்துக்கொள்ள

நாயைப் போல் குனிந்து அவள் வீசிப் போட்டிருந்த அத்தனை நகைகளையும் பொறுக்கிக்கொண்டு நிமிர்ந்ததும் அவன் மீண்டும் கட்டளை இடுகிற தொனியில் சொன்னான்.

''இதோ பாருங்க. இவைகளை நான் தொடாத மாதிரி, நான் ஆசை பட்டு எடுத்துக்கிட்டு வந்த ஒன்றை நீங்களும் தொடக்கூடாது. என்ன?''

அவர்கள் 'சரி' என்று முதலில் தலையாட்டிவிட்டு பின் சந்தேகமான குரலில் கேட்டார்கள்.

''அது என்னன்னு நீங்க சொல்லவே இல்லையே தம்பி...?''

அதற்குப் பின்பும் அவன் சொல்லவில்லை. திரும்பி அவளை ஒரு தரம் பார்த்தான். பின் பார்வை அவர் களின் முகத்திற்குப் போனதும் அவர்கள் புரிந்துகொண்டு விட்டதன் அடையாளமாகக் கொஞ்சம் ஆச்சரியத்

துடன் தலையசைத்தார்கள். பின்,

''சத்தியமாகத் தொடமாட்டோம் தம்பி...'' என்றார்கள்.

''அப்போ கதவை மூடி வெளிப் பக்கம் தாழ்ப்பாள் போட்டுக்கிட்டு கொஞ்சம் தள்ளி காவலுக்கு நில்லுங்க. நான் கூப்பிட்டால் மட்டும் கதவைத் திறந்துவிடுங்க...''

''சரி தம்பி'' – தலைவனின் கட்டளைக்குக் கீழ்ப்படிகிற தொண்டர்களாக அவர்கள் வாசற் கதவை நோக்கிப் போனபோது அவள் யாரும் எதிர்பார்க்காத வகையில் திடீரென்று கட்டிலைவிட்டு இறங்கி வாசலை நோக்கி ஓட முயன்று நிமிடத்தில் முரடர்களின் பிடியில் அகப்பட்டுத் திணறிக் கொண்டே, கெஞ்ச ஆரம்பித்தாள்.

''வேணும். என்னை விட்டுட்டுப் போகாதீங்க. தயவு செய்து கதவை மூடி வெளிப்பக்கம் தாழ்ப்பாள் போட்டுக்காதீங்க. நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்க...''

அவர்கள் அவள் சொன்ன எதுவும் காதில் விழாத மாதிரி அவனைப் பார்த்ததும், அவன், ''அவளை உள்ளே தள்ளி கதவை மூடிக்கொண்டு போய் நான் சொன்னபடி செய்யுங்கள்'' என்றான்.

அவர்கள் அப்படியே செய்தார்கள். அவளை இழுத்துவந்து அவனது காலடியில் தள்ளி கதவை மூடப்போனபோது அவள் ஒரு அசுர பலத்துடன் பின்னாலேயே ஓடி கதவை மூடவிடாமல் தடுக்க முயன்று, தன் முகத்திற்கு எதிராகக் கதவு அறைந்து சாத்தப்படுவதையும், பின்பு வெளியில் தாழ்ப்பாள் போடப்படுகிற சத்தத்தையும் கேட்டு என்ன செய்வது என்று புரியாமல் கதவை சுமார் பத்து நிமிடங்களுக்கு ஓங்கி ஓங்கித் தட்டி எந்தப்பலனுமில்லாமல் அதன்மீதே சரிந்து கீழே உட்கார்ந்து முகத்தை மூடிக் கொண்டு அழத்தொடங்கினதும்,

அதுவரை அமைதியாக நின்றிருந்த அவன் நிதானமாக நடந்து அவளருகில் வந்து சற்று அழுத்தமும் கோபமுமான குரலில் ஆங்கிலத்தில் சொன்னான்.

''வில் யு ப்ளீஸ் ஸ்டாப் க்ரையிங் லைக் திஸ்?''

அவனது குரலில் தொனித்த ஏதோ ஒன்று அவளைச் சட்டென அடங்க வைத்தது. ஆனாலும் விசும்புவதை அவளால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. மெலிதான அந்த விசும்பலைக்கேட்டபடி அவளையே கனிவுடன் ஒரு விநாடி பார்த்துக் கொண்டு நின்றவன் பின் தன் குரலையும் தணித்துக்கொண்டு கேட்டான்.

''உன் பெயரே மினிதானா, இல்லே அது சுருக்கமான பேரா...?''

''......''

''பதில் சொல்லமாட்டியா...? பரவாயில்லை. உன் வீட்டுக்காரன் உன்னைச் செல்லமா மினின்னு கூப்பிட்டது காதுல விழுந்தது. நானும் அப்படியே கூப்பிடறேன்...''



எந்த படத்துக்கு கேமராமேனாக தான் ஒப்பந்தம் ஆனாலும் தான் குறிப்பிடும் அவுட்டோர் யூனிட்டைத்தான் ஒப்பந்தம் செய்யவேண்டும் என்பாராம் அசோக்.

ஸ்டுடியோ செட்டுக்குள் படப்பிடிப்பு நடந்தாலும் செட் லைட்டுகளைப் பயன்படுத்தாமல், அவுட்டோர் யூனிட் லைட்டைத்தான் பயன்படுத்துவார். ஸ்டுடியோ கேமராவான மிச்சலை (Mitchel) பயன்படுத்தமாட்டார். அவுட்டோர் யூனிட் கேமராவான ஏரிபிளேக்கைத்தான் பயன்படுத்துவார்.

இம்மாதிரி வேறு கேமராமேன்கள் பயன்படுத்துவதில்லை. அது சரி. இவர் கூறும் அந்த அவுட்டோர் யூனிட் இவருக்குச் சொந்தம் என்கின்றனரே?

– பி. வி. ஏ.

''சீ!'' என்று முகம் முழுதும் கோபம் கொப்பளிக்கத் திரும்பினாள் அவள்.

''என்னைப் பேர் சொல்லிக் கூப்பிட நீ யாரு...? அதுக்கு உனக்கு என்ன த்குதி இருக்கு...?''

''கோபப்படாதே மினி. இதுக் கெல்லாம் காரணம் நீதானே தவிர நானில்லை. மண்டபத்துல பேசாமல் இருந்த என்னை என்ன சொன்னே? அவனைப் பார்க்கவே எனக்குப் பயமா இருக்குன்னுதானே? பயப்படும்படி நான் என்ன செய்தேன்? சாதாரணமா அப்படி யாரும் தனியா மாட்டினா உடனே அவங்ககிட்டேயிருந்து நகையையும், பணத்தையும் பறிச்சுக் கிற நான் உங்ககிட்டே பேசாமல் இருந்தேன்னா அதுக்குக் காரணம் உங்களை மார்க்கெட்டுல பார்த்தது தான். 'எவ்வளவு அழகா இருக்கா இவ'ன்னு நினைச்சதுதான். உன் அழகு, நிதானம் இதெல்லாம் என்னைக் கவர்ந்த ஒரே காரணத்தினாலதான் மண்டபத்துல உங்களைத் தனியாகப் பார்த்தும் நான் எதுவும் செய்யலை. பணத்தையோ, நகையையோ பறிக் கிற முயற்சியில் இறங்கலை. சாது வாகத் திரும்பி வர நினைச்சுப் படி இறங்கின என் காதுல விழுந்த உன் வார்த்தைகள்தான் இந்த நிலைமைக்கு என்னைத் துரத்தியிருக்கு. ஒண்ணுமே பண்ணாத என்னைக் காரணமே இல்லா மல் வெறுத்த உன்னை சும்மா விடக் கூடாதுன்னு தோணித்து. அதனால தான் வேகமாக முன்னால் வந்து இவர் களை அனுப்பி உயிருக்கு ஒரு ஆபத்தும் ஏற்படாத வகையில் உன் கணவனை லேசாக ஒரு தட்டுத் தட்டி உன்னைத் தூக்கிட்டு வரச் சொன்னேன்.

இதுவரை நான் திருடி இருக் கேன். இல்லேன்னு சொல்லலை. பொய் சொல்லி, ஏமாற்றி, மோசடி பண்ணி, தேவை ஏற்பட்டால் உன் கணவனை அடிச்சுப் போட்ட மாதிரி லேசாகக் காயப்படுத்தி... அத்தனையும் செய்தி ருக்கேன். இந்த 25 வயசுல நான் பண்ணாத, எப்போதும் பண்ண நினைக் காத இரண்டே தப்புகள் – ஒண்ணு கொலையும், மற்றொன்று இதுவும்தா[ன்] கொலைக்குக் கூட என் மனசு துணி யுமோ என்னவோ, ஆனால் நிச்சயம் இதற்குத் துணிஞ்சதில்லை. எந்தப் பொண்ணைப் பார்த்தும் ஆசைப்பட்ட தில்லை. ஆனால் இன்னிக்கு மார்க்கட் டுல உன்னைப் பார்த்ததிலேருந்து என் மனசு என்கிட்டே இல்லை. அதுவும் நீ பேசினதைக் கேட்டதிலிருந்து தைரிய மும் ஏற்பட்டுப் போச்சு. ஸோ – இந்தத் தப்பையும் பண்ணிடத்தான் போறேன்...''

அவன் சொன்னதையெல்லாம் மிகவும் மௌனமாகக் கேட்டுக்கொண் டிருந்த அவள் அந்தக் கடைசி வார்த் தையில் தொனித்த உறுதியிலும், பிடி வாதத்திலும் பயந்துபோய் கண்களில் கண்ணீர் முட்ட எழுந்து நின்று கை கூப்பி அவனைக் கெஞ்சினாள்.

''வேணாம். என்னை ஒண்ணும் செய்யாதே. உன்னை கெஞ்சிக் கேட்டுக் கறேன். நான் அப்படிச் சொன்னது தப்புதான். அதுக்காக என்[னை] மன்னிச்சிடு. உன் கால்ல வேணும்[னா] விழுந்து மன்னிப்பு கேட்டுக்கறேன். தயவுசெய்து என்னை ஒண்ணும் செய்துடாதே...''

அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் அவன் அவளை இன்ன மும் நெருங்கினதும் அவள் அதிக பதட்டத்தோடு சொன்னாள்.

''வேணாம். என்கிட்ட வராதே. கல்யாணமாகி எனக்கு இன்னும் மூணு மாசம் கூட ஆகலை. அதற்குள்ள என்னை ஒண்ணும் பண்ணிடாதே. என்

☆☆ நர்ஸிங் ஹோம் என்று வைத்திருக்கிறார்கள். ஏன் நர்ஸிங் ஹவுஸ் என்று வைக்கவில்லை?

A house is made of brick and mortar, but a home is made of love and affection!

நோயாளிகளைப் பரிவுட னும் பாசத்துடனும் கவ னிக்க வேண்டும். ஆகை யால்தான் 'நர்ஸிங் ஹோம்' என்று வைத்திருக்கிறார்கள்.

– கேசி

வாழ்க்கையை நாசமாக்கிடாதே. படிச்சவனுகத் தெரியறியே, கொஞ்சம் இரக்கம் காட்டேன்.''

''இரக்கம்!'' – சடாரென்று அவன் முகம் சிவந்து இறுகிற்று. கீழ் உதடு கடிபட்டது.

''என்னை மட்டும் இரக்கம் காட்டச் சொல்றியே... அந்த இரக்கத்தை இந்த சமூகம் என்கிட்டே காண்பிச்சுதா? படிச்சவன்னு சொல்றியே... அந்தப் படிப்பிற்கு மதிப்பிருந்ததா...? நான் எடுத்த எம். ஏ. டிகிரியும், காலேஜ் சர்டிஃபிகேட்டுகளும் எதற்கு எனக்கு உபயோகப்பட்டது? அதையெல்லாம் நான் இந்த இடத்திற்கு வந்துதான் கிழிச்சுப்போட்டேன். முதல் முதலா திருட ஆரம்பிச்ச அன்னிக்கு ராத்திரி நெருப்பு கொளுத்திக் குளிர் காய்ஞ்சேன். வேலை கிடைக்க உபயோகப்படாத என் படிப்பு

அவங்களை அப்படி பயப்படுத்தி விரட்டறதில் எனக்கும் ஒரு குரூர திருப்தி ஏற்படறது. ஆனல் உன்னை அப்படி விரட்டாமல், பயப்படுத்தாமல், உன்னிடம் இருக்கிற இந்த லக்ஷ்மிகரமான களைக்குக் கொஞ்சம் நெகிழ்ந்து போய் இரங்கினல், நீ என்ன செய்தே? 'அவனைப் பார்த்தாலே



வீட்டை அலங்கரிப்பது எப்படி? தரைவிரிப்புகள் எப்படி இருக்க வேண்டும்? சுவர்களுக்கு வர்ணம் ஏப்படி அமைந்தால் எடுப்பாக இருக்கும்? டைனிங் ஹால் எப்படி இருக்க வேண்டும்? கதவுகளுக்கான பெயிண்டை எப்படித் தேர்ந்தெடுப்பது? வீட்டின் வெளிப்புறத்தை அழகுப்படுத்துவது எப்படி? – இப்படிப்பட்ட விஷயங்களை மட்டுமே முழுக்க முழுக்கத் தாங்கி இந்தியாவிலேயே ஒரு மாத இதழ் வெளிவந்துகொண்டிருக்கிறது.

'Inside Outside' எனும் இந்த மாதஇதழை வெளியிட்டு வருவது 'டெபொனேர்' நிர்வாகம்தான். ஆனல் 'டெபொனேர்' விற்கும் அளவுக்கு இந்த சகோதர பத்திரிகை விற்பதில்லை.

என்ன காரணம்? இங்கே பலருக்கு இருக்க இடமே இல்லை. வீட்டு அலங்காரம் பற்றி யாருக்கு அக்கறை?

- பானுமதி -

ஒரு ராத்திரி குளிர் காயவாவது உபயோகப்பட்டதேன்ற ஒரே சந்தோஷம் தான் எனக்குள் ஏற்பட்டது. வேலையில்லாத என்னை அப்பாவும் அம்மாவும் ஓட ஓட விரட்ட, இந்த சமூகமும் கூட சேர்ந்து விரட்டினது உனக்கென்ன தெரியும்? திருடனை மாதிரி, பிச்சைக்காரனை மாதிரி, கொலைகாரனைப்போல்... கடைசியாக எல்லாப் பெண்களின் கற்பையும் சூறையாட வந்தவனைப் போல்...

எத்தனைப் பார்வைகள், பேச்சுகள். இல்லாத ஒன்றைக் கற்பனை பண்ணி விரட்டினதால்தான் நிஜமாகவே அப்படி மாறினேன். இப்போ என்னைப் பார்த்து யாரும் பேசறதில்லை. அலட்சியமாகப் பார்க்கிறதில்லை. மாருக பயத்தோட பார்க்கிருங்க.

பயமாக இருக்கு'ன்னு சொல்லி என் உணர்வுகளை அவமானப்படுத்தினே. என்னைக் கேவலப்படுத்தினே. என்னைப் பார்க்கிறபோது ஏற்பட்ட பயமெல்லாம் இதோ ஒரே விநாடியில் அடங்கிப்போய் விடும் பாரு...''

அவன் தன்னை நெருங்குவதைப் பார்த்து வேண்டாமென்று கதறி கதவோடு கதவாக ஒடுங்கித் தானும் ஒரு கதவாக, மரமாக, சுவராக மாறி விடமாட்டோமா என்ற பரிதவிப்பில் அவள் இருந்தபோது அவன் தன் கண்களில் ஒரு அபரிமிதமான ஆசை படர, உதட்டில் புன்னகை ஓட அவளது வலது கையை முரட்டுத்தனமாகப் பற்றி இழுத்ததில் கண்ணடி வளையல்கள் முழுதும் உடைந்து கீழே விழுந்து சிதறின... — தொடரும்

# ஜலதோஷம் உங்கள் நாளையே கெடுக்க அனுமதிக்காதீர்கள்



### ஜலதோஷத்தைப் போக்கலாம்

நல்ல ஒரு நாளையே கெடுக்கும் மூக்கு ஒழுகுதல் அல்லது மூக்கடைப்பு, தலை கனம், தொண்டைக்கட்டு மற்றும் மார்சளி போன்றவற்றுடன் உள்ள ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் பெற ஒரு வழி இருக்கிறது.

### ஜலதோஷ மருந்து கொண்டு தாக்கிடுங்கள்

மற்ற உபாதைகளைப் போன்றே இதற்கும் சிகிச்சையளித்தால் போதாது. பாதிக்கப்பட்ட பாகங்களிலெல்லாம் ஒரே சமயத்தில் செயல் புரியவல்ல விசேட ஜலதோஷ மருந்தையே உபயோகியுங்கள்.

### கோல்டரின் ஜலதோஷத்திற்கு மட்டுமே

உங்கள் சுறுசுறுப்பைக் கெடுக்கும் அறிகுறிகள் அனைத்தையும் போக்குகிறது—கோல்டரின். இதிலுள்ள விசேட மருந்துப் பொருட்கள் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட எல்லா பாகங்களிலும் ஒருங்கிணைந்து செயல்புரிகின்றன. அதோடு, ஜலதோஷ எதிர்ப்பு சக்தியை வளர்த்திட இதில் வைட்டமின் C உள்ளது.

ஜலதோஷத்தினால் பாதிக்கப்படும் போது ஜலதோஷ மருந்தையே சாப்பிடுங்கள்.

# கோல்டரின்

## விசேட ஜலதோஷ மருந்து

CASBC-64-172 TM

## இந்துமதி

# பைசா நகரத்துக் கோபுரங்கள்



அவன் வழக்கமாக அந்த ழியில் வருபவன். பக்கத்து ஊரின் ரிகைக்கடை ஒன்றில் வேலே செய்து டை மூடின உடனே ஐந்து மைல் ரத்தை சைக்கிளில் கடந்து வீடு நம்புபவன். அன்றைக்கு கடை டினதும் உடனே சைக்கிளே மிதித்துக் காண்டு கிளம்பிவிடவில்லே. பூட்டை முத்து பரிசோதித்துக்கொண்டிருந்த தலாளியின் எதிரில் தலேயைச் சாறிந்து தயங்கி நின்ருன். திரும்பிப் த்த முதலாளி சிரித்துக்கொண்டே கேட்டார்.

''என்னடா, தலேய சொறிஞ்சுக் ட்டு நிக்கறே?''

''ஒண்ணுமில்லீங்க. சாயனூர் காட்டாயில் புதுசா ரஜினி படம் ந்திருக்குங்க...''

''என்ன படம்?''

''பொல்லாதவங்க.''

''அதையேண்டா காசு கொடுத்து காட்டாய்க்குப் போயி பார்க்கணும். ண்ணுடி முன்னுல நின்னு பார்த்துக் கிட்டா பொல்லாதவன் தாணுகத் தெரியருன்.''

சிறுவன் நிஜமாகவே பொல்லாதவன் தான். சிரித்துக்கொண்டே ''யாரு கண்ணுடி முன்னுல நின்னு பார்த்துக்கணும்னு சொல்றீங்க முதலாளி?'' என்று கேட்டான்.





பூனைதான் நாய்களைவிட போட்டோவுக்கு ஏற்ற வீட்டு மிருகம் என்கிறார் போட்டோகிராபர் Neil Leifer.

— [illegible]

---

கேள்வியின் அர்த்தம் புரிந்தாலும் கோபப்படாமல் அவரும் சிரித்தார்.

''ஏண்டா டேய், இந்தப் பொல்லாதவனையே சமயத்துல தண்ணி காட்டியே, நீ இன்னும் எவ்வளவு பெரிய பொல்லாதவன்! ஆமா, எவ்வளவு காசு வேணும்?''

''எண்பது பைசா போறுங்க.''

''அது டிக்கெட்டுக்குப் போயிடுச்சுன்னு சாப்பாட்டுக்கு என்ன செய்வே?''

''ராத்திரி வீட்டுக்குப் போய் சாப்டுக்குவேன்.''

''இந்தா, ஒரு ரூபாயா வச்சுக்க. சினிமா பார்த்த அசதி, நேரம் கழிச்சு எழுந்திருச்சேன்னு காலேல கடைக்கு லேட்டா வந்து நிக்காதே.''

''மாட்டேங்க.''

சினிமா பார்த்த சந்தோஷத்தில் சிறுவன் தன்னை ரஜினியாகப் பாவித்து, படத்தில் வந்த பாடலை விசிலடித்து, ஸ்டைலாக சைக்கிளை மிதித்துக்கொண்டு வந்தபோது சாலையின் குறுக்கில் பெரிதாக எதுவோ விழுந்து கிடப்பதைப் பார்த்து சைக்கிளை நிறுத்தினான். தன் சைக்கிளின் சிறிய மண்ணெண்ணெய் விளக்கின் வெளிச்சத்தில் அது என்ன என்பது புரியாமல் ''யாரது? இன்னாது அது?'' என்று குரல் கொடுத்தான். அதற்கும் சலனமற்றுக் கிடக்கவே சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டு அருகில் போய்ப் பார்த்தான்.

அந்த மழை நீரின் சேற்றிலும், தேங்கிக்கிடந்த தண்ணீரிலும் விழுந்து கிடப்பது ஒரு ஸ்கூட்டர் என்பது புரிய அது எப்படி அங்கே வந்தது என்ற சந்தேகத்துடன் சுற்றிப்பார்த்தபோது சிறிது தள்ளி புதர்களுக்கிடையில் விழுந்து கிடந்த நந்தகுமார் கண்ணில் பட பெரிதாய் அலறி மீண்டும் சைக்கிளில் ஏறி வேகமாக மிதித்து அடுத்த பத்து நிமிடத்திற்கெல்லாம் கையில் ராந்தலும், தடிக்கம்புமாக ஊர் மக்களை அழைத்துக்கொண்டு வந்தான்.

சில நிமிடங்களில் புதர்களுக்கிடையிலிருந்து மீட்கப்பட்ட நந்தகுமார் சாலைக்குக் கொண்டுவரப்பட்டு முகத்தில் நீர் தெளிக்கப்பட்டு எழுந்து உட்கார வைக்கப்பட்டான்.

மயக்கம் முழுதும் தெளியாத அந்த நிலையிலும் அவனுக்கு சௌதாமினிதான் முதலில் ஞாபகத்திற்கு வந்தாள். தன்னைத் தாக்கினபின்பு அந்த முரடர்கள் அவளைத் தூக்கிப் போய்விட்டது புரிய அவனுக்குக் குபீரென்று அழுகை வந்தது. தன் இயலாமையின்மீது கோபம் வந்து இத்தனை நேரம் அவள் என்ன ஆனாளோ என்ற கேள்வியில் உடம்பிற்கும், மனத்திற்கும் அசுரபலமாக ஒன்று வர மெதுவாக எழுந்து நின்றான்.

கால்கள் லேசாகத் தள்ளாட மெல்ல நடந்து ஸ்கூட்டரின் அருகில் போனபோது அந்தச் சேற்றில் விழுந்து கிடந்த அவளின் தலைப்பூவும்,



டைந்த கைவளையல் துண்டுகளும் கண்ணில் பட அவன் வாய்விட்டு அழ முடியாதவனாக வாயைப் பொத்திக் கொண்டு நின்றான். அதுவரை பேசாமல் அவனையே பார்த்துக்கொண்டிருந்த ஊர் ஜனங்கள் கேள்வி கேட்க ஆரம்பித்தார்கள்.

''என்ன ஆச்சு தம்பி, பணம் காசு எதும் காணாமற் போயிடுச்சா?''

''யாராவது அடிச்சுப் போட்டுப் பிடுங்கிட்டுப் போனாங்களா?''

''கூட யாரும் வந்தாங்களா தம்பி?''

அந்தக் கடைசி கேள்வியில் உடைந்துபோன அவன் கீழே கிடந்த அவளது வளையல் துண்டுகளையும், சேற்றில் விழுந்து நசுங்கிக்கிடந்த சரத்தையும் எடுத்துப் பார்த்து, சீதையை ராவணன் தூக்கிச் சென்ற பின்பு திரும்பிவந்து அவளைக் காணாமல் ராமன் கதறின மாதிரி கதற ஆரம்பித்தான். அந்த ராமனுக்குத் துணையாக நின்ற லட்சுமணனைப் போலவோ, அல்லது ராவணனுடன் போரிட்டு குற்றுயிராய்க் கீழே விழுந்து சீதையை யார் தூக்கிக்கொண்டு போனது என்பதைச் சொல்வதற்காகவே காத்திருந்த ஜடாயுவைப் போலவோ இங்கே தனக்கு யாரும் சொல்லமாட்டார்களா என்ற தவிப்புடன் குரலே எழும்பாமல் மெலிதாய்ப் பேச முற்பட்டான்.

''என்... என்... மினி, என் பெண்டாட்டிங்க–''

அதற்குமேல் எது சொல்லவும் முடியாமல் அவன் அழத் தொடங்கின



# நிலம் யாருடையது?



நிலங்களின் சொந்தம் யாரு டையது? கவர்ன்மெண்டாருடையதா? ஜனங்களுடையதா? நில உரிமைக்கு ஜனங்கள் செலுத்துவது தீர்வையா? அல்லது குடிக்கூலிதானு என்ற விஷயத்தைப் பற்றி இந்திய ராஜதந்திரிகள் நெடுங்காலமாக வாதாடி வருகிருர்கள்.

இந்திய கவர்ன்மெண்டாருடைய கருத்து என்னவென்ருல், நிலத்திற்கு சொந்தக்காரர் ராஜாங்கத்தாரே என்றும், நிலத்தை ராஜாங்கத்தார் குடியானவர்களுக்கு கொடைக் கூலிக்கு விட்டிருக்கிருர்களென்றும் மாசூலின் பேரில் குடியானவர்கள் செலுத்துவதை நிலவரி அல்லது அரசிறை என்று சொல்ல முடியாதென்றும், அது கொடைக்கூலி ஆகுமென்றும் சொல்கிருர்கள். மகமதிய ராஜாங்கத்தாரும் இவ்வாறே பாவித்து வந்ததாக அறிவிக்கப்படுகிறது.

இது விஷயமாக சென்ற வாரக் கடைசியில் ஹைகோர்ட் ஜட்ஜ் சர் எஸ். சுப்பிரமணிய அய்யர் பிரஸிடென்ஸி காலேஜில் ஒரு உபந்நியா

தும் புரிந்துகொண்ட ஊர் மக்கள் அதிர்ச்சியில் ஒரு விஞடி மெளன மாஞர்கள்.

''ஏன் தம்பி, யாரும் உங்களே அடிச்சுப் போட்டுட்டு அவங்களேத் தூக்கிட்டுப் போயிட்டாங்களா?''

ஆமாம் என்று தலேயாட்டிஞன் அவன்.

''அந்த ஆளு யாருன்னு தெரியுமா தம்பி?''

''தெரியாதுங்க. ஒருத்தன் இல்லீங்க, ரெண்டு பேருங்க.''

''ரெண்டு பேரா? உங்களுக்கு ஆகாதவங்க யாரும்-''

''அப்பிடி யாருமே எனக்குக் கிடையாதுங்க. பெரிய தெரு கடைக்கு சாமான் வாங்க வந்தோங்க. திடீர்னு ஸ்கூட்டர் ரிப்பேர் ஆயிடவே தள்ளிக்கிட்டு உங்க ஊருக்கு வந்து ரிப்பேர் பார்த்துக்கிட்டுப் போயிடலாம்னு கிளம்பினபோதுதாங்க இதோ இந்த புதர் மறைவிலேருந்து கையில் கத்தியும், கம்புமாக அவங்க வெளிப்பட்டாங்க. பணம், நகை எது வேணுமோ எடுத்துக்கிடுங்கன்னு கழட்டிக் கொடுக்கப் போனபோது அதையெல்லாம் கொண்டு வரச்சொல்லி எங்களுக்கு உத்தரவில்லேன்னு சொல்லி அவளே... அவளே...''

துக்கம் தாங்காமல் அவன் மீண்டும் முகத்தை மூடிக்கொண்டு அழுததும் அவர்கள் தங்களுக்குள் அது யாராக இருக்கும் என்று பேசி எந்த முடிவிற்கும் வர முடியா-தவர்களாக,

''அவங்க எப்படி இருந்தாங்க தம்பி? கொஞ்சம் அடையாளம் சொல்லுங்களேன்'' என்று கேட்டார்கள்.

அவன் அழுவதை நிறுத்தி யோசித்து, நினேவுபடுத்திப் பார்த்துச் சொன்னதும்,

''நீ சொல்ற ஆசாமிங்க எங்க ஊர்க்காரங்களா தெரியலே தம்பி. எங்க ஊர் ஆளுங்களுக்கு இம்புட்டுத் தைரியம் வராது. ஏதோ தனியா யாரும் மாட்டிக்கிட்டா பணம், காசு இருந்தா பயமுறுத்திப் பிடுங்கிக்கிட்டுப் போவாங்களே தவிர பொம்பளே விஷயத்துக்கெல்லாம் போகமாட்டாங்க. இது ஏதோ வெளியூர் ஆசாமிங்க வேலேயாத் தெரியுது. ஏன் தம்பி, அவங்க எப்படிப் போஞங்கன்னு பார்த்தீங்களா?''

''இல்லேயே. அதுக்கு முன்னுலயே நான் தலேயில அடிபட்டு மயக்கமா விழுந்துட்டேனே.''

''இதுக்கு மேலயும் நேரம் கடத்தாம சீக்கிரமாப் போயி போலீசுக்குச் சொல்லு தம்பி.''

அவர்கள் அவனே அந்தச் சிறுவனின் சைக்கிளின் பின்ஞல் உட்கார வைத்து பக்கத்து போலீஸ் அவுட் போஸ்ட்டிற்கு அனுப்பிஞர்கள். அங்கு

ஸம் செய்தார். அதிலே அவர் நில உரிமை ஜனங்களுடையதேயன்றி சர்க்காருடையதாக மாட்டாதென்பதைத் தக்க ஆதாரங்களால் நிலை நிறுத்தினர்.

ஆதியிலே ஹிந்து ராஜாக்கள் காலத்திலே கூட நிலத்தின் உரிமை ஜனங்களுடையதாக இருந்தது என்றும், ராஜாங்கத்தாருக்கு அரசிறை மட்டுமே செலுத்தப் பெற்று வந்ததென்றும் பல பூர்வீக சாஸ்திரங்களினின்றும் எடுத்து ஸ்தாபித்தார். இத்தேசத்திலே எத்தனையோ ராஜாங்கங்கள் இருந்து மறைந்து போயிருக்கின்றன என்றபோதிலும் நிலச் சொந்தம் நிலத்திலே பிறந்து வளர்ந்த ஜனங்களுக்குத்தான் உண்டேயன்றி அப்போதப்போது வந்து போய்க் கொண்டிருக்கும் ராஜாங்கத்தாருக்கு உண்டென்று சொல்வது சிறிதேனும் பொருத்தமுடையதாக மாட்டாது.

– 1907, மார்ச் 30– இந்தியா பத்திரிகையில் பாரதியார்.

– தகவல்: ரோகிணி

ஒரு சாதாரண மாம்பலகை மேஜைமீது முகத்தைக் கவிழ்த்துத் தூங்கிக்கொண்டிருந்த கான்ஸ்டபிளை எழுப்பி விஷயத்தைச் சொன்னால் அவன் ஸ்டேஷனுக்குப்போய் கம்ப்ளெயிண்ட் எழுதிக் கொடுக்கச் சொன்னான். அந்த வட்டாரத்திற்கே போலீஸ் ஸ்டேஷன் பெரிய கடைத் தெருவில் மட்டும்தான் உண்டு. அந்த முன்காலை நேரத்தில் அவ்வளவு தூரம் அந்தச் சிறுவன் தன்னை மிதித்துக்கொண்டு போவானோ மாட்டானோ என்று அவன் தயங்குவதைப் புரிந்துகொண்ட சிறுவன் மிகவும் ஆறுதலாகச் சொன்னான்.

''ஏறுங்க சார். பத்தே நிமிஷத்தில் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு'டு போயி உட்டுர்றேன்.''

பதில் பேசாமல் ஏறி உட்கார்ந்த நந்தகுமார் அப்போது அந்தச் சிறுவன்தான் தன்னுடைய ஜடாயு என்று நினைத்துக்கொண்டான். மீண்டும் பெரிய கடைத் தெருவின் வழிகளும், கடைகளும் இன்னும் அதிகமாக சௌதாமினியை நினைவுபடுத்த 'கடவுளே, அவளுக்கு ஒன்றும் அகியிருக்கக் கூடாதே...' என்று வாய் முணுமுணுக்க அரை மணி நேரத்திற்கெல்லாம் போலீஸ் ஸ்டேஷனின் கான்ஸ்டபிளை எழுப்பி, நடுத்தர வயதிலிருந்த அந்த இன்ஸ்பெக்டரை வீட்டிலிருந்து வரவழைத்து அவன் விவரமாக வீட்டைவிட்டுக் கிளம்பினதிலிருந்து போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்த வரை ஒன்று விடாமற் சொல்லி, அவரின் கேள்விகளுக்குப் பதிலளித்து, கடைசியில் அதற்கு மேல் தாங்க முடியாதவனாக ஸ்டேஷன் மேஜையில் முகம் புதைத்து,

''இன்ஸ்பெக்டர், என் மினிக்கு ஒண்ணும் ஆகாமல் காப்பாத்திக் கொடுத்துடுங்க...'' என்று விவரம் புரியாத சின்னப் பையனைப்போல் கண்ணீருடன் கெஞ்ச ஆரம்பித்ததும்,

அவர் எழுந்து அவனருகில் வந்து தோளில் தட்டிக் கொடுத்தார்.

''கவலைப்படாதீங்க. கொஞ்சம் தைரியமா இருங்க. எப்படியாவது அவங்களைத் தேடிக் கண்டுபிடிச்சுடலாம்.''

"பொழுது விடியறதுக்குள்ள கண்டுபிடிச்சிடுவீங்களா இன்ஸ்பெக்டர்?''

அவனின் கேள்வி அவரை வருத்தமாகச் சிரிக்க வைத்தது.

''கண்ணாம்பூச்சி விளையாட்ல ஒளிஞ்சுக்கிறவங்களைக் கண்டுபிடிக்கக் கொடுக்கிற அவகாசத்தைக்கூட எங்களுக்குக் கொடுக்கலேன்னா எப்படி மிஸ்டர் நந்தகுமார்? இன்னும் இரண்டு நாள் டயம் கொடுங்க. அவங்களைக் கண்டுபிடிச்சு உங்ககிட்டே கொண்டு சேர்க்கறோம்.''

''அவளுக்கு ஒண்ணும் ஆகி இருக்காதே இன்ஸ்பெக்டர்?''

○ ○பெண் புஷ்பவதி ஆகும் தருணத்தில் எலும்பு வளர்ச்சி தீவிரமாய் இருக்கும். அப்போது ஒரு நாளைக்கு 1200 மில்லிகிராம் கால்சியம் சத்து தேவையாம். அதனால் குறைந்தபட்சம் ஆறு டம்ளர் பாலாவது அருந்த வேண்டும் என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள்.

– ருக்மிணி அம்மாள்

அவர் பதில் சொல்லாமல் மௌன மாக இருக்கவே மறுபடியும் அதையே கேட்டான் அவன்.

''என்ன பேசாமல் இருக்கீங்க. என் மினிக்கு ஒண்ணும் ஆகி இருக் காதே?''

''ஐயம் ஸாரி டு ஸே திஸ் மிஸ்டர் நந்தகுமார். அந்தமாதிரி ஒரு உத்தரவாதத்தைத் தர முடியாத நிலையில் இருக்கிறேன் நான். நீங்கள் சொன்னதையெல்லாம் கேட்கிற போது, இது பணத்திற்காகவோ, நகைகளுக்காகவோ நடந்த விஷய மாகத் தெரியவில்லை. எனிவே, லெட் அஸ் ஹோப் ஃபார் தி பெஸ்ட். கொஞ்சம் எங்களுடன் வந்து அந்த ...த்தைக் காட்டிவிட்டு, அப்படியே ...டிற்குப்போய் உங்கள் மனைவியின் புகைப்படம் ஒன்றைக் கொடுத்தனுப் புங்கள். சமீபத்தில் எடுத்த புகைப்பட மாக இருந்தால் நல்லது.''

''அவள் என்னை வந்து அடைந் ததே வெகு சமீபத்தில்தான் இன்ஸ் பெக்டர். கல்யாணமாகி இன்னும் மூணு மாசம்கூட முடியலே. நாளைக்கு மறுநாள்தான் மூணும் மாசம் நிரம்புது. அவ வீட்ல மாங்கல்யத்தைப் பிரிச்சுக் கோர்க்க வந்து கூப்பிட்டுட்டுப் போனாங்க. அதுக்கு வேஷ்டி, புடவை வாங்கத்தான் கிளம்பினோம். அதுக் குள்ள இத்தனையும் நடக்கணுமா இன்ஸ்பெக்டர்! நாங்க யாருக்கு என்ன தப்பு பண்ணினோம் இன்ஸ்பெக்டர்–''

''ப்ளீஸ், கொஞ்சம் தைரியமா இருங்க. வாங்க, ஸ்பாட்டுக்குப் போக லாம். மனதை இப்படித் தளர விடா தீங்க, எழுந்திருங்க.''

அவருடன் போய் இடத்தைக் காட்டிவிட்டு அவர் அனுப்பின கான்ஸ் டபிளுடன் மௌனமாய் ஜீப்பில் ஏறி வீட்டை அடைந்தபோது நன்றாக விடிந்திருந்தது. வீட்டு வாசலில் அத் தனைக் குடித்தனமும் சேர்ந்திருந்தது. நடையில் அம்மாவும், தங்கையும், தம்பியும் தவித்துக்கொண்டு நிற்பது தெரிந்தது.

போலீஸ் ஜீப்பைப் பார்த்து இன் னும் தெரு முழுதும் கூட, அதிலிருந்து அவன் மட்டும் தனியாக இறங்கி வருவதைக் கவனித்த அம்மா வயிற் றில் பயமும், சந்தேகமும் நெருப்புக் கட்டிகளாக இறங்க,

''என்னடா குமார்–'' என்று ஆரம்பித்தபோது அவன் அம்மா என்று கதறி அவள் தோளில் முகம் புதைத்து ''மினி... மினி...'' என்று மேலே சொல்ல முடியாமல் தடுமாறினான்...

— தொடரும்

---




''பிள்ளை வீட்டுக்காரங்க, அநியாயமா பொய் சொல்லி என் பெண்ணைக் கட்டிக்கிட்டாங்க! இப்ப என் பெண் ஏமாந்து நிக்கறா!''

''மாப்பிள்ளைக்கு பெரிய உத்யோகம்னு சொன்னாங் களா?''

''இல்லே! அவருக்கு நல்லா சமைக்கத் தெரியும்னு சொன்னாங்க!''

– வெ. சீதாராமன்

---

''ஹலோ! நடிகை லத்துஶ்ரீ இருக்காங்களா?''

''அவங்க குளிச்சிட்டிருக்காங்களே!''

''ஸாரி! அப்போ 'ராங் நம்பர்!''

– வி. பார்த்தசாரதி





**நிறுத்தப்பட்ட செய்திகள்!**

இரவல் குரலால் உயர்ந்திருக்கும் தாடி வைத்த நடிகர் '—மா' படத்தின் சென்னை நகர உரிமையை வாங்கினார். ஆனால் ஒப்பந்தப்படி அவர் நடந்துகொள்ளவில்லையாம்! படத் தயாரிப்பாளருக்கு பாதிப் பணம் கொடுத்தார். மீதிப் பணத்துக்கு போடப்பட்டது III. கோர்ட்டுக்குப் போகலாம் என்றால், ஒப்பந்தப் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டவர் முதல் கம்பெனி பெயர் வரை எல்லாமே போலியாம். ஒரு ரூபாய் இரண்டு ரூபாயா? 75 ஆயிரம் ரூபாயை இழந்துவிட்டு எதுவும் செய்ய முடியாமல் தவிக்கிறார் தயாரிப்பாளர்.

இரண்டாவது மனைவியான [illegible]ணை நடிகைமீது உள்ள அன்பு அதிகமானதால் முதல் மனைவியின் முகத்தைக்கூடப் பார்க்கப் பிடிக்காமல் விலகி வந்துவிட்டார் ஒரு டைரக்டர். வீட்டுக்கே போவதில்லை. கைச்செலவுக்குக்கூட காசு இல்லாமல் கண்ணீர் வடிக்கும் நிலையில் கணவனைத் தேடி மனைவி வர பாராமுகமாக அவர் பதில் சொல்லி அனுப்ப வெறுப்புக்குமேல் வெறுப்பு.

கல்லூரிப் பேராசிரியரை மணந்த 'தீ' நடிகை இப்போது சென்னையில் இல்லை. எர்ணாகுளத்தில் வாசம். பிரசவத்திற்காக குடியேற்றம் என்று சொல்லுகிறார்கள். மீண்டும் சென்னைக்கு வருவதாக இல்லை. பின்? அங்கேயே செட்டில் ஆகிவிடப்போவதாய்ச் சொல்கிறார்கள். நடிகை குடியிருந்த சென்னை வீடு இப்போது வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது. போன் நம்பர் 'கட்' ஆகிவிட்டது. (பெட்ரூம் நம்பர் உட்பட)

கூன்வுக்கன்னியின் தாயார் தயாரித்த 'பாண்டவர்கள்' படம் சென்சாருக்குப் போனது. 'ஏ' சர்ட்டிபிகேட்டும் கொடுத்துவிட்டார்கள். எவ்வளவோ போராடியும் 'ஏ'யை நீக்க முடியவில்லை. இரண்டு ஆண்டுகளாக வெளிவராமல் இருக்கும் இந்தப் படம் எப்போதுமே வெளிவராது என்கிறார்கள். காரணம்? படத்தில் நடித்தவர்களுக்கு பேசியபடி பணம் தரவில்லையாம். படத்தின் விநியோக உரிமையை வாங்கியவர்கள், அட்வான்சைத் திருப்பிக் கொடு, படமே வேண்டாம் என்கிறார்களாம். சொந்தமாக ரிலீஸ் செயயும் தைரியமும் அந்த அம்மாவுக்கு அடியோடு இல்லை. பிறகு படம் எப்படி வரும்?

'சுஷ்மே பதூர்' என்பது இந்தியில் வெளிவந்த நகைச்சுவைப் படம். இப்படத்தை தமிழில் நான்கு தயாரிப்பாளர்கள் தயாரிப்பதாக ஒரு வதந்தி. இவர்களில் ஒருவர் மட்டுமே 'காபிரைட்' வாங்கியிருக்கிறாராம். மற்றவர்கள்? 'காப்பி' அடித்து படத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். 'இன்சாஃப் கா தராசு' என்ற இந்திப் படத்தையும் இப்படித்தான் போட்டி போட்டிக்கொண்டு எடுத்தார்கள் தமிழ் – தெலுங்கு தயாரிப்பாளர்கள்.

# பைசா நகரத்துக் கோபுரங்கள்

- இந்துமதி -

**சு**வரில் சரிந்து முழங்காலைக் கட்டி அதிலேயே முகத்தைப் புதைத்து குமுறிக்கொண்டிருந்தாள் சௌதாமினி. நீளமான கேவல்களும், விசும்பல்களுமாக அவளது தீனமான அழுகைக் குரல் வெளிப்பட்டுக்கொண்டிருந்தது. தன்னுடைய முழுப் பலமும் ஒடுக்கப்பட்டு மிகக்கேவலமாய் உடம்பால் அடிமைப்படுத்தப்பட்டதை நினைத்தபோது இன்னமும் அவளுக்குள் அழுகை பீரிட்டது, தன்னால் இயலாதபோது பெயர் சொல்லி உதவிக்குக் கூப்பிட்ட கடவுள்களின் மீதும், அத்தனை நாட்களும் விடாமல் செய்து வந்த பூஜையின் மீதும், நெஞ்சில் நீங்காமல் நிறைந்திருந்த தெய்வ நம்பிக்கையின் மீதும் அளவு கடந்து ஒரு வெறுப்பு ஏற்பட்டது.

ஒருவன் உன்னை பலாத்காரம் செய்ய வரும்போது உன்னுடைய பற்களும், நகங்களுமே உனக்குக் கூரிய ஆயுதங்களாகப் பயன்படும் என்ற வாசகம் நினைவிற்கு வந்து சொல்ல முடியாத கோபத்தை உண்டாக்கிற்று. ஆயுதங்களா அவை? ஒரு வினாடி தாக்குதலைக்கூட சமாளிக்க இயலாமல் ஓய்ந்துபோன இவைகளா கூர்மையான ஆயுதங்கள்? எனக்கு அவை எப்படி பயன்பட்டன? மிகச் சுத்தமாக வெட்டி விடப்பட்டிருந்த கைவிரல் நகங்களும் (மாமியாருக்குக் கைகளில் நகம் வளர்ப்பதும், அவற்றிற்கு வர்ணம் பூசுவதும் பிடிக்காத விஷயங்கள். அதேபோல் அப்பாவிற்கும் பிடிக்காது. ''என்னம்மா மினி. புலி, சிங்கம் மாதிரி நகம் வளர்த்துக்கிட்டு. முதல்ல அதை வெட்டும்மா.''), அரிசி அரிசியாக அழகாய் நின்ற பற்களும் எதற்கு பயன்பட்டன? தற்காப்பிற்கா? இல்லை, தாக்குதலுக்கா?

அவனின் முகத்தைக் கீறி காயப்படுத்த உயர்ந்த தன் கைகளை நிமிடமாய் எப்படி ஒடுக்கி விட்டான் அவன்? தன் ஒரே கையால் தடுத்து மீண்டும் உயர முடியாமல் எப்படி அழுத்திக் கொண்டான். அந்த வலிமைக்கும், வேகத்திற்கும் முன்னால் வெறும் நகங்களும், பற்களுமா ஆயுதங்கள்? எழுதினவர் எவ்வளவு சுலபமாய் இயலாததை எழுதி வைத்துவிட்டுப் போய் விட்டார்?



நினைத்து நினைத்து அவள் குமுறிக் கொண்டிருந்தபோது, எதிரில் உட்கார்ந்திருந்த அவனும் கிட்டத்தட்ட அதேபோல்தான் தவித்துக்கொண்டிருந்தான். அந்த நிகழ்ச்சிக்குப் பின் அத்தனை வருடங்களாகத் தன் மனத்தை எரித்துக்கொண்டிருந்த கோபம், ஆத்திரம், வெறுப்பு எல்லாம் அடங்கித் தணிய சாதாரண மனிதனாக யோசிக்கத் தொடங்கினான். ஒருவேளை இதுதான் தன்னை இப்படி அலைக்கழித்ததோ என்ற சந்தேகம் வர தன்னைத்தானே வெறுத்துக்கொண்டான். தன்னுடைய இந்த செய்கையின் முழு பாதிப்பும் புரிய அவளை நேராகப் பார்க்கிற தைரியமற்று மெதுவாய் கீழ்க்கண்ணால் பார்த்தபோது அவள் உட்கார்ந்திருந்த நிலைமையும், முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு அழுத அழுகையும் அவன் மனத்தை மிகவும் சங்கடப்படுத்திற்று.

அன்று மாலை அவள் தன் கணவனுடன் பெரிய கடைத்தெருவில் சந்தோஷமாகச் சிரித்துக்கொண்டு நின்றது நினைவில் வந்து போயிற்று. இடைப்பட்ட இந்தச் சில மணி நேரங்களில் அவள் தன்னால் எப்படி நாசப்படுத்தப்பட்டு விட்டாள் என்பதை நேரில் பார்ப்பது அவனை மிகவும் வலிமையாகத் தாக்கிற்று. அழகாய் சிரித்துக்கொண்டு நின்ற சின்னக் குழந்தையைத் துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தின வலியையும் வேதனையையும் அடைந்தான்! இனிமேல் இந்த வலியும்,



வேதனையும்தான் தனக்கு நிரந்தர மானவை என்று தோன்ற அத்தனை நேரமாகத் தனக்குத் துணை நின்ற தைரியமும், பலமும், பிடிவாதமும் தன்னைவிட்டு கழன்று ஒன்றுமே இல் லாதவனாக அடித்துப் போட்டுவிட் டதை உணர்ந்தபோது அவன் சக்தி யற்றவனானான்.

அவளை அன்று மாலை பார்க்க நேர்ந்த தன் விதியை நொந்துகொண் டான். அவளது அழகின் மீது கோபப் பட்டான். அது தன்னை இந்த அள விற்கு விரட்டி உள்ளத்து நெருப்பை



விசிறி எரிய வைத்து கடைசியில் அவளை அதில் விழுந்து கருகிப்போக நேர்ந்ததற்கு பரிதாபப்பட்டவனாக மீண்டும் அவளைப் பார்த்தபோது அவ ளின் விசும்பல் சற்றே குறைந்த மாதிரி தோன்ற, இதற்குப்பின் இவளை என்ன செய்வது என்று யோசித்தான்.

அடிமனதில் அவள் மீது தனக்குள் ஏற்பட்ட அபரிமிதமான ஒரு அன்பை அவனால் புரிந்துகொள்ள முடிந்தது. அவளை விட்டுப் பிரிவது அந்த விநாடி யில் சாத்தியமற்ற விஷயமாகப் பட அவளைத் தன்னுடன் வைத்துக்கொண் டால் என்ன என்று தோன்றியது. உடனே அந்த எண்ணம் அவனாலேயே மறுக்கப்பட்டும் விட்டது. நிச்சயமாக அவள் அங்கு இருக்க சம்மதிக்க மாட் டாள். தன்னை மிகவும் கேவலமானவ னாக, அற்பத்தனம் நிறைந்தவனாக, புழு பூச்சியை விடக் கீழானவனாக நினைத்து வெறுக்கிற இவளிடம் அப்படிக் கேட் பது கூட அவசியமற்றதுதான். வற் புறுத்தி இருக்கச் செய்வதும் நடக்காத காரியம்.

அதன்பின் இவள் தற்கொலை செய்துகொள்ளக்கூடத் தயங்க மாட் டாள். எப்போதும் இவள் பக்கத்தில் உட்கார்ந்து காவல் காப்பது என்பதும் நடக்காத விஷயம். இப்போதும்கூட சிறிது அவகாசம் கிடைத்திருக்கு மானால் தன்னிடமிருந்து தப்பிக்க நிச் சயமாகத் தற்கொலை செய்துகொண்டி ருக்கக் கூடும். நல்ல வேளையாக அந்த அவகாசம் அவளுக்குக் கிடைக்க வில்லை. அதற்கு முன்னால் தான் அவளை... அவளை...

'கடவுளே! நான் ஏன் இப்படிச் செய்தேன்? எதற்காக இன்று மாலை பெரிய கடைத்தெரு பக்கம் போனேன்? நீ ஏன் அங்கே வந்தாய் மினி? ஏன் என் கண்களில் பட்டாய்? உன் அழகின் ஆகர்ஷண சக்தியைத் தாங்குகிற வலிமையற்றுத்தானே நான் மண்டபத்திற்குத் திரும்பினேன். அங்கேயும் நீ எதற்காக வரவேண் டும்? எனக்குள் தகித்துக்கொண்டிருந்த ஜ்வாலையை மேலும் எரியவைக்கிற விதமாக ஏன் பேசவேண்டும்? இதற் கெல்லாம் காரணம் நான் மட்டு மில்லை மினி. நீயும் கூடத்தான். உன் விதிதான் உன்னை இன்று என் கண் களில் படவைத்து, மண்டபத்திற்கு

‘‘கடைசியா விசாகப்பட்டினம் மாப்பிள்ளை என்ன கேக்கறுர்?’’



‘‘வரதட்சணை வேண்டாம்... கல்யாணத்துக்கு சக்கரையும், வீட்டைக் கட்டி முடிக்க 100 மூட்டை சிமிண்டும் போதுங்கறுர்!’’

– ஜோதி (மாத இதழ்)

வரவழைத்து, பின் இங்கேயும் கொண்டுவந்து சேர்த்து...’

சொன்னுல் அவள் முகத்தில் காரித் துப்புவாள். அயோக்கிய நாயே! செய்வதைச் செய்துவிட்டு விதியின் மீதா பழி போடுகிருய்? என்று சீறுவாள்.

எதுவானுலும், அவள் எவ்வளவு கோபப்பட்டாலும் (அவளின் கோபம் நியாயமானது, தார்மீகமானது), என்ன பேசினுலும் பொறுத்துக் கொண்டு இனிமேல் அவள் சொல்கிற படி செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதைத் தீர்மானித்துக் கொண்டு மெல்ல எழுந்தான். சத்தப் படுத்தாமல் அறையின் ஓரமாக இருந்த கெரஸின் ஸ்டவ்வைப் பற்ற வைத்து டீ தயாரித்தான். தனக்கும், அவளுக்குமாக இரண்டு டம்ளர்களில் ஊற்றி எடுத்துக்கொண்டு அவளருகில் போய் ஒரு விஞடி தயங்கி நின்றுன்.

இப்போது அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிடக்கூட தைரியம் வராமல் போயிற்று. யுத்தக்களத்தில் சீதையைத் தூக்கிக்கொண்டு வந்ததற்கு வருத்தப்பட்ட ராவணனைப் போல் அவனும் வருத்தப்படலானுன். அவள் முன்பு தலைகுனிந்து நிற்க நேர்ந்ததற்காக வேதனைப்பட்டவன், அந்த வேதனையை வெளிக்காட்டாதவனுக சற்றே மென்மையான குரலில் ‘மினி’ என்று கூப்பிட்டான்.

அவள் நிமிர்ந்துகூடப் பார்க்காமல் இருக்கவே இன்னமும் அருகில் போய் மெல்ல தோளில் கை வைத்த போது அவள் சீறிக்கொண்டு நிமிர்ந்து அவனை ஒரு பார்வை பார்த்தாள். அந்தப் பார்வையின் தீட்சண்யத்தில் மனதிற்குள் எரிந்து போனுலும் அதே அமைதியோடு டீ டம்ளரை அவள் முகத்திற்கு எதிராக நீட்டி,

‘‘டீ சாப்பிடு மினி’’ என்றுன்.

பளாரென்று அவள் தட்டின தட்டில் டீ டம்ளர் அறையின் எதிர் மூலையில் போய் விழுந்தது. தன் கையில் கொட்டின டீயின் சூடு தாங்காமல் உதறிக்கொண்டே தன் டம்ளரையும் டீயோடு விசிறினுன் அவன். பின் அவள் ஆக்ரோஷத்தோடு கேட்ட ‘‘ஏன் வெறும் டீ தரே? அதுல கொஞ்சம் விஷம் போட்டுத் தர்றது தானே!’’ என்ற கேள்விக்கு –

‘‘அப்படியெல்லாம் பேசாதே மினி. ஏதோ நடந்தது நடந்துபோச்சு’’ என்று ஆரம்பித்ததும் மீண்டும் அதே ஆக்ரோஷத்துடன் குறுக்கிட்டாள்.

‘‘சீ, வெட்கமா இல்லே உனக்கு! ஏதோ நடந்து போச்சாம். சாதாரண விஷயமா நடந்திருக்கு! நான் உனக்கு என்ன தப்பு பண்ணினேன்? எதுக்காக என்னை... என்னை... இப்படி...?’’

அதற்கு மேல் வார்த்தை வராமல் அவள் மீண்டும் அழ ஆரம்பித்ததும் அவனும் மீண்டும் தவித்தான். அருகில் உட்கார்ந்து அந்தக் கண்ணீரைத் துடைத்து, தலையை வருடி சமாதானப் படுத்த வேண்டும் போலிருந்தது. அவளைத் தன் தோளில் சரித்து ‘ஐ லவ் யு மினி’ சொல்ல வேண்டுமென்று தோன்றியது. இவள் இன்னும் ஒரு ஐந்து வருடங்களுக்கு முன் தன் வாழ்க்கையில் குறுக்கிட்டிருப்பாளேயானுல், தான் இப்படியெல்லாம் சின்னுபின்னப்பட்டிருக்க மாட்டோம் என்ற எண்ணத்தில் ஆழமாகப் பெருமூச்சு விட்டான் அவன். இனிமேல் அதைப் பற்றியெல்லாம் நினைப்பதில் எந்த

விதப் பயனுமில்லை. இப்போது தான் தெரிந்துகொள்ள வேண்டியதெல்லாம் அவள் தன்னுடன் தங்குவதற்கு சம்மதிப்பாளா, மாட்டாளா என்பதுதான். அதைத் தெரிந்துகொள்ள குரலைத் தழைத்துக்கொண்டு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

''பெரிய தப்புத்தான் மினி. மன்னிக்க முடியாத தப்புத்தான் பண்ணிட்டேன். இதுவரைக்கும் நான் நினைச்சுக்கூடப் பார்க்காத தப்பு இது. இதற்குப் பிராயச்சித்தமா நான் உனக்கு எது செய்யவும் தயாராக இருக்கேன். உன்னை வாழ்நாள் முழுதும் வச்சுக் காப்பாத்தக்கூடத் தயங்க மாட் –''

அவனை முடிக்க விடாமல் தூ என்று காரித் துப்பினாள் அவள்.

''நீ காப்பாத்தி நான் உயிரோட இருப்பேன்னு நினைக்கறே? முதல்ல என்னை எங்க வீட்டுக்காரரை அடிச்சுப் போட்ட இடத்துக்குக் கொண்டுபோய் விட்டால் போறும்டா பாவி!''

அவளின் பதில் மனதை வலிமையாகத் தாக்க அதிகம் சோகப்பட்டுப் போய் சொன்னான் அவன்.

''கொண்டுபோய் விடறேன் மினி. ஆனால் இப்போ வேணாம். பொழுது நல்லா விடிஞ்சு போச்சு. இப்போ கொண்டுபோய் விட்டால் எங்களை அடையாளம் கண்டுபிடிச்சுடுவாங்க. அதனாலே கொஞ்சம் பொறுத்துக்க மினி. இன்னி ராத்திரி நானே உன்னை உன் வீட்டுல கொண்டுபோய் விட்டுடறேன்.''

''முடியாது'' என்று தலையசைத்தாள் அவள். ''இனிமேல் ஒரு நிமிஷம்கூட நான் இங்கே இருக்கமாட்டேன்டி.''

''ப்ளீஸ் மினி. சத்தியமாச் சொல்றேன். நான் உன்னை ஒண்ணும் பண்ண மாட்டேன். உன் கிட்ட கூட வரமாட்டேன். இந்த ஒரு வேளை பொறுத்துக்க. இதுக்குள்ள மயக்கம் தெளிஞ்சு உன் வீட்டுக்காரன் எழுந்து விட்டிருக்கலாம். போலீஸ்ல சொல்லியிருக்கலாம். போலீஸ் எங்களைத் தேடிக்கிட்டும் இருக்கலாம். அதனாலே இப்போ உன்னைக் கொண்டுபோய் விட முடியாது. ராத்திரின்னா சுலபமா எங்களால் அவங்களை ஏமாத்திட முடியும். உன்னை ஜாக்கிரதையா உன் மினி. அதுவரை கொஞ்சம் பொறுத்துக்க.''

அதன்பின் அவள் அவனிடம் எதுவும் பேசவில்லை. நிமிர்ந்தும் அவன் முகத்தை பார்க்கவில்லை. பச்சைத் தண்ணீர்கூடக் குடிக்கவில்லை. மூலையில் சுருண்டு படுத்து புடவைத் தலைப்பால் முகத்தை மூடிக்கொண்டு, வீட்டிற்குப் போனால் மாமியாரும், கணவனும், மற்றவர்களும் தன்னை எப்படி வரவேற்பார்களோ என்ற பயமும், துக்கமுமாக மெலிதாய் அழுதுகொண்டே இருந்தாள்.

அவன் வெளியில் நின்ற தன் நண்பர்களை அனுப்பி அவளுக்கு சாப்பிட ஏதாவது வாங்கிக்கொண்டு வரச் சொல்லி, அப்படியே என்ன ஆயிற்று என்பதையும் விசாரித்துக்கொண்டு வரச் சொன்னான். போலீஸ் தங்களைத் தேடுவதையும், காலை செய்தித்தாளில் மினியின் புகைப்படம் பிரசுரமாகி அவள் தூக்கிக்கொண்டு போகப்பட்ட செய்தி வெளியாகி இருப்பதையும் தெரிந்துகொண்டான்.

அவை எதையும் அவளிடம் சொல்லாமல், சாப்பிடச் சொல்லி மூன்று நான்கு முறை வேண்டி, அவளிடமிருந்து பதில் எதுவும் வராமல் போகவே, அன்றிரவு வரை அவள் எதிரிலேயே காவல் நின்று பின்பு தங்களின் இருப்பிடத்தை அவள் கண்டுபிடிக்க முடியாமல் சிறிது தூரம் வரை கண்களைக் கட்டி பின் கட்டவிழ்த்து யார் கண்ணிலும் படாமல் அவளது வீட்டின் தெருக் கோடியில் விட்டு, அந்த வீட்டில் சூழ்ந்திருந்த கூட்டத்தைக் கவனித்து, அதன் பின் அவள் நிலைமை என்ன ஆகும் என்று யோசித்துக்கொண்டே திரும்பியபோது அவனது கண்ணோரத்தில் பொட்டாக நீர் துளிர்த்தது... — தொடரும்

---

☆'காந்தி' படத்திற்கு இசை அமைக்கப் போகிறவர் யார் தெரியுமா?

சிதார் மேதை ரவி சங்கர்தான். அண்மையில் இதற்கான ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது.

– ம. வே. ஏமிலாதன்



# சர்க்கரை வியாதியா? ரத்தக் கொதிப்பா? கவலைப்படாதீர்

இதோ
இயற்கை தரும்
இன்மருந்து!
இமயமலை
பனிச்சாரலில் விளையும்

## பிஜோசால்

மூலிகை மரத்திற்கு
பிணியகற்றும் குணமுண்டு
''பிஜோசால்'' மரத்தால் செய்த



## துர்கா ஆயூர்வேத டம்ளரை

உபயோகித்து பயனடைவீர்!

## துர்கா டிரேடர்ஸ்

பி. எஸ். கே. பில்டிங்க்ஸ, 395, கடை விதி, சேலம்-636 001

கிராம்ஸ் : Peeyenke — போன் : 2371 & 66457

**'துர்கா டம்ளர்' கிடைக்குமிடங்கள் :**

**பிரதான விநியோகஸ்தர்கள் :**

(1) சென்னை, செங்கல்பட்டு: ஸ்ரீ மகாலட்சுமி ஏஜன்சீஸ், 68, திருமலைப்பிள்ளை ரோடு, சென்னை-17. (2) சேலம்: கிளாஸ் எம்போரியம், கடைவீதி, சேலம்-1. (3) திருச்சி: கண்ணன் டிரேடர்ஸ், B 10, N. E. E. சாஸ்திரி ரோடு, தில்லை நகர், திருச்சி-620018. (4) மதுரை, ராமநாதபுரம்: பார்வதி எண்டர்பிரைசஸ், 25, கிரித்துமல் நதி வீதி, தெற்கு வாசல், மதுரை. (5) கோவை: ரவிசந்திரா ஏஜன்சீஸ், 7/311, அவினாசி ரோடு, கோவை-641018. (6) ஈரோடு: விஜயலக்ஷ்மி டெக்ஸ், 36, ஈஸ்வரன் கோயில் தெரு, ஈரோடு-1. (7) மாடர்ன் ரேடியோ சர்வீஸ், கும்பகோணம் & தஞ்சாவூர். (8) மேற்கு இராமநாதபுரம்: ராஜபாளையம் ஏஜன்சீஸ், ராஜபாளையம். (9) விழுப்புரம்: ஸ்ரீ பாலாஜி மெடிக்கல்ஸ், திரு. வி. க. ரோடு, விழுப்புரம். (10) ஸ்ரீ புவனேஸ்வரி ஏஜன்சி, பரமக்குடி. (11) சண்முகா ஏஜன்சீஸ், திருவண்ணாமலை.

**கர்னாடகா:** அப்சரா ஏஜன்சீஸ், திவான் சூரப்பாஸ் லேன், சிக்பேட், பெங்களூர்-560053.

**பாண்டி:** பூர்ணிமா ஏஜன்சீஸ், 166, மகாத்மா காந்தி ரோடு, பாண்டிச்சேரி.

**ஆந்திரா:** (1) சிங் மெடிக்கல் ஹால், காகர்லவாரி தெரு, நெல்லூர். (2) மிட்டா ஷாப், ஹைரோடு, சித்தூர் - 517001. (3) K. கார்த்திகேஸ்வர், 10-3-282/2/A/10, வெங்கடாத்ரி நகர் காலனி, ஹைதராபாத்.

**பம்பாய்:** பாலாஜி இண்டர்நேஷனல், டாஸ்கண்ட் டீ சென்டர், யூசுப் பில்டிங், (சித்திரா சினிமா எதிரில்) பம்பாய்-14.

**மலேசியா:** ரகமத் எண்டர்பிரைசஸ், 7, ஜலான் படு டிகா, கேளாங் (வடக்கு) சிலாங்கூர், மலேசியா.

**இலங்கை:** திருமதி வேதநாயகம், 57/2, ரன்ஜீவி லேன், கொழும்பு-4.

தமிழ்நாடு சுற்றுலா வர்த்தகப் பொருட்காட்சியில்
அமைந்திருக்கும் எங்கள்

இந்துமதி

# பைசா நகரத்துக் கோபுரங்கள்




ஹைதராபாத்தில் ஒரு ஓட்டலில் கிடைக்கும் ஸ்பெஷல் தோசையின் பெயர் - 70 m. m. தோசா.

— வேணி

**வீ**டு நிசப்தமாகக் கிடந்தது. எப்போதும்போல் ராத்திரி பத்து மணிக்கு மேல் எல்லாம் ஒய்ந்து அத்தனைக் குடித்தனக்காரர்களும் படுக்கப் போய்விட்டபின்பு இயல்பாக ஏற்படுமே அந்த நிசப்தமாக இல்லாமல் இது ஒரு மாறுபட்ட நிசப்தமாக இருந்தது. அடித்துப்போட்டது போன்ற பயங்கர நிசப்தமாகத் தெரிந்தது. அத்தனை நேரமாக வீட்டு வாசலையும், நடையையும், தெருவையும் அடைத்துக்கொண்டு அற்பத்தனமான வேடிக்கை பார்க்கிற உணர்வுடன் நின்றிருந்த அத்தனைக் கூட்டத்தையும் போலீஸ்காரர்கள் விரட்டினபின்பும் விரட்டமுடியாதவர்களாக, அந்த வீட்டின் குடியிருப்புக்களான ஒரு சிறு கூட்டம் இன்னமும் சௌதாமினிக்கு நேர்ந்த முழு விவரத்தையும் தெரிந்துகொள்கிற ஆர்வத்துடன் ஜன்னல் வழியாகவும், கதவின் மூலமாகவும் எட்டிப் பார்க்கவே இன்ஸ்பெக்டர் தன் கோபத்தை அடக்க முடியாதவராக சௌதாமினியையும், நந்தகுமாரையும் தனியாக உள்ளுக்குள் அழைத்துப் போய் நிறைய கேள்விகள் கேட்டார்.

திரும்பத் திரும்ப வார்த்தைகளை மாற்றி மாற்றி அவர் அந்தப் பாழடைந்த வீட்டில் நடந்த சம்பவத்தையும், அவளை முற்றிலுமாகச் சிதைத்துக் கொண்டு விட்டுப்போன அவனைப்பற்றியுமே கேட்டதும் அவள் அவமானமும், அழுகையுமாக பதில் சொல்லக்கூட முடியாமல் குமுறிக் கொண்டு நின்றாள்.

வந்தபோதே வீட்டு வாசலில் சூழ்ந்து நின்ற கூட்டத்தையும், போலீஸ் ஜீப்பையும், காக்கிச் சட்டைகளையும், உள்ளே நுழையும் முன்னமே அவசரமாகத் தன்னைப் புகைப்படமெடுத்துக்கொண்ட பத்திரிகைக் காரர்களையும் கண்டு அதிகம் பயமும் மிரட்சியும் அடைந்திருந்தாள் அவள். அதில் என்ன சொல்கிறோம் என்கிற பிரக்ஞையற்று தன்னைப் பார்த்ததும் சந்தோஷமும், பதட்டமுமாக ஓடி வந்து கட்டிக்கொண்ட மாமியாரிடமும், கணவனிடமும் மாறி மாறி அழுதுகொண்டே தனக்கு நேர்ந்ததையெல்லாம் அவர்கள் கேட்கக் கேட்க சொல்லிக்கொண்டே போனாள்.

அத்தனைக் கூட்டத்திற்கிடையில் அவைகளைச் சொல்லக்கூடாது என்கிற சாதாரண உந்துதல்கூட இல்லாதவளாக அவளும், நடுக் கூடத்தில் நிற்க வைத்து கேள்விகள் கேட்கக்கூடாது என்கிற ஜாக்கிரதை உணர்ச்சியற்ற

வளாக மாமியாரும் மாறின பனபு போலீஸ் இன்ஸ்பெக்டரால்கூட அந்த நிலைமையைச் சமாளிக்க முடிய வில்லை. பரபரவென்று தங்கள் பேனாவை எடுத்து, அவள் தன் மாமியாரின் கேள்விகளுக்குச் சொன்ன பதில்களைக் குறித்துக்கொண்ட பத்திரிகை நிருபர்களைத் தடுக்கவும் முடிய வில்லை.

கடைசியில் நிலைமையைச் சமாளிக்கிற முயற்சியில் கூட்டத்தை விலக்கி, யாரையும் உள்ளே விடாமல் சௌதாமினியையும், நந்தகுமாரையும் மட்டும் தனியாக அழைத்துப் போய் அறைக் கதவை மூடிவிட்டு கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

''ஏம்மா, உங்கக் கஷ்டமும், மனக் குமுறலும் எனக்குப் புரியுது. ஆனா அதையெல்லாம் இப்படியாம்மா அத்தனை பேருக்கிடையில் நடுக்கூட்டத்தில் நின்றுகொண்டு சொல்வது...? நீங்க தான் பாதிக்கப்பட்டவங்க. எதையும் புரிஞ்சுக்கற நிலைமையில் இல்லைன்னால், உங்க மாமியார், வயசும், விவேகமும் நிறைஞ்சவங்க, அவங்க கூடவா அப்படி அங்கயே எல்லாக் கேள்விகளும் கேட்கணும்...?''

அவரது அந்தக் கேள்விக்குப் பின்னரே அத்தனை பேர்களுக்கு நடுவில் தன் நிலைமை பகிரங்கப்படுத்தப்பட்டதை உணர்ந்தவளாக, அந்த அவமானமும், சோகமும் வேறு பலமாகத் தாக்க இன்னமும் குறுகிப்போய் அதிகம் அழுதுகொண்டிருந்தபோதுதான் இன்ஸ்பெக்டரின் இரண்டாம் கேள்வியாக அது வெளிப்பட்டது.

''ஏம்மா, உங்க மாமியார்கிட்ட சொன்ன மாதிரி தாடி வச்சிட்டிருந்த அவன் ஒருத்தன்தான் உங்களை ரேப் பண்ணினானா...? இல்லே, தூக்கிட்டுப் போன அந்த இரண்டு பேரும் கூட சேர்ந்துக்கிட்டாங்களா...?''

அந்த இரண்டாம் கேள்வியில் அதிகம் காயப்பட்டுப்போய், அதுவும் கணவனின் எதிரில் ஒரு மூன்றாம் மனிதனால் அப்படிப்பட்ட ஒரு கேள்வி கேட்கப்படுகிற நிலையில் நின்ற அவமானமும், துக்கமும் சேர அதற்கு மேல் தாங்க முடியாதவளாகக் கீழே சரிந்து சுருண்டு போய்க் கதற ஆரம்பித்தாள் அவள்.

''இதுக்கு மேல் என்னை எதுவும் கேட்காதீங்க இன்ஸ்பெக்டர். என்னால பதில் சொல்ல முடியாது. சொல்கிற சக்தியோ, திடமோ என்கிட்டே இல்லை. தயவுசெய்து என்னை விட்டுடுங்க...''

என்று அடிவயிற்றிலிருந்து வெளிவந்த கேவலும், விசும்பலுமாக அவள் கெஞ்சினதும் இன்ஸ்பெக்டர் தன் குறிப்புப் புத்தகத்தை மூடிவிட்டு அவளை ஒரு விநாடி மிகமிகப் பரிதாபமாகப் பார்த்தார். கை கூப்பி கெஞ்சின அந்த முகமும், கண்களும், குடும்பப் பாங்கான அழகும் 'நிச்சயமாய் இந்த சோகம் இவளுக்கு ஏற்பட்டிருக்கக் கூடாது' என்பதை மீண்டும் வலியுறுத்த அவர் ஒரு ஆழமான பெருமூச்



சோடு எழுந்து நின்ருர். அதற்குப் பின் அவளது வாழ்க்கை என்ன ஆகும் என்ற கேள்வியில் தனக்குள் ஏற்பட்ட வேதனையை வெளிக்காட்டாதவராக, இந்த நிலைமையில் அவளுக்கு வேறு எந்த உதவியும் செய்ய இயலாத தன் இயலாமையைப் புரிந்துகொண்டவ ராக, எப்போதும் சொல்லிப் பழக்கப் பட்ட வாசகங்கள் தாஞக வெளிவர இயந்திரத்தனமாகச் சொன்ஞர்.

''கவலேப்படாதீங்கம்மா. எப்படி யும் குற்றவாளியைக் கண்டுபிடிச்சிடு வோம்...''

சொல்லி முடித்தபின்புதான் அந்த வார்த்தைகளேச் சொல்லியே இருக்க வேண்டாம் என்பதை நினேத் துக்கொண்டார். இது திருட்டோ, நிலத்தகராறு வழக்கோ இல்லே. இதில் குற்றவாளியைக் கண்டுபிடிப்ப தஞல் மட்டும் இவளுக்கு ஏற்பட்ட இழப்பு சரிப்பட்டுவிடப் போவதில்லே. இவளே மறைந்தாலும் இந்த இழப் பும் களங்கமும் இவளேவிட்டு மறையப் போவதில்லே. அப்படிப்பட்ட ஒரு கஷ்டத்திலும், சோகத்திலும் மிகவும் துரதிருஷ்டவசமாகவும், எதிர்பாராத வகையிலும் அகப்பட்டுத் தவிக்கிற





நிருபர்: ''ஒரு பெண் வயசுக்கு வந்த கதைய படமா தயாரிக்கிறீங்களாமே, படத்தின் பெயர் என்ன?''

டைரக்டர்: ''அந்த மூன்று நாட்கள்!''

இவளிடம் சொல்லக்கூடிய வார்த்தைகளா அவை...?

தன் அத்தனை வருட போலீஸ் உத்தியோகத்தில் ஏற்படாத ஒரு மிகப் பெரிய சோகத்துடன் அந்த வீட்டை விட்டு வெளியில் வந்து ஜீப்பில் ஏறிக்கொண்டு போனார்.

இன்ஸ்பெக்டர் அந்த இடத்தை விட்டு அகன்ற தைரியத்தில் அவளை அணுகிக் கேள்விகள் கேட்க முயன்ற பத்திரிகையாளர்கள், அழுகையைத் தவிர வேறு எந்தப் பதிலையும் பெற முடியாதவர்களாக, அழுகிற அதே நிலையில் அவளையும், நந்தகுமாரையும், வீட்டிலுள்ள மற்றவர்களையும் புகைப் படமெடுத்துக்கொண்டு உடனடியாக அந்தச் செய்தியை விறுவிறுப்பாகத் தருகிற உந்துதலுடன் விலகினதும் வீட்டைச் சூழ்ந்திருந்த கூட்டம் கணிசமாகக் குறைந்தது.

அதன்பின் வெறும் குடித்தனக்காரர்களே நின்றிருந்தனர். பெண்களில் சற்று வயதானவர்கள் மனதிற்குள் சௌதாமினியின் மீது ஏற்பட்ட அருவெறுப்பையும், அசிங்கத்தையும் அவளின் மாமியாரை அணுகி மெல்லப் பேச்சுக் கொடுத்து அனுதாபத்துடன் பேசுகிறமாதிரி பேசித் தீர்த்துக்கொண்டார்கள். மறுநாள் காலை முதல் வேலையாக வீட்டைக் கழுவி சுத்தப்படுத்த வேண்டும் என்றார்கள்.

''ஆமாம் மங்களத்தம்மா. வீட்டையாவது கழுவி சுத்தப்படுத்திடலாம். ஆனா அவளை எப்படிச் சுத்தப் படுத்தறது...?'' என்று ஒரு கேள்வியைக் கேட்டு அவளை அந்தக் கேள்வி தீவிர தாக்குதலாகத் தாக்கி யோசிக்க வைத்ததும், திடீரென்று ஏற்பட்ட வீட்டின் நினைவுடனும், பசியின் ஞாபகத்திலும் அனைவரும் ஒன்றாகக் கலந்து போய் வெகு நேரமான பின்பும் –

அறையின் மூலையில் அதேபோல் தான் சுருண்டு கிடந்தாள் சௌதாமினி. வினாடிக்கு ஒரு தரம் உடம்பு லேசாகக் குலுங்க அவளிடமிருந்து மிக தீனமான கேவல்கள் வெளிப்பட்டுக் கொண்டிருந்தன.

அதுவரை அத்தனை விஷயங்களையும் கேட்டுக்கொண்டும், பார்த்துக் கொண்டும், பேச சக்தியோ, விருப்பமோ அற்று மௌனமாய் எங்கோ வெறித்தபடி உட்கார்ந்திருந்த நந்தகுமார் தன் மௌனம் கலைந்து முதல் தடவையாக அவளைத் திரும்பிப் பார்த்தான். தரையில் சுருண்டு ஒரே நாளில் மிகவும் மாறிப் போய் கண்ணீரும், குமுறலுமாகக் கிடந்த அவளது நிலைமை அவனுக்குள்ளும் கண்ணீரை வரவழைத்தது. மூன்று மாதங்கள் அவளுடன் நடத்தின அந்த சந்தோஷமான தாம்பத்திய வாழ்க்கை ஞாபகத்திற்கு வந்து இனிமேல் அவளை அப்படி அணுகவே முடியாதோ என்ற சந்தேகம் தோன்றியது. அவளை நெருங்குகிற போதே இடறலாய், மனதிற்குள் நெருடலாக இது நினைவிற்கு வந்து அவனை ஹிம்சைப்படுத்தும். இப்போது படுகிற அதே அவஸ்தை அப்போதும் தோன்றும்.

அப்போது என்று ஒத்திப்போட முடியாதபடி அந்த நிமிடமே அவள் அணுக இயலாத வகையில் அந்நியப் பட்டுப் போனதை உணர்ந்தவன் மிகவும் அதிர்ச்சியடைந்தான். இப்படி அழுவதைப் பார்த்தபடி அவனால் உட்கார்ந்து கொண்டிருக்கவே முடியாது. அவள் முகம் சிணுங்கினால்கூடத் தாங்க இயலாதவன். அப்படிப்பட்டவன்தான் அவளுடைய அந்தக் குமுறலையும், கண்ணீரையும், கோழிக்குஞ்சாகச் சுருண்டு கிடப்பதையும் பார்த்து மௌனமாக உட்கார்ந்துகொண்டிருக்கிறான். அருகில் போய் எழுப்பி, கண்ணீரைத் துடைத்து ஆறுதல் சொல்

# 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



# 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

இரும்புச்சத்து அதிகமுள்ள

## ஃபாரெக்ஸ்

கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்ல மெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது."
—Dr. Subhash C. Arya
"Infant & Childcare for the Indian Mother".

டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்யக் காரணம்?

குழந்தையின் இரத்தத்திற்கும், உடல் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக அடங்கியது—ஃபாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-183 Tam

கிற நினைப்புகூட எழாமல், அவளைத் தொடுவதே மிகவும் அந்நியமான ஒரு நினைப்பாகவும், அருவருப்பாகவும் பட நெஞ்சினுள் கசப்பாக, உப்புக்கரிப்பாய் மாறிற்று. தான் நேரில் பார்க்காத அந்தத் தாடிக்காரனும், அவளைத் தூக்கிப்போன அந்த இரண்டு முரடர்களும் மாறி மாறி அவளை நெருங்கி —

அதற்கு மேல் அந்த நினைவு தொடராத முடிவில் வலுக்கட்டாயமாகத் தன்னை உதறி மனத்திலிருந்து அந்தக் காட்சியை விரட்டுகிற முயற்சியில் மெல்ல அவளைப் பார்த்து தன் குரலின் நடுக்கம் தெரிய மிகவும் மெலிதாக ''மினி...'' என்று கூப்பிட்டான்.

அந்த ஒரு குரலுக்கும், ஆறுதலான வார்த்தைகளுக்கும், தன் சந்தேகங்கள், பயங்கள், எல்லாவற்றையும் போக்க வைக்கிற அவனுடைய அணைப்பிற்கும் எதிர்பார்த்து அந்த விநாடி வரை காத்திருந்து ஏமாந்திருந்தாள் அவள். அவன் அவை எதுவுமின்றி அவளைத் திரும்பியும் பார்க்காமல், மௌனமாக மேற்கூரையை வெறித்துக்கொண்டு உட்கார்ந்திருந்ததைப் பார்த்து உள்ளுக்குள் அதிக பயமாகவும், தனக்கு என்ன நேருமோ என்கிற கவலையினாலும் அடி வயிற்றுக்குள் நெருப்பாக இறங்கி தகித்துக்கொண்டிருந்தபோது அவன் கூப்பிட்ட குரல் குளிர்ந்த தண்ணீரை வாரி இறைத்தாற்போல் நெஞ்சினுள் தெளித்துச்சிதற தற்காலிகமாக நின்ற அழுகையோடு மெதுவாய் தலை நிமிர்ந்து பார்த்தாள்.

அந்தப் பார்வை மீண்டும் அவனைத் தயங்க வைத்தது. ஆனாலும் குரூரமாகத் தன்னைத் தாக்கி வலியும், வேதனையுமாக அவஸ்தைப்படுத்திக் கொண்டிருந்த அந்த சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ளாமல் இருக்க முடியாதவனாக அதை எப்படிக் கேட்பது என்று யோசித்து மிகவும் நிதானமாகக் கேட்டான்.

''இன்ஸ்பெக்டர் கேட்டபோது தான் நீ பதில் சொல்லலை. அழுதே சமாளிச்சுட்டே. இப்போ எனக்காவது பதில் சொல்லு மினி. அந்தத் தாடிக்காரன் மட்டும்தான் உன்னை அனுபவிச்சானா, இல்லை, மற்ற இரண்டு பேரும் சேர்ந்துகூட அனுபவிச்சாங்களா...?''

எதையோ எதிர்பார்த்து நிமிர்ந்த தன் முகத்தில் அவன் நெருப்புத் துண்டங்களை வாரி விசிறினதும் தாங்க முடியாதவளானாள் அவள். அந்த எரிச்சலும், வேதனையுமாகச் சேர்ந்து அடிவயிற்றைப் புரட்டிற்று. நெஞ்சிற்குள் சொல்ல இயலாத வலி ஏற்பட்டது. 'சீ, என்ன கேள்வி இது?' என்று அவன் முகத்தில் காரித் துப்பவேண்டும் போலிருந்தது. அதைச் செய்கிற பலமும், சக்தியும் இல்லாததால் மீண்டும் சுருண்டு தரையில் சரிந்து பெரிதாக அழத் தொடங்கினபோது —

அறை வாசலில் மாமியாரின் இறுகிப்போன குரல் திடமும், தீர்க்கமுமாக வந்தது. சற்று அதட்டலும், அதிகாரமாகவும் கூடக் கேட்டது.

''எதுக்கு இந்த வேண்டாத கேள்வியெல்லாம் கேட்டுக்கிட்டிருக்கே குமார்...? அதற்கான பதிலைத் தெரிஞ்சுக்கிட்டு இப்போ என்ன செய்யப் போறே...? பால் திரிஞ்சுப் போச்சுன்னு ஒரு தரம் திரிஞ்சுதா, ஓராயிரம் தரம் திரிஞ்சுதான்ற ஆராய்ச்சியெல்லாம் அவசியமா...? அதனாலே இந்த மாதிரி கேள்விங்களையெல்லாம் விட்டுட்டு மனசை திடப்படுத்திக்கிட்டு எழுந்திருச்சு வெளியில வா. மேல என்ன செய்யணுமின்னு நாளைக் காலைல யோசிச்சுப் பேசி முடிவு செய்யலாம்...''

அம்மாவின் அந்த அடித்து நிறுத்துகிற தொனிக்குக் கட்டுப்பட்டவனாக அவன் மிகவும் மௌனமாக அறையை விட்டு வெளியேறுவதையும், பின்னர் அறைக்கதவு லேசாக ஒருக்களித்து சாத்தப்படுவதையும் உணர்வால் புரிந்துகொண்ட சௌதாமினி நாளை அவர்கள் செய்யப்போகிற முடிவு என்னவாக இருக்கும் என்பதைத் தீர்மானிக்க முடியாத பயத்தில் அழுகிற சக்திகூட அற்றுப்போனவளாக எழுந்து சுவரில் சரிந்து உட்கார்ந்து அறையின் இருட்டை வெறிக்க ஆரம்பித்தாள்...

— தொடரும்

---

• பிராணிகளைத் துன்புறுத்தினால் விதிக்கப்படும் அபராதத் தொகை ரூ. 50.

சந்துரு



# பைசா நகரத்துக் கோபுரங்கள்

## இந்துமதி

அச

அன்று காலை எழுந்ததிலிருந்து அவனுக்கு எல்லாமே தவறிப் போயிற்று. முதல் கோழி கூவும் முன் எழுந்து குளித்து, நெல் போட்ட பணத்தை எடுத்துக்கொண்டு சிங்கானூர் மாட்டுச் சந்தைக்குப் போய் ஒரு ஜதை உழவு மாடுகளைப் பிடித்துக் கொண்டுவர நினைத்திருந்தான். ஆறு மாதங்களுக்கு முன் அவனது இரண்டு நெல்லூர் எருதுகளும் நோய்வாய்ப் பட்டு ஒன்றன்பின் ஒன்றாக இறந்து போனதிலிருந்து அவன் சௌதாமினியின் அப்பாவிடமிருந்து அவருடைய மாடுகளைக் கடன் வாங்கித்தான் உழுது கொண்டிருந்தான். தன் மாடுகளை உழக் கொடுப்பதற்காக அவர் இது வரை ஒரு ரூபாய் பணம் கூட வாங்கிக் கொண்டதில்லை.

முதல் நாள் மாடுகளை ஓட்டிப்போய் உழுது முடித்து தண்ணீர் காட்டி, வைக்கோல் போட்டு தொழுவத்தில் கட்டிவிட்டி அவன் அவரிடம் வாடகைப் பணமாக தன்னிடமிருந்த பத்து ரூபாய்த் தாளை நீட்டினபோது அவர் சிரித்துக்கொண்டே பிடிவாதமாக வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டார்.

‘‘இதெல்லாம் வேணாம் மன்னாரு. எல்லாத்தையும் சேர்த்து கூடக் கொஞ்சம் பணம் போட்டு ஒரு ஜதை நல்ல மாடாகப் பார்த்துப் பிடிச்சுக்க’’ என்று சொல்லிவிட்டார்.

அதிலிருந்து அவனும் பணம் சேர்த்துக்கொண்டு வந்தான். நான்கு நாட்களுக்கு முன்னால் அறுப்பு முடிந்து நெல் போட்ட பணமும் வந்தது. கூட மனைவியின் ஒரு வடம் சங்கிலியும் பண மாக மாறி கிட்டத்தட்ட மூவாயிர ரூபாயாயிற்று. கையிலிருந்தால் செ வழிந்துபோகும் என்பதற்காக ம நாளே சந்தைக்குப் போய் மா பிடிக்க முடிவு செய்தான். அதற்காக தான் விடியற்காலையில் எழுந்திருக் வும் நினைத்தான்.

ஆனால் அன்று எழுந்தபோ நேரமாகிவிட்டது. அவசரமாக குளித்து, எதையோ சாப்பிட்டு ப வருகிற பிரதான சாலை வரை நடந் வருவதற்குள் முதல் பஸ் போய்விட் ருந்தது. இரண்டாவது பஸ்ஸிற்காக காத்திருந்தால் அந்த கண்டக்ட நிறுத்தாமல் இரட்டை விசிலடித்து



காண்டு போய்விட்டான். அதன் ன் அடுத்த பஸ் ஒன்பதரை மணிக் த்தான். அந்த பஸ்ஸைப் பிடித்துப் பாவதற்குள் சந்தை ஆரம்பமாகி ல்ல மாடுகள் எல்லாம் விற்றுப் பாய்விடும். அதனுல் சந்தைக்குப் பாகாமல் வீட்டிற்குத் திரும்பி டுத்த சந்தையின்போது பார்த்துக் காள்ளலாமா என்று யோசித்துக் காண்டிருந்தபோது, சைக்கிளில் நல் குற்றி ஏற்றின அரிசி மூட்டை டன் பக்கத்துத் தெரு கோபாலன் ருவதைப் பார்த்தான்.

இவனேப் பார்த்ததும் கோபால வும் சைக்கிளே நிறுத்தி,

''என்ன மன்னுரு, எங்க கிளம் ட்டே?'' என்று கேட்டான்.

''மாடு பிடிக்க சிங்கானூர் ந்தைக்குப் போகலாம்னு கிளம்பி னன். கிளம்பின நேரம் சரியில்லே. துனுல திரும்பி வீட்டுக்கே போயிட ாம்னு யோசிச்சிட்டிருக்கையில நீ ந்தே. ஆமா, நெல்லு குத்திட்டு ரியா? மக கல்யாண சாப்பாட்டுக் த்தானே?''

''ப்சு...'' என்று சலித்துக் காண்டான் கோபாலு. ''என்ன ல்யாணம் போ. இதுவரைக்கும் மாத்தமா நாலாயிரம் ரூபாயை முழுங்கிடுச்சு.''

''அது சரி. உத்தியோகம் பார்க் ற அசலூர் பையன்னு சும்மாவா'' ன்று இவன் சிரித்ததும் கோபாலு ின்னமும் கோபப்பட்டான்.

''பெரிய உத்தியோகம் பாரு'' ன்று அவிழ்ந்துபோன முண்டாசை தறி மறுபடியும் கட்டிக்கொண்டே பசினுன். ''நம்ம மாசிலாமணி மக சளதாமினியைக் கட்டிக் கொடுத் ாங்களே. அந்த மாதிரி ஆபீஸர் வேலேயா பார்க்கிருன் இவன்? வெறும் வார்லி உத்தியோகத்துக்கே இந்தப் டுங்கல் பிடுங்கருன்.''

''ஆ... சௌதாமினி மாதிரி ஒம் பாண்ணு அத்தினி அழகா இருந்துச் ன்ன இவனே பைசா செலவில்லாம ட்டிக்கிட்டு போயிருப்பான்''

அதைக் கேட்டு ''அது சரி...'' ன்று இழுத்த கோபாலு ஒரு வினுடி பசாமல் நின்று பின்,

''பின்னுடி மூட்டை இருக்கே. உன்னே ஏத்திக்கிட்டுக் கூடப் போக முடியாதே...'' என்று தயங்கினுன்.

''வாணும், நீ போ. நான் இதோ நடந்து வந்துடறேன். ஆமா, ஹாண்ட் பார்ல அது என்ன பேப்பர்? இன் னித்து பேப்பரா?''

''ம்... பொண்ணு வாங்கியாரச் சொல்லிச்சுன்னு வாங்கிட்டு வந் தேன்.''

''கொஞ்சம் அதை மட்டும் கொடுத்திட்டுப்போ. படிச்சுட்டு நானே உன் வீட்டுக்குக் கொண்டு தந்திட்டுப் போறேன்.''

''மறக்காம தந்துடு. இல்லாட்டி என் மக என்னேப் பிச்சுடுவா.''

செய்தித்தாளேக் கொடுத்துவிட்டு கோபாலு சைக்கிளே மிதித்துக்



சென்னை போலீஸ் பயிற்சி கல்லூரி விளையாட்டுகளில் வெற்றி பெற்ற பெ... சப்-இன்ஸ்பெக்டர் எம். ரங்காத்தானுக்கு, தென் பிராந்திய ராணுவ அதி... ஆர். எஸ். பன்னு தங்கபதக்கமும், வெள்ளி கோப்பையும் பரிசு வழங்கினர்.

## விளையாட்டுச் செய்திகள்

சென்னையில் ரஞ்சி கிரிக்கெட்:

# 20 ரன் வித்தியாசத்தில் தமிழக அணி தோல்வி!

சென்னை, மார்ச் 3— ...

கொண்டு நகர்ந்ததும் அவன் சாவகாச மாக செய்தித்தாளைப் பிரித்து முதல் பக்கத்தில் வந்திருந்த புகைப்படத் தைப் பார்த்து,

'அட, நம்ம செளதாமினி மாதிரி இருக்கே?' என்ற ஆச்சரியத்துடன் படிக்கத் தொடங்கினவன் 'திருமண மான பதினெட்டு வயது அழகி – தூக் கிப் போய் கற்பழிப்பு' என்ற தலைப் பைப் படித்துத் திடுக்கிட்டான். மனசு பதற மேலே படித்துக்கொண்டு போனபோது அவனுக்கு மெல்ல உடம்பு நடுங்கிற்று. வயிற்றைப் புரட் டத் தொடங்கியது. 'அடப்பாவமே! அந்தப் பொண்ணுக்கா இந்தக் கதி!' என்று வாய்விட்டு அரற்றி, நெஞ்சு துடிக்க செய்தித்தாளை மடித்து எடுத் துக்கொண்டு ஓட்டமும் நடையுமா மாசிலாமணியைப் பார்க்கப் போனு

அன்று காலையிலிருந் வாசலுக்கும், சமையலறைக்கும், பி கட்டிற்குமாக நூறு முறைக்கு மே நடந்து ஒரு இடத்தில் உட்கார பொறுமையற்றுப் போனார் மாசில மணி. நொடிக்கு ஒரு தரம் த மனைவியைக் கூப்பிட்டு எதையாவ கேட்டுக்கொண்டிருந்தார்.

''ஏன் மீனாட்சி, வாழையி போறுமா?''

''வெத்திலே, பாக்கு வாங்கியா சொல்லிட்டியா?''

''கல்யாணம் மாதிரியே இட் வும் சம்மந்தியம்மா முகம் கோணு

## 1159 பேருக்கு தலா ரூ. '69

### கிண்டி ரேஸ் முடிவு!

சென்னை, மார்ச். 1– கிண்டியில் நேற்று பிற்பகல் ...

5 – 6 – 1 – 6 – 6

... 1159 பேருக்கு தலா 169 ரூபாய் கிடைத்தது.

மற்ற பந்தயங்கள் முடிவு வருமாறு: –

## போலீஸ் தடியடி கலவரம்

## டிராக்டர் மோதி இறந்ததால் மோதல்!!

கடலூர், மார்ச். 1– கடலூரில் நேற்று ... வன்னியர்கள் பேரணி நடந்தது. அதற்கு ஆட்களை ஏற்றிச்சென்ற டிராக்டர்மோதி ஒருவர் செத்ததால் போலீஸ் தடியடி நடத்தினர்.

டிராக்டர்கள் மோதல்

கடலூரில் நேற்று வன்னியர்கள் ஊர்வலம் நடந்தது. அதில் கலந்து கொள்ள பக்கத்து கிராமத்தில் இருந்து ஏராளமானவர்கள் சென்றனர். பண்ருட்டி அருகே உள்ள பத்தாம்பாக்கம் கிராமம் வழியாக ஒரு டிராக்டர் ஆட்களை ஏற்றிக் கொண்டு பேரணியில் கலந்து கொள்ளச் சென்றது. அப்போது எதிரே வந்த மற்றொரு டிராக்டருடன் மோதி விட்ட

### திருமணம் ஆன 18 வயது அழகி

## தூக்கிப்போய் கற்பழிப்பு!

பிப். 2– கணவருடன் கடைக்குச் சென்று திரும்பும் வழியில் இளம் பெண்ணை தூக்கிப்போய் கதறக் கதற கற்பழித்த முரடர்களை போலீசார் வலைவீசித் தேடி வருகிறார்கள்.

18 வயது அழகி

செளதாமினி (வயது 18) நல்ல அழகி. அவரது கண வர் பெயர் நந்தகுமார். இவர்களுக்கு சமீபத்தில் தான் திருமணம் நடந்தது.

நந்தகுமார் மனைவி செளதாமினியை அழைத் துக்கொண்டு ஸ்கூட்டரில் கடைக்கு போனார். சாமான் கள் வாங்கிவிட்டு இருவரும் திரும்பி வந்து கொண்டிருந் ...

ஸ்கூட்டரை ரிப்பேர் செய்ய கணவர் சென்றார். அப் போது மழை கொட்டியது.

செளதாமினி இருட்டில் தனியே நின்றுகொண்டி ருந்தார். அப்போது 4 முர டர்கள் அங்கு வந்தார்கள்.

செளதாமினியை அலாக் காகத் தூக்கிச் சென்றார்கள். முரடர்களின் பிடியில் இருந்து அவரால் தப்ப முடியவில்லை. மறைவான ஒரு இடத்துக்குக் கொண்டு போய் அவரை கதறக் கதற கற்பழித்தார்கள்.

வலைவீச்சு

இந்தப் பரிதாப சம்பவம் பற்றி போலீசில் புகார் செய் யப்பட்டு உள்ளது. போலீ



நடத்தியனுப்பிடணும் மீனாட்சி. இதுக் கப்புறம் நம்ம பொண்ணு பூ முடியற துக்குத்தானே வரப்போவுது. ஆமா, கல்யாணமாகி மூணு மாசமாயிடுச்சே. உம் பொண்ணு ஏதாவது விசேஷம்னு கடுதாசி போட்டுச்சோ?''

''இது என்ன நம்ம காலம்னு நினைச்சீங்களா, கல்யாணமான பத்தாம் மாசமே புள்ளை பெத்துக்க? சிறுசுங்க. கொஞ்ச காலம் சந்தோஷமா இருந்துட்டுத்தான் போகட்டுமே. ஆமா, அவங்கள்ளாம் எத்தனை மணி பஸ்ஸுக்கு வரேன்னு சொன்னாங்க?''

''மொத பஸ்ஸுக்கே கௌம்பி வரேன்னுங்களே.''

''அப்படின்னா இதோ வந்து சேர்ந்துடுவாங்க. எனக்கு இன்னும் சமையல்கட்டுல ஒரு வேலை ஆகலீங்க. பாயசத்துக்குப் பாலை வச்சிட்டு வந்து உங்ககிட்டே பேசிக்கிட்டிருக்கேன் பாருங்க... யாரையாச்சும் அனுப்பி கொஞ்சம் ஏலக்காய் வாங்கிட்டு வரச்சொல்லுங்க. நேத்து சாமான்த வாங்கினப்ப வாங்க மறந்துட்டேன்.''

''அபிராமி எங்க? அவளை அனுப்பேன்.''

''அவ பக்கத்து வீடுங்கள்ள கூப்பிடப் போயிருக்காங்க. வேற யாரை யாச்சும் அனுப்பி வாங்கியாரச் சொல்லுங்க.''

''வேறு யாரை அனுப்பறது'' என்று யோசித்தவாறு அவர் கூடத்திற்கு வந்தபோது அவசரமும், பதட்டமுமாக வியர்த்துப்போய் வந்து நின்ற மன்னாரைப் பார்த்தார்.

''வா மன்னாரு. எனக்கு ஒரு உதவி பண்றியா? செட்டியார் கடை வரைக்கும் போயி கொஞ்சம் ஏலக்காய் வாங்கிட்டு வரியா? அபி வெளிய போயிருக்குது. நான் போகலாம்னு பார்த்தா சம்மந்திங்க வர நேரமாயிடுச்சு.''

''ஏலக்காய் கிடக்கட்டும். இப்படிக் கொஞ்சம் தனியா வரீங்களா?'' என்று நெற்குதிரின் பக்கம் அழைத்துப் போய், தான் அவரிடம் அந்தச் செய்தித்தாளைக் காட்ட நேர்ந்ததற்கு வருத்தப்பட்டுக்கொண்டே முதல் பக்கத்தைப் பிரித்து அவரிடம் காட்டி,

பத்தி ஏதோ செய்தி வந்திருக் பாருங்க'' என்றான்.

''நம்ம மினியைப் பத்தியா! என்று ஆச்சரியப்பட்ட அவர்,

"நான் கண்ணாடி போட்டுக்கிடலே நீயே கொஞ்சம் படிச்சுச் சொல்லி மன்னாரு'' என்றார்.

அவன் இன்னமும் சங்கடப்பட் வனாக,

''இல்லீங்க. கண்ணாடியை போட்டுகிட்டு வந்து நீங்களே படிங் என் வாயால படிக்கிற செய்தியா அ இல்லீங்க'' என்றதும்,

அதைக் கேட்டு அடிவயிற்றி பயம் கவ்வ உள்ளே போய் கண்ண டியைப் போட்டுக்கொண்டு வந் செய்தித்தாளை வாங்கி சௌதாமி யின் புகைப்படத்தை முதலில் பார்த் பின் செய்தியைப் படித்தவர் மனமு உடலும் பதறித் துடிக்க ''மீனாட்சி! என்று கதறினார்.

பின்னால் அடுக்களையிலிருந்தவ அந்தக் குரல் கேட்டு ''என்னங்க? என்று ஓடிவந்தபோது அவ பைத்தியக்காரனை நின்று புலம் தொடங்கினார்.

''பாவி மீனாட்சி'நான். நான்தா அவளைக் கடைத்தெருவுக்குப் போக சொன்னேன். பிடிச்ச புடவை வேஷ்டியாக வாங்கிக்கிடச் சொ னேன். நானே அதை வாங்கிட் போயிருந்தா என் கொழந்தை கடை தெருவுக்குப் போயிருக்க மாட்ட இந்த நிலைமைக்கு ஆளாகியிருக் மாட்டா. மாப்பிள்ளை கூடப் போய இப்படி ஆயிடுச்சே மீனாட்சி. எ கொழந்தையை நானே அனுப்பி அ வாழ்க்கைக்கு எமனாயிட்டேனே...! என்று உருத்தெரியாமல் கதறி அவரது கதறலிலிருந்து எதையு புரிந்துகொள்ள முடியாமல் தவி அந்த அம்மாள்,

''என்னங்க ஆச்சு மினிக்கு கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்க என்று இனம்புரியாத சங்கடத்துட கேட்டபோது அவர் கன்னங்களி கண்ணீர் கோடாக வழிய, வார்த்தை தடுமாற சொன்னதைக் கேட் அதிர்ச்சி தாங்காமல் கண்கள் இரு மயங்கிக் கீழே சரிந்தாள் அந் அம்மாள்...

— தொடரு

# இப்போது உங்களுக்கு மூவகைப் பாதுகாப்பு!




புதிய

# ஃபெமினெக்ஸ்*

## சுகம்தருகிறது, உறிஞ்சுகிறது, பாதுகாக்கிறது மூவகை உறுதியான வழிகளில்

மென்மையான சுகத்தையும் உறுதியான பாதுகாப்பையும் அளிக்கிறது, புதிய ஃபெமினெக்ஸ்–சானிடரி பாதுகாப்புக்கு, வீட்டிலே துணி, பருத்தி இதையெல்லாம் உபயோகிக்கிறாங்களே, அதுமாதிரி இது இல்லவே இல்லே.

அதிலேயிருக்கிற விசேஷமான 'ஒன்டர் ரேப்' கவர், ஒழுக்கை (ஈரத்தை) நல்லா உறிஞ்சி சருமத்துக்கு கசகசப்பில்லாத உலர்ந்த உணர்வையும், சுகத்தையும் தருது.

மிகச் சிறந்த உறுஞ்சும் பொருளால் ஆனது அதோட உள் அடுக்கு. அதுனால, கடினமான நாட்களிலே கூட அது ஒழுக்கு எல்லாத்தையும் நல்லா உறிஞ்சுகிறது.

பிளாஸ்டிக் ஸேஃப்டி கார்டு இருக்கே, அதுனாலே உன்னதமான நன்மை கிடைக்குது. அது நேப்கினோட முழு நீளத்துக்கும், அதோட ரெண்டு பக்கங்களுக்கும் மேல்புறம் வரையிலும் தடைக்காப்பு அளிக்குது; அதாவது ஒரு முனையிலேயிருந்து மறுமுனை வரைக்கும் நிச்சயமான பாதுகாப்பு

### ஒருமுனையிலிருந்து மறுமுனை வரை 3 பக்கமுடைய ஸேஃப்டி கார்டு



- ஒப்பில்லாத 3 பக்கங்கள் கொண்ட 'ஸேஃப்டி கார்டு', நேப்கினோட அடிபக்கத்திலேயும் அதோட 2 பக்கங்களிலேயும் தடைக்காப்பு அளிக்கிறது.
- ஒரு முனையிலேயிருந்து மறுமுனை வரையிலும் நேப்கினோட முழு நீளத்தையும் கவர் பண்ணுது 'ஸேஃப்டிகார்டு'.

புதிய ஃபெமினெக்ஸ் உபயோகிக்கிற போது, கசியிறது, வழியிறது மாதிரியான கவலையே இருக்காது. சானிடரி பாதுகாப்புக்கு வீட்டிலே உபயோகிக்கிற துணி, பருத்தி இதெல்லாத்தையும் விட அதிகமான சுகாதாரமானது, புதிய ஃபெமினெக்ஸ். துவைச்சு கசக்கி, உலர்த்திக்கிட்டிருக்கிற வேலையெல்லாம் இதிலே இல்லே.

* ஃபெமினெக்ஸ - ஜான்ஸன் & ஜான்ஸனின் பூஎஸ்ஸ ட்ரேட மார்க் ஆகும். © J & J 82



பாடகர்: ''தம்பூராவை சரியா மீட்டுங்க!''

தம்பூரா வாசிப்பவர்: ''தம்' பூராவையும் பிடிச்சுத்தான் மீட்டறேன் சார்!''

## அகாடமியும் ஆனந்தமும்

ஆந்திரப் பிரதேச ங்கீத அகாடமி காரியதரிசி நூனந்தம் அவர்களைக் காண ீட்டிற்குச் சென்றேன். ;தர் உடையில் இருந்தார்.

''ஆந்திரத்தில் மூன்றும் ஒன்ருக இருந்த அகாடமி ையைப் பிரித்து இருப்பதில் ாயன் உண்டா?''

''இசை, நாடகம், நாட்டியம் என மூன்ருகப் பிரித்து தனித்தனி கமிட்டி, தனி ாக மான்யமும் அளித்து இருக்கின்றனர். பாலமுரளி கிருஷ்ணு இசைக்கு; நடிகை ஜமுனு நாடகம்; நடராஜ ராமகிருஷ்ணு நாட்டியத்திற்குத் தலைமை. தனிக் குழுவாக அதிக மான்யம் பெறுவதால் அதிக கவனமும், நன்மையும் பெறலாம் அல்லவா?''

பிரபல சார்டர்ட் அக்கௌன்டன்ட்டும், தொழில் அதிபரும், முன்னுள் ராஜ்ய சபா எம். பி.யுமான ஆனந்தம் தெளிவான உச்சரிப்புடன் தமிழ் பேசுகிருர். எப்படி சாத்தியமாயிற்று என்று கேட்டேன்.

''எங்கள் மூதாதையர் வேத பண்டிதர்கள். தஞ்சையில் வசித்தனர். வெங்கடகிரி மகாராஜா ஆதரவு தர, நாயுடுப்பேட்டை அருகே புதூரில் குடிபுகுந்தோம். 'புதூர் திராவிடர்கள்' என்று ஆந்திராவில் குறிப்பிடுவார்கள். அல்லாடி குடும்பமும் எங்களைப் போலத்தான்.''

– இவரது தந்தை பேராசிரியர் வெங்கட ரங்கய்யா தேசபக்தர். பொருளாதாரம் பற்றி 1928-ல் தெலுங்கில் புத்தகம் வெளியிட்டு, தெலுங்கில் எழுத முடியும் என நிரூபித்தார். இன்னும் பல வரலாற்று நூல்களுக்கு ஆசிரியர். சென்னை அடையாறில் பிறந்தவர். – ஸ்ரீ

## ஆந்திரா ராஜ்பவனில் தமிழ்

ஆந்திர ஆளுநரைச் சந்திப்பதற்கா... ஹைதராபாத் ராஜ்பவனில் காத்திரு...றீர்கள். டவாலி அணிந்த வெள்ளுடை டபேதார் வருகிருர். ''ஸார் உள்ளே வாருங்கள்'' என்று சுத்தத் தமிழில் பேசினுல் ஆச்சரியப்படாதீர்கள்.

வட ஆற்காடு சோளிங்கபுரத்தைச் சார்ந்த சுப்ரமண்யம் தமிழக அரசில் சேர்ந்தார். 1953-ல் ஆந்திர மாநிலம் ஏற்பட்டபோது கர்நூலுக்கு வந்தவர், 1956-ல் தலைநகர் ஹைதராபாத் ஆனபிறகு இங்கு வந்துவிட்டார். ''நானும் மனைவியும் தமிழில் பேசுகிரேம். பசங்க தெலுங்குதான்'' என்கிருர் மணியம். இவரைப் போலவே ஆந்திர முதல்வரிடமும் தமிழ் டவாலி டபேதார் இருக்கிருர். – ஸ்ரீ



# அபசுர நகரத்துக் கோபுரங்கள்

இந்துமதி

நாற்பது காசுச் செய்தித்தாள் சௌதாமினியைக் குமுற அடித்தது. தனக்கு நிகழ்ந்த அந்தக் குரூரமான சம்பவத்தை விட செய்தித்தாளில் கொடுக்கப்பட்டிருந்த செய்தியும், புகைப்படங்களும் இன்னமும் குரூர மானவையாகப் பட்டன. மறுநாள் காலையில் கணவனும், மாமியாரும் தன்னைப்பற்றின எந்த முடிவிற்கு வரப் போகிருர்களோ என்கிற பயத்தில் இரவு முழுதும் அழுகிற சக்தியற்று முடிவில்லாத யோசனைகளுடன் உட் கார்ந்திருந்தவளின் முகத்தில் ஜன்னல் வழியாகப் பேப்பர்காரப் பையன் விசி றிப் போட்ட அந்தச் செய்தித்தாள் வந்து விழ, எதேச்சையாகத்தான் அந்தச் செய்தி கண்ணிற் பட்டது. தன் புகைப்படத்தையும், பெரிதாகக் கொடுக்கப்பட்டிருந்த தலைப்பையும்




படிக்கிறபோதே மனதிற்குள் நெருப் பற்றிக்கொண்டது. செய்தி முழுவ யும் படித்து முடித்தவுடன் உடம் பற்றி எரிகிற உணர்வுடன் சரேலென் எழுந்து கூடத்திற்குப் போனள் அவ சமையலறை நிலையில் சரிந்து உ கார்ந்திருந்த மாமியாரிடமும், எதிரி சுவர் ஓரமாகப் படுத்திருந்த கண னிடமும் அந்தச் செய்தித்தாளை நீட் கதறத் தொடங்கினள்.

''இப்படி பேப்பர்ல போட்டோவு பெயரும் அடிபடற மாதிரி செய்தி டீங்களே அத்தை. தெரியாதவங் ளும் தெரிஞ்சுக்கற மாதிரி ஆகி போச்சே... இனிமேல என்னலை யா முகத்துல விழிக்க முடியும்...? யா ஏறிட்டுப் பார்க்க முடியும்...? இப்ப யெல்லாம் நடக்க நான் யாருக்கு என் தப்பு பண்ணினேன்...? எதுக்கா எனக்கு இப்படி ஆகணும்...? சொ லுங்க அத்தை...''

என்று குமுறியதும், இரவு மு தும் தூங்காமல் அம்மாவிடம் பே ஒரு முடிவிற்கும் வர இயலாத நி யில் மிகவும் களைத்துப்போனவனுக படுத்துக்கொண்டிருந்த நந்தகுமா அந்தச் செய்தித்தாளை வாங்கி பார்த்து திடுக்கிட்டுப்போனன். அதி சௌதாமினியின் புகைப்படம் மட் மின்றி, தன்னுடையதும் வெளியாகி தான் வேலை செய்கிற இடமும்கூட குறிப்பிடப்பட்டிருப்பதைப் படித் அதிகம் வேதனையடைந்தான். தன் கீழ் வேலை செய்கிற அத்தனை பேரு படித்திருப்பார்கள் என்கிற எண்ண அவனை மேலும் கஷ்டப்படுத்தியது

இனி தெருவில் இறங்கினுல் அவனைப் பார்த்து அத்தனை பேரும் கிசுகிசுக்கலாம். அவன் காதில் விழாத வகையில் முணுமுணுக்கலாம். சிலர் வேண்டுமென்றே உரக்கப் பேசலாம்.

''இதோ இவனுேட பொண்டாட்டியைத்தான்டா எவனே தூக்கிட்டுப் போய் கெடுத்துட்டான்...''

''அடப்பாவமே. இப்போ இவன் அவ கூடவா இருக்கான்...?''

''அது எப்படிடா இருப்பான்...? இருக்க எவனுக்கு மனசு இடம் கொடுக்கும்...?''

''ஏன்யா இருக்க மாட்டான்...? உடம்புல சூடு சொறணை அத்துப் போச்சுன்னு எல்லாம் இருப்பான்.''

வெறும் கற்பனையே இவ்வளவு ஹிம்சையான விஷயமாக இருப்பதை உணர்ந்த நந்தகுமார் அந்த நிமிடத்தில்தான் திடமான ஒரு முடிவிற்கு வந்தான். இரவு முழுவதும் அம்மா நிதானமாகவும், தெளிவாகவும் எடுத்துச் சொன்னபோது ஏற்றுக்கொள்ள முடியாததாகத் தோன்றின விஷயம் அப்போது அதன் முழு பாதிப்புடனும் மனத்தைத் தாக்கியது.

''ஏன் குமார், இனிமேல என்ன செய்யலாம்னு நினைக்கறே...?'' என்று அம்மா சௌதாமினியை அறையில் தனியாக விட்டு வெளியில் வந்த சிறிது நேர யோசனைக்குப் பின் கேட்டபோது இவன் பதில் சொல்ல இயலாத மௌனத்துடன் பேசாமல் இருந்தான்.

ஆனுல் அப்போதே அந்த விஷயத்திற்குத் தீர்வு காணுகிற முயற்சியில் மங்களத்தம்மாள் விடாமல் மறுபடியும் கேட்கவே அவன் சற்று வெறுப்பாகவே பதில் சொன்னுன்.

''என்னம்மா செய்யறது...? இதுல நான் செய்ய என்ன இருக்கு?''

அதைக் கேட்டு அந்த அம்மாள் சற்று தீவிரமாகப் பேச ஆரம்பித்தாள்.

''என்ன குமார் இப்படி பதில் சொல்றே...? இது முழுக்க முழுக்க நீ சம்பந்தப்பட்ட விஷயம். உன்னை அதிகம் பாதிக்கப்போற விஷயம். அதனுலதான் நீ என்ன செய்யப் போறேன்னு கேட்கறேன். இந்த விஷயத்தை இதோட மறந்துட்டு உன்னுல அவளை மறுபடியும் பொண்டாட்டியா ஏத்துக்க முடியும்னு, அந்த முடிவை நானும் மனப்பூர்வமாக ஏத்துக்கறேன் –''

அவள் சொல்லிக்கொண்டிருந்த போதே தன்னுல் அது முடியுமா என்பதை யோசித்துப் பார்த்தான் அவன். நடந்ததை மறப்பது என்பது அவ்வளவு சுலபமான விஷயமா...? மீண்டும் அவளைப் பழைய சௌதாமினியாக நினைத்து, வழக்கப்படி சிரித்துப் பேசி, செல்லமும், சிணுங்கலுமாகக் கொஞ்சி மகிழ முடியுமா...?

முடியாது என்றே தோன்றியது. அவளின் முகத்தைப் பார்க்கிறபோதே கூடவே அந்த தாடிக்காரனின் முகமும் தோன்றுவதை அவனுல் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. அதற்காக அவள் தன் மனைவி இல்லை என்று விட்டுவிடவும் முடியாது என்று நினைத்தான். ஆனுல் அம்மாவோ, ஒன்று அவளை மனைவியாக ஏற்றுக்கொள்வதோ, அல்லது அவளை அவளுடைய பிறந்த வீட்டிற்கு அனுப்புவதோ – இந்த இரண்டில் ஒன்றை முடிவு செய்யச் சொல்லி அவனை வற்புறுத்தினுள். அவன் செய்கிற எந்த முடிவிற்கும் தான் கட்டுப்படுவதாக வாக்களித்தாள்.

''இதப் பாரு குமார். நல்லா யோசிச்சு காலைக்குள்ள உன் முடிவைச் சொல்லு. ஆனுல் ஒண்ணு. ஒரு தடவை ஒரு முடிவிற்கு வந்துட்டால் அதுக்கப்புறம் எதற்காகவும் அந்த முடிவிலிருந்து மாறக்கூடாது. யார் பேச்சைக் கேட்டும் மனசு தளரக் கூடாது. நீ எடுத்த முடிவில் திடமா



ஒருவர்: ''என்ன, சார் ஆபாசமா சிறுகதை எழுதுபவர், உபன்யாசம் கேட்க வந்திருக்கிருர்?''

மற்றவர்: ''யாரோ 'பாகவதர் 'குட்டி'க் கதை சொல்ருர்' என்பதை தவருகப் புரிந்துகொண்டு வந்துவிட்டார்! நீங்க ஒண்ணும் தப்பா எடுத்துக்காதீங்க!''

அமெரிக்காவில் அழகாக இருக்கும்போது டைப்பிஸ்ட்டாக வேலைக்கு சேர்ந்துவிடுகிறார்கள்.

அழகு குறைய ஆரம்பித்ததும் டைப்ரைட்டிங் கற்றுக்கொள்ள ஆரம்பிக்கிறார்கள்.

–'பிளேபாய்' இதழிலிருந்து ரமணி திருத்திவாசன்



நிற்கணும். அதனால தீர யோசிச்சு காலைக்குள்ள உன் முடிவைச் சொல்லு...''

யோசித்து எந்த முடிவிற்கும் வர இயலாமல் குழப்பங்கள் அதிகமாகி, அதற்கு மேல் யோசிக்கிற சக்தியற்று ...த்துக்கொண்டு விட்டவன் சௌதாமினியின் குமுறலைக் கேட்டுத் திடுக்கிட்டுக் கண் விழித்தான். அவளையும், செய்தித்தாளையும் பார்த்து சொல்ல இயலாத ஒரு சங்கடத்திற்கு உட்பட்டாலும், கூடவே இதற்கு மேலும் அவளுடன் வாழ்வது சாத்தியப்படாத விஷயம் என்கிற முடிவிற்குத்தான் அவனால் வர முடிந்தது. அதை அவளிடம் எப்படிச் சொல்வது என்ற தயக்கத்தில் பேசாமல் இருந்த அதே நேரத்தில் –

அதே நாற்பது காசுச் செய்தித்தாள் மாசிலாமணியின் வீட்டை முற்றிலுமாக மாற்றியிருந்தது. ஒரு மணி நேரத்திற்கு முன்னால் இருந்த அத்தனை சந்தோஷத்தையும் அடித்துப் போட்டு மயான வீடாக்கிவிட்டது. பின்னால் வடையும், பாயசமுமாக அமர்க்களப்பட்டுக்கொண்டிருந்ததெல்லாம் நின்று அடுப்புகள் இழுத்து அணைக்கப்பட்டன. கூடத்தில் விரிக்கப்பட்ட ஜமுக்காளம் சுருட்டப்பட்டு, ...ற்றிலே பாக்குத் தட்டுகள் மூலையில் ஒதுக்கப்பட்டுச் சிதறிக்கிடந்தன. அதற்குப் பின் பேச்சற்றுப்போனவர்களாக மாசிலாமணியும், மீனாட்சியும் மறு பஸ்ஸில் கிளம்பி நந்தகுமாரின் வீட்டை அடைந்தபோது –

அவன் மிக மெதுவாக சௌதாமினியிடம் சொல்லிக்கொண்டிருந்தான்.

''நீ ரொம்ப அதிர்ச்சியடைஞ்சு போயிருக்கே மினி. கொஞ்ச நாளைக்கு உங்க அப்பா, அம்மாகிட்ட கொண்டு போயி உடறேன். அங்க இரு. அந்த சூழ்நிலை உன் மனசுக்கு இதமா இருக்கலாம்...''

கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்த மாசிலாமணி அதிகம் பதறிப் போனார். அனுபவசாலியான அவருக்கு 'அந்தக் கொஞ்ச நாள்' என்பது கொஞ்ச நாளல்ல, நிரந்தரமானது என்பது புரிந்துபோகத் தன் ஆத்திரம், கோபம் எதையும் அடக்க முடியாதவராகப் பேச ஆரம்பித்தார்.

''மாப்பிள்ளே. நீங்க சொல்றது கொஞ்சம்கூட நல்லாயில்லே. என் வீட்டுல என் பாதுகாப்பில இருந்த போது இந்தமாதிரி நடந்திருந்தால் நீங்க சொல்றமாதிரி அதற்கு நான் பொறுப்பு ஏத்துக்கலாம். அவளைக் காலம் பூரா வச்சுக் காப்பாத்தலாம். ஆனால் அவ உங்க பொறுப்புல உங்க கூடவே வந்தபோதுதான் இப்படி நடந்திருக்கு. அதனால இதன் மொத்தப் பொறுப்பும் உங்களுடையது தானே தவிர என்னுடையதில்லே மாப்பிள்ளே...''



மாதவிடாய் ஏற்படும் நாட்களில் பெண்களுக்கு ஒருவிதமான அருவருப்பு உண்டாகிறது. இந்த அருவருப்புக்குக் காரணம் அவர்கள் உடலில் விட்டமின்-பி குறைவதுதான் என்கிறது கலிஃபோர்னியா பல்கலைக்கழகம். இந்த அருவருப்பைத் தவிர்க்க 500 m.l. விட்டமின்–பி இன்ஜெக்ஷன் போடவேண்டும் என்று இப்பல்கலைக்கழகமே கண்டுபிடித்துள்ளது.

–சிதம்பரம் பழனிவேல்

அதற்குமேல் பேச முடியாமல் அவர் மேல்துண்டால் வாயைப் பொத்திக்கொண்டதும் சமையலறை நிலையில் நின்று அத்தனையையும் கேட்டுக்கொண்டிருந்த மங்களத்தம்மாள் வெளியில் வந்து தன் பழைய தீர்க்கமான குரலில் சொன்னாள்.

''பொறுப்பு எங்களுடைய தாக இருக்கிறதால்தான் சொல்றோம். இனிமேல் என் பிள்ளையால் எப்படி அவளுடன் வாழ்க்கை நடத்த முடியும் சொல்லுங்கள். உங்களுக்கு ஒரு பிள்ளை இருந்து அவனுக்கு இந்த கதி ஏற்பட்டிருந்தால் நீங்க அவளோடு மறுபடி வாழச் சொல்லுவீங்களா...? மனசு அதற்கு இடம் கொடுக்குமா? சரி. வாழவேண்டாம். வீட்டில் சும்மா வச்சுக்கிட்டிருக்கலாம் என்றால், நாளைக்குக் கல்யாணத்திற்கு எனக்கு ஒரு பெண் இருக்காளே... வரப்போற சம்பந்திங்க கேள்வி கேட்க மாட்டாங்களா...? இவ வீட்டுல இருந்தால் என் பொண்ணைக் கட்டுவாங்களா? அதனால உங்க பொண்ணை நீங்களே கூட்டிக்கிட்டு போயிடுங்க. கல்யாணத்தின் போது நீங்க செஞ்ச அத்தனை சீர் செனத்தியையும் நான் திருப்பிக் கொடுத்துடறேன் ... தயவுசெய்து கையோட அவளை அழைச்சுக்கிட்டுப் போற வழியைப் பாருங்க...''

''அது எப்படிம்மா நியாயமாகும்...? எனக்கு மட்டும் கல்யாணத்திற்கு இன்னொரு பெண் இல்லையா? இவ என் பெண் இல்லையான்னு நீங்க கேட்கலாம். இவளும் என் பொண்ணுதான். மூத்த பொண்ணு அவ கஷ்டம் முழுசும் எனக்கும் சொந்தம்தான். ஆனால் இது என் பெண்ணாக இருந்தபோது, என் வீட்டில் நடந்திருந்தால் நீங்க சொல்றமாதிரி கூட்டிக்கிட்டுப் போக நான் தயங்க மாட்டேன். நீங்க சொல்றதுக்கு முன்னாலேயேகூட அழைச்சுக்கிட்டுப் போயிருப்பேன். ஆனால் இப்போ முடியாது. உங்க வீட்டுல நட... விஷயம். நீங்கதான் பொறுப்பேற்று நடத்தணும். இதுல நான் தலையிடறது கூட தப்புத்தான். வா, மீனாட்சி: திரும்பிப் போயிடலாம். இதுக்கு மேல இங்க ஒரு விநாடிகூட நிற்கக் கூடாது மீனாட்சி...''

அப்படியே அவர்கள் திரும்பிப் போவதைப் பார்த்துக்கொண்டு, நடந்ததையெல்லாம் கேட்டுக்கொண்டு, எல்லாவற்றிற்கும் மேலான பெரிய அதிர்ச்சியால் தாக்கப்பட்டவளாக சுவரோடு சரிந்து ஒடுங்கி கண் வரள நின்றுகொண்டிருந்தாள் சௌதாமினி.

— தொடரும்



தமிழ்நாட்டை விட்டு தொலைதூரத்தில் தங்கியிருக்கும் தமிழர்களின் தமிழ்ப்பட தாகம் எளிதில் தணியாதது. அதுவும் தரமான படங்கள் தமிழில் வரத் துவங்கியிருக்கும் இச்சமயத்தில், வெளி மாநிலங்களில் இருக்கும் என்னைப்போன்ற தமிழர்களுக்குப் பேரிழப்பே. இந்தப் படங்கள் தமிழ்நாட்டைவிட்டு வெளியே வரும் போது சில சமயங்களில், படம் முடிந்தபின் படத்தி... சரியான முடிவை ஊகிப்பவர்களுக்கென ஒரு பரிசுத் திட்டத்தையும் ஆரம்பிக்கலாம் எனத் தோன்றுகிறது.

கடந்த டிசம்பரில், செகந்திராபாத்திலுள்ள திவோளி தியேட்டரில் பகல் 11 மணி காட்சியாக 'உத்தமபுத்திரன்' படம் திரையிட்டார்கள்.

படம் (புதிய காப்பி) ஆரம்பித்து, வழக்கமான தடங்கல்கள், இடையூறுகளுடன் ஓடிக்கொண்டிருந்தது. பட இறுதிவரை படத்தின் ஒரிஜினல் கதையை ஊகிப்பதில் அவ்வளவாகக் கஷ்டம் இல்லை. கடைசிக்கட்டம் – இரண்டு சிவாஜிகளும் வாளுடன் களத்தில் போருக்கு இறங்குகின்றனர். வெற்றி, தோல்வியை ரசிகர்களின் தீர்ப்பாக விட்டுவிட்டு, 'வணக்கம்' போட்டுவிட்டனர். ஜெயித்தவர் யார், பின் எந்த சிவாஜி பட்டத்துக்கு வந்தார் என்பது இன்றுவரை கேள்விக்குறி



# நிமிர்ந்துக் கோபுரங்கள் 11

## இந்துமதி

சௌதாமினியைத் தூக்கிக் கொண்டு வரச் செய்து, தகாத முறையில் அனுபவித்து மீண்டும் அவள் வீட்டு வாசலில் கொண்டு போய் விட்டு வந்த அந்த நிகழ்ச்சிக்குப் பின்பு அவன் நிறையவே மாறிப் போயிருந்தான். தெருக்கோடியில் அவளை விட்டுத் திரும்பியபோது அவளின் வீட்டு வாசலில் கூடியிருந்த கூட்டமும், போலீஸ் தலைகளும், மறுநாள் காலையில் செய்தித்தாள்களில் வெளியாகியிருந்த செய்தியும், புகைப்படங்களும் அவனை இன்னும் அதிகமாக ஹிம்சைப்படுத்தத் தொடங்கிற்று. அவளை நினைத்தபோது நெஞ்சிற்குள் சொல்ல முடியாத வேதனையாக ஒன்று படர்ந்தது. அவள் தன் நினைவை ஆக்கிரமிக்காத நேரமே இல்லை என்றாக நாள் முழுதும் அவன் வேதனைப்பட ஆரம்பித்தான்.

கண்களில் கண்ணீர் வழிய சௌதாமினி அவன் முன் தோன்றி 'என் வாழ்க்கையை இப்படி நாசப்படுத்திட்டியேடா பாவி. அதுக்கு நான் உனக்கு என்னடா கெடுதல் செய்தேன்? இவ்வளவு பெரிய தப்பைப் பண்ணின நீ உருப்படவா போறே?' என்று சாபமிடுவது போலவும், சில சமயங்களில் கெஞ்சி அழுவது போலவும், மற்றும் சில நேரங்களில் கோபமும், வெறுப்புமாகக் குமுறுவது போலவும் தோன்ற அவன் அவளை விட்டு விலக முடியாமலும், வேறு என்ன செய்வது என்பது புரியாமலும் நிஜமாகவே தவிக்கலானான். எப்படியாவது, ஏதாவதொரு வழியில் அவளுடைய வாழ்க்கையைச் சரிப்படுத்திவிட முடியுமானால் அது போதும் என்று தோன்ற அதற்கான வழிகளை யோசித்து எதுவும் பிடிபடாதவனாகச் சலித்துப் போனான்.

இதே நினைவில் கிட்டத்தட்ட ஒரு மாதமாக சாப்பிடப் பிடிக்காமல், தூக்கம் வராமல் வானத்தையும், இருட்டையும் வெறித்தபடி பாழடைந்த அந்த வீட்டின் பின்பக்கமிருந்த பெரிய மரத்தடி நிழலில் சுருண்டு கிடந்தான். அடிக்கடி சோமுவும், நாகராஜனும் பார்த்தும், கேள்விப்பட்டும் வந்து சொன்ன செய்திகளால் சௌதாமினி கணவனாலும், பெற்றவர்களாலும் ஒதுக்கப்பட்டு

வேறு வழி எதுவுமற்று அதே வீட்டின் மூலையில் ஒடுங்கிக் கிடப்பதைத் தெரிந்துகொண்டு அவளின் அந்த நிலைமைக்குக் காரணமான தன்னைத் தானே வெறுக்கலானான்.

அவளுக்குத் தான் ஏற்படுத்தின அவமானத்தை விலக்க முடியாது போனாலும், தற்போது ஏற்பட்டிருக்கிற கஷ்டத்திற்கு எந்த வகையிலாவது தன்னால் உதவமுடியாதா என்று ஏக்கப்பட்டு, 'கடவுளே, இதற்கு மட்டும் எனக்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடேன்' என்று முதல் முறையாகத் தான் இதுவரை இருப்பதாக நினைத்தே அறியாத அந்தக் கடவுளிடம் வேண்டிக்கொண்டான்.

அவனின் அந்த நிலைமையையும், சாப்பாடு, தூக்கமற்று வானத்தை வெறித்துக்கொண்டு நாள்கணக்கில் உட்கார்ந்து கிடப்பதையும் பார்த்து சோமுவும், நாகராஜனும் பொறுமையிழந்து போனார்கள். என்றாவது ஒரு நாள் அவன் செளதாமினியை மறந்து தொழிலில் கவனத்தைச் செலுத்தக்கூடும் என்ற நம்பிக்கையற்றுப் போகவே, அதற்கு மேலும் அங்கிருந்து எந்தப் பலனுமில்லை என்பதால் அந்த ஊரையும், அவனையும் விட்டுப் பிரிய முடிவு செய்தார்கள்.

மேலும், செளதாமினியிடமிருந்து பறித்த நகைகளைப் பணமாக்க அந்த ஊரிலும், அதன் சுற்றுப்புறத்திலும் வழியில்லாமல் போலீஸ் தேடல் பலமாகவே, தங்களையும், தங்களுக்குக் கிடைத்த அந்தப் பொருளையும் காப்பாற்றிக்கொள்கிற பொருட்டு அவர்கள் ஒரு திடமான முடிவுடன் அன்று அவன் படுத்துக்கிடந்த அந்த மரத்தடியை அணுகி சிறிது தயங்கி நின்று பின் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தார்கள்.

''ஏன் தம்பி. இன்னும் எத்தினி நாளுக்குத்தான் இப்பிடி படுத்துக் கிடக்கிறதாக உத்தேசம்? இப்படியே இருந்தால் நமக்கு சாப்பாட்டுக்குக் கூட வழியில்லாமற் போயிடும் தம்பி.''

அவன் அந்தக் குரலைக் கவனித்ததாகக்கூடத் தெரியாததால் சற்றே கோபமாக நாகராஜன் தன் அழுத்தமான குரலில் கேட்க ஆரம்பித்தான்.

''என்ன தம்பி. நாங்க பாட்டுக்குக் கேட்டுட்டிருக்கோம். நீ பேசாமல் இருந்தால் எப்படி?''





பலமாக வெளிப்பட்ட அந்தக் கேள்விக்குப் பதிலளிக்கிற வகையில் மெல்ல எழுந்து அந்த மரத்தின் மீதே சரிந்து உட்கார்ந்து மிகவும் தழைந்த குரலில்,

''என்ன கேட்டே நாகராஜா?'' என்றான்.

''இப்படி மரத்தடியே' கதின்னு கிடந்தால் தொழிலை யார் கவனிக்கிற துன்னு கேட்டேன்.''

''என்ன தொழில்! திருட்டுத் தொழில்தானே? இனிமேல அதை நான் செய்யறதா இல்லே.''

அதைக்கேட்டு அதிர்ச்சியடைந்த வர்களாக அவர்கள் அவனைப் பார்த் தார்கள்.

''பின்னே... வேற என்ன செய் யறதாக உத்தேசம்?''

''ஏதாவது வேலை தேடிக்கிறதாக உத்தேசம்.''

''ஆமா, வேலையை வச்சுக்கிட்டு யாரோ உன்னை வா வான்னு வெத்திலே பாக்கு வச்சு அழைக்கிறாங்க இல்லே? அந்த வேலை கிடைச்சிருந்தால் நீ ஏன் இங்க வந்து எங்ககூட அலையப் போறே?''

''இனிமேலயும் வேலை எதுவும் கிடைக்காட்டி போனாலும் பட்டினி கிடந்து சாகிறதாக உத்தேசமே தவிர, திருடறதாக இல்லை.''

''திடீர்னு ஏன் இந்த வெறுப்பு வந்தது?''

''எல்லாமே திடீர்னு ஒரு நாள் ஏற்படறதுதான்.''

''இதுக்கெல்லாம் காரணம் எங்க ளுக்கு நல்லாப் புரியுது தம்பி. உன் னோட இத்தனை பிடிவாதத்திற்கும் அந் தப் பொண்ணுதான் காரணம். இத் தனை கஷ்டங்களுக்கும் அவதான் கார ணம். அவளை மட்டும் நீ அன்னிக்குக் கடைத்தெருவில பார்க்காமல் இருந் திருந்தே இப்படித் தவிக்க மாட்டே. சீதையைத் தூக்கிட்டு வந்த பின்னால ராவணன் பட்ட கஷ்டமாப் பட மாட்டே...''

''உண்மைதான் நாகராஜா. அவளால்தான் நான் இப்படித் தவிக் கிறேன். சீதைக்கு ராவணன் செய் யாத ஒரு பெரிய தப்பைச் செய்திட்டு அதற்கு எந்தவிதமாகப் பரிகாரம் செய்யலாம்னு யோசிச்சுக்கிட்டிருக் கேன்.''



கதாசிரியர்: ''சார், நான் ஒரு கதை கொண்டு வந்திருக்கிறேன்.''

டைரக்டர்: ''நான் ரொம்ப பிஸி. உங்க கதையின் கருவை மட்டும் சொல்ல முடியுமா?''

கதாசிரியர்: ''இந்தக் கதையில் ரெண்டு கரு!''

டைரக்டர்: ''எப்படி?''

கதாசிரியர்: ''என் கதையின் கதாநாயகி கர்ப்பம். கதாநாயகியின் மாமியாரும் கர்ப்பம்!''

''சரி. நீயாவது தப்பு பண்ணினே... பரிகாரத்துக்குத் தவிக்கறே. நாங்க என்ன தப்பு பண்ணினோம்னு உன்கூட தவிக்கணும்?''

அந்த உண்மையைத் திடீரென்று உணர்ந்தவனாக அவர்களை மிகவும் தோழமை உணர்வுடன் பார்த்து மென்மையாகப் பேசலானான்.

''நீ கேட்கிறது உண்மைதான் நாகராஜா. என்கூட சேர்ந்து எதுக்காக நீங்க தவிக்கணும்? இனிமேல நான் எதற்கும் உபயோகப்படமாட்டேன். பணம் சம்பாதிக்கணும் என்கிற ஆசை எனக்கில்லே. முன்பு மாதிரி இந்த சமூகத்தின் மீது கோபமோ வெறுப்போ இல்லே.. பழிதீர்த்துக்கற எண்ணமில்லே. இதற்கு மேலும் நான் உயிர்வாழ நினைச்சேன் என்றால் அது ஒரே ஒரு காரணத்திற்காகத்தான். சௌதாமினிக்கு எந்த வகையிலாவது உதவி செய்யணும் என்கிற நோக்கத்திற்காகத்தான். அதைத் தவிர எனக்கு வேறு நினைப்பில்லே. யோசனையில்லே. அதனால் என்னைப்பற்றிக் கவலைப்படாமல் நீங்க கிளம்பி உங்க வழியைப் பாருங்க. இவனை இப்படி விட்டுவிட்டுப் போகிறோமே என்று தயங்காதீங்க. போறதுக்கு முன்னால உங்ககிட்டே ஒரே ஒரு விஷயத்தை மட்டும் கெஞ்சிக் கேட்டுக்கறேன். இனிமேல இந்தத் தொழிலைச் செய்யாதீங்க. கையில் இருக்கிற சௌதாமினியின் நகைகளை விற்று ஏதாவது தொழில்ல ஈடுபடுங்க. நாலு பேரைப்போல் நல்லவிதமாக வாழ்ந்து கல்யாணம் குடும்பம்னு சந்தோஷமா இருக்க முயற்சி பண்ணுங்க...''

அவனது பேச்சைக் கேட்டு கண்களில் நீர் துளிர்க்க நின்ற அவர்கள்,

''உன்னை இப்படியே விட்டு எங்களால எப்படிப் போக முடியும் தம்பி?''

என்று குரல் தழையச் சொன்னதும் அவன் மிக விரக்தியான புன்னகையுடன் சொன்னான்.

''என்னைப் பற்றின கவலையை விடுங்க. நீங்கள் இல்லாமல் நானும், நான் இல்லாது போனாலும் நீங்களும் பிழைச்சுக்கிட்டுத்தான் இருப்போமே தவிர செத்துப்போயிருக்கமாட்டோம். யாருக்காகவும் யாரும் சாக முடியாது நாகராஜா. அதனால என்னை இப்படி விட்டுவிட்டுப் போகிறோமேன்ற வருத்தமோ கஷ்டமோ, குற்ற உணர்ச்சியோ இல்லாமல் இருட்டறதுக்கு முன்னால சீக்கிரமாகக் கிளம்புங்க. அப்போதான் யாருக்கும் எந்த சந்தேகமும் வராது. மெட்ராஸ் தாண்டி எந்த ஊருக்காவது போய் நாணயமான எந்த வேலையாவது செய்து பிழைச்சுக்குங்க. கிளம்புங்க...''

அதற்கு மேலும் தயங்கிக்கொண்டு நிற்காமல் கூடப்பிறந்த ஒருவனைப் பிரிகிற வேதனையுடன் அவர்கள் இருவரும் அவனை ஒருதரம் நெஞ்சார அணைத்துப் பின் தங்களின் ஒரே உடமையான டிரங்குப் பெட்டியை எடுத்துக்கொண்டு, சௌதாமினியின் நகைகள் பத்திரமாக இருக்கிறதா என்பதை உள்நிஜார் பையைத் தொட்டுப் பார்த்து உறுதிப்படுத்திக்கொண்டு கடைசி தடவையாக அவனிடம் சொல்லிக்கொண்டு பிரிந்து போனபோது,

அவர்களின் பிரிவைத் தாங்க இயலாதவனாக மீண்டும் அதே மரத்தடிக்கு வந்து மண்தரையில் படுத்துக்கொண்டபோது அவனுள் பாரமாகக் கிடந்த வருத்தமும், வேதனையும் அவனை இன்னும் அதிகமாக அழுத்தத் தொடங்கிற்று...

— தொடரும்

# பைசா நகரத்துக் கோபுரங்கள் 12



## இந்துமதி

தன்னைச் சுற்றி இருக்கிற அத்தனை மனிதர்களும் நேற்று வரை தன்னோடு பழகின அதே மனிதர்கள்தானா என்ற சந்தேகம் வந்தது செளதாமினிக்கு. ஒரே ஒரு நாள் இரவும், அதன் சம்பவமும் இப்படிக்கூட இவர்களை மாற்ற முடியுமா என்று தோன்றிற்று. மாமியாரும் கணவனும் மாறி விட்டதுகூட அவளுக்குப் பெரிய விஷயமாகப் படவில்லை. ஆனால் அம்மாவும் அப்பாவும் நடுக்கூடத்தில் நின்று ஒரு வார்த்தைகூடப் பேசாமல், ஆறுதலாக எதையுமே சொல்லாமல் திரும்பிப் போனது அவளால் நம்ப முடியாத விஷயமாக இருந்தது. அவளின் அந்தக் கஷ்டத்தில் தங்களுக்கு எந்தப் பங்கும் இல்லை என்கிறாற்போல, அவளைத் தங்களுடன் அழைத்துக்கொண்டு போக மறுத்த பின்தான் அதைத் தாங்கிக்கொள்ள முடியாதவளாகக் குமுறினாள் அவள்.

கல்யாணம் ஆக இரண்டு நாட்களுக்கு முன்பு அவளை அழைத்து, 'குழந்தே இதப்பாரு' என்று அவளை அருகில் உட்காரவைத்து ''உனக்கு நான் எதையும் சொல்லித்தரவேணும். மாப்பிள்ளை மனசு நோகாமல் நடந்து கொள்ளவேணும் நீ. அவங்க உன்னைப் பத்தி தவறா ஒரு பேச்சு பேசிறக் கூடாது. அதுதான் முக்கியம். மனசுக்கு இதமா நடந்துக்கலேன்னு சொல்லிடறது சுலபம். நல்ல பொண்ணுன்னு பேர் வாங்கறதுதான் கஷ்டம் மினி. அங்க யார் மனசுமே கோணாமல் நீ என்று புத்தி சொன்னபோது, செளதாமினிக்கு ஒன்றும் பேசத் தோன்றாமல், இப்படிப்பட்ட ஒருவரை ஏன் எனக்குத் தந்தையாகப் படைத்தாய் என்று நினைத்துக்கொண்டு நிற்கத்தான் முடிந்தது.

திருமணம் முடிந்த அன்று மாலையே நந்தகுமார் ஒரு வண்டி பேசி செளதாமினியை அழைத்துக்கொண்டு போக நின்றபோது முதல் முதலாகத் தன் பெண்ணின் பிரிவைக் காண முடியாதவாறு மேல் துண்டால் வாயைப் பொத்திக்கொண்டு பின்கட்டில் வைக்கோற் போர் மறைவில் போய் நின்று



''கோபத்தில் என் மனைவியை நான் அடித்தால், உடனே என்னை திருப்பி அடிக்கறடா.

''இப்படி நடந்துவிடக் கூடாதுன்னுதான் எனக்கும் என் மனைவிக்கும் சண்டை வந்தால் நானே என் தலையில் அடிச்சிக்கறது!'' – எஸ். ஹேமமாலினி

கொண்டு சப்தம் வராமல் அழுத அந்த அப்பா நினைவுக்கு வந்தார். இவளாகத் தேடிப் போய் விசும்பலும் கேவலுமாக ''நான் போயிட்டு வரேம்ப்பா...'' என்றபோது சடாரென்று திரும்பி,

''போயிட்டு வாம்மா... நீ எங்கேயும் போயிடலே. இதோ மூணு ஊர் தள்ளி குடுத்தனம் நடத்தத்தானே போறே... ஆனா என்னால அதை நினைச்சு சமாதானம் பண்ணிக்க முடியலேம்மா. இந்த வீட்டைவிட்டு மகாலக்ஷ்மியே போறமாதிரி தோணறதம்மா. பதினேழு வருஷம் கூடவே இருந்து நிமிஷத்துக்கு ஒருதரம் மினி மினின்னு கூப்பிட்டு இந்த வாயும் மனசும் பழக்கப்பட்டுப் போயிட்டதம்மா. இனிமேல் அப்படிக் கூப்பிட்டால் யாரு ஓடி வரப் போறாங்க...? எங்கேயாவது போயிட்டு களைச்சு வந்தால், 'ஏம்ப்பா, களைச்சுப்போய் வந்திருக்கீங்களே, சில்லுன்னு ஒரு டம்ளர் மோர் தரட்டுமா'ன்னு யார் ஆதங்கமா இனிமேல் உன்னை மாதிரி கேட்கப் போறாங்க மினி! உங்கம்மாவுக்கு கேட்டால்தான்மா குடுக்கத் தெரியும். அவ இன்னும் குழந்தை. உன்னை மாதிரி மனசறிஞ்சு செய்ய வேறு யாருக்கு வரும்...? செய்யறதுக்குத்தான் இந்த அப்பா இப்படிக் கண்ணீர் விடறாங்களோன்னு நினைச்சுக்காதேம்மா. நீ எங்களை எல்லாம் விட்டுப் போகப்போறேங்கற நினைப்பையே என்னால் தாங்கிக்கொள்ள முடியலேம்மா. அதனாலதான் இப்படி எதையோ நெனச்சு பைத்தியம் மாதிரி பினாத்தறேன்மா... எதையும் சொல்லத் தெரியாமல் தவிக்கறேன்மா. நான் தவிச்சா என்ன... நீ நிக்கப் போறியா? இல்லே, என்னால நிக்க வெக்கத்தான் முடியுமா?''

''நான் வேணும்னால் அவர்கிட்ட கேக்கறேன்ப்பா. இன்னும் நாலு நாள் இங்க தங்கிட்டு வரேன்னு சொல்லறேன். அவர் எதுவும் சொல்லமாட்டார்னுதான் தோணுது.''

''வேணம்மா. இந்த நாலு நாளுக்கு அப்புறமும் இதேமாதிரி கிளம்பித்தானே போகப் போறே. வேணம்மா. மாசத்துக்கு இரண்டு தரமாவது வாம்மா. வந்து நாலைந்து நாள் கூட இருந்துட்டுப் போம்மா. மாப்பிள்ளைகிட்டேகூடச் சொல்லியிருக்



அவள் வில் வண்டியில் ஏறி புறப்படும்போது கூடவே தெருக்கோடி வரை பின்னாலேயே நடந்து வந்து வண்டி கண்ணை விட்டு மறையும்வரை பார்த்துக்கொண்டு நின்ற அதே அப்பாதானா இவர்...! அவளால் நம்பத்தான் முடியவில்லை!

அதன்பின் பத்து நாளைக்கு ஒரு தரமாவது வந்து மாமியாரிடம் சிறிது



நாளைக்கு கூட அனுப்பி வெச்சீங்கன்னு நல்லா இருக்கும். வீடு அவ இல்லாம வெறிச்சுனு கிடக்கு. எங்களுக்கும் கஷ்டமா இருக்கு. அவ அம்மா எப்பவும் அவ நினைவாவே இருக்கா.

கூட்டிக்கிட்டு வாங்கன்னு சொல்லி அனுப்பினு. மினி வந்து நாலு நாள் தங்கினு அவளுக்கும் சந்தோஷமா இருக்கும். நாலு நாள்தான். வியாழக்கிழமை நானே கொண்டு வந்து விட்டுறேன். நீங்க இஷ்டப்பட்டா,

கூட்டிக்கிட்டுப் போறேன்...'' என்று தான் கேட்டு அனுப்ப மறுத்த மாமியாரிடம் கெஞ்சின அப்பாவா இப்போது மாமியாரும் கணவனும் அனுப்புகிறோம் என்று வற்புறுத்திச் சொல்லும் போதும்கூட நிர்த்தாட்சண்யமாக 'இது உங்கள் வீட்டில் இருந்தபோது நடந்ததால் இதற்கு முழுவகையிலும் நீங்கள்தானே பொறுப்பு' என்று சொல்லி அவளை அழைத்துப்போக மறுத்துவிட்டு அம்மாவைக்கூட ஒன்றும் அவளுடன் பேசவிடாமல் தானும் ஆதரவாக எதுவும் சொல்லாமல் சென்றுவிட்டார்!

அவர் போனபோது அத்தனை நாள் நினைத்திருந்த எண்ணமெல்லாம் போய், இப்படிப்பட்ட அப்பாவை-இவ்வளவு சுயநலக்காரரை ஏன் எனக்குத் தந்தையாய்ப் படைத்தாய் ஆண்டவனே என்று நினைத்துக்கொண்டாள்.

அப்பா எப்படிப் பேசிவிட்டார்...? இனி உனக்கு அங்கு இடமில்லை என்பதைச் சொல்லாமல் உணர்த்திவிட்டுப் போயிருக்கிறார். என்ன ஆனாலும் இந்த வீடுதான் உன் இருப்பிடம், இதைவிட்டு எந்தக் காரணத்தைக் கொண்டும் நீ வெளியேறக்கூடாது என்று மறைமுகமாக எச்சரித்துவிட்டுப் போயிருக்கிறாரா?

யோசித்துப் பார்த்தபோது அப்பா

அப்படிச் சொல்லிவிட்டுப் போனது தான் சரி என்று பட்டது. அந்த அப்ப வைத் தவிர வேறு எந்த அப்பாவா இருந்திருந்தாலும் அதைத்தான் செ திருப்பார் என்று பட்டது. அவ எந்த விதத்திலும் காரணமில்லாம நடந்த ஒரு சம்பவத்திற்காக அந் வீட்டைவிட்டு அவர்கள் விரட்டினு போய்விடுவது பைத்தியக்காரத்த மாகப் பட்டது. எது நேர்ந்தாலு இனிமேல் அந்த வீட்டைவிட்டு நகர கூடாது என்று தோன்றிற்று.




குழந்தையை வைத்துத் தள்ளும் வண்டியுடன் ஒரு பெண் அந்த நகைக்கடைக்குள் நுழைந்தாள். அது உலகப் பிரசித்தி பெற்ற நகைக்கடை. அந்தப் பெண் மிக விலையுயர்ந்த வைர மோதிரம் ஒன்றை செலக்ட் பண்ணிக்கொண்டிருக்கையில் வண்டிக்குள்ளிருந்து குழந்தை வீறிட்டு அலறு அலறு என்று அலறிற்று.

அவள் மோதிரத்தை எடுத்து வெளியே சூரிய வெளிச்சத்தில் நன்றாய்ப் பார்க்கிறேன் என்று போனாள். கடைக்காரர் கவலைப்படவில்லை. எப்படியும் அழும் குழந்தைக்காக உள்ளே வந்துதானே ஆகவேண்டும்.

ஐந்து நிமிஷம் ஆயிற்று. குழந்தையின் அலறல் நிற்கவில்லை. 'திடீ'ரென்று குழந்தையின் அலறல் நின்றுவிட்டது. வெளியே போனவள் போனவள்தான்!

கடைக்காரர் தள்ளுவண்டியின் மேல்கவரை நீக்கிவிட்டுப் பார்த்தால் -

உள்ளே குழந்தை எதையும் காணவில்லை! இருந்தது ஒரு சின்ன டேப் ரிகார்டர்!

நடந்த இடம்: நேபின்ஸ்

கடை: கார்லோ.

அப்படிப் போவதானால் தன் பிணம்தான் வெளியேற வேண்டுமே தவிர தான் வெளியேறக்கூடாது. அதுமட்டுமில்லாமல் அந்த சம்பவத்திற்கு தான் மட்டும் காரணமில்லை என்பதை அந்த வீட்டில் உள்ளவர்களுக்குப் புரிய வைக்கவேண்டும். நந்தகுமார் வீரமிக்கவனாக இருந்தி

இருக்காது என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். அந்த சம்பவத்திற்கு நந்தகுமாரின் கோழைத்தனமும் ஒரு காரணம் என்பதையும் சொல்ல வேண்டும்.

மாமியாருக்கும், நந்தகுமாருக்கும் தன்மீது ஏற்பட்டிருக்கிற இந்த வெறுப்பையும், கோபத்தையும் தன் நல்ல நடத்தையால் போக்கி மீண்டும் அந்த வீட்டில் தன் பழைய இடத்தைப் பிடித்துக்கொண்டுவிட வேண்டும் என்று தோன்றிற்று.

'அது தன்னால் முடியுமா...?'

'முடியவேண்டும். மிகவும் சிரமமான காரியம்தான். அவ்வளவு சுலபமாக நடந்துவிடாத விஷயம்தான். ...ல் தன் தவறு என்று சொல்வதற்கு ஒன்றுமே இல்லை என்றாலும்கூட அவர்களின் கோபமும், வெறுப்பும் நியாயமாகத்தான் பட்டது. எதேச்சையாய் மிகவும் எதிர்பாராத விதமாக நடந்து போன விபத்துதான் என்றாலும் மனதைவிட்டு அகலாதுதான்.

அதை அகல வைக்க வேண்டுமானால் அவள் மிகவும் பிரயத்தனப் படவேண்டும். நிறைய கஷ்டங்களுக்கு ஆளாக வேண்டும். எந்தச் சொல்லையும் பொறுத்துக்கொள்கிற சக்தி வேண்டும். உடம்பாலும் மனத்தாலும் திடத்துடனும் தீர்மானத்துடனும் இருக்க வேண்டும். தன்னை அந்த வீட்டை விட்டு வெளியேற்றியே ஆக வேண்டும் என்று பிடிவாதமாக அவர்கள் நினைக்கும் பட்சத்தில் தன்னிடமும் அந்தப் பிடிவாதம் இருக்க வேண்டும். அந்த வீட்டைவிட்டு எந்தக் காரணத்தைக் கொண்டும் அகலக் கூடாது என்பதில் ஸ்திரமாக இருக்க வேண்டும்.

...ச் அப்படி அழுதுகொண்டு மூலையில் ஒடிந்துபோய் உட்கார்ந்திருக்கும் பட்சத்தில் தன்னால் எதையுமே சாதிக்க முடியாது; மீண்டும் அந்த வீட்டில் தன் பழைய இடத்தைப் பிடித்துக் கொள்ள முடியாது என்று தோன்ற அவள் அழுவதை நிறுத்திவிட்டு எழுந்து கொண்டாள். எதிரில் தெரிந்த கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்த போது கன்னமிரண்டும் உப்பி கண்கள் வீங்கிப்போய் இருப்பது தெரிந்தது.

உடனே, தினமும் நடக்கும் வழக்கப்படி முதல் செய்கையாக எழுந்து உள்ளே போய், மனம் சுத்தமானதைப் போல உடம்பையும் சுத்தமாக்கிக் கொண்டு குளித்து உடைமாற்றி, தலை காயவேண்டும் என்பதற்காக இலேசாக வாரி நுனியில் சின்னதாக முடிச்சிட்டு நெற்றியில் சற்றுப் பெரியதாகக் குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டு, அடுத்த செய்கையாக பூஜை அறையினுள் நுழைந்து அறையைப் பெருக்கி படங்களைத் துடைத்து சின்னதாகக் கோலம் போட்டு விளக்கேற்றி, லக்ஷ்மி படத்திற்கு தினமும் வைக்கிறாற்போல் சந்தனத்தையும் குங்குமத்தையும் கரைத்து பொட்டு வைக்கப்போனவளை, ''நில்லு...'' என்கிற கடுமையான குரல் தடுத்து நிறுத்த. அந்தக் குரலின் கடுமையில் தன்னையறியாமல் தூக்கிவாரிப்போட்டு மனமும் உடம்பும் நடுங்க மெதுவாகத் திரும்பி எதிரில் தன் மாமியார் நிற்பதைப் பார்த்து எழுந்து நின்றாள் சௌதாமினி.

—தொடரும்



மயிலாப்பூர் சாராயக் கடையில் விற்பனையை அதிகரிக்க ஒரு புதுவித யுக்தியைக் கையாளுகிறார்கள். டேப்பில் பாடும் பாடலுக்கு ஏற்ப பரதநாட்டியம் ஆட ஒருவரை வேலைக்கு அமர்த்தியிருக்கிறார்கள். இதில் வேடிக்கை என்னவெனில், ஆடுபவர் ஆண். இவருக்கு ஒரு நாளைக்கு ஆறு ரூபாய் சம்பளம். பெயர் வீரமணி. ஊர் திருத்துறைப்பூண்டி. சிக்கலில் முறையாக நாட்டியம் கற்றுக்கொண்ட இந்த 22 வயது வாலிபருக்கு சாராயம் குடிக்க வருபவர்கள் இரண்டிலிருந்து பத்து ரூபாய் வரை அன்பளிப்பாக சட்டையில் குத்துகிறார்கள்.

— வந்தியத்தேவன்




# போர்ஹென்ஸ் ஃப்ளோரைடு ஈறுகளையும் பற்களையும் பாதுகாக்கிறது




## சுவைமிக்கது



## நுரை மிக்கது !

### ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு



ஈறுகள் வலுவிழந்து மெத்தென்று இருந்தால் ஆரோக்கியமான பற்கள்கூட ஆட்டம் கண்டு விழுந்துவிடும். போர்ஹென்ஸில் உள்ள விசேட சேர்க்கைப் பொருள் (அஸ்டிரிஞ்ஜண்ட்) ஈறுகளை வலுப்படுத்தி ஈறு உபாதையை எதிர்க்க உதவுகிறது

### பற்களுக்கு ஃப்ளோரைடு பாதுகாப்பு



சிறுவர்களுடைய பற்களின் எனாமலை ஃப்ளோரைடு உறுதிப்படுத்துவதோடு பற்களில் குழி விழுவதையும் தடுக்கிறது. போர்ஹென்ஸிலுள்ள ஃப்ளோரைடு பெரியவர்களுடைய பற்களின் எனாமலில், பற்சொத்தைக்குக் காரணமான கிருமிகளை எதிர்க்கும் சக்தியை வலுப்படுத்துகிறது.

## ஃப்ளோரைடு அடங்கிய போர்ஹென்ஸ்

## ஈறுகள் பற்கள் இரண்டையுமே பாதுகாக்கிறது




266 F-17 TAM

Regd. T.M : Geoffroy Manners & Co. Ltd

# மப்சா நகரத்துக் கோபுரங்கள்



''உன்னே சாமி ரூமுக்குள்ள யாரு வரச் சொன்னது?''

– பூஜை அறையின் வாசலில் நின்று கண்களும், முகமும் அருவருப்பால் சிணுங்க, குரலில் ஒரு அதீத கோபம் வெளிப்படக் கேட்ட மாமியார், சௌதாமினிக்கு முற்றிலும் புதியவளாகவே தெரிந்தாள். இதுவரை இப்படிப்பட்ட ஒரு தோற்றத்தில் அவள் தன் மாமியாரைப் பார்த்திராதவளாக உணர்ந்தாள். மாமியாரின் பேச்சில் பட்டுக் கத்தரிக்கிற கம்பீரம் இருக்கும். கண்டிப்பு தூக்கலாகத் தெரியும். தொனி சற்று அழுத்தமாக வரும்.

ஆனல் முகம் விகாரமாகிற கோபமும், வெறுப்பும் ஒருபோதும் வெளிப்பட்டதில்லே. அன்றிரவு அந்த நிகழ்ச்சிக்குப் பின் அத்தனை பேருக்கு நடுவில் வீட்டுக் கூடத்தில் நின்று தனக்கு நேர்ந்ததைச் சொன்னபோதுகூட மாமியாரின் முகம் இப்படிச் சிணுங்கவில்லே. இப்போது தெரிகிற கோபத்திலும், அருவருப்பிலும் நூற்றில் ஒரு பங்குகூட அப்போது வெளிப்படவில்லே.

கண்ணெதிரில் தெரிகிற இந்த முகமும், அதன் பாவங்களும் அவளே நிஜமாகப் பயமுறுத்த, சிறிது நேரத்திற்கு முன் மனதிற்குள் ஏற்பட்ட தீர்மானமும், வேகமும் மெலிதாகக் கரையத் துவங்க, மாமியாரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்துப் பேசுகிற தைரியமற்று அவள் தரையைப் பார்த்து தழைந்த குரலில் கேட்கலாஞள்:

''நான் எப்போதும் வந்துக்கிட்டிருக்கிற அதே சாமிரூம் தானே அத்தை இது...?''

''சாமி ரூம் அதேதான். யாரு இல்லேஞங்க இப்போ...?'' – மீண்டும் குரலில் அதே கோபமும், அருவெறுப்பும் தொனிக்கவே, சௌதாமினி இன்னும் பரிதாபமான குரலில் கேட்டாள்:

''அப்படியானல் நான்தான் வேறேன்னு சொல்றீங்களா அத்தை. உங்களோட பழைய சௌதாமினி – நீங்க செல்லமா பேரு வச்ச சொர்ணம் இல்லீங்கறீங்களா...?''

அவளுடைய அந்த மென்மை

''அன்னிக்கு அந்தப் பெண்ணேட தங்கச்சங்கிலியை அறுத்துகிட்டு போய் வித்தியே! கைமேல என்ன கெடைச்சிது?''

''இரும்பு காப்பு!''

– வெ. சீதாராமன்



யான – நெஞ்சைத் தொடுகிற கேள்விக்கும் சாந்தப்படாதவளாகவே பேசினுள் மங்களத்தம்மாள்:

''நான் அதையெல்லாம் ஒண்ணும் சொல்லலே. உன்னை சாமி ரூமுள்ள வரவேணும்னுதான் சொல்றேன்...''

''அதான் ஏன்னு கேட்டேன் அத்தை...''

''உன்னுடை இந்தக் கேள்விக்கு உனக்கே பதில் தெரியும். நான் சொல்லவேணும். நான் சொல்ல வந்ததெல்லாம் ஒண்ணுதான. இந்த வீட்ல சமையல்கட்டையும், சாமி ரூமையும் தவிர நீ வேற எங்க வேணும்னுலும் போ. நான் வேணுனலே. ஆனு அந்த ரெண்டு இடங்களுக்கும் இனிமேல நீ வர்றதுக்கு சம்மதிக்க மாட்டேன். நவசம், திதி, பூஜைன்னு ரொம்ப சுத்தமா, பவித்திரமா இருக்கிற இடங்கள் அவை. அந்த சுத்தமும், பவித்திரமும் கெடாமல் காப்பாத்தப்படணும்னு நினைக்கிறதால தயவுசெய்து நீ அங்க மட்டும் வராதே...''

அந்த வார்த்தைகளில் சாட்டை நுனியால் விசிறப்பட்ட மாதிரி சௌதாமினிக்குக் கன்னங்கள் இறுகி, உதடுகள் துடித்து, கண்ணோரம் நீர் கட்டிக்கொண்டு நின்றது. ஆனுலும், அழக்கூடாது; இதைவிடக் கடுமையான பேச்சைக் கேட்க நேர்ந்தாலும் நிதானத்தையும், பொறுமையையும் கைவிடக் கூடாது என்பதில் மிகத் திடமாக இருந்ததால், கீழ் உதட்டைக் கடித்து, கண்ணோரம் கட்டி நின்ற கண்ணீர் கன்னத்தில் வழியாமல் சமாளித்தாள். பின் மிக நிதானமாக நிமிர்ந்து மாமியாரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். பார்வை தன்னைப் புரிந்துகொள்ளச் சொல்லி கெஞ்ச மெதுவாகப் பேசத் தொடங்கினுள்:

''அதெல்லாம் நீங்க சொன்ன மாதிரி ரொம்ப சுத்தமான – பவித்திரமான இடங்கள்தான் அத்தை. நான் இல்லேன்னு சொல்லலே. ஆனு அங்கேயெல்லாம் நான் வரக்கூடாதுன்னு சொல்ற அளவுக்கு நான் பண்ணின தப்பு என்ன அத்தை...? மனசாலயோ, உடம்பாலயோ நானுக சுத்தம் தவறி நடந்தேனுன்னு சொல்லுங்க அத்தை. அப்படியெல்லாம் நடக்கற பொண்ணு நான், சொல்லுங்க...?

இதுல கூட என் தப்பு என்னன்றதைக் கொஞ்சம் நிதானமா யோசிச்சுப் பாருங்க. நான் வேணுமின்னு எதையாவது செய்தேனு...? இதுவரை உங்க பேச்சுக்கு மாருக எப்போவாவது நடந்திருக்கேனு...? அன்னிக்குக்கூட நீங்க சொல்லித்தானே நான் கடைத்தெருவுக்குக் கிளம்பினேன். அதுவும் உங்க பிள்ளைகூடத்தானே போனேன்? இதைவிட பாதுகாப்பாக, நல்ல துணையாக வேறு யார் அத்தை கூட வரமுடியும்...? அவரோட போன போதே, அவரை விட்டு ஒரு வினுடி கூட நகராமல் இருந்தபோதே இப்படியெல்லாம் நடந்திருக்குன்னுல் இதுக்குக் காரணம்னு எதைச் சொல்ல முடியும் அத்தை...? ஒரு நிமிஷம் என் இடத்துல நீங்க நின்னு யோசிச்சுப் பாருங்க அத்தை. இத்தனைக்கும் நானு காரணம்...?

ஒரளவு காரணமாக உங்க பிள்ளையைச் சொல்லலாமே தவிர என்னைச் சொல்ல முடியுமா அத்தை...? அவர் மட்டும் இன்னும் கொஞ்சம் திடமா, தைரியமானவரா, பலசாலியா, விவேகமானவராக நடந்துகிட்டிருந்தால் எனக்கு இப்படிப்பட்ட ஒரு நிலைமையும், இவ்வளவும் ஏற்பட்டிருக்காதே அத்தை. பேப்பர் பேப்பராக போட்டோவும், செய்தியும் வந்திருக்காதே...



ஜாம் (பழப்பாகு) வீட்டிலே தயார் செய்யும் பழக்கம் உண்டா? உடனடியாக அதைப் பயன் படுத்தாவிட்டால் அது கட்டியாக உறைந்து பாளம் பாளமாக வெடித்துப் போகலாம். இதைத் தடுக்க கொஞ்சம் கிளிசரினை ஊற்றினுல் போதும். ஜாம் பார்வைக்கு 'பள பள' என்று கண்ணாடி போல் பளிச்சிடும்.

–எஸ். பழனிச்சாமி

. சேர்ந்த வீட்டுக்குள்ளேயே தீண்டத்தகாதவளாக - சாமி ரூமுக்குள்ள வராதே, சமையல்கட்டுக்குள்ள வராதேன்னு தடுக்கிற நிலைமை - அதுவும், அதை நீங்களே சொல்கிற ஒரு தர்மசங்கடம் நேர்ந்திருக்காதே. பெத்த அப்பா, அம்மாவே வீட்டுக்கு வராதேன்னு நிர்த்தாட்சண்யமாக உதறித் தள்ளியிருக்க மாட்டாங்களே. யார், யாரோ தப்பு பண்ண முழு தண்டனையும் எனக்கா அத்தை...? எல்லாக் கஷ்டமும் என் ஒருத்திக்கா...? இது நியாயமா...? நீங்களே சொல்லுங்க .அத்தை. என்னை உங்க கோகிலாவாக நினைத்துப் பார்த்து சொல்லுங்க..."

- அதற்கு மேலும் தாங்க இயலாதவளாக அவள் நின்றுகொண்டிருந்த இடத்திலேயே சரிந்து தரையில் உட்கார்ந்து முகத்தை மூடிக்கொண்டு கதற ஆரம்பித்ததும் மங்களத்தம்மாளின் கண்களும் கலங்கிப் போயிற்று. சௌதாமினி சொன்ன ஒவ்வொரு வார்த்தைக்கும் பளிச்சென்று அர்த்தம் புரிய, இதில் அவளது தவறு என்று ஒன்றுமே இல்லை என்பது விளங்க மெல்ல அவளருகில் போய் பக்கத்தில் உட்கார்ந்து தலையை வருடினாள். இவ்



வளவு நல்ல பெண்ணின் வாழ்க்கையோடு விதி ஏன் இப்படிக் குரூர விளையாட்டாக விளையாடி இருக்கிறது என்பதை உணரவோ, புரிந்துகொள்ளவோ முடியாமல் குரல் கரகரக்கச் சொன்னாள்:

''இதப் பாரும்மா. அழாதேம்மா. உன் தப்புன்னு ஒண்ணுமில்லேன்றது எனக்கும் தெரியும்மா. ஆனா இதை ஊரு ஒத்துக்காது. நம்ம சாதி சனங்க ஒத்துக்கிட மாட்டாங்க. ஏன், பின்னால குடி இருக்கிற குடித்தனக்காரங்க கூட ஒத்துக்கிடலே. உன்னை வீட்டோட சேர்த்து வச்சுக்கிறதுக்கே முணுமுணுக்கறாங்க. நீ குழாயடிப்பக்கம் வரக் கூடாதுன்றாங்க. நீ தொட்டப்புறம் குழாயைத் தண்ணி கொட்டி அலம்பறாங்க. 'மங்களத்தம்மா, இத்தனைக்கு மேலேயும் அவளை வீட்டோட கூட்டி வச்சுக்கிட்டீங்கன்னா நாங்க யாரும் உங்க நல்லது கெட்டதுக்கு வரமாட்டோம். உங்க வீட்டுல பச்சைத்தண்ணி கூட குடிக்கமாட்டோம். நாளைக்கே உங்க பொண்ணுக்கு சம்பந்தம் பேசக் கூட யாரும் முன்வர மாட்டாங்கன்றதையாவது நினைவு வச்சுக்கிட்டு முதல்ல அவளை வீட்டை விட்டு அனுப்பற வேலையைப் பாருங்க'ன்னு பயமுறுத்தறாங்க. எனக்கும் அதை நினைச்சால் பயமாத்தாம்மா இருக்கு. ஊர் கட்டுப்பாட்டுக்கு அடங்கி நடக்கிறதைத் தவிர வேற வழி இல்லேன்னு தோணுது. அதனால... அதனால... நீ...''

அதற்கு மேல் நேரிடையாக அவளிடம் சொல்லத் தயங்கி மங்களத்தம்மாள் விசும்பலில் மற்ற வார்த்தைகளை மறைத்ததும் –

''அதனால நீ வீட்டை விட்டுப் போயிடுன்னு சொல்லப் போறீங்களா அத்தை...? நான் எங்கே அத்தை போவேன்...? அம்மாவும் அப்பாவும் வேணாமின்னு சொல்லி, நீங்களும் வேணாமின்னு விரட்டினால் நான் வேற யார்கிட்டே போவேன்...? யார் இருக்காங்க சொல்லுங்க அத்தை...?''

என்று தாங்க முடியாத துயரமும், வேதனையுமாக மங்களத்தம்மாளின் மடியிலேயே முகத்தைப் புதைத்து உடல் குலுங்க அழ ஆரம்பித்தாள் அவள்...

— தொடரும்



நம் நாட்டின் ஏற்றுமதியில் பெரும் பங்கு வகிப்பது தோல் பொருள்கள்தான். அதேசமயம், கங்காருவின் தோல், செம்மறி ஆடுகளின் தோல் ஆகியவற்றை ஆஸ்திரேலியாவிலிருந்து இறக்குமதி செய்கிறார்கள்.

– படம், தகவல்: . ஈ.வெ. ரா. மோகன்

# பீசா நகரத்துக் கோபுரங்கள்

## இந்துமதி



14

**சௌ**தாமினியின் கண்ணீரும், 'நான் எங்கே அத்தை போவேன்' என்ற கேள்வியின் கதறலும் மங்களத்தம்மாவை அதிகம் நெகிழ வைத்தது. இதே நிலையில் தன் பெண்ணோ அல்லது தன்னுடன் கூடப்பிறந்த யாருமோ இருந்தால் தான் என்ன செய்திருப்போம் என்பதை ஒரு விநாடி யோசித்துப் பார்த்தாள். நிச்சயமாக இப்படி உதறித் தள்ளுகிற முடிவில் பேசி இருக்க மாட்டோம் என்று தோன்ற சௌதாமினியை ஒரு புதிய அனுதாபத்துடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

கல்யாணமான இந்த மூன்று மாதத்தில் இந்தப் பெண் ஒரு தடவையாவது தன் முகம் சுளிக்கிற மாதிரி நடந்து கொண்டிருக்கிறாளா என்ற கேள்வி எழும்ப நினைவில் அதற்கான பதிலைத் தேட, இல்லை என்றே வந்தது. அடக்கமாய், பணிவாய், ஒரு வார்த்தை எதிராகப் பேசாமல், எப்போதும் சிரித்த முகமாய், எந்த வேலை சொன்னாலும் 'இதோ செய்யறேன் அத்தை' என்ற ஒரு பதிலைத் தவிர வேறு பதில் சொல்லத் தெரியாமல், அசாதிக்கையாக அவ்வளவு வேலைகளையும் செய்துகொண்டு... பார்க்கிற எல்லாரும் சந்தோஷமும் பொறாமையுமாக 'உனக்கென்ன மங்களத்தம்மா.

ருக்கா. உன்னை ஒக்காத்தி வச்சு அத்தனை வேலையையும் பார்த்துக்கறா. வீட்டுக்குப் பொண்ணுன்னு வந்தால் இப்படி இல்லே வரணும்...' என்று சொன்னதெல்லாம் நினைவிற்கு வர, ஒருவேளை அவர்கள் அத்தனை பேர்களின் பொறாமையும் பெருமூச்சும் தான் இவள் தலையில் இப்படிப்பட்ட சங்கடமாக வந்து இறங்கிற்றோ என்ற நினைப்பில் இன்னமும் கஷ்டப்பட்டுப் போனாள்.

முன்பு புகழ்ச்சியும் பொறாமையும் தொனிக்கப் பேசின அவர்களே நேற்று சாயந்திரம் தோட்டத்துப் பக்கம் ஒரு சின்னக் கூட்டமாகக் கூடி வேறு விதமாகப் பேசுவதை எதேச்சையாக அங்கு போக நேர்ந்த போது கேட்கிற சந்தர்ப்பம் கிடைத்தது.

'வேணும் இந்த மங்களத்தம்மாவிற்கு. ஏதோ பூமியில் இல்லாத மருமக கிடைச்ச மாதிரி இல்லே தலை இடறிச்சு. அந்த இடறலுக்குத்தான் ஆண்டவன் இப்படி அவ முகத்துல கரியை அள்ளிப் பூசிட்டான் போல இருக்கு. நம்ம கூடல்லாம் நின்னு



ரு நிமிஷம் அந்தப் பொண்ணைப் பேச உடமாட்டாங்களே... இப்போ அவளைப் பத்தி ஊர் உலகமெல்லாம் பேசுதே... இதுக்கு என்ன செய்யப் போறுங்களாம்...?'

அதற்கு மேல் கேட்டுக்கொண்டு நிற்கிற சக்தியற்று உள்ளே வந்து சமையலறை மூலையில் நின்று குமுறி னது ஞாபகத்திற்கு வர, சுற்றி உள்ள வர்களின் இந்தப் பேச்சுக்களெல் லாம் தன்னையே இந்த அளவு சங்க டப்படுத்துமானல், பாதிக்கப்பட்ட இவ ளுக்கு இன்னும் எவ்வளவு கஷ்டமும், சங்கடமும் இருக்கும் என்பதை ணர்ந்து அவளைப்பற்றி மனதிற்குள் ஏற்படுத்திக்கொண்ட முடிவில் மெலி தான ஒரு மாறுதல் வர தன் மடியில் கிடந்தவளின் தலையை மெல்ல வருடி ஆறுதலான குரலில் சொன்னள்.

''எழுந்திரும்மா. எதுக்கு இப்படி எப்போ பார்த்தாலும் கதறிக்கிட் ருக்கே...?''

அந்த நிகழ்ச்சிக்குப் பின் முதல் தடவையாய்க் கிடைத்த அந்த ஆறு தலும், மென்மையாய் தலையை வரு டிக்கொடுத்த வருடலும் அவளுக்குள் ஓரளவு நம்பிக்கையை ஏற்படுத்தவே அழுகை சற்றுக் குறைந்தவளாக நிமிர்ந்து மாமியாரை கண்ணீர் நிறைந்த கண்களோடு பார்த்துக் கேட் டாள்.

''தயவுசெய்து என்னை வீட்டை விட்டு போகச்சொல்லாதீங்க அத்தை. நான் இங்கேயே இருக்கேன் அத்தை. நீங்க சொன்ன மாதிரி சாமி ரூமுக் கும், சமையல் கட்டுக்கும் கூட வரலே. மற்றப்படி வீட்டு வேலைகளை யெல்லாம் செய்துக்கிட்டு இங்கேயே இருக்கேன் அத்தை...''

அதற்கு உடனே மாமியாரிட மிருந்து பதில் வராததால் மீண்டும் கெஞ்ச ஆரம்பித்தாள் அவள்.

''சரின்னு சொல்லுங்க அத்தை. நீங்க சொன்னல் எல்லாரும் ஒத்துப் பாங்க அத்தை. அதை யாரும் மீற



மாட்டாங்க. அதனுல நீங்க சரி சொல்லுங்க அத்தை...''

''சொல்லலாம்மா. ஆனல் இது நான் மட்டும் சம்பந்தப்பட்ட விஷயமில்லேயேம்மா. நம் வீட்டில் இருக்கிறவங்க மட்டுமில்லாமல் சுற்றி இருக்கிறவங்க சம்மதத்தை யெல்லாம் பொறுத்த விஷயமாகிப்போச்சே...''

''சுற்றி இருக்கிறவங்க யார் அத்தை? நம்ம வீட்டுல குடி இருக்கிறவங்கதானே? அவங்களுக்கெல்லாம் இதுல என்ன சம்பந்தம் இருக்கு அத்தை? அவங்க யார் நான் இங்கே இருக்கிறதைத் தடுக்க–''

அவள் கேட்டு முடிக்குமுன் அறை வாசலிலிருந்து பெரிதாய் ஒரு குரல் கேட்டது.

''நல்ல கேள்விடியம்மா நீ கேட்டது...? இதுல எங்களுக்கு என்ன சம்பந்தம் இருக்குன்னு கேட்கறே...? அதை உங்க மாமியாரையே கேட்டுத் தெரிஞ்சுக்க. நீ நேத்து வந்தவ. மூணு மாசத்துக்கு முன்னலதான் உனக்கும் இந்த வீட்டுக்கும் சம்பந்தம். ஆனு நாங்க அப்படி இல்லே. நாங்க யாரும் வெளி மனுஷங்க இல்லே. பங்காளிங்கதான். உன் மாமனர் வழி வந்தவங்க. அதனுல இதுல தலையிட எங்களுக்கு நிறைய பாத்தியதை இருக்கு. கெட்டுப்போன ஒரு பொண்ணை வீட்டோட சேர்த்துத்தான் வச்சுப்பேன்னு சொன்னுல் அதை எங்களால கேட்டுக்கிட்டோ பார்த்துக்கிட்டோ இருக்க முடியாது.''

பின் பக்கக் குடியிருப்பு முழுதும் கோபமும், ஆக்ரோஷமுமாக திரண்டு அறை வாசலில் நிற்பதை பார்த்து அதிகம் மிரண்டுபோய் பத டத்தோடு எழுந்து நின்றுகொண் டாள் அவள். எப்போதும் கம்பீரமா வும், நிமிர்ந்த பார்வையுடனும் யாரை யும் எதிர்நோக்குகிற மங்களத்தம்மா ளால்கூட அப்போது அவர்களை அப்படி எதிர்நோக்க முடியவில்லை மௌனமாகத் தலைகுனிந்து அவர்களை நிமிர்ந்தும் பார்க்காமல் இந்தப் பி சினைக்குத் தானுகை ஒரு முடிவு கிடை கட்டும் என்று பேசாமல் உட்கார் திருக்க, சௌதாமினி தழைந்த குரலில் அவர்களைப் பார்த்து மெது வாகக் கேட்டாள்.

''உங்க வீட்டுல யாருக்காவது இப்படி நடந்திருந்தா இந்த மாதிரி நிர்த்தாட்சண்யமாப் பேசுவீங்க ளம்மா–''

''சீ. வாயை மூடுடி. எங்க வீட்டுல ஏன் இப்படியெல்லாம் நடக குது...? எங்க வீட்டுப் பொண்ணுங்க யாரும் அழகுல தாங்க ரதி ரம்பைக் கன்னு நினைச்சு துள்ளலே. நாங்களும் துள்ள விடமாட்டோம். அதனுல இந் தக் கண்றாவியெல்லாம் அவங்களுக்கு நடக்காது...''




சங்கரன்கோவில் நகரில் கடுமையான குடிநீர்ப் பஞ்சம் ஏற்பட் இருப்பதால், நகராட்சியிலிருந்து ஒரு லாரி மூலம் தண்ணீர் வழங் கிறார்கள். லாரி வரும்போது பெண்கள் முண்டியடித்து தண்ணீர் கும் சமயம் டிரைவர் லாரியை எடுத்துக்கொண்டு செல்கையில் பெண் லாரியின் பின்னலேயே ஓடுவார்கள். இந்த நிகழ்ச்சி ஒரு வாரமாய் கிறது.

– ஏ. பாரதி

பரதநாட்டியம் கற்கவே கடும்
ப்பு தெரிவித்த உறவினர்களின்
வே பரதநாட்டியம் அரங்கேற்றி,
வே தன் வாழ்வின் லட்சியம்
பது போல இருக்கிருர் ஜெயந்தி
ஜகோபால். சமீபத்தில் சிதம்பரம்
ாவிலில் நாட்டியம் ஆடியது எல்லே
லாத் திருப்தியைத் தந்தது என்ருர்.
''திருமணம் வாழ்வில் தவிர்க்க
டியாதது. நாட்டியத்தில் இன்னும்
என்னே ஒரளவு பிர
ர்ச்சி பெற்று
பின்னர் திரு
ப்படுத்திக்கொண்ட
செய்துகொள்ளப் போகிறேன்.
ணம் செய்துகொள்ளப் போகிறேன்.
ந்த தலேமுறையில் என்னேப் பார்த்து
ாட்டியம் கற்றுக்கொண்டிருப்பவர்
ளுக்கு (எங்கள் உறவில்) ஒரு நல்ல
உதாரணமாக, என்னேக் கண்டு ஊக்
கம் வருவதாக இருக்க விரும்பு
கிறேன்.''

நாட்டியத்தோடு வீணே, வாய்ப்
பாட்டு பழகி வரும் ஜெயந்தி ஒரு
பட்டதாரி.

– பூங்கோதை குருதாஸ்



''ஏங்க, எனக்கு மட்டும் நான் பண்ணின தப்புலயா இதெல்லாம் நடந்தது...? இதுல என் குற்றம்னு எதாவது இருக்கா சொல்லுங்க...?''

''அது யார் குத்தமோ, யார் தப்போ யார் கண்டது...? அவனே உனக்கு முன்னே பின்னே தெரியாதுன்னு சொல்றதை யாரால நம்ப முடியும்...?''

அதைக் கேட்டு மனதிலும் உடம்பிலும் குபீரென்று நெருப்பு பற்றிக் கொள்ள உடல் முழுதிலும் ஒரு நடுக்கம் ஏற்பட நின்ருள் அவள். வார்த்தைகள் வெளிவராமல் குரல்கூட நடுங்கிற்று.

''ஐயோ... என்னம்மா இப்படியெல்லாம் பேசறீங்க...?'' என்றபோது அவள் கண்களில் கண்ணீர் நிறைந்து கன்னங்களில் வழிந்தது.

''சும்மா அழுதிட்டா மட்டும் நம்பிட முடியுமா என்ன...? எந்த புற்றுல என்ன பாம்பு இருக்கும்னு யார் கண்டது...?''

''ஐயோ... பாருங்க அத்தை. எப்படியெல்லாம் பேசருங்க பாருங்க. கேட்டுக்கிட்டு சும்மா உட்கார்ந்திட்டிருக்கீங்களே அத்தை...?''

அவள் மங்களத்தம்மாவின் கைகளேப் பற்றிக்கொண்டு வேறு எதுவும் செய்யத்தெரியாமல் கதறினபோது வாசலில் நின்று கொண்டிருந்தவர்களில் இன்னெருத்தி கேட்டாள்:

''உங்க அத்தை எங்களே என்ன செய்திட முடியும்...? நாங்க சந்தேகப் படறதில் என்ன தப்பு சொல்லு...? எத்தனே பேர் பெரிய கடைத்தெருவிற்குத் தனியாகக்கூடப் போகலே? போன வாரம் எங்க சகுந்தலா ஒண்டியாப் போய் ராத்திரி எட்டு மணிக்கு ஒண்டி

யாத்தானே வந்துது! அதுக்கெல்லாம் நடக்காத விஷேதம், புருஷன் கூடப் போனபோதே உனக்கு மட்டும் நடப்பானேன்? அதுவும் புருஷனை அடிச்சுப் போட்டுட்டு உன்னை மட்டும் தூக்கிட்டுப் போவானேன்...? இதெல்லாம் முன்னாடி திட்டமிடாமலா நடந்திருக்கு...?''

கைகள் நடுங்கிப் பதற இப்படிக் கூட இவர்களால் பேச முடியும் என்பதை நம்ப முடியாதவளாக அதற்கு மேல் அவர்களின் பேச்சுக்களைக் கேட்கிற சக்தியற்று செளதாமினி காதுகளைப் பொத்திக்கொண்டபோது –

''அதானே பங்கஜத்தம்மா நானும் சொல்றது. அப்படி திட்டமிடாமல் நடந்த விஷயம்னால் அதுக்கப்புறம் இவ இப்படி இவ்வளவு தைரியமா வந்து நிப்பாளா? எல்லாரையும் பார்ப்பாளா? பேசிக்கிட்டுக் கிடப்பாளா...? மான ஈனத்திற்கு பயந்த பொம்பளைன்னா இத்தனை நேரம் உயிரை விட்டிருக்க மாட்டாளா...?''

அந்த ஒரு கேள்வி நெஞ்சில் சுளீரிட, அடிபட்ட கோபத்திலும், வெறுப்பிலும் சடாரென்று நிமிர்ந்தாள் செளதாமினி. அத்தனை நேர அழுகை மாறி முகம் ஜிவுஜிவுத்தது. கண்ணில் நெருப்பு வீசிற்று. வார்த்தைகளிலும் அந்த நெருப்பு பற்றிக்கொள்ள அதே நேரத்தில் ஒரு அழுத்தத்தோடு சொன்னாள் அவள்:

''எதுக்காக நான் உயிரை விடணும்...? ஏன் சாகணும்? அப்படி செத்துப்போறது கோழைத்தனம். அந்த மாதிரி செத்துத்தான் நான் என்னை நிரூபிக்கணும் என்கிற அவசியமில்லை. அதுவும் உங்களுக்கு நிரூபிக்கிற தேவையே இல்லை. இதுல என் தப்போ குற்றமோ எதுவுமில்லைன்ற எனக்குத் தெரியும். அடுத்ததாக ஆண்டவன்னு ஒருத்தன் இருந்தால் அ னுக்குத் தெரியும். அதனால உங்க பேச்சுக்கெல்லாம் நான் பயப்பட போறதில்லை. இப்படி வாய் கூசா அபாண்டமாகப் பேசறீங்களேன் வருத்தப்படப்போறதில்லை. மூலையி உட்கார்ந்து அழப்போறதில்லை. நா செய்யாத ஒரு தப்புக்கு வளைந் கொடுக்கவும் போறதில்லை. நீங் சொன்ன மாதிரி ஆறு, குளத்தை தேடிக்கிட்டோ, ஒரு முழக் கயிற்றை தேடியோ ஓடவும் மாட்டேன். இ விட நூறு மடங்கு நீங்க பேசின சரி. அதற்காகவெல்லாம் கவலை படாமல் தைரியமாக இந்த உலகத்தை எதிர்நோக்கறதுன்ற முடிவுக் வந்துட்டேன். என்ன ஆனாலும் ச நான் இந்த வீட்டில்தான் இருப்பே இதைவிட்டு நகரப்போறதில்லை. நீங் உங்களால முடிஞ்சதை செய்யுங் என் மனசுல தப்போ, குற்றமோ தகாத எண்ணமோ இல்லாத பட்ச தில் நான் ஏன் உங்களுக்கெல்லா பயப்படணும்? அத்தை, உங்க எதிர்த்துப் பேசறதா நினைக்காதீங் இனிமே நீங்களே சொன்னால்கூ நான் இந்த இடத்தை விட்டு ந மாட்டேன். அதனால என்ன வந்தாலு அனுபவிக்கத் தயாராக இருக்கே நீங்க என்ன செய்யணுமோ செய்து குங்க...''

சொல்லிவிட்டு அவள் யார் முக தையும் பார்க்காமல் அறையை விட் வெளியேறுவதை மங்களத்தம்மா உட்பட அத்தனை பேரும் அதிர்ந் போய் பார்த்துக்கொண்டு ருர்கள்...

— தொட




''பிள்ளை இல்லாத வீட்ல கிழவன் துள்ளி விளையா வான்'இற பழமொழியை சரியாத்தான் சொல் யிருக்காங்க!''

''எதுக்கு சொல்றே?''

''நேத்து என் மாமனருக்கு வயிற்றுவலியாம் வேற மருந்து வேண்டாம், கிரைப் வாட்டர்தா வேணும்னு அடம் பிடிச்சார்னு பார்த்துக்கோயேன்!''

– பொ. மாரிமுத்துக்குமா

# பைசா நகரத்துக் கோபுரங்கள்



15

## இந்துமதி

கிட்டத்தட்ட ஒரு மாத காலம் திடமாகவும், தீர்க்கமாகவும், சற்றுப் பிடிவாதமாகவும் கூட வீட்டிலிருந்தவர்களையும், பின்புறமிருந்த குடியிருப்புக்களின் கடுமையான பேச்சுக்களையும், முகத் திருப்பல்களையும், ஏளனச் சிரிப்புக்களையும் சமாளித்த சௌதாமினியால் அதற்கு மேலும் சமாளிக்க இயலாததாக அன்று காலை அது நடந்தது.

வழக்கம்போல் சமையலறைக்கும், பூஜையறையினுள்ளும் நுழையாமலே தன்னால் செய்ய முடிந்த அத்தனை வேலைகளையும் செய்து முடித்து, பின்னர் நீண்ட நாட்களாக வாரப்படாமல் சிக்கடைந்து போயிருந்த தலையை வாரி முடிகிற எண்ணத்துடன் பின்னால் போய் உட்கார்ந்தபோது குபீரென்று வயிற்றைப் புரட்டிக் கொண்டு வந்தது. எழுந்து காவாய் அருகில் ஓடுகிற அளவிற்குக்கூடக் காத்திராமல் அந்த இடத்திலேயே வாந்தி எடுத்து முடித்த பின்னர்தான் அவளுக்குச் சட்டென்று அதன் காரணம் பிடிபட நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது.

பயத்தில் வயிற்றை மேலும் புரட்டிக்கொண்டு வர, ஒரு மாதத்திற்கு முன்பு – அந்தக் கோரச் சம்பவம் தன் வாழ்க்கையில் நடப்பதற்கு முன்னால் – கணவனின் பிரியத்திற்கும், காதலுக்கும் ஆட்பட்டுக் கிடந்த அந்தக் காலையில், ஞாயிறோடு ஞாயிறு எட்டு, திங்கள் ஒன்பது, சனி பத்து என்று விரல்விட்டு எண்ணி, கிட்டத்தட்ட நாற்பது நாட்களுக்கு மேல் ஆன அந்த சந்தோஷத்தைக் கணவனிடம் பகிர்ந்து கொள்ள நினைத்து, பின்பு 'இப்படி அவசரமாகச் சொல்லிவிடக் கூடிய விஷயமில்லை இது' என்று தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டு அப்புறம் சாவதானமாக, அவன் மடியில் சரிந்து, கழுத்தைத் தன் கைகளால் வளைத்து, முகத்தோடு முகம் சேர்த்து –

''ஏங்க, உங்களுக்கு ஆம்பிளைப் பிள்ளை வேணுமா பொம்பிளைப்பிள்ளை வேணுமா...'' என்று ஆரம்பிக்க நினைத்தது வெறும் நினைவோடு நின்று, நினைக்காத வேறு எதெல்லாமோ நிகழ்ந்துபோனதை எண்ணி, அத்தனை நாட்களாக அழக்கூடாது என்றிருந்த வைராக்கியமெல்லாம் கரைந்துபோக, தானே கரையக் கூடாதா என்ற ஆதங்கத்தில் பெரிதாய்க் குரலெடுத்து அழ ஆரம்பித்தாள்.

அன்றே கணவனிடம் சொல்லாமற்போன இந்த விஷயத்தில்கூட விதி தன்னுடன் விபரீதமாக விளையாடி விட்டதை உணர அவளது கண்ணீர் அதிகமானபோது அத்தனை குடியிருப்புக்களின் முகங்களும் தங்களின் வீட்டு வாசல்களிலும், ஜன்னல்களிலும் எட்டிப் பார்க்க, பாங்கிலிருந்து திரும்பின நந்தகுமாரும், மங்களத்தம்மாளும் அவளது திடீர் அழுகைக்கான காரணம் புரியாமல் பதறிப்போய் பின்பக்கம் வந்தனர். அங்கே தலைவிரி கோலமாய் முகத்தை மூடிக்கொண்டு கதறின அவளை ஒரு வினாடி பார்த்துக் கொண்டே நின்றனர்.

இந்த ஒரு மாத காலத்தில் ஒரு தடவை கூட அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவோ, பேசவோ இல்லாத நந்தகுமார் முகத்தில் ஒரு தீவிர வெறுப்பு தெரியச் சொன்னான்.

''விளக்கு வைக்கிற நேரத்தில் எதுக்கு இந்த ஒப்பாரின்னு கேளும்மா...''

அவனின் குரல் காதில் விழுந்ததும் சட்டென்று தன்னிலை புரிந்தவ



ஒருத்தர் வந்தார். உங்க படம் தோல்வி அடைந்துவிட்டதே என்றார். அந்தக் கதாபாத்திரத்தைச் சரியாகச் செய்யவில்லையென்றால்தான எனக்குத் தோல்வி. டைரக்டருக்குத் தோல்வி என்று சொன்னால்தான் அது பொருந்தும்.

ளாக அவள் அழுகை சற்றுக் குறைந்தபோது, மங்களத்தம்மாள் இன்னும் சற்று அருகில் போய்க் கேட்டாள். குரல் விருப்பு வெறுப்பற்ற ஒரு பாவத்தில் வெளிப்பட்டது.

''திடீர்னு இப்ப என்ன ஆச்சுன்னு இப்படி அழுவறே...?''

அத்தை அருகில் வந்ததும் எழுந்து நின்றாள் அவள். அந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று யோசித்தபோதே மீண்டும் வயிற்றைப் புரட்டிக்கொண்டு வர ஓடிப்போய் காவாய் அருகில் உட்கார்ந்து வயிற்றைக் காலி செய்ததும் எல்லாருக்கும் புரிந்துபோக அனுதாபத்திற்குப் பதில் நிறைய முகங்களில் அருவருப்பும், கேலிச்சிரிப்புமே படர்ந்தது.

அதைப் பார்த்துக்கொண்டு நின்ற நந்தகுமாருக்கு உடம்பு குபீரென்று பற்றிக்கொண்டது. அதில் மனசும் தீ பிடிக்க கண்களில் அதன் ஜ்வாலை முழுதும் தெரிய ஒரு வினாடி என்ன செய்வதென்றே தெரியாதவனாக நின்றான்.

அவன் அவ்வாறு நிற்பதையும், அந்தச் சூழ்நிலையின் இசைகேடையும் புரிந்துகொண்ட குடியிருப்பில் ஒருத்தி-அன்று செளதாமினியால் தாக்கப்பட்டவள் – அதையே அவளைத் திருப்பிப் பலமாகத் தாக்குகிற சந்தர்ப்பமாக நினைத்து மிக வேகமாக வெளியில் வந்து கேட்டாள்.

''ஏன் மங்களத்தம்மா. கெட்டுப்போன மருமகளைத்தான் பிடிவாதமா வீட்டுக்குள்ள வச்சிட்டிருக்கே. இப்போ எவனுக்கோ பிறக்கப்போற இந்தக் குழந்தையைக்கூட பேரனாகவோ, பேத்தியாகவோ ஏத்துக்கப் போறியா என்ன...?''

அதைக் கேட்டு நெஞ்சும் உடம்பும் பதறத் திரும்பின செளதாமினி கண்களில் கண்ணீர் கோடாக வழிய குரல் நடுங்கச் சொன்னாள்.

''அத்தை, இது எவனுக்கோ பிறக்கப் போற குழந்தை இல்லே அத்தை. குழந்தைதான் அத்தை...''

அது காதில் விழுந்ததும் உள்ளே போகத் திரும்பின நந்தகுமார் நின்று அவளை அதீதக் கோபத்தோடு ஏறிட்டுப் பார்த்து ஏதோ சொல்ல வாயெடுத்து பின் சொல்லாமலே அம்மாவின் பக்கம் திரும்பினான்.

''அம்மா, இன்னொரு தரம் அவளை அது என் குழந்தைதான்னு சொல்லச் சொல்லாதே! எத்தனை தரம் சொன்னாலும் ஒரு பொய் மெய்யாகி விடாது.''



''இல்லீங்க. நான் பொய் சொல்லலீங்க. எப்போவாவது உங்ககிட்டே நான் பொய் சொல்லியிருக்கேனா...? நிஜமாகவே இது உங்க குழந்தை தாங்க. சத்தியமாச் சொல்றேங்க. இந்த சம்பவமெல்லாம் நடக்கறதுக்கு முன்னாலயே உங்ககிட்ட சொல்லணும்னு வாயெடுத்து நேரமில்லாம நிறுத்திட்டேங்க.''

''நேரமில்லாமல் நிறுத்தினியா...? இதைச் சொல்ல ஒரு நாள் வேணுமா, ரெண்டு நாள் வேணுமா...? யார்கிட்ட கதை அளக்கறே...?''

''கதை இல்லீங்க... என் வாழ்க்கையே கதையாப் போயிட்டதனாலே நான் எதைச் சொன்னாலும் கதையாத் தெரியுது. அவ்வளவுதாங்க...''

''எதுக்கு அனாவசியப் பேச்சு. இது என் குழந்தைன்றதை நான் மட்டுமில்லே, இங்கே இருக்கிறவங்க யாருமே நம்பத் தயாராக இல்லே. இத்தனை நாளும் எனக்கு ஏற்பட்ட அத்தனை அவமானத்தையும் தாங்கிக்கிட்டு பேசாமல் இருந்த என்னால் இனிமேல் இந்த அவமானத்தையும் சேர்த்து தாங்கிக்க முடியாது. இதுல பாதிக்கப்பட்டது நீ மட்டும்தான்னு நினைச்சு பேசறே... ஆனா நான் எவ்வளவு பாதிக்கப்பட்டேன்னு உனக்கு மட்டுமில்லே, இங்கே இருக்கிறவங்க யாருக்கும் தெரியாது. எங்க அம்மாவுக்குக்கூட நான் சொல்லலே.

என் கீழ வேலே செய்யறவங்களே என்னை அலட்சியமாகவும், கேலியாகவும் பேசினதையெல்லாம் சொல்லிக்கிட்டிருக்க முடியாது. தெருவில போறவங்க சிரிச்சதை யார்கிட்டேயும் பகிர்ந்துக்க முடியாது. நீ என்னவோ அம்மாகிட்ட உனக்கு இப்படி நேர்ந்ததுக்கு நான்தான் காரணம்னு சொன்னியாம். ஆனா சத்தியமா நான் எதுக்கும் காரணமில்லே – இந்தக் குழந்தை உட்



பட - என்பது என் மனசுக்குத் தெரியும். அன்னிக்குக்கூட நான் உன்னைக் காப்பாத்தணும்னுதான் போராடினேன். அந்தப் போராட்டத்துல அடிபட்டு மயங்கி விழுந்தது என் தப்பு இல்லே. அதே மாதிரி நடந்த எதுவும் உன் தப்புமில்லே. உன் மீது நான் எந்தக் குற்றத்தையும் சாட்டலே.

இதுக்கெல்லாம் நீ காரணமில்லை என்பதால்தான் நீ வீட்டில் இருந்ததுக்கு நான் எந்த மறுப்பும் எழுப்பலே. ஆனா ஏன் உன்கிட்டே பழைய மாதிரி நெருங்கிப் பழகலே, மனைவியாக ஏத்துக்கலேன்னு கேட்டால், அதுக்கு எனக்கு மனசு இடம் கொடுக்கலே. அந்த அளவிற்கு பரந்த மனப்பான்மை என்கிட்ட இல்லே. பரந்த மனப்பான்மையை வளர்த்துக்கவும் முடியலே. அதை சொல்லிக்க நான் வெட்கப்படலே. ஏன்னா நான் வளர்ந்த சூழ்நிலை அப்படி...

இத்தனை நாள் பேசாமல் இருந்து உன்னை வீட்டிலும் அனுமதிச்ச மாதிரி இனிமேல் அனுமதிக்க முடியாது. யாருடைய குழந்தைக்கோ நாங்க பொறுப்பு ஏத்துக்க முடியாது. இதைக் கேட்டால் ஊர் ஜனங்க சிரிக்கிறதோடு மட்டுமில்லாமல், எங்களை பஞ்சாயத்து கூட்டி ஒதுக்கி வச்சிடுவாங்க. கோகிலா கல்யாணத்தை நடத்தவிடாம செஞ்சிடுவாங்க. ஏற்கெனவே என்னைக் கேட்கிறவங்க எல்லாம், 'கல்யாணத்துக்கு ஒரு தங்கச்சி இருக்கிறப்போ பொண்டாட்டியானாலும் இந்தமாதிரி ஆனவளை வீட்டுல கூட்டி வச்சுப்பா[ங்க]ளா...'ன்னு ஒரு கேள்வி போடறாங்க. இப்போ இந்த விஷயத்தையும் கேள்விப்பட்டாங்கன்னா அவ்வளவுதான்.

இனிமேல இந்த ஊர்ல நாங்க தலைநிமிர்ந்து நடக்கணும்னா, என் தங்கச்சி கல்யாணம் நல்லபடி நடக்



# தில் குமாரி

சிக்கிம் முதன் மந்திரி பண்டாரி அவர்களின் மனைவி தில் குமாரி பண்டாரி, சமூகத் தொண்டுகள் புரிவதுடன், ஆஜ்கோ சிக்கிம் (இன்றைய சிக்கிம்) என்ற பத்திரிகையின் ஆசிரியராகவும் பணியாற்றுகிறார்:

''பெண் விடுதலை என்பது தானாக வந்துவிடாது. ஆண்கள் முழு மனதுடன் அதற்கு ஒத்துழைத்தால்தான் அது கிட்டும். உதாரணமாக வரதட்சிணை பிரச்னை. இதற்கு ஆண்களின் மனோபாவத்தில் பெரும் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டாலொழிய இதற்குத் தீர்வுகாண முடியாது. நல்லவேளையாக சிக்கிம் பெண்களுக்கு இந்தப் பிரச்னை கிடையாது. தொல்லையும் கிடையாது. வயலில் பாடுபடுவதிலிருந்து சட்டசபை வரை பெண்களும் ஆண்களோடு கடமைகளைப் பகிர்ந்து கொள்ளுகிறார்கள்.

கல்வி என்பது எல்லோருக்கும் மிக அவசியம் என்றாலும் பெண்களுக்குக் கல்வி மிக மிக அவசியம். ஏன் தெரியுமோ? ஒரு பெண் கல்வி அறிவு உள்ளவளாக இருந்தால் தனது குழந்தைகளுக்கு கல்வி போதிப்பாள். இளமையிலிருந்தே சுத்தம், ஆரோக்கியம் ஆகியவற்றைப் பயிலும் குழந்தைகளின் எதிர்காலம் சிறப்பாக இருக்க என்ன தடை?'' என்கிறார் இவர்.

இதைச் செயலாக்கும் பொருட்டு சிக்கிம்மில் பெண் கல்வியைத் தீவிரமாக்க திட்டம் ஒன்று வகுக்கப்பட்டு அமுலாகி வருகிறது.



'அபா' குழுவினரில் ஒருவரான ஆனிஃப்ரெட் கொடுத்த போஸ்கள் இவை.

பல நடிகைகளிடம் காட்டியபோது முகம் சுளித்தார்கள். காமிராவுக்கு என்றதும் அலறி ஓடிவிட்டனர். அம்பிகாவுக்கு மட்டும் அசாத்திய துணிச்சல். அவர் கொடுத்த போஸ்கள் சரியாக இருக்கிறதா?

பார்க்க பக்கம் - 36

---

களைம்னால் தயவு செய்து நீ வீட்டை விட்டுப் போயிடு. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். நாங்க விரட்டினோம் என்கிற அபவாதத்துக்கு இடம் வைக்காமல் நிலைமையை உணர்ந்து நீயே வெளியில போயிடு. அவ்வளவுதான் என்னால சொல்ல முடியும். இப்போ இருட்டிப் போனதால் நாளைக் காலை முதல் பஸ்ஸுக்குக் கிளம்பி உங்க அம்மா, அப்பாகிட்ட போயிடு. பஸ் ஸ்டாண்ட் வரை மணியைத் துணைக்கு அனுப்பறேன்'' – இறுக்கமான ஒரு குரலில் சொல்லி முடித்து அம்மாவைப் பார்த்தான்.

''அம்மா, கல்யாணத்தின்போது அவங்க வீட்டுல செஞ்ச சீர், பாத்திரம், நகைங்க, துணிமணி ஒண்ணு விடாமல் அவகிட்ட கொடுத்தனுப்பு. அவளே போனப்புறம் அவ சாமான் எதுவும் பணம் தரேன். காலையில மணியை சீக்கிரம் எழுப்பி கூட அனுப்பி அவங்க வீடுவரைக்கும் விட்டுவிட்டே வரச் சொல்லு...''

அதன்பின் திரும்பிப் பார்க்காமல் அவன் உள்ளே போனதும், அந்த இடத்தில் சூழ்ந்து நின்ற அத்தனைக் கூட்டமும் கலைந்து போயிற்று. மிகப் பெரிய பிரச்சினை ஒன்றிற்கு முடிவு ஏற்பட்டுவிட்ட நிம்மதியில் இரவு வீடு முழுதும் நிசப்தமாகக் கிடக்க,

தோட்டத்து மூலையில் – அழுகிற சக்தியோ, எதைப்பற்றியும் சிந்திக்கிற சக்தியோ அற்று, மறுவார்த்தைக்கு இடமில்லாமல் மிகத் தீர்க்கமாக நந்தகுமார் சொல்லிவிட்டுப்போன பேச்சின் அதிர்ச்சியில் உறைந்து அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தாள் சௌதாமினி.

— தொடரும்

# பைசா நகரத்துக் கோபுரங்கள்




மறுநாள் காலை ஆறு மணிக்கெல்லாம் மூன்று பெரிய டிரங்க் பெட்டி சாமான்களோடும், மணியுடனும் சேர்த்து சௌதாமினி அவளுடைய பெற்றோர்களிடம் அனுப்பப்பட்டாள். தெரு முழுதும் வேடிக்கை பார்க்க, ஒவ்வொரு வாசலிலும் ஜன்னல்களிலும் முகம் முகமாய் பூத்திருக்க, பஸ் ஸ்டாண்டிற்குப் போவதற்காக ஜட்கா வண்டியில் ஏறி உட்கார்ந்த சௌதாமினிக்கு ஐந்தாறு மாதங்களுக்கு முன் கல்யாணமாகி அந்த வீட்டிற்கு வந்த முதல் நாள் ஞாபகத்திற்கு வந்தது.

அன்றும் இதே மாதிரி ஜட்கா வண்டிதான். நாலைந்து வண்டிகள். முதல் வண்டி நிறைய சாமான்கள். பின்னதில் புதுப் புடவையும் பூத்தலைகளுமாகப் பெண்கள். அடுத்ததில் ஆண்கள். கடைசி வண்டியில் தனியாக அவளும் நந்தகுமாரும். சிரிப்பும் பேச்சுமாக வீட்டு வாசலில் இறங்கினபோதே தெரு கலகலத்துப் போயிற்று. போதாததற்கு மாமியார் அவர்களை வரவேற்க நாதஸ்வரத்திற்கு ஏற்பாடு பண்ணியிருந்தாள். உள்ளூர் வித்வான்தான். தனக்குத் தெரிந்த விதத்தில் நகுமோமுவை அடையாளம் கண்டுபிடிக்கிற மாதிரி வாசித்தான். வீட்டு வாசலில் அவர்களை நிற்கவைத்து ஆரத்தி சுற்றிக் கொட்டினார்கள். 'வலது காலை எடுத்து வச்சு வாம்மா. குமார் நீ கூடத்தாண்டா. அவ கையைப் புடிச்சுக்க. இப்ப பிடிக்கிற பிடி கடைசி வரைக்கும் விடக்கூடாது. புரிஞ்சுதா...'

அதே மாமியார்தான் இன்றைக்கு அவளை மட்டும் தனியாக வண்டியில் ஏற்றி அனுப்புகிறாள். அன்று அவள் கொண்டு வந்த அத்தனை உடைமைகளையும் கூடச் சேர்த்து அனுப்பி, இனி உனக்கும் எங்களுக்கும் எந்தவித சம்பந்தமுமில்லை என்கிறாள். வாசல்வரை கூட வந்து அவள் கையை ஒரு விநாடி பற்றிக்கொண்டு நின்று பின் கலங்கின கண்களை மறைக்க சரேலென்று உள்ளே திரும்பிப் போய்விட்டாள்.

நந்தகுமார் வெளியில் வரவே இல்லை. அடுத்த பஸ்ஸில் திரும்பி வந்துவிடச் சொல்லி மணியிடம் சொன்னதோடு சரி. அதைத் தவிர அவள் பக்கம் திரும்பவோ பேசவோ இல்லை.

ஜட்கா மெதுவாக நகர ஆரம்பித்ததும் சௌதாமினி கடைசித்தரமாக அந்த வீட்டையும், தெருவையும் பார்த்தபோது, இந்த சமூகத்தையும், மனிதர்களையும் எதிர்த்து நிற்க முயன்று தான் தோற்றுப்போனதை உணர்ந்துகொண்டாள். என்றோ ஒரு நாள் மணி 'பைசா நகரத்துக் கோபுரம் சாய்ந்த கோபுரம்' என்று படித்தது திடீரென்று நினைவுக்கு வந்தது. 'கோபுரம்னால் அது கோபுரமாக இருக்கணும். அதில்லாமல் அதன் லட்சணத்தை விட்டுக் கொஞ்சம் தவறினால் கூட இப்படித்தான் சாய்ஞ்சு, சரிஞ்சு யாரும் கிட்ட நெருங்கக்கூட பயப்படும்படியான ஒரு நிலைமைக்கு வந்துடும்' என்று நந்தகுமார் தந்த விளக்கமும் கூடவே ஞாபகத்திற்கு வர அந்தப் பைசா நகரத்துக் கோபுரம் போலவே தானும் நிற்பதாகப் பட்டது.

அதேபோல் ஒரு வீழ்ச்சிக்காக மட்டுமே காத்துக்கொண்டு நிற்கிற பரிதாபத்தைத் தவிர வேறு வழி எதுவுமே இல்லையோ என்கிற பயத்துடன்,

இந்துமதி



'டார்ஜான் தி ஏப் மேன்' படப்பிடிப்பின் போது கதாநாயகன் மைல்ஸ் ஒ கீஃப் பாம்புகளேயோ, மிருகங்களேயோ பார்த்து துளிக் கூட பயப்படவில்லை.

அவருக்கு பெரிய தர்ம சங்கடம்?

கதாநாயகி போ டெர்ரக் திறந்து விடப்பட்ட மார்பகத்துடன் அருகில் நிற்க, அவளது கணவரும், டைரக்டருமான ஜான் தன்னே உற்று நோக்கியவாறு கவனமாக இருந்த சமயம்.

''நான் கதாநாயகியுடன் நடிக்கும்போது படு எச்சரிக்கையுடன் இருந்தேன். அவள் கதாநாயகி மட்டுமல்ல; தயாரிப்பாளரும் கூட. நான் ஒரு சிறு குற்றம் செய்வதாகத் தெரிந்தால்கூட வேடமே போய் விடும்! இரண்டாவது, போவுக்கும் அவள் கணவருக்கும் கொஞ்சம் கூட நகைச்சுவை உணர்வு கிடையாது. ஒரு சமயத்தில் கூட அவர்கள் சிரிக்கவில்லை.''

அத்துடன் 'மைல்ஸ் படப்பிடிப்பைப் பற்றி ஐந்து மாத காலம் வெளியே மூச்சு விடக்கூடாது' என்றும் டைரக்டர் எச்சரித்திருந்தாராம்!

- ரமேஷ்

---

அப்பா தன்னே ஏற்றுக்கொள்வாரோ மாட்டாரோ என்ற பயமும் கூட் சேர்ந்துகொண்டது. அவரும் மறுத்து விடுகிற பட்சத்தில் எங்கே போவது, தன் முடிவுதான் என்ன என்ற கேள்விக்கு பதில் எதுவும் கிடைக்காததால், ஒரு ஆழமான பெருமூச்சோடு பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து ஜன்னல் வழியாக வெளியில் பார்த்தபோது கூட்டத்தின் நடுவில் தாடியுடன் சரேலென்று ஒரு முகம் பளிச்சிட்டு மறைய அவளின் மனத்திலும் அடி வயிற்றிலும் நெருப்பு பற்றிக் கொண்டது.

'அந்தப் பாழும் மண்டபத்தில் பார்த்த அதே முகம்தானே இது? கதறக் கதற தன்னேயும், தன் வாழ்க்கையையும் உருக்குலைத்த பாவிதானே இவன்? இப்போது எதற்காக இங்கே வந்திருக்கிறுன்? தன்னே அடையாளம் புரிந்து கொண்டிருப்பானே?...'

அவன்தானு என்பதை உறுதி செய்துகொள்ள முயன்று மீண்டும் கூட்டத்தில் தேடியபோது பஸ் கிளம்பி விட்டது. ஏற்கெனவே மனதிற் கிடந்த பயத்தோடு இந்த சந்தேகத்திலும், குழப்பத்திலுமாக மிகவும் அமைதியற்று பிரயாணம் முழுவதையும் தவிப்பும், கஷ்டமுமாகக் கடத்தி ஊர் கோடியில் இறங்கி மாட்டு வண்டியைப் பிடித்து சாமான்களே ஏற்றி மணியோடு ஏறி உட்கார்ந்த அந்த விநாடியில் அவள் அவனேப் பற்றின தற்காலிக மறதியோடு அப்பாவைப் பற்றி மட்டுமே நினேக்க ஆரம்பித்தாள்.

'என்ன சொல்வார் அவர்? வீட்டிற்குள்ளேயே நுழையவிட மாட்டாரோ? வாசலிலேயே நிற்க வைத்து திருப்பி அனுப்பி விடுவாரோ? அப்படிச் செய்கிற பட்சத்தில் இத்தனே டிரங்குப் பெட்டிகளேயும் ஒப்படைத்து விட்டு, மணியை ஜாக்கிரதையாக பஸ் ஏற்றிவிட்டு பின்... எங்கே போவது?...'

ஆனல் மாசிலாமணி அப்படியெல்லாம் செய்யவில்லை. வாசலிலேயே நிற்கவைத்து திருப்பி அனுப்பவில்லை. அவளுக்கு ஏற்பட்ட அந்த நிகழ்ச்சிக்குப் பின் வீட்டைவிட்டே நகராமல் அறை மூலேயில் ஒடுங்கிக் கிடந்தவர் அவளேயும், அவள் வந்து நின்ற தோற்றத்தையும் பார்த்து எதையும் கேட்காமலே புரிந்துகொண்டார். சமையற்கட்டிலிருந்து அடையாளமே தெரியாமல் இளேத்துப் போயிருந்த மீனுட்சியம்மாள் தாங்க முடியாத துக்கத்தோடு மகளேக் கட்டிக்கொண்டு கதற ஆரம்பித்ததும் சற்று உரத்த குரலில் அடக்கினுர்.

''இத பாரு மீனுட்சி. இப்படியெல்லாம் அழுது ஆர்ப்பாட்டம் பண்ணி ஊரைக் கூட்டாதே. இவ வந்திருக்கிற விஷயம் ரெண்டாம் பேருக்குத் தெரியக்கூடாது. முதல்ல

களைச்சு வந்திருக்கிறவங்களுக்கு சாப்பிட ஏதாவது குடு. சாப்பிட்ட உடனே அதே மாதிரி ரெண்டாம் பேருக்குத் தெரியாம அவங்களைத் திருப்பி அனுப்பிடணும்...''

அதையே எதிர்பார்த்து வந்திருந்த சௌதாமினி மிக் மெதுவான குரலில் சொன்னாள்.

''திருப்பி அனுப்பினீங்கன்னு என்னால அங்க போக முடியாதுப்பா. அவங்க நீங்க செய்த சீர் செனத்தி எல்லாத்தோடும் என்னையும் சேர்த்து 'இனிமே இங்க வராதே'ன்னு சொல்லித்தான் அனுப்பினாங்க.''

''அவங்க சொல்லுவாங்கம்மா. எனக்கிருக்கிற கோவம், வருத்தம், அவமானம், வெறுப்பு எல்லாம் அவங்களுக்கும்தானே இருக்கும். அதுல வேற வழி தெரியாம இப்படி சொல்லி வண்டியேத்தியிருப்பாங்க. உடனே நீயும் கிளம்பி வந்துடறதாம்மா. நம்ம குடும்பத்துல யாராவது இப்படி வந்திருக்காங்களாம்மா? செத்தாலும் புருஷன் வீட்டுலயே சாகணுமே தவிர இப்படி வந்து நிக்கலாமா?''

அவருடைய அந்த நிதானமான கேள்வியில் உடலும், மனமும் குறுகிப் போக, கண்ணோரங்களில் நீர் கோர்த்து நிற்க தடுமாறுகிற குரலில் சொன்னாள் அவள்.

''நானாக வரலேப்பா...எனக்கு... நான் இப்போ... மூணு மாசம்பா. இந்தக் குழந்தை தன்னுடையதில்லேன்ற சந்தேகத்துல என்னை அனுப்பிச்சுட்டாங்கப்பா...''



அதைக் கேட்டு ஒரு விஞடி அவமானத்திஞலும், ஆத்திரத்திஞலும் குமுறிப்போன அவர், தன் குமுறலை வெளிப்படுத்துகிற வழி தெரியாமல் 'அப்பனே முருகா' என்று முனகிஞர். சில நாட்களுக்கு முன்புகூட 'குழந்தைக்கு வளைகாப்பு, சீமந்தம்னு ஏதாவது வருதா மீஞட்சி. உனக்குக் கடுதாசி ஏதாச்சும் போட்டாளா?' என்று கேட்டது நினைவிற்கு வர வளைகாப்பு சீமந்தத்திற்கு பதில் இப்படி வந்து நிற்பதை சகித்துக்கொள்ள முடியாமல் சொன்ஞர்.

''சரிம்மா. அப்படி சந்தேகப்படற போது நீ அவங்க ஏத்தி விட்டாங்கன்னு கிளம்பி வந்தியாஞ, அந்த சந்தேகம் சரிதான்னு ஒப்புத்துக்கிற மாதிரித்தானே ஆகிப் போகுது. மினி, என்ன அப்பா இப்படிச் சொல்ருரேன்னு தப்பா நினைச்சுக்காதேம்மா. நீ எனக்கு பாரமில்லேம்மா. காலம் முழுசும் உன்னை வச்சு சோறு போட என்ஞல முடியும். ஆஞ அது சரியில்லே. அப்படிச் செய்தால் ஊர் உலகம் என்னைத் தூற்றும். சொந்தக்காரங்க தூற்றுவாங்க. அதஞல அப்படிச் செய்யக்கூடாதும்மா. ஒரு தகப்பன் செய்ய வேண்டியது புருஷன் வீட்டுலேருந்து வந்த மகளைக் கூட வச்சிக்கிறது இல்லே. அவளுக்கு நல்ல புத்தி சொல்லி திருப்பி அனுப்பறதுதான் நியாயம். அதஞல மினி–''

''புரியறதுப்பா. நீங்க சொல்றது



''சத்திரத்தில பார்த்தப்ப சீர்வரிசைல நிறைய எவர்சில்வர் பாத்திரம் பண்டம் இருந்துதே! இங்கே ஒண்ணும் காணுமே!''

''மண்டு! அதெல்லாம் சத்திரத்தில, பந்தி பரிமாற வெச்சிருந்த வாடகை பாத்திரங்கள்!''

தான் சரின்னு படறது. நான் இப்ப வந்திருக்கக் கூடாதுதான். கவலை படாதீங்கப்பா. நான் ஒருபோது உங்களை ஊர் உலகம் தூற்ற விடமா டேன். மணி ரொம்ப பசியா இரு ப்பான். அவனுக்கு மட்டும் கொஞ்ச சாப்பாடு போடுங்க. நாங்க அடுத் பஸ்ஸுக்கே திரும்பிப் போயி ருேம்.''

பெரியவர் சற்று நிம்மதியடைந் வராக, ''நீயும் சாப்பிடும்ம மீஞட்சி, என்ன கல்லாட்டம் நி கறே... இலை போடு போ...'' என் அதட்டிஞர்.

ஆஞல் அவள் சாப்பிட மறுத்த மணி சாப்பிட்டு முடித்தவுடன், அம்ம விடமும், அப்பாவிடமும் சொல்லி கொண்டு,

''அபி எங்கே, ஸ்கூலுக்கு போயிருக்காளா... அவ வந்தா சொ லுங்க. நான் மணியோட போ வண்டி கூட்டிக்கிட்டு வந்துடறே அதுவரைக்கும் இந்தப் பெட்டி இங்கேயே இருக்கட்டும்...'' என் சொல்லிவிட்டு மணியை அழைத்து கொண்டு வெளியில் வந்தவள் –

வண்டியைக் கூப்பிட வே திரும்பி அந்த வீட்டிற்குப் போகவே இல்லை.

''பஸ் ஸ்டாண்ட் வரை நட பியா மணி?'' என்று மட்டும் கே டாள்.

''ஓ, நடக்கிறேன் அண்ணி என்ற பதில் அவனிடமிருந்து வந் தும் மிக வேகமாக நடந்து ய கண்ணிலும் படாமல் பஸ் நிற்கி இடத்தை அடைந்து சில விஞ காத்திருந்து பஸ் வந்ததும் மணி மட்டும் ஏற்றிவிட்டாள். ஏறுவதற் முன் சிறிதே தயங்கின அந் சிறுவன்,

''என்'ணி, நீங்க வரலையா?' என்று கேட்டான்.

''இல்லே மணி. நீ போ. நா அப்புறம் வரேன்...''

என்று சிரிக்க முயன்று தோற்று போய் பஸ் கிளம்பி கண்ணை வி மறைகிற வரை நீர் நிறையப் பார் துக்கொண்டு நின்றவள் பின் ஒரு மு விற்கு வந்தவளாக சாலை வழி எதிர்ப்பக்கம் வேகமாக நடக்க ஞள்...

— தொடரு

# நிச்சயமாக உங்களுக்கு வேண்டியது கிடைக்கிறதா?



பெரும்பாலான தாய்மார்களால் தங்கள் குடும்பத்தினர் சாப்பிடும் உணவில் அவர்களுக்கு வேண்டியதை நிறைவுடன் அடைவதை நிச்சயமாக அறிய முடிவதில்லை. அதனால்தான் அவர்கள் ஹார்லிக்ஸை நம்புகிறார்கள்.

ஏனென்றால், உங்கள் குடும்பத்தினர் ஹார்லிக்ஸை தொடர்ந்து உபயோகிப்பதின் மூலம், நல்ல உடல் நலத்துடன் இருப்பதற்குத் தேவையான ஊட்டச்சக்தியைப் பெறுகிறார்கள்.

ஏனென்றால் ஹார்லிக்ஸில் கலந்துள்ள மிகச் சிறந்த ஆடைப்பால், மால்டெட் பார்லி, மற்றும் கோதுமைப் பொருள்கள் அனைத்தும் உங்கள் குடும்பத்தினருக்குத் தேவையான ஊட்டசக்தியை அளித்து, அவர்கள் ஆரோக்கியத்துடன் இருக்க உதவி செய்கிறது.

ஹார்லிக்ஸை தொடர்ந்து சாப்பிடுவதனால் உங்கள் குடும்பத்தினரால் ஆரோக்கியத்துடனும், சுறுசுறுப்புடனும் இருக்க முடிகிறது. இதனால், உங்கள் மனக் கவலைகளை மறக்க முடிகிறது.




"டாக்டர் சிபாரிசு செய்தது முதல் என்னுடைய குடும்பத்தினருக்கு ஹார்லிக்ஸை தினப்படி வழக்கமாக்கி விட்டேன். நீங்களும் ஒரு ஹார்லிக்ஸ் தாய்தானே?"



## ஹார்லிக்ஸ்-முழுமையான ஊட்டம் பெற

# பைசா நகரத்துக் கோபுரங்கள்




இந்துமதி

யாருக்கும் எந்தவித சந்தேகமும் ஏற்படாத வகையில் ஒரு வாரமாக அவன் சௌதாமினியின் வீட்டுத் தெருவிலேயே சுற்றிக் கொண்டிருந்தான். எப்போதாவது அவள் வெளியில் வரமாட்டாளா, அவளிடம் ஒரு வார்த்தையாவது பேசமுடியாதா என்று ஏங்கிக்கொண்டிருந்தான். பேச முடியாமற் போனாலும் ஒரு முறை பார்க்க மட்டும் முடிந்தால் போதும் என்று தோன்றியது. ஆனால் அதுகூட இயலாமல், அவள் வெளியிலேயே வராமற் போனதும் அவன் இன்னமும் தவித்து, அவளைப் பற்றின எந்த செய்தியையாவது தெரிந்துகொண்டு விடுகிற துடிப்புடன் இருந்தான்.

அப்போதுதான் அவனுக்கு சோமுவின் நினைவும், நாகராஜனின் நினைவும் வந்தது. அவர்கள் இருந்தால் அவனை இப்படி அலைய வைத்திருக்க மாட்டார்கள். எப்படியாவது அவளைப் பற்றின ஒரு செய்தி விடாமல் தெரிந்து கொண்டு வந்து சொல்லிவிடுவார்கள் கூடவே, 'இன்னும்கூட என்னாத்துக்கு ஒனக்கு அவளைப்பத்தின நினைப்பு தம்பி. எழுந்திருச்சு வந்து தொழிலைக் கவனி தம்பி' என்பார்கள்.

இப்போது அவனுடைய தொழில் என்ன என்பதைத் தெரிந்துகொண்டால் – படிக்காத பட்டதாரி இளைஞர்களுக்கு அரசாங்கம் அமைத்துத்தரும் ஒரு சின்ன பெட்டிக் கடைக்கு அவன் சொந்தக்காரனாகப் போவது தெரிந்தால் – அவர்கள் சந்தோஷப்படுவார்கள். இன்னும் நாலே நாளில் அவன் சென்னைக்குப் பயணப்பட வேண்டும். கடற்கரை காந்தி சிலையின் வலதுகை பக்கம் தின்பண்டங்கள் விற்கிற Nassey ஸ்டாலை அமைத்தாக வேண்டும்.

எப்போதோ படிக்காத பட்டதாரி இளைஞர்கள் சங்கத்தில் ஒருவனாகச் சேர்ந்து விண்ணப்பித்திருந்தது. இப்போது வந்து சேர்ந்திருந்தது. அதற்காக நாலைந்து முறை சென்னை போய் சந்திக்க வேண்டியவர்களைச் சந்தித்து, விண்ணப்பத்தாள்களில் கையெழுத்திட்டு, இடமமைத்து, பெட்டி போட்டு, இனி அவன் போகவேண்டியது ஒன்றுதான் பாக்கி. அதற்கும் அவன் நாள் குறித்திருந்தான். இன்னும் நாலே நாள்தான் இருந்தது அவன் ரயிலேறுவதற்கு.

அதற்குள் அவன் அவளைப் பார்க்கத் தவித்தான். தான் பழைய வழிப்பறித் திருடன் இல்லை என்பதையும், மனம் மாறி தற்போது கண்ணியமான தொழில் ஒன்றை நடத்தப்போகிற புதிய இளைஞன் என்பதையும், அத்தனை மாறுதலுக்கும் அவள்தான் காரணம் என்பதையும் சொல்லி, மீண்டும் ஒரு முறை தன்னோடு வருமாறு கூப்பிட நினைத்தான்.

அவளைத் தூக்கிக்கொண்டு வந்த மறுநாள் அதிகாலையில், மனத்தின் வேகம் முழுதும் தணிந்தவனைத் தன் செய்கைக்குப் பிராயச்சித்தமாக வாழ்நாள் முழுதும்கூட அவளை வைக்

துக் காப்பாற்றத் தயாராக இருப்பதைச் சொல்லி பதிலுக்கு 'நீ காப்பாத்தி நான் உயிரோட இருப்பேன்னு நினைக்கறே?' என்று அவள் தன் முகத்தில் காரி உமிழ்ந்ததை இன்னமும் அவன் மறக்கவில்லை.

ஆனாலும் அவன் அவளைக் கேட்டு விட வேண்டும் என்று நினைத்தான். ஊராரிடமும், வீட்டிலும் அவள் படுகிற கஷ்டமும், கேட்டுக்கொள்ள நேர்கிற பேச்சுக்களும் தன் பொருட்டுத்தான் என்பதை முற்றிலும் உணர்ந்து, அந்த வீட்டிலேயே கணவனாலும், மற்றவர்களாலும் ஒதுக்கப்பட்டு வித்தியாசமாக நடத்தப்பட்ட இந்த கொஞ்ச நாட்களில் அவளே மனம் மாறிப் போயிருக்கலாம் என்கிற ஒரு நினைப்பு அந்த அலைச்சலுக்குக் காரணமாயிற்று.

அது மட்டுமில்லாமல், அவளைக் கொண்டு வந்து தெருக்கோடியில் விட்டுவிட்டுப் போன அந்த ராத்திரிக்குப்பின் மீண்டும் ஒருமுறைகூடப் பார்க்காத அவளின் முகத்தைப் பார்த்துவிட வேண்டும் என்ற தவிப்பும் கூட சேர கடந்த ஒரு வாரத்தில் அவன் அவளைப் பார்க்க மிகவும் முயன்று தோற்றுப்போனான்.

இந்த ஒரு வார அலைச்சலில் அவளது வீட்டின் பின்னால் குடியிருக்கிற சின்னப் பையன் ஒருவன் தெருக்கோடி பெட்டிக் கடையில் எடுபிடி ஆளாக வேலை பார்ப்பதைத் தெரிந்துகொண்டு, கடைசி முயற்சியாகக் கடையின் முதலாளி இல்லாமல் அந்தப் பையன் மட்டும் கடையில் இருக்கிற நேரத்தில் அங்கு போய் நின்றான். முதலாளி இல்லாத தைரியத்தில் ஒரு பிடி பொட்டுக்கடலையை எடுத்து வாய் நிறைய அடைத்துக்கொண்ட அந்தச் சிறுவன் எதிரில் நின்ற அவனைப் பார்த்து ஒரு வினாடி பயந்து போனான். அவசரமாகப் பொட்டுக்கடலையை மென்று விழுங்கிக்கொண்டே, ''என்ன வேணுங்க?'' என்று கேட்டான்.

பையனின் தவிப்பும், பயமும் புரிந்தவனாக அவன் முதலில் நாலணா காசிற்கு அதே பொட்டுக்கடலையை வாங்கி தான் பாதி எடுத்துக்கொண்டு, ஒரு சினேக பாவத்துடன் பையனிடம் பாதியை நீட்டினான்.

'இந்தா, எடுத்துக்க.''

''ஐயய்யோ... வேணாங்க. முதலாளிக்குத் தெரிஞ்சா திட்டுவாருங்க.''

''உங்க முதலாளிக்கு இது தெரிஞ்



இந்தியாவில் 2.9 லட்சம் விஞ்ஞானிகளும் தொழில் நுட்ப திறமை பெற்றவர்களும் வேலையில்லாமல் இருக்கிறார்கள்.

சாலும் திட்ட மாட்டாரு. ஏன்னு இது காசு கொடுத்து வாங்கினதுதான். சும்மா எடுத்துக்க தம்பி.''

பையன் இன்னமும் பயம் அகலாதவனாக, மறுப்பதற்கும் தைரிய மற்று காகிதத்தில் இருந்த கடலையை வாங்கிக்கொண்டு அவனைப் பார்த்தான். பையனை சகஜ நிலைக்குக் கொண்டு வர அவன் இன்னும் சினேகமாகச் சிரித்துக்கொண்டே, ''ம்... சாப்பிடு'' என்று சொல்லி தானும் சிறிது கடலையை வாயில் போட்டுக்கொண்டான். சிறுவனும் பயம் நீங்கி புன்சிரிப்போடு சாப்பிடத் தொடங்கி,

''ஆமா, நீங்க யாருங்க. புதுசாத் தெரியறீங்க! வெளியூருங்களா?'' என்று கேட்ட கேள்வியில் இவன் சற்றுக் கூர்மையடைந்தவனாக,

''ஆமாம் தம்பி. பத்திரிகையாளு. மெட்ருஸிலிருந்து வரேன். ஒரு மாசத்துக்கு முன்னால இதே தெருவுல சௌதாமினின்னு ஒரு பொண்ணைப் பத்தி எங்க பத்திரிகையில ந்யூஸ் கொடுத்தாங்க. அந்தப் பொண்ணு இப்ப என்ன ஆச்சு, எங்க இருக்குதுன்னு உனக்குத் தெரியுமா தம்பி?'' என்று மிக நிதானமாக ஒரு மூன்றும் மனிதத் தோரணையில் விசாரிக்கத் துவங்கினான்.

''ஓ... மினி அக்காவைப் பத்தித்தானே கேக்கறீங்க. அவங்க வீட்ல தாங்க நான் குடியிருக்கேன். ரொம்ப நல்ல அக்காங்க. பாவங்க, இப்போ எப்போ பார்த்தாலும் அழுகையும், சோகமுமா மாறியே போயிட்டாங்க. இளைச்சு எப்பிடியோ ஆயிட்டாங்க...''

அதைக் கேட்டு அவன் குற்ற உணர்வில் ஒரு வினாடி தலை குனிந்தான். பின் தன் முக மாறுதலை சிரமப்பட்டுத் தவிர்த்துக்கொண்டே பேசினான்.

''இப்போ அந்தப் பொண்ணு அதே வீட்லதான் இருக்குதா தம்பி?''

''ஆமாங்க. இன்னிவரைக்கும் இங்கதாங்க இருந்தாங்க. ஆனா நாளைலேருந்து இருக்க மாட்டாங்கன்னு பேசிக்கிருங்க.''

''யார் பேசிக்கிறது...?''

''எங்க அப்பா, அம்மா, மத்த குடித்தனக்காரங்க எல்லாருமே பேசிக்கிருங்க.''

''என்ன பேசிக்கிருங்க?''

''ராவு சாப்பாட்டுக்குப் போனப்ப அந்த அக்கா பின்பக்கம் அழுதுகிட்டு நின்னுச்சுங்க. எல்லாரும் அதை சுத்தி கூட்டமா நின்னுக்கிட்டிருந்தாங்க. அப்போ குமார் மாமா அதாங்க அந்த அக்கா புருஷன் அவரு ஏதோ சொல்லிக்கிட்டிருந்தாரு. இது என்னோட கொழந்தை இல்லேன்னு ஏதேதோ பேசினாரு. எனக்கு ஒண்ணும் புரியலீங்க. பின்னால சாப்பாடு போடறப்ப அப்பாவும், அம்மாவும், அந்த அக்கா முழுவாம இருக்கிறதால அவங்க வீட்டுக்காரரும் அவரோட அம்மாவும் சேர்ந்து மணியோட அந்த அக்காவை விடியகாலை பஸ்ஸுல அவங்க பிறந்த வீட்டுக்கு அனுப்பிடப் போருங்கன்னு சொன்னது மட்டும் புரிஞ்சுச்சுங்க. சாப்பிட்டு முடிச்சு திரும்ப கடைக்கு வர்றபோது வீட்டு வாசல்ல மணி தனியா நின்னுக்கிட்டிருந்தாங்க. அவன்கிட்டே கேட்டப்ப அவனும் காலைல அக்காவை கூட்டிக்கிட்டுப் போய் அவங்க வீட்டுல விட்டுட்டு வரப் போறதா சொன்னுங்க. பாவங்க அக்கா. முன்னாலயே அவங்க அப்பா அம்மா வந்து 'நீ எங்க வூட்டுக்கு வரக் கூடாது'ன்னு சத்தம் போட்டுட்டுப் போயிட்டாங்க. இப்போ போய் நின்னுச்சுன்னு, சேர்த்துப்பாங்களோ, மாட்டாங்களோ தெரியலீங்க...''

பையனின் உண்மையான, கபடமற்ற வருத்தம் நெஞ்சைத் தொட, சௌதாமினி முழுகாமல் இருக்கிற அந்தப் புதிய செய்தியும், அதன் அதிர்ச்சியும், அதனால் அவளுக்கு நேர்ந்திருக்கிற புதிய அவமானமும் புரிய அவன் இன்னமும் அவளுக்காக உருகினவனாக பையனைப் பார்த்தான்.

''ஏன் தம்பி அவங்க அம்மா அப்பா வீடு எங்கே இருக்கு?''

''இங்கதாங்க பக்கத்துல எங்கயோ இருக்குங்க. வண்டியில ஏறினா அஞ்சு ரூபா சார்ஜுங்க.''

''எப்போ போகப் போறாங்கன்னு

சொன்னே?''

''நாளைக்காலே மொத 'பஸ்ஸு'லங்க.''

''ஆமா, அந்த மணின்றது யாரு தம்பி?''

''மணி, குமாரு மாமா தம்பிங்க. ஹைஸ்கூல்ல அஞ்சாவது படிக்கறாங்க. படிச்சிருந்தா நானும் அவன் கிளாசு தாங்க போயிருக்கணும்.''

பையன் பெருமூச்சுவிட இவன் ''சரி தம்பி வரேன்...'' என்று அவசரமாகக் கிளம்பியபோது!தான் பையன் திடீரென்று நினைவிற்கு வந்தவனைக் கேட்டான்.

''ஏங்க, என்ன சாமான் வாங்கக் கடைக்கு வந்தீங்க. அதை மறந்திட்டுப் போறீங்களே!''

''ஓ... ஆமாம். சிகரெட் இருக்கான்னு கேட்க வந்தேன். இருக்கா?''

''இல்லீங்க. இப்படியே நேராப் போய் வலதுகை பக்கம் திரும்பினீங்கன்னா–''

பையன் முடிப்பதற்குள் நிஜமாகவே அவன் வலது கை பக்கம் திரும்பிக் கொண்டிருந்தான்.

''அப்பா, இன்னா வேகமா நடக்கறாரு ..'' என்று பையன் முணுமுணுத்துக்கொண்டே திரும்ப, ஒரு சின்னப் பெண்,

''எங்கே நாட்டாரு இல்லியா... நூறு -கிராம் சர்க்கரை கொடு...'' என்று சற்று அதிகாரமாகக் கேட்க பையனின் கை இயந்திரமாக சர்க்கரையை அளந்து பொட்டலம் கட்டத் துவங்கிற்று...

— தொடரும்



உத்திரப் பிரதேச அரசு, நைநிடாலில் உள்ள சிதர்கன்ஞ் சிறைச்சாலையை திறந்தவெளி சிறைச்சாலையாக அமைத்துள்ளது.

இதில் திருமணமான கைதிகளுக்காக தனியாக குடிசைகள் உள்ளன. இங்கு சிறைச்சாலையிலேயே திருமணமும் செய்துவைக்கப்படுகிறது. படத்தில் காண்பது அத்தகைய ஒரு ஜோடிதான். இந்தக் குடிசைகளை ஒரு வாரத்திற்கு தொடர்ந்து பயன்படுத்தலாம்.

பிறகு மாதத்தில் சில நாட்கள் வரவழைத்து சந்தோஷமாய் இருக்கலாம். இது தவிர, இங்குள்ள கைதிகள் அருகிலுள்ள கட்டிட வேலைகள், வயல்கள் முதலியவற்றிற்கு சாதாரண தொழிலாளர்களைப் போன்றே அனுப்பப்படுகின்றனர். சில கைதிகள் தையலகம், லாண்டிரி, செருப்புக் கடை, வெத்திலைபாக்குக் கடை வைத்து நடத்துகின்றனர். இதன் மூலம் கிடைக்கும் பணத்தை கைதிகளே அனுபவிக்கலாம்.

— ர. ஜேஸ்வரி

## சிறை வாழ்க்கை

# பைசா நகரத்துக் கோபுரங்கள்




மணியைத் திருப்பி பஸ் ஏற்றி அனுப்பிவிட்டு சௌதாமினி சாலே வழியே மிக வேகமாக நடந்தபோது அதுவரை அவளுக்குத் தெரியாமல் பின்தொடர்ந்து வந்த அவன் அப்போது மட்டும் சற்றுத் தயங்கி நின்ருன். அவள் எங்கே போகிருள் என்பதை அனுமானிக்க முடியாதவனுனன்.

கணவனது ஊர் பக்கம் செல்லாமலும், தாய் வீட்டிற்குத் திரும்பாமலும், இரண்டிற்கும் எதிர்ப்பட்ட வேறு திசையில் அவள் நடப்பதிலிருந்து எதற்கோ தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டு விட்டது புரிய என்ன அது என்று யோசிக்கலானுன்.

யோசனையில் எதுவும் பிடிபடவில்லே. போக வேறு எந்த இடமிருக்கும் என்பதும் தெரியவில்லே. பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு நிறுத்துகிற தைரியமும் வரவில்லே. எங்கே போனுலும் இந்தப் பிரயாணம் முடிகிற வரை அவளைப் பின்தொடருகிற தீர்மானத்தில் நடந்தபோது அவள் ஆள் நடமாட்டமற்ற ஊர் எல்லேயில் திரும்பி, வயல்வெளியைக் கடந்து, சவுக்குத் தோப்பைத் தாண்டி கோடியில் இருந்த அந்தப் பெரிய கிணற்றடியை நெருங்கினதும் அவளின் நோக்கம் புரிய திடுக்கிட்டுப் போனுன் அவன்.

அடி வயிற்றை பயம் கவ்வ, இத்தனை தைரியமாக வாழ்க்கையோடும், மனிதர்களோடும் விடாமற் போராடின இவளாலும் கடைசியில் இந்த முடிவிற்குத்தானு வர முடிந்தது என்கிற சோகம் மனதைத் தொட அவன் கால் பர்லாங் தூரத்தில் ஓடி வந்து கொண்டிருந்தபோது அவள் கிணற்றின் கைப்பிடிச் சுவரில் ஏறி நின்று ஒரு விநாடி தயங்கின நேரத்தில். அவளைத் தடுக்கிற எண்ணத்துடன் பெரிதான குரலில் கத்தத் தொடங்கினுன்.

''சௌதாமினி நில்லு. குதிச்சுடாதே. நான் சொல்றதைக் கொஞ்சம் கேளு...''

திடீரென்று கேட்ட ஆண் குரலில் தன் கணவனுக இருக்கக் கூடுமோ என்ற நம்பிக்கையிலும் எதிர்பார்ப்பிலும் சற்றுத் தயங்கித் திரும்பின அவள் முகம் அவனைப் பார்த்துவிட்ட வெறுப்பிலும், கோபத்திலும், ஆத்திரத்திலும் சுறுக்கம் கண்டது. பின் அவன் பிடியில் அகப்பட்டுவிடக் கூடாதென்ற அவசரத்தில் ஒரு தரம் 'தூ' என்று காரித் துப்பிவிட்டு பெருத்த சத்தத்துடன் நீரில் குதித்துவிட்டாள்.

தன் குரலுக்கு அவள் கட்டுப்படமாட்டாள் என்பதை உணர்ந்து, அவளது அந்தச் செய்கையை எதிர்பார்த்தே இருந்தானுகையால் அடுத்த ஒரே நிமிடத்தில் கிணற்றை நெருங்கின அவன் சட்டையை மட்டும் கழற்றி விசிறிப் போட்டுவிட்டுத் தானும் உள்ளே குதித்தான்.

அதற்குள் நீரில் மூழ்குவதும், வெளியில் வருவதுமாக நிறைய தண்ணீரைக் குடித்திருந்த போதிலும் நினைவு முற்றிலும் தப்பாமலிருந்த அவள் தன்னை நெருங்கின அவனது முகத்தையும், மார்பையும், கைகளையும் விரல் நகங்களால் கீறிக் காயப்படுத்திஞள். தண்ணீரில் மட்டுமில்லாமல், அவளுடனும் போராடவேண்டிய நிலேயில் மிகப் பொறுமையாகவே அவளை நீரில் மூழ்கவிடாமல் தடுத்துக் கொண்டிருந்த அவன், அதிக அளவு தண்ணீர் மூக்கிலும் வாய்வழியாகவும் உள்ளே போய் நினைவு தடுமாறினதும் அவளைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு, இடிந்து, பாசி படர்ந்து கிடந்த கிணற்றின் படிகளில் தள்ளாடி மேலே ஏறி வந்தான்.

சற்று ஒதுக்குப்புறமாக மரத்தடி மணலில் அவளைப் படுக்க வைத்து, அவள் நகத்தால் கீறின இடங்களில்



''நான் இதைப்போல் இரண்டு மாதம் சமைத்தால் எனக்கு என்ன கிடைக்கும்?''

''இரண்டு மாதம்கூட வேண்டாம், பதினைந்து நாட்கள் சமைத்தாலே, என் 'லைஃப் இன்ஷ்யூரன்ஸ்' உனக்குக் கிடைக்கும்!''

— என். சரோஜா, கல்கத்தா-29

ஏற்பட்ட எரிச்சலில் ஒரு வினடி பற்களைக் கடித்துக்கொண்டு நின்ருன். பின் அந்த எரிச்சலே மறந்து தனக்குத் தெரிந்த முதலுதவிகளாக அவளைக் குப்புறப் புரட்டி கால்கள் இரண்டையும் சற்றே மேலே தூக்கி முதுகுப் பாகத்தை அழுத்தி உள்ளே போயிருந்த நீர் முழுவதையும் மூக்கின் வழியாகவும், வாய் வழியாகவும் வெளியேற வைத்தான்.

பின் உடைகளைத் தளர்த்தி கை, கால்களைத் தன் உள்ளங்கையால் தேய்த்து சூடேற்றின பத்து நிமிடங்களுக்கெல்லாம் அவள் கண் விழித்துப் பார்த்தாள். முதல் சில நிமிடங்களுக்கு எதுவும் புரியாமற் போனலும் பின் அவனது உருவம் கண்ணில் பட, மனதில் பதிந்து மூளையையும், நினைவையும் மின்சாரமாகத் தாக்க, சடாரென்று எழுந்து உட்கார்ந்து கொண்டாள். களைப்பும், வேதனையும் நிரம்பிய குரலில் மிக நிதானமாகப் பேச ஆரம்பித்தாள்:

''நீ என் வாழ்க்கையைத்தான் நாசமாக்கினேன்னு பார்த்தால் இப்ப சாகக்கூட விடாம ஏன் இப்படி சித்திர வதை செய்யறே...?''

அவளின் குரல் உடைந்து அழுகையில் முடிய அவன் அதற்கு பதில் சொல்ல இயலாதவனுகத் தவித்தான். தான் சொல்ல நினைத்தது, நினைப்பது எதுவும் வார்த்தைகளில் வராமற் போக, எப்படி, எதைச் சொல்லி இவளை நம்ப வைக்க முடியும் என்ற தவிப்பில் கீழ் உதட்டைக் கடித்துக்கொண்டு ஒரு வினடி கண்களை மூடி ஆயாசமாக நின்ருன். பின் கண்களைத் திறந்து அவளைப் பார்த்த போது பார்வை கெஞ்சலாயிற்று.

''திரும்பத் திரும்ப நான் என்ன சொல்ல முடியும் சௌதாமினி... என்னை மன்னிச்சுடுன்ற ஒரே வார்த்தையைச் சொல்லித்தான் கெஞ்ச முடியும். அதே வார்த்தையைத்தான் இப்பவும் சொல்றேன். தயவு செய்து என்னை மன்னிச்சுடு. என் காரணமாக எப்படியெல்லாமோ கஷ்டப்பட்டு கடைசி முடிவாக நீ சாவைத் தேடிக் கிறதை என்னால அனுமதிக்க முடியாது. நீ நம்பினலும், நம்பாமற் போனலும் சரி, அன்னி ராத்திரியிலிருந்து இது வரை நான் தூங்கலே. சரியாகச் சாப்பிடலே. உன்னையே நினைச்சு நினைச்சு ஹிம்சை பட்டுக்கிட்டிருக்கேன். உன்னை அடைஞ்ச என் முறை தகாதது, தப்பானது, மன்னிக்க முடியாததானலும், உன் மேல மனசுக்குள்ள எனக்கு ஏற்பட்டிருக்கிற அன்பும், பாசமும் ரொம்ப ரொம்ப நிச்சயமானது; சத்தியமானது. அதுல துளிக் கூட பொய் இல்லே. உன்னைப் பார்த்தப்புறம் நான் நிறையவே மாறிப் போயிருக்கேன. பழைய ஆக்ரோஷம், சமூகத்தின் மேல் எனக்கேற்பட்ட வெறுப்பு, பழி வாங்குகிற எண்ணம் எல்லாம் போய், மூர்க்கத்தனம் முழுசும் அடங்கி பொறுப்புள்ள மனுஷனுக மாறி இருக்கேன். திருட்டுத் தொழிலே விடடுட்டு கவர்மெண்ட் உதவியோட மெட்ராஸ்ல சின்னதாக ஒரு கடை கூடப் போடப் போறேன்...''

அவளின் பேச்சைக் கேட்டு தன் வெறுப்பு இன்னமும் அடங்காதவளாகவே சொன்னுள் அவள்:

''நீ என்ன போட்டா எனக்கென்ன. எப்படி மாறின என்ன. அது எந்த விதத்துல எனக்கு ஒத்தாசை செய்யப் போகுது? பாழாய்ப்போன என் வாழ்க்கையை நல்லபடியாக்கப் போகுதா? இல்லே, என் வீட்டுக்காரரோட என்னை சேர்த்து வைக்கப் போகுதா? அதுவுமில்லாட்டிப்போன எனக்கேற்பட்ட இந்த அவமானமும்

தலைக்குனிவும் மறையப் போகுதா? இதுல எது நடக்கப் போவுது? இன்னும் எத்தனைத் தலைமுறைக்கும் பேசப் படப்போற விஷயம்தானே இது? எப்போதும் மாருத, மாற்றவே முடியாத களங்கம்தானே நீ எனக்கு ஏற்படுத்திக் கொடுத்தது...?''

அவள் அழுகையின் நடுவில் குமுறிக் குமுறி சொல்லி முடித்ததும் அவன் மிகவும் உணர்ச்சி வசப்பட்டவனாக அதுவரை நின்றுகொண்டே பேசினவன் சடாரென்று அவளெதிரில் உட்கார்ந்து அவளது இரண்டு கைகளையும் சேர்த்துப் பற்றிக் கொண்டான்.



அதைக் கொஞ்சமும் எதிர்பார்க்காத அவள் அவன் கரத்தை மிகவும் அருவருப்பாகவும், ஒரு அசுர பலத்துடனும் உதறித் தள்ளினுள். பின் ஆக்ரோஷத்தோடு அவனைப் பார்த்தாள்:

''சீ...மறுபடியும் என்னைத் தொட என்ன தைரியம்டா உனக்குப் பாவி! ஒரு தடவை தொட்டு நான் படற பாடு போருதா? ஊர் சிரிச்சு, உலகம் சிரிச்சு, பேப்பர் பேப்பரா போட்டோவோட நியூஸ் பரவி, கட்டின வீட்டுக்காரனேட பெத்த அம்மா, அப்பாவும் சேர்ந்து 'எங்க வீட்டுப் படி ஏருதே'ன்னு விரட்டி அடிக்கிறது போருதா? திரும்பவும் என்னைத் தொட உன் நெஞ்சு எவ்வளவு கல்லாகிப் போயிருக்கணும்? உனக்குள்ளே கொஞ்சம்கூட ஈவு, இரக்கம், கருணை எதுவுமே கிடையாதா? இருந்திருந்தால் அன்னிக்கு என்னை 'ஒண்ணும் செய்யாதே'ன்னு கை கூப்பி கும்பிட்டேனே— அப்போதே என்னை எதுவும் செய்யாமல் விட்டிருக்க மாட்டியா? அப்படி விட்டிருந்தால் நான் இந்த நிலைமைக்கு வந்திருப்பேனு? ஊசி குத்தற மாதிரி ஒவ்வொரு வார்த்தையா கேட்டுக்கிட்டிருப்பேனு?

உன்னை மாதிரி பாவிகளுக்கு பொம்பளேங்க உடம்புதானே தெரியறது. அந்த உடம்பில் வலுவில் லாமல் போறதாலதானே சுலபமாக் கெடுத்துட முடியறது. ஆனு எங்க மனசைக் கெடுக்கிறது அவ்வளவு சுலபமில்லே. அதைக் கெடுக்க யாராலயும் முடியாதுன்றது யாருக்குத் தெரியறது? அதைப் பத்தி யார் கவலைப்படருங்க? கட்டினவனே படாத போது எங்கிருந்தோ வந்த பத்திரிகைக்காரங்களா படப் போருங்க? ஒரு பெண் அநியாயமாகக் கெடுக்கப்பட்டதை பக்கம் பக்கமா போட்டோ போட்டு எழுதருங்களே – இதே இவங்க வீட்டுப் பொண்ணுங்களுக்கு இந்த கதி ஏற்பட்டிருந்தா இப்படி செய்திருப்பாங்களா? யார் வீட்டுப் பொண்ணே நமக்கென்ன வந்ததுன்னுதானே இப்படி செய்யருங்க! ஏதோ எங்க மேல பரிதாபப்படற மாதிரி விஷயத்தை எழுதருங்களே – அதுக்கப்புறம் அந்தப் பொண்ணேட கதி என்ன, அவள் என்ன செய்வாள்னு யாராவது நினைச்சுப் பார்க்கருங்களா? இதற்கு என்ன செய்யறதுன்னு யோசிக்கிருங்களா?

என்னை மாதிரி கட்டுப்பாட்டோட வளர்ந்த ஒரு கிராமத்துப் பொம்பளைக்கு இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டதுன்னு அவளுடைய நிலைமை என்னன்னு யார் கவலைப்படருங்க? இந்த மாதிரி ஒரு விஷயம் நடந்ததுன்னு, அதுல ஒண்ணுமே அறியாத ஒரு அப்

டி. வி.யில் ஒளிபரப்பப்பட்ட
## ஸத்காதி படத்தின் கதை என்ன?

ஒரு அரிசனத் தம்பதி, தங்கள் மகளுக்குத் திருமணம் செய்ய முடிவு செய்து, அதை நடத்தி வைக்க ஒரு பிராமணரை அழைக்கத் தீர்மானிக்கின்றனர். மனைவி வீட்டைச் சுத்தப்படுத்துவதில் ஈடுபட கணவன் பிராமணரை அழைக்கச் செல்கிருன்.

வெறும் கையோடு போகக்கூடாதெனக் கருதி, விடியற்காலை கழனிப் பக்கம் சென்று புல்லறுத்து, புல் கட்டுடன் செல்கிருன். பிராமணர் திருமணத்தை நடத்தி வைக்க சம்மதிக்கிருர். ஆனுல் அரிசனத் தந்தையிடமிருந்து இதற்காகப் பணம் எதுவும்





கிடைக்காதென்பதை அறிந்து அவனை தன் வீட்டு வேலைகளைச் செய்யச் சொல்கிறார்.

வேறு வழியின்றி அவன் நாள் பூராவும் சாப்பாடுகூட இல்லாமல் வேலை செய்கிறான். பிராமணரோ பூஜையை முடித்து, சாப்பிட்டபின்னர் இளைப்பாறுகிறார். தன் மனைவியிடம், அவனுக்கு சாப்பாடு இருந்தால் போடுமாறு கூறுகிறார்.

ஆனால் அவளோ ஏதும் இல்லையென்று கூறிவிடுகிறாள்.

உடல் நலம் குன்றியிருந்த அரிசன் சாப்பிடாமல் நாள் பூராவும் வேலை செய்ததால் களைப்புற்றுக் கீழே விழுந்து இறந்துவிடுகிறான். பிணத்தை அப்புறப்படுத்த வரும் கிராமவாசிகளை சமூக நல ஊழியர் ஒருவர் தடுத்துவிடுகிறார். அரிசனனின் பிணம் அதே இடத்திலேயே மூன்று நாட்கள் கிடக்கிறது. பிராமணரும், அவர் மனைவியும் இதைக் கண்டு பயப்படுகிறார்கள். அன்றிரவே பிராமணர் அந்தப் பிணத்தை இழுத்துச் சென்று கிராம எல்லைக்கு அப்பால் தள்ளிவிடுகிறார்.

---

பாவிப் பொண்ணோட வாழ்க்கை பாழாகுதே. அவ கடைசி முடிவா தற்கொலையைத் தேடி ஓடறாளே. இதுக்கெல்லாம் ஒரு முடிவு கட்டணும்னு யார் யோசிக்கிறாங்க? இல்லே, சட்டமும், நீதியும்தான் இதுக்கு வழி காட்டுதா? உன்னை மாதிரி இரக்கமே இல்லாமல் இப்படிப்பட்ட தப்பைப் பண்ற கொடும்பாவிகளைப் பிடிச்சு தூக்குத் தண்டனை கொடுத்தால் இப்படிச் செய்ய எவனாவது துணிவானா? எவனுக்காவது அந்தத் தைரியம் வருமா...?

அதையெல்லாம் யாரும் செய்யறதில்லே, யோசிச்சுக்கூடப் பார்க்கிறதில்லே. அவங்களால் ஆன காரியம் பத்திரிகையில பெரிசா எழுதிடறது. ரொம்ப சாமர்த்தியமா போட்டோ எடுத்துப் போட்டுடறது. பின் அதைப் பத்தி மறந்தே போயிடறது. அதைப் படிச்ச இந்த ஜனங்க மட்டும் என்ன செய்யறாங்க? திருமணமான 18 வயது அழகி தூக்கிப் போய் கற்பழிப்புன்னு கொட்டை எழுத்துல வந்தால் சுவாரஸ்யமா படிக்கறாங்க. அந்தப் பெண் தங்க வீட்டைச் சேர்ந்தவளாக இல்லாத பட்சத்தில் படிக்கிற அந்த விநாடி அனுதாபப்பட்டு பின்பு அவங்களுக்கும் இது மறந்து போகுது. இல்லே, தினம் தினம் இந்த மாதிரி

ரண விஷயமாகிப் போகுது. மனசு இதுக்குப் பழக்கமாகி மரத்துப் போகுது...

ஜனங்களே இதைப் பத்தி கவலைப் படாதபோது அரசாங்கமும், அதை ஆள்கிறவங்களும் ஏன் கவலைப்படப் போறாங்க? இந்த நாட்டை ஒரு ஆம்பிளை கூட இல்லே, பொம்பளை தான் இந்த ராஜ்ஜியத்தை ஆள்றாங்க. அவங்களுக்குக் கூடவா என்னை மாதிரி அப்பாவிப் பொண்ணுங்களுடைய கஷ்டம் தெரியலே? இதுக்கு ஒரு நடவடிக்கை எடுக்கணும்னு தோணலே? அவங்களுக்கே தோணாதபோது மத்தவங்க யாருக்குத் தோணப்போவுது? யார் இதைப் பெரிய விஷயமா நினைச்சு அக்கறைப் படப் போறாங்க, சொல்லு...?''

ஆவேசமும், கோபமும் தொனித்தாலும் அந்தப் பேச்சு நியாயமானதாக, தார்மீகக் கோபமுள்ளதாக, கருத்துத் தெளிவோடு வெளிவந்ததைப் புரிந்துகொண்டு அவளது கேள்விகளுக்குத் தன்னால் மட்டுமின்றி வேறு யாராலுமே பதில் சொல்ல முடியாது என்ற உணர்வுடன் மிகவும் வெட்கமும் வேதனையும் பட்டவனாக அவன் தலைகுனிந்து உட்கார்ந்திருப்பதைப் பார்த்து ஒரு ஆழமான பெருமூச்சுடன் மீண்டும் தொடர்ந்தாள் அவள்...

# சரிபடுத்தக்கூடிய முனைகள்



கச்சிதமா சிக்குனு அணிஞ்சுக்கிறதுக்கு அதிலே சரிப்படுத்தக்கூடிய வசதியான முனைகள் இருக்கு. பழைய வளைய நுனிகள் உள்ள நேப்கினைவிட ரொம்பச் சிறப்பானது புதிய :.பெமினெக்ஸ்.

இப்பச் சொல்லுங்க! முழுமையான பாதுகாப்பை உணர்கிறீர்கள் அல்லவா? அந்த 5 நாட்களும் மாதத்திலே மத்த நாட்கள் மாதிரியே உங்களுக்குத் தோணும்.

உங்கள் நலத்தை கவனத்திலே வைச்சு தயாரிக்கப்பட்டிருக்கு புதிய :.பெமினெக்ஸ் : வீட்டிலேயோ, வெளியிலேயோ எங்கேயிருந்தாலும் உங்களுக்கு பாதுகாப்பு அளிக்கிறது, புதிய :.பெமினெக்ஸ்.

கட்டுபடியாகிற விலையிலே கச்சிதமான தயாரிப்பு- எப்போதுமே உங்கள் நம்பிக்கைக்குரியது புதிய :.பெமினெக்ஸ்.






புதிய

**:.பெமினெக்ஸ்** பாதுகாத்து சுகமளிக்கிறது

Johnson & Johnson

சௌதாமினியின் குரலில் கோபம், ஆத்திரம், வெறுப்பு எல்லாம் அடங்கி ஒருவித இயலாமை மட்டுமே வெளிப்பட்டது.

''இவ்வளவு பேசறேனே, எனக்கு மட்டும் இதுக்கு முடிவு தெரியுதா? ஓடி வந்து உயிரைப் போக்கிக்கிறது தான் ஒரே வழியாகப் படுது. இதற்கெல்லாம் காரணம் நம்ம விதின்னு கண் முன்னே தெரியாத ஒன்றின் மீது பாரத்தைப் போட்டுட்டு 'நம் தப்பில்லாத ஒரு விஷயத்துக்கு அநியாயமாகத் தண்டிக்கப்படக் கூடாது'ன்ற உறுதியோடயும், பிடிவாதத்துடனும் வீட்டு மனுஷங்களையும், வெளி ஆட்களையும் எதிர்த்து நின்னு – கடைசியில இதுக்கு மேல எதிர்க்க முடியாதுன்ற நிலைமை வந்தப்புறம் – என் வயத்துல வளர்ற குழந்தைக்குத் தான் தகப்பனில்லேன்னு கட்டின கணவனே நம்புற துர்ப்பாக்கிய நிலைமைக்கு ஆளாகி வீட்டை விட்டும் அனுப்பப்பட்டபின்பு – பெத்தவங்களும் நிராகரிச்ச பின்னால் இந்த முடிவுக்கு வர்றதைத் தவிர வேறு எந்த முடிவு இருக்க முடியும்...?

ஒரு வேளை உன்னால காப்பாற்றப் படாமல் கிணத்துக்குள்ள பொணமாக மிதந்திருந்தால் நாலஞ்சு நாள் கழிச்சு நாத்தமடிச்சு, இந்தப் பக்கம் வர்ற மாட்டுக்காரப் பசங்க யாராவது பார்த்துட்டுப் போய் போலீசுக்குச் சொல்லியிருக்கலாம். போலீஸ் வந்து பொணத்தைக் கைப்பற்றியிருக்கும். திரும்பவும் பத்திரிகைக்காரங்க வந்திருப்பாங்க. 'கற்பழிக்கப்பட்ட சௌதாமினி கிணற்றில் குதித்துத் தற்கொலை'ன்னு கொட்டையாக எழுதி மறுபடியும் என் போட்டோவைப் போட்டிருப்பாங்க. அதோடு என் கதை முடிஞ்சு போயிருக்கும். சௌதாமினின்ற ஒரு தனி மனுஷியின் கதை தான் முடியுமே தவிர இந்தப் பிரச்



# 19 பைசா நகரத்துக் கோபுரங்கள்

இந்துமதி

னைக்கு முடிவு ஏற்பட்டிருக்காது. இந்த ஒரு சௌதாமினி மாதிரி இன்னும் எத்தனை சௌதாமினிகளோ! நீயே இன்னும் எத்தனை பேரை இப்படிப் பண்ணி அவங்க வாழ்க்கையைப் பாழாக்கி நிர்க்கதியாக நிற்க வச்சு தற்கொலை பண்ணிக்கும்படியா செய்யப் –''

முகத்தில் தணலை வாரி விசிறனைதைப் போல் துடித்துப் போன அவன் சடாரென்று நிமிர்ந்தான். முகமும், கண்களும் அந்த அனலில் சிவந்து போய் குரல் உயர்ந்து சற்றே ஆக்ரோஷமாக வெளிப்பட்டது.

''வில் யு ப்ளீஸ் ஸ்டாப் டாக்கிங் லைக் தட்'' என்று ஆங்கிலத்தில் கத்தத் தொடங்கி பின் தமிழிலேயே தொடர்ந்தான்.

''தயவு செய்து கடைசியில சொன்ன அந்த வார்த்தைகளை மட்டும் வாபஸ் வாங்கிக்க சௌதாமினி. நீ கேட்ட மற்ற கேள்விங்க எல்லாம் ரொம்ப நிஜம், நியாயமானதும் இது மட்டும் தப்பு. ஒரு தடவை தப்பு செய்திட்டு தவிக்கிற நான் மறுபடி கனவுல கூட அந்தத் தப்பை செய்ய நினைக்க மாட்டேன். உனக்கு செய்த தப்புக்குப் பிராயச்சித்தமா என்ன செய்யலாம், எப்படி உன் வாழ்க்கை



யைச் சரிபண்ணலாம்னு உன் வீட்டுத் தெருவில நாயாக அலைஞ்சு உன் பின்னடியே உன்னைத் தேடிக்கிட்டு நிழல் மாதிரி இதுவரை ஒடிவந்து கிணத்துல கூடவே குதிச்சு காப்பாற்றி 'உனக்கு வாழ்வளிக்கிறேன்'னு சொல்லி தைரியமா எதிரில் நிக்கறேனே, அப்போகூட என் மீது நம்பிக்கை வரலியா சௌதாமினி?

அவனுடைய உருக்கமான கேள்விக்கு அவளிடமிருந்து விரக்தி கலந்த சிரிப்பு ஒன்று வெளிப்பட்டது.

“வாழ்வளிக்கறேன்னு இன்னொரு தரம் சொல்லாதே. மீண்டும் எனக்கு வாழ்வளிக்க என் வீட்டுக்காரரைத் தவிர வேற யாராலயும் முடியாது. அவரோ அதுக்கு முன்வரப்போறதில்லே. இன்னும் ரெண்டு மாசமோ, நாலு மாசமோ இந்த சோகம் லேசாக அடங்கக் காத்திருந்து வேற ஒரு பொண்ணைப் பார்த்து கல்யாணம் பண்ணிக்கப் போறார். என் நினைவே வராமல் – வந்தாலும் சுலபமா அடக்கிட்டு அவளோட சந்தோஷமா குடும்பம் நடத்த ஆரம்பிப்பார். அதனாலே எனக்கு வாழ்வளிக்க முன்வர்றதா சொல்லாதே. வேணும்னா இரண்டு வேளை சோறு போட்டு, வருஷத்துக்கு இரண்டு புடவை எடுத்துத் தந்து உன்னைக் காப்பத்தறேன்னு மட்டும் சொல்லு. அதுதான் இனிமே உனக்கோ, எனக்கோ சாத்தியமாகுமே தவிர வேற எதுவும் சாத்தியப்படாது–”

“சரி. அதைச் செய்கிற சந்தர்ப்பத்தையாவது நீ எனக்குத் தரக்கூடாதா சௌதாமினி?” என்று கெஞ்சுகிற மாதிரி அவசரமாகக் குறுக்கிட்டான் அவன்.

“உன்னை – உன் குழந்தையை – உன் குழந்தைன்னுதான் நான் சொல்றேன். ஏன்னா உன் வீட்டுக்காரனோ, உலகமோ அதை நம்பாமற்போனாலும் நான் நம்பறேன். அதேமாதிரி நீயும் என்னை நம்பணும்னு எதிர்பார்க்கறேன். ஒரு தடவை தப்பு பண்ணினவன் எப்போதும் அதே தப்பைப் பண்ணுவான்றது அர்த்தமில்லே. அவன் தன் தப்பை உணரலாம். திருந்தலாம். திருந்தினவனுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்து அவனை நல்லவனாக்கக் கூடாதா? மன்னிச்சு நம்பக் கூடாதா? சொல்லு சௌதாமினி.”

---

☐ கல்கத்தாவில் புகழ்பெற்ற பிஸ்கட் கம்பெனி பெயர் 'கொலே' (Kolay).

— சந்திரா வெங்கடேசன், கல்கத்தா-13

ஹோட்டல் முதலாளி:
''ஏழு ரூபாய்க்கு டிபன் சாப்பிட்டுட்டு, பணம் இல்லேயா? இந்தாப்பா இவன கொல்லே வழியா அடிச்சுத் துரத்து.''

வந்தவன்:
''சார், நான் நல்ல குடும்பத்துல இருந்து வரேன் சார்.''

ஹோட்டல் முதலாளி:
''சரி, அப்ப வாசல் வழியா துரத்து!''
- நாணு, கல்கத்தா-26

அந்தக் கேள்வியின் நிஜம் நெஞ்சைத் தொட அவள் சாந்தமான ஒரு பார்வையில் நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்தாள்.

''சரி, நீ படிச்சவன். கொஞ்சம் மனசாட்சி இருக்கிறவன். அதனுலே உன் தப்பை உணர்ந்து இப்படி என்னைத் தேடிக்கிட்டு வந்து காப்பாத்தறேன்னு கெஞ்சறே. ஆனு என்னை மாதிரி தினம் ஒரு பொண்ணுவது கற்பழிக்கப்பட்ட செய்தி பேப்பர்ல வருதே, அவங்களுக்கெல்லாம் யார் இப்படி முன்வருவாங்க? அவங்க கதியெல்லாம் என்ன ஆற -''

''அவங்களுக்கெல்லாம் கூட நானே முன்வர முடியுமா சௌதாமினி?'' என்று சற்றே கோபமும் ஒரு எரிச்சலும் எட்டிப் பார்க்கிற குரலில் குறுக்கிட்டான் அவன்.

''நான் என் தப்பை உணர்ந்த மாதிரி தவறு செய்தவங்க தாங்களா திருந்தினுல்தான் உண்டு. இல்லே நீ சொன்னது போல இந்தத் தப்பை செய்தவனுக்கு தூக்குத்தண்டனைன்னு கொடுத்தால்தான் உண்டு. ஆனுல் அதுவும் அவ்வளவு சுலபமில்லே. அப்போதும் சாட்சி, சட்டம்னு நிறைய விஷயங்கள் குறுக்கே வந்து தப்பு செய்தவனைக் காப்பாத்திடும். சில சமயங்களில் நம்ம சட்டங்கள் நமக்கே பாதகமாக இருக்கிறதும் உண்டு சௌதாமினி.

அதனுலே என்னைப் பொறுத்த வரை என் தப்பை உணர்ந்து நான் அதுக்குப் பிராயச்சித்தம் தேடறேன். வெறும் பிராயச்சித்தமா மட்டுமில்லாமல் மனசுபூர்த்தியாகக் கூடத்தான் நான் இதைச் செய்ய முன்வரேன். காலம் பூரா உன்னேயும், உன் குழந்தையையும் வச்சு சந்தோஷமாக் காப்பாத்த தயாராக இருக்கேன். அந்தக் குழந்தை ஆணே, பெண்ணே அதுக்கு நான் தகப்பனுக இருக்கக் காத்துக்கிட்டிருக்கேன். ஒரு தீகப்பன் எதையெல்லாம் செய்வானே அவை அத்தனையையும் செய்யத் தயாராக இருக்கேன்.

இத்தனை சொல்ற நான் கூடவே இன்னென்றையும் சொல்லிடணும்னு நினைக்கறேன். இந்த சமூகத்துக்கும், அதை உருவாக்கின ஜனங்களுக்கும் முன்னுலே அதுக்குத் தகப்பனுக மட்டும் இருப்பேனே தவிர மற்றபடி... மற்றபடி...உனக்கு...உன்னை நான் தொடக் கூட மாட்டேன். உனக்கு விருப்பமில்லாத காரியம் எதையும் செய்யமாட்டேன். உன்னை என் கூட வச்சுக் காப்பாத்தறேன் - ஒரு ஆதரவாக நிக்கறேன்ற ஒரு திருப்தியோட அதையே என் வாழ்க்கையின் சகல சந்தோஷமாகவும் நினைச்சு காலம் முழுதையும் கடத்திடுவேன். ஆனு நீயா ஒரு வேளை மனசு மாறி என்னை ஏத்துக்கிட்டா - அப்படி ஒரு அதிர்ஷ்டம் எதிர்பாராத விதமாக எனக்குக் கிடைக்கும்னுல் அதுக்காக நான் காத்துக்கிட் -''

''நிச்சயமா அப்படி ஒரு சந்தர்ப்பம் வரவே வராது. என் மனசு ஒரு போதும் மாருது. அந்த மாதிரி உன்னை நான் நினைக்கவோ, ஏத்துக்கவோ மாட்டேன். அதனுலே அந்த எண்ணத்தோட, அந்த எதிர்பார்ப்புல நீ என்னைக் காப்பாத்த நினைச்சியானுல் தயவுசெய்து அந்த நினைப்பை மறந்துடு. என்னை இப்படியே என் வழியில போக விட்டுடு. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன்...''

அவளின் குரலில் தொனித்த உறுதியும், எண்ணங்களின் தீர்க்கமும் அவன் மனதை வருத்தப்படுத்தி ஓரளவு ஏமாற்றமடையச் செய்தாலும், அவன் அது எதுவும் குரலில் வெளிப்பட்டுவிடாமல் மிகவும் ஜாக்கிரதையாகப் பேசினுன்.

''சத்தியமா அந்த எண்ணத்தில் நான் உன்னைக் காப்பாற்ற நினைக்

கலே. கடைசி வரைக்கும் உன் மேல என் விரல் நகம் கூடப் படாமல் என் னுல வாழ்ந்து காட்ட முடியும். அந்த நம்பிக்கை உனக்கு ஏற்பட்டால் நீ என்கூட வரலாம் மினி. இப்படியே அடுத்த பஸ்ஸைப் பிடிச்சு நாம் மெட் ரூஸ் போகலாம். சின்னதாக ஒரு வீடு வாடகைக்கு எடுத்து குடியிருக்க லாம். கடைசி மூச்சு ஓடற வரை உனக்கும், உன் குழந்தைக்கும் நான் பாதுகாப்பாக நிற்பேன். இதை நம் பற பட்சத்தில் எழுந்து என்கூட நட. இதில் ஒரு துளி அவநம்பிக்கை ஏற் பட்டதுன்னுகூடச் சொல்லிடு. நான் பேசாமல் வந்த வழியிலேயே திரும்பிப் ோயிடறேன். அதுக்கு அப்புறம் நீ ாக்கு எந்த முடிவு சரின்னு படுதோ அதைத் தேடிக்க. உனக்கு நான் கால் மணி நேரம் டயம் தரேன். நல்லா யோசிச்சு ஒரு முடிவுக்கு வா. அது வரைக்கும் உன்னே நான் தொந்தரவு செய்யலே. உன் எதிர்ல கூட நிக்கலே. கொஞ்சம் தள்ளிப்போய் அதோ அந்த மரத்தடியில் நின்னுக்கறேன். பதி னைஞ்சு நிமிஷத்துக்கப்புறம் உன் குரல் கேட்டால் திரும்பறேன். இல் லேன்னுல் அப்படியே நடந்து போயிட றேன்...''

உணர்ச்சி வசப்பட்டவனுகச் சொல்லி முடித்து அவளை ஏறிட்டுக் கூடப் பார்க்காமல் மிக நிதானமாக நடந்து போய் விழுதுகளுடன் பெரிதா கப் படர்ந்திருந்த அந்த ஆலமரத்தடி யில் நின்று அவளின் குரலுக்காகக் காத்திருக்கத் தொடங்கின அந்த விநாடி அவனுக்கு ஒரு யுகமாகத் தோன்ற ஆரம்பித்தது...

(முற்றும்)

---




வங்கக் கடலில் இருந்து கிழக் காக 30 மைலில் உள்ளது.

உயரம் – கடல் மட்டத்தைவிட 17 அடி. அதாவது 5.3 மீட்டர்.

சராசரி மழை – ஓராண்டிற்கு 1,605 மில்லி மீட்டர்.

வெப்பநிலே – அதிகபட்சம் 48.3 டிகிரி சென்டிகிரேட். குறைந்தபட்சம் 10 டிகிரி சென்டிகிரேட்.

அகலமான சாலே – சௌத் அவின்யூ – அகலம் 150 அடி. நீளமான சாலே – ஆச்சாரிய ஜெகதீஸ் போஸ் சாலே – நீளம் 4 மைல்.

உயரமான கட்டிடம் – சட்டர்ஜி இன்டர்நேஷனல் சென்டர் – 24 மாடிகள்.

33,000 ஊழியர்கள் கல்கத்தா மாநகராட்சியில் பணியாற்றுகிருர்கள்.

1814-ல் கல்கத்தா டவுன் ஹால் கட்டப்பட்டது. அதே ஆண்டில் சாலே அபிவிருத்திக்கு என்று பணம் சேர்க்க லாட்டரிச் சீட்டு அடிக்கப் பட்டது.

1818-ல் குடிநீருக்கென சாலே களில் குழாய்கள் போடப்பட்டன.

1847-ல் நகராட்சிக்கென தேர் தல் முறை அமுல் செய்யப்பட்டது.

1857-ல் சாலேகளில் காஸ் விளக்குகள் எரிய ஆரம்பித்தன.

1905-ல் புகையால் காற்று மாசுறுவதற்கு எதிராகச் சட்டம் இயற் றப்பட்டது.

1924-ல் சித்தரஞ்சன் தாஸ் முதல் மேயராகப் பதவி ஏற்ருர்.

1956-ல் முதல் மின்சார மயானம் அமைக்கப்பட்டது.

– செல்வி







# அபர்ணு பேசுகிறுர்.

சிறு வயதிலேயே நாடக மேடையில் அறிமுகமாகி, பதிமூன்றும் வயதில் படவுலகில் நுழைந்து, கலையா – கல்லூரிப் படிப்பா என்ற பிரச்சினையில் கல்லூரிப் படிப்பை உதறிவிட்டு கலை உலகில் முழுமையாக ஈடுபட்டு இன்று இயக்குனர் பதவிக்கு உயர்ந்திருக்கும் திருமதி அபர்ணு சென் அண்மையில் மகத்தான சாதனை புரிந்திருக்கிறுர்.

தானே கதையை எழுதி '36 சௌரிங்கீ லேன்' என்ற தலைப்பில் ஆங்கிலப் படமொன்றை இயக்கியிருக்கிறுர்.

அண்மையில் கல்கத்தாவில் நடைபெற்ற பிலிம் உற்சவத்தில் இந்தப் படத்தைப் பார்த்த மேல்நாட்டினர்கள் அபர்ணுவைப் பாராட்டினுர்கள். அது மட்டுமல்ல சமீபத்தில் மணிலாவில் நடைபெற்ற திரைப்பட விழாவில் சிறந்த படம் என்று தேர்ந்தெடுக்கப்பட்டு 'தங்கக் கழுகு' விருதையும் பெற்று அபர்ணு சென்னுக்குப் புகழைச் சேர்த்திருக்கிறது இந்தப் படம். இந்திய அரசு பாராட்டாமல் இருந்தால் நன்ருக இருக்குமா? சென்ற ஆண்டின் சிறந்த இயக்குனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறுர்.

8/2 A – அலிப்பூர் பார்க் சாலையில் உள்ள அடுக்கு மாளிகைக் கட்டிடத்தின் எட்டாவது மாடியில் உள்ள அபார்ட்மெண்டுக்குச் சென்றபோது சில புகைப்படக் கலைஞர்களுடன் அமர்ந்து புகைப்படங்கள் பலவற்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருந்தவர் எங்களை வரவேற்று அமரச் சொல்கிறுர்.

வரவேற்பறை கலை அழகுடன் அலங்கரிக்கப்பட்டு அபர்ணுவின் ரசனையை நமக்குப் புலப்படுத்துகிறது.

சொல்லிவைத்தாற் போல பணியாள் டீ கொண்டு வந்து வைக்கிறுர். தேவையைக் கேட்டறிந்து தானே சர்க்கரை போட்டு டீயை வழங்குகிறுர் அபர்ணு.

''36 சௌரிங்கீ லேன்' எடுக்கக் காரணம் என்ன?''

''36 சௌரிங்கீ லேன்' படத்தின் மையக் கருத்து சில காலமாகவே என் உள்ளத்தில் நீறு பூத்த நெருப்பு போல

# கூழ் - மீசை - புழு

''ஸ்ரீமதி, உனக்கு நேஷனல் பாங்கிலேருந்து 'ரூரல் கிரெடிட் ஆர்கனேசர்' வேலேக்கு இண்டர்வியூ லெட்டர் வந்திருக்கா?'' சேகர் கேட்டான்.

''ஆமா, உனக்கு எப்படித் தெரியும்?''

''எனக்கும் வந்திருக்கு. நம்ம ரெண்டு பேருக்கு மட்டுந்தான் இண்டர்வியூ லெட்டர் அனுப்பியிருக்காங்க. ஆகையாலே நமக்குள்ளே ஒருத்தருக்கு இந்த வேலே நிச்சயம்.''

''அப்படியா?''

''ஆமா. என் சிநேகிதன் ஒருத்தன் அந்த பாங்கித் தலேமை ஆபீசிலே வேலே பார்க்கிறுன். அவன்தான் சொன்னுன், இந்த வேலேக்கு மனுப் போட்டவங்களிலே நாம ரெண்டு பேர்தான் ரூரல் எகனுமிக்ஸ்லே எம். ஏ. முதல் வகுப்பிலே பாஸ் பண்ணினவங்களாம். அதனுலே நம்ம ரெண்டு பேரை மட்டும் இண்டர்வியூவுக்குக் கூப்பிட்டிருக்காங்க.''

''இது எப்படிப்பட்ட வேலே, எங்கே போஸ்ட் பண்ணுவாங்க, இதெல்லாம் விசாரிச்சியா?''

''விசாரிச்சேன். பழங்குடி மக்கள் வசிக்கிற சில கிராமங்களே டெவலப் பண்றதுக்காக இந்த பாங்கியிலே ஒரு திட்டம் போட்டிருக்காங்களாம். அதுக்காக அந்தப் பகுதியிலே ஒரு பிராஞ்சு திறந்திருக்காங்க. இப்போ தேர்ந்தெடுக்கப் போகிற ரூரல் கிரெடிட் ஆர்கனேசருக்குத் தலேமை ஆபீசிலே ஒரு மாதப் பயிற்சி கொடுத்துவிட்டுப் பிறகு அந்த பிராஞ்சுக்கு அனுப்பிடுவாங்களாம். அங்கே இருந்துகொண்டு சுற்று வட்டாரத்திலே உள்ள கிராமங்களுக்குப் போய் ஜனங்களோட பழகி அவங்களோட தேவைகளேப் புரிந்துகொண்டு அவங்களோட முன்னேற்றத்துக்கு அவசியமான திட்டங்களே வகுத்து அவங்களுக்குக் கடனுதவி சிபாரிசு பண்ணணும். அப்புறம், கொடுக்கப் பட்ட கடன்கள் சரியான முறையிலே, குறிப்பிடப்பட்ட நோக்கத்துக்காகச் செலவிடப்படறதா என்பதையும் பார்க்கணும். கடன் வசூலேயும் கவனிச்

எஸ். கிருஷ்ணமூர்த்தி

கல்கத்தா

சுக்கணும். அலேச்சல் அதிகந்தான். பிரயாணம் செய்ய ஒரு ஜீப்பு கொடுப்பாங்களாம். ஆனல் எல்லா கிராமங்களுக்கும் ஜீப்பிலே போக முடியாது. சைக்கிளிலேயும் சில இடங்களுக்குப் போக வேண்டியிருக்கும். உனக்கு சைக்கிள் விடத் தெரியுமா சுமதி?''

''அதுக்கென்ன, கத்துக்கொண்டாப் போச்சு.''

''இந்த வேலே எனக்குத்தான் கிடைக்கும்னு தோணறது.''

''அதெப்படிச் சொல்றே? இப்பவே ஹெட் ஆபீசிலே வேலே பார்க்கற உன் சிநேகிதன் மூலமாக சிபாரிசு பிடிச்சுட்டியாக்கும்.''

''சே, சே, அதெல்லாம் இல்லே. இந்த வேலே ஒரு பெண்ணுக்கு – அதுவும் கலியாணமாகாத இளம் பெண்ணுக்கு லாயக்கில்லே. நாகரீக வசதிகளில்லாத அந்தக் காட்டிலே வேறே துணேயில்லாமே ஒரு பெண் எப்படி இருக்க முடியும்? இண்டர்வியூ பண்றவங்க இதையெல்லாம் யோசிக்கமாட்டாங்களா? அதனலதான் சொல்றேன், இந்த வேலேக்கு என்னேத்தான் தேர்ந்தெடுப்பாங்கன்னு.''

''ஓகோ, அதுக்காகச் சொல்றியா? அப்படியானல் என்னே இண்டர்வியூவுக்குக் கூப்பிட்டிருக்கவே வேண்டாமே! இண்டர்வியூவுக்குக் கூப்பிட்டு விட்டுப் பிறகு நீ சொன்ன காரண[ம]த்துக்காக என்னே ஒதுக்கினல் அ[து] ரொம்ப அநியாயம்!'' சுமதியி[ன்] குரலில் உணர்ச்சி பொங்கியது.

''என்ன சுமதி, விவாதம் சூட[ா]யிருக்கே!'' என்று கேட்டுக்கொண்[டே] அங்கு வந்தார் சுமதியின் தந்[தை] விசுவம்.

''நான் அந்த பாங்கி வேலேக்[கு] அப்ளே பண்ணியிருந்தேனில்லேயா[?] அதுக்கு இண்டர்வியூ லெட்டர் வந்[தி]ருக்கு. சேகருக்கும் வந்திருக்கு. இந்[த] வேலேக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட[வ] பழங்குடி மக்கள் வசிக்கிற கிராம[ப்] பகுதியிலே தங்கியிருந்துகொண்[டு] வேலேபார்க்கணுமாம். அங்கே பே[ாக்கு] வரவு வசதிகள் கிடையாதாம். கிர[ாமம்] கிராமமா அலேயணுமாம். அதனு[லே] இந்த வேலேக்குத் தன்னேத்தா[ன்] தேர்ந்தெடுப்பாங்கன்னு சேகர் சொ[ல்]ருன். இது என்ன நியாயம், சொ[ல்]லுங்கப்பா!''

''சபாஷ்! தட் இஸ் தி ஸ்பிரிட்!'' என்று சுமதியின் முதுகில் தட்டி கொடுத்தார் விசுவம்.

சேகருக்குப் பிறகுதான் சுமதி[யி]யின் இண்டர்வியூ நடந்தது. இண்ட[ர்]வியூ செய்தவர் பாங்கியின் ஜெனர[ல்] மானேஜர். கிராமங்களின் பொருள[ா]

---




கல்கத்தாவில் பட்டம் பெற்ற வேலேயில்லாதவர்கள் அதிகம். அவர்களேப்பற்றிய சிறு துணுக்கு சொல்லப்படுவது உண்டு.

ஒரு பட்டதாரி இளேஞர் வேலே தேடித் தேடி ஒய்ந்து கடைசியில் ஒரு சர்க்கஸ் கூடாரத்தின் அருகில் வந்தார்.

சர்க்கஸ் கூடாரத்தின் வாயிலில் உள்ள அறிவிப்பைக் கண்ட அவரின் விழிகள் ஆச்சரியத்தால் விரிந்தன. ''பட்டதாரி இளேஞர்கள் உடனே தேவை. விபரங்களுக்கு உள்ளே மானேஜரை அணுகவும்'' என்பதுதான் அந்த அறிவிப்பு.

ஆர்வத்துடன் உள்ளே சென்று விசாரித்தார் இளேஞர். சர்க்கஸ் கம்பெனியின் மானேஜ[ர்] அவரை பல கேள்விகள் கேட்டுவிட்டு, ''இதோ பாரப்பா, வேலே இதுதான். அதோ ஆணியில் மாட்டியிருக்கும் கரடியின் தோலே அணிந்து கொண்டு கூண்டில் இருக்கவேண்டும். சர்க்கஸ் ஆட்டத்தின்போது, ரிங் மாஸ்டர் சொல்லும் செயல்களேச் செய்து காட்டிவிட்டு இரவு பன்னி

தார நிலைமை, கிராம மக்களுக்குப் பாங்கி எந்தெந்த விதங்களில் உதவலாம் என்பது பற்றித் துருவித் துருவிக் கேள்விகள் கேட்டார் சுமதியை. அவளும் நன்றாகவே பதிலளித்தாள்.

கடைசியில் — அவர் கேட்டார், "இந்த வேலை கிடைத்தால் நீங்க மட்டும் தனியா அந்தக் கிராமத்திலே போய் இருப்பீங்களா, மிஸ் சுமதி? இல்லே, உங்களுக்குத் துணையாக யாராவது வருவாங்களா?''

''எனக்குத் துணையாக வந்து இருக்கும்படியாக எங்க குடும்பத்திலே யாரும் இல்லே சார். நான்தான் தனியாக இருக்க வேண்டியிருக்கும்.''

''அப்படியா! சரி, நீங்க போகலாம்.''

சுமதி நாற்காலியிலிருந்து எழுந்தாள்; ஆனால் உடனே போகவில்லை. சற்றுத் தயங்கிவிட்டு அவரிடம் சொன்னாள், ''சார், நான் உங்களை ஒண்ணு கேட்கலாமா?''

''என்ன, சொல்லுங்க.''

''தப்பா நினைச்சுக்காதீங்க சார்! இந்த வேலைக்கு யாரை செலக்ட் பண்ணப் போறீங்க? என்னையா, மிஸ்டர் சேகரையா?''

இந்த நேரடிக் கேள்வியால் சற்றுத் திகைத்துப் போய்விட்டார் ஜெனரல் மானேஜர். பிறகு தன்னைச் சுதாரித்துக்கொண்டு மழுப்பினார். ''...அது யோசித்து முடிவு செய்யவேண்டிய விஷயம்...''

''இந்த வேலையை எனக்குக் கொடுக்கச் சொல்லி உங்ககிட்டே சலுகை கேட்கறதாக என்னைத் தவறாக நினைச்சுக்காதீங்க சார்! நான் பெண் என்பதற்காக உங்ககிட்டே எந்தவித சலுகையும் எதிர்பார்க்கலே. ஆனால் அதே சமயத்திலே, ஆணுக்குக் கிடைக்கிற உரிமை எனக்கும் உண்டு என்பதுதான் என் கட்சி!''

''தி ஜாப் இஸ் யுவர்ஸ்! கங்க்ராஜுலேஷன்ஸ், மிஸ் சுமதி!'' என்றார் ஜி. எம்.

தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள் சுமதி.

அவளுக்குப் பயிற்சி தொடங்கி மூன்று வாரங்களாகிவிட்டன. இன்னும் ஒரு வாரத்தில் அவள் முள்ளுப்பட்டிக்குப் புறப்பட வேண்டும்.

பக்கத்து அறையில் அவளுடைய பெற்றோர் மெல்லிய குரலில் பேசிக்கொள்வது அவள் காதில் விழுகிறது.

''நீங்க என்னமோ எருமைமாட்டு மேலே மழை பெய்ஞ்ச மாதிரி அலட்டிக்காமே இருக்கீங்களே! சுமதி

ரண்டு மணிக்கு வீட்டிற்குச் செல்ல வேண்டும். இந்த வேலைக்கு ஒரு நாள் கூலி ஐந்து ரூபாய். சம்மதமா?'' என்றார்.

பட்டதாரியும் சரி என்று சம்மதித்து, கரடியின் தோலை மாட்டிக்கொண்டு கூண்டினுள் போய் நின்றார் 'கரடி'யாக. பக்கத்துக் கூண்டில் இருந்த ஒரு சிங்கம் இந்தக் 'கரடி'யையே சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது.

இரண்டு கூண்டிற்கும் இடையில் இருந்த கதவு திறந்து இருந்ததால் அந்த சிங்கம் மெதுவாகக் 'கரடி'யின் அறையில் நுழைந்தது. இதைக் கண்ட 'கரடி' நடுங்க ஆரம்பித்தது. மரண பயத்தில் "ஓ காளி மா... நான் இந்த சிங்கத்திடம் வந்து சாகவா பி. ஏ. படித்துப் பட்டம் பெற்றேன்'' என்று 'கரடி'க்குள் இருந்து இளைஞர் கத்தினார்.

''பூ... நீ. பி. ஏ. தானே படிச்சிருக்கே. நான் எம். ஏ. படிச்சிட்டு அஞ்சு வருஷமா இங்கே தான் இருக்கேன்!'' என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குச் சென்றது 'சிங்கம்'...

— பாரத்ராஜ்

கோவிந்தராஜன் இன்றைய இளைய தலைமுறையினருள் மிகவும் பிரபலமான பாடகர். தமிழ், ஹிந்தி, வங்காள பக்திப்பாடல், திரைப்படப் பாடல்களை தன் இசைக்குழுவுடன் மிகவும் அருமையாய்ப் பாடுகிறார்.

— எஸ். மணி, கல்கத்தா-29



32-ம் பக்கத்தில் என்னைச் சந்திக்கப் போகிறீர்கள்

அடுத்த வாரம் அந்தப் பொட்டைக் காட்டுக்குப் போகணுமே! வயசு வந்த பொண்ணு அங்கே தனியா எப்படி இருப்பா? எனக்குப் பயமா இருக்கே!''

''எனக்கு மட்டும் கவலை இல்லையா ருக்கு? நானுந்தான் அவளோட போஸ்டிங்கை மாத்தறதுக்கு முயற்சி பண்ணிக்கொண்டிருக்கேன். நம்ம ரகு அந்த பாங்கி ஜெனரல் மானேஜரோட கிளாஸ்மேட்டாம். அவன் வார்த்தையை அவர் தட்டமாட்டாராம். சுமதியை ஹெட் ஆபீசிலேயே போஸ்ட் செஞ்சுட்டு, இன்னொருத்தனை இங்கேயிருந்து அந்தக் கிராமத்துக்கு மாற்ற முயற்சி பண்றேன். அநேகமாகக் காரியம நடந்துடும்.''

''நடக்காட்டா?''

''நடக்காட்டாக் கொஞ்ச நாள் சுமதி அங்கேதான் போய் வேலை பார்க்கட்டுமே! அவள்தான் தைரியமாப் போய் வேலை பார்க்கறேங்கருளே! நீ ஏன் பயந்து சாகறே?''

''அப்படியாவது அவளைப் பட்டிக்காட்டுக்கு வேலை பார்க்க அனுப்ப வேண்டிய அவசியமென்ன? அவள் வேலை பார்த்துத்தான் நாம சாப்பிடணுமா?''

''அதுக்கில்லேடி அசடே! அவள் வேலைக்குப் போனல் நமக்கு நல்லது பலவிதத்திலே. இந்தக் காலத்திலே ஆயிர ரூபாய்ச் சம்பளமுள்ள பாங்கி வேலை சுலபமாக் கிடைக்குமா?... எங்க மானேஜர் அடுத்த மாசம் ரிடையராகப் போருர். அவர் தன்னுடைய காரை வித்துடப் போருராம். நான் வாங்கிக்கறதாயிருந்தால் பதினையாயிரத்துக்குத் தரேங்கருர். நான் என்னுடைய பழைய ஸ்கூட்டரை வித்துப்பிட்டு அதை வாங்கிடலாம்னு பார்க்கறேன். கார் வாங்க ஆபீசிலே கடன் கிடைக்கும். சுமதியும் வேலை பார்த்தால் ரெண்டு மூணு வருஷத்திலே அந்தக் கடனைத் தீர்த்துடலாம். தவிர...''

''என்ன?''

''இந்தக் காலத்திலே வேலை பார்க்கற பொண்ணுன்ன - அதுவும் பாங்கி வேலைன்ன - மவுசு ஜாஸ்தி. நான் நீன்னு போட்டி போட்டுக் கொண்டு பசங்க வருவாங்க அவளைக் கல்யாணம் பண்ணிக்க. பைசா செ[illegible]வில்லாமே அவளோட கலியாணத்தை நடத்திடலாம்.''

அடுத்த வாரம் ஒரு நாள் விசுவம் உற்சாகத்துடன் ஆபீசிலிருந்து திரும்பி வந்தார். வந்ததும் வராததுமாகத் தன் மனைவியிடம் சென்று, ''ருக்கு, ஒரு நல்ல சமாசாரம்! சுமதியை ஹெட் ஆபீசிலேயே போஸ்ட் பண்ணிட்டாங்க! ரகு காலம்பற போன் பண்ணினன்!'' என்ருர்.

''வர்ர சனிக்கிழமை ஆஞ்சனேயருக்கு வடைமாலை சார்த்தப் போறேன்'' என்ருள் சுமதியின் அம்மா.

அன்று சுமதி வீடு திரும்ப வெகு நேரமாகிவிட்டது. அவளுக்காகக் காத்திருந்த விசுவம் அவள் வந்ததும் ஆவலுடன் கேட்டார், ''என்ன சுமதி, உனக்குப் போஸ்டிங் ஆர்டர் கிடைச்சதா?''

''கிடைச்சது'' என்று சொல்லிவிட்டு அவரிடம் ஒரு கவரை நீட்டினள் சுமதி, ''இந்தாங்க என் சம்பளம்.''

''சம்பளமா? இப்போ ஏது சம்பளம்?''

''அதுவா? நான் வேலையை விட்டுட்டேன். இன்று வரைக்கும் உள்ள சம்பளத்தைக் கணக்குப் பண்ணிக் கொடுத்துட்டாங்க.''

''என்ன?... வேலையை விட்டுட்டியா?''

''ஆமா''

''ஏன்?''

''ஏனு? இந்தப் போஸ்டிங் ஆர்டர் பிடிக்காததாலேதான்.''

''நீ என்ன சொல்றே சுமதி?'' கடுகடுத்தார் விசுவம்.

''நான் அப்ளை பண்ணினது ரூரல் கிரெடிட் ஆர்கனைசர் வேலைக்கு. எனக்குப் பயிற்சி கொடுத்தது கிராமத்திலே போய் அங்கேயுள்ள ஜனங்களுக்குக் கடனுதவிக்கு ஏற்பாடு செய்யத்தான்; ஹெட் ஆபீசிலே நாற்காலியைத் தேச்சுக்கிட்டு வெள்ளைப் பேப்பர்லே மையாலே கிறுக்கறதுக்கு இல்லே...''

''அடேடே, காரியத்தைக் கெடுத்துட்டியே சுமதி! நான் எவ்வளவு கஷ்டப்பட்டு, சிபாரிசு பிடிச்சு...''

''...உள்ளூர் போஸ்டிங் வாங்கிக் கொடுத்தீங்கன்னு எனக்குத் தெரியுமே! உங்களுக்குக் கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை!''

நிதானமிழக்காமல் பதில் சொன்னாள் சுமதி. ''ஆத்திரப்படாமே நான் சொல்றதைக் கேளுங்கப்பா. நீங்க என்னை நிறையப் படிக்க வச்சீங்க. வேலைக்கும் முயற்சி பண்ணச் சொன்னீங்க. ஆனால் எனக்கு வேலை கிடைத்த பிறகுதான் உங்களுக்கு ஞாபகம் வந்தது, நான் வயசுப் பெண், என்னைத் தனியே வெளியூருக்கு அனுப்பக்கூடாதுன்னு. எனக்கு வயசு இருபத்து மூணு. எனக்குக் கலியாணம் பண்ணணும்னு இவ்வளவு நாள் உங்களுக்குத் தோணல்லியே!''

''தோணுமே என்ன சுமதி! நீ இவ்வளவு படிச்சிருக்கியே, கொஞ்ச நாளாவது உன் படிப்பு உபயோகப்படும்படியா நீ ஏதாவது வேலை பார்க்கலாமேன்னுதான்...''

''அதாவது என் படிப்புக்காகச் செலவு செய்த பணத்தை வட்டியும் முதலுமாகத் திருப்பியெடுத்தபிறகு கலியாணம் பண்ணி வைக்கலாம்னு இருந்தீங்க, அப்படித்தானே?''

''என்ன அசட்டுப் பேச்சுப் பேசறே சுமதி! உன் கலியாணத்தைப் பத்தி எனக்கும் உன் அம்மாவுக்கும் கவலை இல்லையா? இந்த நாலைந்து வருஷமாக எங்களுக்கு ராத்தூக்கம் இல்லே, தெரியுமா உனக்கு?''

''அதுதான் நல்லாத் தெரியறதே! நீங்க நாலைந்து வருஷமா ராத்திரியிலே தூங்கறதில்லேங்கற விஷயம் நம்ம வீட்டுக் குழந்தைகளைப் பார்த்தாலே தெரியுமே! நம்ம ராமுவுக்கு நாலு வயசு; உஷாவுக்கு வயசு இரண்டரை; பாலுவுக்குப் போன மாசந்தான் ஆண்டு நிறைவு நடந்தது; இப்போ அம்மாவுக்கு மூணு மாசம்... இதிலிருந்தே தெரியல்லியா?''

சாட்டையடிகளாக விழுந்தன வார்த்தைகள்.

தான் பெற்ற மகளுக்கு முன்னால் புழுவாக நெளிந்துகொண்டிருக்கும் உணர்வு ஏற்பட்டது விசுவத்துக்கு... ✩



நாட்டியம் – நாடகம் – இராஜி கைலாசம்

குமாரி இராஜலெட்சுமி (21) ஒரு சிறந்த பரத நாட்டிய வல்லுனர். நடராஜ் ஃபைன் ஆர்ட்ஸ் என்ற நாட்டியப் பள்ளியைக் கடந்த இரண்டாண்டுகளுக்கு முன் வங்கத்தில் நிறுவி, ஏறத்தாழ 50 வங்காள, இந்தி, பிறமொழிப் பெண்களுக்கு நாட்டியக் கலையைக் கற்றுக் கொடுக்கிறார்.

நாடக நடிகை. கல்கத்தாவில் அமைச்சூர் நாடகங்களில் பங்கெடுத்துக் கொண்டு இதுவரை 30-க்கும் மேற்பட்ட நாடகங்களில் நடித்துள்ளார் இவர்.

# இப்போது உங்களுக்கு மூவகைப் பாதுகாப்பு!




புதிய

# ஃபெமினெக்ஸ்*

## சுகம்தருகிறது, உறிஞ்சுகிறது, பாதுகாக்கிறது மூவகை உறுதியான வழிகளில்

மென்மையான சுகத்தையும் உறுதியான பாதுகாப்பையும் அளிக்கிறது, புதிய ஃபெமினெக்ஸ்-சானிடரி பாதுகாப்புக்கு, வீட்டிலே துணி, பருத்தி இதையெல்லாம் உபயோகிக்கிறார்களே, அதுமாதிரி இது இல்லவே இல்லை.

அதிலேயிருக்கிற விசேஷமான 'ஒன்டர் ரேப்' கவர், ஒழுக்கை (ஈரத்தை) நல்லா உறிஞ்சி சருமத்துக்கு கசகசப்பில்லாத உலர்ந்த உணர்வையும், சுகத்தையும் தருது.

மிகச் சிறந்த உறுஞ்சும் பொருளால் ஆனது அதோட உள் அடுக்கு. அதுனால, கடினமான நாட்களிலே கூட அது ஒழுக்கு எல்லாத்தையும் நல்லா உறிஞ்சுகிறது.

பிளாஸ்டிக் ஸேஃப்டி கார்டு இருக்கே, அதுனாலே உன்னதமான நன்மை கிடைக்குது. அது நேப்கினோட முழு நீளத்துக்கும், அதோட ரெண்டு பக்கங்களுக்கும் மேல்புறம் வரையிலும் தடைக்காப்பு அளிக்குது; அதாவது ஒரு முனையிலேயிருந்து மறுமுனை வரைக்கும் நிச்சயமான பாதுகாப்பு.

### ஒருமுனையிலிருந்து மறுமுனை வரை 3 பக்கமுடைய ஸேஃப்டி கார்டு



- ஒப்பில்லாத 3 பக்கங்கள் கொண்ட 'ஸேஃப்டி கார்டு', நேப்கினோட அடிபக்கத்திலேயும் அதோட 2 பக்கங்களிலேயும் தடைக்காப்பு அளிக்கிறது.
- ஒரு முனையிலேயிருந்து மறுமுனை வரையிலும் நேப்கினோட முழு நீளத்தையும் கவர் பண்ணுது 'ஸேஃப்டிகார்டு'.

புதிய ஃபெமினெக்ஸ் உபயோகிக்கிற போது, கசியிறது, வழியிறது மாதிரியான கவலையே இருக்காது. சானிடரி பாதுகாப்புக்கு வீட்டிலே உபயோகிக்கிற துணி, பருத்தி இதெல்லாத்தையும் விட அதிகமான சுகாதாரமானது, புதிய ஃபெமினெக்ஸ். துவைச்சு கசக்கி, உலர்த்திக்கிட்டிருக்கிற வேலையெல்லாம் இதிலே இல்லை.

தாய்ப்பால் அளிக்கும் தாய்மார்களுக்கு அதிக அளவு ஊட்டச்சக்தியை அளிக்க **மதர்ஸ் ஸ்பெஷல்** பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இதன்மூலம், நீங்கள் குழந்தைக்கு அவன் விரும்பிய அளவு ஊட்டம் தரும் தாய்ப்பாலை நீங்கள் அளித்திட, மதர்ஸ் ஸ்பெஷல் உங்களுக்கு உதவி செய்கிறது.

உங்கள் குழந்தைக்கு எல்லா வற்றிலும் சிறந்த, பரிசுத்தமான உணவு தாய்ப்பால்தான்.

தாய்ப்பால், வேறெந்த வித பால் மற்றும் குழந்தை உணவைக் (Baby Food)காட்டிலும் மேன்மையானது.

தாய்ப்பாலை உங்கள் குழந்தை மிகவும் எளிதாக ஜீரணிக்க முடிகிறது, தவிர, தாய்ப்பால் உங்கள் குழந்தையின் நோய் எதிர்ப்புச் சக்தியை வளர்க்கிறது.

இதனால்தான், நீங்கள் உங்கள் குழந்தைக்கு குறைந்தது முதல் 6 மாதங்களுக்காவது தாய்ப்பால் அளிக்க வேண்டும் என்று டாக்டர்கள் வற்புறுத்துகிறார்கள்.

தாய்ப்பால் அளிக்கும் தாய்மார்களுக்கு மிகவும் அவசியமான, அதிக அளவு ஊட்டச்சக்தியை அளிக்க மதர்ஸ் ஸ்பெஷல் பிரத்யேக மாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

தாய்ப்பால் அளிக்கும்போது நீங்கள் உங்கள் உடலிலிருந்து ஊட்டச் சக்தியை உங்கள் குழந்தைக்கு அளிக்கிறீர்கள்.

இதனால் உங்களுக்கு அதிக அளவு ஊட்டச் சக்தி தேவைப்படுகிறது.

இந்த அதிக அளவு ஊட்டச் சக்தியை அளித்திட மதர்ஸ் ஸ்பெஷல் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

இதன் மூலம், நீங்கள் உங்கள் குழந்தைக்கு அவன் விரும்பிய அளவு ஊட்டம் தரும் தாய்ப்பாலை அவனுக்கு அளித்திட, மதர்ஸ் ஸ்பெஷல் உங்களுக்கு உதவி செய்கிறது.

மதர்ஸ் ஸ்பெஷல், தாய்ப்பால் அளிக்கும் தாய்மார்களுக்கு தேவையான அதிக அளவு ஊட்டச் சக்தியைப் பற்றி உலக ஆரோக்கிய அமைப்பின் (W.H.O.) பரிந்துரைப்பை ஆதாரமாகக் கொண்டு பிரதயேகமாகத் தயாரிக்கப் பட்டுள்ளது.

ஒவ்வொரு 100 கிராம் மதர்ஸ் ஸ்பெஷலும் அளிப்பது :

| | | | |
|---|---|---|---|
| சக்தி | 450 kcals | வைட்டமின் B12 | 1.25 mcg |
| புரதச் சத்து | 9.00 g | வைட்டமின் C | 50.00 mg |
| வைட்டமின் A | 3750 I.U. | நைக்கோட்டனிக் ஆஸிட் | 9.25 mg |
| வைட்டமின் D | 750 I.U. | ஃபோலிக் ஆஸிட் | 250.00 mcg |
| வைட்டமின் B1 | 0.50 mg | கால்ஷியம் | 1.50 g |
| வைட்டமின் B2 | 1.00 mg | | |

உங்கள் டாக்டரைக் கேளுங்கள், நீங்கள் நாள்தோறும் இரண்டு முறை மதர்ஸ் ஸ்பெஷலை அருந்தவேண்டிய ) அவசியததை அவர் எடுததுரைப்பார். குழந்தையின் முதல 6 மாதங்கள் வரை நிச்சயமாக அதற்குப் பின்னும் நீங்கள் தாய்ப்பால் அளிகும் மாதங்களிலும் மதர்ஸ் ஸ்பெஷலை பாலில் கலந்து அருந்தவேண்டும்.

"விசேடமாக உங்களுக்கும் உங்கள் குழந்தைக்காகவும்" என்ற ஆங்கிலம் அல்லது தமிழில் வெளியிடப்பட்டுள்ள இலவச சிறு புத்தகத்தைப் பெற எழுதுங்கள்.

10" x 6" அளவுள்ள உறை ஒன்றை உங்கள் முகவரியை எழுதி, ஒரு ரூபாய் தபால் தலைவைத்து அனுப்புங்கள்.

எழுதுங்கள் : எச் எம் எம் லிமிடெட், 11, ஹேடோஸ் சாலை, சென்னை 600006




ஞாயிறு தோறும் பகல் 1.15 மணிக்கு சென்னை விவித பாரதியில் மதர்ஸ் ஸ்பெஷல் விசேஷ நிகழ்ச்சியைக் கேளுங்கள்.

தாய்ப்பால் அளிக்கும் தாய்மார்களுக்கு டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது.

# மதர்ஸ் ஸ்பெஷல்

## ஹார்லிக்ஸ் தயாரிப்பாளர்கள் அளிப்பது

கல்கத்தா பெருநகரிலும் தமிழ்நாட்டிலும் மட்டுமே கிடைக்கும்.

HTD-HMM-7111

வேறு சில சாலைகளில் துண்டை விரித்துப் படுக்கலாம்.

சிவப்புக கார் ஒன்று பாத்ருமில் கை நழுவிய சோப் கட்டியைப் போல, ஓசை எழுப்பாமல் துறைமுகத்தின் ஓரமாக ஓடியது.

சில பகுதிகளில் புதிதாகத் தொங்க விடப்பட்ட ஸோடியம் வேப்பர் விளக்



அவசரக்காரக்
கோவலர்களுக்காக
எரிபடுவதற்கு
இன்னும் மதுரைகள் மீதமில்லை
இளமைத் துறவுக்கு
இன்றைய மணிமேகலைகளும்
தயாரில்லை

– புலவர் ரோகிணி

'தேன் முள்ளுகள்' கவிதைத் தொகுப்பில்

# சவீதா

கி. பி. 1981.
சென்னை மாநகரம்.
மே மாத நள்ளிரவு.

அண்ணாசாலையில் போக்குவரத்து சிறுத்துவிட்ட நேரம்;

குகள் பழைய நூற்றாண்டின் தீவட்டி களே தேவலே என்பது போல மஞ்ச ளாக அசடு வழிந்தன.

சிவப்புக்கார் பாரிமுனேயில் வல மாகத் திரும்பியது. உயர்நீதிமன்றத்தை உரசிக்கொண்டு பறந்தது.

பத்துப் பதினேந்து நிமிட வித்தி யாசங்களில் சகல சினிமா காட்சிகளும் முடிவு பெற்று இடியாப்பம், பாயா, சாயாவுக்காக மலேயாளிகளின் அசைவ ரெஸ்டாரென்ட்களுக்குள் திடீர் கல கலப்பு.



# தொட்டதெல்லாம் பொன்னாகும்




# வாரிசு

காலை நேரம். ஸ்ரீரங்கம். ''ஸ்ரீ மஹா கணபதே...'' நாதஸ்வர இசை. அது பத்மஸ்ரீ ஷேக் சின்ன மௌலானாவின் வீடு.

''உங்களோடு கூட நாதஸ்வரம் வாசிக்கும் தம்பி யார்?''

''இது என் பேரப்பிள்ளை. காசிம். எனக்குப் பிள்ளை கிடையாது. இவன் என் பெண் வயிற்றுப் பேரன். மூணு வயதிலிருந்து என்னிடம்தான் இருக்கிறான். அஞ்சு வயதில் நாதஸ்வரம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தான். பன்னிரண்டாவது வயதில் திருவையாறில் அரங்கேற்றம் நடந்தது.''

''இவரை உங்கள் வாரிசு என்று அழைக்கலாமா?''

''இது முன்னூறு வருடமாக எங்கள் பரம்பரைக் கலை. அதை வாரிசு

சிவப்புக்கார் குறையாத வேகத்துடன் விமானக் கம்பெனியின் புக்கிங் அலுவலகத்தைக் கடந்தது.

ட்ரம் கிட்டார்களுடன் 'லோன்லி ஹார்ட்ஸ் கிளப் பாண்டு' மூலையில் ஆர்ப்பரிக்க, இடுப்பை உருட்டிய அனிடாவின் முதுகில் ப்ராவின் கொக்கியை வேட்டி ஜிப்பா பிரமுகர் எழுந்து போய் அவிழ்த்துவிட்டார். நடைபாதையில் குளிர் ஜுரத்தால் நடுங்கிய குழந்தையை ஒரு பெண் அழுக்கேறிய தன் மார்புத் துணியை விலக்கிப் பொத்தினாள்.

சிவப்புக்கார்தூதரகத்தின் அருகே இடமாகப் பாய்ந்தது. ஸ்டீயரிங் வளையத்தைச் சுழற்றிய கரத்தில் சிகரெட் புகைந்தது. சுழற்றிய அவசரத்தில் கோபம் தொனித்தது.

ஓட்டலின் பத்தாவது மாடியில் வாங்கிய சில சலவை நோட்டுக்களுக்காக இளைஞனின் பான்ட் ஜிப்பை நடிகை ஒருத்தி பல்லால் கடித்துக் கீழே இழுத்தாள். பள்ளத்துக் குடிசையில் கள்ளச் சாராயம் விற்ற பெண், மசால்வடைக்கு காசு தர மறந்தவனின் வேட்டியைப் பிடித்து இழுத்தாள்.

சிவப்புக் கார் ஓடிக்கொண்டிருந்தது. டாஷ் போர்டு வெளிச்சத்தில் சிகரெட்டை இடுக்கிய விரல் முனைகளில் நக எனுமல் பளபளத்தது.

...சிலைக்குப் பின்னே நைட்டுக்கு ஐநூறு, ஒரு தடவைக்கு அம்பது என்று வடபழனி புரோக்கர் கறாராக ரேட் பேசினான். மார்ச்சுவரிக்கு வெளியே பிச்சைக்காரியின் பிணத்தை சம்பந்தமில்லாதவன் பதினைந்து ரூபாய்க்கு விலை பேசினான்.

சிவப்புக்கார்ஆழ்வார்பேட்டையை நெருங்கியபோது கரைந்த சிகரெட்டு துண்டு காரிலிருந்து துள்ளி நெருப்புப் பொறி சிதற சாலையில் குதித்தது.

சுவர் இடிந்த காம்பவுண்டுக்குள் ஒரே பெண்ணிடம் தாகத்தைத் தீர்த்துக்கொண்ட போலீஸ்காரர்கள் அவள் மடியில் இருந்ததை அபகரித்து மாமூல் பாக்கிக்குச் சரிக்கட்டிக்கொண்டனர்.

அகாலமாய் படுக்கையை அசிங்கப்படுத்திய இரண்டாவது குழந்தைக்குக் கால் கழுவி விட்டவள், விளக்கை அணைத்துவிட்டு மார்புகளை கைக்குழந்தைக்கும் கணவனுக்கும் பகிர்ந்து கொடுத்தாள்.

பாத்திரம் தேய்த்து, மாவரைத்து, துணி துவைத்து பகலெல்லாம் உழைத்தவள், குடித்துச் சீட்டாடி விட்டு அந்த நள்ளிரவில் வீடு திரும்பிய கணவனின் ஸ்கூட்டர் சப்தம் கேட்ட தும் எழுந்து விளக்கைப் போட்டு கதவைத் திறக்காத காரணத்துக்காக அடிவயிற்றில் பூட்ஸ் காலால் மிதி வாங்கினுள்.

முதல் தேதியன்று பாதிச் சம்ப ளத்தை வீட்டுக்குக் கொண்டு வரும் லட்சக்கணக்கான வெள்ளைக் காலர் கணவன்மார்கள் பாதுகாப்பான அறை களுக்குள்ளே, போர்ஷனைத் தாண் டாத தங்கள் பத்தினிகளின் உடம்பை ஆக்கிரமித்தபடி நாளைய சமுதாயத் தைச் சிருஷ்டிக்கும் புனிதப் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

களுக்குப் பழக்காமல் இருக்க முடியுமா?''

—காசிம், திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரி மாணவர். விடுமுறை நாட் களாக இருந்தால் தாத்தாவுடன் கச் சேரிகளுக்குப் போகிருர். மற்றபடி படிப்பதைத் தவறவிடுவதில்லை.

'ஷேக் சின்ன மௌலானுவுக்கு மாதம் பூராவும் நிகழ்ச்சிதான்.

''குறைஞ்சது அரைமணி நேர மாவது சாதகம் செய்தால் நல்லது. இது எங்கள் சொந்த வீடுதான் என்ரு லும் பக்கத்திலிருப்பவர்களுக்கு காலை நேரத்தில் தொந்திரவு கூடாது. பலருக்கு நாங்கள் சாதகம் செய்யும் போது தூக்கம் கெடலாம் அல்லவா? அதனுல் ஒன்பது மணிக்குமேல் கொஞ் சம் பயிற்சி செய்வோம். என்னிடமிருக் கும் நாதஸ்வரத்தை இருபத்தோரு வருடமாக வைத்திருக்கிறேன்.''

பேட்டி: மன்னை சௌரிராஜன்

கி. பி. 1981. சென்னை மாநகரம். மே மாத நள்ளிரவு.

சிவப்புக்கார்சாலையைவிட்டு வெளி யேறியது. பெட்ரோல் பங்க்கினுள் நுழைந்தது. வெளிச்சத்தில் காரை ஓட்டியவளின் கூந்தல் மினுமினுத்தது. நீக்ரோ அங்கி போல அவள் உடை அணிந்திருந்தாள். மாநிறம். மூக்கின் வலப்புறம் தங்க மச்சம் அல்ல. அது மூக்குத்தி. ஊட்டி ப்ளம்ஸ் நிறத்தில் உதட்டுக்குச் சாயம். தொண்டையின் அடிவாரத்தில் 'ப்ருந்தா' என்று மின் னும் ஆங்கில எழுத்துக்களை மெல்லிய கழுத்துச் செயினில் தொங்கவிட்டிருந் தாள்.

கை நீட்டி காருக்கு வெளியே நின்றவனிடம் பெட்ரோல் பில்லையும் பாக்கிச் சில்லரையையும் வாங்கினுள் ப்ருந்தா. டெனிம் கைப்பைக்குள் இருந்து சிக்லெட்டை எடுத்து வாயில் போட்டாள். கார் அங்கிருந்து புறப் பட்டபோது சிகரெட் பெட்டியை நாலைந்து சிகரெட்டுகளுடன் வெளியே எறிந்தாள்.

''ஹேய்... ஐ'ம் கல்பனு. அண்ட் யு ஆர்...''

''ப்ருந்தா''

''நாம சிநேகிதிகள் ஆகலாமா ப்ருந்தா?''

''எஸ் லெட்ஸ்''

ஒரு மாணவன் பியானே அகார்டி யனில் 'சல்தே சல்தே' வாசித்தான்.

சில வருடங்களுக்கு முன் கல்லூரி விடுதியின் முதல் 'ஸப்பர் பார்ட்டி'யில் கல்பனுவைச் சந்தித்தது காரின் வேகத்தை அதிகப்படுத்திய ப்ருந்தா வின் நினைவுத் திரையில் பளிச்சிட்டது.

காரை க்ரீன்வேஸ் சாலையில் திருப்பினுள் ப்ருந்தா. கல்பனு வீடு எங்கே இருக்கிறது? விலாசம் மட்டும் மனதில் இருக்கிறது. நம்பர் தர்ட்டி த்ரீ. செகண்ட் க்ராஸ். பங்கஜம் கார் டன்ஸ்.

வழி கேட்கக்கூட சாலையில் ஆள் இல்லை. ஆளைப் பார்த்தாலும் காரை நிறுத்த மனதில் தைரியம் இல்லை. பெண்ணுக வாழ்வது ஒன்றும் சுலப மான விஷயம் இல்லை.

போலீஸ் பீட் அருகே இடமோ வலமோ திரும்பாமல் நேராக பட்டினப் பாக்கம் பாதையில் உத்தேசமாகக் காரைச் செலுத்தினுள்.

'கெட் அவுட் அண்ட் டோன்ட் எவர் கம் நியர் மி அகெய்ன். கோ... கோ... கோ...'

கோபாலின் குரல் ப்ருந்தாவின் காதுக்குள் கூச்சலிட்டது. ஸ்ட்ராங் காபியின் ப்ரௌன் நிறத்தில் ஒரு வளையம் கண்முன்னே சுழன்றது.

ஆக்சிலரேட்டரை மேலும் அழுத்தினாள். கடல்காற்று கூந்தலைச் சின்னாபின்னமாக்கியது. தூரத்தில் கருப்பாக அடிவானம்வரை கடல் பரந்திருந்தது. வானத்தில் நெருக்கமாக நட்சத்திரங்கள். இயந்திரங்களைச் சுழலவைக்கும் அகல பெல்ட்டைப் போல எதிரே சாலை முடிவே இல்லாமல் வந்துகொண்டிருந்தது. சாலைக்கு மேலே காபியின் ப்ரௌன் நிறத்தில் ஒரு வளையம் சுழல்வதைப் போன்ற பிரமை.

காலையில் ப்ருந்தா பார்த்த அந்த வளையம் அவள் கண்ணுக்குள்ளேயே ...றது.

நுங்கம்பாக்கம் ஸ்டர்லிங் அவென்யுவில் ஆர். கே. கோபாலின் பங்களா.

விடிகாலையில் கொட்டாவியுடன் கண்விழித்த ப்ருந்தா தேதியைப் பார்த்துவிட்டு திடீரென்று முளைத்த சந்தேகத்திற்கு தன் உடலிடம் விடை கேட்க விரும்பினாள். இரவில் மிகவும் தாமதமாக காரை காரேஜுக்குள் கொண்டுவந்து நிறுத்திவிட்டு படுக்கை அறைக்குள் நுழைந்த கோபால் பக்கத்தில் அயர்ந்து தூங்கினான்.

சாவியை எடுத்துக்கொண்டு பரபரப்புடன் டாய்லெட் அறைக்குள் நுழைந்து கதவைத் தாழிட்டாள். கபோர்டைத் திறந்து 'டெஸ்டிங் கிட்'டை எடுத்தாள். அதிலிருந்த கண்ணாடிச் சோதனைக் குழலில் தன்னுடைய சூடான, வைக்கோல் நிற முதல் சிறுநீரைப் பிடித்தாள். நன்றாகக் குலுக்கினாள். மூலையில் சாய்வாக வைத்துவிட்டு மற்ற வேலைகளைக் கவனிக்க வெளியேறினாள்.

இரண்டு மணி நேரத்துக்குப்பின் படபடவென்று அடித்துக்கொண்ட நெஞ்சுடன் மறுபடியும் டாய்லெட் அறைக்குள் வந்தாள். சோதனைக் குழலைப் பார்த்தாள். சிறுநீரின் மேல் மட்டத்தில் இருண்ட ப்ரௌன் நிறத்தில் வளையம். இதுவரை தோன்றாத வளையம். ப்ரெக்னன்ஸி ஹார்மோன்! வயிற்றுக்குள் முதல் கரு. அவள் கர்ப்பிணி. மனம் துள்ளியது.



ஆனால்...

மாலையில் அது கணவன் கோபாலுக்குத் தெரிவிக்கப்பட்டபோது—

'கெட் அவுட் அண்ட் டோன்ட் எவர் கம் நியர் மி அகெய்ன். கோ... கோ... கோ... நீ பக்கத்திலயே வராதே. போ வெளியே.'

கோபாலின் குரல் ப்ருந்தாவின் பிடரியைப் பிடித்துத் தள்ளியது. பெண்ணாக வாழ்வது ஒன்றும் சுலபமான விஷயமில்லை.

கார் விளக்கின் வெளிச்சத்தில் மஞ்சள் கான்க்ரீட் பலகையில் பங்கஜம் கார்டன்ஸ்.

சரிவில் இறக்கினாள். முதல் க்ராஸ்... இரண்டாவது க்ராஸ். நாற்சந்தியில் காரை நிறுத்தினாள். இனி எந்தப் பக்கம் போவது?

''எந்த ஊட்டுக்கு போகணும்?''

கிழட்டுக் குரல்.

''நம்பர் தர்ட்டி த்ரீ''

''இந்த லைன்ல போ. கட்சீ ஊடு. தனியா இருக்கும். அந்தாண்ட ஊடே கிடையாது. சவுக்குத் தோப்பு.''

குண்டும் குழியுமான பாதை.

கல்பனா இருப்பாளா? இல்லை, டோக்கியோ போயிருப்பாளா? அவள் ஒரு ஹேர் ஸ்டைலிஸ்ட். பியூட்டி சலூனில் வேலை பார்ப்பவள். வண்ணங்கள் சுழன்ற கல்லூரி வாழ்க்கை திடீரென்று ஒரு நாள் முடிந்துபோனதும் தொடர்பு அறுந்துபோய் வெகு நாட்களாகக் கல்பனாவைச் சந்திக்கவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன் யாரையோ வழியனுப்ப விமான நிலையத்துக்கு வந்தவளை ப்ருந்தா அடையாளம் கண்டுகொண்டாள். அதிகம் அளவளாவ நேரமில்லை. பக்கத்தில் நின்ற ரமேஷை ப்ருந்தா

வுக்கு அறிமுகம் செய்துவைத்த கல்பனா இந்த விலாசத்தைக்கொடுத்து வீட்டுக்கு வரும்படி அழைப்பு விடுத்தாள். கூந்தல் அலங்கரிப்பில் மேல் பயிற்சி பெற விரைவில் டோக்கியோ போனாலும் போவேன் என்றாள்.

கல்பனா இல்லாவிட்டால் இந்த நடுநிசியில் என்ன செய்வது? படிகளில் ஏறினாள்.

தூரத்துத் தெரு விளக்கினால் மங்கிய வெளிச்சம். கண்ணுக்குத் தெரிந்த சுவிட்சை அழுத்தினாள்.

க்ணங்... க்ணங்...

வீட்டுக்குள் டோர்பெல் ஒலித்தது. சவுக்குத்தோப்பில் மரங்கள் 'விஸ்'ஸென்று உடலை அசைத்தன.

மறுபடியும் அழுத்தினாள். அறை உட்பக்கம் பரவிய வெளிச்சத்தால் ஜன்னலின் கண்ணாடிகள் பிரகாசமடைந்தன. எங்கேயோ 'டரட்' என்று தாழ்ப்பாளை விலக்கும் சப்தம்; வராந்தா விளக்கு எரிந்தது. கதவைத் திறந்து இடுப்பில் டர்க்கிஷ் டவலுடன் வெளியே வந்தது ரமேஷ். கண்களை இடுக்கிப் பார்த்தான்.

''ப்ருந்தா!'' என்றான் ஆச்சரியத்துடன். ஒரே தடவைதான் என்னைப் பார்த்திருக்கிறான். பெயரைக்கூட ஞாபகம் வைத்திருக்கிறானே. கல்பனா என்னைப் பற்றி நிறையப் பேசியிருக்க வேண்டும்.

''கல்பனா இருக்காளா?''

''வாங்க. இருக்கிறா'' என்றபடி கதவைத் திறந்துவிட்டான்.

''டிக்கில சூட்கேஸ்...''

''நீங்க போங்க. நான் எடுத்திட்டு வர்றேன்.''

கார் சாவியை அவளிடமிருந்து ரமேஷ் பெற்றுக்கொண்டதும் ப்ருந்தா உள்ளே நுழைந்தாள்.

பெண் குரல் கேட்டு படுக்கையில் கண்விழித்த கல்பனா ''ஹாய் ப்ருந்தா'' என்றபடி எழுந்தாள். கழுத்து வரை அவள் மூடியிருந்த போர்வை வழிந்து கீழே விழ உடலில் எதுவும் இல்லாமல் இறங்கி வந்தாள். பின்னால் சூட்கேசுடன் வந்த ரமேஷுக்காக கல்பனா கவலைப்பட்டமாதிரி தெரியவில்லை. அவன் ஆயிரம் முறை பார்த்த சமாச்சாரங்கள்தானே!

''என்ன ப்ருந்தா! இன்னிக்குத்தான் என் ஞாபகம் வந்துதா?'' என்றவள் லுங்கியைத் தேடினாள்.

கட்டிலுக்குக் கீழே கிடந்த தன் செக் ஷர்ட்டை ரமேஷ் எடுத்து கல்பனாவிடம் கொடுத்தான். சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

ஷர்ட்டை அணிந்து பொத்தான்களை மாட்டிய கல்பனாவின் இதழில் ஒரு சிகரெட்டைப் பதித்து தன் வாயிலிருந்த சிகரெட்டால் பற்றவைத்தான். ப்ருந்தாவிடம் சிகரெட் ப்ாக்கெட்டை நீட்டினான்.

''நோ தேங்க்ஸ்.''

''அவ திருந்தமாட்டா'' என்றாள் கல்பனா.

கல்லூரி நாட்களில் ஒழுங்காக புடவை ப்ளவ்ஸ் அணிந்து தலைக்கு எண்ணெய் தேய்த்து வாரி ஒற்றைப் பின்னலிட்டு பூவும் பொட்டும் மஞ்சளாய் வகுப்புக்குள் நுழைந்த ஒரே பெண் ப்ருந்தாதான். அந்த ப்ருந்தாவைத்தான் கல்பனாவுக்குத் தெரியும்.

நான் இப்போ செய்ன் ஸ்மோக் கர்ங்கறது உனக்கு எங்கே தெரியப் போகுது, கல்பனா. நீ தெரிஞ்சுக்கவே வேண்டாம். உன் மனசில இருக்கிற என்னோட பழைய இமேஜை நான் கலைக்க விரும்பலே.

''எங்கேர்ந்து வர்றே?''

''பெண்ணா வாழ்றது ரொம்ப கஷ்டம் யார்.''

''இன்னிக்கு ராத்திரி ஒரு மணிக்குத்தான் அதத் தெரிஞ்சுக்கிட்டயா?''

''போடீ வெளியேன்னு கூச்சல் போட்டார். கையில அகப்பட்டதத் தூக்கி அவர் மேல எறிஞ்சுட்டு, ஜஸ்ட் லைக் தட், கிளம்பி வந்துட்டேன்.''

---

● பணமில்லாதவர்கள் கையெழுத்துப் பத்திரிகை நடத்துவார்கள் – பார்த்திருக்கிறோம். பணக்காரர்களின் நிறுவனமான டைனர்ஸ் கிளப் கையெழுத்துப் பத்திரிகை நடத்துகிறது! அவர்கள் வெளியிடும் இதழின் பெயர் – 'Signature.'

---



BISON



S 4964
ISI



''சூட்கேஸ்ல ஒரு மாசத்துக்கு ட்ரெஸ் இருக்கு.''

''எப்ப வீட்லேர்ந்து கிளம்பினே?''

''சாயங்காலம் ஆறரை இருக்கும்.''

''அப்புறம் இவ்வளவு நேரம் என்ன பண்ணே?''

''பெட்ரோல் தீர்றவரைக்கும் சுத்தோ சுத்துன்னு ஊரெல்லாம் சுத்தினேன். சார்லஸ் ப்ரான்சன் படம் பார்த்தேன். பழையபடி சுத்தினேன். பெட்ரோல் போட்டேன். அப்புறம் இங்கே வந்துட்டேன்.''

''நீ ரொம்ப மாறிட்டடீ. முன்னுல எல்லாம் இப்படிப் பேசமாட்டியே. எதுக்காக அவர் உன்னே வெளியே போகச் சொல்லணும்?''

எல்லாவற்றையும் சொல்லி மனதைக் கழுவிக்கொள்ள விரும்பினுள் ப்ருந்தா. ஆனுல் ரமேஷின் உறக்கத்தைக் கலைக்க விரும்பாதவளாய்,

''காலேல பேசிக்கலாமே, கல்பனு'' என்ருள்.

''என்ன சாப்பிடறே? ரமேஷ், ஃப்ரிட்ஜில நேத்து வாங்கின ப்ளம் கேக் இருக்கு. எடேன், ப்ருந்தா சாப்பிடுவா.''

''எனக்கு ஒண்ணும் வேண்டாம். மனசே சரியில்லே.''

''எல்லாம் சரியாப்போகும். நீ உடம்ப அலட்டிக்காத. நானும் ரமேஷும் மிஸ்டர் கோபாலே நாளேக்கே பார்த்து என்ன விஷயம்னு கேக்கரேும். ரமேஷ், நானும் ப்ருந்தாவும் இங்க படுத்துக்கப் போரேும்.''

''நான் அந்த ரூமுக்குப் போறேன்.''

ஸ்பேராக இருந்த படுக்கையை எடுத்துக்கொண்டு அவன் நடந்தான்.

''வரக்கூடாத நேரத்தில வந்து உங்களே டிஸ்டர்ப் பண்ணிட்டனு?''

''எல்லாம் முடிஞ்சப்பிறகுதான் வந்திருக்க'' சிரித்தாள் கல்பனு.

ரமேஷ் பக்கத்து அறையில் படுக்கையை உதறினுன்.

''பாத்ரூம் எங்க இருக்கு?''

''ரமேஷ், ப்ருந்தாவுக்கு கொஞ்சம் பாத்ரும காட்டிரேன். ப்ளீஸ். எனக்கு ரொம்ப டயர்டா இருக்குபா.



ஸ்பெய்ன் ராணுவத்திறைல் நிர்மூலமாக்கப்பட்ட 'கெர்னிகா' நகரை பிக்காஸோ ஓவியம் தீட்டி உலகப் புகழடைந்தார். ஓவியம் தீட்டிய சில ஆண்டுகளுக்குப் பின் ஒரு நாள் அவரைச் சந்தித்த ஒரு ஸ்பெய்ன் ராணுவ அதிகாரி அந்த ஓவியத்தைப் பாராட்ட விரும்பினுர்.

பிக்காஸோவிடம் அவர் கேட்டார்: ''கெர்னிகாவுக்குக் காரணம் நீங்களா?''

பிக்காஸோ: ''இல்லே! நீங்கள்!''



அவன் கூட போ.''

விளக்கு அணேந்ததும் பேச்சு நின்றது.

ரமேஷ் எலெக்ட்ரிக் ரேசரை கன்னத்தில் ஓடவிடும் சப்தம் கேட்டு ப்ருந்தா கண் விழித்தாள். தாங்க முடியாத மேல் வலி. கண்களே மூடிக்கொண்டாள். கல்பனு சைனு பீங்கான்களே ஸிங்க்கில் அலசினுள். ஒரு டிரான்ஸிஸ்டர் மீண்டும் தலைப்புச் செய்திகள் படித்தது.

'...பிரபல தொழிலதிபர் காத்த பெருமாளின் ஒரே புதல்வரும் பிரபல விளேயாட்டு வீரருமான ஆர். கே. கோபால் நுங்கம்பாக்கத்திலுள்ள அவரது இல்லத்தில் சந்தேகத்திற்குரிய முறையில் நேற்று இரவு இறந்து கிடந்தார். நேற்று மாலே காரில் வீட்டிலிருந்து வெளியேறியதாகச் சொல்லப்படும் அவரது துணேவியாரைப் பற்றி இதுவரை எந்தத் தகவலும் கிடைக்கவில்லே...'

மின்சார ரேசர் சப்தத்தை நிறுத்தியது. கல்பனு ஹாலுக்குள் ஓடிவந்தாள். இருண்ட ப்ரௌன் நிற வளேயம் ப்ருந்தாவின் முகத்தின் எதிரே சுழன்றது.

'...அடுத்த நிகழ்ச்சி இன்னும் சில விஞடிகளில் தொடரும்...

— தொடரும்

# தொட்டதெல்லாம் பொன்னாகும்




## சவீதா

க்ரீன்வேஸ் சாலையின் திருப்பத்தில் ரமேஷ் தன் ராஜ்தூத்தை பந்தயக் குதிரையைப்போல விரட்டினான். சுருக்குப்பையைக் கழுத்தில் தொங்கவிட்டு, நீளமுடி பின்னோக்கிப் படபடக்க...

எழும்பூரில் மாண்டியத் டவர்ஸ். சதுரக் கோபுரத்தின் பதினைந்தாவது மாடி. ஒரு ஃப்ளாட்டின் வாசலை ஒட்டி 'டாக்டர் திருமதி உமா பரமேஸ்வரன், போலீஸ் ஸர்ஜன்' என்ற பெயர்ப் பலகையைத் துடைத்த வேலைக்காரி கணகணவென்று தொலைபேசி கூப்பிட்டதும் உட்புறம் ஓடினாள். பின்பக்கம் பால்கனியில் அமர்ந்து காலைத் தேநீரை உறிஞ்சிவிட்டு பனிப்படலத்துக்கு ஊடே துறைமுகக் கப்பல்களின் கொடி மரங்களில் பார்வையைப் பதித்த டாக்டர் உமா, வேலைக்காரி கொண்டு வந்த தொலைபேசியை வாங்கி மடியில் குழந்தையைப் போல அணைத்துக்கொண்டு 'ஹலாவ்' என்றார். கன்னத்தில் வெள்ளிக் கம்பிகளாக மயிர்க்கற்றை சுருண்டிருந்தது.

ரமேஷின் பைக் கடற்கரை ஓரத்தில் படுவேகமாகப் பறந்தது.

"மார்னிங் மிஸ்டர் ராம்" என்றாள் டாக்டர் உமா.

"என் குரலை வெச்சு என்னைச் சரியா கண்டுபிடிக்கிற ஒரே நபர் நீங்கதான் டாக்டர்."

"தேங்க் யு"

"பேப்பர் பாத்திட்டீங்களா?"

"ஆமா. என்னால நம்பவே முடியல. ஐ நோ ஹிம் வெரி வெல். போனவாரம்கூட ஒரு ஃபங்ஷன்ல பாத்தேன். நைஸ் – சாப்..."

"இன்ஸ்பெக்டர் இன்னும் ஒன் ஆர் டு அவர்சில இன்க்வெஸ்ட் முடிச்சிருவார். பாடி மத்தியானத்துக்குள்ள மார்ச்சுவரிக்கு வந்திடும்..."

"வழக்கம்போல அவசரப்படுத்த ஆரம்பிச்சிட்டீங்களா. போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் இன்னிக்கு நிச்சயம் கிடைக்காது."

"அதுக்கில்லே டாக்டர். கோபால் சாதாரண ஆள் இல்லேன்னு உங்களுக்குத் தெரியும்."

"சாதாரண ஆளுக்கு உபயோகப்படுத்தற கத்தியையும் கத்திரிக்கோலையும்தான் பங்களாவாசிக்கும் உபயோகப்படுத்தறோம்."

"எதுக்குச் சொல்றேன்னா டாக்டர், சாயங்காலப் பத்திரிகைல அவன் அவன் ஆளுக்கு ஒரு கதை சொல்லுவான். நாளைக்கு அசெம்பிளி வேற கூடுது. எதிர்க்கட்சிக்காரன் சும்மா உக்காந்திருக்க மாட்டான். கேள்வி மேல கேள்வி கேப்பான்."

"அதனால...?"

"டி. சி. உங்ககிட்ட பர்ஸனலா சொல்லச் சொன்னாரு. உங்க ஒபினியன் இன்னிக்கு சாயங்காலத்துக்

குள்ள கிடைச்சிட்டா நல்லா இருக்கும்.''

''ஸாரி மிஸ்டர் ராம். நான் இன்னும் பாடியையே கண்ணுல பாக்கல. இன்சிடன்ட் நடந்த இடத்த என் திருப்திக்காக நான் பாக்கணும். ஃபாமிலி மெம்பர்சோட பேசணும். மனைவிய வேற காணோம்னு சொல்றீங்க. சட்டப்படி மத்தியானத்துக்கு மேல போஸ்ட்மார்ட்டம் பண்றதே தப்பு...

ஆ... ஐயையோ... அம்மாஆ...

வார்டில் இருந்து பரவிய பெண்ணின் நிறைமாதக் கூப்பாடு பிராந்திய அமைதியை அடிக்கடிக் குதறியது.

வராந்தா சோபாவில் கல்பனா. வேப்ப மரத்தின் அடர்த்தியைச் சாய்வாக ஊடுருவிய காலை வெயில் நொறுங்கிய பிஸ்கட் துண்டுகளைப் போல அவள் உடலில் உதிர்ந்திருந்தது. பார்க்கிங் சதுரத்துக்குள் முகத்தைத் திருப்பிக்கொண்டு சிவப்பு கார் கோணலாக நின்றது. வைர ரவைகளைத் தெளித்ததைப்போல எதிரே புல் தரையில் பனித்துளிகள். கோடைகால முடிவைக் கூச்சலிட்டுப் பிரச்சாரம் செய்த பறவை வானத்தில் தலைமறைவாகியது. கடற்காற்றின் ஆசியுடன் வேப்பம்பூ மணக்கும் அதிகாலை. ஆனால் எதையும் ரசிக்கும் நிலையில் கல்பனா இல்லை.

வெள்ளை உடை நர்ஸ், பால் 'ட்ரம்'மைத் தள்ளிக்கொண்டு வந்தாள். அவளுக்கு வழிவிடுவதற்காக நீட்டியிருந்த கால்களை கல்பனா சற்றே இழுத்துக்கொண்டாள். மீனா மெடர்னிடி ஹோம் என்பது ட்ரம்மின்மேல் எம். எம். எச். ஆகச் சுருங்கியிருந்தது.

''ஹவ் இஸ் ஷி நவ் டாக்டர்?''

பெரிய கொண்டையும் படு சுறுசுறுப்புமாக விரைந்த லேடி டாக்டரை கேள்வியால் கொக்கி போட்டு நிறுத்தினாள், கல்பனா.

''மிஸஸ் கோபாலைத்தானே கேக்கறீங்க. ஷீ'ஸ் ஆல்ரைட். பயப்படறதுக்கு ஒண்ணுமில்லே.''

பதில் சொன்ன டாக்டர், கல்பனாவின் ஸ்லீவ்லெஸ் டாப்பையும் அடிவயிற்றில் டெனிம் பான்ட்டின் கெடுபிடி இறுக்கத்தையும் ஒரு நொடி ஆராய்ந்தாள்.

''நான் உள்ளே போய்ப் பார்க்கலாமா?''

''ஓ தாராளமா.''

சந்து போன்ற நீள நடைபாதையில், டக் டக் டக் என்று ஹீல்ஸ் ஒலி எழுப்ப, நடந்தாள் கல்பனா. எதிரே வந்த ஸ்ட்ரெச்சருக்கு ஒதுங்கி வழி விட்டாள். உட்புற ப வடிவ வராந்தாவில் இடப்புறம் திரும்பினாள். டெட்டால், பினயில் நெடி. பத்தாம் நம்பர் அறைக்குள்ளே பிரவேசித்தாள்.

க்ரீஸ் படிந்த காக்கிச் சட்டைகளை வாசலில் சோதனை போட்டவன் நைட் ஷிஃப்டை முடித்த தொழிலாளர்களை வெளியே தள்ளினான். விடுபட்ட உற்சாகத்துடன் பக்கத்து பங்க் கடையில் பீடி பற்றவைத்த துரைராஜ், ''நமக்கு போனஸ் போடற நேரத்திலயா மனுசன் சாவணும்?'' என்றான்.

''சாகிற வயசா? ஏதோ நடந்திருக்கு.''

''பெரிய எடத்து சமாச்சாரம். இங்க வெச்சு எதையும் பேசக்கூடாது.''



இனிமே சொட்டைத் தலையன் ஆட ஆரம்பிச்சிருவான்.''

''ஆமா. இனிமே அவன் வெச்சது தான் சட்டம்.''

ரமேஷின் பைக் பட்டினப் பாக்கத்தைப் பார்க்க ஓடியது.

படுக்கையில் அரை நினைவு பெற்ற ப்ருந்தா மூடிய விழிகளுடன் மெல்ல அசைந்தாள். உடம்பின் உட்பக்கம் சுரண்டப்பட்டு தீப்பற்றி எரியும் வேதனை. தொடைகளுக்கு இடையே 'சானிடரி பாட்' திணிக்கப்பட்ட உணர்வு.

தலைக் குழந்தையை அவள் இழந்திருந்தாள்.

தணிவாகக் குரல் எழுப்பினாள், கல்பனா.

பாருங்கல்லைப் புரட்டும் பிரயத்தனத்துடன் இமைகளை மேலேற்ற முயன்றாள், ப்ருந்தா.

''நீங்க கொஞ்சம் வெளில இருங்கம்மா''

ஊசி மருந்துடன் உள்ளே வந்த நர்ஸ் கடுப்புடன் சொன்னாள். சாமி வரம் கொடுத்தும்...

கல்பனா வெளியேறினாள்.

வெள்ளைத் துணியால் உடம்பைப் போர்த்திக்கொண்டிருந்த முஸ்லீம் கர்ப்பிணிப் பெண்ணை அவசர வாசலுக்கு அருகே ஆட்டோவில் இருந்து இறக்கினர். அவளை வரவேற்க சக்கர





அடுத்த வாரம் முடியப்போகிற என் தொடர்கதைக்கு இப்பப்போய் எதுக்கு முன்கதைச் சுருக்கம் எழுதித்தரச் சொல்றீங்க?''

''இதுவரை என்ன படிச்சோம்ங்கிறதே மறந்து போயிடுச்சுனு நிறைய வாசகர்கள் கடிதம் எழுதியிருக்காங்க!''

– உ. ராஜாஜி

நாற்காலியைத் தள்ளிக்கொண்டு இரண்டு ஆயாக்கள் ஓடினர்.

பழையபடி முன்பக்க வராந்தாவில் கிடந்த சோபாவுக்கு கல்பனா வந்தாள். ரமேஷின் பைக் சப்தத்திற்காக செவியை விரித்தபடி காத்திருக்கத் தொடங்கினாள்.

ஒரு மணி நேரத்துக்கு முன் போலீசுக்குத் தகவல் சொல்லப்போனவன், ஸ்டேஷனுக்கு எதற்காகப் போகிறான்? தொலைபேசி மூலமாகத் தகவல் கொடுத்திருக்கலாமே. ஒரு வேளை ஐ. ஜி. அலுவலகத்துக்குப் போயிருப்பானோ?

'கையில அகப்பட்டதை அவர் மேல எறிஞ்சுட்டு ஜஸ்ட் லெக் தட் கிளம்பி வந்துட்டேன்'

இரவில் ப்ருந்தா சொன்னது.

அவள் கையில் அப்படி என்னென்ன அகப்பட்டிருக்கும்?

சீப்பு...

பேப்பர் பாக் நாவல்... நிறைய வாசிப்பாள்.

தம்ளர்...

ரொட்டி ஸ்லைஸ் பண்ணும் கத்தி...

கத்திரிக்கோல்...

படுகொலை செய்துவிட்டுத்தான் தஞ்சம் புக என் வீட்டுக்கு அப்படி நள்ளிரவில் ஓடி வந்திருப்பாளோ?

நான் ரமேஷுடன் வாழ்க்கையைத் தொடங்கி ஏறத்தாழ ஒன்றரை வருடங்களுக்குப் பிறகுதான் ப்ருந்தா – கோபால் திருமணம் நடந்தது. இவ்வளவு அற்பாயுசில் இவளுடைய புதிய வாழ்க்கை அநியாயமாகப் பறிபோய் விட்டதே.

'போடீ வெளியே' என்று கூச்சலிட்டானாம். இவளுக்குப் பொத்துக் கொண்டு வந்துவிட்டதாம்.

இனிமேல் எங்கே அவன் கூச்சலிடப்போகிறான்?

நேற்றுக் காலைவரை ஒரே [illegible]க் கையில் நெருக்கமாகப் படுத்து இ[illegible]ன் விலாவிற்கு அனலாக இருந்தவன். 37° ஸெல்ஷியஸ் உஷ்ணம் அந்த உடம்பில் இருந்து இறங்கி, சில்லிட்டிருக்கும். ரிகர் மார்டிஸ் விறைப்பு முகத்தில் ஆரம்பித்து உடம்பு மரப் பலகையாக மாறியிருக்கும். கற்றையாகப் புகையும் ஊதுவத்திக்கு அருகே போஸ்ட்மார்ட்டம் மேடையில் ஸ்கால்பெலும் கத்திரியும் அவன் வயிற்றின் உட்புறத்தை இந்நேரம் உழுதிருக்கும். அவன் நெற்றியில் கோடு கிழித்து சுத்தியால் ஒரு டாக்டர் கபாலத்தைத் திறந்து மூளையைப் பார்த்திருப்பார். அவன் இதயம், நுரையீரல், கல்லீரல் துண்டங்கள் ப்ரிசெர்வேடிவ் சொலுஷனில் ஊறியபடி புதுக்கதை சொல்வதற்காக ஃபொரன்சிக் ஆய்வுக்கூடத்துக்குப் பயணம் போயிருக்கும்.

கோபால் சிதறியிருப்பான்.

போடீ வெளியே என்று அவ[illegible] கூச்சலிட்டால் இவள் வாரிச் சுருட்டிக் கொண்டு வெளியேறிவிடுவதா? தாலி கட்டின எல்லாக் கணவர்களும் என்றாவது ஓர் நாள் தேய்ந்து பழசாகிப்போன மனைவியைப் பார்த்துச் சொல்லும் வார்த்தைகள்தாமே இவை.

இருக்காது. அப்படிப் புருஷன் கூச்சலிட்டதற்காக இவள் ஓடி வந்திருக்கமாட்டாள். ஏதோ ஒரு சின்ன

உள் விவகாரம் அவர்களுக்கு இடையே சிறுகச் சிறுக வளர்ந்து நேற்று மாலை முற்றி வெடித்திருக்க வேண்டும். அது என்ன? எதுவாக இருந்தாலும் ப்ருந்தா நிச்சயமாகக் கொலை செய்திருக்க மாட்டாள். அவ்வளவு துணிச்சல் இவளுக்குக் கிடையாது. அப்படி ஒரு பயங்கரத்தைச் செய்து விட்டு வந்திருந்தால் என் படுக்கையில் இவளுக்குத் தூக்கமே வந்திருக்காது. ஒருவேளை இப்படி இருக்கலாம். கோபால் மீது இவள் கண்டதையும் எறிந்துவிட்டு ஓடியதை அவனுடைய எதிரி எவனாவது பார்த்து விட்டு, கொலைப்பழி மனைவிமீதுதான் விழும் என்ற நம்பிக்கையுடன் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி கோபாலைத் ...துக் கட்டியிருப்பான். அது யார்? யாருக்குத் தெரியும்? கோபாலையே நேரில் பார்த்தது கிடையாது.

கோபாலின் படங்கள் வாரப் பத்திரிகைகளில், தினசரிகளின் ஞாயிறு மலர்களில் தனியாகவும், ப்ருந்தாவுடன் இணைந்தும் வெளியாகி இருக்கின்றன. 'இவ்வாரத் தம்பதிகள்' என்ற தலைப்பில் வாராவாரம் ஒரு வார இதழ் வெளியிட்ட ஜோடிகளில் ப்ருந்தா – கோபால் படம் முதல் வாரம் வந்தது. 'கணவரைப் பற்றி மனைவி' என்ற பேட்டிக் கட்டுரையில், கோபாலுக்கு மனைவியானது முற்பிறவியில் தான் செய்த புண்ணியம் என்று ப்ருந்தா ஒரு முறை சொல்லியிருந்தாள்.

அப்படி நெருக்கமாக இருந்தவர்களுக்கு இடையே நேற்று மாலையில் என்ன தகராறு மூண்டிருக்க முடியும்?

ரமேஷின் பைக் சாந்தோம் மாதா கோவிலைக் கடந்தது. வானொலி கலையத்தின் அருகே எதிர்பாராமல் ஒரு காலி லாரி தன் பின்பக்கத்தைச் சாலைக்குள் ரிவர்சில் புகுத்த, ரமேஷ் இடமாக ஒடித்து, எதிரே குப்பைத் தொட்டி வேகத்துடன் ஓடிவர, ஸடன் பிரேக் டயரைத் தேய்க்க...

ஆ... ஐயோ... அம்மாா...

வார்டில் இருந்து மறுபடியும் கூப்பாடு. இன்னும் அந்தக் கர்ப்பிணிக்கு பெல்விஸ் விரியவில்லைபோல இருக்கிறது.

கொலை செய்யப்பட்ட கோபாலின் மனைவி மயங்கிய நிலையில் இந்த மருத்துவமனையில் படுத்திருப்பதை ரமேஷ் போலீசிடம் இந்நேரம் தெரிவித்திருப்பான். இன்னும் சிறிது நேரத்தில் போலீஸ் ஜீப்பும் புல்லெட் வண்டிகளும் வ்யர்லெஸ் சப்தங்களும் இந்த மகப்பேறு மருத்துவமனையைச் சூழ்ந்துகொள்ளும். ப்ருந்தா கண் விழித்துப் பேசும்வரை போலீசார் என்னிடம் கேள்வியாகக் கேட்டுக்கொண்டிருப்பார்கள்.

காக்கிச் சட்டைகள் இங்கே கூடுவதற்குள் நேற்றிரவு கொலை செய்யப்பட்ட பிரமுகர் கோபாலின் மனைவி தான் பத்தாம் நம்பர் அறைக்குள்ளே படுத்திருப்பவள் என்பதையும், காலையில் ட்ரான்சிஸ்டர் சொன்ன மாநிலச் செய்திதான் அவளுடைய கருச்சிதைவுக்குக் காரணம் என்பதையும் சீஃப் டாக்டரிடம் சொல்லிவிடலாமா? எதற்காகச் சொல்ல வேண்டும்?

ப்ருந்தாவை இங்கே யாரும் இன்னும் அடையாளம் கண்டுகொள்ளவில்லை. உலகத்தில் எத்தனையோ கோபால்கள். எத்தனையோ மிஸஸ் கோபால்கள். கட்டிலில் தொங்கும் கேஸ் ஷீட்டில் இவள் ஒரு மிஸஸ் கோபால். அவ்வளவுதான். ப்ருந்தா என்ற பெயரை நான் இங்குள்ளவர்


••சின்ன மீனை போட்டாதான்

வே. சீதாராமன்

> சீன மொழி டைப்ரைட்டர்களில் 7000-க்கும் மேலான எழுத்துக்கள் உள்ளன. அந்த டைப்ரைட்டரின் கீபோர்டே அரை மீட்டர் அகலம் இருக்குமாம்! ரொம்ப வேகமாய் டைப் செய்பவர் நிமிடத்திற்கு 11 வார்த்தைகள் டைப் செய்தாலே அது படுவேகமாம்!
>
> —'வேம்பு'
> ('Fascinating Facts')

களிடம் என்னை அறியாமல் மறைத்திருக்கிறேன். அதுவும் நல்லதுக்குத்தான். ப்ருந்தா என்று அவள் படுக்கை அருகே நான் கூப்பிட்டபோது நல்ல வேளையாக அந்தச் சிடுமூஞ்சி நர்ஸ் பக்கத்தில் இல்லை. தேவையில்லாததை எதற்காகச் சொல்லி அனாவசிய பரபரப்பை ஏற்படுத்த வேண்டும்? ரமேஷ் வரட்டும் பார்த்துக்கொள்ளலாம்.

கல்பனா பலவிதமாகக் குழம்பினாள். ரமேஷ் வருவதற்குள் கல்பனாவின் ஜாதகத்தைக் கொஞ்சம் அலசலாம்.

கல்பனாவின் அப்பா ரயில்வேயில் பெரிய பதவியில் இருந்தவர். இரண்டு வருடங்களுக்கு முன் ரிடையர் ஆகி பெரம்பூரில் மூத்த மகன் வீட்டில் இருமித் துப்பிக்கொண்டிருக்கிறார். இந்தக் கதைக்குத் தேவையில்லாத சூதுவாதில்லாத நல்ல மனிதர்.

கல்பனாவின் அம்மா ஐம்பத்திரண்டாவது பிறந்த நாளன்று மெழுகு வத்திகளை ஊதி அணைத்தபோது மயக்கம் அடித்து விழுந்தாள். தண்ணீரைத் தெளித்ததும் கண்களைத் திறந்தாள். அப்புறம் மூடமுடியவில்லை. அப்பாதான் தன் விரல்களால் அவள் இமைகளை இழுத்து மூடினார்.

ரயில்வே காலனியின் மர நிழல்களில் கல்பனா கொட்டம் அடித்த ரம்யமான பள்ளி நாட்கள் இன்றும் அவள் இரவுக் கனவுகளில் உயிர்பெற்று எழுகின்றன.

நாலாவது வந்தபோது மார்புகள் கொப்பளிக்க, ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வித்தியாசத்தைத் தெரிந்து கொண்டாள்.

'பையன்களோட சுத்தாதே. தொடவிடாதே. கெட்ட விஷயமெல்லாம் செய்வான். பொம்பளைப்பிள்ளை ஜாக்கிரதையா இருக்கணும்' என்று அம்மா குளியல் அறையில் தலையைத் தேய்த்துவிட்டபோது காதருகே ஒரு நாள் சொன்னாள். சொன்னதுதான் தப்பாகப் போய்விட்டது.

கெட்ட விஷயம்னா என்ன? அம்மாவிடம் எப்படிக் கேட்பது? அவளைக் கேட்காமலேயே தெரிந்துகொள்ள முடியாதா?

டானியை சிநேகிதம் பிடித்தாள். ஆங்கிலோ இந்தியச் சிறுவன். பள்ளிப் பையை முதுகில் இருந்து இறக்கி வைத்துவிட்டு கல்பனாவை மரத்தில் சாத்தி அவள் உதட்டில் 'ச்'சிட்டான். இப்படித்தான் மம்மிக்கு டேடி கொடுப்பார் என்றான். அப்போது கல்பனாவின் விரல்கள் அவனுடைய அரை நிஜாரின் பொத்தான்களில் விளையாட அவன் பிடுங்கிக்கொண்டு ஓட்டம் பிடித்தான். அவன் லாயக்கில்லை.

மழைக்காலத்துப் புல்தரையில் சிவப்பு வெல்வெட் பட்டுப்பூச்சிகளைத் தீப்பெட்டியில் சேகரித்தாள். எட்டாவது வந்தபோது பலநாட்டுத் தபால் தலைகளைச் சேகரித்தாள். கல்லூரி வாசலுக்குள் கால் வைத்ததும் ரசனைகள் மாறி பல நிறத்தில் பாய் ஃப்ரெண்டுகளைச் சேகரிக்கத் தொடங்கினாள்.

ட்ர ட்ர ட்ர ட்ர

பைக் சப்தம். கல்பனாவைப் பற்றி இன்னொரு சமயம் இன்னும் விரிவாகப் பேசலாம்.

சோபாவிலிருந்தவள் துள்ளி எழுந்தாள். முகத்தில் ஏமாற்றம். பைக்கில் வந்தது ரமேஷ் இல்லை. எவனோ ஒருவன்.

இவன் எங்கே தொலைந்திருப்பான்? மணி 12.55. காலை ஒன்பது மணிக்குப் போனவன். ஸ்டேஷனுக்கு அனுப்பியது தப்பாகப்போய்விட்டதே. ஒரு வேளை தகவல் சொல்லப்போனவனைப் பிடித்து வைத்துக் கேள்வி கேட்டுக்கொண்டிருப்பார்களோ? மனதில் சின்ன 'திக்.'

பைக்கில் வந்து இறங்கியவனைப் பார்த்து ஏமாந்தவள் பரபரப்புடன் டக் டக் ஒலி எழுப்பி சீஃப் டாக்டரின் அறையை நோக்கி விரைந்தாள்.

—தொடரும்

புலிகள் ஆயிரம் சேர்ந்து உறுமுவதுபோல் புயல் காற்றில் அலையெழுப்பிக் கடல் கொந்தளித்துக் குமுறுகிறது! சுழன்றடிக்கும் சூறவளியோ மரங்களைப் பெயர்த்து தலைகீழாக நட்டு விளையாடுகிறது! பளபளக்கும் வாட்களைக் கொண்டு முகத்துக்கெதிரே வீசுவதுபோல மின்னல் வெட்டுகிறது! வானக் கூரை இடிந்து விழுந்து பல திக்கிலும் சிதறுவதுபோல இடி முழக்கம்! காலந்தாழ்ந்து வந்த கூலிக்காரனைக் கடின மனமுடைய முதலாளியின் கையாள் சவுக்கு கொண்டு தாக்குவதுபோல மழைச் சரங்கள்! இருட்டோ இரக்கமற்றோன் இதயத்தைப் போல!

இந்தச் சூழலில் ஒருவன் தன்னந்தனியாக நடக்கிறான். கம்பளித் துணி போட்டு மூடிய ஒரு பொருள் அவன் கைகளில் அணைத்தபடியிருக்கிறது! அந்தத் துணிக்குள்ளிருந்து மெல்லிய குரலில் அழுகைச் சத்தம்! ஆம்; ஒரு சின்னஞ்சிறு குழந்தைதான் அது!

அந்த அரும்பை ஈன்றெடுத்த அன்னை, கண்ணை மூடி விட்டாள்! தந்தையையும் இயற்கையின் வாய் விழுங்கிவிட்டது! அந்தக் குழந்தையின் அண்ணன் அவன்! அதைக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டிய இடத்திலே சேர்த்து விட்டால் அதைச் சீராட்டி வளர்க்க எத்தனையோ பேர் காத்துக்கொண்டிருக்கிறார்கள்.

வசுதேவன்; தனக்கும் தேவகிக்கும் பிறந்த எட்டாவது குழந்தையை ஆயர்பாடியில் கொண்டுபோய் விட்டுவிட்டால் ஆபத்து எதுவுமின்றி அமோகமாக வளர்ந்திடும் என்பதற்காக நெடும்பயணமொன்றை நள்ளிரவில் மேற்கொண்டான் என்று கண்ணன் கதையில் ஒரு நிகழ்ச்சி சித்தரிக்கப்படுமல்லவா; அதைப்போலத்தான் – தனது மழலைத் தம்பியை மார்போடு அணைத்து அந்தப் பயங்கர இருளில் பயணத்தை நடத்துகிறான்.

அவனுடன் தொடக்கத்தில் துணைக்கு வந்த சில பேர் மழைத் தூறலைக் கண்டதுமே வழியிலேயே திரும்பிவிட்டனர்!

''நாம் ஆருயிர் நண்பர்களடா! அன்புச் சகோதரர்களடா!'' என்றெல்லாம் இனிக்கப் பேசி – அவனுடன் ஆடிப் பாடிக் களித்த தோழர்கள் எல்லாம் – பாதிப் பயணத்திலேயே பலமான இடியோசை, மழை, புயல்காற்று – இவற்றினைக் கண்டு மிக வேகமாகத் திரும்பி ஓடிவிட்டனர்!

அவர்களை நினைக்க நினைக்க அவனுக்கு சிரிப்பாக வந்தது! இன்பத்தை மட்டுமே சுவைக்கக் கற்றவர்கள், துன்பத்தைத் தொடவும் அஞ்சுகிறார்கள் என்றால் – இவர்கள் என்றைக்குமே யாருக்கும் உற்றவர்களல்லர் என்று அவனது உதடுகள் முணுமுணுத்தன!

இயற்கையின் சீற்றத்தால் ஏற்பட்ட வேதனையை விட – இருக்கும்போது இளித்துக் கிடந்தவர்கள்; இன்னல் வந்துற்றபோது முகம் சுளித்து விலகிவிட்ட வேதனைதான் அவனை மிகவும் வாட்டியது!

இருப்பினும் தனது கடமையை வெற்றிகரமாக நிறைவேற்றி அந்தக் குழந்தையைப் பாதுகாத்துவிட்டோம் என்ற மகிழ்ச்சியைப் பெறுவதற்காக அவன் இயற்கையின் தாக்குதலை எதிர்த்து வீரநடை போட்டான். இறுதியில் வெற்றியும் பெற்றான்.

அந்தக் கடமை வீரனைப் பார்த்துத்தான் வள்ளுவர் இவ்வாறு பாராட்டுகிறார்.

> ''உரிய கடமையைச் செய்வதில் சோர்வு காணமல் எவனொருவன் முயற்சி மேற்கொள்கிறானே; அந்தப் பெருமைக்கு மேலாகப் பிறிதொரு பெருமையில்லை.''

அதற்கு இது குறள்:–

> ''கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
> பெருமையின் பீடுடையது இல்.''

*அதிகாரம்: 103* குடி செயல்வகை *பாடல்: 1021*

கைதூவேன் = சோர்வடையமாட்டேன்.

ஸ்டர்லிங் அவென்யு.

வானக்கூரையில் சூரியன் எறிக் கொண்டிருந்த முற்பகல். முகத்தில் வெப்பத்தைப் பூசும் இளங்காற்று.

லின் அகால மரணத்துக்கு ... கொரு காரணத்தை ஊகித்தனர்.

# தொட்டதெல்லாம்

# பெண்ணுக்கும்

'பருந்தாவன்' பங்களாவின் தலை வாயிலைச் சுற்றி சாலையில் அரை பர் லாங் நீளத்துக்கு கும்பல்கள். கோபா




''கார், நகை எல்லாத்தையும் சுருட்டிட்டு ஓடிட்டாளாமே.''

''நல்ல புண்ணியவான். அவருக்கு இப்படி ஒரு பொண்டாட்டி வாய்க்கணுமா?''

''படிச்சவனுக்கு அறுவு எங்கய்யா போச்சு. மேல் நாட்ல போயி படிச்சாரு மே. என்ன படிச்சான்? ஊர் மேஞ்சிக்கிட்டிருந்தவளை ஊட்டுக்குள்ள அழைச்சிக்கிட்டு வரலாமா? அப்பன் பேச்ச கேக்காம அன்னிக்கு ஆடினான். இன்னிக்கு என்ன ஆச்சு?''



சஷீதா

''பெரியவர் கோவிச்சிக்கிட்டு இங்கேர்ந்து போனதுக்கே அவதான் காரணமாம்.''

''பெரியவர் என்னிக்குமே இங்க இருந்ததில்லய்யா. உன்பாட்டுக்கு எதயாவது பேசாத. எனக்குத் தெரிஞ்சி பத்து வருசமா அடையாறு பங்களாவிலதான் அந்த மனுஷன் இருக்காரு.''

''கோபாலுக்கு கல்யாணம் ஆகற வரைக்கும் இந்த பங்களா சும்மா தான் காலியாக் கிடந்தது. அது எனக்கு நல்லாத் தெரியும். பெரியவரும் சம்சாரமும் மாசத்தில ஒரு நாள் ரெண்டு நாள் வந்து தங்கிட்டுப் போவாங்க.''



''பாருங்க சார் அநியாயத்தை. பட்டப் பகலில் பஸ் ஸ்டாண்டில் ஒரு ஆள் என்னிடம் வந்து கேட்கிறான் – சாராயம் சாப்பிடுறீங்களா, கிளாஸ் ரெண்டு ரூபான்னு!''

''அடடே.... என்ன சொன்னீங்க அவனிடம்?''

''ஏம்பா, உன்னிடம் வாங்கிக் குடிச்சேன்னா, நான் பைக்குள் வச்சிருக்கிற நாலு லிட்டரை யாரிடம் விக்கிறதாம்'னு கேட்டேன்!''

– என். எஸ். வி. மூர்த்தி

---

''நாகராஜு, இணையற்றவன் பாத்தயா?''

''மூணு தபா.''

''ரஜனிய ஜெய் கார்ல துரத்தறது, ரஜனியும் மாதவியும் டுயட் பாடறது, அப்பால கட்சீ ஃபைட் அல்லாம் இந்த பங்களாவிலதான் எடுத்தாங்க.''

''அது இங்க இல்லேடா. கொடைக்கானல்ல எடுத்தது. ப்ருடா உடாத.''

''சூட்டிங்க நான் கண்ணால பாத்தேங்கறேன்.''

''கடலே... கடலே... சூடான வறுத்த கடலே...''

''ஊர்வலம் எத்தனை மணிக்கு சார்?''

''பாடி அப்பா ஊட்டுக்குப் போயிருச்சி. இங்க ஒண்ணுங் கிடையாது.''

தலைபோகிற அவசரத்துடன் ஒரு ஆட்டோ கும்பலை விலக்கிக்கொண்டு ஓடி வந்தது. அரைகுறையாகத் திறந்திருந்த உயரமான இரும்பு 'கேட்' வரை சௌகரியமாக ஓடியது. ஓரமாக நின்று டீ சாப்பிட்ட போலீஸ்காரனை எதிர்பாராமல் பார்த்ததும் மேலே செல்லத் தயங்கியது.

உள்ளங்கையைக் காட்டி ஆட்டோவை நிறுத்தச் சொன்ன போலீஸ்காரன் மிச்சமிருந்த சாயாவைத் தொண்டைக்குழிக்குள் அவசரமாகக் கவிழ்த்தான். காலி தம்ளரைக் காத்திருந்த சிறுவனிடம் ஒப்படைத்தான். ஆட்டோவிடம் ஓடிவந்து குனிந்து பார்த்தான். உள்ளே –

பெண். சிவப்பாக ஹேமமாலினியின் விசால நெற்றி. கூந்தலில் பூக்குவித்து, கருப்புக் கண்ணாடியால் விழிகளை மறைத்திருந்தாள். ஷிஃபான் புடவை ஆரஞ்சுப் புகைபோல அவளைச் சூழ்ந்திருக்க, முதுகில் கிடக்கவேண்டிய பருமனான ஒற்றைப் பின்னலை இழுத்து மார்பில் போட்டிருந்தாள். கைப்பைக்குள்ளிருந்து விஸிட்டிங் கார்டு போன்ற சதுர அட்டையை எடுத்து காக்கிச்சட்டையிடம் நீட்டினாள்.

சிறப்பு நிருபர்
பாலம்
(வார இதழ்)

''இப்ப யாரையும் விடக்கூடாதும்மா. மினிஸ்டர் வரப்போறார்.'' கான்ஸ்டபிள் அட்டையை அவளிடமே திருப்பிக் கொடுத்தான். ஆட்டோவை ஏழெட்டுப்பேர் சூழ்ந்து, தலைகளை முட்டி மோதிக்கொண்டு உள்ளே வீற்றிருந்த பெண் உருவத்தைத் தரிசிப்பதற்காகப் போட்டி போட்டனர்.

''மிஸ்டர் ராமைப் பாக்கணும்.'' ஹேமமாலினியின் டூப் பேசினாள்.

''அப்படி யாரும் இல்லம்மா. நீ ஏய்யா இங்க வந்து தலைய உடுற?

உங்களுக்கு என்ன சார் வேணும்? இங்க என்னய்யா கூட்டம். போங்கய்யா. போலீஸ்காரன் மயிரப்புடுங்கருன். வேடிக்கை பார்க்க வந்திருங்க. போ... அந்தாண்ட போ... போறியா இல்லே...'' சிறிது விரட்டிக்கொண்டு ஓடிய கான்ஸ்டபிள் லட்டிக் கம்பைத் தாறுமாருகச் சுழற்றி தந்திக் கம்பத்தின் மீதும், மூடிக்கிடந்த பங்க் கடை மீதும் டம் டமார் என்று தன் கோபத்தைக் காட்ட கூட்டம் சிதறியது.

''வெக்கங்கெட்ட மாடுகளே. போயி பொழைப்பப் பாப்பீங்களா...''

''ஜிவாஜி வர்ரூரா?''

புழுதியில் குளித்திருந்த சிறுவன் 'கீச்'சென்று கேட்டான்.

''இங்க யாரும் வரமாட்டாங்க. எல்லாம் அடையார்லதான். எல்லாரும் அங்க போயி சாவுங்க.''

கத்திவிட்டு எரிச்சலுடன் ஆட்டோ டிரைவரிடம் திரும்பி வந்த கான்ஸ்டபிள் ''சீக்கிரமா அந்தாண்ட எடுத்திட்டுப் போப்பா. வாசலே அடைச்சிக்கிட்டு என் கழுத்த அறுக்காத. இங்க அப்படி யாரும் இல்லம்மா'' என்ருன்.

ஆட்டோவில் அமர்ந்திருந்தவள் கைக்கடியாரத்தைப் பார்த்துவிட்டு, ''பன்னிரண்டு மணி வரைக்கும் இங்கதான் இருப்பேன்னு சொன்னரே.''

''அவரு சொல்லுவாரு... அவருக்கென்ன... யாரு அவரு?''

கான்ஸ்டபிளின் உத்தரவுப்படி ஆட்டோ இடத்தைக் காலி பண்ணத் தயாராகிப் படபடத்தது.

''ராம்மோகன் ஐ. பி. எஸ்., அஸிஸ்டென்ட் கமிஷனர்'' என்ருள் அந்தப் பத்திரிகைப் பெண். விருட்டென்று ஆட்டோ முகத்தைத் திருப்பிக்கொண்டு ஓட...

யாரோ பின்பக்கமிருந்து நெட்டித் தள்ளியதைப்போல ஆட்டோவுடன் ஓடிய கான்ஸ்டபிள் ''ஏய்... இந்தாப்பா... ஆட்டோ... நிறுத்துப்பா... வண்டிய நிறுத்து'' என்று மடக்கி நிறுத்தினுன்.

''அட என்னம்மா நீ. ஏ. சி. ஐயா உள்ளதாம்மா இருக்காரு. ராம்'னு சொன்ன எனக்கு எப்படித் தெரியும். ஏ. சி. மோகன்'னுத்தான் போலீஸ்காரனுக்குத் தெரியும். போம்மா உள்ள. கோவிச்சுக்காதம்மா.'' ஆட்டோ டிரைவரின் தோளைத்தட்டி ''இங்க பாரு. இப்டி நேரா உள்ள போ. விசிறியாட்டம் நாலஞ்சு வாளமரம் நிக்கும். லெஃப்டில திரும்பு. அதான் பங்களாவுக்குப்போற வழி. ரைட்ல போயிராத. பின்கேட் வழியா வள்ளுவர் கோட்டத்துக்குப் போய்ச் சேர்ந்திருவ.''

'கேட்' விரியத் திறந்து ஆட்டோவை வரவேற்றது.

அந்தக் காம்பவுண்ட்டுக்குள் ஒரு பொடானிகல் கார்டனே இருந்தது. கத்தரிக்கப்பட்ட சவுக்குச் செடிகளுக்கு இடையே ஓடிய ஆட்டோ விசிறி வாழை அருகே விலகி, பூ வெள்ளத்தில் மிதந்தது. கோடையின் கடைசித் தூறல்களால் புல்தரை பசுமை பரப்பியது. அரசியல் கட்சியின் தேர்தல் மாநாட்டுக்குப் பந்தல் போட்டதைப் போல திரும்பிய திசையெல்லாம் நிழல்கள். புராதன மரங்களுக்குள்ளே மூழ்கித் திளைத்த பங்களா, பக்கத்தில் நெருங்கி வந்தபோது ஆட்டோ நின்றது. அவள் இறங்கினுள். தலைக்கு மேலே ஒரு போக்கிரிப் பறவை 'விழ்க் விழ்க்' என்று சீட்டியடித்தது. கைக்குள் மடக்கித் தயாராக வைத்திருந்த ஐந்து ருபாய்த்தாளை நீட்டி



நேந்திரப் பழத்திலிருந்து பிராந்தி தயாரிக்கலாம் என்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. நேந்திரப் பழச்சாற்றில் என்ஸைம், ஈஸ்டுகளைச் சேர்த்து புளிப்படையச் செய்து பிராந்தி தயாரிக்கும் முறையை பெங்களூரில் கண்டறிந்துள்ளனர். 1 டன் நேந்திரப் பழத்திலிருந்து 130 லிட்டர் பிராந்தி கிடைக்கிறது.

– புரோபசர்



''டாக்டர்... உண்மையைச் சொல்லுங்க. பிரஷர் பார்க்க இதுவா சரியான முறை!''

—'லாஃப்டர் தி பெஸ்ட் மெடிசின்' என்னும் ஆங்கிலப் புத்தகத்திலிருந்து ரசித்தவர்: எம். ஆர். மனோகர்

ஆட்டோவைக் கத்தரித்தாள். நடந்தாள். மலர்கள் அவளை உரசின. போர்டிக்கோவை அடைந்தாள். ஒரு புல்லெட் பைக்கும் கருப்பு அம்பாசடரும் நின்றன. பங்களாவுக்குள் பேச்சுக் குரல்கள். சற்றுத் தள்ளி மர நிழலில் தனியாக ஒரு ஜீப்.

சுமன் தோற்றத்தை அசைப்பில் காட்டியபடி வராந்தா படியில் வளர்த்தியாக இளமை மிடுக்குடன் மஃப்டியில் இறங்கி வந்தான் ராம். கூட வந்த, குள்ளமான, மீசை வெளுத்த இன்ஸ்பெக்டரிடம் ''டாக்டரம்மாகிட்ட காலேலயே பேசிட்டேன். தகராறு ஏதாவது இருந்தா வீட்டுக்கு போன் பண்ணுங்க. ஹெட் ஏக்கா இருக்கு. போகலாம்னு பாக்கறேன்'' என்றான். இன்ஸ்பெக்டர் விறைப்பான ஸல்யூட்டுடன் விடைபெற்றபோது, ஆரஞ்சு ஷிஃபான் புடவை ராமின் பார்வையை ஈர்த்தது.

ராமைப் பார்த்து அவள் ''ஹலோ'' என்றாள். வரவேற்புப் புன்னகையுடன் பதிலுக்குத் தலையை அசைத்த ராம், ''அப்புறம் செந்தில்...'' பைக்கிடம் சென்றுகொண்டிருந்த இன்ஸ்பெக்டரை கொக்கி போட்டு இழுத்தான். ''ஒன் மினிட்'' என்று வந்தவளிடம் சொல்லிவிட்டு, ஓடிவந்த இன்ஸ்பெக்டரிடம் ''புஷ்பா கேசைப்பத்தி அந்தம்மா விசாரிப்பாங்க. அவுங்க சொன்னபடி எஸ். ஐ.'ய டிரான்ஸ்ஃபர் பண்ணிட்டோம். இனிமே இன்வெஸ்டிகேஷன் வேகமா நடக்கும்னு சொல்லுங்க. சம்பந்தமில்லாத விஷயத்திலே எல்லாம் தலையிடறாங்க.''

''பெண் இனம்னு அந்தம்மாவுக்கு ஒரு தனி இது சார்'' இன்ஸ்பெக் சிரித்தார்.

''எப்படியாவது போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டை இன்னிக்குள்ள கைல வாங்கிருங்க.''

''நல்லது சார்.'' இன்ஸ்பெக்டர் பழையபடி பைக்கிடம் நடந்தார்.

''என்ன லாவண்யா'' என்ற ராம் வாட்சைப் பார்த்துவிட்டு ''யு ஆர் லேட் பை ட்வெண்டி மினிட்ஸ்'' என்றான். கையில் வைத்திருந்த புகைப்படத்தை அவளிடம் கொடுத்தான்.

''நான் சொன்ன டைமுக்கு கரெக்டா வந்திட்டேன். வாசல்ல உங்க ஆளு நிறுத்தி வெச்சிட்டார்.''

''மினிஸ்டர்ஸ் வர்றதா ரூமர். அதான் கொஞ்சம் கெடுபிடி. பாலம் பத்திரிகை'ன்னு சொன்னா விட்டிருப்பானே.''

''மினிஸ்டர்ஸ் யாரும் வரலியா?''

''அடையாறு போயிருப்பாங்க. அங்கதான கோபாலோட அப்பா இருக்கார்.''

''அம்மாகூட இருக்காங்கன்னு நினைக்கிறேன்.''

''அப்பா அம்மா ரெண்டு பேரும் இருக்காங்க. ரெண்டு பேருக்கும் வயசு எழுபதுக்கு மேல இருக்கும். அம்மாவுக்கு கண் சரியாத் தெரியாது.''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''ரெண்டு பேரும் ராத்திரி இங்க வந்திருந்தாங்க. பாடிய பாத்தாங்க. பக்கத்தில உக்காந்து கண்ணீர் வடிச்சாங்க. பத்து நிமிஷம் இருந்துட்டு அடையாறுக்குத் திரும்பிப் போயிட்டாங்க.''

''அப்போ இந்த பங்களாவில யார்தான் இருந்தது?''

''கோபால், அவரோட மிஸஸ். ரெண்டு பேர் மட்டுந்தான் இருந்தாங்க.''

''மிஸஸ் ப்ருந்தா கோபாலைப் பத்தி இன்னும் தகவல் ஒண்ணும் கிடைக்கல?''

''ஊஹூம். நோ இன்ஃபர்மேஷன். வா அப்படித் தள்ளிப்போய் பேசுவோம்.''

''பாடி கிடந்த இடத்த நான் உள்ள போய் பாக்கக்கூடாதா?''

''இப்ப வேண்டாம் லாவண்யா. ஃபிங்கர் பிரிண்ட் எக்ஸ்பர்ட்ஸ் உள்ள இருக்காங்க. அவுங்களை டிஸ்டர்ப் பண்ண வேண்டாம்.''

தோட்டத்துக்குள் ராமுடன் நடந்தவள், ''கொலைதான்னு முடிவு பண்ணிட்டீங்களா?'' என்று கேட்டாள்.

''அட்டாப்சி ரிப்போர்ட் வரட்டும். ஏன் அவசரப்படறே?''

பின்னால் யாரோ ஓடிவரும் சப்தம். இருவரும் திரும்பினார்கள். காக்கி பேன்ட்டும் அரைக்கை ஸ்லாக்கும் அணிந்த ஒருவன் ஓடிவந்து ''ஐயாவுக்கு போன்'' என்றான் பவ்யமாக.

''யாரு?'' ராம் கேட்டான்.

''யாருன்னு கேக்கலீங்கய்யா. உங்களோட அவசரமா பேசணுமாம்.''

''ஆணு பொண்ணு?''

''ஆம்பளைக் குரல்தான். இந்தக் கொலை சம்பந்தமா ஏதோ முக்கியமா ஐயாகிட்ட சொல்லணுமாம்.''

''எந்தக் கொலை சம்பந்தமா... இரு லாவண்யா வந்திர்றேன்.'' ராம் பங்களாவுக்குள் ஓடினான். கையில் இருந்த புகைப்படத்தை லாவண்யா பார்த்தாள்.

கோபாலின் வாலிப முகத்தில் கண்டுபிடிக்க முடியாத உணர்ச்சிகள் உறைந்திருந்தன. ஒரு கண்ணும் வாயும் பாதித் திறந்து பல் வரிசை லேசாகத் தெரிந்தது. கழுத்தில் கயிறு இறுக்கியதைப்போலக் கருப்புக்கோடு.

மரம் அந்தப் புகைப்படத்தின்மீது மஞ்சளாக ஒரு பூவை உதிர்த்தது.

சீஃப் டாக்டரின் அறைக்குள்ளே ஓடிய கல்பனா, ''எக்ஸ்யூஸ் மி டாக்டர்'' என்றாள்.

''எஸ்.''

''நான் வார்டில பேஷன்ட்டோட இருக்கணுமா?''

''நோ நோ. இருக்கக்கூடாது. யார் சொன்னது இருக்கணும்னு? இங்க யாருமே தங்கக்கூடாது. நீங்க போகலாம். நாங்க பாத்துக்குவோம். அப்புறம் என்ன?''

''அப்ராக்சிமேட்டா இன்னும் எத்தனை நாள் அவ இங்க இருக்கணும் டாக்டர்?''

''நாளைக்கே கூட அழைச்சுக்கிட்டுப் போயிரலாம். ப்ளீடிங் நின்னுருச்சு. வேற என்ன?''

''வேற ஒண்ணுமில்ல டாக்டர். காலைலேர்ந்து காபி கூட சாப்பிடலே. அதான் உங்ககிட்ட சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன். தாங்க்யு டாக்டர்.''

மீனா மெடர்னிடி ஹோமிலிருந்து சிவப்புக் கார் புறப்பட்டது.

இந்த ரமேஷை எங்கே போய்த் தேடுவது? முதலில் வயிற்றில் எதையாவது கொட்டிக்கொள்ள வேண்டும். அப்புறம்தான் தேடுகிற பிசினஸெல்லாம். நல்ல ஓட்டல் என்றால் கதீட்ரல் சாலைக்குத்தான் போக வேண்டும். இந்தக் காரை ஊருக்குள்ளே எடுத்துப்போவது ஆபத்தில்லையா? கோபாலின் மரணத்தில் சந்தேகம் இருக்கும்போது, மறைந்து போன அவன் மனைவியையும் காரையும் போலீசார் வேட்டையாடாமல் இருப்பார்களா? வேட்டையாடட்டுமே. நீ எந்த வகையிலும் கோபாலின் மரணத்தோடு சம்பந்தப்படவில்லை... ப்ருந்தா உன் வீட்டில் தஞ்சம் புகுந்திருப்பதையும் ரமேஷ் மூலமாக

# உங்கள் பக்கம்

**எதிர்ப்பக்கம் காலியாக விடப்பட்டிருப்பது உங்களுக்காகத்தான். சிறந்த தகவல் – உண்மைச் சம்பவம் – அல்லது அனுபவம் – இதில் எது சிறந்ததோ – அதை எழுதி அனுப்பலாம்.**

**சிறந்தவை உங்கள் எழுத்துக்களோடு வெளியிடப்படும். எழுத்துக்கள் கருப்பு மையால் பிசிறில்லாமல் மணி மணியாய் எழுதப்படவேண்டும்.**



போலீசுக்குச் சொல்லி அனுப்பிவிட்டாய். காரைச் செலுத்த லைசென்ஸ் வேண்டாமா? ஒரே ஒரு தடவை அவசரத்துக்காகக் காரை உபயோகிப்பதற்குக்கூட லைசென்ஸ் தேவையா? உனக்கு டிரைவிங் தெரியும். உனக்குத் தெரிந்தவரை நீ ஓட்டிச்செல்வது உன் சிநேகிதியின் கார். துணிந்து போ. போலீஸ் பிடித்தால் பார்த்துக் கொள்ளலாம். காரை ஒளித்து வைத்தால்தான் தப்பு.

கதீட்ரல் சாலையில் திரும்பிய சிவப்புக்கார் ஒரு பெரிய ஓட்டலுக்குள் நுழைந்தது. கார் பார்க்கில் நின்ற ஏராளமான கார்களுக்கு இடையே ஒரு நீண்ட சதுரக் காலி இடத்தைப் பிடித்தது.

ஓட்டலின் லாபியில் நடந்த கல்பனா டாய்லெட்டை அவசரமாகத் தேடி உள்ளே புகுந்தாள். முகத்தில் புத்துணர்ச்சியுடன் சில நொடிகளில் வெளியேறினாள். ரெஸ்டாரென்ட்டினுள் நுழைந்து மையத்தில் காலியாகக் கிடந்த ஒரே ஒரு மேஜையை நோக்கி நடந்தாள். புதுக்கவிதை போன்ற மெனு கார்டைப் படித்து பக்கத்தில் வந்த வெய்ட்டரிடம் டின்னருக்கு ஆர்டர் கொடுத்தாள்.

கல்பனா சாப்பிட்டு முடிப்பதற்குள் அவளைப்பற்றி இன்னும் தெரிந்து கொள்ளலாம்.

பருவத்துக்கு அவள் வந்த சமயம் ரயில் நிர்வாகம் அவள் தந்தைக்கு பதவி உயர்வோடு நாலு படுக்கை அறைகளையும் நவீன வசதிகளையும் கொண்ட பெரிய பங்களாவைக் குடியிருக்க வழங்கியது. குளியல் அறை நீள ஹால்போல பளபளவென்று படுத்துப் புரளலாம். நீருக்குள் மல்லாக்கச் சாய்ந்து காலை நீட்டிச் சுகமாகக் குளிக்கக் குளியல் தொட்டி. சுருண்டிருக்கும் ரப்பர்க் குழாயின் முடிவில் ஹாண்ட் ஷவர். புஸ்ஸென்று செல்லக் கோபத்துடன் அது நீரைப் பீச்சியடிக்கும். அதைக் கையில் எடுத்து உடலின் விரும்பிய பகுதிகளில் நீரை ஸ்ப்ரே செய்து மழைச்சாரலில் நனையும் சுகத்தை அனுபவிக்கலாம். கல்பனாவின் புதிய கன்னங்களிலும் மார்புகளிலும் மேனியின் ஏனைய ரகசியங்களிலும் ஹாண்ட் ஷவர் இள வேகத்துடன் நீரைச் சொரிந்தபோது அவளுக்கு உடலெங்கும் சிலிர்ப்பு. புதுக் குறுகுறுப்பு. ''எவ்வளவு நேரம்டீ குளிக்கறது. சீக்கிரம் வா வெளியே'' என்று அவள் அம்மா முக்கால் மணி நேரம் பொறுத்திருந்த பிறகு கதவைத் தட்டுவாள். அந்த ஹாண்ட் ஷவர்தான் கல்பனாவின் முதல் பாய் ஃப்ரெண்ட்.

– பில்லுக்கு பணத்தை தட்டில் வைத்த கல்பனா அதில் இருந்த பீடாவை எடுத்து கன்னத்துக்குள் அடக்கினாள். லாபியில் நடந்து கண்ணாடிச் சுவரில் நடை அழகை ஓரக்கண்ணால் ரசித்துவிட்டு வாசலுக்கு வந்தபோது கார் பார்க்கில் எல்லாக் கார்களும் பத்திரமாக அசையாமல் நின்றன.

அவள் சிவப்புக்காரை நிறுத்திய இடம் காலியாகக் கிடந்தது.

— தொடரும்

# தொட்டதெல்லாம் அபஸ்ருதம்

சவீதா

**லா**வண்யா தோட்டத்தில் காத்திருந்தாள். நாளை விரியப்போகும் ரோஜா மொட்டுக்கள் காற்றில் அவளைச் சுற்றி அசைந்தாடின. போன் பேசுவதற்காக ராம் பங்களாவுக்குள்ளே போயிருந்தான்.

காத்தபெருமாளுக்குச் சொந்தமான பல நிறுவனங்களில் எஸ். கே. பி. என்டர்பிரைசஸ் நிறுவனமும் ஒன்று. அண்ணா சாலையில், உயரக் கட்டிடம் ஒன்றின் மூன்ருவது மாடியை அந்த நிறுவனம் பதினைந்து ஆண்டுகளாகப் பிடித்துக்கொண்டிருக்கிறது. லாவண்யா சில ஆண்டுகளுக்கு முன் ஒரு மழை கொட்டிய நவம்பர் முற்பகலில் முதன் முதலாக ராமைச் சந்தித்தது அந்த நிறுவனத்தில்தான்.

**அன்று** வெள்ளிக்கிழமை. எண்ணெய்க் குளியலால் மின்னிய கன்னங்களுடன் டைப்பிஸ்ட் வேலையில் [illegible] அந்த அலுவலகத்திஞள் கால் [illegible]த்தாள். பத்தரை – பன்னிரண்டு ராகுகாலம் முடியும்வரை காத்திருந்துவிட்டு கால் காகிதத்தில் ஜாய்னிங் ரிப்போர்ட் எழுதிஞள். கையில் எடுத்துக்கொண்டு பலகையால் தடுக்கப்பட்ட அதிகாரியின் அறைக்குள்ளே நுழைந்தாள். உள்ளே 'டை' கட்டி நீள முடியுடன் சுழல் நாற்காலியில் ராம் சாய்ந்திருந்தான்.

சில மாதங்களுக்குப்பின் ராமிற்கு ஐ. பி. எஸ். கிடைத்து அந்த வேலையை ராஜிநாமாச் செய்ததும் வேறெரு கருப்பான ரங்கநாதன் தொப்பையுடன் அந்த அறைக்குள்ளே வந்து ராமின் நாற்காலியைக் கைப்பற்றிஞர். சென்ட் மணமுள்ள பொடி போடும் பழக்கம் உள்ளவர். 'நய் நய்' என்று கீழே வேலை பார்ப்பவர்களை அரித்துக்கொண்டே இருப்பார்.

ராம் இல்லாத அலுவலகத்தில் லாவண்யா அதிக நாட்கள் நீடிக்கவில்லை. ஒரு நாள் மாலை ஐந்து மணி. அலுவலகம் விடும் நேரம். லாவண்யாவை அறைக்குள்ளே அழைத்த ரங்கநாதன் பதினைந்து பக்கங்களைக் கற்றையாக நீட்டிஞர். ''ரொம்ப அவசரமா வேணும்மா. உடனே டைப் பண்ணிக் கொண்டா'' என்ருர். அவர் இட்ட பணியைச் செய்து முடித்துவிட்டுத் தாமதமாக இரவு எட்டரை மணிக்கு வீடு திரும்பிஞள்.

மறுநாள் காலை, "ஏண்டீ இன்னும் தூங்கிக்கிட்டிருக்கே? ஆபீசுக்கு நேரமாகலே?'' என்று லாவண்யாவின் அம்மா ஏழு ஐம்பதுக்கு எழுப்பிஞள். ''ம்ச். தூங்க விடும்மா'' என்றபடி அவள் புரண்டு படுத்தாள்.



அடுத்த மூன்று மாதங்கள் எந்த வேலையும் இல்லாமல் தமிழ் ஆங்கில நாவல்களுடன் உறங்கினன்.

பிறகு அலையன்ஸ் ப்ராங்க்கெய்சில் பிரெஞ்சு படிக்க ஒரு நாள் பணம் கட்டினன். பிரெஞ்சு வகுப்பில் அவள் அருகே ஸல்வார் கமீஸ் துப்பட்டாவுடன் அமர்ந்த விஜயகங்கா ''பாலம் படிக்கறதுண்டா?'' என்று லாவண்யாவிடம் விசாரித்தாள்.

''புதன்கிழமையன்னிக்கு பல் தேய்க்கக்கூட மறந்திருவேன். பாலத்த மறக்கறதில்லே. அதுல வர்ற தமிழோவியம் இலக்கியக் கட்டுரை எனக்கு ரொம்ப புடிக்கும். நல்ல சிறுகதைகள்லாம் அதுலதான் வருது.''

''தாங்க் யூ. டேடி இஸ் தி எடிட்டர்'' என்றாள் விஜயகங்கா.

''உங்கப்பாவா!'' ஆச்சரியமாய்க் கேட்டாள் லாவண்யா.

லாவண்யா பாலம் பத்திரிகைக்குள் நுழைய விஜயகங்காவின் நட்பு பாலமாக அமைந்தது.

பங்களாவுக்குள்ளிருந்து வெளிப்பட்ட ராம் வராந்தா படிகளில் இறங்கினன். வெடிக்கும் பக்குவத்தை அடைந்த ரோஜா மொட்டை லாவண்யாவின் விரல்கள் கிள்ளின. அவசரமாக அவளிடம் வந்த ராம் 'பூக்களைப் பறிக்கக்கூடாது' என்ற அறிவிப்புப் பலகையைக் காட்டினன்.

''நான் என்னிக்குமே சட்டத்த மீறினதில்லே. இது பூ இல்லே. நல்லாப் பாருங்க. மொட்டு'' என்று அவனிடம் காட்டிவிட்டு கூந்தலில் செருகிக்கொண்டாள்.

''பேர்லயே 'லா'வ வெச்சிருக்க. அப்புறம் நீ ஏன் சட்டம் பேசமாட்டே.''

''அது போகட்டும். உருப்படியான தகவல் ஏதாவது கிடைச்சுதா?''

''நேத்து ராத்திரி சஃபையர் பக்கத்திலே இருக்கிற பெட்ரோல் பங்க்ல பெட்ரோல் போட்டாங்களாம்.''

''யாரு?''

''கோபாலோட மனைவி''

''ராத்திரின்னு எத்தனை மணிக்கு?''




''ஒரு மணிக்கு மேல இருக்குங்கருன். அந்த பங்க்ல நைட் ட்யூட்டி



பார்த்தவன்தான் பேசினான். ஃபாரீன் காரையும் கோபாலோட மனைவியையும் கரெக்டா அடையாளம் சொல்றான்.''

''கார்ல வேற யார் இருந்தாங்களாம்?''

''யாரும் இருந்த மாதிரித் தெரியலேங்கறான். பாங்ளூருக்கு எந்த ரூட்ல போற பக்கம்னு அவன்கிட்ட அந்த லேடி கேட்டுச்சாம்.''

''அப்போ பாங்ளூருக்குத்தான் போயிருக்கணும்.''

''அப்படிச் சொல்ல முடியாது லாவண்யா. பாங்ளூர் வழியா மைசூருக்கோ மகாராஷ்ட்ராவுக்கோ ஏன் போகக்கூடாது? போலீசை முட்டாளாக்கறதுக்குக்கூட அவுங்க பாங்ளூருக்கு வழி கேட்டுட்டு ஹைதராபாத் பக்கம் ஓடியிருக்கலாம்.''

''தப்பு அவுங்கமேல இல்லேன்னா எதுக்காக ஓடணும்?''



பத்திரிகைக்குக் கவர்ச்சியாகப் போஸ் கொடுக்க மறுத்துவிடுவார். ஆனல் படங்களில் கவர்ச்சியாக நடிக்க மறுக்கமாட்டார் என்று மேனகா பேரில் ஒரு குற்றச்சாட்டு உண்டு. இப்படித் தோன்றுவது 'காலம்' படத்தில் மேனகா.

—சொர்ணராஜ்

''பாங்ளூர்ல மிஸஸ் கோபாலுக்கு ஒரு ரிச் பாய்ஃப்ரெண்ட் இருக்கான்.''

''நிஜமாவா?''

''அப்படீன்னு எதையாவது கற்பனையா எழுதி பக்கத்த நிரப்பு. பாலத்துலதான் எல்லாத்துக்கும் இடம் இருக்கே.''

''அப்படீன்னு நீங்க எங்க பத்திரிகைய படிச்சதே இல்லேன்னு தெரியுது. வதந்திகளை எழுதி வயிறு வளர்க்கறது நாங்க இல்லே.''

''பத்திரிகைய சொன்னதும் மூக்குக்கு மேல என்னமா கோபம் வருது. சரி, நீ கேட்ட போட்டோ உனக்குக் கிடைச்சிருச்சு. கிளம்பலாமா. நீ எங்க போகணும்?''

''நீங்க?''

''கமிஷனர் ஆபீசுக்குப் போயிட்டு நேரா வீட்டுக்குப் போறேன். இரண்டு ஆஸ்ப்ரேர்வ வாயில போட்டுட்டு போர்த்திப் படுக்கப்போறேன்.''

''அப்படீன்னு மாண்டியத் ரோட்ல இறங்கிக்கறேன்.''

இருவரும் காரில் ஏறினர். 'ட்ரைவ் வே'யில் விசிறி வாழை அருகே வேறொரு பாதையில் காரைத் திருப்பினன் ராம். ''மாண்டியத் ரோட்ல யார் இருக்காங்க?''

''எழுத்தாளர் சவீதாவைப் பார்க்கப் போறேன். கற்பனை பண்ணி எதையாவது எழுதுன்னு நீங்க சொன்னதும் எனக்கு ஒரு நியூ ஐடியா.''

''என்ன ஐடியா?''

''ப்ருந்தாவையும் கோபாலேயும் பத்தி எனக்குத் தெரிஞ்சதை எல்லாம் சவீதா கிட்ட சொல்லப்போறேன். கோபால் சந்தேகத்துக்குரிய முறைல இறந்து கிடந்தது, ப்ருந்தா வீட்டை விட்டு வெளியேறினது, ராத்திரி சஃபையர் பக்கத்தில அவுங்க பெட்ரோல் போட்டது, பாங்ளூருக்கு வழி கேட்டது எல்லாத்தையும் சொல்லுவேன்.''

''சொல்லி?''

''அவருடைய நாவல்ல ப்ருந்தா மாதிரி வீட்டைவிட்டு வெளியேர்ற பெண் கதாபாத்திரம் என்னென்ன செய்வான்னு கற்பனை பண்ணிச் சொல்லச் சொல்லுவேன்.''

''அப்ஸர்ட்''

''வாழ்க்கைல நடக்கறது கதையாகும்போது கதாசிரியனின் கற்பனை ஏன் உண்மையாகக் கூடாது?''

''எதையாவது பண்ணு. உன் கிட்ட சொன்ன பெட்ரோல் பங்க் சமாச்சாரத்த இப்ப பத்திரிகைல போட்டு என்னை மாட்டிவிட்டிராத.''

''என்னிக்கு அப்படிச் செஞ்சிருக்கேன்?'' என்ருள். கையில் இருந்த கோபாலின் புகைப்படத்தைப் பார்த்து ''ஹவ் யங்'' என்று சொல்ல ''அண்ட்

ஹாண்ட்ஸம்'' என்று முடித்தான் ராம்.

''இந்த போட்டோவ எங்க பத்திரிகைல போடப்போறதில்லே.''

''ஏன்?''

''இதே படத்த எல்லா டெய்லி பத்திரிகைக்கும் கொடுத்திருப்பீங்க. அடுத்த புதன்கிழமை பாலம் கடைக்கு வர்றதுக்குள்ள இந்தப்படம் பழசாயிரும்.''

''கோபால் – ப்ருந்தா படம் உங்க ஆபீஸ்லயே நிறைய இருக்குமே.''

''கோபாலோட படத்தையே போடப்போறதில்லே. என்னோட கவரேஜ் ரொம்ப வித்தியாசமா இருக்கும்.''

''எப்படி?''

''கோபால், காத்தபெருமாளுக்கு ஆசையான ஒரே பிள்ளை. மில் தொழிலாளிங்களுக்கு அவர் முதலாளி. சிட்ஃபண்ட் முதலாளிகளுக்கு அவர் பங்காளி. சில சினிமா கிரியேஷன்களுக்கு அவர் ஃபைனான்ஷியர். அப்புறம் ஒரு மந்திரிக்கு நெருங்கிய நண்பர். ஒரு புதுக் கவிஞருக்கு ஃபாமிலி ஃப்ரெண்டு. இப்படி கோபாலுக்கு பல முகங்கள் உண்டு. அவரோட பழகினவங்களை, இந்தப் பங்களா தோட்டக்காரன்லேர்ந்து மந்திரி வரைக்கும் ஒர்த்தர் விடாம எல்லாரையும் ரெண்டு நாள்ல பேட்டி கண்டு ஒவ்வொர்த்தர் கோணத்திலயும் அவுங்களே சொல்ற மாதிரி கோபாலப் பத்தி எழுதப்போறேன்.''

''செய் லாவண்யா. அபூர்வமான தகவல் சிக்குச்சுன்னு மொதல்ல எனக்குப் போன் பண்ணு. எங்க இன்வெஸ்டிகேஷனுக்கு உபயோகமா இருக்கும்.''

''இந்தச் சாவுக்குப் பின்னால இருக்கிற மர்மத்தை நானே உடைச்சு எல்லாத்தையும் வெட்ட வெளிச்சமாக்கிட்டா எனக்கு என்ன தருவீங்க?'' லாவண்யா கேட்டாள்.

''நீ கேக்கறத. ஆனா உன்னால கண்டுபிடிக்க முடியாது. கோபாலோட பல முகங்களைத் தெரிஞ்சி வெச்சிருக்கே. ஒரு முக்கியமான முகத்தத் தவிர. அது... அது அசிங்கமான – விகாரமான – கேவலமான முகம். அந்த முகம், யாருக்கும் தெரியாது. கோபாலோட ரொம்ப நெருக்கமா இருந்திருக்கக்கூடிய ஒரு பத்து இருபது பேரைத்தவிர வேற யாருக்கும் தெரிஞ்சிருக்க முடியாது. அந்தப் பத்து இருபது பேரை நீ பேட்டி கண்டா ஒரு வேளை அவர் சாவுக்கு சரியான காரணத்த நீ கண்டுபிடிக்கலாம்.''

''யார் அந்தப் பத்து இருபது பேர். நீங்க சொல்றது எனக்கு சரியாப் புரியலே.''

''அப்நார்மல் செக்ஸ் பிஹேவியர் கோபால்கிட்ட இருந்திருக்கு.''

''இங்கிலீஷ் நாவல்களைப் படிச்சுட்டு இல்லாத வியாதியை எல்லாம் இறக்குமதி பண்ணாதீங்க.''

''இல்லே லாவண்யா. காலேல தான் கண்டுபுடிச்சேன். எல்லாரும் பங்களாவ சோதனை போட்டுக்கிட்டிருந்தாங்க. நான் மட்டும் தனியா தோட்டத்துக்குள்ள ரவுண்டு அடிச்சேன். ஒரு சின்ன ரூம் பூட்டிக் கிடந்தது. சந்தேகப்பட்டு அத உடைக்கச் சொன்னேன். கீழே அண்டர் கிரவுண்டில பெரிய ஹால். செங்கல் சுவர். பூச்சு கிடையாது. அதுல நிறைய வெளிநாட்டு ப்ளோ-அப் படங்கள். திரும்பின பக்கமெல்லாம் ஆபாசம்.''

''இங்கதான் நான் இறங்கணும்.''

''ஆபாசத்திலயா'' என்று கேட்ட ராமின் தலையில்குட்டினாள் லாவண்யா. ''காரை நிறுத்துங்க.''

கன்னிமாரா நூல் நிலையம் எதிரே சாலை ஓரமாகக் கார் நின்றது.

□□□ அடையார் கேட்டில் உள்ள ஐந்து நட்சத்திர ஓட்டலில் புதிதாக ஒரு பிள்ளையார் கோவிலைக் கட்டியிருக்கிறார்கள். முறைப்படி மூன்று வேளை பூஜையும் நடக்கிறது!

– பத்மா

* * * *

பெங்களூர் மெஜஸ்டிக்கில் உள்ள மத்திய பஸ் நிலையத்தில் காசு போட்டு எடை பார்க்கும் இயந்திரத்தைப் போல, நிரோத் சப்ளை செய்யும் இயந்திரம் ஒன்றை நிறுவி இருக்கிருர்கள். இருபத்தைந்து காசு நாணயம் ஒன்றைப் போட்டால் இயந்திரத்திலிருந்து மூன்று நிரோத்கள் கொண்ட பாக்கெட் ஒன்று வந்து விழுகின்றது. இந்த இயந்திரத்தைச் செய்து கொடுத்தவர் பெயர் சோமசேகர்.

– நீரஜா செல்ல பெரியய்யா

* * * *

''அந்தப் பாதாள அறைய நீ நேர்ல பாரு. உன்னுடை ரிப்போர்ட்டர் கண்களுக்கு புதுசா ஏதாவது தெரியலாம்.''

''நான் பாக்கலாமா?''

''பாக்க முடியாதுன்னு நான் சொல்லுவேனு. சாயந்தரம் ஃபைவ் தர்ட்டி போல போன் பண்ணு. எப்ப அங்க போகலாம்னு சொல்றேன்.''

ராமிடம் கையை அசைத்து விடை பெற்றுக்கொண்ட லாவண்யா மாண்டியத் சந்திற்குள் வளர்ந்த கட்டிடங்களுக்கு இடையே நடந்தாள். இடப் பக்கம் திரும்பி சவிதாவின் இருப்பிடத்தைத் தேடினுள்: 'ஆபாசமாவா எழுதறீங்க. இருங்க. சண்டைக்கு வந்துக்கிட்டே இருக்கேன்.'

சிவப்புக் காரைக் காணுமல் ரெஸ்டாரெண்ட் வாசலில் ஆடிப்போய் நின்ருள் கல்பனு. அவளைப்பற்றி இன்னும் அதிகமாக இப்போது தெரிந்து கொள்ள வேண்டாம்.

கார் பார்க்கில் பார்வையைப் பதித்திருந்த கல்பனு ''ஹலோவ்'' என்ற பெண்குரல் கேட்டுத் திரும்பினுள். கல்பனுவின் பியூட்டி சலூனுக்கு வாடிக்கையாக விஜயம் செய்யும் கல்லூரி ஆசிரியை. கூட வந்தவள் கல்பனுவுக்கு அறிமுகம் இல்லாதவள்.

''ஹலோ'' கல்பனு பதிலுக்குச் சொன்னுள். ''ஹவ் ஆர் யு? பாக்கவே முடியல?''

''இந்த வீக் வருவேன். வுட் யு கேர் டு கம் அண்ட் ஹாவ் எ ட்ரிங்க் வித் மி.''

ரெஸ்டாரெண்ட்டுக்குள் வரும்படி அழைத்தாள்.

''ஐ ஜஸ்ட் ஃபினிஷ்ட் மை லஞ்ச். தேங்க் யு'' என்ற கல்பனு நகர்ந்தாள். இந்த இடத்தில் நிற்பதில் ப... இல்லை. ஒட்டலின் கொல்லைப்புறம் வரை நோட்டம் விட்டாள். அங்கேயெல்லாம் கார் செல்லுவதற்கு வழியில்லை. யாரிடம் கம்ப்ளெய்ண்ட் பண்ணுவது? ரமேஷைக் கேட்காமல் எதுவும் செய்யக் கூடாது.

ஒட்டலுக்கு வெளியே வந்தாள். டாக்சி பிடித்தாள். மீனு நர்சிங் ஹோமில் இறங்கினுள்.

ப்ருந்தா கண்களைத் திறக்காமல் படுத்திருந்தாள். அறைக்குள்ளே மூலையில் மேஜை ஓரமாக நின்றபடி காகிதத்தில் கட்டம் போட்டு ஸ்டேட்மெண்ட் ஏதோ தயாரித்த நர்ஸ், ''தூங்கறாங்க. டிஸ்டர்ப் பண்ணுதீங்க'' என்ருள்.

''யாராவது வந்தாங்களா?''

சாப்பிடப் போயிருந்தபோது ரமேஷ் ஒருவேளை வந்திருக்கலாம் என்ற எண்ணத்தில் கேட்டாள்.

''யாரும் வரலியே. விஸிட்டர்ஸ் ஹால்ல பாருங்க.''

அந்த ஹாலில் அவள் ஏற்கனவே பார்த்து விட்டாள். ரமேஷ் காணுமல் போய்விட்டான். காரும் காணுமல் போய்விட்டது. ப்ருந்தா கண்விழித்து 'என் கார் எங்கே?' என்று கேட்டால்...!

முன் வராந்தாவிலிருந்த சோபாவுக்கு குழப்பத்துடன் வந்தாள்.

— தொடரும்

**கா**ஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பல்ல
ர்கள் ஆண்டுகொண்டிருந்த காலம். பிற்காலப் பல்லவர்கள் ந்திவர்மனைப்போல தமிழின்பால் தணியாத வேட்கை கொண்ட ர்கள். அவர்களில் ஒரு பல்லவன் ஆட்சியிலே படைத்தளபதி ளின் குழுவில் சோழநாட்டைச் சேர்ந்த அருளாளன் என்பானும் இருந்தான். அவனிடம் மன்னனுக்குத் தனியன்பு உண்டு. தனது மைச்சர்களிடமும், தளபதிகளிடமும் அடிக்கடி நாட்டுநிலை குறித் தும், அரசுப் பொறுப்புகள் குறித்தும் பல்லவ மன்னர் விவாதித்து டிவெடுப்பார் எனினும் அருளாளன் கருத்துக்கும் அவர் தனி திப்பு கொடுத்து அவ்வண்ணம் செயலாற்றுகிற வழக்கம் கொண் ருந்தார். துணைத்தளபதிகளின் பதவிகளில் சிலரை அமர்த்திப் டையின் வலிமையை மேலும் உறுதியாக்கிட வேண்டுமென்று ஒரு டிவு மேற்கொள்ளப்பட்டது.

அந்தச் சில பதவிகளுக்கு வரப் பலரும் போட்டியிட்டனர். அந்த நேரம் சோழத்தளபதி அருளாளன், பல்லவப்படை முகாம்களை நேரில் கண்டு ஒழுங்குபடுத்திவரச் சுற்றுப்பயணம் மேற்கொண் ருந்தான்.

பரளியெனும் பாசறையைப் பார்வையிட்டபோது அணி வகுத்து நின்ற வீரர்களில் ஒருவன் அருளாளனின் காலில் விழுந்து கண்ணீர் மல்க நின்றான். ''என்னப்பா! என்ன வேண்டும்?'' என இரக்கம் நிறைந்த இதயங்கொண்ட அருளாளன் கேட்டான்.

''நீண்ட நாட்களாகப் படையில் போர்வீரனாக இருக் கிறேன். துணைத்தளபதிப் பதவிகளில் ஒன்று எனக்குக் கிடைக்க மன்னரிடம் தாங்கள்தான் பரிந்துரை செய்திடல் வேண்டும். அது வரையில் உமது பாதங்களை விடமாட்டேன்'' என்று கெட்டியாகப் பிடித்துக்கொண்டான்.

துணைத்தளபதிப் பொறுப்புக்குத் தகுதியும் ஆற்றலும் வாய்ந்தவர்கள் சிலர் பரளிப்பாசறையில் இருந்தும்கூட, அருளா ளன் அவனுக்கு வாக்குறுதியளித்துவிட்டுத் திரும்பினான்.

துணைத்தளபதிப் பொறுப்பென்றால் தகுதியும் உயரும் – ஊதியமும் அதிகம் கிடைக்கும்.

ஐந்தாறு துணைத்தளபதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களில் ஒருவன் அருளாளனின் காலில் விழுந்தவன். இந்த நன்றியை என்றும் மறக்கமாட்டேன் என்று அவன் அருளாளனை மூன் முறைச் சுற்றி வந்து காலில் விழுந்து வணக்கம் செலுத்தி னை. துணைத்தளபதிக்குரிய உடைகளைத் தயாரித்துக்கொள்ளக்

நீதிதே இந்தக் கேள்விக்கு விடையளித்திட; ''இதோ! நான்தா!'' என்று ஒருவன் மன்றத்தின் நடுவே வந்து நின்றான். கூடியிருந்தோர் அவனைப் பரபரப்புடன் நோக்கினர். அவன் வேறு யாருமல்ல; அருளாளனின் பரிந்துரையால் துணைத் தளபதியாக ஆக்கப்பட்டவன்தான்!

''அடப்பாவி! நீயா? அருளாளன் காலைத்தொட்டு வணங்கி வாழ்வுபெற்ற நீயா – இப்படித் துரோகி யாக வந்து நிற்கிறாய்?''

மன்றத்திலிருந்தோர் உதடுகள் இவ்வாறு முணுமுணுத் தன! அவனோ நாணம் சிறிதுமின்றி நிமிர்ந்து நின்றுகொண்டிருந் தான்! தோற்றத்தில்தான்! ஆனால் உள்ளம் துவண்டு கிடந்தது!

''அருளாளா! உன் வயிறு எரிந்தால் அவன் உருப் படுவானா?''

என்று ஒரு பெரியவர் கொந்தளித்துக் கேட்டார்!

''எப்படியும் வாழலாம் என்று முடிவெடுத்து விட்ட வன்! பாவம்; எப்படியோ வாழ்ந்துவிட்டுப் போகட்டும்!''

என்று பதில் அளித்தான் அருளாளன்! இறுதியில் நீதி வென்றது! அருளாளன் மீது பழிசுமத்தியோர், தலை தொங்கிப் போய்த் திரும்பினர்!

அவன் முகத்தில் விழிக்கவே முடியாத நிலையில் – அந்த நன்றி மறந்தோனும் மன்றம் விட்டு அகன்றான்.

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.''

இந்தக் குறள் மொழி, இசைவழியாக எங்கிருந்தோ ஒலித் துக்கொண்டிருந்தது.

*அதிகாரம்: 11* *செய்ந்நன்றி அறிதல்* *பாடல்: 110*

**கலைஞர். மு. கருணாநிதி**

# தெல்லாம் பெண்ணைதும் சவீதா

**அ**கலச் சந்திற்குள் நுழைந்தாள், லாவண்யா. 'வெயில்ல கண்ட படிச் சுத்தாதம்மா' – அம்மாவின் குரல் எண்ணங்களுக்கிடையே ஒலித்தது. ரிப்போர்ட்டர் என்று வந்தபிறகு அலைச்சலுக்குப் பயந்தால் முடியுமா? சிட்டுக்குருவி மாதிரி அங்குமிங்கும் சிறகடித்தால்தானே செய்திகளைச் சேகரித்து பத்திரிகைப்பசிக்கு இரை போட முடிகிறது.

சின்னச் சந்திற்குள் திரும்பினாள். தொலைவில் பழைய பாணி வீடு. சுண்ணாம்புப் பூச்சு இல்லாமல் மழையின் ஈரத்தால் சுவரில் பச்சை படர்ந்திருந்தது. முன்பக்கத்தில் ஒரு வேப்ப மரம் இஷ்டத்துக்குக் கிளைகளை முறுக்கிக்கொண்டு நின்றது. இலைகளின் விளிம்புகளில் மத்தியானச் சூரியன் மினுமினுத்தது.

இந்த வீடுதான். சரியான சந்திற்குள்தான் நுழைந்திருக்கிறேன்.

நிச்சயப்படுத்திக்கொண்டு நடையை விரைவாக்கினாள்.

நகரின் மையப்பகுதியாக இருந்தும் போக்குவரத்துச் சந்தடி இல்லாத அமைதி. 'கர் கர்' என்றது காகம். 'மொபைல் அயர்ன்' வண்டிக்காரன் துணிகள் வழிந்த தள்ளுவண்டிக்கு அருகே குந்தி, புகைந்த இஸ்திரி பெட்டிக்கு சாமரம் வீசினான். ஒரு நாய் பிளாட்பாரத்தில் கண்ணைத் திறப்பதும் மூடுவதுமாய் அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது. வேறு எந்த ஜீவராசியும் கண்ணுக்கு எட்டிய பிரதேசத்தில் காணப்படவில்லை.

பச்சைப் பெயின்ட்டை உதிர்த்திருந்த மர 'கேட்', லாவண்யா கை வைத்துத் தள்ளியதும் முனகிக்கொண்டே வழிவிட்டது. வீட்டுக்குள் யாரும் உயிர் வாழ்கிற அறிகுறி இல்லை. முன்பக்கக் கம்பிக்கதவு பூட்டிக்கிடந்தது. வலப்புறம் விலகி கொல்லைப்புறத்துக்குச் செல்லும் சந்தில் சருகுகளின்மேல் கால்வைத்தாள். செங்குத்தான படிக்கட்டு 'உயரே வா' என்றது. ஏறினாள். இருப்பாரா? மாட்னிக்குப் போயிருப்பாரா?

கதவில் 'சவீதா' என்ற சின்ன பிளாஸ்டிக் எழுத்துக்கள்.

டக்... டக்... டக்...

கதவு திறந்துகொள்ள, முண்டா பனியனும் பூப்போட்ட லுங்கியும் அணிந்த, அதிக உயரமும் அதிகக் குள்ளமும் இல்லாத மத்திய ரக உருவம் ''ஹலோ! வாங்க வாங்க. எங்க இவ்வளவு தூரம்?'' என்றது.

''எல்லாம் உங்களோட சண்டை போடறதுக்குத்தான்.''

''உக்காருங்க. முதல்ல இதச் சாப்பிடுங்க. நானே போட்ட ஜிஞ்சர் டீ.''

சவீதா நீட்டியதை லாவண்யா வாங்கினுள். ஒரு ஸிப் பருகிவிட்டு, ''நல்லா டீ போட கத்து வெச்சிருக்கீங்க'' என்ருள்.

''கதை எழுதறத விட்டுட்டு சாயாக்கடை வெச்சிரலாம்கறீங்க? ரைட்டர் ராஜேந்திரகுமார் என்னைவிட நல்லா டீ போடுவார். நல்ல டீ சாப்பிடணும்போல இருந்தா அவர் ரூமுக்குப் போயி கடைசியா வந்த அவரோட நாவலை தலைல தூக்கி வெச்சிக்கிட்டு ஆடுவேன்.''

''குடிச்சிருக்கிற டீ-க்காக நானும் உங்களைப் பாராட்டுவேன்னு நினைக்காதீங்க.''

சவீதாவின் பார்வை லாவண்யாவின் முகத்தில் கூர்மையாகப் பாய்ந்தது.

''சொல்றேன்னு கோவிச்சுக்காதீங்க. எழுதறதுக்கு பத்திரிகை கிடைச்சா இப்படியா இர்ரெஸ்பான்ஸிபிளா எழுதறது?''

சவீதாவின் முகம் சுருங்கியது.

''எந்தக் கதையச் சொல்றீங்க?''

மத்தியானத் தூக்கத்தினுல் குரல் முரடு கட்டியிருந்தது.

''போன வாரம் பாலத்துல எழுதியிருக்கிறீங்களே. சிறுகதை... பேர் என்ன?''

''புதிய கன்னங்கள்.''

''புதிய கன்னங்கள் பழைய கன்னங்கள்னு என்ன சார் டைட்டில்? டைட்டில் கிடக்கட்டும். இப்படியா ஆபாசமா எழுதறது? பாலம், பெண்கள் விரும்பிப் படிக்கிற பத்திரிகை சார். தமிழ்நாட்டில இன்னிக்கு நம்பர் ஒன் குடும்பப் பத்திரிகையா அது உருவாகிக்கிட்டு வருதுங்கறத மறந்துட்டீங்களா?''




''அப்படி நான் என்ன தப்பா எழுதிட்டேன்னு சொல்ல முடியுமா?''

''என்ன தப்பா? எழுதினதெல்லாம் தப்பு. ஒரு நைட்ல மெட்ராஸ்ல என்னென்ன நடக்குதுன்னு எழுதியிருக்கீங்க. அழகாத்தான் வர்ணிச்சிருக்கீங்க. ஆனு நீங்க எழுதின அசிங்கமும் ஆபாசமும்தான் மெட்ராஸ்ல நடக்குதா? நல்ல விஷயம் எதுவுமே நடக்கலியா?''

''அயோத்தியா மண்டபத்தில மூக்கூர் நரஸிம்ஹாச்சாரியார் ராமாயண உபந்யாசம் பண்ணினதை ஏராளமான பக்தகோடிகள் கேட்டுக்கிட்டிருந்தாங்க. வி. பி. ஹால்ல சகோதரர் தினகரன் தலைமைல நடந்த முழு



விவரம்
70
பக்கம்

இரவு ஜெபத்தில கிறிஸ்தவர்கள் ஐக்ய மாகி இருந்தாங்க. இதயெல்லாம் ஏன் எழுதலேன்னு கேக்கறீங்களா?''

''நல்ல விஷயம் ஒண்ணுகூட உங்கக் கற்பனைக்கண்ணில படலே யான்னு கேக்கறேன்.''

''உங்க கண் அழகாயிருக்கு. தப்பா நினைச்சுக்காதீங்க. உங்க கண் உண்மையிலேயே அகலமாகவும், அழகாகவும் இருக்கு. பெருவிரல்ல காயம்'னு நீங்க டாக்டர்கிட்ட போறீங்க. டாக்டர் அழகான உங்க கண்களைப் பார்ப்பாரா இல்லே வீங்கிச் சீழ் கோர்த்திருக்கிற விரலைப் பார்ப்பாரா?''

''நீங்க என்ன டாக்டரா?''

''குழந்தைக்கு ஜுரம்னு சைல்டு ஸ்பெஷலிஸ்ட் கிட்ட போகணும். எருமைக்கு வியாதின்னு வெட்டரினரி டாக்டர்கிட்டதான் போகணும். சொஸைட்டில ஊழல் இருந்தா மதத் தலைவனும் அரசியல்வாதியும் சிந்தனை யாளனுந்தான் அதச் சீர்திருத்த வழி சொல்லணும். இன்றைய நகரத்தில நடக்கிற எல்லா அக்கிரமங்களையும் நான் எழுதல. அப்படி எழுதினா பாலம் பத்திரிகை இலவச போனஸ் போட ணும். ஒரு நகரத்தில — நல்லா கேட்டுக் கோங்க — ஒரு நகரத்தில, ஒரு ராத் திரில பெண்ணினம் படறபாட்டை மட்டுந்தான் ஓரளவுக்கு அந்தக் கதைல சித்தரிச்சேன். தாய்க்குலத்தின் பிரதி நிதியா இப்ப நீங்க வந்து அது எங்க ளுக்கெல்லாம் பிடிக்கலேங்கறீங்க. அப்படி உங்களை மாதிரி ஒரு சிலருக்குப் பிடிக்காமப் போனதுக்காக வருத்தப் படறேன். ஆனால் எழுதினதுக்காக என்னிக்குமே நான் வருத்தம் தெரி விக்கமாட்டேன். எழுதினதுக்கு வேற ஒரு அர்த்தமும் கற்பிக்கமாட்டேன். ஒவ்வொரு வார்த்தையையும் அதன தன் அர்த்தத்திலதான் எழுதினேன். I own each and every word I write. இது எம்பிள்ளை இல்லேன்னு நான் மறுதலிச்சா அந்த எழுத்துக்களே என்னை பகைக்கும். பை தி பை இதெல் லாம் அந்தச் சிறுகதைக்காக பெண் வாசகர்கள்கிட்டேயிருந்து எனக்கு வந்த பாராட்டுக்கள்.''

சவீதா கைநீட்டிய பக்கம் லாவண்யா முகத்தைத் திருப்பினாள். அவள் விழிகள் மேலும் விரிந்தன. ஜன்னல் மேல் கார்டுகளும் நீல இன் லாண்ட் லெட்டர்களும் கற்றை கற்றை யாக ரப்பர் பாண்டினால் சுற்றப்பட்டுக் கிடந்தன.

''இந்தமாதிரி நோக்கத்தோட நீங்க வருவீங்கன்னு தெரிஞ்சிருந்தா டீ-யில நான் இஞ்சியக் கலந்திருக்க மாட்டேன். காரம் ரெண்டு பேருக் குமே ஜாஸ்தியாயிருச்சு.''

''நான் வந்ததுக்கு வேற ஒரு முக்கியமான நோக்கமும் இருக்கு மிஸ்டர் சவீதா.''

சவீதாவின் பார்வையில் கேள்விக் குறி.

''கோபாலை உங்களுக்கு நல்லாத் தெரியும்னு நினைக்கிறேன்.''

''கவர் ஸ்டோரி பண்ணப்போறீங் களா?''

''இல்லே. கேசையே இன்வெஸ்டி கேட் பண்ணப்போறேன். அஸ் எ ப்ரெஸ் ரிப்போர்ட்டர் நான் ஏன் ஒரு இளைஞரோட அகால மரணத்துக்குப் பின்னால இருக்கும் மர்மங்களைக் கண்டு பிடிக்கக்கூடாது?''

''கண்டுபிடிக்கலாம். தாராளமா கண்டுபிடிக்கலாம். கோபாலோட சாவில உங்களுக்கு ஏன் இவ்வளவு அக்கறைன்னு நான் தெரிஞ்சுக்க லாமா?''

ஒரு நொடி லாவண்யா மௌன மானாள். ராமுடன் பேசியது நினைவில் எதிரொலித்தது.



'இந்தச் சாவுக்குப் பின்னால இருக்கிற மர்மத்தை நானே உடைச்சு எல்லாத்தையும் வெட்ட வெளிச்சமாக் கிட்டா எனக்கு என்ன தருவீங்க?'

'நீ கேக்கறத. ஆனா உன்னால கண்டுபிடிக்க முடியாது.'

உன்னால கண்டுபிடிக்க முடியாது என்று ராம் அடித்துச் சொன்னதினால் இந்த இன்வெஸ்டிகேஷனில் குதித்தே தீர வேண்டும் என்று தீவிரமாக முடிவு பண்ணிவிட்டேன். ஆனால் சவீதா விடம் அதை எதற்காகச் சொல்ல வேண்டும்.

''அக்கறைன்னு எதுவும் கிடை யாது. பொழுதுபோக்குக்காகன்னு வெச்சுக்கோங்களேன்'' என்றாள் லாவண்யா.

''பொழுது போகலேன்னா புதுக் கவிதை எழுதுங்க.''

''அப்போ என்னை எதுக்குமே லாயக்கில்லாதவ'ன்னு நினைச்சிட்டீங் களா?''

''கோபாலைப் பத்தி உங்களுக்கு என்ன இன்ஃபர்மேஷன் வேணும்? ஒரு படத்துக்கு ஃபைனான்ஷியர்ங்கற





அடிக்கடி ரயில் விபத்துக்களைப் பற்றிப் படிக்கிறோம்.

விபத்துக்கள் நான்கு விதமாய் நடைபெறலாம். வண்டியும் வண்டியும் மோதிக்கொள்ளல், தடம் புரண்டு உருளுதல், லெவல் கிராஸிங்கில் நடைபெறும் விபத்துக்கள், தீயினால் ஏற்படுபவை.

தென்னிந்திய ரயில்வேயின் மொத்த நீளமான 6,461 கிலோ மீட்டர் தூரமும் தினந்தோறும் இன்ஸ்பெக்ஷன் செய்யப்படுகின்றது.

புகார் வந்த அரைமணி நேரத்திற்குள் உத்தரவுகள் பிறப்பித்து பாதையைச் செப்பனிடுகிறது.

ஆட்களால் பராமரிக்கப்படாத லெவல் கிராஸிங்குகளில் நடைபெறும் விபத்துக்கள்தான் அதிகம். இதற்கு ரயில்வே நிர்வாகம் என்ன செய்கிறது?

லெவல் கிராஸிங் உள்ள ஸ்டேஷன்களில் போஸ்ட்டர்கள் ஒட்டப்படுகின்றன. அங்கு அவ்வப்போது சினிமாவைப்போல் ஸ்லைடுகள் போடப்பட்டு மக்களுக்கு, ஆட்கள் இல்லாத லெவல் கிராஸிங்கை எப்படிக் கடக்க வேண்டும் என்று உஷார்படுத்துகிறார்கள்(?)

நடைபெறும் விபத்துக்களில் 60

---

முறைல அவர்கிட்ட ஒரு தடவை கதை சொல்லப் போயிருக்கேன்.''

''எப்படியிருந்தார்?''

''ஹாண்ட்ஸம் ஆ. என்னைமாதிரி இல்லே. மேஜை மேல ப்ளூ லாகூன் மாதிரி ஒரு பாய்மரக் கப்பல் மினியேச்சர் சைஸ்ல வெச்சிருந்தார்.''

''ப்ளூன்னு அவருக்கு ரொம்பப் புடிக்குமா?''

''பாத்தீங்களா. நீங்கதான் என்னை ஆபாசத்துக்கு இழுக்கறீங்க. ஆபாசத்தப்பத்தி நான் பேசத் தயாரா இல்லே. இனிமே ஆபாசமாக எழுதுறதாகவும் இல்லே. கோபாலைப்பத்தி எனக்குத் தெரிஞ்ச விஷயங்கள்ல செக்ஸ் இருக்கு. ஆபாசம் இருக்கு. அதெல்லாம் உங்களுக்குப் பிடிக்காது. அதனால அந்தமாதிரி சமாச்சாரங்களையெல்லாம் சென்ஸார் பண்ணிட்டு பாக்கிய மட்டும் சொல்றேன்.''

''ஐயையோ! எல்லாத்தையும் ஒண்ணுவிடாம சொல்லிடுங்க. எல்லா விஷயமும் தெரிஞ்சாத்தான் நான் இதுல ஸக்ஸஸ்ஃபுல்லா வெளிய வரமுடியும்.''

''ஆ... அப்படி வாங்க வழிக்கு. உங்களுக்குத் தேவைப்பட்டா எப்படி வேணும்னாலும் எத வேணும்னாலும் நான் பேசலாம், அப்படித்தானே. தப்பா நினைச்சுக்காதீங்க. உங்களையோ அல்லது தனிப்பட்ட எந்தப் பெண்ணையோ நான் குறிப்பிட்டுச் சொல்லல. பொதுவா நம்ம ஊர்ப் பெண்களுக்கு செக்சுவல் ஹிப்போக்ரஸி அதிகமாவே இருக்கு. செக்ஸா...ஐயையோ ஆபாசம்னு கண்ணை மூடிக்கிறத ஒரு தமிழ்ப்பண்பாவே கருதறாங்க. இன்னொரு ஜிஞ்சர் டீ?''

''நோ தாங்ஸ். எப்ப கோபால் கிட்ட கதை சொல்லப் போனீங்க?''

''லாஸ்ட் மன்த். ஏர் கண்டிஷண்டு ரூம்ல சுழல் நாற்காலில சுத்திக்கிட்டிருந்தார். தோற்றத்திலயும் பேச்சிலயும் தமிழ் சினிமாவின் தாக்கம் இருந்தது. கதைல நிறைய பெண் காரெக்டர்கள் வேணும்னார்.''

''அது எதுக்காக?''

''எல்லாத்தையும் நான் சொல்றதுக்கு முன்னால நீங்க ஒண்ணு செய்யுங்க. டி. நகர்ல நாதமுனி தெருவுக்குப் போங்க. நாதமுனி எங்க இருக்குன்னு தெரியுமில்ல?''

''சொல்லுங்க. பக்கத்தில ஜி. என். செட்டிலதான் எங்க வீடே இருக்கு.''

''நாதமுனி தெருவில நாயகி

சதவிகிதம் ஊழியர்களின் கவனக் குறைவால் (Human failure) நடைபெறுவதால், சம்பந்தப்பட்ட ஊழியர்களுக்கு அடிக்கடி பாதுகாப்பு முறைகளைப்பற்றி சிறப்புப் பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன.

பாதுகாப்பு முறைகளைப் பற்றிக் கலந்து விவாதிக்க உயர்மட்ட டெக்னிக்கல் கமிட்டி ஒன்று எல்லா டிபார்ட்மெண்டுகளின் தலைமை அதிகாரிகளுடன் கூடிப்பேசி வழிவகைகளை வகுக்கிறது. நள்ளிரவிலிருந்து அதிகாலை 4 மணிக்குள் திடீர் திடீர் என்று ஊழியர்கள் சோதிக்கப்படுகிறார்கள். ஊழியர்களுக்கு காரியேஜ், டிராக், இன்ஜின், வாகன் இவைகளைப்பற்றி புதுப்புது செய்திகள், அவற்றைப் பராமரிக்கும் முறைகள் பற்றிப் பாடங்கள் சொல்லிக்கொடுக்கப்படுகின்றன.

இப்படிப் பல்வேறு முறைகளில் விபத்துக்களைத் தடுக்க ரயில்வே நிர்வாகம் எடுத்துக்கொண்டுள்ள முயற்சிகளுக்குப் பலன் இல்லாமல் இல்லை.

1980-ம் ஆண்டு ஏப்ரலிலிருந்து ஆகஸ்டு வரை தென்னிந்திய ரயில்வேயில் நடந்த விபத்துக்கள் மொத்தம் 76. அதே மாதங்களில் 1981-ம் ஆண்டு ஏப்ரலிலிருந்து ஆகஸ்டு வரை நடந்த விபத்துக்கள் 50-தான்!

–தகவல் 'குண்டலகேசி'

அட்டையில் – இடமிருந்து வலம்:

ப்ருந்தா – நிர்மலா – அனுராதா – புவனு – சாந்தி – ஜெயந்தி (சாருலதா), கலா.

வண்ணப்படம்: யோகா

---

க்ரியேஷன்ஸ்'னு ஒரு சினிமா கம்பெனி இருக்கு."

"அங்க போயி?"

"புரொட்யூசரைப் பாருங்க."

"யாரு புரொட்யூசர்?"

"அழ. நாச்சியப்பன்னு பேர். அவர்தான் கோபாலோட நேற்று சாயந்தரம் ஆறு மணி வரைக்கும் பேசிக்கிட்டிருந்திருக்கார்."

"கோபால் எத்தனை மணிக்கு இறந்தார்?"

லாவண்யா கேட்டாள்.

"என்னைக் கேட்டா? போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்லதான் அது கரெக்டா தெரியும். நான் சொன்னபடி முதல்ல அந்த புரொட்யூசரைப் பாருங்க. புதுப்படம் சம்பந்தமா பேட்டி காண்கிற சாக்கில் கேள்விகளை எடுத்துப் போடுங்க. கோபாலைப் பத்தி உங்களுக்கு நிறைய விஷயங்கள் கிடைக்கும்."

"சினிமாக்காரர் அவ்வளவு சுலபத்தில விஷயங்களை விட்ரமாட்டாரே."

"கிடைச்சவரைக்கும் லாபந்தானே. அவரப் பாத்தபிறகு என்னைப் பாருங்க. நான் அவசரமா அசோகா ஓட்டலுக்குப் போகணும். ஒரு மீட்டிங்."

**மீனு மெடர்னிடி ஹோம்.** கல்பனா மனதில் கலவரத்துடன் முன்பக்க வராந்தாவில் அமர்ந்திருந்தாள். மேற்கில் சூரியன் சிரித்துகொண்டிருந்தது. ப்ருந்தாவைப் பற்றி போலீசுக்குத் தகவல் கொடுக்கக் காலையில் சென்ற ரமேஷ் இன்னும் திரும்பவில்லை. ப்ருந்தாவின் காரும் ஓட்டல் வாசலில் பறிபோய்விட்டது.

செய்வதறியாமல் எழுந்தாள். நீள நடைபாதையில் நடந்தாள். உப்புற ப-வடிவ வராந்தாவில் இடப்புறம் திரும்பினாள். பழகிப்போன டெட்டால் கம்பௌண்டரியில் நெடி. பத்தாம் நம்பர் அறைக்குள் நுழைந்தாள். சிடுமூஞ்சி நர்ஸ் நல்லவேளையாக அங்கே இல்லை.

ப்ருந்தா கண் திறக்காமல் படுத்திருந்தாள். புதிதாகப் படுக்கை அருகே முளைத்திருந்த ஸ்டாண்டில் ஒரு புட்டி தலைகீழாகத் தொங்கி, 'ட்ரிப்' சொட்டிக்கொண்டிருந்தது. கால்மாட்டில் கட்டிலில் தொங்கிய கேஸ் ஷீட்டை எடுத்துப் படித்தாள் கல்பனா.

..............

2. IV DRIP IN FLOW
3. HALF HOURLY PULSE CHART

4. HOURLY B. P.
5. OBSERVATION

''இதயெல்லாம் உங்களை யார் பாக்கச் சொன்னது?''

வெடுக்கென்று பிடுங்கினுள் உள்ளே வந்த நர்ஸ். அவளிடம் எதையும் கேட்க விரும்பாத கல்பனு அறையைவிட்டு வெளியேறி சீஃப் டாக்டரின் அறைக்கு நடந்தாள்.

''இன்டர்னல் ப்ளீடிங் இருக்கும் போல 'இருக்கு. ஆப்சர்வேஷன்ல வெச்சிருக்கோம். நைட் பேஷண் டோட தங்கணும்னு நீங்க ஒர்த்தர் தங்கலாம். வேற என்ன?''

''சீரியஸா எதுவுமில்லையே டாக்டர்?''

''நோ நோ. நத்திங் டு ஒர்ரி அபவ்ட். அப்புறம்?''

வெளியே வந்தாள் கல்பனு. காலையில் மாட்டிய டெனிம் பேன்ட் கசகச வென்று கால்களில் உரசும்போது எரிச்சலை ஏற்படுத்தியது. கழற்றி எறிந்துவிட்டு ஷவருக்குக் கீழே நிற்க வேண்டும்போல இருந்தது. வீட்டுக்குப்போய் குளித்து உடை மாற்றிவிட்டு வர முடிவு செய்த கல்பனு பங்கஜம் கார்டன்சுக்குப் போக சாலைக்கு வந்து டாக்சி தேடினுள்.

**சாயங்காலக் குளியலுக்குப்** பின் பாதிக்காய்ந்த கூந்தலில் ப்ரஷ்ஷை இழுத்தாள் லாவண்யா.

கையில் தேநீர்த் தம்ளருடன் வந்த அம்மா,

''கார்த்தால வீட்டைவிட்டுப் போனவ மூணு மணிக்குத்தான் வந்து சாப்பிட்டே. மறுபடியும் எங்க புறப் படறே?''

''நுங்கம்பாக்கம் வரைக்கும் போயிட்டு வந்திர்றேன்.''

''அங்க என்ன வேலையோ?''

''கோபாலோட பங்களாவுக்குத் தான்.''

''கொலை நடந்த இடத்துக்கெல் லாம் சும்மா போகாதம்மா.''

''கோபாலோட ஆவி என்னைப் புடிச்சிக்குங்கறயா. போலீஸ் ஆபீசர் கூட வரும்போது ஏம்மா பயப் படறே?''

— தொடரும்



# தண்ணீர்... தண்ணீர்

**அ**த்திப்பட்டு போன்ற கிராமத்தவர்களின் உயிர்ப்பிரச்னை தான் தலைப்பு! அதற்கு உட்பட்ட விஷயங்கள் பத்திரிகை வாசகர்களுக்கும் நாடகரசிகர்களுக்கும் பரிச்சயமான ஒன்று.

இதில் நடித்தவர்களிடையே சரிதாவைத்தவிர ஏனையோர் நாடகத்தில் நடித்தவர்களே; அதுவும் ஒப்பனையின்றி. காமிராக் கூச்சம் கொஞ்சமாவது இருக்கவேண்டுமே! ஹும் — அத்திப்பட்டை அப்படியே கண் முன் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார்கள் ஒவ்வொருவரும்.

பாலசந்தர் எத்தனையோ சமூகப் படங்களைக் கொடுத்ததுண்டு. எங்க ஊர் கண்ணகியைத் தவிர — அவையனைத்திலும் மேல்தட்டு அல்லது நடுத்தர மக்களது பிரச்னைகளைத்தான் சந்தித்திருக்கிறார்.

இதோ, இப்போது கோமல் சுவாமிநாதன் அசல் பச்சைப் பசேல் என்று சொல்லமுடியாத, வறட்டு பூமிக்கு பாலசந்தரை அழைத்துச் சென்று, நல்லதொரு பிரச்னைக் கதையைக் கொடுத்திருக்கிறார். கங்க்ராட்ஸ்.

அமைச்சரிடம் கிராமத்து மக்கள் நேரிடையே 'சென்று குடிதண்ணீருக்காகத் தூதும் மனு கைமாறி, கைமாறி குப்பைத் தொட்டிக்குச்செல்லும் போக்கை —

எம். எல். ஏ.வைப் பகைத்துக்கொண்ட ஆசிரியர் தண்ணீர் இல்லாத ஊருக்குத் தூக்கி அடிக்கப்படும் அவதியை —

உண்மை நிலையை எழுதினுல் அரசு விளம்பரம் — இத்யாதி வசதிகளுக்குப் பயந்து, பத்திரிகை நடத்தும் முதலாளியின்

இந்தியாவில் எதிர்க்கட்சியே உருவாகாதா?

வருந்தாதீர்! வானத்து நட்சத்திரங்களைப்போல எண்ணமுடியாத அளவுக்கு உருவாகியிருக்கின்றனவே!

ஆர். ரவிச்சந்திரன், ஏர்வாடி தர்கா

ஒரு நல்ல ''அறுவை ஜோக்'' சொல்லுங்களேன்!

''அடடா! மூகாம்பிகையே வந்து விட்டது!''

இது ஒரு ''அறுவை'' நேரத்து ''ஜோக்''!

ராஜேந்தர், நாகப்பட்டினம்

ஒரு எழுத்தாளன் எப்படிப்பட்ட சமுதாயத்தை உருவாக்கப் பாடுபட வேண்டும்?

சுயமரியாதையும் உரிமை உணர்வுங் கொண்ட மறுமலர்ச்சி சமுதாயத்தை உருவாக்கப் பாடுபட வேண்டும்.

எம். மாதேஸ்வரன், சேலம்

ஓய்வு நாட்களில் பொழுதை எப்படிச் செலவிடுகிறீர்கள்?

ஓய்வு நாளா? அப்படியென்றால் என்ன அய்யா?

சீதா மனோகர், திருச்சி

மந்திரிகள் பிரயாணம் செய்வதற்காக 75 லட்ச ரூபாய்க்கு தமிழக அரசு ஹெலிகேப்டர் விமானம் வாங்கப் போகிறதாமே! செய்தி படித்தீர்களா?

வரிப்பணம் தண்ணீராகிறது! ''தண்ணீர்'' என்றால் தடைபோடு என்று அரசினர் அலறுகிறார்கள்; என் செய்வது!

இரா. இரங்கசாமி, உசிலம்பட்டி

துன்பங்களில் மகிழ்வைத் தரக் கூடியது எது?

துரோகிகளை அடையாளங் கண்டு அவர்களிடமிருந்து விலகிவிடத் துன்பம்தானே துணை நிற்கிறது! அத்தகைய துன்பமே மகிழ்ச்சியைத் தரக்கூடியது!

ஆர். சுவராஜ், திருச்சி

முட்டாளின் புகழுக்கும், புத்திசாலியின் புகழுக்கும் என்ன வித்தியாசம்?

முட்டாளின் புகழ் மின்மினிப் பூச்சி! அறிவாளியின் புகழ் ஆதவனின் ஒளி!

அ. வனராஜன், மதுரை

பாலசந்தரின் ''தண்ணீர்! தண்ணீர்!'' படத்திற்கு தடை வரும் என்று எம். ஜி. ஆர். கூறியுள்ளாரே?

''தண்ணீர் தண்ணீரில்'' நக்ஸலைட் தோன்றுவதாக எம். ஜி. ஆர். கருதுகிறார்! ஆனால் நக்ஸலைட் தோன்றுவது – ''கண்ணீர் கண்ணீரில்'' என்பதை அவர் அறிய மாட்டார்!



ஆ. செழியன், அரும்பாவூர்

வள்ளுவர் இன்பத்துப்பாலை ஏன் கடைசியில் வைத்தார்?

கடைசியில்தானே இன்பம்!

இலட்சுமி செங்குட்டுவன், வேலூர் (சேலம்)

பெண்கள் என்றாலே ஆண்களுக்கு இரக்கக்குணம் பொத்துக்கொண்டு வந்துவிடுகிறதே, ஏன் சார்?

பெண் என்றால் பேயும் இரங்குமென்பார்கள்! அதனால் ஆண்கள் எல்லாம் பேய்களா என்று கேட்டு விடாதீர்!

மு. சந்திரன், சென்னை-2

எந்த நேரங்களில் உங்களுக்கு நிமிடங்கள் யுகங்களாகத் தோன்றுகின்றன?

யுகங்களை நிமிடங்களாகக் கருதுகிற என்னிடமா இந்தக் கேள்வி!

# தொட்டதெல்லா

**கதை – இதுவரை சொன்னது :**

கோபால் – பிரபல தொழிலதிபர் காந்தபெருமாளின் ஒரே வாரிசு. கோபாலின் மனைவி ப்ருந்தா. ப்ருந்தா ஒரு நாள் தான் கர்ப்பமாயிருப்பதைக் கண்டுபிடிக்கிறாள். கணவன் கோபாலுக்கு அது தெரிவிக்கப்பட்டபோது 'போடி வெளியே' என்று அவன் கூச்சலிடுகிறான். நள்ளிரவில் பழைய கல்லூரித் தோழி கல்பனாவின் வீட்டுக்கு சிவப்பு வெளிநாட்டுக் காரில் வந்து சேருகிறாள், ப்ருந்தா.

கணவனுக்கும் தனக்கும் சின்னத் தகராறு என்று சொல்லும் ப்ருந்தாவை, கல்பனாவும் ரமேஷும் வரவேற்கின்றனர். தங்க இடம் தருகின்றனர். மறுநாள் காலை –

கோபால் அவனுடைய நுங்கம்பாக்கம் பங்களாவில் மர்மமான முறையில் இறந்து கிடப்பதாகவும் மனைவி காருடன் காணாமல் போய்விட்டதாகவும் வானொலிச் செய்தி கூறுகிறது. அதைக்கேட்டு மயக்கமடையும் ப்ருந்தாவுக்குக் கருச்சிதைவு ஏற்படுகிறது. கல்பனா அவளை மருத்துவ மனையில் சேர்க்கிறாள்.

ப்ருந்தா, மருத்துவமனையில் கண்திறவாமல் கிடக்க...

ப்ருந்தாவின் சிவப்புக்காரை ஓட்டலுக்கு எடுத்துச்செல்லும் கல்பனா காரை ஓட்டல் வாசலில் பறிகொடுக்க... ப்ருந்தாவைப்பற்றி போலீசுக்குத் தெரிவிக்கச் சென்ற ரமேஷ் சாலை விபத்துக்கு ஆளாகி...

'பாலம்' வார இதழின் நிருபர் லாவண்யாவும், உதவிக் கமிஷனர் ராமும் ஒரு காலத்தில் கோபாலின் தந்தை காந்தபெருமாளின் நிறுவனத்தில் ஒன்றாகப் பணியாற்றியவர்கள். கோபாலின் மரணத்துக்குப் பின்னால் இருக்கும் மர்மங்களைத் தானே கண்டுபிடிக்கப் போவதாக லாவண்யா விளையாட்டாக ராமிடம் சொல்லுகிறாள். அப்புறம் மனதினுள் அதையே ஒரு சவாலாக எடுத்துக்கொண்டு முதல்கட்டமாக எழுத்தாளர் சவிதாவைச் சந்தித்து கோபாலைப்பற்றி விசாரிக்கிறாள். சவிதா ஒரு படமுதலாளியை முதலில் சந்திக்கும்படி அவளிடம் சொல்ல...

**மா**லை ஆறு மணி. ஆனால் நாலு மணி போல வெயில் 'சுள்' ளென்று காரின் முன்ஸீட்டில் பயணம் செய்த லாவண்யாவின் முகத்தில் உறைத்தது.

சின்னச் சந்திலிருந்து வாகன ஓட்டம் மிகுந்த அகலச் சாலைக்கு காரை எச்சரிக்கையாக ஏற்றிய ராம்,

''நீ துப்பறியற வேலைல இறங்கறதுக்கு முன்னாடி ஒரு முக்கியமான வேலையைச் செய்யணும்'' என்றான்.

''என்ன வேலை?'' லாவண்யா கேட்டாள்.

''கொலைன்னு ஒண்ணு நடந்திருக்கான்னு தீர்மானிக்கணும்.''

# பெண்ணகம்

## சவீதா

''கழுத்துல கயிறு அழுத்தின மாதிரிக் காயம் இருக்கு.போட்டோவில கூடத் தெளிவாத் தெரியுது. அப்புறம் எப்படிக் கொலை இல்லேம்பீங்க?''

சிக்னலில் பச்சை மறைந்து ஆரஞ்சு தோன்ற, வேகத்தைக் குறைத்துக் காரை நிறுத்தினான், ராம்.

''ஊர்வசி ஷோபா கழுத்துல கூடத்தான் அந்த மாதிரிக் காயம் இருந்தது. அது தற்கொலைதான்னு முடிவு பண்ணலையா? உடம்பில இருக்கிற காயத்த அல்லது அடையாளத்த மட்டும் வெச்சு எதையும் தீர்மானிச்சிரக்கூடாது. ஒரு கான்வென்ட்ல இது நடந்தது. ஆலமரத்தில ஒரு பெண்...''

சிக்னலில் சிவப்பு மறைந்து ஆரஞ்சு தோன்ற, ராம் காரைக் கிளப்பினான். நாராச இரைச்சல்களுடன் ஏககாலத்தில் கிளம்பிய இதர வாகனங்களுக்கு இடையே ராமின் கார் முண்டியடித்து பந்தயத்தனத்துடன் நெரிசலை விட்டு விர்ரென்று முன்னேறி...

''ஆலமரத்தில ஒரு பெண் ஊஞ்சல் ஆடினா. டீனேஜ் கேர்ள். வேகமா ஆடினா. ரொம்ப வேகமா தன்னோட முழு சக்தியையும் பிரயோகம் பண்ணி எவ்ளோ உயரத்துக்குத் தன்னால போக முடியுங்கறத தெரிஞ்சுக்கற விளையாட்டு வெறியோட ஆடினா. கடைசில எட்ட முடியாத இடத்துக்குப் போய்ச் சேர்ந்துட்டா.''

''என்ன ஆச்சு? கீழே விழுந்துட்டாளா?''

''ஊஞ்சல் பலகை மட்டும் தனியா ஆடிக்கிட்டிருந்தது.''

''அவ?''

''கழுத்து ஆல விழுதில சிக்கி அந்தரத்தில தொங்கினா. பாத்தவங்க முதல்ல அதக் கொலை, தற்கொலைன்னு பலவிதமாச் சொன்னாங்க. கடைசில தான் அது விபத்துன்னு தெரிஞ்சுது. அதனாலதான் சொல்றேன், காயத்த வெச்சு கொலைன்னு தீர்மானிக்கவும் கூடாது. காயம் இல்லேங்கறதுக்காக கொலை இல்லேன்னு முடிவு பண்ணவும் கூடாது. நைன்டீன் ஸிக்ஸ்டி த்ரீல ஒரு கேஸ். ஒரு சீக்கியப்பெண்ணை அவ புருஷன் ஸ்ட்ராங்கிள் பண்ணிக் கொன்னுட்டான். அந்தப் பெண்ணோட கழுத்திலயோ உடம்பிலயோ எக்ஸ்டர்னலா எந்த அடையாளமும் கிடையாது.''

''அப்புறம் அத ஸ்ட்ராங்குலேஷன்னு எப்படி முடிவு பண்ணாங்க?''

''போஸ்ட்மார்ட்டத்தில கண்டு பிடிச்சிட்டாங்க. கழுத்தில சதை உள்பக்கம் நசுங்கிச் சிதைஞ்சிருந்தது. நெஞ்சை அழுத்தினதுக்கும் தடயங்கள் இருந்தது.''

''நாளைக்கு போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட் வந்தா எல்லாம் தெரிஞ்சிரும்.''

''எல்லாம் வந்தாச்சு.''

"ரிப்போர்ட் வந்தாச்சா? எப்போ?'' லாவண்யா ஆவலுடன் கேட்டாள்.



''உன் போன் வந்தப்ப அதத் தான் படிச்சுக்கிட்டிருந்தேன்.''

''என்ன எழுதியிருக்காங்க?''

''முடிவா ஒண்ணும் சொல்லல.''

''அப்பமென்ன?''

''ஒபினியன் பெண்டிங் பாதலாஜிகல் எக்ஸாமினேஷன் அண்ட் கெமிகல் அனலிசிஸ்'னு எழுதியிருக்காங்க.''

''அப்போ ஃபைனல் ரிப்போர்ட் எப்ப கிடைக்கும்?''

''அது சொல்ல முடியாது. குறைஞ்சது மூணு மாசமாவது ஆகும்.''

''அது வரைக்கும் கொலையாளிய விட்டு வைக்க முடியுமா?''

''அப்போ கொலையாளின்னு ஒர்த்தன் இருக்கான்னு முடிவு பண்ணிட்டயா?''

''நிஜமாவே நீங்க இத ஒரு கொலன்னு நினைக்கலியா?''

''நிஜமாவே நான் இன்னும் எந்த முடிவுக்கும் வரல லாவண்யா. ஆனா..''

'ப்ருந்தாவன்' வாசலில் நின்ற போலீஸ்காரன் ராமின் காரை இனம் கண்டு சலாமடித்து வரவேற்றான்.

''ஆனா?''

லாவண்யா கேட்டாள்.

''பெரியவர் கொலையாத்தான் இருக்கும்னு சந்தேகப்படறார்.''

"யாரு... கோபாலோட அப்பாவா?"

''ஆமா. போஸ்ட்மார்ட்டம் பண்ணின உடலை முழுசா வாங்கி தகனம் பண்றதுக்கு செல்வாக்க உபயோகிச்சு அவர் ப்ரஷர் குடுப்பார்னு எல்லாரும் எதிர்பார்த்தாங்க.''

''அவர் அப்படிச் செய்யலையா?''

''போஸ்ட் மார்ட்டம் பண்ணணும்னு சொன்ன முதல் நபரே அவர் தான்.''

''அப்படியா!''

''அவர் புத்திசாலி. இல்லேன்னா சொந்த உழைப்பினால இவ்வளவு பெரிய கோடீஸ்வரனாகியிருக்க முடியுமா. இந்தமாதிரி அகால மரணத்துக்கு காரணத்த தெரிஞ்சுக்கறதுதான் நல்லது. காரணம் தெரிஞ்சாத்தான் இன்னொரு சாவைத் தடுக்க முடியும். சமூக விரோதியைப் பிடிக்க முடியும். இந்த விஷயத்தில நம்ம ஜனங்களுக்கு அறிவே கிடையாதும்பேன். போஸ்ட் மார்ட்டத்த இழிவானதா நினைக்கிறாங்க. கூடுமானவரைக்கும் அத அவாய்டு பண்றதுக்கு என்னென்ன முடியுமோ அவ்வளவும் பண்றாங்க. உயிர் போனபிறகு உடம்ப முழுசா கொளுத்தினா என்ன, பீஸ் பீஸா கொளுத்தினா என்ன.''

''எப்படிக் கொளுத்தினாலும் மிஞ்சப்போறது சாம்பல்தான்.''

ஸ்பீட் ப்ரேக்கர் மேட்டில் ஏறி இறங்கிய கார் விசிறிவாழை அருகே இடமாக விலகியது.

''ஹோமிஸைடல் ஹாங்கிங்னு மனசில நினைச்சுக்கிட்டு இல்லாத கொலையாளியை நீ தேட ஆரம்பி...''



புன்னகையுடன் சொன்ன ராம் போர்ட்டிகோவில் காரை நிறுத்தினன். லாவண்யா காரைவிட்டு இறங்கி மாலை வெயிலில் மஞ்சள் குளித்தாள்.

காக்கி பான்ட்டும் வெள்ளை அரை ஸ்லாக்கும் அணிந்தவன் வெகு நேரம் காத்திருந்த மாதிரி கையில் கொத்துச் சாவியுடன் ஓடி வந்தான். அவனிடம், ''பாத்திரலாமா?'' என்று ராம் கேட்க ''சரிங்கய்யா'' என்றபடி அவன் தோட்டத்துக்குள்ளே வழிகாட்டுவதைப்போல ஓடினன்.

அவனைப் பின்தொடர்ந்த ராமும் லாவண்யாவும் மலர்களைக் கடந்து புல்வெளியில் நடந்தனர். அவர்கள் மீது படிந்திருந்த கடைசி வெயில் திடீரென்று மங்கி மறைந்தது. புல்தரைக்குப் பிறகு புதர்கள். இடையே ஒற்றையடிப் பாதை. அடர்த்தியாக அறிமுகமில்லாத மரங்கள்.

வேகமாக நடந்த காக்கி பான்ட் மரங்களுக்கு இடையே தெரிந்த ஒரு சின்ன அறைக்கு அவர்கள் இருவரையும் அழைத்துச் சென்ருன்.

பிளாட்பாரங்களிலும் சாக்கடை ஓரங்களிலும் மனிதப்புழுக்கள் நெளிகின்ற நகரின் மையத்தில் இப்படி ஒரு



ஆள் நடமாட்டமில்லாத அமேசான் காடா! பாவி, எவ்வளவு இடத்தை அலட்சியமாக வளைத்துப்போட்டிருக்கிறான். லாவண்யா வேதனையுடன் வியந்தாள்.

அது சின்ன ஓட்டு வீடு போலத் தெரிந்தது. கூரையிலிருந்து நிறைய பச்சைக்கொடிகள் இலைகளுடன் வழிந்து கதவில் பாதியை மறைத்தன. முன்னே சென்றவன் பூட்டைத் திறந்தான்.

''ஃபோட்டோ ஃபிங்கர் பிரிண்ட் டெல்லாம் எடுத்திட்டாங்களா?''

ராம் கேட்டான்.

''எல்லாம் முடிச்சிட்டுப் போய்ட்டாங்கய்யா'' என்றவன் கதவைத் திறந்தான். ''இருங்க. கீழே போய் லைட்ட போட்டிட்டு வந்திர்றேன்'' என்றபடி இருளுக்குள் இறங்கினான்.

''ரைட்டர் யாரையோ பாக்கணும்னியே.''

''பாத்துட்டேன். அவர் டி.நகர்ல ஒரு ஃபிலிம் புரொட்யூசரைப் பார்க்கச் சொல்லியிருக்கார். நாளைக்குப் பார்க்கப் போறேன்.''

''எதுக்கு?''

''அதையெல்லாம் இப்ப உங்க கிட்ட சொல்லமாட்டேன்.''

''சரி, சொல்லவேண்டாம்'' என்ற ராம், நிலவறைக்குள்ளிருந்து வெளிப்பட்டவனிடம் ''சாவியக் குடுத்துட்டு நீ போ. நான் பாத்துட்டு வர்றேன்'' என்று சாவியைப் பெற்றுக்கொண்டான்.

**பங்கஜம் கார்டன்ஸ்.**

வீட்டின் முன்னே கல்பனா டாக்சியை விட்டு இறங்கியபோது இருட்டிக்கொண்டிருந்தது. காலையில் பூட்டிய கதவினுள் சாவியை நுழைத்தாள். 'இந்த ப்ருந்தா ஏன்தான் வந்து தொலைத்தாளோ' என்று எண்ணிக் கொண்டாள்.

ஹால் விளக்கிற்கு சுவிட்சைத் தட்டினாள். கதவைச் சாத்தி உட்புறம் தாழிட்டாள். முதல் வேலையாக 'ஸ்லீவ்லெஸ் டாப்'பையும் அடிவயிற்றை இறுக்கிக்கொண்டிருந்த டெனிம் பான்ட்டையும் களைந்து எறிந்தாள். குளியல் அறைக்குள் நுழைந்து மார்பிலும் இடுப்பிலும் எஞ்சியிருந்த உள்ளுடைகளை உரிந்து எறிந்தாள். புஸ்ஸென்று நீரைச் சொரிந்த ஷவருக்குக் கீழே வெறுமனே நின்றாள்.

கல்பனா குளிப்பதை மேலும் பார்க்க வேண்டாம். வெளியே போகலாம். அவள் குளியலை முடித்து வெளியே வருவதற்குள் அவளைப் பற்றி இன்னும் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாம்.

ரயில்வே குவார்ட்டர்சில் கல்பனா முழங்கால் தெரிய ஸ்கர்ட் அணிந்து பருவத்துக்கு வந்துகொண்டிருந்த சமயம் அவளுடைய முதல் பாய் ஃப்ரெண்ட்டைப் பற்றி ஏற்கனவே சொல்லியாகிவிட்டது. அப்புறம்?

ஒரு நாள் காலை தூங்கி எழுந்து சோம்பல் முறித்தபோது பாவாடையில் வெற்றிலைக்காவி தெரிந்தது. ஸானிடரி டவல்களை ஸ்டாக் பண்ணியிருந்த குளியலறை கபோர்டை அம்மா திறந்து காட்டினாள். கபோர்டின் சாவியைக் கொத்திலிருந்து பிரித்து இருவரும் எடுக்கக்கூடிய பொதுவான இடத்தில் வைத்தாள். சில ஆண்டுகளுக்குப்பின் அந்தச் சாவி அம்மாவுக்குத் தேவையில்லாமல் போக, கபோர்ட் கல்பனாவின் தனிப்பட்ட சொத்தாகிவிட்டது.

சின்ன வயதிலிருந்தே கல்பனாவுக்கு பாவாடை, புடவை, மஞ்சள், பூ, குங்குமம் போன்ற லோக்கல் சமாச்சாரங்களில் அவ்வளவு ஈடுபாடில்லை. மார்பை மட்டும் மறைக்கிற மாதிரி ஸ்லீவ்லெஸ் அணிந்து இடுப்பில் ராப் அரவுண்டைச் சுற்றிக்கொள்ளுவாள். டேடி வாங்கித்தந்த லேடீஸ் பைக்கில் காலனியை வட்டமடிப்பாள்.

பள்ளிப்படிப்பு முடிந்தது. அவளுக்கு இடம்கொடுத்த கல்லூரி, நகரின் சந்தடிகளிலிருந்து விலகி இருந்தது. காலனிக்கு மிகவும் அருகே இருந்த போதிலும், ஹாயாக இருக்க விரும்பிய மம்மியும், டேடியும் அவளை விடுதியில் சேர்த்துவிட்டனர்.

கல்லூரிக்கு எதிரே மாணவர்களின் ஆதரவுடன் இரண்டு தையல் கடைகளும், குளிர்பான ஸ்டாலும் இருந்தன. சற்று விலகி விசால



தொடர்ச்சி 66-ம் பக்கம்

9-ம் பக்கத் தொடர்ச்சி

நுமதி சிநாலட்சுமி சொல்கிறர்:

**'ஜாங்கோ அண்ட் ஜிங்க்'**– ஹிமாசலப் பிரதேசத்தில் எடுக்கப்பட்ட இந்திய படம் தமிழில் 'டப்' செய்யப்பட்டிருந்தது.

விறகு வெட்டச் செல்லும் தந்தையுடன் அந்தப் பையனும் போகிறன். அவனுடைய நாயும் துணைக்குப் போகிறது. எலியைப் பிடிக்கப்போகும் நாய் பாறையில் மாட்டிக்கொள்ள நாயைக் காப்பாற்றி பாறையை நகர்த்தும் போது ஒரு பை நிறைய வைரம் கிடைக்கிறது. அதிலுள்ள பத்திரத்தின் மூலம் அது அவனுடைய தந்தையின் மூதாதையர் சொத்து என்று தெரிகிறது.

வைரங்களை விற்றுவர தந்தை சிம்லா செல்கிறர். சென்ற தந்தை நாட்கள் பலவாகியும் திரும்பிவராததால் மகன் சிம்லாவுக்குச் சென்று தந்தையைப் பிடித்துவைத்திருக்கும் ஒரு திருட்டுக் கூட்டத்திலிருந்து மீட்டு வருகிறன். துணை யார்? நாய்தான்.

போகும் வழியெல்லாம் வீரதீரச் செயல்கள். இருந்தாலும் ஹிமாசலப் பிரதேசம் கொள்ளை அழகு. நம் கண் முன் நிறுத்துகிறர்கள். சிறுவர் சிறுமியரைக் கவரும்.

திருமதி தங்கம் சொல்கிறர்:

**'சிறுமியும் டிராகனும்'** படம் வித்தியாசமானது. டிராகன் என்றதும் நமது எண்ணத்தில் வருவது ஏராளமான நீளமும், அகலமும், அருவருப்பான உருவமும் கொண்ட பிராணிதானே!

அதுதான் இல்லை இந்தப் படத்தில். கம்ப்யூட்டர்கள், மைக்ரோவேவ் டெலிபோன்கள், பறக்கும் சூப்பர் ஜெட் கார்கள் – இப்படி எல்லா நவீன சாதனங்களையும் வைத்துக்கொண்டு தன்னுடைய மந்திர சக்தியால் (அதுவும் உண்டு) மனித உருவில் பாதாள லோகத்தில் ஆட்சி நடத்தும் டிராகன், அதற்கு சமையல்காரனுக இருக்க பூமியிலிருந்து கடத்தி வரப்பட்ட ஒரு சிறுமியின் தந்தை, தனது தந்தையைக் காப்பாற்றி மீட்டுவர பாதாள லோகம் வரும் சிறுமி – இவர்களைப்பற்றிய சுவாரஸ்யமான கதை இது.





ஜங்கிள் புக் (வால்ட் டிஸ்னி) • மிஸ்டர் ஆன் டான் ...

நகைச்சுவை வசனங்கள் படத்திற்கு மேலும் வலுவேற்றுகிறது. கதாசிரியர் சுஜாதாவும், விட்டலாச்சாரியாவும் இணைந்து ஒரு படம் உருவாக்கினுல் எப்படி இருக்கும்? அதற்கு ஒரு சாம்பிள் இந்தப் படம்!

'அரசனும் மிஸ்டர் பறவையும்'

ஒரு கொடுங்கோல் ஆட்சியை முடிவு கட்டும் ஒரு சிறு பறவையின் கதை இது. 'ஜங்கிள் புக்' படத்திற்கு அடுத்தபடியாக – ஏன், சில விஷயங்களில் 'ஜங்கிள் புக்'கைவிட சிறந்ததாகவும் எடுக்கப்பட்டுள்ள இந்த கார்ட்டூன் படம் எந்த வயதினரையும் பரவசப்படுத்தும்.

நாம் கற்பனை செய்துகூடப் பார்த்திராத விஞ்ஞான விந்தைகளை அவர்கள் நகைச்சுவையோடு அறிமுகப்படுத்தும்போது நாம் வியப்பில் ஆழ்ந்துவிடுகிறேம். தீவிரமாக யோசித்துப் பார்த்தால் இந்தப் படத்தின் பின்னணியில் அரசியல் இடையில் இருப்பது புரியும். — **சியாமளன்**

20-12-81 இதழ்




எம். கே. ராதா
சிவாஜி கணேசன்
பானுமதி ராமகிருஷ்ண
பி. நாகிரெட்டி
எஸ். வி. வெங்கட்ராம்
எம். எஸ். விசுவநாதன்

மூன்று அழகிகள். அவர்களுக்கே தெரியாமல் அவர்கள் உடலில் மறைக்கப்பட்டிருக்கும் விலை மதிப்பில்லாத வைரம். வைரத்திற்காகச் செய்யப்படும் கொலைகள். தற்செயலாகக் கொலை நடந்த இடத்தில் இருக்கும் போட்டோகிராபர் மீது விழுகிற பழி. போலீசுக்குப் பயந்து ஓடுகிற போட்டோகிராபர் பிறகு சுயமுயற்சியில் கொலைகாரனைக் கண்டுபிடிப்பது — ஒரு மசாலாக் கதை. எல்லாம் ஜட்டி மயம்.

'சகோதரா... உனக்கு ஃபோன்' என்று தேங்காய் ஒவ்வொரு முறையும் கமலைப் பரிவோடு அழைத்து போனைக் கொடுப்பதும், காதல் பிரேக் ஆகி விரக்தியுற்றிருக்கும் சகோதரனுக்கு விஸ்கியும் விலாசமும் கொடுத்து வழி காட்டுவதும் — கொஞ்சம் வித்தியாசமான உறவுமுறை — ரசிக்க முடிகிறது.

மாதவியைப் படம் எடுக்க அவர் வீட்டுக்குள் அத்துமீறிப் பிரவேசித்து கமல் செய்கிற கலாட்டா கொஞ்சம் ஓவர். நீச்சல் உடையில் மாதவியை இவர் படம் பிடிக்க, அவர் விரட்ட, இவர் ஓட, இருவரும் கட்டிப்புரண்டு உருண்டு - அப்பாடா— ஒரு காதல் பிறக்க இத்தனைப் பாடா? பிறந்த நாளில் கமலுக்காகக் காத்திருந்து அலுத்து அவர் வந்ததும் முகத்திலடிக்கிறமாதிரி மாதவி கதவைச் சாத்த, மூக்கைப் பிடித்துக் கொண்டு கமல் பரிதாபமாக விழிக்கிற இடம்— சோதனையிலும் ஒரு சுவை? நெ. 10—வாசனை.

ஸ்வப்னாவின் அபார்ட்மெண்டில் கமல் நுழைகிறவரையில் கழுத்தைப் பிடித்துத் தள்ளினாலும் கதை நகரமாட்டேன் என்கிறது. அவசரமாக நம்பர் 'ஒன்' வர, இழுக்கிற இழுப்பில் ஜிப் கையோடு வர, தைத்துக் கொடுப்பதாக ஸ்வப்னா பாண்டைக் கழற்றித் தான் அணிந்துகொள்ள, அரை நிர்வாணமாகக் கமல் நிற்க— ஏன் சார், இதைவிட நல்லதொரு கற்பனை உதிக்கவில்லையா? அதை ஈடு செய்கிற மாதிரி— கொலை செய்யப்பட்ட ஸ்வப்னாவின் உடலைப் பார்த்துத் தவிக்கிற தவிப்பு, தடயங்களை மறைக்க எடுத்துக்

## டிக்..டிக்..டிக்

இளையராஜா
பஞ்சு
ஸ்ரீதர்
பாலசந்தர்
பாரதிராஜா
பாக்கியராஜ்
ராபர்ட் - ராஜசேகர்

பி. எஸ். ராமையா
சிவசங்கரி
இந்துமதி

அதிக பக்கங்கள்
அதே விலை









கொள்ளும் முயற்சி – வெல்டன் மிஸ்டர் கமல். அந்த ஓப ராய் – நல்ல பாத்திரப் படைப்பு, அழுத்த மான நடிப்பு. தன்னுடைய ரகசியங்களைத் தெரிந்து கொண்ட நிஷாவை ஓபராய் தீர்த்துக் கட்டுகிற காட்சி – கண்ணாடிக்கு அந்தப் பக்கம் கமல் – இந்தப் பக்கம் நிஷா – துப்பாக்கிச் சத்தம் –

உதடு கண்ணாடியில் அழுந்த அப்படியே கீழே இறங்குகிற நிஷாவின் உடல் – நல்ல திரில்!

இலங்கையிலிருந்து திரும்பிவருகிற மாதவியைப் பொய் போலீஸிடமிருந்து மீட்கிறார் கமல். சரி; நிஜ போலீஸ் கமிஷனர் வந்த பிறகும் மாதவியைக் காரில் கடத்திக் கொண்டு போகிறாரே! எதற்கு? வேட்டை நாய்கள், ஹெலிகாப்டர் விவகாரமெல்லாம் வேஸ்ட். பொறுமையை ரொம்பச் சோதிக்கிறார்கள்.

கண்ணனின் காமிரா டைரக்டரின் தோளோடு தோள் நின்று ஒத்துழைப்புக் கொடுத்திருக்கிறது.

தான் ஒரு தேர்ந்த டெக்னீஷியன் என்பதை இன்னொரு முறை நிரூபித்திருக்கிறார் பாரதிராஜா – நல்ல படைப்பாளி என்ற ஸ்தானத்திலிருந்து இறங்கி

16-ம் பக்கத் தொடர்ச்சி

ஹாலுடன் ஒரு ரெஸ்டாரெண்ட். உள்ளே நடுப்பகலில்கூட இருட்டு. தோளில் புரளும் கூந்தலுடன் ஒட்டுப் போட்ட ஜீன்ஸ் அணிந்த மாணவர்கள் அங்கே நிறையக் கூடுவார்கள். பின்பக்கம் சாக்கடைக் கடலில் தீவுகளாகச் சிதறிய குடிசைகளிலிருந்து பொட்டலங்களை வாங்கி சிகரெட்டுக்குள் திணித்து 'தம்' அடிப்பார்கள்.

ரத்தீஷை கல்பனா அங்கேதான் சந்தித்தாள்.

ரத்தீஷ் கம்பி பிரேம் கண்ணாடி. தொளதொள ஜிப்பாவை மணிக்கட்டில் மடித்து விட்டிருப்பான். கல்லூரிக்குச் சற்றுத் தள்ளி சாலையின் எதிர்ப்புறத்தில் இருந்த தன்னுடைய ஒரு பெட்ரூம் மாடி அபார்ட்மெண்ட்டில் காசெட் லைப்ரரி வைத்திருந்தான். வரவேற்பு அறையில் ஸ்டீரியோ ஸ்பீக்கர்கள் முழங்கும். ப்ளேபாய் ரக அயல்நாட்டுப் பத்திரிகைகள் சிதறிக் கிடக்கும்.

சனி, ஞாயிறு, நாலைந்து அரசு விடுமுறைகளோடு சேர்ந்து வந்ததைப் பயன்படுத்திக்கொண்டு பல மாணவ மாணவிகள் சூட்கேஸ்களை தலைமேல் தூக்கி வைத்துக்கொண்டு சொந்த ஊர்களுக்குப் பயணம் புறப்பட்டனர். விடுதி ஏறத்தாழக் காலியாகி காம்பஸ் வெறிச்சோடிவிட்டது. மாலை மங்கிய நேரத்தில் கல்பனா குளித்து பவுடர் அடித்து மகளிர் விடுதியை விட்டு வெளியே வந்தாள். ரத்தீஷ் எதிர்ப்பட்டான்.

'ஹாய் ஹாய்'களை இருவரும் பரிமாறிக்கொண்டபிறகு, ''எங்க கிளம்பிட்ட?'' என்று ரத்தீஷ் கே டான்.

''ப்ருந்தா ஊருக்குப் போயிட்டா போரடிச்சுது. மம்மி, டேடிய பாத் ரொம்ப நாளாச்சுது.''

''இந்த நேரத்துல நீ அங் போனா அவுங்களுக்கு போரடிக்கும்.''

சில நிமிடங்களுக்குப்பின் இ வரும் டாக்சியில் நகரத்தை நோக்கி சென்றுகொண்டிருந்தனர். தியேட ரின் விளக்கு அணைந்து விளம்பர படம் ஓடியது. கல்பனாவின் இடுப்பி இருந்த ரத்தீஷின் விரல்கள் மேலே மேலே நகர்ந்து அக்குளில் பிரவேசித் போது திரையில் ஆன் ஃ ரஞ் முடி நீக்கி விளம்பரம்.

''இத உபயோகிக்கிறதுதானே'' ரத்தீஷ் அவள் காதில் சொன்னான்.

''இயற்கையா வளர்றத அழி கிறது எனக்குப் பிடிக்காது.''

''அப்ப எல்லா இடத்திலயு இப்படித்தான் இருக்குமா?''

''அவசியம் நீ தெரிஞ்சு கணுமா?''

பாதிப்படத்தில் இருவரும் வெ யேறினர். சைனீஸ் ரெஸ்டாரென்

## ஏ-ஒன்

சவீதாவே துப்பறிய வந்துவிட்டாரா? இதுவரை யாரும் செய்யாத புதுமைதான்.

– அரும்பாவூர், ஆ. செழியன்

'தொட்டதெல்லாம் பெண்ணாகும்' கதையில் தான் கொஞ்சம் 'தாரா

**சிமிழ்: 4 29 – 11 – 81 போட்டு: 5**

ளமாக' எழுதப்போக, வாசகர்க உடனே வரிந்து கட்டிக்கொண்டு க அம்பு தொடுக்க, அவர்களுக்கு வி கம் தரும் வகையில் லாவண்ய சவீதாவை சந்திக்கும் காட்சியை தானே ஏற்படுத்தி, வாசகர்களுக் விளக்கியிருக்கும் சவீதா நிச்சயம் புதுமை எழுத்தாளர்தான்!

– பண்ருட்டி, வே. இ

'டார்ட் போர்டு' நிகழ்ச்சியை படிக்கும்போது ஹார்ட் துடித்த முதுகை நோக்கி வீசப்பட்ட அம்புக வாசகர் இதயத்தை நோக்கி வீசப்ப டதுபோல் இருந்தது.

– சென்னை-39, சி. கே. இளமுரு

செல்லம் தேர்ந்தெடுத்த பத் ஜோக்குகள் அனைத்தும் ஏ. ஒன் சா ஜோக்குகளை இரு முறை படித் படித்து சிரித்தேன்.

– மேட்டுப்பாளையம், மு. கல்யாணசுந்

ல் ஸ்பெஷல் ஜிஞ்சர் சிக்கனும் ப்ரைட் ரைசும் பார்சல்கள் வாங் னர்.

''ஆக்சுவலா எனக்கு ஹாஸ் ல்ல இடம் கிடைச்சுது. ஆனா கிடைக் லேன்னு அப்பாவுக்கு எழுதிட்டு வளீல இந்த அபார்ட்மெண்ட்ட புடிச் ன். இப்ப யாரும் என்னைக் கட்டுப் டுத்த முடியாது. எனக்கு வேண்டிய தல்லாம் சுதந்திரம்.''

காரில் ரத்தீஷ் தன்னைப்பற்றிச் சால்லிக்கொண்டு போனான்.

''இங்க வேற யாரு உன்னோடை ருக் ங்க?'' மாடிப்படிகளில் ஏறிய படி கல்பனா கேட்டாள்.

''மெதுவா பேசு. ராம்குமார். ரவாண்ட்ரம் போயிட்டான்.''

''எனக்கு அவனைத் தெரியாது''

''ஸ்லக்கிஷ் பாஸ்டர்ட். பாவா டயைக் கண்டா அவனுக்கு உதறல் டுக்கும்.'' கதவைத் திறந்தான்.

''டாய்லெட் எங்க இருக்கு?''

''கீழே. ஆனா நீ அங்க போக வண்டாம். வீட்டுக்காரக் கிழவன் ழிச்சிட்டான்னா ஆபத்து. கிச்சன்ல ஸிங்க் இருக்கு. உபயோகப்படுத் திக்கோ.''

உள்பக்கம் சாத்தித் தாழிட் டான். மேஜை மீது பார்சல்களை வைத்தான். சட்டையைக் கழற்ற பொத்தான்களில் கை வைத்தபோது கல்பனா அவன் மீது பாய்ந்தாள். அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டு ...

..........................................

(தஞ்சையிலிருந்து உரிமையுடன் தாறு மாறாக எழுதிய ஒரு வாசகரின் அன்பு வேண்டுகோளுக்கு இணங்க சில 'அடல்ட்ஸ் ஒன்லி' வரிகள் நீக்கப்பட் டன. — ஆசிரியர்.)

எனவே ரத்தீஷ்தான் கல்பனாவின் இரண்டாவது பாய் ஃப்ரெண்ட்.

— கல்பனா குளியலை முடித்தபோது பஸ்ஸர் சப்தம். ரமேஷா? ஓடிப்போய் ஜன்னலைத் திறந்தாள். பக்கத்து பங் களாவிலுள்ளவள். கல்லூரி மாணவி.

''மிஸ்டர் ரமேஷ் பைக்லேர்ந்து விழுந்து உதட்டில சின்ன காயமாம். மயிலாப்பூர் பாலிக்ளினிக்ல இருக்கா ராம். உங்களை உடனே வரச்சொல்லி டெலிபோன் மெஸேஜ் வந்தது.''

— தொடரும்

அட்டையில்: ஷோமா ஆனந்த் வண்ணப்படம்: ஜக்மோகன்

'நிறுத்தப்பட்ட செய்திகள்' என்ற லைப்பில் இடம் பெற்றிருந்த செய்திகள் ஏழும் ஏ-ஒன். சூடான வையான செய்திகள் இடம் பெற் ள்ள இப்புதுப் பகுதியை இடையி லேயே நிறுத்திவிடாதீர்கள் என்பது ன்னுடைய தாழ்மையான வேண்டு கோம்.

— சிவகாசி, கே. ராகவன்

முத்திரைக்கதை — கந்தாடைய ரின் 'ருக்மணி' சிறுகதை நன்றாக இருந்தது. முத்திரைக்கதை வரி சையை தொடர்ந்திட வேண்டுகிறேன்.

— மேட்டுப்பாளையம், மு. கல்யாணசுந்தரம்

அட்டையில் 'கவிழா இரயில்' ண்டேன். அது ஆக்சிடெண்டில் சிக் ாது என்பது உண்மைதான். ஆனால் அதில் உள்ள கம்பார்ட்மெண்டுகள் த்தனை இளம் நெஞ்சங்களைத் தடம் ரளச் செய்யக்கூடியவை தெரியுமா?

— அரகண்டநல்லூர், கே. பிரபாபிரி

'18 வயதுதான் ஒரு பெண்ணின் வளர்ச்சியைக் குறிக்கிறது என்று சட் டம் சொல்கிறது. ஆனால் 18-வது வயது நிறையக்கூடிய அந்த ஒரு இரவுக்குள் ஒரு பெண் முழு வளர்ச்சி யையும் அடைந்துவிட முடியாது' - என்னும் உண்மையை 'புரட்சிகரமான தீர்ப்பு' என்னும் கட்டுரையைப் படித்துத் தெரிந்து கொண்டேன்.

— உடன்குடி, இரா. சேர்மம்

'தண்ணீர்...தண்ணீரை'க் கண்டு கதிகலங்கும் நமது எம். ஜி. ஆரை எப்படித் தேற்றுவது? உண்மையைச் சொல்லப்போனால் வெகுண்டு எழும் எம். ஜி. ஆர். இந்தப் படத்தைத் தடை செய்யவேண்டும் எனக் கொக் கரிப்பது சுத்த பேத்தலாக உள்ளது. மசாலா படங்களைத் தவிர நல்ல படங்கள் அவருக்குப் பிடிப்பதில்லை போலும்.

— பள்ளப்பட்டி, ஆர். கே. ஸ்ரீநிவாசன்

# தொட்ட தென்றல் பெண்ணானது

ரமேஷின் முகம் பாண்டே
...க்குள் மூழ்கியிருந்தது.

"கீழ் உதட்டில மட்டுந்தான் ...யும். லேசா வெட்டுப்பட்டிருக்கு. ...பற ஃப்ராக்சர் ஒண்ணுமில்லே. வீக்கம் நாளைக்கு சரியாப் போயிரும்" என்று டாக்டர் சொன்னதும் கல்பனாவின் மனம் நிம்மதி அடைந்தது.

"ஸெடேடிவ் குடுத்திருக்கோம். தூங்கறார். எழுப்ப வேண்டாம்."

"நானும் இந்த ரூம்ல படுத்துக்கலாமா டாக்டர்?"

"தாராளமா."

டாக்டர் வெளியேறினதும் அறைக்கதவை அடைத்தாள். கிடைத்த படுக்கை விரிப்பை உதறினாள். விளக்கை அணைத்துப் படுத்தபோது உறக்கம் வரவில்லை. ப்ருந்தாவைப் பற்றியும் அவள் கார் காணமல் போனதைப்பற்றியும் போலீசுக்கு இன்னும் தகவல் கொடுக்காததால் ஆபத்து ஏதாவது வருமா? யோசித்தாள். எந்தத் தப்பும் செய்யாதபோது நான் எதற்காக அனாவசியமாகக் குழம்பவேண்டும்? கொலைக்குற்றவாளியென்று கருதப்படும் ஒரு பெண்ணுக்கு அடைக்கலம் தருவது தப்பில்லையா?

விடிந்து வெகுநேரமாகி, உள்ளே வந்த வெயில் வெளியே போனபிறகு ரமேஷ் கண்விழித்தான். வாய் திறந்து ...சமுடியாததால் காகிதமும் பேனாவும் கேட்டான். கல்பனா கொண்டு வந்ததும், 'ப்ருந்தாவைப் பற்றி போலீசுக்குத் தெரிவித்துவிட்டாயா?' என்று ஆங்கிலத்தில் எழுதினான்.

கல்பனா "இல்லை" என்றாள்.

"உடனே நுங்கம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போ" என்று மறுபடியும் எழுதினான்.

"மணி எட்டாகுது. ப்ருந்தாவப் போய்ப் பாத்திட்டு எப்படியும் பத்து மணிக்குள்ள ஸ்டேஷனுக்குப் போயிர்றேன்" என்றாள்.

கல்பனா காவல் நிலையத்துக்குள் நுழைந்து இன்ஸ்பெக்டர் செந்தில் எதிரே அமர்ந்தபோது அவர் தலைக்கு மேலே இருந்த கடிகாரம் பத்து முறை அடித்து ஓய்ந்தது.

மரங்கள் நிறைய அசைந்த அந்தத் தெருவில் கால் வைத்தாள் லாவண்யா. இடப்பக்கம் பார்த்தபடி வேகமாக நடந்தாள். ஐந்தாறு வீடுகளைக் கடந்திருப்பாள். 'நாயகி க்ரியேஷன்ஸ்' என்ற பெயர்ப் பலகை சமீபத்தில் சூட்டப்பட்ட மாலையின் நாருடன் தென்பட்டது. பி. டி. வண்டி போன்ற அம்பாஸிடர், திறந்திருந்த முன் 'கேட்' அருகே நின்றது.

உள்ளே நுழைந்து படியேறினாள். சின்ன முன் அறையில் தலைக்குமேலே, ரிடையர் ஆன நடிகரிடமிருந்து கனத்த மனிதர் கேடயம் வாங்கும் புகைப் படம். இவர்தான் நாச்சியப்பனா?

சவிதா

ஹாலுக்குள் கால் எடுத்து வைக்கப்போனவள் ''அம்மா அம்மா'' என்ற குரல் பின்னுல் துரத்தி வர, திரும்பினுள். அரை நிஜார் அணிந்தவன் அவள் பாதத்தைக் காட்டினுன்.

''ஸாரி'' என்ற லாவண்யா காலில் இருந்ததைக் கழற்றி அங்கே விட்டுவிட்டு உள்ளே சென்ருள். சுவர்களில் சினிமா போஸ்டர்கள். பீரோவின் கண்ணுடிக்குப் பின்னே நூருவது நாள் கேடயங்கள். கருப்பாக ஒல்லியாக கண்ணுடி அணிந்த மனிதர் டைப்ரைட்டரில் எழுத்துக்களைத் தட்டிக்கொண்டிருந்தார்.

''ப்ரொட்யூசரை பாக்கணும்.''

தட்டுவதை நிறுத்திவிட்டு நிமிர்ந்தார். வாயைத் திறக்காமல் கையை நீட்டி ஆள்காட்டி விரலால் வலப்பக்கம் இன்னெரு வாசலைச் சுட்டிக்காட்டிவிட்டு, பக்கத்தில் இருந்த காகிதத்தில் விட்ட இடத்தைத் தேடினுர்.

லாவண்யா அந்த வாசலை நோக்கி நடந்தாள். உள்ளே யாரும் இல்லை. ஊதுவத்தி மணம் இடப்பக்கம் இருந்த இன்னெரு அறைக்குள் இருந்து வந்தது. இதுதான் தயாரிப்பாளரின் அறையா?

சோபாவில், வேட்டி சட்டை அணிந்து நெற்றியிலும் கழுத்திலும் சந்தனம் தீட்டிய மனிதர் காலை ஆட்டியபடி தொலைபேசியில் கூச்சலிட்டார்.

'...என்ன தெரியுமில்ல, தர்ட்டி இயர்ஸ். உங்கம்மா மனசில என்னதான் நினைச்சிக்கிட்டிருக்காங்க. பெரிய சாவித்திரி, சரோஜாதேவின்னு நினைப்பா. நான் நினைச்சேன்னு இண்டஸ்ட்ரிலயே இல்லாமப் பண்ணிப்புடுவேன். ஆமா. என்னுடைய சர்வீஸ் என்ன தெரியுமா? தர்ட்டி இயர்ஸ். சொல்லிவை உங்கம்மாகிட்ட.'

தொலைபேசியை வைத்தார். ''முருகா செந்தூர் வேலாயுதா ஞான பண்டிதா என் அப்பனே'' என்றவர் மடியிலிருந்து வெற்றிலை பாக்கு புகையிலைப் பொட்டலத்தை எடுத்து டீபாயின்மீது வைத்தார். தலையைத் திருப்பி உள்ளே வந்த லாவண்யாவைப் பார்த்தார்.

''வாங்க வாங்க. போர்டு மா... டினதும் வந்திருவிகளே. கூட அம்ப... வந்திருக்காகளா?''

''இல்லே'' என்ருள் லாவண்ய...

''அப்புறம் என்ன பயம். ஃப்ரீய... வரவேண்டியதுதான. ஆல்ட... இருக்கா?''

''இல்ல.''

''வேண்டாம். ஒரிஜினல் ஏ... மாலினி மாதிரி இருக்கீங்க. ஆல்ட... எதுக்கு. முன்னுடி ஏதாவது அனுபவ... உண்டா?

''ஏதாவது அனுபவம்னு?''

''அதான். சினிமா அனுபவ... தான்.''

''இல்லே.''

''வேண்டாம். கவலை ப... படாதீங்க. மூணு மாசத்தில முன்னு... குக் கொண்டாந்திருவேன். ஆனு... பாக்கை எடுத்துக் கடித்தார்.

''ஆனு...?''

''ஆனு ஒண்ணுமில்லே. நீங்... கொஞ்சம் ஒத்துழைக்கணும்.''

''அப்படின்னு?''



''மேரேஜ் ஆயிருச்சா?''

''இல்லே.''

''கம்பெனி புடவையக் கட்டி... கிட்டு மறந்த மாதிரி வீட்டுக்கு...

பாக்கூடாது. ஷூட்டிங் முடிஞ்ச
ம் எல்லாத்தையும் அவுத்திரணும்.
சொந்தக்காரங்க இருக்காங்களா?''

''ஓ, நிறைய.''

''ஷூட்டிங் காட்ற சாக்கில அவுங்களையும் சாப்பாட்டுக்குக் கூட்டிக்கிட்டு வரக்கூடாது. படம் ரிலீசாகறதுக்குள்ள நீங்க வேற எதயும் ரிலீஸ் பண்ணக்கூடாது.''



''சொந்தப்படமா?''

''அட, வயிறு பெரிசாகக்கூடா துன்னேன்.''

''கல்யாணம் ஆகலேன்னு அப்பவே சொன்னனே.''

''இது இண்டஸ்ட்ரிம்மா. இங்க ஆனவங்க ஆகாதவங்க அனே வருமே சமம். அப்புறம் உன் சம்பளத்தில நமக்கு வரவேண்டிய கமிஷன் வந்திரணும்.''

''கமிஷனு?''

''ஆமா. ஆர்ட்டிஸ்ட் ரெமுனரேஷன்ல பத்து பர்சன்ட், படத்தோட மொத்த பட்ஜெட்ல இருபத்தஞ்சு பர்சன்ட் அடிச்சாத்தான் நான் ப்ரொட்யூசர் ஆக முடியும். சரி. ரேட்டை சொல்லு. நடிச்சுக்காமி'' என்று எழுந்து வந்தார். ''இது ஏன் இப்படி வெளிய வந்திருக்கு?'' என்று அவள் தோள்பட்டையில் வெள்ளைக்கோடாகத் தெரிந்த ப்ராவின் விளிம்பை விரலால் ப்ளவ்சுக்கு உள்ளே தள்ளிவிட முயன்றார். லாவண்யா அந்த ஆளின் கன்னத்தில் பளாரென்று அறைந்தாள்.

உடனே அவர், காவிப் பற்களைக் காட்டிச்சிரித்தபடி ''உக்காருங்கம்மா. உக்காருங்க. ஐயா வந்தாச்சு'' என்றார்.

சென்ட்டின் மணத்துடன் உள்ளே வந்தவரை லாவண்யா பார்த்தாள். சலவை மடிப்புக்கள் கலையாத வெள்ளை வேட்டி, முழுக்கைச் சட்டை. மீசையிலும் தலைமயிரிலும் வயசுக்குப் பொருத்தமில்லாத செயற்கையான கருமை.

''யாரைப் பாக்கணும்?''

கேட்டவர்தான் தயாரிப்பாளர் அழ. நாச்சியப்பன் என்று ஊகித்த லாவண்யா கைப்பையிலிருந்து சின்ன அட்டையை எடுத்து நீட்டினாள்.

''சிறப்பு நிருபர் பாலம் வார இதழ்,'' தனக்கு எழுதப் படிக்கத் தெரியும் என்று சொல்கிற தோரணையில் உரக்கப் படித்தார்.

''ஆமா, உங்க பத்திரிகைல சினிமா விமரிசனமெல்லாம் யார் எழுதறது? உக்காருங்க. நீ இங்க என்னய்யா பண்ணிக்கிட்டிருக்க? உன்னை நான் என்ன செய்யச் சொன்னேன். ஜெமினி போய் சவுண்ட் நெகடிவ எடுத்துக்கிட்டுப் போயி பிரசாத்ல குடுத்திட்டு வா போ. யாரும்மா விமரிசனம் எழுதறது?''

''நான்தான் எழுதறேன்.''

''லட்சக்கணக்கில போட்டு படம் எடுக்கறோம். இப்படிக் கிண்டல் பண்றீங்களேம்மா.''

''எந்தப் படத்த சொல்றீங்க உள்நோக்கத்தோட நாங்க எதுவும் செய்யறதில்லே சார். விமரிசனத்துக்கு ஒரு படத்த எடுத்துக்கிட்டோம்னு குறை நிறை ரெண்டையுந்தான் சொல்லுவோம். மந்திரி படங்கறதுக்காக மைனஸ் பாயின்ட்டையெல்லாம் மைனஸ் பண்ணமாட்டோம்.''

''சரி விடுங்க. என்ன விஷயம்'' என்றவர் மேஜை டிராயரைத் திறந்து உள்ளே இருந்த சாமி படத்தைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டார்.

''தமிழ் வருஷப் பிறப்பன்னிக்கு நிறைய புதுப்படங்கள் பூஜை போட்டு ஆரம்பிச்சாங்க.''

''ஆமா''

''அதுல சில படங்களைப் பத்தி எங்க பத்திரிகைல ரைட் அப் எழுத போறோம்.''

''முக்கியமான பாயின்ட்டுகளை சொல்றேன். இப்ப எடுக்கப்போற படத்தில சில பெட்ரூம் காட்சிகளை ரோம்ல போய் எடுக்கப்போறோம்.''

''ரோம்ல போயி ரூம்ல எடுக்கப் போறீங்களா. சரி. அப்புறம்?''

''நீங்களே கேள்விகளைக் கேட்டுருங்க. நான் அவசரமா சேம்பருக்குப் போகணும், டைட்டிலை ரிஜிஸ்டர் பண்றதுக்கு.''

''இன்னும் ரிஜிஸ்டர் பண்ணலியா? நீரில் பூத்த நிலான்னு முழு பக்க விளம்பரமே குடுத்திட்டீங்களே. டைட்டிலை மாத்தப்போறீங்களா?''

''அத ட்ராப் பண்ணிட்டேம்மா. நாயகி க்ரியேஷன்சுங்கற புது பானர்ல வேற படம் ஸ்டார்ட் பண்றேன்.''

''ஏன் சார்?''

''நீரில் பூத்த நிலாவுக்கு கோபாலன் ஃபுல் பைனான்ஸ் தர்றேன்னு சொல்லியிருந்தார். நம்ம நேரம் அவர் போய் சேர்ந்திட்டாரு.''

''தற்கொலே பண்ணிக்கற அள ுக்கு அவருக்கு என்ன சார் பிரச்னே?''

''தற்கொலேன்னு யார் சொன் து? படுகொலே.''

''அப்படியா?''

'பின்னே? ஆறுமணி வரைக்கும் அவர் வீட்டில அவரோட பேசிக்கிட் ருந்தவன் நான். ரோமுக்கு அவுட் டார் போகும்போது சொல்லுங்க ாச்சியப்பன். நானும் வர்றேன்ளுரு. ராம்ப சந்தோஷமா பேசிக்கிட் ருந்தார். அப்புறம் ஒரு மணி நரத்தில தற்கொலே பண்ணிக் ிட்டார்னு சொன்ன நான் நம்ப மாட் ன்.''

''கோபால் ஷூட்டிங்கெல்லாம் பார்ப்பாரா?''

''ஃபாரின் போகும்போது சொல் லுங்கன்ளுரு. அவருக்கு லேடீஸ் வீக்னெஸ் கொஞ்சம் ஜாஸ்தி. மத்தபடி நல்ல மனுஷன். சில வேளே ன்ல குழந்தை மாதிரி விளேயாடு வாரு. அந்தம்மா குளிச்சிட்டு பாத் ரும்லேர்ந்து வந்தா தூக்கிக்கிட்டு ஆடுவாரு. நாங்கள்லாம் பாத்துக் கிட்டு இருந்தாக்கூட அதபத்தி கவலேப்படமாட்டாரு. கடைசில ன்ன ஆச்சு. தூக்குத்தூக்கி படத்தில சொல்லுவானே கொலேயும் செய்வாள் பத்தினின்னு. அந்த மாதிரி இருச்சி.''

''அப்போ அவரு ஒய்ஃபுதான் அவர...''

''வேற யாரு. அவளேதான். வீட்டுக்குள்ள இருக்கிறவ ஒழுங்கா இருந்தா வெளிய சுத்திக்கிட்டு வர்ற ருஷனும் யோக்யனு இருப்பான். டிரைவருக்கும் அவளுக்கும் கனெக் ஷன்...''

''அப்படியா!''

''என்னம்மா பத்திரிகைல இருந் துக்கிட்டு ஒண்ணும் தெரியாதமாதிரி கேக்கறீங்க. அந்தம்மாவோட காதல் விவகாரமெல்லாம் போட்டோவோட ் மஞ்சள் பத்திரிகைல ப்ரிண்ட் ஆயிருச்சு.''

''நான் பாக்கல.''

''பத்திரிகை வெளிய வரல. ப்ரிண்ட் ஆனதோட சரி. கோபால் என்னேத்தான் பத்திரிகை ஆபீசுக்கு அனுப்பிஞர். அச்சான எல்லா காப்பி களேயும் ரெண்டு பங்கு விலே குடுத்து வாங்கி பங்களாவுக்குப் பின்னுல போட்டுக் கொளுத்திஞேம்.''

''ட்ரைவரை?''

''ஒண்ணும் பண்ணல. வேலேய விட்டுப் போகச் சொல்லிட்டாரு. போலீசுக்கு எல்லாந் தெரியும். அந்த ட்ரைவருக்கு இப்ப வலேவீசிக்கிட்டி ருக்காங்க.''

''அப்போ நீங்க கோபாலே பாத் திட்டு வெளியேறினபிறகு யாரோ உள்ள நுழைஞ்சிருக்காங்க.''

''அத நம்ம போலீஸ் இன்னும் ஒரே வாரத்தில கண்டுபிடிச்சிரு வாங்க. நான் கோபாலோட பேசிக் கிட்டிருந்தப்ப விக்ரம் கிட்டேர்ந்து போன் வந்தது. சீக்கிரமா வாடா நேரமாயிருச்சுன்னு சொல்லிட்டு கோபால் போனே வெச்சாரு. ஒரு வேளே அவன் வந்திருக்கலாம். ஆனு அவன் கோபாலோட க்ளோஸ் ஃப்ரெண்டு.''

''யாரு சார் விக்ரம்?''

''காத்தபெருமாளோட ஃபாமிலி டாக்டரோட பிள்ளே.''

''படத்தப் பத்தி பேசாம வேற எதயோ பேச ஆரம்பிச்சுட்டோம்'' என்ற லாவண்யா ''மியூசிக் யாரு? கேமரா யாரு?'' என்ருள்.

அந்தத் தெருவை விட்டு வெளி யேறியபோது, க்ளோஸ் ஃப்ரெண்ட் ஏன் கோபாலோட அத்தியாயத்தை க்ளோஸ் பண்ணியிருக்கக் கூடாது என்று எண்ணிஞள் லாவண்யா. விக் ரம் என்ற பெயரை மனதில் எழுதி வைத்துக்கொண்டாள். முந்தின தினம் ப்ருந்தாவன் பங்களாவில் ராமுடன் பூமிக்கு அடியில் பார்த்த கோரக்காட் சிகள் இன்னும் அவள் விழிகளே விட்டு அகலாமல் குழப்பின. — தொடரும்

---

★ இந்தியாவில் இருக்கும் மொத்த தபால் நிலேயங்கள் – 1,38,500.

ஒரு நாளில் பட்டுவாடா செய்யப் படும் கடிதங்கள் – 2 கோடி.

தபால் தந்தியினரால் படிக்கப் படும் மொத்த இந்திய மொழிகள்–15.

– குட்டி

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

**-சவீதா-**

இன்ஸ்பெக்டர் செந்திலின் மீசையில் வெள்ளைப் புள்ளிகளாக நரை. கத்திச்சண்டைப் படத்தில் வரும் கதாநாயகனைப் போல மெலிதாக வளைவாக மீசையைச் செதுக்கி வைத்திருந்தார்.

உதவி சப்-இன்ஸ்பெக்டரின் தோற்றமுள்ள இளைஞர் சாணிக் காகிதங்களில் நிறைய எழுதிக் கொண்டு வந்ததை வ்ாங்கினர். மிகவும் கவனத்துடன் படித்தார். எதிரே, அமர்ந்திருந்த கல்பனாவிடம்,

''இதுல ஒரு கையெழுத்துப் போட்டிருங்க. ஸிட்டிய விட்டு வெளிய எங்கயும் போகவேண்டியதிருக்கா?'' என்றபடி காகிதங்களை நீட்டினர்.

"I may have to leave for Tokyo in one or two months" என்றாள் கல்பனா.

''டோக்யோவில என்ன?''

''ஹேர் ட்ரெஸ்ஸிங் கோர்ஸ் அட்டெண்ட் பண்ணப்போறேன்.''

''எங்க போறதுன்னாலும் அட்வான்சா எங்களுக்கு இன்ஃபார்ம் பண்ணிருங்க.''

''சார், எனக்கும் கோபால் மரணத்துக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. உங்களுக்கு என்னென்ன இன்ஃபார்மேஷன் தேவையோ எல்லாத்தையும் கேளுங்க. தெரிஞ்சதச் சொல்றேன். நான் எதயும் மறைக்க வேண்டிய அவசியமில்லே. கோர்ட்டுக்கு மட்டும் இழுக்காதீங்க.''

''கோபால் இறந்தத ரேடியோவில கேட்டதும் நீங்க ப்ருந்தாவப் பத்தி எங்களுக்குத் தகவல் குடுத்திருந்தா, எனக்கும் இந்தக் கேசுக்கும் சம்பந்தமில்லேன்னு நீங்க சொல்றத நான் நம்புவேன். ஆனா நீங்க அப்படிச் செய்யலேயே.''

''காரணங்களைத்தான் நான் சொன்னனே சார்.''

''நீங்க சொல்ற காரணங்களை நான் நம்புவேன். சட்டம் நம்பணுமேம்மா. புருஷன்கிட்ட கோவிச்சுக்கிட்டு ஓடிவந்தவங்களுக்கு நடுராத்திரி வீட்டைத் திறந்து இடம் குடுத்திருக்கீங்க. அதுல ஒண்ணும் தப்பு இல்லே. பழைய காலேஜ் மேட்ங்கற முறைல அப்படிச் செஞ்சிருக்கீங்க. ஓ. கே. ரேடியோ நியூசைக் கேட்டதும் அந்தம்மா மயக்கமடிச்சு விழுந்திருக்காங்க, அபார்ஷன் ஆகியிருக்கு, ஆஸ்பத்திரியில கொண்டுபோயி



அட்மிட் பண்ணியிருக்கீங்க. எல்லாம் சரிதான். ஆஸ்பத்திரில அட்மிட் பண்ணதும் ரமேஷ்ங்கறவர்கிட்டே போலீசுக்குத் தகவல் அனுப்பினதாகச் சொல்றீங்க. ரொம்ப கரெக்டான ஸ்டெப். அப்புறம் என்ன பண்ணீங்க?''

''ப்ருந்தாவுக்கு உதவியா மெடர்னிடி ஹோம்ல இருந்தேன்.''

''தகவல் சொல்லப்போனவரு வரலேன்னதும் என்ன செஞ்சிருக்கணும்?''

''ஐ.ஜி. ஆபீஸ்ல ஒரு ஃப்ரெண்டைப் புடிச்சு எந்த ஸ்டேஷன்ல தகவல் கொடுக்கணுமோ அங்க கொடுத்துட்டு வர்றேன்னு சொல்லிட்டுப் போனரு. இப்படி வேக்ஆ சொல்லிட்டுப்போன அவர நான் எங்க போய்த் தேடமுடியும்?''

''அவரத் தேடச் சொல்லலம்மா.''

''அது இல்ல சார்...''

''வெய்ட். நான் சொல்றேன் போனவரு சொன்னபடி ஒரு மணி நேரத்தில திரும்பி வரல. அவர்கிட்டேர்ந்து ஃபோனும் வரல. மிஸஸ் கோபாலைத் தேடி நர்சிங் ஹோமுக்குட்



போலீசும் வரல. அப்படீன்னு என்ன அர்த்தம்?''

கல்பனு குழப்பத்துடன் செந்திலைப் பார்த்தாள். அவர்,

''போலீசுக்கு அவர் தகவல் குடுக்கலேன்னு அர்த்தம். இல்லையா?'' என்றார்.

''எஸ்...''

''அவர் செய்யாதத நீங்க செஞ்சிருக்க வேண்டாமா?''

''என்ன காரணத்தினுல அவர் கொடுக்கலேன்னு எனக்குத் தெரியாதே சார்.''



''அப்போ ஏதோ ஒரு காரணத்தினுல அவர் போலீசுக்குத் தகவல் குடுக்காம மறைச்சிருக்கலாம்னு நீங்க நினைச்சிருக்கீங்க.''

''அப்படி நான் நினைக்கலே.''

''தென் வாட்?''

''அப்படி ஏதோ ஒரு காரணத்துக்காக அவர் மறைச்சு, அந்தக் காரணத்த அவர் உங்ககிட்ட வந்து சொல்லியிருந்தா நீங்களும் இந்த விஷயத்தில ஊமையாகி இருப்பீங்க. உண்மைகளை மறைக்க வேண்டிய அவசியம் ஒருவேளை ஏற்படலாம்னு எதிர்பார்த்துத்தான் நீங்க ரமேஷுக்காகக் காத்திருந்திருக்கீங்க...

ட்ர்ரிங் ட்ர்ரிங்... ட்ர்ரிங்

...ஹலோ குட்மார்னிங் சார். செந்தில்தான் பேசறேன் சார்... சார் கிடைச்சிருக்கு சார். நெறையத் தகவல் கிடைச்சிக்கிட்டிருக்கு. மிஸஸ் கோபால் மெட்ராஸ்லதான் சார் இருக்காங்க... இல்லே சார். இல்லே சார். பாங்ளூருக்கெல்லாம் போகல சார்... இன்ஃபர்மேஷன் கொண்டு வந்தவங்களை விசாரிச்சுக்கிட்டிருக்கேன்... வந்திர்றேன் சார். மத்தியானமா வர்றேன் சார்... நல்லது சார்... சரி சார்.

......என்ன சொன்னேன்? ஆ... அதுனுலதான் நீங்க அவர் வர்றதுக்காகக் காத்துக்கிட்டிருந்திருக்கீங்க. ஒரு ஃபாரின் கார் காணுமப்போன சமாச்சாரத்த ஏதோ கொண்டை ஊசி தொலைஞ்சுபோன மாதிரிச் சொல் நீங்க. காரைப்பத்தி ஏன் உடனே க்ம்ப்ளய்ன்ட் குடுக்கலே?''

''அது... அது ப்ருந்தாவோட கார்.''

''அப்புறம் ஏன் எடுத்து ஓட்னீங்க?''

''அவ கையால கம்ப்ளெய்ன்ட் கொடுக்கட்டும்னு விட்டுட்டேன். ப்ரொசீஜர் வேறத் தெரியாது. ரமேஷும் இல்லே.''

''போலீஸ் க்ம்ப்ளெய்ன்ட் குடுக்கறதுக்கு என்ன புரொசீஜரை நீங்க தெரிஞ்சுக்கணும்? அவசரப் போலீஸ் உதவிக்கு டெலிபோன் நம்பர் நூறுங்கறது மெட்ராஸ்ல கடலைவிக்கற கிழவிக்குக்கூடத் தெரியும். ஒரு க்ரைம் சம்பந்தப்பட்ட தகவல்களைத் தெரிஞ்சும் போலீசுக்குத் தெரிவிக்காம இருக்கிறது, அப்புறம் தாமதமாத் தெரிவிக்கிறது எல்லாமே குற்றம்மா. குற்றவாளின்னு நாங்க சந்தேகப்படற நபருக்கு புகலிடம் குடுக்கறதுகூட அப்படித்தான். குற்றத்துக்கு நீங்களும் உடந்தைன்னுதான் அர்த்தம்.

''கர்நாடகா போலீசும் நம்ம போலீசும் மிஸஸ் கோபாலை பாங்களூர்ல வலை போட்டுத் தேடிக்கிட்டிருக்கு. நீங்க என்னடான்னு சாவகாசமா ரெண்டு நாள் கழிச்சு வந்து அவுங்க எங்க வீட்லதான் இருக்காங்கன்னு சொல்றீங்க.''

''ரெண்டு நாள் கழிச்சு வரல, சார். நேத்துக் காலைல சொல்ல வேண்டியத இன்னிக்குக் காலைல சொல்றேன்.''

''அதாவது இருபத்திநாலு மணி நேர டிலே.''

''அந்த டிலேக்கு நான் சொன்ன காரணங்களைத் தவிர வேற மோடிவ் எதுவும் கிடையாது சார்.''

''மோடிவ் இல்லேன்னு நீங்க சொல்றீங்க. குற்றவாளி நாட்டை விட்டுத் தப்பிச்சு ஓடறவரைக்கும் காத்திருந்திட்டு இப்ப வந்து சொல்றீங்கன்னு நான் சொல்றேன்.''

''நேத்தே நான் சொல்லாததுக்கு இன்னொரு காரணமும் இருக்கு சார்.''

''என்ன காரணம்?''

''ப்ருந்தா நேத்து பேசக்கூடச் சக்தியில்லாமக் கிடந்தா. ப்ளீடிங் அதிகமா இருந்தது. போலீஸ் வந்து இன்ட்டராகேட் பண்ண...''

''போலீஸ்காரன் நீங்க நினைக்கிற மாதிரி அவ்வளவு இர்ரெஸ்பான்சிபிளா நடந்துக்க மாட்டாம்மா. Accused அல்லது suspect நோயாளியா இருந்தா, அட்டெண்ட் பண்ற டாக்டரைக் கன்சல்ட் பண்ணுவோம். டாக்டர் பர்மிஷன் குடுத்தாத்தான் பக்கத்திலயே நெருங்குவோம். நீங்க ஆயிரம் காரணம் சொன்னாலும் போலீசுக்கு உடனே இன்ஃபர்மேஷன் தராதது பெரிய தப்பு. பின்னால இதனால உங்களுக்கு என்னென்ன வருதோ, அது எனக்குத் தெரியாது. சரி, முதல்ல அந்த மெடர்னிடி ஹோமுக்கு போன் பண்ணி மிஸஸ் கோபால் எப்படி இருக்காங்கன்னு கேளுங்க. நீங்க இங்க இருக்கிறதாச் சொல்லாதீங்க.''

''ஷீ'ஸ் ஆல்ரைட் சார். காலேல பாத்துப் பேசிட்டுத்தான் வந்தேன்.''

''பரவாயில்லே.. போன் ப... ணுங்க.'' டைரக்டரியை எடுத்து... கையில் கொடுத்தார்.

கல்பனா டைரக்டரியில் 'மி... மெடர்னிடி ஹோம்'ஐத் தே... கொண்டிருக்கையில், செந்தி... எழுந்து வெளியேறினார். ஹால்... மஃப்டியில் நின்ற கான்ஸ்டபிளை... பார்த்து 'மாரி' என்றார்.

''ஐயா''

''இந்தப் பொண்ணு இ... வெளிய போகப் போரு.''

''சரிங்கய்யா.''

''ஷாடோ பண்ணு. எங்கெ... போறான்னு சாயந்தரம் வந்... சொல்லு.''

''சரிங்கய்யா.''

மறுபடியும் தன் அறைக்குள்... நுழைந்தார் செந்தில்.

''என்ன கிடைச்சுதா மேடம்?''

''இப்பவே வந்து டிஸ்சார்... பண்ணி அழைச்சிக்கிட்டுப் போ... கன்னு சொல்றாங்க.''

''யாரு?''

''சீஃப் டாக்டர்.''

''எங்க, நுங்கம்பாக்கத்துக்கு... தானே அழைச்சிக்கிட்டுப் போக... போறீங்க?''

''அங்கதான் யாரும் இல்லையே.''

''அப்புறம்?''

''அவளோட மதர்-இன்-ல... அடையாறுக்கு அழைச்சிக்கிட்டு வர... சொல்லிட்டாங்க.''



''அவங்களுக்குச் சொல்லி ார்ச்சா?''

''காலேல அவங்களோட போன்ல பசினேன். அரை மணி நேரம் பேசி ங்க.''

''அவங்க ரியாக்‌ஷன் என்ன?''

''மருமக கிடைச்சதில சந்தோஷந் ான். ஆனு அபார்ஷன்னு சொன்ன ும் ரெண்டு செகண்டு ஒண்ணுமே பசலே. ரொம்ப வருத்தப்பட்டாங்க.''

''பெரியவரு மருமகளேச் சேர்த் க்குவாரா? ஏதோ பெரிய misunder- standingனுங்களே.''

''அதெல்லாம் news papers கட்டி -ற கதை சார்.''

''ஜனங்க பேசாம பத்திரிகைல ழுதமாட்டான் தெரிஞ்சிக்கோங்க.''

''சரி, ஜனங்க கட்டிவிட்ட கதை. அவுங்களுக்குள்ள தகராறு எதுவும் இருக்கிற மாதிரி எனக்குத் தெரியல. இருந்தா மாமியார் பேச்சில தெரிஞ்சி நக்குமே. ப்ருந்தாவப் பத்தி ரொம்ப ஆவலோட விசாரிச்சாங்க. எனக்கு நாலு தடவை thanks சொன்னுங்க. டிஸ்சார்ஜ் பண்ற நேரத்தச் சொன்னு வண்டிய அனுப்பறேன்னு சொன் னுங்க. ப்ருந்தா முந்தாநேத்துக் காலேல அவுங்க வீட்டுக்குப் போயி ருக்கா. Family wayயில இருக்கிறதச் சொல்லியிருக்கா. அதைக் கேட்டதும் அவுங்களுக்கு ரொம்ப சந்தோஷம். அவுங்க கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கிட்டு வந்திருக்கா.''

''சரி. நீங்க போயி டிஸ்சார்ஜ் ண்ணி அடையாறுக்கு அழைச்சிக் டுப் போறதுக்கு ஏற்பாடுகளேச் செய்யுங்க. சாயங்காலமா நான் அடையாறுக்கு வர்றேன்.''

''நீங்க வர்றவரைக்கும் நான் அங்க இருக்கணுமா சார்?''

''அது உங்க இஷ்டம்.''

''நேத்தும் நான் சலூன் பக்கம் போகலே.''

''மிஸஸ் கோபாலே போலீஸ் தேடிக்கிட்டிருக்கிறது அவுங்களுக்குத் தெரியுமா?''

''அதப்பத்தி ப்ருந்தா கவலேயே படல. கணவனே இழந்த வேதனே தான் அவ மனசை அழுத்திக்கிட்டி ருக்கு. இந்த மாதிரி விபரீதமெல்லாம் நடக்கும்னு தெரிஞ்சிருந்தா வீட்டை விட்டு வெளியேறியிருக்கவே மாட் டேன்னு சொல்லிக்கிட்டு அழுரு. நானு வெளிய வரல, போடீ வெளியேன்னு கூச்சல் போட்டுக்கிட்டு தொடைல பூட்ஸ் காலால மிதிச்சாரு. அதனுல தான் வீட்டைவிட்டுக் கிளம்பினேன்னு சொல்ரு.''

**பங்கஜம் கார்டன்ஸ்.**

காலே ஒன்பது மணி.

கல்பனு வீட்டின் வரவேற்பு அறை.

ட்ரேயில் தேநீர் எடுத்து வந்த கல்பனு சோபாவில் அமர்ந்திருந்த லாவண்யாவின் முன் வைத்து, ''எந்தப் பத்திரிகைன்னு சொன்னீங்க?'' என்று கேட்டாள்.

''பாலம்.''

''நான் தமிழ்ப் பத்திரிகை அவ்வளவாப் படிக்கிறதில்லே.''







''நீங்க நிஜமாவே படிக்காம இருக்கலாம். உங்களைப் பாத்தா அந்தமாதிரி backgroundல வளர்ந்த மாதிரித் தெரியுது. ஆனா சிலபேர் பெருமைக்காக இங்கலீஷ் மேகசீன் மட்டுந்தான் படிப்பேன்னு சொல்ருங்க. தமிழ்நாட்டில பிறந்து, தமிழ் நாட்டில இருந்துக்கிட்டு தமிழ்ப் பத்திரிகை படிக்கிறதில்லேன்னு சொல்றது வெட்கத்துக்குரிய விஷயங்கறத உணர்றதில்லே. Sorry, நான் உங்களையே mean பண்ணலே.''

''ப்ருந்தாவப் பத்தி உங்களுக்கு என்ன தகவல் வேணும்?''

''உங்களோட college mateங்கற முறைல அவளைப்பத்தி உங்களுக்குத் தெரிஞ்சதையெல்லாம் சொல்லுங்க.''

''ரொம்ப அழகா இருப்பா. இந்த மாதிரி பேன்ட்டெல்லாம் போட மாட்டா. காட்டன் புடவை உடுத்தி பூ பொட்டெல்லாம் வெச்சிருப்பா. ஒரு dot மாதிரி மூக்குத்தி. கைநிறைய வளையல்...''

''நீங்க அவ மேரேஜ் அட்டெண்ட் பண்ணீங்களா?''

''இல்லே. அப்ப நான் மெட்ராஸ்லயே இல்லே. ஆனா மேரேஜுக்கு அடுத்த வாரம் ஒரு buffet supperல அவளைப் பாத்தேன். காஞ்சீபுரம் கட்டியிருந்தா. புதுப் புருஷனோட தட்டைத் தூக்கிக்கிட்டு நடந்தா. நான் போயி congratulate பண்ண நினைச்சேன். கூட்டத்தில முடியல.''

''அப்புறம் எப்ப பாத்தீங்க?''

''இப்படித் துண்டு துண்டா சொன்னா சரியா வராது. அவளை சந்திச்சதிலேர்ந்து நேத்துவரைக்கு நடந்த எல்லா விஷயங்களையும் வ சையா சொல்லிர்றேன்.''

''Please.''

''ஆனா ஒரே sittingல அது மு யாது லாவண்யா. என்னோட பியூட் சலூனுக்கு வாங்க. டெய்லி கொஞ்ச சொல்றேன். ரெண்டு மூணு நாள் முடிச்சிரலாம்.''

''அது எங்க இருக்குன்னு செ லுங்க. நாளைக்கு அங்க வந்து மீ பண்றேன்'' என்றாள் லாவண்யா.

உள்ளே போய் ஒரு விசிட்டிங் கார்டை எடுத்து வந்து லாவண்யா விடம் கொடுத்த கல்பனா, ''இந்த பியூட்டி சலூனைப்பத்தி உங்க பத்திரிகைல எழுதுங்களேன்'' என்றாள்.

''கண்டிப்பா எழுதறேங்க. முதல்ல இந்த ஆர்ட்டிக்கிளை முடிச்சுக் கறேன். அது இன்ட்டரெஸ்டிங்கா இருக்கிறது உங்க கைலதான் இருக்கு.''

''எனக்குத் தெரிஞ்சதையெல் லாம் சொல்றேன். ஆனா போட வேண் டியத மட்டும் போடுங்க.''

''அத நான் பாத்துக்கறேன்'' என்ற லாவண்யா எழுந்தாள்.

— தொடரும்






''சர்வர்! ஐந்து ரூபாய்க்கு சாப்பிட் டேன். நீ ஏன் இரண்டு ரூபாய்க்கு பில் போட்டிருக்க?''

''டாக்டர் ஃபீஸையெல்லாம் கழிச்சு

''நெஞ்சே! நீ அவரைத் துரத்திக்கொண்டு அவர் பின்னலேயே ஓடும்போது என் கண்களையும் உன்னுடன் அழைத்துச் செல்வாயாக! இல்லாவிட்டால் அவரைக் காண வேண்டுமென்ற துடிப்பில் அவை என்னைக் கொத்தித் தின்று விடுகின்றன!''

காதலனுக்கு எழுதிய மடலின் இறுதியில் இந்தக் குறள் மொழியை அந்தக் காதலி குறிப்பிட்டிருந்தாள். அவன் கண்களுக்கும் அவன் நெஞ்சுக்கும் - ஏன்; அவனுக்கேகூட அதே நிலைதான் என்பதை அவள் அறியமாட்டாளா என்ன!

இந்தக் குறளுக்கு அவன்; தன்னையே எடுத்துக்காட்டாக அமைத்து அவளுக்கு ஏற்கனவே இன்பமடல் தீட்டியிருக்கிறன்.

மடல் விடு தூதுகள் முடிந்தபின்னர் மடப்பிணையும் கலைமானும், மலர்க் கொடிகளில் தென்றல் ஊஞ்சலாடும் ஆற்றோரத்து மணல் மேடொன்றில் சாய்ந்தவாறு ஒருவர் அழகை ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு பருகிக் கிடந்தனர்.

''என்னடி கண்ணுட்டி என்னையே பார்த்துக்கொண்டிருக்கிருய்? அப்படியென்ன அற்புத அழகை என்னிடம் கண்டு கண்டு வியக்கிருய்?''

அவன் கேள்வியால் அவள் முகம் மேலும் ஒளி பெற்றது.

''ஒன்றுமில்லையத்தான்! உங்கள் உதடுகளில் சதிராடும் புன்னகையை, உங்கள் உதடுகளில் காட்சிதரும் காமவேள் நடன அரங்கை, ஒரு முறையா - இரு முறையா - எத்தனையோ ஆயிர முறை பார்த்துப் பார்த்து மெய்மறந்து போயிருக்கிறேன் — தெவிட்டாத காரணத்தால்தான் இப்போதும் அந்தத் தேன்பலாச்சுளைகளைப் பார்த்துக்கொண்டேயிருக்கிறேன்! அதிருக்கட்டும் - எனத்தான்! நான் எங்கிருந்தாலும் நீங்கள் மட்டும் என் கண்களை அப்படியே விழுங்கிவிடுவது போல் பார்க்கிறீர்களே; அது ஏன் என்கிறேன்!''

வினக்கணை விடுத்தவாறே அவன் மடியினில் சாய்ந்து கொண்டாள்.

''வெள்ளை ஒளர் நடுவில் அமர்ந்து மது உறிஞ்சும் வண்டுகள் போல் அவை தோன்றினாலும் - வில்லின் நாண் விட்டுக் கிளம்புகின்ற அம்புகள் போல் என்னை உன் கண்கள் குறி பார்ப்பதால்தான்; எப்போது பாயுமோ என்மீது என்று எதிர்பார்த்து; வைத்த விழி மாருமல் இருக்கின்றேன்; இது கூடவா புரியவில்லை!'' என்ருன்.

மடியில் கிடந்தவளைத் தூக்கி மார்புறத் தழுவிக் கொண்டான். அந்த அமளியில் சிக்கிக் கசங்கிடத் தயங்கிய ஆடைகள், அவர்களிடம் தற்காலிக விடைபெற்றுக் கொண்டன! வான் மீன்கள் வட்ட நிலாவைப் பார்த்துக் கேலியாகக் கண்சிமிட்டின! நிலவோ, முகில் ஒன்றை இழுத்து முகத்தை மூடிக்கொண்டது!

ஆற்றுப்படுகையில் காற்றுப் புகவிடாத அளவுக்கு ஈருடல்கள் ஓருடலாய் ஒட்டிக்கொண்டன!

''கடல்! கடல்! இன்பக் கடல்!'' என இருவர் இதழ்களும் மென்மையாகக் கூத்தாடின!

''ஆமாம்! இன்பம்; நாம் இணைந்திருக்கும்போது கடலாகத்தான் இருக்கிறது! அதேபோலத்தான் துன்பமும் கடலையும் வெல்லுமளவுக்குப் பெருக்கெடுத்து விடுகிறது; காமம் நம்மை வருத்தும்போது!''

அந்த இன்பபுரிப் பயணத்திலும் - பிரிவென்னும் துன்பபுரி, இடையே குறுக்கிடுமே என்ற கவலைதான் அவர்களுக்கு!.

''இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்

துன்பம் அதனிற் பெரிது''

*அதிகாரம்: 117 படர்மெலிந்திரங்கல் பாடல்: 1166*

அடுங்கால் = வருத்தும்போது

# தொட்டதெல்லாம்

**லா**வண்யா ஸ்டீல் பீரோ வைத் திறந்தாள். 'ஃப்ளவர் டஸ்ட்' நறுமணம் நாசிக்குள் ஏறியது. அந்த மணம், பூங்காவில, புல்தரையில், சாலையோர நிழல்களில், கும்பல் இல்லாத ரெஸ்டாரெண்ட்களில் ராமுடன் கழித்த சிரிப்புக்கள் நிறைந்த இனிய கணங்களுக்கு ஒரே நொடியில் அவளை சுற்றுலா இழுத்துச் சென்றது.

பீரோவின் எல்லாத் தட்டுக்களிலும் அடுக்கடுக்காகப் புடவை, ப்ளவ்ஸ், பெட்டிகோட், வண்ணச் சிதறல்கள். எல்லாமே லாவண்யாவுக்குத்தான் சொந்தம். ஆனால்,

ஒவ்வொரு அதிகாலையிலும் அதைத் திறந்ததும், 'இன்று எதை உடுத்துவது' என்ற பிரச்னை அவளைத் தாக்கும். நடுக்கடலில் மிதந்து தாகத்துக்கு ஒரு சொட்டுக் குடிநீர் கிடைக்காமல் தவிப்பாள்.

ஆரஞ்சு ஷிஃபான். இதை முந்தா நாள்தான் உடுத்தினேன். நீல ஃபாரின் நைலக்ஸ். போன வாரத்திலேயே இரண்டு முறை கட்டிவிட்டேன். இன்னும் ஒரு மாதத்திற்கு இதைத் தொடக்கூடாது. பாலியெஸ்டர், பெரிய பெரிய பூக்கள். அவுட் ஆஃப் டேட். கருப்பாயிக்குக் கொடுத்துவிடவேண்டும். காஞ்சீபுரம், பனாரஸ். ஃபங்ஷனுக்குத்தான் உடுத்த முடியும். ஆர்கன்ஸா இது உடம்போடு ஒட்டாது. விடைத்துக்கொண்டு நிற்கும். அடைக்கோழி மாதிரி பிளாட்பாரத்தில் நடக்க வேண்டும்.




டிஷ்யூ. ரொம்ப ட்ரான்ஸ்பேரன்ட். ஆண்களின் கண்கள் ஊடுருவும். ஜனதா சில்க். இது மழையில் நனைந்த மாதிரி அசிங்கமாக உடம்போடு ஒட்டிக்கொள்ளும்.

காரணமில்லாமல் எந்தப் புடவையையும் அவள் ஒதுக்கவில்லை. அடித்தட்டில் கடைசியாக இருந்த நிலக்கரிக் கருப்பு நூல் புடவையை கையில் எடுத்தாள். ஏதோ ஒரு பேட்டையில் உற்பத்தி செய்யப்பட்ட ஏதோ ஒரு டெக்ஸ். கிளிப்பச்சைப் பின்னணியில் தங்க நிற டிஸைன்களுடன் மினுமினுத்த இரண்டரை அங்குல பார்டர். கடந்த ஆறு மாதங்களில் ஒருமுறை கூட அதை உடுத்தவில்லை.

அதற்கு ஏற்ற கருப்பு ப்ளவ்ஸைத் தேடி எடுத்தாள். அவளுடைய மேனிச் சிவப்பை மேலும் சிவப்பாக்கும் கருப்பு நிறத்தை அவள் விரும்பினாள். அந்தப் புடவையையும் ப்ளவ்ஸையும் முதல் முறையாக அணிந்து ராமின் எதிரே சென்றபோது, 'யு லுக் ரேடியன்ட்' என்றான். அதனால் அந்தப் புடவை-ப்ளவ்ஸ் மீது லாவண்யாவுக்கு மேலும் பிரியம்.

''இந்தப் புடவைய விட மாட்டியே'' டிபனை சாப்பாட்டு மேசைக்கு எடுத்துச் சென்ற அம்மா முணுமுணுத்தாள். அவளுக்கு கருப்பு ஆகாது.

சுறுசுறுப்பாகப் புடவை மாற்றினாள். கண்ணாடிக்குள் முகம் பார்த்து ரோஜா நிற நாக்கின் நுனியால் இதழ்களின் மென்மையை ஈரப்படுத்தினாள். கழுத்தில் திட்டுத் திட்டாகத் தெரிந்த பவுடரைக் கைக்குட்டையால் சமப்படுத்தினாள். கருப்பு வளையல்களை கரம் நிறைய அடுக்கினாள்.

சூடான இடியாப்பத்தை நீள விரல்களால் கிள்ளியவள், ஸாஸரில் அம்மா கொண்டுவந்து வைத்த தேங்காய்ப்பாலில் அதைத் தோய்த்து எடுத்து, எண்ணங்களில் அவளையறி

# பெண்ணுக்கும்

...ாது மூழ்கினுள்.

'யு லுக் ரேடியன்ட்' என்ற ராம், ...என்ன, கொலேயாளியைக் கண்டு ...பிடிச்சிட்டயா?' என்று கிண்டலாகக் ...கேட்டான்.

'கண்டுபிடிச்சிட்டா என்ன தரு ...வீங்க?'

'உனக்கு என்ன பிடிக்குமோ ...கேளு.'

'ஒரு நாள் கேக்கப்போறேன். நீங்க திருதிருன்னு விழிக்கப் போறீங்க.'

''என்னடீ நீயாச் சிரிச்சுக்கறே?'' என்ற அம்மா ஆவிபறக்கும் இடியாப் பங்களே பாத்திரத்தில் எடுத்து வந் தாள். மேசை மீது வைத்துவிட்டு லாவண்யாவின் பதிலுக்குக் காத்திரா மல் அகன்ருள். லாவண்யா மறுபடி யும் எண்ணங்களில் அமிழ்ந்தாள்.

'புரொட்யூசர் நாச்சியப்பனேப் பாத்



-சவீதா-

## இந்த இதழ் அட்டையில் புதிர் இல்லை.
## அடுத்த இதழ் அட்டையில் புதிர் தொடரும்.

இந்த வார அட்டைப் படங்களை எடுத்தவர்கள்:

சிவாஜி, ரஜனி, கமல்: யோகா
சுகாசினி : ப்ரவீன்குமார்
ஸ்ரீதேவி : ஹரீஷ்
ஸ்ரீப்ரியா : சுபா

---

தீங்களா மேடம், என்ன சொன்னார்?' சவிதாவின் கரகர குரல். தொடர்ந்து நாச்சியப்பன், 'நான் கோபாலைப் பாத்திட்டு வெளியேறின பிறகு விக்ரம் தான் அங்க வந்திருக்கணும் காத்த பெருமாளோட ஃபாமிலி டாக்டரோட பிள்ளை' என்றார். விக்ரமை நான் இன்னிக்கு பாத்திர முடியுமா? என்று லாவண்யா தனக்குள் ஒரு கேள்வியை எழுப்ப...

''என்ன யோசனை பண்ணிக்கிட்டிருக்கே. ரெண்டு இடியாப்பம் உள்ள இறங்க மாட்டேங்குதா? உனக்குப் பிடிக்கும்னுதானே செஞ்சேன்'' என்றாள் அம்மா.

''பிடிக்கலேன்னு இப்ப யாரும்மா சொன்னது?''

''மொதல்ல வெச்சதையே பாத்துக்கிட்டிருக்க. இங்க இருக்கிறதயெல்லாம் யார் சாப்பிடறது?''

''ஐயையோ, நான் ரொம்ப சுறுசுறுப்பான பொண்ணு. என்னைக் கெடுத்திராத. இவ்வளத்தயும் நான் சாப்பிட்டா திரும்ப படுக்கைய விரிச்சுப் படுக்க வேண்டியதுதான்.''

''பின்னே என்னை சாப்பிடச் சொல்றயா?''

''அளவோட ப்ரிபேர் பண்ணேம்மா. இருக்கிறது ரெண்டு பேர். இத அஞ்சு பேர் சாப்பிடலாம். இன்னிக்கு நான் சுத்து சுத்துன்னு சுத்தப் போறேன். அரை வயிறுக்கு மேல சாப்பிட்டா என்னால நடக்க முடியாது. மூச்சுத் திணறும்.''

''ஏன்தான் இப்படிச் சுத்தி உடம்பக் கெடுத்துக்கறயோ. ரூமுக்குள்ள உக்காந்து பண்ற வேலை ஒண்ணும் கிடைக்கலயா உனக்கு? இப்படிக் காடு மேடுன்னு அலைஞ்சிக்கிட்டிருந்தா எவன் உன்னைப் பொண்ணு கேட்டு இந்த வீட்டுக்குள்ள வருவான்?''

''எவனும் வரக்கூடாதுன்னு தானே இந்த வேலையப் புடிச்சிக்கிட்டிருக்கேன்.''

''எத்தனை நாளைக்கு இப்படிச் சொல்லிக்கிட்டிருக்கேன்னு பாக்கறேன்.''

சமையல் அறைக்கு அம்மா நகர்ந்ததும் மறுபடியும் சிந்தனைகள் லாவண்யாவை விழுங்கின.

'கடைசில என்ன ஆச்சு. தூக்குத் தூக்கி படத்தில சொல்லுவானே கொலையும் செய்வாள் பத்தினின்னு...' மறுபடியும் நாச்சியப்பன்.

நாச்சியப்பன் சொன்னதைப் போல ப்ருந்தா கொலை செய்துவிட்டுத் தலைமறைவாகவில்லை. ஒரு பெண் மீது பழிபோடுவதில் இந்த ஆண்களுக்குத்தான் எவ்வளவு அவசரம். அந்தப் படமுதலாளி காலையில் சொன்னதை மாலைப் பத்திரிகைகள் பொய்யாக்கிவிட்டன.

'காணமல் போன மனைவி கிடைத்தார்.'

'கோபாலின் மனைவி சென்னையில் தான் இருக்கிறார்.'

'திருமதி ப்ருந்தா, காலம் சென்ற கணவர் கோபாலுடன் கோபித்துக் கொண்டு பங்கஜம் கார்டனில் உள்ள பழைய கல்லூரிச் சிநேகிதி கல்பனா என்பவரின் வீட்டில்...... ராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள தனியார் மருத்துவமனை ஒன்றில் ஒரே நாள் தங்கி சிகிச்சை பெற்ற ப்ருந்தா தற்சமயம் அடையாறிலுள்ள காத்த பெருமாளின் பங்களாவில் இருக்கிறார். கணவர் கோபாலின் மரணத்திற்கு எந்தவிதமான காரணத்தையும் தன்னால் ஊகிக்க முடியவில்லை என்று கண்ணீருக்கு இடையே அவர் கூறியதாகச் சொல்லப்படுகிறது.

அவருக்குப் பூரண ஓய்வு அவசியம் என்று டாக்டர்கள் கூறுவதால் நண்பர்கள், உறவினர்கள் எவரும் அவரைப் பார்ப்பதற்கு அனுமதிக்கப் படவில்லை. கோபால் மரணம் குறித்துத் துக்கம் விசாரிக்கச் செல்பவர்கள் வரவேற்பு அறையில் வைக்கப்பட்டிருக்கும் விஸிட்டர்ஸ் புத்தகத்தில் இரங்கல் செய்திகளை எழுதிவிட்டுத் திரும்புகிறார்கள்.

ப்ருந்தா கொலை செய்திருக்க வழியே இல்லை. விக்ரமை விசாரித்தால்தான் தெரியும். அவன்தான் கோபாலோடு நெருக்கமாகச் சுற்றியவன். கல்யாணம் ஆனவள், ஆகாதவள் என்று பாராமல் பெண்களிடம் வெறித்தனமாக விளையாடுபவனுக்கு பெண் தகராறில்தான் ஒருநாள் முடிவு வந்து சேரும். டர்ட்டி வுமனைசர்.

**ப்ருந்தாவன் பங்களாவில்** இருக்கும் பாதாள அறைக்குள் ராமுடன் பார்த்த ஆபாச 'ப்ளோ – அப்' படங்கள் வரிசையில் லாவண்யாவின் கண் முன்னே நகர்ந்தன. சே!

ஆயிரக்கணக்கில் குவிந்து கிடந்த போர்னோகிராஃபிக் ஸ்லைடுகள். புகைப் படங்கள். கலர் க்ளைமாக்ஸ், கிங்க்கி ஸெக்ஸ் பத்திரிகைகள். தி டெவில் இன் மிஸ் ஜோன்ஸ், டீப் த்ரோட், ரோப்ட் அண்ட் ரேப்ட் என்ற பெயர்களில் எட்டு மில்லி மீட்டர் ஹார்டு கோர் படச்சுருள்கள், விடியோ டேப்கள். பாட்டரி ஸெல்லினால் இயங்கும் வைப்ரேட்டர்கள். கடைசியாகப் பார்த்த படு கோரமான காட்சிதான், மறப்பதற்காக லாவண்யா எவ்வளவோ முயன்றும் அவள் விழிகளை விட்டு அகல மறுத்தது.

'பயந்திராத' என்று ராம் சொல்லிவிட்டு வெள்ளையாகக் கட்டிலில் தெரிந்த பாறையிடம் சென்றான். வெள்ளைத் துணியால் போர்த்தப்பட்டிருந்த அது பாறையல்ல.

லாவண்யாவின் மனம் பக் பக் என்று குதித்தது.

ராம் வெள்ளைத் துணியை விருட்டென்று விலக்கி எறிந்தபோது கட்டிலில் நிஜப் பெண். லாவண்யாவின் இதயம் துடிப்பை ஒரு முறை நிறுத்திவிட்டு படபடவென்று வேகமாக அடித்துக்கொள்ளத் தொடங்கியது.

பிறந்த மேனியாக கால்களை அகட்டிக்கொண்டு அமர்ந்திருந்தாள். இதழ்களில் புன்னகை. பற்களும் விழிகளும் சுடர்விட்டன. கூந்தலில் ஷாம்பூவின் மினுமினுப்பு. கை கால்களில் நிஜ நகங்கள். 'ஆர்ம்பிட்'டிலும் வேறு சில இடங்களிலும் இயல்பான ரோம வளர்ச்சி. மார்பிலும், இடுப்பிலும் ப்ரா, ஜட்டியின் வெளுப்பான நிழல்கள். சிவந்த ரப்பர்க் காதலி.

''கையை வை'' என்றான் ராம். அவள் பயந்தாள். ''சும்மா கையை வை. பொம்மைதான்.''

பெண்ணின் முழங்கால் மேல் கையை வைத்தாள் லாவண்யா. உடனே அந்தக் காதல் அடிமையின் முகத்தில் இருந்த சிரிப்பு மெல்ல நாணமாக மாறியது.

'எதுக்கு இது?' என்று கேட்க நினைத்தாள். ராமிடம் கேட்கவில்லை. 'வாங்க முதல்ல மேலே போவோம். வாந்தி வருது' என்றாள்.

**இடியாப்பத்தைக் காலி** செய்த லாவண்யா கையைக் கழுவ எழுந்தாள். மனுஷனா இவன்? வெறி பிடிச்ச மிருகம். கொலை செய்யப்பட வேண்டியவன்தான். எந்த மனைவிதான் இந்த அட்டூழியங்களையெல்லாம் சகிப்பா. அதுவும் ப்ருந்தா...

'ப்ருந்தா ரொம்ப அழகா இருப்பா. என்னை மாதிரி பான்ட்டெல்லாம் போடமாட்டா. காட்டன் புடவை உடுத்தி பூ பொட்டெல்லாம்



அடுத்த இதழில் –

சினிமா சினிமா தொடரும் –

எம். கே. ராதா

பாலசந்தர்

பாரதிராஜா

முக்தா சீனிவாசன்

அசோக்குமார்

பராசக்தி – கோர்ட் சீன்

எம். எஸ். விசுவநாதன்

இளையராஜா

பஞ்சு

வெச்சிருப்பா. ஒரு டாட் மாதிரி மூக்குத்தி. கைநிறைய வளையல்கள். கல்பனா காதுக்குள் வர்ணித்தாள்.

''என்ன இன்னும் சாப்பிட்டு முடியலையா. என்னதான் அப்படி யோசனையோ. மூணு நாளா நானும் பாத்துக்கிட்டுத்தான் இருக்கேன்'' என்றபடி பக்கத்தில் வந்த அம்மா, ''எதயோ பறிகொடுத்த மாதிரி அங்க பாக்கற, இங்க பாக்கற, வாய்க் குள்ளயே பேசிக்கறே... காபிய எடுத் துக் குடிச்சிட்டுப் போ...'' என்றாள்.

லாவண்யா கைப்பையை எடுத் துக்கொண்டு வீட்டை விட்டு வெளி யேறினாள். பிளாட்பாரத்தில் ஊன முற்ற இளைஞன் தொலைபேசிக் கடை யைத் திறந்து வைத்திருந்தான். அவள் அருகில் சென்றதும், ''குட் மார்னிங் மா'' என்றான்.

''இந்த நம்பர் வேணும்.'' கல் பனா தந்த விசிட்டிங் கார்டை அவ னிடம் கொடுத்தாள். அவன் டயலைச் சுழற்றியதும் லாவண்யா கண்ணாடி யால் தடுக்கப்பட்ட சின்ன அறைக்குள் புகுந்தாள். ரிசீவரைக் கையில் எடுத்து, ''கல்பனாவோட பேசணும்'' என்றாள்.

''அவுங்க இல்லே. வெளில போய்ட்டாங்க. உங்க பேரு லாவண்யாதானே?'' பெண்குரல் கேட் டது.

''ஆமா''

''சாயங்காலம் அஞ்சு ... கல்பனா உங்க ஆபீசுக்கு வர்றாங்க.''

''எதுக்கு?''

''உங்களைப் பாக்கத்தான். உங் களை அங்கயே வெய்ட் பண்ணச் சொன்னாங்க.''

பாலம் வார இதழின் அலு வலகம்.

அவசர அவசரமாக 'நெஞ்சம் ஒன்று மஞ்சம் ரெண்டு' படத்தின் விமரிசனத்தை முதல் மாடியில் அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தாள், லாவண்யா. கைக்கடிகாரத்தில் மணி பார்த்தாள். 4-45.

கல்பனா வருவாளா? ஏமாற் விடுவாளா? காலையில் உள்ளே இரு கொண்டு என்னைத் தவிர்ப்பதற்காக இல்லையென்று சொல்லச் சொல் யிருப்பாளோ?

குழம்பிக்கொண்டிருந்த லாவண்யா, ''ஹாய் கல்பனா'' என் றாள் ஆச்சரியத்துடன். ''உங்களுக்கு நூறு வயசு.''

சிரித்தபடி உள்ளே வந்த கல்பனா, ஸல்வார் கமீஸ் போல அணிந்திருந் தாள்.

''ஐ'ம் ஸாரி லாவண்யா. ரமேஷைப் பாக்கறதுக்காக காலை பாலிக்ளினிக் போயிட்டேன்.''

''இட்ஸ் ஆல் ரைட்''

அரை மணி நேரத்துக்குப்பின் –

சாலையோரத்தில், மஞ்சள் கான் ரீட் பலகை பங்கஜம் கார்டன்ஸ் என்று எழுதிக்காட்டிய இடத்தில் டாக்சியை நிறுத்தச் சொன்னாள் கல்பனா.

இருவரும் இறங்கி நடந்தனர்.

''வீட்ல போயி முகத்தக் கழுவ லேட்டா ஏதாவது சாப்ட்டு ரிஃப் ரெஷ் பண்ணிக்கிட்டு பேச ஆரம்பிப் போம்'' என்றாள் கல்பனா.

புன்னகையுடன் சரி என்று தலையை அசைத்த லாவண்யாவின் செழிப்பான கன்னங்களில் சாயங்கால வெயில் சிதறியது. சுவாரஸ்யமான கதையைக் கேட்கப்போகும் ஆவல் அவள் மனத்தில் அடர்த்தியாகப் பரவியது.

— தொடரும்

ஒரு மிடில் கிளாஸ். இரண்டு லோயர் மிடில் கிளாஸ். ஒரு வீட்டில் மூன்று ஒண்டுக் குடித்தனங்கள். அடிஷனலாக பெட்ரோல் பங்க் குமாஸ்தா ஒருத்தர்–கல்யாணம்பண்ணியும் பிரம்மச்சாரி. இன்லண்ட் லெட்டரிலேயே தாம்பத்தியம் நடத்துகிறவர். இவர்களை வைத்துக் கொண்டு வெற்றிகரமாக ஒரு மேடை நாடகம் போட்டார்கள்.

சினிமாவுக்கு இது போதுமா?

பெரும்பாலும் (கவுண்டமணி) செட்டியாரின் வீட்டுக்குள்ளேயே சுற்றி வருகிறது கதை.

பிரதாப், சுமலதா, சேகர், சுகாசினி, கமலா காமேஷ், பூபதி, நித்யா, விசு போன்ற பாத்திரங்கள் அதிகமாக, அழுத்தமான சம்பவங்கள் பற்றாக்குறை.

இயற்கையான நடிப்புக்கு சுகாசினி.

தொள தொள வென்று ஒரு சட்டை, தோளிலே காசித் துண்டு, வாயிலே வக்கணைப் பேச்சு – விசுவின் நடிப்புப் பிரவேசம் பரவாயில்லை. காசை மனைவி கையில் கொடுத்த கையோடு நித்யாவின் கன்னத்தில் பளார் என்று விடுகிறாரே ஒரு அறை – அந்த இடத்தில் கொஞ்சம் அதிர்ந்து தான் போகிறோம்!

பல இடங்களில் சும்மா நின்றே சமாளிக்கிறார் சேகர். பிரதாப்தான் பாவம். படுக்கையில் கூட மனைவிமீது விரல் படாமல் படுத்துக்கொள்கிறார். என்னதான் வேலைக்குப் போகிற மனைவியென்றாலும் இப்படி ஒரு விலகலா?

மனைவிக்குக் கடிதம் எழுதும்போது பானுமதிக்கு பனுமதி என்று அந்த பெட்ரோல் பங்க் ஆசாமி (பெயர் தெரியவில்லை!) எழுத, காலை அங்கே போடாதே, இங்கே போடு என்று விசு டைரக்ட் செய்ய, 'அவ என் பெண்டாட்டி. காலை எங்கே வேணும்னாலும் போடுவேன். உனக்கென்னய்யா?' என்று பெட்ரோல் பங்க் ஆசாமி சீறுகிற இடத்தில் நயமான நகைச் சுவை.

பெற்ற மகள் பாதை மாறிப் போகிறாளோ என்ற சந்தேகம் வந்ததும் பதட்டத்தோடு அதைக் கணவனிடம் முறையிடுகிற இடத்தில் கமலா காமேஷ் ஒரு தாயின் நியாயமான தவிப்பை இயல்பாக வெளிப்படுத்தியிருக்கிறார்.

பாடல்கள் செம்தியான அறுவை!

ஒரு நாடகக் கதையை இந்த அளவுக்கு விறுவிறுப்பாக திரையில் சொல்லியிருக்கிற வகையில் எஸ்பி. முத்துராமனுக்கு வெற்றிதான்!





# குடும்பம் ஒரு கதம்பம்




"I'm not suited to married life" என்ற கல்பனா முட்டையைத் தட்டி உடைத்தாள்.

''அப்போ பாலிக்ளினிக்ல இருக்கிறவர்?''

''ரமேஷ். என் கணவரில்ல. பாய் ஃப்ரெண்ட். வாழ்க்கையையும் இந்த வீட்டையும் இந்த மூமென்ட்ல நாங்க ஷேர் பண்ணிக்கறோம்.''

''அப்படின்னா...?''

''என் கழுத்தில தாலி கிடையாது. வாழ்க்கை பூரா நாய் லைசென்ஸ் மாதிரி அத நான் சுமக்கவேண்டிய தில்லே. அவர் மேல நானோ இல்லே எம்மேல அவரோ டிவோர்ஸ் வழக்குப் போட முடியாது. யாரும் யார் கிட்டேர்ந்தும் ஜீவனாம்சம் கேட்க முடியாது.''

''இப்ப சௌகரியமா இருக்கலாம். ஆனா பாதுகாப்பு கிடையாதே.''

''எந்த சோம்பேறி எனக்குப் பாதுகாப்புத் தரணும்? என்னைப் பாதுகாத்துக்க எனக்குத் தெரியும். என் கையில தொழில் இருக்கு. நான் சம்பாதிக்கறேன். தனி பாங்க் அக்கவுண்ட் இருக்கு. தனி பர்சேஸ். தனி படுக்கை. எல்லாமே எனக்குச் சொந்தமாயிருக்கு ரமேஷும் என்னை மாதிரி

# தொட்டதெல்லாம்

எல்லாத்தையும் ஸெபரேட்டா வெச்சிருக்கார். இஷ்டப்பட்டா ஒண்ணாத் தூங்குவோம். ஆனா கடந்த மூணு வருஷத்தில ஒரு நாள்கூட நாங்க தனியா படுத்ததில்ல...'' லேசாகச் சிரித்தாள்.

''குழந்தை பிறந்தா?''

''அதெல்லாம் பிரச்னை இல்லே, லாவண்யா. இப்போ எங்க ரெண்டு பேருக்குமே குழந்தை ஆசை இல்லே. பெட்ரூம் கபோர்ட்ல பில்ஸ் ஸ்டாக் வெச்சிருக்கேன். அதுக்காக கவர்ன்மெண்ட் எங்ககிட்ட நன்றியோட நடந்துக்கணும். ப்ரெட் டோஸ்ட் போதுமா?''

''வி ஆர் லிவ்விங் டுகெதர். சேர்ந்து வாழறோம். நாளைக்குப் பிரிஞ்சு போயிரலாம்.''

''சட்டப்படி இது தப்பில்லையா, கல்பனா?''

''எனக்குத் தெரியாது. தப்பா இருந்தா சட்டத்தத்தான் திருத்தணும். மாற்றுங்கள் சட்டங்களை, இல்லாவிட்டால் மாற்றும் அது உங்களைத் தான்னு ஒரு பொயட் எழுதிருக்கான். நீங்க படிச்சதில்லே. ஆஃப் பாய்ல் சாப்பிடுவீங்கல்ல?''

''முட்டையா? பச்சையாக் குடுத்தாக்கூட சாப்பிடுவேன்'' என்றாள் லாவண்யா.

''சட்டம் ஒழுங்கெல்லாம் நம்ம சௌகரியத்துக்குத்தான் லாவண்யா. இந்த வாழ்க்கைதான் எனக்கு சௌகரியமா இருக்கு. நாங்க இப்படி வாழ்றதினால சொஸைடிக்கு எந்த அசௌகரியமும் கிடையாது. ஸோ...''

''இதுல என்ன சௌகரியத்த ஃபீல் பண்றீங்க?''

''நான் ரெண்டு ஸ்லைஸ்தான் சாப்பிடுவேன்'' என்றாள் லாவண்யா.

சுவிட்சை அழுத்தி டைனிங் மேஜைக்கு மேலே இருந்த விளக்கை எரிய வைத்தாள் கல்பனா.

''கழுத்தில மஞ்சள் கயித்தத் தொங்கவிட்டுக்கிட்டு அவஸ்தை

# பெண்களும்

டற எத்தனையோ பெண்களைப் பாத்
ிருக்கேன். புதுப்புருஷன் முதல்ல
ரு வருஷத்துக்கு வீட்டுக்குச் சீக்கி
மா ஓடி வருவான். ஆபீஸ் வேலைகள்
லாம் அப்போ அவனுக்கு முக்கியமா
இருக்காது. அவனுக்காக இவ
டய்லி சிங்காரிச்சுக்கிட்டு அவனுக்
குப் பிடிச்சத ப்ரிபேர் பண்ணி... முன்
னுத்தி அறுபத்தஞ்சு நாளும் முன்
... அறுபத்தஞ்சு விதத்தில
... ன குஷிப்படுத்த கற்பனைய
செலவு பண்ணணும். அப்புறந்தான்
அவனுக்கு ஆபீஸ் வேலை முக்கியமாத்
தெரிய ஆரம்பிக்கும். இவளுக்குக் காத்
திருக்கிற வேதனை ஆரம்பிக்கும். பன்னி
ரெண்டு மணிக்குக் கீழே படிக்கட்டில
பூட்ஸ் சப்தம் கேக்கும். மேல்
மாடில வேற வீட்ல தாழ்ப்பாள்
விலகும். பக்கத்து போர்ஷன்ல சிரிப்புச்
சத்தம் கேக்கும். நான் என் வாழ்க்
கைல எவனுக்காகவும் காத்திருந்த
தில்லே. ஒரு டஜன் ரோமியோக்
களுக்கு ஜூலியட்டா இருந்திருக்
கேன். ஆனா எந்த ரோமியோவையும்
நான் நம்ப விரும்பலே.

''குடும்பம் மாங்கல்யம் கற்பு
தாய்மைன்னு சொல்லி என்னை எவ
னும் ஏமாத்த முடியாது. நீதான் என்
னைவின்னு படுக்கையில என் கையப்
பிடிச்சு ஒருத்தன் சத்யம் பண்ணன்.
..ன் ஆசையத் தீர்த்துக்கிட்டு
ஒழுங்கா இடத்தக் காலிபண்ணு.
..த் ப்ரெண்ட்ங்கற அற்புதமான
பதவியத்த உனக்குக் கொடுத்தது
என் தப்பு. அதக் கொச்சைப்படுத்தா
தேன்னு விரட்டியடிச்சேன்.''

''உங்களுக்கு ஆண்கள்னா அவ்
வளவா ஆகாதுன்னு நினைக்
கிறேன்.''

''ஆண் எனக்குப் பிடிக்கலேன்னா
நான் லெஸ்பியன்னு அர்த்தம். என்
காலை முத்தமிடறதுக்கும், ட்ராங்கு
லிசர் மாதிரி என்னை நைட்ல தூங்க
வைக்கறதுக்கும் அவசியம் ஒர்த்தன்
தேவை. There is nothing like having a man admire your body. ஆண் தேவையில்லேன்னு நான் சொல்
லலே. கல்யாணமும் புருஷனும்
தான் தேவையில்லேன்னேன்.''

''மேரேஜ்ங்கற இன்ஸ்டிட்யூஷன்
மேல ஏன் உங்களுக்கு அவ்வளவு
கோபம்?''

''கல்யாணம் ஒழிஞ்சாத்தான்
மேய்ல் ஷோவனிஸம் ஒழியும்னு
நினைக்கறவ நான். முன்னப் பின்னத்
தெரியாத எவனோ ஒரு காட்டான்
முதலிரவில எம்மேல விழுந்து ரெண்டு
நிமிஷம் என் உடம்பப் புண்ணாக்கற
துக்கு எங்க வீட்லேர்ந்து கட்டிலையும்
ஃபோம் ரப்பர் மெத்தையையும் நான்
தூக்கிக்கிட்டு வரணுமா? Never. பாத்
திர பண்டமெல்லாம் கொண்டு வந்து
எவனோ ஒருத்தனுக்கு சமைச்சுப்
போடணும்னு நமக்கு என்ன தலை
யெழுத்து. நமக்குன்னா ஐ மீன் பெண்
களுக்கு. பெப்பர் ஸால்ட் எடுத்துக்
கோங்க.

''மாடு பிடிக்க வர்ற மாதிரி ஒர்த்
தன் என்னைப் பெண் பாக்க வர்றத
நான் அனுமதிக்கவே மாட்டேன்.
பஜ்ஜியையும் ஸொஜ்ஜியையும் தட்
டில எடுத்துட்டு வரும்போது என்
காலை நோட் பண்ணுவான். அவ
னோட நொண்டிக் காலை பேன்ட்டுக்
குள்ள மறைச்சிருப்பான். சுயமா
சம்பாதிக்க முடியாதத லிஸ்ட்
போட்டுக் கொடுப்பான். சொத்து பத்

சவீதா

தெல்லாம் எவ்வளவு தேறும்னு அவனைப் பெத்தவங்க அதிகாரத்தோட கேப்பாங்க. அவங்க பரம்பரை அன்னக்காவடியா இருப்பாங்க. அவன் கிட்ட ஆயிரம் கெட்ட பழக்கம் இருக்கும். அவன் கால்ல விழுந்து நான் நமஸ்கரிக்கணும். டு டெல் யு தி ஃபாக்ட், மம்மி டேடி கால்ல கூட நான் விழுந்ததில்லே லாவண்யா.''

''இந்தக் காலத்து ஜென்ட்ஸ் நீங்க சொல்ற அளவுக்கு மோசமில்லே கல்பனா. டைம்ஸ் ஆர் சேஞ்சிங்.''

''எவ சொன்னது? என்ன சேஞ்சு ஆயிருக்கு? பத்து வருஷத்துக்கு முன்னால பெண்ணு பாக்க வர்றவன் உனக்குப் பாடத் தெரியுமான்னு கேப்பான். இப்ப? யு நோ ஸிங்கிங்னு இங்கலீஷ்ல கேக்கறான். இதுதான் சேஞ்சு. இந்த மாதிரி ஒரு கல்யாணத்துக்காக வருஷக்கணக்கில வேலே பாத்து, நகைக்கடைல இன்ஸ்டால்மென்ட் கட்டி, சிட்ல பணத்தச் சேர்க்கற அப்பாவித் தமிழ்நாட்டுப் பெண்களுக்காக ரொம்ப அனுதாபப்படறேன்.''

''உங்களுக்கும் ரமேஷுக்கும்



கருத்து வேறுபாடு ஏற்படறதே இல்லேயா?''

''நிறைய ஏற்படும். ஆனா புருஷன் பெண்டாட்டி மாதிரி தலைமயிரைப் பிடிச்சுக்கறதில்லே. அண்டர்ஸ்டாண்டிங்தான் எங்க வாழ்க்கையின் அஸ்தி



வாரம். ஒர்த்தரை ஒர்த்தர் புரிஞ்சுக்கிட்டு ஆரம்பிச்சிருக்கிற வாழ்க்கை இது. காலேஜ்ல படிச்சப்ப ப்ருந்தா ஒரு நாள் என்கிட்ட கேட்டா...''

''Enough... போதுங்க. நீங்க வச்சுக்கோங்க.''

''இன்னும் ரெண்டு சாப்பிடுங்க.''

''ப்ருந்தா என்ன கேட்டாங்க?''

''உன்னோட ஹஸ்பெண்ட், பாய் ஃப்ரெண்ட் ரெண்டு பேரும் ஒரே நேரத்துல தண்ணில மூழ்கிட்டா யாரைக் காப்பாத்துவேன்னு கேட்டா.''

''அதுக்கு என்ன சொன்னீங்க?''

''நீ தாண்டா என் ஹஸ்பெண்டுன்னு எவன்கிட்டயும் நான் கழுத்த நீட்டப்போறதில்லே, கேள்விய மாத்துன்னேன். ப்ருந்தா விடலே. ஒரு ஆர்க்யுமென்ட்டுக்காகக் கேக்கறேண்டி, சொல்லு, யாரைக் காப்பாத்துவேன்னு திரும்பக் கேட்டா. நான் என்ன சொல்லியிருப்பேன்?''

''பாய் ஃப்ரெண்டத்தான்னு சொல்லியிருப்பீங்க.''

''அதான் இல்லே, புருஷனைத்தான் காப்பாத்துவேன்னேன்.''

''அப்படியா?''

''ஆமா. பாய் ஃப்ரெண்டுக்கு என்னைப் புரிஞ்சுக்கற சக்தி உண்டு.''

''ரமேஷ் உங்க காலேஜ் மேட்டா?''

''இல்லே. அவனை நான் சந்திச்சது ஒரு ஆக்சிடென்ட். ஸ்குவாஷ் பாட்டில்களை இடுக்கிக்கிட்டு ஸ்பென்சர்ஸ் வாசல்ல ஒரு நாள் ஆட்டோ டாக்சி எதுவும் கிடைக்காம தடுமாறிக்கிட்டிருந்தேன்.''

''அப்ப லிஃப்ட் தந்தாரா?''

''ஆமா. ஆனா லிஃப்ட் தந்தவனையெல்லாம் பாய் ஃப்ரெண்டா ஆக்கியிருந்தேன்னா என்கிட்ட ஒரு பட்டாலியனே இருக்கும். ரமேஷ் பைக்கை ராஷ் ஆ ஓட்டின விதம் எனக்குப் பிடிச்சிருந்தது. திருப்பங்கள்ல ப்ரேக் போடாம நைன்டி டிக்ரில ஒடிச்சான். எனக்கு வேகம் ரொம்பப் பிடிக்கும். வேகமா பேசற ஆண்களைப் பிடிக்கும். என்னோட ஆண் ஒரே ஒரு விஷயத்தில மட்டுந்தான் ஸ்லோவா இருக்கணும்னு விரும்பறேன்.''

---

உலகிலேயே பெண் எழுத்தாளர்கள் அதிகமுள்ள நாடு சோவியத் நாடு.

– புரோபசர்

---



''டேப்ரெக்கார்டரும், ரேடியோவும் அமர்க்களப் படுதே! காலேஜ்லேர்ந்து பையன் வந்திருக்கானு?''

''செமஸ்டர் எக்ஸாமாம். ஸ்டடி லீவுக்கு வந்திருக் கான்!''

— மதுக்கூர் மன்னவன்

''எதுல...?''

''ரொம்ப இன்னஸென்டா கேக்க றீங்க. உங்களுக்கு அந்த அனுபவம் இன்னும் இல்லே போலத் தெரியுது. உங்களைக் கெடுக்கக்கூடாது.''

''என்னைச் சாப்பிடச் சொல்லிட்டு நீங்க சாப்பிடவே இல்லையே.''

''என்ன சொன்னேன்?'' கல்பன கேட்டாள்.

''வேகம்''

''ஆமா. ரமேஷ் பைக்கைக் கண் மண் தெரியாம விரட்டினன். நான் பாட்டில்களை ஒரு கையால அணைச்சுக் கிட்டு இன்னொரு கையால இறுக்கமா அவனைக் கட்டிக்கிட்டு... பயந்து கண்ணை மூடிக்கிட்டேன். வியர்த்து நனைஞ்ச அவனோட டி ஷர்ட்டை என் மூக்கு வாசனை பிடிச்சது. அன்னிக்கு ராத்திரி அவனும் நானும் உடம்பில எதுவும் இல்லாம பைக்ல சவாரி பண்ற மாதிரி ட்ரீம். அவனோட வேகத்து காக மறுபடியும் அவனைத் தேடினேன் பிடிச்சுக்கிட்டேன். இப்ப மூணு வ ஷமா நாங்க ஒண்ணு இருக்கோம் ஆனு நாங்க ஸ்விங்கிங் டை இல்லே!''

''இன்னும் ப்ருந்தாவப் பத்தி நீங்க ஆரம்பிக்கலியே.''

''நான் மேற்குன்னு ப்ருந்த கிழக்கு. தாலிகட்டி, முதல் இரவி தான் முறைப்படி வெர்ஜினிடிய இழ பேன்னு பிடிவாதம் பிடிச்சவ. நீங் இங்க ஸ்டே பண்ணீங்கன்னு விடி விடிய நான் பேசிக்கிட்டேயிரு பேன்.''

''நைன் தர்ட்டி ஆச்சு, கல் அம்மா தேடுவா. நாளைக்கு எப் சந்திக்கலாம்?''

''Any time after 4-30 would b fine.''

''அப்போ போன் பண்ணிட் பியூட்டி சலூனுக்கு வர்றேன்'' எழு தாள்.

''இருங்க, ஆட்டோ ஸ்டாண் வரைக்கும் வர்றேன்.''

அதிகாலை உடற்பயிற் சியை முடித்த ராம் உடலின் விய வையைத் துடைத்தான். வராந்த வுக்கு வந்தான். புதிதாக விழுந் கிடந்த ஆங்கிலச் செய்தித்தாளை கையில் எடுத்துப் பிரித்தான் ''வாங்க செந்தில். மிஸஸ் கோபாலை நேத்து விசாரிச்சிட்டீங்களா?''

''விசாரிச்சிட்டேன் சார் கோபால் மரணத்துக்கும் அவுங்களு கும் எந்த சம்பந்தமும் இருக்கிற மாதிரித் தெரியல.''

''உள்ளே உக்காருங்க. நான் வந்திர்றேன்.''

— தொடரு

---

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனை. கதை, கட்டுரைகளை தபால் மூலமே அனுப்புதல் வேண்டும். அவற்றைத் திருத்தவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குங்குமம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட்டிற்காக, கலையகம் அச்சகத்தில் அச்சிட்டு, 93, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 034-லிருந்து வெளியிடுபவர்: முரசொலி மாறன், எம். ஏ., எம். பி. ஆசிரியர்: பராசக்தி.

'ஸ்பார்ஷ்,' ஊனமுற்றவர்கள் சமூதாயத்தில் படும் இன்னல்களை விளக்குகிறது. இந்தப் படத்தில் நான் ஒரு பெண்ணின் மன உளைச்சல்களை யும் எடுத்துக்காட்ட முயற்சித்திருந் தேன். அவள் வாழ்க்கையில் தனக்கு விருப்பமான, நெருக்கமானவைகள் அனைத்தையும் ஒவ்வொன்ருக இழந்து வருகிருள். அந்த விதவை தனக் குள்ளே ஒரு தனிமையையும் தன்னிரக் கத்தையும் வளர்த்துக் கொள்கிருள். முடிவில், இதுவல்ல வாழ்க்கை என்பதை உணர்ந்து, சாதிக்க வேண் டிய விஷயங்கள் இன்னும் நிறைய இருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளுகிருள். கடைசியில் அடுத்த வர்களின் கஷ்டங்களைத் தீர்த்து வைப்பதில் வாழ்க்கையின் முழுமையை உணருகிருள்.''

''சஸ்மே புதூர்' கதை என்ன?''

''சஸ்மே புதூர்' – இதில் முழுக் கதை இடம் பெற்றிருப்பதாகச் சொல்ல முடியாது. இதில் கதையே இல்லை. இப்படத்தில் இளம் தலைமுறை யினர் மூன்று பேரின் மனப்போக்கை, டில்லிப் பின்னணியில் படம் பிடித்துக் காட்டியிருக்கிறேன். இதில் ஒருவன் சங்கோஜி, புத்தகப் புழு, இன்டெலெக் சுவல் டைப் (ப்ருக் ஷெய்க்). அடுத்த வன் கவிஞன் (ராகேஷ் பேடி). கீழே விழும் தொப்பியைப் பார்த்தால் போதும் – கவிதை இவனிடமிருந்து பிறக்கும். மூன்ருமவன் (ரவி பாஸ் வானி) சினிமாப் பைத்தியம். நிஜ வாழ்க்கையையும் 'சினிமா ஸ்டைலி'ல் பார்ப்பவன். இவர்களின் கனவுகளை யும் கற்பனைகளையும் யதார்த்தமாகக் காட்டியிருக்கிறேன்.''

''உங்களுடைய முதல் படமான 'ஸ்பார்ஷ்,' சமுதாயப் பிரச்னைகளில் ஒன்றைப் படம் பிடித்திருந்தது. 'சஸ்மே புதூர்,' உங்களுடைய முதல் படத்திலிருந்து மிகவும் வேறுபட்டு நிற்கிறது. இதுபற்றி உங்களுடைய கருத்து?''

''சஸ்மே புதூரு'ம் சமுதாயப் போக்கில் ஒன்றைத்தான் காட்டியிருக் கிறது. ஒரு நல்ல ஆரோக்கியமான, ஹாஸ்யப்படம், ரசிகர்களின் மூளைக்கு வேலை கொடுக்கும் படம் எந்த விதத் தில் மட்டமாகப் போய்விட்டது? இன் றைய திரைப்படங்கள் ஹாஸ்யம், கேளிக்கைகளை மிகுந்த அளவில் குறைத்துக்கொண்டுள்ளன. அதற்குப் பதிலாக ஆபாசம் அதிகமாகியுள்ளது. ரசிகர்களின் தரத்தை மட்டமாக மதிப் பிடுகிருர்கள். இந்த நிலை மாற வேண்டும். 'கமர்ஷியல்' படங்களுக் கும் கலைப்படங்களுக்கும் உள்ள இடை வெளிக்கு ஒரு பாலம் அவசியம். 'சஸ்மே புதூர்' அந்த வேலையைச் செய்திருக்கிறது என்று நம்புகிறேன்.''

– ப்ரீதி

●● பல வருடங்களாகப் பின்னணி பாடி திரை உலகில் உன்னத இடத்தை அடைந்துள்ளவர் லதா மங்கேஷ்கர். இன்றும் இவர் ரிகார்டிங் தியேட்டருக்குள் நுழைந்து மைக் முன்னல் பாடும்போது காலணிகள் அணிந்து கொள்வதில்லை. அந்த இடத்தைப் பூஜை அறைபோல் மதிக்கின்ருர். அது மட்டுமன்று. லண்டன் ஆல்பர்ட் ஹாலில் பாடச் செல்லும்போதுகூட, பலர் குளிரில் கால் விறைத்துப்போகும் என எச்சரித்தும், காலணிகள் அணிந்து கொள்ளாமல்தான் பாடினர்.

எஸ். சவிதா



# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

"சார் என்ன நினைக்கறீங்க?'' ராமின் எதிரே அமர்ந்திருந்த செந்தில் கேட்டார்.

''நான் நினைக்கறத அப்புறம் சொல்றேன். நீங்க என்ன நினைக்கறீங்க, அத மொதல்ல சொல்லுங்க.''

''ஸஸ்பிஷியஸ் டெத்னு கேஸ் ரிஜிஸ்டர் பண்ணிருக்கோம்.''

''அதையெல்லாம் யார் கேட்டாங்க. நேரடியா பதிலுக்கு வாங்க. கொலையா, இல்லையா?'' ராம் சிரித்தான்.

''இல்லே சார்.''

''நிச்சயமா?''

''இல்லே சார். தற்கொலை தான்.'' ராம் மறுபடியும் சிறிதாகச் சிரித்துவிட்டு ''எப்படி அந்த முடிவுக்கு வந்தீங்க?'' என்று கேட்டான்.

''மிஸஸ் கோபாலே விசாரிச்ச பிறகு அப்படித்தான் சார் தெரியுது. அந்தம்மா அவர் மேல உயிரையே வச்சிருக்காங்க.''

''உயிரை வச்சிருக்கிறவங்கதான் உயிரையும் வாங்குவாங்க. அதீதமான அன்பு அதீதமான விரோதத்தில கொண்டுபோய் விடும். லவ் ஹேட் ரிலேஷன்ஷிப்ப ரெண்டு பேரும் வளர்த்திருப்பாங்க. கோபாலுக்கு கேரக்டர் வீக்னு நல்லாத் தெரியுது இல்லையா?''



''எஸ் ஸார்.''

''அவர் மற்ற பெண்களோட பேசறது பழகறது இந்தம்மாவுக்குப் பிடிக்காம இருந்திருக்கலாம். அதனால தகராறு முற்றியிருக்கும்.''

''அப்படி அவுங்க கொலை பண்ணிருந்தா, கோபால் இறந்தத ரேடியோவில கேட்டதும் எந்த அதிர்ச்சியும் ஏற்பட்டிருக்காது. அபார்ஷனும் ஆகியிருக்காது.''

''அந்தப் பாயின்ட்டுக்கு நான் வர்றேன். என் பங்களாவைவிட்டு வெளியேறினுங்க? அதச் சொல்லுங்க.''




சுஜாதா



''போடீ வெளிலன்னு பூட்ஸ் காலால மிதிச்சாராம். இவங்க கையில அகப்பட்டத அவர் மேல எறிஞ்சிட்டு காரை எடுத்துக்கிட்டு சிநேகிதி வீட்டுக்கு கிளம்பி வந்திட்டாங்க.''

''ஏன் மிதிச்சாராம்?''

''கோபால்கிட்ட ஒரு சினிமா கம்பெனி முதலாளி வந்து பேசிக்கிட்டிருந்திருக்கார்.''

''என்ன பேசினர்?''

''அவரோட புதுப்படத்துக்கு கோபால் ஃபைனன்ஷியராம்.''

''அதனால?''

''படம் எடுக்க வெளிநாட்டுக்குப் போகும்போது நானும் வர்றேன்னு கோபால் அவர்கிட்ட சொல்லிருக்கார். அத இந்தம்மா பக்கத்து ரூம்லேர்ந்து கேட்டிருக்காங்க. சினிமாக்காரர் போனதும் இவங்க அவர்கிட்டப் போயி உங்களைத் தனியா வெளிநாட்டுக்குப் போக விடமாட்டேன்னு சொல்லிருக்காங்க. இதுதான் தகராறுக்கு ஆரம்பம்னு சொல்றுங்க.''

''இது மிஸஸ் கோபால் உங்ககிட்ட சொன்ன கதை. சரி, அதையே நம்புவோம். பூட்ஸ் காலால இந்தம்மாவ உதைச்சிருந்தா அப்பவே அபார்ஷன் ஆகியிருக்கணுமே. அப்படி ஆகல. சரி விடுங்க. கையில கிடைச்சத அவர் மேல எறிஞ்சதா சொல்றுங்க...''

''அதக் கேட்டுட்டேன் சார். ஹேர் பிரஷ்ஷை வச்சு தலைசீவிக்கிட்டிருந்



# ஐ லவ் யூ

**'பன்னீர் புஷ்பங்கள்'** படத்தில் கதாநாயகனாக நடித்திருக்கும் சுரேஷுக்கு ஒரே கண் திருஷ்டி போலும்! சமீபத்தில் ஒரு கார் விபத்தில் சிக்கி உயிர் தப்பினார்:

''எப்படித்தான் என் போன் நம்பர் கிடைச்சுதோ தெரியல்லே. அந்தப் படம் வந்ததிலிருந்து பல ஹைஸ்கூல் மாணவிகளும், காலேஜ் கேர்ள்ஸும் போன் பண்ணி என்னைப் பாராட்டுகிறார்கள். இன்னும் சில பெண்களோ, ''சுரேஷ், ஐ லவ் யூ'' என்று போனிலேயே காதல் வசனமும் பேசுகிறார்கள். ஒரே வேடிக்கையாக இருக்கிறது.''

சுரேஷ் தனது நாலாவது வயதில் 'மாத்ருபூமி', எட்டாவது வயதில் 'தீட்சா' என்ற தெலுங்குப் படங்களில் குழந்தை நட்சத்திரமாக நடித்தார்.

''என் தந்தை (எம்.எஸ். கோபிநாத்) இருபத்தைந்து படங்களைத் தயாரித்திருக்கிறார். என்றாலும் எனக்கு ஒரு படத்தில்கூட சான்ஸ் கொடுக்கவில்லை. ஆனால் என் மாமா மதுசூதன ராவ் தான் தயாரித்த இரண்டு தெலுங்குப் படங்களில் எனக்கு வாய்ப்பளித்தார். அப்பாவுக்கு நான் நன்றாகப் படித்து ஏதாவது பெரிய வேலைக்குப் போகவேண்டுமென்றுதான் ஆசை. இருந்தாலும் நான் நடிகனானது பற்றி அவருக்கு இப்போது சந்தோஷம் தான்'' என்கிறார் சுரேஷ்.

'பன்னீர் புஷ்பங்களி'ன் வெற்றியைத் தொடர்ந்து சுரேஷுக்குப் பரிசாகக் கிடைத்திருப்பது - பன்னிரண்டு புதுப்படங்கள்.

— மன்னை



தாங்களாம். அந்த பிரஷ்ஷையும் படுக்கை மேல கிடந்த ஒரு புக்கையும் அவர்மேல எறிஞ்சாங்களாம். அது அவர் மேலகூட அநேகமா பட்டிருக்காதுன்னு சொல்றாங்க சார்.''

''அநேகமா பட்டிருக்காதுன்னு ஒருவேளை பட்டிருக்கலாம்னு நாம எடுத்துக்கணும். சின்னப்பொருள்கூட சமயத்தில படாத இடத்தில பட்டு துன்னு ஆளைக் காலி பண்ணிடும். எறிஞ்சுட்டு அறையவிட்டு ஓடிருக்காங்க.''

''ஆமா சார். கோபால் இறந்தது தெரியாம வீட்டைவிட்டு வெளியேறி இருக்கலாம். மறுநாள் ரேடியோ நியூஸைக் கேட்டதும் அபார்ஷன் ஆகியிருக்கலாம். ஆனா...''

''என்ன ஆனா?''

''தற்காப்புக்காக எதிரியத் தாக்கறது எப்படி சார் கொலையாகும். அவர் பூட்ஸ் காலால எத்தும்போது இந்தம்மா தன்னோட உயிரக் காப்பாத்திக்கறதுக்காக துப்பாக்கியால கூடச் சுடலாமே சார். சட்டப்படி அது குற்றமில்லையே சார். தன்னோட உயிரக் காப்பாத்திக்கற உரிமை ஒவ்வொரு ஜீவராசிக்கும் உண்டு. இல்லீங்களா சார்.''

''போலீஸ் ட்ரெய்னிங்ல படிச்சத நல்லா ஞாபகம் வச்சிருக்கீங்க மிஸ்டர் செந்தில். லெட் மி புட் இட் திஸ் வே. ஒர்த்தன் என்னைத் தாக்கறான். கொன்னுடுவேன்னு மிரட்டறான். என் கையில துப்பாக்கி இருக்கு. நான் அவனைச் சுடறத சட்டம் அனுமதிக்குமா?''

''தாராளமா. வன்முறையிலேர்ந்து உங்களைப் பாதுகாத்துக்க, நறிப்பா கொலை மிரட்டல்லேர்ந்து தப்பிக்க உங்களுக்கு சகல உரிமையும் உண்டு சார்.''

''சரி, முதல்ல நான் அந்த ஆள் மேல கையில அகப்பட்டத தூக்கி எறியறேன், ப்ருந்தா கோபால் மேல எறிஞ்ச மாதிரி. அவன் கீழே சாயறான். அவனால எழுந்திருக்க முடியலே. அப்புறம் அவனை நான் சுட முடியுமா?''

செந்தில் பதில் சொல்லாமல் ராமையே பார்த்தார்.

''அப்படிக்கொன்னு நான் தூககு மேடைக்குப் போக வேண்டியதுதான். உங்களைத் தாக்க வர்றவனை நீங்க தாக்கி அவன் செயலிழந்தபிறகு மேற்கொண்டு அவனைத் தாக்கிக் கொல்றதுக்கு உங்களுக்கு உரிமை கிடையாது. அப்படிச்செஞ்சா அது சந் தேகத்துக்கு இடமில்லாம ப்ரிமெடிட் டேட்டெட் ஃபர்ஸ்ட் டிக்ரி மர்டர்.

''கோபால் பூட்ஸ் காலால உதைச்சாரா இல்லையான்னு எனக்குத் தெரியாதுன்னு சமையல்காரன் சொல் லிட்டான். ஏதோ வாக்குவாதம் நடந்தது, அவ்வளவுதான் எனக்குத் தெரியும்னு அவன் சொல்றன். ஆக அவர் உதைச்சார்ங்கறதுக்கு எந்த ஆதாரமும் கிடையாது.

''கையில கிடைச்சத அவர் மேல விட்டெறிஞ்சேன்னு ப்ருந்தா சொல் றது உண்மை. பங்களாவில கலேஞ்சு கிடைக்கறதயெல்லாம் நாம பாத்திருப் போம்னு அவங்களுக்குத் தெரியும். அதனால உண்மைய ஒத்துக்கருங்க. அப்புறம் நடந்தது என்ன? நம்ம கையில சிக்கியிருக்கிற தடயங்களை வச்சு நான் சொல்றேன்.

''படாத இடத்தில பட்டு கோபால் கீழ சாஞ்சிருக்கார். அத இவங்க எதிர் பார்க்கல. மூக்கில கைய வச்சுப் பாத் திருக்காங்க. மூச்சு இருந்திருக்கு. மயக்கம் தெளிஞ்சா சும்மா விடமாட் டார், சாப்டரை க்ளோஸ் பண்ணிர வேண்டியதுதான்னு திடீர் முடிவு எடுத்திருக்காங்க. நைட்கவுன்லேர்ந்து இடுப்புக்கயிறை உருவியிருக்காங்க. கழுத்தில மாட்டி சாகற வரைக்கும் இறுக்கியிருக்காங்க. கயிறை கையோட எடுத்துக்கிட்டு, சூட்கேஸ்ல துணிமணி களை அள்ளிக்கிட்டு ஓடியிருக்காங்க. அவசரத்தில கயிறு கை நழுவி கார் ஷெட்ல விழுந்திருக்கு. அத கவனிச் சிருக்க மாட்டாங்க. ஸ்ஃபையர் பக்கத் திலே இருக்கிற பெட்ரோல் பங்க்ல காரை நிரப்பியிருக்காங்க. பாம்பே, டெல்லி, அல்லது ஃபாரின்ல கள்ளக் காதலன் இருக்கணும். போலீஸ் பின் னால வரக்கூடாதுங்கறதுக்காக பாங் ளூருக்கு பெட்ரோல் பங்க்ல வழி கேட் டிருக்காங்க. ஸிட்டி லிமிட்டைத் தாண் டிப் போயிருக்காங்க. வயித்தில வலி யெடுத்திருக்கு. காரைத் திருப்பிக் கிட்டு பழைய சிநேகிதி கல்பனா வீட்

டுக்கு வந்திருக்காங்க. அபார்ஷ ஆகியிருக்கு.

''ரேடியோ நியூஸைக் கேட் பிறகுதான் அபார்ஷனி ஆச்சுன் ப்ருந்தாவும் கல்பனாவும் சொல்ற ஏன் நம்பறீங்க? கல்பனாவோட ஹ பெண்டை விசாரிச்சிட்டீங்களா?''

''அவன் போலீசுக்கு இன்ஃப மேஷன் குடுக்க வந்திருக்கான். கு குப்பத்தொட்டில மோதி உதடு கிழிஞ் பேச முடியாம மயிலாப்பூர் பாலிக் னிக்ல படுத்துக்கிடக்கான். என்னி குமே அவன் கண்மண் தெரியாம தான் வண்டிய ஓட்டுவானாம்.''

''இன்னும் பாண்டேஜை பிரிச் லியா?''

''இல்லே சார்.''

''அவனை நல்லா விசாரிங் கோபால் இறந்தது நுங்கம்பாக்க தில. கல்பனா வீடு அடையாறு பங் ஜம் கார்டன்சில. ரமேஷ் அடிபட்ட ஆல் இந்தியா ரேடியோ பக்கத்தில போலீசுக்குத் தகவல் சொல்லத்தா ரமேஷ் போய்க்கிட்டிருந்தான் சொல்றதெல்லாம் கல்பனா இப் யோசிச்சுச் சொல்ற கட்டுக்கதை அப்புறம் இன்னொரு விஷயம்...''

''சார்!''

''கோபால் தொடைக்குள் இருந்த காயங்களை சுத்தமா மறந் திட்டீங்களே.''

''மறக்கலே சார். பாதலாஜிக எக்ஸாமினேஷனுக்குப் பிறகுதான் அது என்ன காயம்னு சொல்ல மு யும்னு டாக்டரம்மா சொல்லிட்டாங்க நகத்தால தோண்டி எடுத்த மாதி இருக்கு சார். அஞ்சு பள்ளம், வட்டமா பணியாரச் சட்டில இருக்கிற மாதிரி மனுஷன் நகம் இல்லே. பயங்கரமான ஆதிகாலத்து மிருகத்தோட நகம் மாதிரி இருக்கு.''

''அதுல ஆச்சரியப்பட வேண்டிய விஷயம் என்ன தெரியுமா மிஸ்டர் செந்தில்.''

''சார்.''

''குழி பறிச்ச மாதிரி தொடைல அஞ்சு பள்ளம் இருக்கு. ஆன பேன்ட்ல சின்னக் கிழிசல்கூட இல்லே.''

''அதான் புரியலே சார்.''

''கோபால் ஜட்டியோட அல்லது நிர்வாணமா இருந்தப்ப தாக்குதல் நடந்திருக்குன்னு தெரியுது.''

''ஆமா சார். அப்படித்தான் சார் இருக்கணும்.''

''இந்தக் கேஸை உங்க திறமைக்கு ஒரு சேலஞ்சா எடுத்துக்கிட்டு இன்வெஸ்டிகேட் பண்ணுங்க மிஸ்டர் செந்தில்...''

''பெரிய இடத்து விவகாரமா இருக்கு...''

''பெரிய இடமாவது சின்ன இடமாவது. யாரை வேணும்னாலும் விசாரிங்க. யாரை வேணும்னாலும் உள்ள கொண்டு போங்க. I want results.''

''பத்திரிகைக்காரன் ஆளுக்கொரு கதைய எழுதி அசிங்கப்படுத்துவான்.''

''அதைப் பத்திக் காத்தபெருமாளே கவலைப்படலே.''

''அப்படியா சார்!''

''மனுஷன் இந்த இன்வெஸ்டிகேஷனுக்காக சொந்தப் பணத்தையே செலவு பண்ணத் தயாரா இருக்கார். எத்தனை லட்சம் வேணும்னாலும் தர்றேன், என் ஒரே மகனைக் கொன்னவனைக் கண்டுபிடிங்க, கோர்ட்ல கொண்டு வந்து நிறுத்துங்கன்னு சொல்லிட்டு கண்ணீர் விடறாரு.''

''அப்போ அவரையும் லிஸ்ட் ஆஃப் ஸஸ்பெக்ட்ஸ்ல சேர்த்துக்க வேண்டியதான்.''

ராமின் முகம் கண நேர சிந்தனையில் மூழ்கி எழுந்தது. ''Extremely unlikely'' என்றான்.

கண்ணாடிக் கதவைத் தள்ளிக்கொண்டு பியூட்டி சலூனுக்குள் லாவண்யா நுழைந்தாள். 'டிம்ஜ டிம்ஜ' என்று ஆங்கில ட்ரம்கள் முழங்கின. குளிர்பதனம் செய்யப்பட்ட 'சில்' லென்ற உலகத்தில் மகளிரின் ஆட்சி. பலகையால் தடுக்கப்பட்டு கர்ட்டன்கள் விலகிய சின்ன அறைகள்.

வெட்டப்பட்டு தரையில் சிதறிய மயிர்க்குவியல்களை உயரத் துடைப்பத்தால் ஜீன்ஸ் அணிந்த ஒரு பெண் பெருக்கினாள். மூலையில் நாற்காலியில் அமர்ந்து வாஷ் பேசினுக்குள் தலையைக் கவிழ்த்த இளைஞனின் தலையில் பூ பூவாய் நுரை தள்ளும் ஷாம்பூவை ஒரு பெண் தேய்த்துக்கொண்டிருந்தாள். அறைக்குள்ளே உடம்பில் எதுவுமில்லாமல் குப்புறப்படுத்திருந்த இளைஞனின் இடுப்புப்பகுதியின் மேல் ஒரு டவல் கிடந்தது. அவன் முதுகில் ஒரு பெண் மசாஜ் செய்தாள்.

சட்டையில்லாமல் சுழற் நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபனுக்கு கல்பனா ஸ்டெப் கட்டிங் முடித்துக்கொண்டிருந்தாள். வேகமாக அவளிடம் வந்த ஸ்கர்ட் அணிந்த ஒருத்தி அவள் வாயில் ஒரு பிஸ்கெட் துண்டைத் திணித்துவிட்டு, ''அனிடா, மேடம் விளிக்குன்னு'' என்று கூவியபடி உட்பக்கம் ப[illegible]தாள்.

லாவண்யாவைப் பார்த்த கல்பனா கையில் இயங்கிய ஹேர்டிரையரை நிறுத்தினாள். ''ஹலோ ரூம்ல உக்காருங்க. லீலா இவுங்களை என் ரூமுக்குக் கூட்டிட்டுப் போயேன், ப்ளீஸ்.''

சின்ன அறை, நாகரிகச் சுவையோடு அலங்கரிக்கப்பட்டிருந்தது. 'ஸ்கின்டீப்' என்ற நியுஸிலாந்து படத்திலுள்ள காட்சி சுவரில் 'ப்ளோ-அப்' பாக விரிந்திருந்தது. அதில்...... வேண்டாம், வர்ணித்தால் கல்லெறி விழும்.

லீலா அறைக்குள்ளே தேநீரும் பிஸ்கெட்டும் எடுத்து வந்தாள். ''கொஞ்சம் வெய்ட் பண்ணச் சொன்னாங்க.''

ட்ரேயில் வந்ததை லாவண்யா காலி செய்தாள். திடீரென்று பக்கத்து அறையிலிருந்து பெண்களின் அட்டகாசச் சிரிப்பொலி. கல்பனா முகத்தில் அகலச் சிரிப்பை வைத்[illegible]கொண்டு அறைக்குள்ளே வந்தாள்.

''என்ன?'' லாவண்யா புன்னகையுடன் சிரிப்புக்குக் காரணம் கேட்டாள்.

''ஒரு ஜோக்'' என்றாள் கல்பனா.

''சொல்லுங்களேன், நானும் சிரிக்கறேன்.''

''கொஞ்சம் வல்கர்.''

''சும்மா சொல்லுங்க.''

— தொடரும்

# தொட்டதெல்லாம் பொன்னாகும்

## -சுஜாதா




"Tell me, I'll laugh, too"

...ண்யா வற்புறுத்திஞள்.

...கல்பஞ ஜோக்கைச் சொல்ல ...ம்பித்தாள். "ஒரு ஊர். ஊர்ல ஒரு ... சர்ச்ல ஒரு ஃபாதர். ஞாயிறு ...யிறு அவர் பாவமன்னிப்புக் ...டுப்பார். ஒரு ஞாயிற்றுக்கிழமை ...யங் சாப் அவர்கிட்ட வந்து முழங் ...ல நின்னன். ராத்திரி நான் ராதா ...ட தப்புப் பண்ணிட்டேன். என் ...வத்த மன்னிச்சிடுங்கன்னன். ...தர் அவனுக்கு பாவ மன்னிப்பு ...ங்கிஞர். அடுத்த வாரம் இன் ...ருத்தன் வந்து அதே மாதிரி, ...திரி நான் ராதாவோட தப்புப் ...ணிட்டேன்னு சொல்லி பாவமன் ...புக் கேட்டான். அதற்கடுத்த ... ரண்டு மூணு பேர் வந்து அதே ...தி சொன்னங்க. ஃபாதர் உடனே ...ன பண்ணர் தெரியுமா?"

"என்ன பண்ணர்?"

"ஊர்ல இருக்கிற இளைஞர்களை ...ல்லாம் அட்வைஸ் பண்றதுக்காக ...ழைச்சார். உங்கள்ல ராதாவோட ...புப் பண்ணதவன் யாரு? இருந்தா ...யைத் தூக்குங்கன்னர். உடனே..." ...ல்பஞவிடம் சிரிப்பு வெடித்து ...ச்சைச் சிதைத்தது. "உடனே..." ...படியும் சிரித்தாள்.

"உடனே என்ன?" லாவண்யா ஆவலுடன் கேட்டாள்.

"வேண்டாம் லாவண்யா. மீதிய நீங்களே guess பண்ணிக்கோங்க, இல்லே இன்னொரு நாள் சொல்றேன். ப்ருந்தாவப் பத்தி முதல்ல பேச ஆரம் பிப்போம்."

ப்ருந்தா என்றதும் லாவண்யா வுக்கு ஜோக் அநாவசியமாகப் பட்டது.

"சரி, ப்ருந்தாவப் பத்திச் சொல் லிட்டு கடைசில மீதி ஜோக்கை சொல்லுவீங்களா?"

"Sure. சொல்றேன். ஜோக்கை விடமாட்டீங்க போல இருக்கே. கடைசில சொல்றேன். முதல்ல ப்ருந்தா. ட்ரிங்ஸ் ஏதாவது சாப்பிடறீங்களா?"

"வேண்டாம், இப்பத்தானே சாப் பிட்டேன்."

''நானும் ப்ருந்தாவும் காலேஜ் ஹாஸ்டல்ல ஒரே ரூம்ல இருந்தோம்.''

''ப்ருந்தாவுக்கு சொந்த ஊர்?''

''ஸ்ரீரங்கம். எனக்கும் அவளுக்கும் பெரிய gap.''

''எதுல?''

''ட்ரஸ்ல, பழக்க வழக்கத்தில, சாப்பிடறதில, எல்லாத்திலயும். நான் எப்படி டிரஸ் பண்றேன்னு பாத்துக்கிட்டுத்தான் இருக்கீங்க. ஜீன்ஸ், டி ஷர்ட், ராப் அரவுண்ட்...''

''புடவைய ஏன் வெறுக்கறீங்க? பெண்களுக்கு ரொம்ப டீஸன்டான, அதே சமயத்தில உடல் அழகை மில்லாம கலே அழகோட வெளி தற உடை, உலகத்திலேயே பு ஒண்ணுதாங்கறது என் அபிப்பிர என்றுள் லாவண்யா.

''நான் மறுக்கலியே.''

''அப்புறம் ஏன் கட்டிக்க டேங்கறீங்க?''

''வேணும்னுதான் ஒதுக்க புடவையக் கட்டிக்கிட்டா கற்பு, பாடு, அடிமைப்புத்தி எல் வரிசையா வந்திருது லாவண் நான் மாடர்ன் கேர்ள், மாடர்ன



றன். மாடர்னு திங்க் பண்
..''

''புடவை கட்டிக்கிட்டா மாடர்ன் திங் வராதா?''

மனசிலேர்ந்து பத்தாம் பசலித் களை இறக்காம, புடவைய மட் தாப்புளுக்குக் கீழே இறக்கிவிட்



டு சுத்தற பெண்களை நான் நிறைய பாக்கறேன். ஐ ஹேட் தெம்...''

''நீங்க யாரை மீன் பண்றீங்கன்னு தெரில...''

''ஜோடி ஜோடியா தூதரகங்களைச் சுத்தற லோகல் ஹிப்பிகளை. அவன் தாடி வளர்த்து ஜோல்னு பைய தோள்ல தொங்கவிட்டிருப்பான். அவ கோ-ஆப்டெக்ஸ் புடவைய இடுப்புக்குக் கீழ இறக்கிக் கட்டியிருப்பா. இன்டலெக்சுவல்சுன்னு சொல்லிக்குவாங்க. இலக்கியம், புதுக்கவிதையெல்லாம் பேசுவாங்க. பாபுலரான எந்த விஷயத்தையும் ஏத்துக்க மாட்டாங்க. அவுங்க படிக்கிற இலக்கியப் பத்திரிகைல கெட்ட வார்த்தை பச்சை பச்சையா இருக்கும். சென்ஸாராகாத படம் எங்க பாக்கலாம்னு பிலிம் சொஸைடிகள்ல மோப்பம் பிடிச்சிட்டு அலைவாங்க. ஃப்ரெஞ்ச் டைரக்டர்களைப் பாராட்டுவாங்க. பாலு மகேந்திரா அவுங்க கண்ணுக்குப் படமாட்டார். அவங்க பேசினதுதான் இங்கிலீஷ். தே ஆர் ஆல் கவர்ட்ஸ். சொஸைடியோட ஒத்துப்போகவும் முடியாது. எதிர்த்து நிக்கவும் துணிச்சல் கிடையாது. தாடி வளர்த்தவன் தன்னை ஆங்ரி யங் மேன்னு தம்பட்டமடிப்பான். கார்ல் மார்க்ஸ் பேசுவான். வேலையும், வரதட்சணையோட பெண்ணும் கிடைச்சா தாடிய மொழுமொழுன்னு மழிச்சிட்டு உஸ்மான் ரோட்ல வெக்கமில்லாம ஜானவாசம் போவான். அவ 'விமன்ஸ் லிப்' பேசுவா. ஃபாக்டரி ஓனர் புருஷனு கிடைச்சா பண்பாட்டையும் கலாச்சாரத்தையும் காப்பாத்தப் போயிருவா.''

''இப்ப உங்களைப் பாத்தாத்தான் ஆங்ரி யங் வுமன் மாதிரித் தெரியுது'' என்றாள் லாவண்யா.

''நோ நோ. எனக்கு சொஸைடி மேல எந்தக் கோபமும் கிடையாது. நான் சமூகத்தத் திருத்த விரும்பல. என்னை நான் திருத்திக்கிட்டேன். எனக்குப் புடவை பிடிக்கலே. பான்ட் மாட்டிக்கறேன். சவுரி வெச்சு நீள ஜடை போட ஆசையில்லே. இருக்கிற முடிய கத்தரிச்சு ட்ரிம் பண்ணிக்கிட்டேன். ஸ்மோக்கிங் எனக்குப் பிடிச்சிருக்கு. நான் ஸ்மோக் பண்றேன். ப்ருந்தா பழமையிலேயும் தெய்வ நம்பிக்கையிலேயும் ஊறின குடும்பத்திலேர்ந்து வந்தவ. ஆண்கள் கிட்ட பேசறதுக்குக்கூடக் கூச்சப்படுவா. நான் பேசறதுக்கு பாய் ஃப்ரெண்ட் கிடைக்கலேன்னுதான் சிநேகிதிகளைத் தேடுவேன். எனக்கு




''இந்த மியூஸிக் அகாடமி ஆரம்பிச்சு இவ்வளவு வருஷம் ஆகிறது; எத்தனையோ இசை விழாக்களைப் பார்த்திருக்கு. கர்நாடக சங்கீதத் துறையிலிருக்கற வித்வான்கள் எல்லாருக்கும் சம அந்தஸ்து தந்திருக்கிறதோ? இல்லவே இல்லே. வாய்ப்பாட்டு, வயலின், வீணை போன்ற வற்றில் தேர்ச்சி பெற்ற கலைஞ ஆண்டுக்கு ஆண்டு நமது இசை வில் தலைமை தாங்கச் செய் கிறார்களே, நாகஸ்வர வித்வா எத்தனை பேருக்கு அப்படி வாய்ப்பைக் கொடுத்திருக்கிற அட, அப்படி ஒன்றிரண்டு நாக வித்வான்களுக்குக் கொடுத்திரு லும், தவில் வித்வானை ஒரு முறை வது கௌரவித்திருக்கிறார்களா? படபடவென்று பொரிந்து கொ கிறார், என். சிவராமகிருஷ்ணன்.

சுமார் ஆயிரம் குடும்பங்கள் நாட்டில் நாகஸ்வரக்கலையை நம் உள்ளன. அவர்களுக்கு சாப்பா அக்கலை கொடுத்தால்தான் உ ஆனால் அக்கலையை நம்பியுள்ள கு பங்கள் அவல நிலையில்தான் கின்றன என்பது இவ ... ஆதங்கம்.

---

நைட் லைஃப் பிடிக்கும். டிஸ்கோவுக்குப் போவேன். ஹாஸ்டல் வேலியைத் தாண்டிக் குதிச்சு நைட் ஷோவுக்குப் போவேன். மேய்ச்சலுக்குப் போன மாடு வீட்டுக்குத் திரும்பற மாதிரி ப்ருந்தா எங்க போனாலும் இருட்டற நேரத்துக்கு ஹாஸ்டலுக்கு வந்து சேர்ந்திருவா. சிக்கன், பீஃப் இல்லாம என்னால சாப்பிட முடியாது. என்னோட பாய் ஃப்ரெண்ட் லிஸ்ட்ல வெஜிடேரியனுக்கு இடம் கிடையாது. ஆனா ப்ருந்தா பக்கா வெஜிடேரியன். உடைக்காத முட்டையப் பாத்தாக் கூட மூக்கப் பிடிச்சுக்குவா. எங்களுக்கு இடையில இவ்வளவு விரிசல் இருந்தும், வி வேர் குட் ஃப்ரெண்ட்ஸ். காரணம் என்ன தெரியுமா?''

''என்ன?''

''பழைய கலாச்சாரத்தில ... பிக்கை இல்லாம, சமூக மாற்றங் என்னைப் போலத் தைரியமா எத் கற துணிச்சலும் இல்லாம நாக வேஷம் போட்டுக்கிட்டு அலே ரெண்டுங்கெட்டான்களைத்தான் ந விமரிசனம் பண்ணேன். ப்ருந்தா இந்தியப் பெண். தமிழ்ப் பெ இந்த எக்ஸ்ட்ரீம்ல உறுதியே வாழ்றவ. நான் லிபரேட் கேர் துணிஞ்சு அந்த எக்ஸ்ட்ரீமுக் போயிட்டேன். எங்க ரெண்டு பே கிட்டயும் போலித்தனம் கிடையா சத்தியம் இருந்தது. அதனா தான்...''

''டிஸ்கோவுக்கும் பார்ட்டிகளு கும் ப்ருந்தா வரமாட்டாங்களா?''

''ரொம்ப கம்பல் பண்ணா வருவ ஆனா ஸைலண்ட் அப்சர்வரா பாத்து கிட்டு உக்காந்திருப்பா. எதிலயு கலந்துக்க மாட்டா.''

''கோபால் – ப்ருந்தாவோட தி மணம் பெற்றோரால ஏற்பாடு செய்ய பட்ட திருமணமா?''

''நோ நோ. லவ் மேரேஜ்.''

''அவங்க ரெண்டு பேரும் எப் சந்திச்சாங்க?''

---

☐ உலக மக்கள்
உபயோகிக்கும் மலர்களின்
மொத்த
மதிப்பு பதினைந்தாயிரம்
கோடி ரூபாய்.

– கே. லலிதா



இந்த ஆதங்கத்தை ஓரளவுக்கா வது தீர்த்துக்கொள்வதற்காக நாகஸ் வராளி என்ற அமைப்பை உரு வாக்கியிருக்கிறார் இவர். மாதாமாதம் நாகஸ்வரக் கலைஞர்களை வரவழைத்து, கச்சேரி செய்யச்சொல்லி கேட்டு, கௌரவிக்கிறது மேற்கண்ட அமைப்பு.

''என் வயிற்றெரிச்சல் என்ன வென்றால், எத்தனையோ மேலைநாட் டவர்கள் நாகஸ்வர மேன்மையை உணர்ந்து அதை ஆர்வத்துடன் கற்று வருகிறார்கள். சமீபத்தில் அமெரிக்கா விலிருந்து வந்திருக்கும் பேராசிரியர் வில்லியம் ஸ்கெல்டன் அப்படிப்பட் டவர்களில் ஒருவர். வெளிநாட்ட வர்கள் இந்த அளவுக்கு ஆர்வம் காட்டுகிறார்கள்; நம் நாட்டு மியூஸிக் அகாடமியோ புறக்கணிக்கிறது! கேவலம் இல்லையா இது?'' என்று கேட்டார் சிவராமகிருஷ்ணன்.

படம், பேட்டி: பிரபுசங்கர்

---

''நிச்சயமா காலேஜை விட்டு ...ரியேறின பிறகுதான். கல்லூரி ...கள்ல படிப்பத் தவிர வேற எதில ...ப்ருந்தா அக்கறை காட்டல. லவ் ...பேரெல்லாம் கிடையாது. ...பால அவ எப்படி சந்திச்சா, அவுங் ...க்குள்ள எப்படி லவ் டெவலப் ஆகி ...ரேஜ் வரைக்கும் போச்சுங்கறத ...ந்தா கிட்டயே நீங்க கேட்டுத் ...ரிஞ்சுக்கலாமே.''

''சொல்லுவாங்களா?''

''நல்லா பேசுவா. ஆனா இப்ப ...ளை டிஸ்டர்ப் பண்ண வேண் ...ம்னு நினைக்கறேன. போலீஸ் ...பார்ட்மென்ட் வேற அவளை கேள்வி ...ல கேள்வி கேட்டுத் துளைச்சு ...க...டு.

''எதுக்கு? போலீஸ் அவுங்களைச் ...தேகப்படுதா?''

''அது போலீசைக் கேட்டாத் ...ன் தெரியும். போலீஸ் என்னைக் ...டத்தான் சந்தேகப்படுது. இல் ...ன்னா ஒண்ணு பண்ணுங்களேன். ...பாலும் ப்ருந்தாவும் எப்படிச் ...ந்திச்சு லவ் பண்ணிக்கிட்டாங்கங்கற ...டெய்ல்ஸ் தானே உங்களுக்கு ...வணும்?''

''ஆமா. அவசரமா வேணும். லேட் பண்ண நியூஸ் வால்யு குறைஞ்சு, நான் எழுதப்போற ஆர்ட் டிக்கிள் விறுவிறுப்பு இல்லாமப் போயிரும்.''

''கோபாலுக்குப் பெரிய ஃப்ரெண்ட்ஸ் சர்க்கிள் உண்டு. கோபா லோட நெருக்கமா பழகின ஒருத்தனை சந்திச்சிங்கன்னா உங்களுக்கு ஒரு நல்ல காதல் கதை கிடைக்கும்.''

''ரியலி?''

''பின்னே கிடைக்காதா. கோபால் கோடீஸ்வரன். ப்ருந்தா வோட அப்பா ஸ்ரீரங்கத்தில எலி மெண்டரி ஸ்கூல் டீச்சர்னு நினைக் கிறேன். சினிமாக்கதையவிட நல்ல லவ் ஸ்டோரி கிடைக்கும். கல்யாணத் துக்கு முன்னால கோபாலோட நெருங் கிப் பழகினவன் யாருன்னு விசாரிங்க. எங்க ரமேஷ்கிட்டயும் நான் கேட்டுப் பாக்கறேன். ப்ருந்தா ரொம்ப அப் ஸெட் ஆயிருக்கா. இல்லேன்னா அவ கிட்டயே உங்களைக் கூட்டிக்கிட்டுப் போயிருவேன்.''

---

☐ துருக்கியில் அரசியல் கட்சிகள் அனைத்தும் தடை செய்யப்பட்டு விட்டன.

– ராமுசாமி

# நிறுத்தப்பட்ட செய்திகள்

'ரா'வில் தொடங்கும் பெயரைக் கொண்ட இயக்குநர் அறையில் எப்போதும் பெண்கள் மயமாம்! சான்ஸ் தேடி வருகிறவர்க சரிபார்த்து தேர்வு செய்கிறார்களாம் தனியறையில்! ஒரு படத்துக்க முதலில் தேர்வு செய்த கதாநாயகியோடு அந்தரங்க வாழ்க்கை நட கிறாராம் 'ரா' டைரக்டர்களில் ஒருவர். ராகம் – கட்டம் எல்ல அடக்கம்.

'தா'வில் முடியும் நடிகையின் தாயார் சமீபத்தில் இரண்டா மாக திருமணம் செய்துகொண்டிருக்கிறாராம். புதிய அப்பா யார்? ஒப்பனையாளர்! இது பம்பாயில் கிடைத்த தகவல்.

'சட்டம் என் கையில்' படம் இந்தியில் தயாரிக்கப்படலாம். அ கமலே தயாரிக்கலாம்; அதுவும் இரட்டை வேடம் ஏற்று!

'ராஜாங்கம்' படத்தின் மதுரை, ராமநாதபுரம் பகுதி விநியே கஸ்தர் அப்படத்தின் கதாநாயகன் சந்திரசேகரே. அவர் தனது பட கம்பெனிக்கு சூட்டியுள்ள பெயர் – 'மனிதசக்தி பிக்சர்ஸ்.'

---

நெருங்கிய நண்பன் என்றதும் படத்தயாரிப்பாளர் சொன்ன விக்ரம் என்ற பெயர் லாவண்யாவின் மனத் தில் நியான் எழுத்துக்களில் பளிச்சிட் டன. அவனைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

''கடைசீல ஒரே ஒரு கேள்வி கல்பனா. கேட்டா கோவிச்சுக்க மாட் டீங்களே?''

''யாரைப்பத்தி?''

''உங்க சிநேகிதி ப்ருந்தாவப் பத்தித்தான்.''

''நீங்க ரிப்போர்ட்டர். கேள்வி கேட்க உரிமை இருக்கு. தாராளமா கேளுங்க.''

''கல்லூரி நாட்கள்ல ப்ருந்தா வுக்கு எந்த லவ் அஃபேரும் கிடையா துன்னு சொன்னீங்க.''

''ஆமா.''

''கல்யாணத்துக்குப் பிறகு எக்ஸ்ட்ரா மேரிடல் லவ் அஃபேர் ஏதாவது இருந்ததா?''

''கல்யாணத்துக்குப் பிறகு ஒரு பெண் வேற ஒர்த்தனைத் தேடறதுக்கு ரெண்டே காரணங்கள்தான் இ முடியும். ஒண்ணு பணம். அடு செக்ஸ். பணத்துக்காக ப்ருந்தா ஒருத்தனைத் தேட வேண்டிய யம் இல்லே. ப்ருந்தாவுக்கு செ பசியும் என் அளவுக்குக் கிடைய கல்யாணம் முடிஞ்சு ரொம்ப நா குப் பிறகு அவளை ஏர்போர்ட்ல ச சேன். சும்மா ரெண்டே நிமி தான். கோபால் கொஞ்சம் த நின்னார். அவர் காதுக்குக் கேக் How is he? I mean in bed கிண்டலா கேட்டேன்.''

''அதுக்கு ப்ருந்தா என்ன ணுங்க?''

''He is great–னு சிரிச்சுக்கிட் ரொம்பத் திருப்தியா சொன் ஹாஸ்டல் வாழ்க்கைல நடந்த சின்ன இன்ஸிடன்ட சொல்றே ஒரு நாள்...''

கல்பனா சொல்ல ஆரம்பி போது ப்ருந்தாவும் கல்பனா வு கல்லூரி மாணவிகளாக் காம்பஸி மரநிழல்களில் புத்தகங்களுடன் நட தார்கள்.

— தொட

ங்கே நான் வானத்தில் பறக்கலாம். டுக்கி விழலாம்; எதைச் செய்தாலும் து எனக்கு இனிமையான அனுப ம்.

என் லைஃப் முடியறதுக்குள்ளே ங்கீதம்னு என்னன்னு முழுமையாத் தரிஞ்சுக்க ஆசை. அதனாலேதான் இப்பவும் தினசரி காலையில் 4-30 ணிக்கு எழுந்து கர்னாடக சங்கீதம் ாதகம் செய்கிறேன். இரவு பதினொரு மணி வரையில் உழைக்கிறேன். என் னுடைய துறை சம்பந்தப்பட்ட புத்த ங்களைத் தேடிப்பிடித்துப் படிக் கிறேன்.

எனக்கு அறிமுகமான ஒரு பிரெஞ்சுப் பெண்மணி – அவர் ஒரு புல் தழல் கலைஞர். 'ஒவ்வொரு இந்தி யனும் ஐந்து வெளிநாட்டுக்கார னுக்குச் சமம். நீங்கள் ஐந்து இந்தியர் களுக்குச் சமம்' என்று என்னிடம் ஒரு முறை சொன்னார். இப்படிப் பிறர் சொல்லும்போதுதான் நம்முடைய பலத்தைப்பற்றி நாமே தெரிந்து கொள்ள முடிகிறது.

இந்திப் படங்களுக்கு இசை யமைக்க என்னைக் கூப்பிட்டபோது நான் மறுத்துவிட்டேன்.

ஒரு நண்பர் வற்புறுத்திக் கார ணம் கேட்டார். வடக்கே உள்ள மியூசிக் டைரக்டர்கள் வாங்குகிற சம் பளம் எனக்கு இங்கேயே கிடைத்துவிடு கிறது. நான் அங்கே வந்து என் திறமையை நிருபிக்க எட்டாவது இடத்தில் இருப்பதைவிட இங்கே முதல் இடத்தில் இருப்பதையே விரும்புகிறேன் என்று அவருக்கு பதில் சொன்னேன்.

இனிமேல் வரப்போகிற படங் களுக்கு நான் எந்தெந்தப் பாட்டுக்கு



மார்டின் பார்ட்லட்

என்ன ஆர்க்கெஸ்ட்ரா பயன்படுத்தி யிருக்கிறேன், என்ன கற்பனை, எப்படிப் பாடினாங்க, எப்படி ரெகார்ட் பண்ணி னோம் – இதையெல்லாம் விளக்குகிற வகையில் காஸட் வெளியிடலாம்னு ஆசை.

கூடிய விரைவில் ஒரு இசைக் கல் லூரி தொடங்குகிற எண்ணமும் இருக் கிறது. திறமையான மாணவர்களைத் தேர்ந்தெடுத்து வாத்தியம், வாய்ப் பாட்டு இவற்றில் பயிற்சியளிக்க விரும் புகிறேன். கர்நாடிக், ஹிந்துஸ்தானி, வெஸ்டர்ன் – இந்தத் துறைகளில் திறமையான நிபுணர்களை வைத்து முதன்மையான இசைக் கல்லூரியாக நடத்த ஆசை.

ஆரம்ப நாட்களில் எத்தனையோ நாட்கள் பட்டினி கிடந்திருக்கேன். அதுக்காக நான் வருத்தப்பட்டதில்லை. ஆயுதபூஜை சமயத்தில் வீடு வீடாகப் போய் சுண்டல் வாங்கி வயிற்றை நிரப்பிய காலத்தையும் நான் மறந்து விடவில்லை.

சொல்லப்போனால் அப்போது இருந்த சுதந்திரமும் நிம்மதியும் இப் போது இல்லை!

பேட்டி : பானு



''என்னங்க இது! தீபாவளிக்கு வந்த முதல் மாப் பிள்ளை இப்பதான் ஊருக்குப் புறப்பட்டார். சந்தோ ஷப்பட்டா, பொங்கலுக்குன்னு ரெண்டாவது மாப் பிள்ளை வந்து இறங்கறாரே!''

''என்ன பண்றது! பழையன கழிதலும், புதியன புகுதலும்தானே போகி!''

– வெ. சீதாராமன்



# தொட்டதெல்லாம்

### முன் கதைச் சுருக்கம்

**ப்**ருந்தா, கணவன் கோபாலுடன் கோபித்துக்கொண்டு நள்ளிரவில் பழைய கல்லூரித் தோழி கல்பனவின் வீட்டை அடைகிருள். மறுநாள் காலே –

கோபால் சந்தேகத்திற்குரிய முறையில் அவனுடைய இல்லத்தில் இறந்து கிடப்பதாக வானெலி சொல்ல, ப்ருந்தாவுக்குக் கருச்சிதைவு.

கோபாலின் கழுத்தில் கயிறு இறுக்கிய அடையாளம். தொடையில், விரல் நகங்களால் தோண்டியதைப்போல வட்டமாக ஐந்து பள்ளங்கள்.

பத்திரிகை நிருபர் லாவண்யா குற்றவாளியைத் தானே கண்டுபிடித்து விடுவதாக உதவி கமிஷனர் ராமிடம் சவால் விடுகிருள். பத்திரிகைக்காகப் பேட்டி காண்கிற சாக்கில் கோபாலுடன் சம்பந்தப்பட்டவர்களைச் சந்தித்து பல உண்மைகளைத் தெரிந்துகொள்ள ஆரம்பிக்கிருள்.




'Let us first discuss the problems relating to...' என்று பேராசிரியர் ஆரம்பித்தபோது –

டாண்... டாண்...

காபி பிரேக்கிற்காகக் கல்லூரி மணி ஒலித்தது. கெமிஸ்ட்ரி லாப் மாணவ மாணவிகளை வெளியே தள்ளி

யது. கல்லூரியின் கோ – ஆ
ஸ்டோர்சின் படியில், ப்ருந்தா 2




# பொன்னாகும்

கக நோட்டை வாங்கிக்கொண்டு இறங்கினாள். பாக்கி சில்லறையை ன்ன பர்சில் வைத்தாள். பர்ஸா ன் அலுவலகத்தை நோக்கி நடந் தாள். அவளுடைய நைலக்ஸ் புடவை யில் சூரியகாந்தி உதிர்ந்திருந்தது. ாலே வானத்தில் ப்ளவ்ஸ் தைத்திருந் தாள். நீலம் பார்த்த விழிகளில் நீலம். இதழ்களில் செம்பருத்தி. பின்னலின் பிறப்பிடத்தில் மல்லிகை. மொத்தத் தில் தேவதை.

நிழல் சிந்திய அவென்யுவில் கொத்துக் கொத்தாக மாணவர்கள், மாணவிகள். Cat on a Hot Tin Roof கல்லூரி நாடகத்தில் கல்பனாவின்

## சுஜாதா

நடிப்பை 'Superb டா' என்று பாராட் டிய கிஷோர் பான்ட் பைக்குள்ளி ருந்து மவுத் ஆர்கனை எடுத்து 'ஹம் தும்' வாசித்தான். ஹால் மெஸ்ஸில்



கத்திரிக்காய்க் கறிக்கு நந்தகுமார் கண்டனம் தெரிவித்தான். ஈவ் டீஸிங்கை மனதினுள் விரும்பும் ஷோபனு இடுப்பை வெட்டி பத்தாவது முறையாக ராம்குமாரின் பார்வையில் இடறினுள். தலைநிமிர்ந்து யாரையும் பாராமல் ப்ருந்தா பர்ஸாரின் அலுவலகத்தை அடைந்தாள். அறிவிப்புப் பலகையைக் கவலையுடன் பார்த்தாள். கீழ்க்கண்ட மாணவர்கள் உடனே ரூபாய் 520 கட்டாவிடில் பெயர் நீக்கப்படும் என்ற அறிவிப்புக்குக் கீழே முதல் பெயர் மிஸ் ப்ருந்தா.

உடனே 520 ரூபாய்க்கு எங்கே போவது? அப்பாவுக்கு எழுதினுல் நிச்சயம் வராது. வேறு யாரைக் கேட்பது? அறிவிப்பைப் பார்த்தபடி கண நேரச் சிந்தனையில் மூழ்கினுள்.

அவளருகே வந்து தலையை உள்ளே நுழைத்தான் ப்ரமோத். அவன் கையைப் பிடித்து இழுத்த ரஃபி உல்லாகான், ''நம்ம பெயரெல்லாம்

மெய்ன் பிளாக்கின் படிக... ஏறிய கல்பனு ப்ருந்தாவைப் பார்... தும் மலர்ச்சியுடன் ஓடி வந்தா... அவள் அணிந்திருந்த நீல ஜீன்... நாகரிகத்துக்காகப் பல இடங்க... சாயம் போக்கியிருந்தது. ஸ்லீவ்லெ... டாப். ''காஃபிக்கு போலாமாடீ.''

காஃபி ஹவுசை நோக்கி நட...னர்.

''ஏன் moody யா இருக்கே...'' கல்பனு கேட்டாள்.

''எப்பவும் போலத்தான் இ... கேன்.''

''கவலைப்படாத... 520 ரூப... நான் தர்றேன்.''

''நோட்டீஸ் போர்டை ப... தயா?''

''காலலயே பாத்து... உங்கிட்ட சொல்லலே.''

காஃபி ஹவுஸின் சுவர்க்கடியார... இரண்டு வருடங்களாக ஏழே முக்கா...

தடை செய்யப்பட்ட பரபரப்பான புத்தகம்!



**ப்ரபரப்புக்குப் பெயர் போன** பம்பாய் நகரில் இப்பொழுது புழுதி கிளப்பிக்கொண்டிருக்கும் புதிய செய்தி Falkland Road என்ற ஆங்கிலப் புத்தகம் இந்திய அரசால் தடை செய்யப்பட்டிருப்பது பற்றித் தான். இப்புத்தகம் பம்பாய் நகர சிவப்பு விளக்குப் பகுதியில் வாழும் அபலைப் பெண்களைப் பற்றிய உருக்கமான உண்மை நிலவரத்தை எடுத்துச் சொல்கிறது.

இதன் ஆசிரியரும், புகைப்ப... நிபுணருமான மேரி எல்லன் மார்... என்ற பெண் சிவப்பு விளக்குப் பகு... யில் வாழும் பெண்களைப்பற்றி எழு... வதற்காக அவர்களுடனேயே சி... மாதங்கள் தங்கியிருந்து இதுவ... எவருக்கும் கிடைத்திராத பரபரப்பா... தகவல்களைச் சேகரித்து இந்நூ... எழுதியிருக்கிறுர். எல்லன் மார்... இதுவரை எடுத்த பல புகைப்படங்க... லைஃப், லுக் டு பாரீஸ் முதலிய உல...



காட்டிக்கொண்டிருந்தது. காஃபியை ஸாஸரில் ஊற்றி உறிஞ்சினான் அஷோக். விமன்ஸ் ஹாஸ்டலுக்குப் போகிற வழியில், 'MAKE LOVE NOT BABIES' என்று கரியால் எழுதிப்போட்ட சுரேஷின் துணிச்சலைப் பாராட்டி ஃபில்டர் வில்ஸ் பாக்கெட்டை நீட்டினான்.

ஜன்னலோரம் நின்றபடி ஸமோசாவைக் கடித்த வெங்கட் பாபுலேஷன் கண்ட்ரோலைப் பற்றிப் பேசினான். வள்ளியம்மை – நாராயணசாமி ரோலிங் ட்ரோஃபி இந்த ஆண்டு பறி போனதையும், ஷியாம் பெனிகலின் டைரக்ஷனையும், அஸிஸ்டென்ட் புரொபசர் நளினியின் பின்பக்கத்தையும் பல மேஜைகளில் விவாதித்தனர்.

'BOYS BOYS EVERYWHERE, NOT A BOY TO SHARE' என்று ...ண்ணி பெருமூச்சுக்களை ரகசியமாக வெளியேற்றிய கல்பனா, பெல்ட் இறுக்கிய ஆண் இடுப்புக்களை ஏக்கத்துடன் ரசித்தபடி பருந்தாலவை இழுத்துக்கொண்டு தனியாகக் கிடந்த மேஜைக்கு நடந்தாள்.

ஃப்ரெஞ்ச் கல்ச்சுரல் ஈவ்னிங்க்கு வந்திருந்தியா, La Nuit De Mai ஒண்டர்ஃபுல்டா. ஒகேடா, SEE YOU டா. FORGET IT மா. VERY FAST DAME YAAR...

''இன்னிக்கு ஈவ்னிங் ரத்தீஷ் ரூம்ல பார்ட்டி. நீ வர்ற'' என்றாள் கல்பனா.

''என்ன பார்ட்டி?''

''ஸாட்டர்டே ஈவ்னிங் பார்ட்டி.''

''நான் எதுக்கு?''

''எனக்குத் துணைக்கு.''

''நான் எதுவுமே சாப்பிட மாட்டேன்.''

''எல்லாம் வெஜிடேரியன் டிஷ்ஷஸ்தான்.''



லுள்ள பெரிய பத்திரிகைகள் பெரும்பாலானவற்றில் வெளிவந்து பாராட்டைப் பெற்றவை.

இந்தப் புத்தகத்தில் அப்படி என்னதான் இருக்கிறது?

அழகிய, அதிர்ச்சி தரத்தக்க, வித்தியாசமான கோணங்களில் 65-க்கும் மேற்பட்ட கலர்ப்படங்களுடன் இப்பகுதியில் வாழும் பெண்களைப் பற்றிய (ஆண்களைப் பற்றியும்தான்!) அப்பட்டமான வாழ்க்கை முறைகளைத் எழுதியிருக்கிறார்.

பதினைந்தே வயதான முன்னாள் பிச்சைக்காரி முன்னி (''என் கையில் பச்சை குத்தப்பட்டிருக்கும் என்னுடைய பெயர் ஒன்று மட்டும்தான் எனக்குக் கடைசிவரை துணை வரும்'') –

எப்பொழுதும் ஏதாவது ஒரு போஸில் படுத்துக்கொண்டேயிருக்கும் சம்பா –

பத்து மாதம் சுமந்து பெற்று, பாலூட்டி தாலாட்டி வளர்த்த தாயாலேயே சிவப்பு விளக்குப் பகுதிக்கு பதின்மூன்று வயதிலேயே விற்கப்பட்ட புட்லா –

'தள தள' வென்றிருக்கும் கொழுத்த உடலுடன் மினுக்கும் சிவப்பு, ஆரஞ்சு ஜிகினாவில் எப்பொழுதும் ஜொலித்துக்கொண்டிருக்கும் பழங்கால தேவதை போல் தோற்றமுள்ள சரோஜா –

தன்னுடைய தாயுடன் தினந்தோறும் கொஞ்சிக் குலவும் புதுப்புது தகப்பன்களைக் கண்டு வளர்ந்து வரும் மூன்று வயதுப் பிஞ்சுக்குழந்தை மேரி –

இப்படி அங்கு வாழும் எல்லாப் பெண்களைப் பற்றியும் உள்ளது உள்ளபடி பச்சையாகவே எழுதியிருக்கிறார் எல்லன்.

இப்புத்தகம் வெளிநாடுகளில் தாராளமாகக் கிடைப்பதால் அங்கிருந்து இப்பொழுது பம்பாய்க்குக் கடத்தல் மூலம் கொண்டுவரப்படுவதாகச் சொல்லப்படுகிறது. லேட்டஸ்ட்டாகக் கிடைத்த தகவலின்படி, சென்னைக்கு, தடை செய்யப்படுவதற்கு முன்னரே அனுப்பப்பட்ட இப்புத்தகம், கடைகளுக்கு வருவதற்கு முன் கஸ்டம்ஸ் அதிகாரிகளால் பறிமுதல் செய்யப்பட்டதாகக் கேள்வி.

சாம்

''அப்போ வந்து சும்மா பாத்துக்கிட்டிரு.''

ப்ருந்தா மறுக்க விரும்பாமல் தன் மௌனத்தால் சம்மதம் தெரிவித்தாள்.

மாலையில் ரத்தீஷின் அபார்ட்மென்ட்டுக்குள் கல்பனாவுடன் நுழைந்த ப்ருந்தாவுக்கு அதிர்ச்சி. காரணம்,

ரத்தீஷைத் தவிர அங்கே இருந்த ஆண்கள் எல்லாரும் மத்திய வயதைத் தாண்டியவர்கள். கல்லூரியில் ப்ருந்தா பார்த்தறியாத அந்நிய முகங்கள்.

''மீட் மிஸ் ப்ருந்தா'' என்று ஒரு அகலமான மத்திய வயதுப் பெண்ணிடம் ப்ருந்தாவை அறிமுகம் செய்து வைத்தாள் கல்பனா. அந்தப் பெண் வயதுக்கு மீறிய மேக்கப் போட்டு ப்ருந்தாவைத் தின்றுவிடுகிற மாதிரி பார்த்தாள். கைப்பையைத் திறந்தாள். சில நூறு ரூபாய்த்தாள்களை கல்பனாவிடம் நீட்டினாள். ''ஸிக்ஸ் ஹண்ட்ரட் இருக்கு.''

கல்பனா அதை வாங்கி ப்ருந்தாவிடம் நீட்டினாள். தயக்கத்துடன் வாங்கிய ப்ருந்தா ''நெக்ஸ்ட் வீக் தந்திர்றேன்'' என்றாள்.

''ஒண்ணும் அவசரமில்லை'' எ... ருள் பணத்தைத் தந்தவள். ''ஹலோ ராபர்ட்ஸ்'' என்று உள்ளே வந்த வழுக்கைத்தலையை வரவேற்க ஓடினாள்.

''பார்ட்டில கலந்துக்கிறதுன்னா இங்க இரு. இல்லேன்னா அந்த ரூம்ல இரு. நிறைய மாகசின் கிடக்கு பாத்துக்கிட்டிரு'' என்றாள் கல்பனா.

ப்ருந்தா பக்கத்து அறைக்குப் போனாள். சோபாவில சாய்ந்து டீபாயில் கிடந்த ஆங்கிலப் பத்திரிகையில் கை வைத்தாள். அப்போது வழுக்கைத்தலையை உள்ளே அழைத்து வந்தாள் சற்றுமுன் பணம் தந்தவள்.

''மீட் ஸம்ஒன் நைஸ் ப்ருந்தா'' வழுக்கைத்தலையனை அறிமுகம் செய்து வைத்தாள் அந்த முக்கால் கிழவி. ''பி குட் டு ராபர்ட்ஸ். ஹி இஸ் ... ஃப்ரெண்ட் ஆஃப் மைன்.''

''ஹௌ டு யு டு...'' ராபர்ட்ஸ் ப்ருந்தாவிடம் கையை நீட்டினான்.

கையில் இருந்த ரூபாய்த்தாள்களை டீபாயின் மேல் விசிறியடித்தாள் ப்ருந்தா. சில நொடிகளுக்குப்பின் இருள் பரவிய சாலையில் ஹாஸ்டலை நோக்கி தனியாக நடந்துகொண்டிருந்தாள்.

— தொடரும்

---

''கைல என்ன மாவு கட்டு?''

''நேத்து எங்க மைதானத்துல ஜல்லிக்கட்டு!''

– வெ. சீதாராமன்



---



''பொங்கலுக்கு உன் மாமனார் என்ன செய்து போட்டார்?''

''புதினா சட்னி!''

– வெ. சீதாராமன்

---

''என்ன சார், இந்தியா ஜெயிச்சதற்கு எல்லாரும் அம்பயருக்கு கை கொடுக்கிறாங்க?''

''அவர்தான் கர்ணமாம்... அதான்!''

– ராஜேஸ்வரி



# ...பெண்ணுக்கும்

# சவீதா

இரவு இரண்டு மணி.

• பெண்கள் விடுதியின் 'கேட்'டைக் கா...ளி பொன்னுசாமி ஓசைப்படா ...திறந்துவிட்டான். அவன் கையில் கல்பனா ரூபாய்த்தாளைத் திணித்தாள். ...ர்டனின் குவார்ட்டர்ஸ் தள்ளி, ...ரங்களுக்கிடையே நிலா வெளிச்சத் ...தில் உறங்கியது.

பூனை போல அடியெடுத்து வைத்து மாடியில் ஏறினாள். அறைக் கதவில் கை வைத்தாள். வாயை மூடிக் கொண்டு அது திறந்து வழிவிட்டது. ப்ருந்தா அவளுக்காகக் கதவைத் திறந்தே வைத்திருந்தாள்.

அறைக்குள்ளே வெதுவெதுப் பாக இருந்தது. சப்தம் எழுப்பாமல் உட்பக்கம் தாழிட்டாள். கண்ணாடி ஜன்னல் வழியாக அறைக்குள்ளே நிலா வெளிச்சம். சுவிட்சை அமுத் தாமல் இருட்டில் உடைகளைக் களைந் தாள். குறைந்தபட்ச உள்ளுடை களுடன் போர்வைக்குக் கீழே நழுவி னாள்.

பக்கத்துக் கட்டிலில் ப்ருந்தா ...ண்டையைச் செருமிக்கொண்டு ...டாள். முழித்துத்தான் இருக் கிறாளா?

''ப்ருந்தா, ஐ'ம் ஸாரி ப்ருந்தா... ஐ'ம் எக்ஸ்ட்ரீம்லி ஸாரி.''




''மெதுவாப்பேசு. நான் ஃபீசுக்கு உன்கிட்டப் பணம் கேட்டனா?''

''இல்ல. நானுத்தான் தர்றேன்னு சொன்னேன்.''

''உன்கிட்ட பணம் இல்லாதப்ப ஏன் அப்படிச் சொன்னே?''

''என் அக்கவுண்ட்ல நிறைய இருக்கு ப்ருந்தா.''

''அப்புறம் ஏன் கண்டவங்ககிட்ட எல்லாம் வாங்கிக் குடுக்கறே?''

''ஓஹோ, அதனாலதான் தூக்கிப் போட்டுட்டு ஓடி வந்துட்டயா?''

''அப்படின்னா அங்க என்ன நடந் ததுன்னு உனக்குத் தெரியாதா?''

"என்ன நடந்தது? காட் பிராமிஸா எனக்கு ஒண்ணும் தெரியாது; என்ன நடந்தது ப்ருந்தா?'' பதட்டத்துடன் கேட்டாள் கல்பனா. ''நான் ரத்தீஷோட பேசிக்கிட்டிருந்தேன். நீ பணத்த வீசி எறிஞ்சுட்டு கோபமா வெளில போயிட்டேன்னு சந்திரவதனா வந்து சொன்னாங்க.''

''யாரு சந்திரவதனா?''

''உனக்குப் பணம் குடுத்தவங்க. உடனே நான் கீழே இறங்கி வந்து பாத்தேன். அதுக்குள்ளே நீ ரொம்பத் தூரம் போயிட்டே. ஏன் அப்படி ஓடி வந்துட்டே?''

''அவுங்க பேர் என்ன சொன்னே, சந்திர...''

''சந்திரவதனா''

''என்னை என்ன கால் கேர்ள்னு நினைச்சாங்களா?''

சொல்லு, நாளைக்கே கேட்டிர்றேன்.''

''ராபர்ட்ஸன்னு ஒர்த்தனை நான் இருந்த ரூமுக்குள்ள அழைச்சுட்டு வந்து இன்ட்ரட்யூஸ் பண்ணுங்க.''

''ஹி இஸ் எ லீடிங் லாயர் யு நோ. அதுல என்ன தப்பு இருக்கு?''

''அறிமுகம் பண்ணின முறை சரியில்லே.''

''என்ன சொன்னு?''

''Meet someone nice. Be good to him. He is a friend of mine. இப்படிச் சொன்னு என்ன அர்த்தம்?''

''செருப்பக் கழட்டிக்கிட்டு அவளை அடிக்கறேன். அப்படியா சொன்னு. தே... மு... நான் ரத்தீஷ்க்காகப் போனேன். ரத்தீஷோட பேசினேன். ரத்தீஷோட ஸ்மோக் பண்ணேன். பூஸ் பண்ணேன். வந்துட்டேன். என்னை ஏதாவது தப்பா நினைக்கறயா ப்ருந்தா?''

''உன்னைத் தப்பா நினைச்சிருந்தா உனக்காகக் கதவத் திறந்து வெச்சியிருக்கவே மாட்டேன்.''

''என்கிட்ட அவ ஒண்ணுமே சொல்லலியே. Dirty whore.'' பல்லைக் கடித்தாள் கல்பனு.

''பரவாயில்லே. நடந்தது நடந்திருச்சு. அவங்களை ,நீ ஒண்ணும் கேக்கவேண்டாம். விட்டிரு.''

''விடக்கூடாது ப்ருந்தா. என்னைப் பத்தி உனக்கு நல்லா தெரியும். ஆசைப்பட்ட பாய் ஃப்ரெண்டோட நான் தூங்கியிருக்கேன். ஆனு பணத்துக்காக இல்லே.''



அத நீ சொல்லேணுமா! செக்ஸை நீ சிரியஸா எடுத்துக்கல. விளை யாட்டா நினைக்கறே...''

''விளையாட்டு இல்லே. அதுதான் எனக்கு ஆகாரம். பசிச்சா சாப்பிட றோம். சாப்பாட்டைத் தொடாதே பாவம்னு சொன்ன எப்படி? கேட்டிரு வோமோ? ஆளை நெருங்காதேன்னு வயசு வந்த பெண்களுக்கு உபதேசம் பண்றதும் அப்படித்தான். சமையல் ஆகல, ரெண்டு மணிக்குத்தான் சாப் பாடுன்ன என்னால பட்டினியாக் காத் திருக்க முடியும். உன்னால பசி தாங்க முடியாது. துடிச்சிருவ. வரன் அமை யல, ரெண்டு வருஷத்துக்குப் பிறகு தான் உனக்குக் கல்யாணம்ன உன்னால காத்திருக்க முடியுது. என் னால முடியல.''

''எனக்கு ஏன் இந்த எக்ஸ்பிள னேஷனெல்லாம்.''

''மெஜாரிட்டி ஆண்கள் உணர்ச்சி களை எரியவிடாம அப்ப அப்ப அணைச் சுக்கிட்டு என்னை மாதிரித்தான் வாழ ருங்க ப்ருந்தா. அவங்கள்லாம் ஜெண்டில்மென். நான் பெண். அதனால ப்ராஸ். நீயும் என்னைப் பிராஸ்டிட் யூட்னுதான் நினைக்கறே?''

''முட்டாள்த்தனமா உளருதே. பேசாமத் தூங்கு.''

''மண்டே என்னோட பாங்க் லீவு. நீ சீக்கிரமா ஃபீஸ் கட்டணுங்கறதுக் காக அவகிட்ட நான் கடன் கேட்டேன். அது தப்பாப் போச்சு. ஒண்ணு சொல் றேன், ப்ருந்தா. எப்படி நீ என்னை உன்வழிக்கு இழுக்க ஆசைப்படலியோ அதே மாதிரி உன்னை என் வழிக்கு வரச்சொல்லி மறைமுகமாகக்கூட றத்பெல் பண்ணமாட்டேன். கல்யா ணம் ஆகிறவரைக்கும் கன்னியாவே இருக்கணுங்கற முடிவோட நீ இருக்கே. வாழ்க்கை முழுக்கக்கூட அப்படியே இருக்கலாம். அது உன் இஷ்டம்.''

''என்னை என்ன மடத்தில சேரச் சொல்றயா? நீ சொல்ற பசியெல்லாம் எனக்கும் இல்லாம இல்லே, கல்பனா. மனசக் கட்டுப்படுத்திக்கிட்டு காத்தி ருக்கேன்.''

''காத்திரு. சமையல் ரெடியாகும் போது பசி போயிரக்கூடாது. அதையும் பாத்துக்க.''



''அதெல்லாம் நாற்பது வயசு வரைக்கும் போகாது.''

''அப்போ நாற்பதிலதான் பண் ணிக்கறதா உத்தேசமா?''

ப்ருந்தா சிறிது மௌனமாக இருந்தாள்.

டாள்.

''எங்க அத்தை, அதாவது அப்பாவோட தங்கை பிடிவாதமாக் கன்னியா இருந்தாங்க. திடீர்னு ஒருநாள் கூட வேலே பாத்த அக்கவுண்ட்டன்டக் கட்டிக்கிட்டாங்க. அவுங்க கலெக்டர் ஆபீஸ்ல வேலே பாத்தாங்க. கல்யாணத்தப்ப அவங்களுக்கு என்ன வயசு தெரியுமா, நாற்பத்தி மூணு.''

''உன்னுடைய மிஸ்டர் ரைட் அவ்வள்வு நாள் உன்னைத் தவிக்கவிட மாட்டார். சீக்கிரமா உன்னைத் தேடி வந்திருவார். கவலைப்படாதே.''

''வர்றது 'மிஸ்டர் ராங்'காக் கூட இருக்கலாம். யார் கண்டது? அப்பா அம்மா பாத்து யாரை அடையாளங் காட்டறுங்களோ அவர்கிட்ட தான் கழுத்த நீட்டுவேன். வாழ்க்கைல ஒரே ஒரு தடவை வர்ற முதல் இரவில, அக்கினி சாட்சியா என் கழுத்தில தாலி கட்டினவர்கிட்ட என் வெர்ஜினிடிய பத்திரமா ஒப்படைப்பேன். அதுவரைக்கும் நீ மட்டுமில்லே, ஆண் கலேக்க முடியாது.''

''வாழ்க கற்பு. வாழ்க தமிழ் பண்பு. பகல் நேரமா இருந்த படபடன்னு கைதட்டியிருப்பேன் போதும், இனிமே தூங்கறது நல் துன்னு நினைக்கறேன். இன்னு கொஞ்ச நேரம் முழிச்சிருந்தா...''

''முழிச்சிருந்தா?''

''மறுபடியும் எனக்கு ரத்தி தேவைப்படுவான்.''

''சரி. குட் நைட்.''

''ஸ்வீட் ட்ரீம்ஸ்.''

உள்ளே ஒரு பெண் ...ந் தும் கல்பனு பேச்சை நிறுத்தி... ''என்ன அனிடா?''

அனிடா வெளேரென்ற பல்வரி... யால் சிரித்தாள். ''க்ளோஸ் பண்... வேண்டாமா?''

கல்பனு அவசரமாகக் கைக்க... யாரத்தைப் பார்த்தாள் ''ஓ மை!... எய்ட் தர்ட்டி. நாலு மணி நேரம...

டம்.

''நான் கிளம்பறேன் கல்பனு'' என்ருள் லாவண்யா.

''ஜன்னலேயெல்லாம் சாத்தச் சொல்லு, நான் வந்திர்றேன்'' என்று அலீடாவை அனுப்பி வைத்தாள் கல்பனு.

''நாளேக்கு நான் ஃபோன் பண்ணட்டுமா?'' லாவண்யா கேட்டாள்.

''தாராளமா. எப்ப வேணும்னுலும் பண்ணுங்க. கொஞ்சம் இருங்க.'' காலண்டரைப் பார்த்தாள். ''நாளேக்குன்னு ஈவ்னிங் வேண்டாம். மனிங் பண்ணுங்க. ப்ருந்தா வப்பத்தி அநேகமா எனக்குத் தெரிஞ்ச எல்லாத்தையுமே சொல்லிட்டேன். நான் நார்த் போல்னு அவ சவுத் போல். ப்ரிமேரிடல் செக்ஸ்ங்கற அற்புதமான அனுபவத்தை வாழ்க்கையில கோட்டை விட்டவ. எக்ஸ்ட்ரா மேரிடல் லவ் அஃபேருக்கு அவளுக்கு அர்த்தமே தெரியாது.''

கண்ணுடிக் கதவைத் தள்ளிக் கொண்டு பியூட்டி சலூனே விட்டு லாவண்யா வெளியே வந்தபோது இருள் பரவி சாலேப் போக்குவரத்து சற்று மெலிந்திருந்தது.

நடைபாதையில் பஸ் ஸ்டாப்பை நோக்கி நடந்தாள். ராம் அவள் நினைவில் தோன்றி 'என்ன, இன்வெஸ்டிகேஷனெல்லாம் எந்த அளவில இருக்கு, கொலேகாரனேக் கண்டுபிடிச்சிருப்பியே' என்று கிண்டலாகக் கேட்டான். ராமுடன் உடனே பேச வேண்டும் போல இருந்தது. இந்த நேரத்தில் ராம் வீட்டிலே இருப்பானு? நேற்று அவனுக்காக கருப்பு ப்ளவ்சும் கருப்புப் புடவையும் அணிந்து நாலேந்து முறை டயலேச் சுழற்றினுள். அவன் சிக்கவே இல்லே. தனியாக நின்ற டெலிபோன் பூத்தினுள் நுழைந்து விரலே டயலில் வைத்தாள்.

பங்களாவின் புல்தரையில் அமைதியாக நின்ற ப்ருந்தா மரத்துக்கு மேலே இருளில் தனியாகச் சிறகடித்த பறவையைப் பார்த்தாள். குளிர்காற்றினுல் மாக்ஸி அவள் உடம்பின்மேல் படிந்து படபடத்தது.

ஏதோ நினைத்துக்கொண்டவளாய் வெளிகேட் பக்கம் நடந்தாள். அவள் பார்வையில் யாரும் படவில்லை. காத்தபெருமாள், மனைவியுடன் பங்களாவின் பின்பக்கம் நாற்காலி போட்டு அமர்ந்திருப்பார். கூர்க்கா வாசலில் இல்லை. அவனுக்கென அமைக்கப்பட்ட கூண்டினுள் நுழைந்தாள். அங்கே இருந்த தொலைபேசியின் டயலில் விரலை வைத்தாள்.

**நாயகி க்ரியேஷன்ஸ்.** படிகளில் இறங்கி வெளியே வந்தார் நாச்சியப்பன். காரில் ஏறப்போனவர் அவருக்குப் பின்னே வந்த பையனிடம் ''காஸ்ட்யூமர் காலேல வந்தா நான் வர்றவரைக்கும் இங்கயே இருக்கச் சொல்லு'' என்றார்.

உடனே அவன் ''போன் வந்திருக்கு'' என்றான்.

''யார்யா பேசறது. இல்லேன்னு சொல்லு'' என்று சொல்லிவிட்டு காரில் ஏறப்போனவர் சற்றுத் தயங்கி ''இந்த நேரத்திலஎவன்யா பேசறது யார்னு கேட்டியா?'' என்றார்.

''யாரோ ஒரு லேடீஸ்பேசறாங்க'' என்றான் அவன்.

''லேடியா!'' காரில் ஏறாமல் மறுபடியும் படிகளில் ஏறி உள்ளே போனார். மேஜையருகே நின்றபடி ரிசீவரைக் கையில் எடுத்தார். காதில் பொருத்தினார். அவர் முகம் பேயறைந்ததைப்போல வெளுத்தது.

— தொடரும்

---

அட்டையில்: பூர்ணிமா ஜெயராம்



பூர்ணிமா ஜெயராம் காலையில டிபன் எதுவும் சாப்பிடுவதில்லை. வெறும் பிஸ்கட், டீ தான்!

– ஸ்ரீ

வண்ணப்படம்: சாஸ்வதி சத்யமூர்த்தி

**மிக விலையுயர்ந்த ரிஸ்ட் வாட்ச்!**

எது தெரியுமா? 'காலிஸ்ட்டா' என்பது அதன் பெயர். விலை 2 மில்லியன் பவுண்டுகள்!

உலகப் புகழ்பெற்ற ஸ்விஸ் கடிகார நிபுணர்கள் வாக்கெரான் கான்ஸ்டான்டின் கம்பெனி 1755-ம் ஆண்டிலிருந்தே வாட்சுகள் செய்து வருகிறார்கள். அவர்களது கனவு – உலகிலேயே மிக விலையுயர்ந்த வாட்சைத் தயாரிக்க வேண்டும் என்பது. இதோ தயாரித்தும்விட்டார்கள்! ''மிக மிக அழகானது'' என்று கிரேக்க மொழியில் இந்தக் 'காலிஸ்ட்டா' என்ற வார்த்தைக்குப் பொருள்!

இதன் பிரேஸ்லெட் 2 பவுண்டு தங்கத்தால் ஆகியது. முகப்பில் 118 மரகத வைரக்கற்கள் புதைக்கப்பட்டிருக்கின்றன. இதன் கனம் ஒரு அங்குலத்தில் 1/10 தான்! ரேமாண்ட் மோரெட்டி என்ற பிரஞ்சு ஓவியர் இதன் அலங்கார வேலைகளைச் செய்திருக்கிறார் (மேல் படம்).

இதை ஒரு அராபியர் விலைகொடுத்து வாங்கியிருக்கிறார். மனுஷன் அதிர்ஷ்டக்காரர்தான்! இப்போது இந்த வாட்சின் மதிப்பு ஒரு நாளைக்கு 2000 பவுண்டுகள் வீதம் அதிகரித்துக்கொண்டே போகிறதாம்!

– 'குண்டலகேசி'

# தூ



''டாய், அங்கே என்னங்டா சத்தம்?'' என்று சூரி அதட்டுவது சிங்கம் கர்ஜிப்பதைப்போலத்தான் இருக்கும். மந்திரத்திற்குக் கட்டுப் பட்டதைப்போல் கூட்டம் கப்சிப்பென்ருகிவிடும்.

இவ்வளவு சிறிய வயதில் அப்படியொரு ஆணவம், திமிர், எதையும் துணிந்து செய்யும் சாகசம், அலட்சியம், கர்வம் – ஆக இவை எல்லாமாய்க் கலந்து ஒரு வித்தியாசமான மனிதனுய் அவனே உருவகப்படுத்திக் காட்டியது.

கணக்கு வழக்கில்லாத சொத்து. உள்ளூரில் இருக்கும் அத்தனே பதவிகளும் அவன் வசமாயிருந்தன.

சிவந்த உடம்பு, ஆறடிக்கும் மேலான உயரம், பெரிய மீசை, கிருதா, நீண்ட தலைமுடி, சிவந்த கண்கள்... என்று இப்படி தன் தோற்றத்தையும், தன்னுடைய குரலைப் போலவே கம்பீரமாக வைத்திருந்தான்.

சூரியினுடைய அத்தனே கல்யாண குணங்களும் அவனுடைய மூதாதையரைவிட ஒரு விஷயத்தில் சற்றுத் தூக்கலாகவே இருந்தன.

ஒரு நாள் தெற்குத் தெருவில் பட்டப்பகலில் கணக்கு வாத்தியார் வீட்டில் நுழைந்து அவருடைய மூத்த மகள் கல்யாணியை...

---

## நா. விச்வநாதன்

ஊரில் யாருமே வாயைத் திறக்கவில்லை. வெளியூர் போயிருந்த கணக்கு வாத்தியார் திரும்பி வந்தபோது, ''பாபி! மகா பாபி! நீ நாசமாப்போக! நீ நாசமாப் போக!...'' என்று சாபமிட்டு வீட்டிற்குள் புலம்பியதோடு சரி. வேறு என்ன செய்ய முடியும் அவரால்?

கணக்கு வாத்தியாரின் மகன் சற்றே ரோஷக்காரன். பட்டணத்திலிருந்து லீவுக்கு வந்திருந்தவன் சூரியின் வீட்டிற்கு முன்னுல் வந்து நின்று ''வாடா வெளியே'' என்று சத்தம் போட்டான்.

சூரி வந்தான்.

அன்று கணக்கு வாத்தியாரின் மகன் முழுசாக வீடு திரும்பவில்லை. கைகளிலும் கால்களிலும் மண்டையிலும் இன்னும் உடம்பு நெடுக ஓரிடம் பாக்கியில்லாமல் ரத்தவிளாருய் பேச்சு மூச்சில்லாமல் கிடந்தவனைத் தூக்கக் கூட யாருக்கும் துணிவில்லை.

சூரியேதான் வண்டியில் தூக்கிப் போட்டுக்கொண்டு ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனுன்.

போலீஸ், கோர்ட்டு, கேஸ், அது இதுவென்று கொஞ்சநாள் அலைச்சல். ஏகப்பட்ட ரூபாய் செலவு. அலுப்போ சலிப்போ இல்லை. வாத்தியார் ஊரை விட்டே போனுர்.

அப்புறம் ஊர் அடங்கிப்போனது. முன்னிலும் அதிகமாகத் தன்னுடைய ஆளுமையை விஸ்தரித்தான்.

சூரி தெருவில் வந்தாலே அட்டகாசமாகத்தான் இருக்கும். கிண்டலும், நக்கலுமாய்ப் பிற மனிதர்களை



ஹாஸ்யச் சித்திரங்களாய்க் கண்டு சிரிக்கும் சிரிப்பு – எல்லைமீறிப்போகும்.

''ஒய் ராமானுஜம், எங்கேய்யா இப்படி? ஆளையே காணலே!''

ராமானுஜம் இவனருகே வந்து நின்றார்:

''பக்கத்து ஊருக்குப் போகணும். ஒரு துக்க காரியம்.''

''உம்மைப் போகவேண்டாம்னு யாருய்யா தடுத்தா. ஒரு சமாச்சாரம் சொல்லணும்னு நாலு நாளா தேட றேன். இன்னிக்குத்தான்யா சிக்கி யிருக்கீர். உம்ம அவசரத்தோட அவசரமா இதையும் கேட்டுட்டுப் போம்...''

''சொல்லுங்கோ.''

''நான்தானேய்யா இந்த ஊரு எலிமெண்ட்ரி ஸ்கூல் மானேஜர்...?''

''ஆமா... ஏதோ இந்த ஊர்க் கொழந்தைங்க உங்க புண்ணியத் தாலே நாலு எழுத்து கத்துக்கற துகள்... ரெண்டு வருஷமா டிரைனிங் முடிச்சுட்டு சும்மா இருக்காளேன்னு ஒருநா சொன்னேன். நீங்கதான் ஸ்கூல்லே இழுத்துவிட்டேள் என் டாட்டரை. தோப்பனுரைப் போலவே உதாரகுணம் உங்களுக்கு.''

''உமக்கு இருக்கற விஸ்வாசம் உம்ம டாட்டருக்கு இல்லேங்கறதைத் தான் சொல்ல வந்தேன்.''

''என்னது...?'' என்று அவர் பதற, சூரி சிரித்தான்.

''போனவாரம் ஸ்கூலுக்குப் போயிருந்தேன். ஏதுடா ஸ்கூலுக்குச் சொந்தக்காரன் வரானேன்னு ஒரு மரியாதை வேணும். மக்குமாதிரி உட்கார்ந்திருக்காய்யா.''

''ஏதோ அவ கொழந்தை... பயந்த சுபாவம் வேற.''

''கொழந்தை! யாருய்யா கொழந்தை – கொழந்தையாய்யா அவ! ஹோ... ஹோஹோ... நானும் தான் உத்து உத்துப் பார்த்தேன்... கொழந்தை மாதிரி தெரியலய்யா... சும்மா கும்முனு...'' என்று அட்டகாச மாகச் சிரித்தான். தெருமுழுக்க எதிரொலித்தது.

கூனிக்குறுகிப்போய் ராமானுஜம் மனசுக்குள் தவித்தார்: ''சண்டாளா!

சண்டாளா!'' வேறு என்ன செய்ய முடியும் அவரால்?

**இப்படி** சூரி ராஜ்யமாண்டு கொண்டிருந்தபோதுதான் அது நடந் தது.

அதிகாலை நாலு மணி இருக்கும். சூரியின் வீட்டிற்கு முன்னுல் ஏதோ சலசலப்பு.

அந்தத் தெருவில் இருந்தவர்கள் கதவைத் திறந்துகொண்டு எட்டிப் பார்த்தார்கள்.

மங்கலான வெளிச்சத்தில், வீட்டு வெராண்டாவில் ஆறடி உயரத்தில் நின்றுகொண்டிருந்தான் சூரி. அவனு டைய கண்கள் ரத்தமாய்ச் சிவந் திருந்தன.

நடுவாசலில் அவள் – சூரியின் மனைவி நின்றுகொண்டிருந்தாள். அவளுக்குச் சமீபத்தில் ஒல்லியான ஓர் இளைஞன் – கையில் சூட்கேஸ்.

''எத்தனை நாளாடி இந்த நாட கம்...'' என்று சூரி பல்லைக்கடித்துக் கொண்டு சத்தம் வெளியே எழும்பாத வாறு உறுமினுன்.

''நாடகமல்ல... நிஜம்'' என்ருன் அந்த இளைஞன்.

சூரியின் முகம் வெளுத்துப் போயிருந்தது.

''பத்மா... எதா இருந்தாலும் உள்ளே வந்து பேசுவோம்'' என்று கெஞ்சினுன் அவன்.

''இவரைத்தான் நான் கல்யா ணம் பண்ணிக்க இருந்தேன். பணக் கார இடம்னு எங்கப்பா என்னைக் கட்டாயப்படுத்தி உங்களுக்குக் கட்டி வச்சார்...''

''பத்மா, உள்ளே வந்து பேசு...''

''பத்மா, இவர்கிட்டே என்ன கெஞ்சல். வா போகலாம்...'' என்று தோளை அழுத்தி அவளை உலுக்கினுன் அந்த இளைஞன்.

''உள்ளே வந்துடுங்க. தெருவிலே எல்லோரும் முழிச்சுக்கப் போருங்க...''

''நாங்க போறேம்...'' என்று அவன் முன்னுல் நடக்க அவள் தொடர்ந்தாள்.

வாசல் விளக்குகள் போடப்பட் டிருந்தன. தெருவே சூரி வீட்டிற்கு முன்னுல் கூடியிருந்தது.

சூரி புழுவாய் நின்றுகொண் டிருந்தான்.




**எப்படி** அப்படி ஒரு சந்தர்ப்பம் வந்தது என்று அவளுக்கே சரியாக நினைவில்லை. ஏதோ ஒரு கணத்தில் இருவரும் உணர்ச்சிவசப்பட்டது, ஒருவரை ஒருவர் மணக்க விரும்பியது, முதல் கணவனின் படத்தின் முன்னால் மோதிரம் மாற்றிக்கொண்டது எல்லாமே கனவு போலத்தான் இருக்கிறது.

இன்னொருவனை மணம் புரியும் அளவிற்கு எப்படி முகுந்தனை மறந்தோம்; குழந்தையின் நினைவுகூட இல்லாமல்? நினைக்க நினைக்க ஆற்றமுடியாத துககம் பீரிட்டது. எப்படி நடந்துகொண்டோம்? குழந்தையின் கதியென்ன? அம்மா, அப்பா இதை நல்லபடி வரவேற்பார்களா? அவர்கள் முகத்தில் எப்படி விழிப்பது? ஏற்கெனவே இருதயம் பலவீனமான அப்பா இதைத் தாங்கிக் கொள்வாரா?

– இப்பொழுதுதான் உணர்ந்தாற்போலத் துடித்தாள் பத்மினி.

'இதுதான் காதலா? அவன் உருவத்தில், குணத்தில், நடத்தையில் அனைத்தையும் மறந்துவிட்டோமே. இப்பொழுது புலம்புவதில் ஒரு பயனும் இல்லை. ஊருக்குப் போய் பக்குவமாக விஷயத்தைச் சொல்ல வேண்டும். எப்படி?

எப்படி எல்லோர் முகத்திலும் விழிப்பது? காரித் துப்புவார்களே! நம் மனிதர்கள் இருக்கட்டும். நாளைக்கு ஆபீசில் விஷயம் தெரிந்தால் எப்படிச் சிரிப்பார்கள்? பூனை மாதிரி இருந்துகொண்டு செய்த காரியத்தைப் பார் என்று ஆளுக்கு ஆள் பேசிக்கொள்வார்கள். இதுவரை இருவரையும் இணைத்துப் பேசாதவர்கள் இனி இதைப்பற்றிப் பேசியே மாய்ந்து போவார்கள்.' யோசிக்க யோசிக்க மண்டை பிளந்தது.

இன்னும் ஒரு வாரத்திற்கு லீவு போட்டிருக்கிறாள். அதற்குள் இவர்களின் எதிர்ப்புகளைச் சமாளித்து, குழந்தையின் எதிர்காலத்தைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும். இனியும் அங்கு விட்டுவைக்கக்கூடாது. இனி மேல் வேலைக்குப் போகக்கூடாது. வீட்டிலிருந்து ஒழுங்காகக் குடும்பத்தை நடத்தவேண்டும். சாயந்திரம் சுரேஷ் வந்ததும் தான் ஊருக்குப் போகும் விஷயத்தைச் சொல்லிவிட்டுக் கிளம்பினாள்.

சுரேஷ் வாயே திறக்கவில்லை.



''என்னது, கல்யாண மண்டபத்திலே உண்டியல் வச்சிருக்கு?''

''பெண்ணோட அப்பா கோயில் தர்மகர்த்தாவாம். அஞ்சு ரூபாய்க்கு குறைஞ்சு 'மொய்' எழுதறவங்க வெட்கப்படாம போடறதுக்கு இந்த ஏற்பாடு பண்ணிட்டார்!''

– அ. இராமதாஸ்

---

பாபுவை இங்கு கூட்டி வருவதில் அவனுக்கு அவ்வளவாக ஈடுபாடு இல்லாமலிருப்பதைப் புரிந்துகொண்டாள். 'முடியாது. இனி தன்னிடம்தான் அவன் வளரவேண்டும்' என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டு தன் தீர்மானங்கள் எதையுமே கலந்தாலோசிக்காமல் கிளம்பிவிட்டாள்.

நினைத்தபடியே வீடு இரண்டுபட்டது. அப்பாவின் உடல்நிலை மோசமாகியது. அதற்காக மேலும் இரண்டு நாட்கள் தங்கியதில் 'இனியும் நீ இருக்குமிடத்தில் இருக்கமாட்டேன்' என்பதுபோலப் பொட்டென்று போய்ச் சேர்ந்துவிட்டார்.

ஓ! அம்மா கத்தின கத்தல், புலம்பல்! யாரும் தனக்கு ஆதரவாகப் பேசமாட்டார்கள் என்பது கணத்தில் புரிந்துபோயிற்று. சாவிற்கு வந்த தங்கைகளும் விஷயத்தைத் தெரிந்துகொண்டு இவள் பக்கம் திரும்பக்கூட யோசித்தனர். ஏதோ அருவருக்கத் தக்க ஜந்துவைப் பார்ப்பது போல் ஒரு மூலையில் ஒதுக்கினர். அவள் கணவனை இழந்தவள் என்ற பரிதாபம் இப்போது போய்விட்டது. பாபுவும் என்ன புரிந்துகொண்டானோ – தூர நின்றே எட்டிப் பார்த்துவிட்டு பாட்டியின் மடியில் புதைந்துகொள்கிறான்.

இதையெல்லாம் ஓரளவு எதிர்பார்த்துத்தானே வந்தாள். இந்த ஒதுக்கிவைப்பு அதிகமாகப் பாதிக்கவில்லை என்றுதான் சொல்லவேண்டும். ''எனக்கு இனிமேல் யார் துணை என்று புலம்பினாயே அம்மா, என் மேல் உயிரையே வைத்திருக்கும் ஒருவரைத்தானே மணந்துகொண்டேன். உடல் ஆசையை அடக்க முடியாமல் இப்படி ஒரு முடிவு செய்துவிட்டதாக நீ நினைப்பது ரொம்ப தப்பு அம்மா! நல்ல செடியைப் பறித்து வெய்யிலில் போட்டபோது அவர்தானே என்னை ஆதரித்தார். என் மனநிலையைப் புரிந்துகொண்டு எவ்வளவு கண்ணியமாக ஆறுதலாக நடந்துகொண்டார்! ஏன் – அண்ணா என்னை இங்கேயே வைத்துக்கொண்டு இருந்தால் அவரை நான் சந்தித்திருக்கவே முடியாதல்லவா? வாழ்நாள் முழுவதும் நண்பர்களாகவே இருந்திருக்கலாம்தான். ஆனால் அப்பொழுதும் இந்தப் பாழும் உலகம் எங்களை இணைத்து இணைத்துக் கேவலமாகப் பேசத்தான் செய்யும். ஆனால் இப்போது மிஞ்சி மிஞ்சிப் போனால் ஒரு வருஷம் பேசுமா? குழந்தையை நான் அழைத்துக்கொண்டுதான் போகிறேன். உங்களுக்குப் பாரமாக விடப்போவதில்லை. வேலையை இனிமேல் விட்டுவிட்டு அவனை நானே வளர்க்கப்போகிறேன்.'' – இவ்வளவையும் யோசித்து யோசித்து ஒவ்வொரு வார்த்தையாக நிதானமாகப் பேசி முடித்தாள்.

இதையெல்லாம் நாங்கள் ஒத்துக்கொள்ளப் போவதில்லை என்பதுபோல அம்மாவும், அண்ணாவும் பார்த்த கூர்மையான பார்வையைத் தாளாமல் தலைகுனிந்து கொண்டாள்.

''என்னதான் நீ நியாயப்படுத்திப் பேசினாலும் மாப்பிள்ளைக்(கு)ம் பாபுக்கும் நீ செஞ்சிருக்கறது பச்சைத் துரோகம்தான். காலம் காலமா நம்ம பொம்மனாட்டிகள்ளாம் சின்ன வயசுலேயே புருஷனை இழந்துட்டாக்கூட யாரும் இன்னொரு துணை வேணுமேன்னு உன்னை மாதிரி அலைஞ்சதில்லே. அண்ணா ஒருத்தன் தலையிலேயே எல்லா பாரத்தையும் போட வேண்டாம்னுதான் உங்காத்துக்காரர் கம்பெனிலேயே வேலைக்கு சேரச் சொன்னோம். அவர் நினைப்பு மாறாம இருக்கும்னு நினைச்சோம். வேலை

தான் வருவா. பொம்மனுட்டிதான் விழிப்பா பொறுப்பா இருக்கணும்'' என்ற அம்மா, செருமிக்கொண்டே, ''நாளைக்கு நாலுபேர் இதுக்கு அப்பன் யாருன்னு கேட்டா, அவன் போயிட்டான், இவனைப் பண்ணிண்டிருக்கேன்னு சொல்லப்போறே. ஊரு உலகம் உன்னை சுமங்கலியாவும் சேர்த்துக்காது, எந்தக் காரியத்துலயும் உன்

அனுப்பமாட்டேன். அவனுக்கு அம்மாவும் வேண்டாம், புது அப்பாவும் வேண்டாம். உனக்கும் இன்னியோட தலை முழுகிடறேம்'' என்ருள்.

அம்மாவும் அண்ணுவும் மாறி மாறி பேசித் தீர்த்தார்கள். மன்னி, தங்கைகள் மூவரும் என்ன நடக்கிறதென்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். பாபு பயந்துபோய் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான்.

தான் இனி என்ன பேசியும் இவர்கள் மாறப்போவதில்லை என்பது புரிந்தபோது நெஞ்சில் வலி ஏற்பட்



தான் சுரேஷுக்கு லெட்டர் ஒன்றும் போடாதது இப்போதுதான் ஞாபகம் வந்தது. எத்தனை உத்தமமான மனிதர்! எனக்காக தன் வாழ்க்கையையே கெடுத்துக்கொண்டு...

இயந்திரமான வாழ்க்கையில் தான் சுரேஷ் தோன்றினான். அவளுக்கு மேலதிகாரியாக வந்தான். அவள் அறிவு, வேலை செய்யும் திறமை எல்லாவற்றையும் புகழ்ந்து தள்ளினான். முகுந்தனும் தானும் சின்ன வயதில் ஒன்ருகப் படித்தவர்கள் என்று கூறினான். முகுந்தனைப் பற்றியும் வானளாவப் போற்றிப் புகழ்ந்தான். எவ்வளவு பெரிய இழப்பு என்று அவனும் கண் கலங்கினான். எதையாவது பொதுவாகப் பேசி அவளை உற்சாகப்படுத்தச் செய்தான்.

எல்லாமே ஒரு எல்லைக்குள்தான். அயர்ந்து மறந்துகூட அவள் மேல் கை பட்டதில்லை. ரொம்ப ரொம்ப நாகரீகமாக நடந்து கொண்டான். ஐந்து மணிக்கு மேல் வேலை இருந்தால்கூட அனுப்பிவிடுவான். சனிக்கிழமையில் குழந்தையைப் பார்க்க அவள் செல்லும்போது நிறைய பரிசுப்பொருட்களை வாங்கி அவளிடம் குழந்தைக்குக் கொடுக்கும்படி செய்வான். "என் அருமை நண்பன் முகுந்தனுக்கு நான் இதுகூட செய்யாட்டா எப்படி? திங்கட்கிழமை வேணும்னாலும் லீவு எடுத்துக்குங்க மேடம். உங்களைப் பார்க்கவே ரொம்ப கஷ்டமாயிருக்கு மேடம். கணவரைப் பிரிஞ்ச கஷ்டம் போருதென்று குழந்தையையும் பிரிஞ்சிருக்க வேண்டியிருக்கு. இங்க கொண்டு 'கிரஷ்'ல சேர்த்துடலாமே" என்று ஆலோசனையும் கூறினான்.

யாரிடமோ கொண்டுவிட்டு வளருவதைவிட பேரன் தன்னிடம்தான் வளரவேண்டும் என்று அம்மா கண்டிப்பாகக் கூறியதை அவனிடம் கூறுவாள். ஆ...! எத்தனை மென்மையானவன்.

---

★☆ லண்டன் நகரில் மட்டும் மிகச் சிறந்த புகழ் பெற்ற நூலகங்கள் 700 இருக்கின்றன.

– கணியூர் ரமியா

---

தலையை வாரி பூ வைத்துக்கொண்டு, முகத்தை அலம்பி பொட்டு வைத்துக் கொண்டாள். தன் முடிவை செயலாலேயே வெளிப்படுத்திக் கொண்டாள். ஆயுசு பரியந்தம் இனி குழந்தையைப் பிரிய வேண்டியதுதான் என்று நினைத்தபோது மனம் வலித்தது. அம்மா என்பதையே மறந்துவிடுவான். அருகில் வரவே எப்படி பயப்படுகிருன். அவன் அழகு முகம் முகுந்தனையே மீண்டும் மீண்டும் நினைவுபடுத்தியது. ஹூம்... இவனைத் தன்னுடன் நிச்சயமாக அனுப்பமாட்டார்கள் என்பது நினைவுக்கு வர பொங்கி வந்த அழுகையை சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

"நான் போறேன்" என்று பொதுவாகச் சொன்னதுகூட யார் காதிலும் விழாதது போல அவரவர் வேலையில் கவனமாக இருப்பதுமாதிரி இருந்தனர்.

ஜன்னல் வழியாக பாபுவின் முகம் தெரிந்தது. டாடா காண்பித்தது குழந்தை.

சுரேஷ் அவளை வரவேற்ருன். "ஏம்மா, என்னவோபோல இருக்கே? என்னம்மா நடந்தது?" என்று ஆதுரத்துடன் கேட்டதுதான் தாமதம், அவன் மார்பில் சாய்ந்து, பெருங்குரலெடுத்து விக்கி விக்கி அழ ஆரம்பித்தாள். எல்லாவற்றையும் அழுகையினூடே சொல்லி முடித்தாள். தான் எதிர்பார்த்ததுதான் என்பது போல மௌனமாக அவளையே பார்த்தவாறிருந்தான் அவன்.

ஒருவாருகத் துக்கத்திலிருந்து தேறியபிறகு தான் இனி வேலைக்குப் போகப்போவதில்லை என்ற தீர்மானத்தை அவனிடம் கூறினாள். சிறிது நேர மௌனத்திற்குப்பிறகு "நான் உன்னைக் கட்டாயப்படுத்தவில்லை. ஆனாலும் வீட்டுல இருந்தா பழசை எல்லாம் நினைத்து நினைத்து வருத்தப்படுவே. வேலைக்குப் போய் வந்தா இதை மறந்து இருப்பாய்" என்று கூறினான்.

வேலைக்குப் போக ஆரம்பித்தாள்.

அன்று வேலை முடிந்து வீட்டிற்கு வந்தவுடனேயே கவனித்தாள்

# கார்வார் தளம்

கர்நாடக மாநிலத்தில் உள்ள கார்வார் பகுதியில் ஒரு தேசிய கப்பற்படைத் தளம் நிறுவப்பட்டிருக்கிறது.

பூகோள சாஸ்திரப்படி இது ஒரு பொருத்தமான பகுதி என்பது வல்லுனர்களின் கூற்று.

இந்த அமைப்பு முதலில் கேரளத்தில் நிறுவப்படுவதாக இருந்தது. ஆனால் பாதுகாப்பு, மற்றும் அரசியல் நிலவரங்கள் சரிவர இல்லே. அதே போல தமிழ்நாட்டின் வேண்டுகோளும் நிராகரிக்கப்பட்டுவிட்டது.

கார்வார் கப்பற்படைத்தளத்துக்காக தேசிய நெடுஞ்சாலே அருகே கர்நாடக அரசு மூவாயிரம் ஏக்கர் நிலத்தை மத்திய அரசுக்குக் கொடுக்கவிருக்கிறது.

– ரமேஷ்



முகுந்தனின் படத்தைக் காணவில்லே. எப்படிக் கேட்பது? கேட்டால், 'இன்னும் அவன் நினேவில் இருந்தா என்னே ஏன் கல்யாணம் பண்ணிண்டே?'ன்னு கேட்பான். 'அதற்காக அவரை மறக்க முடியுமா? இந்த சனி, ஞாயிறில் போய் பாபுவைப் பார்க்க வேண்டும். முடியுமா தன்னல்? விடுவாரா சுரேஷ்?'

இவர் விட்டாலும் அங்கு கிடைக்கப்போகும் மண்டகப்படியை நினேத்த போது...?

சனி, ஞாயிறு நெருங்க நெருங்க பாபுவின் நினேவிலேயே மூழ்கிப் போனுள். உடல் பரபரத்தது. தன் கண்மணியைப் பிரிந்து தன்னல் நிச்சயம் இருக்க முடியாது என்று தோன்றிற்று.

ஊருக்குப் போய் குழந்தையைப் பார்க்கப் போவதாய் சுரேஷிடம் சொன்னபோது கண்கள் இடுங்க அவளேப் பார்த்தான்.

''நாம் கல்யாணமே செய்திருக்க வேண்டாம். உன்னல் 'பழசையும் மறக்க முடியலே. என்னேயும் கணவனு முழுக்க ஏத்துக்க முடியலே. நானும் ரொம்ப யோசிச்சேன். நாம ஃப்ரெண்ட்ஸா இருக்கறதே நல்ல துன்னு தோணறது. என்னதான் புரட்சி, புதுமைன்னு பேசினலும் நீ எப்ப பார் முகுந்தனேயும் பாபுவையுமே நினேச்சுக்கிட்டிருக்கறதை என்னல பொறுத்துக்க முடியும்னு தோணலே. அந்தக் குழந்தைமேல இருக்கற பாசத்தையும் உரிமையையும் பறிக்கவும் நான் நினேக்கலே. So, let us part as friends. எனக்கு இதுல எந்த வருத்தமும் சஞ்சலமும் இல்லே'' என்ருன் மெதுவான குரலில்.

திடீரென்று மனதிலிருந்த அத்தனே அழுத்தமும் வெளியானதுபோல இருந்தது. அவன் சொன்னது அத்தனேயும் உண்மை எனப் புரிந்தது.

அடுத்து வந்த இரு நாட்களில் வேலேயை ராஜினுமா செய்தாள்.

தான் இதுவரை சேர்த்துவைத்திருந்த பணத்தை ரொக்கமாக எடுத்துக்கொண்டாள். சுரேஷிடமும் தான் பழைய வாழ்க்கைக்கே திரும்பிச் செல்ல இருப்பதைக் கூறினுள். நண்பர்களாகப் பிரியநேர்ந்ததை நினேத்து ஒரளவு சந்தோஷமே ஏற்பட்டது. எப்பொழுது சென்னே வந்தாலும் அவனே வந்து பார்ப்பதாகக் கூறினுள். அவன் கண்டிப்பாக வேறு கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினுள். பீச்சுக்குப் போய் இருவரும் கோன் ஐஸ்கிரீம் வாங்கிச் சாப்பிட்டனர். பை, பை சொல்லிக் கொண்டனர்.

– இப்பொழுது வீட்டையே காலி செய்துகொண்டு சாமான்களே முன்னல் அனுப்பிவிட்டு, பின்னல் பஸ்ஸில் ஏறி ஊர் திரும்புகிருள் – பொட்டில்லாமல், பூவில்லாமல் – இந்த முறை வரவேற்பு நல்லபடியாக இருக்கும் என்ற திடமான நம்பிக்கையுடன்.

**சவீதா**

தொலைபேசி பெண் குரலில் பேசப்பேச நாச்சியப்பனின் முகம் மிச்ச ரத்தத்தையும் வடித்துவிட்டு மேலும் வெளுத்தது.

''நீதான் கோபாலோட கடைசியா இருந்தவன். நீதான் திட்டம் போட்டு அவனைக் கொலை பண்ணினே. கயித்தால அவன் கழுத்த இறுக்கி நீ கொலை செஞ்சதை நான் என் கண்ணால பாத்தேன். நீ கொன்னதுக்கு காரணமும் எனக்குத் தெரியும். ஆதாரம் போலீஸ் கையில சிக்கிருச்சு. நீயாப் போயி போலீஸ்கிட்ட உண்மைகளை ஒத்துக்கிட்டேன்னு தண்டனை குறையும். இல்லே...''

டொடுக். தொலைபேசி மறுமுனையில் வைக்கப்படும் சப்தம்.

''ஹலோ ஹலோ'' என்றார் நாச்சியப்பன். பதில் இல்லை. தொடர்பு அறுந்துவிட்டது.

ரிஸீவரை வைத்தார். வியர்வை சட்டையை நனைத்திருந்தது. கைக்குட்டைக்காகச் சட்டைப் பைக்குள் விரல்களை நுழைத்துத் துழாவினார். கிடைக்கவில்லை. டாய்லெட் அறைக்குள் போனார். சிறுநீர் அவரிடமிருந்து வேகமாக விடுபட்டது. முகத்தைக் குளிர்ந்த நீரால் கழுவினார். காரிடம் யோசனைகளுடன் நடந்தார். பின்னால் வந்த சிறுவனைக் கலவரத்துடன் திரும்பிப் பார்த்தார். அவன், ''காஸ்ட்யூமர் காலேல வந்தா இங்கயே இருக்கச் சொல்றேங்க'' என்று நாச்சியப்பன் சற்றுமுன் சொன்னதைத் திருப்பிச் சொன்னான்.




''வேண்டாம். ஒரு வாரம் கழிச்சு வந்து பாக்கச் சொல்லு. யார் கேட்டா லும் நான் ஊர்ல இல்லேன்னு சொல்லு.''

அடையாறு கேட்டில் முன்னிரவு அடர்ந்திருந்தது. மணி ஒன்பது ஆகவில்லை. பங்களாவின் பின் பக்கத்தில் காத்தபெருமாள் நாற்காலியில் சாய்ந்திருந்தார். வட்ட டப்பாவைத் திறந்து ஹாலந்து புகையிலையை அள்ளி பைப்பில் திணித்தார். பெ விரலால் லைட்டரை அழுத்தி அ லிருந்து கிளம்பிய ஜுவாலையை பை பின்மேல் வைத்து புகையை இழு தார்.

வெள்ளைத் தொலைபேசியை கையில் எடுத்துக்கொண்டு ஓடிவந் சமையற்காரனிடம் ''அம்ம எங்கடா?'' என்று கேட்டார்.

''சின்னம்மா தோட்டத்திலதா இருக்காங்க.''

''பெரியம்மா?''

''இன்னும் கீழ வரலீங்கய்யா.''

''யார் கிட்டேர்ந்துடா போன்?'' என்றபடி அவன் எடுத்துத் தந்த ரி வரைக் கையில் வாங்கினார்.

''யார்னு தெரிலீங்கய்யா''

''ஹலோாா... ஆமாா... கே தான் பேசறேன்.''

''கோபாலைக் கொன்ன நீதான்.''

''நானா... யாரும்மா நீ... எப் டிம்மா சொல்றே?''

''நீயேதான். உன்னோட ஆ கோபால் கழுத்த கயித்தால இறுக்கி கொன்னதை என் கண்ணால பா தேன். நீ ஆளை வெச்சுக் கொன்னது குக் காரணமும் எனக்குத் தெரியு

ாரம் போலீஸ் கைல சிக்கிருச்சு. ய மனுஷங்கறதிஞல தப்பிச்சுக்க ணு நினைக்காதே. நீயா லீஸ்ல சரணடைஞ்சு உண்மை ஒத்துக்கோ. தண்டனை குறையும். லே...''

"அப்படியா... சரிம்மா... லோ... ஹலோ...''

மறுமுனையில் 'டொடுக்'

ரிஸீவரை சமையற்காரனிடம் டுத்தார் காத்தபெருமாள். எழுந் ர். ''ரெண்டு பேரையும் சீக்கிரமா ப்பாட்டுக்கு வரச்சொல்லு.''

கார் சாலையோரம் நின்றது. மும் லாவண்யாவும் இறங்கினர். ற்காற்று ஓடிவந்து அவர்களைத் வி வரவேற்றது. சாலை நெடுக ஙகால நிழல்கள். மெல்ல நடக்க ம்பித்தனர்.

''உன்னால குற்றவாளியக் ண்டுபிடிக்க முடியும்னு எனக்குத் தாணலே, லாவண்யா. ஆனா எங்க ன்வெஸ்டிகேஷனுக்கு உன்னால நிச் மா உதவ முடியும்னு நம்பறேன். தனால, யாருக்கும் தெரியாத, பத்திரி கல வராத ஒரு விஷயத்தை உன் ட்டச் சொல்லப் போறேன். கோபால் ழுத்தில ஒரு காயம் இருந்தது, இல் யா?''

''ஆமா. கழுத்தில கயிறு அழுத் ன மாதிரி.''

''அதத் தவிர சில பயங்கரமான ாயங்கள் அவன் தொடைக்குள்ள இருந்தது. நகத்தால தோண்டி எடுத்த ாதிரி, வட்டமா அஞ்சு பள்ளம். ஆனா னுஷன் நகம் மாதிரித் தெரியலே.''

''அப்புறம்?''

''பயங்கரமான ஆதிகாலத்து மிருகத்தோட நகமா இருக்கணும்.''

''ராத்திரி science fiction ஏதா வது படிச்சீங்களா?'' சிரித்தாள் லாவண்யா.

''போலீஸ் சர்ஜன் கிட்டேர்ந்து பைனல் ரிப்போர்ட் வந்தாத்தான் அது என்னன்னு தெரியும்.''

''அந்தக் காயங்கள்தான் கோபா லோட மரணத்துக்குக் காரணங்கறீங் களா?''

''அப்படிச் சொல்லமாட்டேன். பல காரணங்கள்ல அதுவும் ஒண்ணு இருக்கலாம. சரி, கல்பனா வேற என்ன சொன்னா?''



''இப்ப நீங்க எடுக்கிற படம் சூடான காட்சிகள் நிறைந்த படமாமே?''

''ஆமா. படம் முழுக்க வென்னீர் குளத்துல சண்டை!''

- புரோபசர்

''வேற ஒண்ணும் சொல்லலே. அவ சொன்னதிலேர்ந்து ஒண்ணே ஒண்ணு மட்டும் நிச்சயமாத் தெரியுது. பிருந்தா ஒழுங்கான மனைவியா கோபாலோட வாழ்ந்திருக்கா?''

''காலேஜை விட்டு வெளியேறின பிறகு கல்பனாவும் ப்ருந்தாவும் ஒர்த் தரை ஒர்த்தர் சந்திச்சுக்கலேன்னு சொல்றே?''

''ஆமா''

''அப்புறம் எப்படி கல்பனா அவ சிநேகிதியோட தாம்பத்ய வாழ்க் கைக்கு சர்ட்டிபிகேட் தரமுடியும்?''

''கல்பனா ஒவ்வொரு ராத்திரியும் ஹாஸ்டல் வேலியத் தாண்டிக் குதிச்சு எல்லாத்தையும் அனுபவிச்சிருக்கா. அவகிட்ட பணத்த வாங்கிக்கிட்டு மிட்நைட்ல அவளுக்கு கதவத் திறந்து விட்ட வாட்ச்மேனுக்கு வேலையே போயிருக்கு...''

''அவளோட ரூம் மேட்டா இருந்த ப்ருந்தா என்னிக்காவது ஒருநாள் முதலிரவு தானா வருங்கற நம்பிக்கையோட பல்லைக்கடிச்சுக்கிட்டு படிப்பில மட்டும் கவனத்தச் செலுத்தி யிருக்கா. அப்படித்தானே?''

''ஆமா.''

''அதாவது மேற்கும் கிழக்கும் ஒரே ஹாஸ்டல் ரூம்ல குடியிருந் திருக்கு?''

''ஆமா ராம்.''

''அவ சொன்னதையெல்லாம் ஒத்துக்கறேன்; ஒண்ணே ஒண்ணைத் தவிர.''

''எத?''

''கல்யாணத்துக்கு முன்னாடி கட்டுப்பாட்டோட இருந்த பெண், கல்யாணத்துக்குப் பின்னாடியும் அப்படித்தான் இருப்பான்னு கல்பனா ஊகித்துச் சொல்றது.''

''அப்ப ப்ருந்தா காரெக்டர்ல சந்தேகம் இருக்கா உங்களுக்கு?''

''நிச்சயமா. கல்யாணத்துக்கு முன்னாடி கண்டவனோடை சுத்தின கல்பனா, இப்போ ரமேஷ்ங்கறவனோடை ஒழுங்கா குடும்பம் நடத்தரா, இல்லையா?''

''ஆமா. கல்பனா இப்ப கம்ப்ளீட்டா மாறிட்டா. கல்பனாவைப் போல ரமேஷ்க்குப் படு மோசமான இறந்த காலம் இருந்திருக்கு. ஆனா ரெண்டு பேரும் அத மறந்திட்டாங்க. சண்டை சச்சரவில்லாம கல்யாணத்திலை சேர்ந்த புருஷன் மனைவியவிட நாகரீகமா வாழறாங்க.''

''இப்ப ராத்திரில சுத்தறது கிடையாது, இல்லையா?''

''இப்பவும் சுத்தருங்க. ஆனா ஒர்த்தரை விட்டு ஒர்த்தர் விலகாம ஒண்ணா சுத்தருங்க.''

''மாணவியா இருந்தப்ப கண்டபடி வாழ்ந்த கல்பனா இப்ப ஒழுங்கா குடும்பம் நடத்த ஆரம்பிச்சிருக்கா?''

''ஆமா.''

''மாணவியா இருந்தப்ப கட்டுப்பாட்டோட வாழ்ந்த ப்ருந்தா கல்யாணத்துக்குப் பிறகு ஏன் தலைகீழா மாறியிருக்கக்கூடாது?''

''அப்படீன்னா?''

''கோபாலுக்கு அவ ஏன் துரோகம் செஞ்சிருக்கக் கூடாது?''

''எப்படிச் சொல்றீங்க?''

''காலேஜைவிட்டு வெளிய வந்த பிறகு கல்பனா கம்ப்ளீட்டா மாறியிருக்கும்போது ப்ருந்தா ஏன் மாறியிருக்கக் கூடாதுன்னு கேக்கறேன்.''

லாவண்யா மௌனமாக இருந்தாள். ராம் தொடர்ந்தான்.

''அதனாலை நான் என்ன சொல்றேன்னா, ப்ருந்தாவையும் நீ இன்டர்வியூ பண்ணிரு. அப்புறந்தான் ப்ருந்தாவப் பத்தி ஒரு முடிவுக்கு வர முடியும்.''

''ப்ருந்தாவ இப்ப பாக்கறது கஷ்டம். யார்கிட்டயும் சரியா பேசறது இல்லையாம். ஒரு வாரம் போகட்டும், அழைச்சுக்கிட்டுப் போறேன்னு






கல்பனா சொல்லிருக்கா. அதுக்கு முன்னால கோபாலோட க்ளோஸ் ஃப்ரெண்ட் விக்ரமைப் பாத்திரலாம்னு நினைக்கிறேன்.''

''யாரவன் விக்ரம்?'' ராம் கேட்ட போது, 'ர்ர்ர்ர்' என்ற பைக்கின் சப்தம். இருவரும் திரும்பினர். காதைக் கிழிக்கும் சப்தத்துடன் அவர்கள்மீது மோதிவிடுவதைப்போல வந்த பைக்கைக் கண்டதும் இருவரும் வெவ்வேறு திசைகளில் எகிறிக் குதித்தனர். இருவருக்கும் இடையே பைக் வெறியுடன் பாய்ந்தோடியது. பைக்கில் சென்றவன் சிவப்பு 'டி ஷர்ட்' அணிந்திருந்தான். முதுகில் 'PRIVATE EYE' என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது.



''அந்தப் படத்துல வில்லன் என்னைத் துரத்தறப்ப பொம்மை மாதிரி நின்னு ஏமாத்தறனே, அப்ப என் நடிப்பு எப்படி?''

''அப்ப மட்டுமா பொம்மை மாதிரி நிற்கிறீங்க...!''

– புரொபசர்

அதிர்ச்சியினல் லாவண்யா ஒரு கணம் வாயடைத்து நின்ருள்.

''பயந்திட்டயா லாவண்யா?''

''யாரவன் காட்டான் மாதிரி?''

''அவன் யாருன்னு இன்னும் இரண்டு மணி நேரத்தில கண்டுபிடிச்சிர்றேன்.''

''எப்படி?''

''அதான் போலீசுக்கும் உனக்கும் உள்ள வித்தியாசம்.''

''இவனைக் கண்டுபிடிக்கிறது முக்கியம்தான் லாவண்யா. ரோடு அகலமா இருக்கும்போது நம்மளக் குறிவெச்சு எதுக்காக வரணும்? நம்ம ரெண்டு பேர்ல ஒருத்தரை அல்லது ரெண்டு பேரையுமே தீர்த்துக்கட்ட எங்கேயோ சதி உருவாகியிருக்கு.''

''நிஜமாவா?''

''அதுக்காக பயந்து பின்வாங்கிராத. உம்மேல துரும்புகூட விழாது. விழற அளவுக்கு நான் பார்த்துக்கிட்டிருக்க மாட்டேன்.''

''போகலாம், நேரமாயிருச்சு.'' இருவரும் திரும்பிக் கார் நின்ற திசையில் நடந்தனர்.

''விக்ரம் யாருன்னு சொல்லலியே.''

''காத்தபெருமாளோட ஃப... டாக்டரோட பிள்ளை. நாளைக்கு அ... னைப் பாக்கப்போறேன்'' என்ருள் லாவண்யா.

''எங்க போனலும் மறக்காம எனக்கு ஒரு ஃபோன் அடிச்சுப்டுப்போ.''

— தொடரும்

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

டன்ன்.

கவர்க்கடியாரம் ஒன்று அடித்து.

...லாவண்யா உறக்கம் வராமல் ...க்கையில் நெளிந்தாள். பக்கத்து ...யில் அம்மா கனமாக மூச்சுவிட்டு ...ர்ந்து உறங்கினள். அவளுக்கு ...கலில் நிறைய வேலை. பாதி ...வளாக இழுத்துப் போட்டுக்கொண் ...து. காலையில் பல் தேய்க்க ஆரம்பிப் ...வள் இரவு படுக்கையை விரிக்கும் ...ரை எதாவது செய்துகொண்டே ...ருப்பாள். வீட்டு வேலைகள் சரக்கு ...விலைப்போல அவளுக்கு வரிசையாக ...த்துகொண்டே இருக்கவேண்டும். ...டீரென்று ஒரு மத்தியான வேளை ...ல் எல்லா வேலைகளும் எதிர் ...ராமல் முடிந்துவிட்டால் ...றக்காத பீரோவைத் திறப்பாள். ...க்குக் கண்ணாடியை மாட்டிக் ...ாண்டு பழைய துணிகளைக் கிளறிக் ...த்தரித்து தையல் மிஷினைச் சுழற்று ...ாள். அவள் இரவில் அயர்ந்து உறங்குவதில் ஆச்சரியமில்லை.

பகலில் இன்று நான் அலைந்திருக் ...அலைச்சலுக்கு அம்மாவைவிட அதிகமாகத் தூக்கம் எனக்கு வர வேண்டும். ஆனால் மணி ஒன்றுகியும் வர மறுக்கிறதே. விளக்கைப் போட்டு ஏதாவது எழுதலாமா? ராம் இந்த நேரத்தில் என்ன செய்துகொண்டிருப்பான்?

மல்லிகை மணக்கும் தலையணையில் முகத்தைப் புதைத்திருந்தவள் எழுந்து ...க்கையில் அமர்ந்தாள். கொலை ...வதியோடு மாலையில் தாக்குதல் தொடுத்த மோட்டார் சைக்கிளும். அதில் சவாரி செய்தவனின் முதுகில் தெரிந்த PRIVATE EYE என்ற எழுத்துக்களும் அவள் விழிகளைவிட்டு விலகாமல் பயமுறுத்தின.

"நம் இருவரில் ஒருவரை அல்லது இருவரையுமே தீர்த்துக்கட்ட எங்கோ சதி உருவாகியிருக்கிறது" என்று ராம் சொன்னானே. மனதில் நிஜமாகவே அப்படி நினைத்துக்கொண்டு சொன்னானா? அல்லது சும்மா என்னை மிரட்டுவதற்காக அப்படிச் சொன்னானா?

ராம் போலீஸ் அதிகாரி. சமூக விரோதிகள் எல்லாருமே அவனுடைய விரோதிகள். ஆனால் நான் ஒரு சாதாரண பத்திரிகை ரிப்போர்ட்டர். எனக்கு விரோதிகளே கிடையாதே. கோபால் மரணம் குறித்து நான் துப்பறியத் தொடங்கியிருப்பதை ஒரு வேளை கொலைக்குச் சம்பந்தப்பட்டவர்கள் மோப்பம் பிடித்திருப்பார்களோ?

யாரிடமெல்லாம் கோபால் மரணம் பற்றி விசாரித்திருக்கிறேன்? ராம்.... ரைட்டர் சவிதா..... நாயகி க்ரியேஷன்ஸ் நாச்சியப்பன்..... விமலா

## சவிதா



ப்ருந்தா, கோபாலின் சிநேகிதி கல்பனா...

நான் போலீசின் கையாள் என்று சந்தேகப்பட்டு நாச்சியப்பன் ஸ்டண்ட் நடிகரின் மோட்டார் சைக்கிளை என் மீது ஏவியிருப்பாரோ? அவர்தான் கோபாலுடன் கடைசியாகப் பேசியவர். ஆனால் அவர் நிச்சயமாகக் கொலை செய்திருக்க மாட்டார். கொலையாளி ஒரு வேளை அவருக்கு வேண்டிய நபராக இருக்கலாம். அல்லது கல்பனா அவளுடைய பாய்ஃப்ரெண்டை ஏவியிருப்பாளோ?

ரமேஷ் பைக்கை ராஷ்ஆ ஒட்டுவான். திருப்பங்கள்ல ப்ரேக் அப்ளை பண்ணமை நைன்டி டிக்ரில ஓடிப்பான். எனக்கு வேகம் ரொம்பப் பிடிக்கும். வேகமாப் பேசற ஆண்களைப் பிடிக்கும். என்னோட ஆண்...

ரமேஷ் பற்றி கல்பனா சொன்னது நினைவுக்கு வந்தது.

ப்ருந்தாவின் தூண்டுதலின்பேரில் கல்பனா ரமேஷை ஏவியிருக்கலாம். அப்படியென்றால் ப்ருந்தா, கல்பனா,

...என்றுதானே அர்த்தம்.

சரிந்து கிடந்த புடவை... லாவண்யா தோளுக்கு ஏற்றிவிட்ட... எழுந்து படுக்கை அறையின் மங்... வெளிச்சத்தில் நடந்தாள். ஜ... லோரம் சென்றாள்.

வாஷ் டிராயிங் போல அசை... லாத வெளியுலகம். எல்லா... மௌனம் சாதித்து அமைதி காத்... ஜிக்-ஸா புதிரின் ஒழுங்கற்ற து...





ர்த்திருந்தது.

இந்த நிழல் துண்டுகளை எல்லாம் று சேர்த்தால் ராமின் உருவம் டைக்கும் என்று நம்புவது எவ்வளவு டாள்தனமோ அதைவிட முட்டாள் ம், கோபாலைக் கொன்றவன் என் யில் சிக்குவான் என்று நம்புவது.

தீவிர சிந்தனையுடன் வெகுநேரம் ருள். குளிர்காற்று சுழன்றடிக்கவே விசிறியின் வேகத்தைக் குறைத் ள். தானாக வரவழைத்துக்கொண்ட மதியுடன் மறுபடியும் படுக்கைக்குத் ரும்பியபோது சுவர்க்கடியாரம், ண்... டண்ண்...'' என்றது.

குழப்பமான கனவுகள் நிறைந்த த்துக்குப்பின் காலை ஆறே குக் கண் விழித்தாள். எட்டு னிக்குக் கூந்தலில் டவலைக் கட்டிக் டு குளியல் அறையைவிட்டு யே வந்தாள். வெள்ளை ப்ளவ்சும் ளைப் பூக்கள் சிதறிய பச்சை லக்சும் உடுத்தி ஒன்பது மணிக்கு டர் மணத்துடன் படிக்கட்டை டு இறங்கினாள்.

திட்டமிட்டபடி எல்லா வேலைகளை சுறுசுறுப்பாக முடித்தவள் மத்தி னம் சரியாக ஒரு மணிக்கு ராமிற்




காக தொலைபேசியின் டயலைத் தொட்டாள். உடனே ராம் லைனில் ஆஜரானான்.

''அவனைக் கண்டுபிடிச்சிட்டேன் லாவண்யா.''

''யாரை; நேத்து நம்ம ரெண்டு பேரையும் பைக்கால இடிக்க வந்தானே அவனையா?''

''அவனையுந்தான். அவனைப்பத்தி இன்னும் கொஞ்சம் தகவல் சேகரிக் கணும். நான் சொன்னது விக்ரமை.''

''அட்ரசைக் கண்டுபிடிச்சுட்டீங் களா?''

''ஆமா. எப்ப போறே?''

''த்ரீ... அவர் எங்க ஒர்க் பண்றுராம்?''

''வேலைவெட்டி இல்லாம சுத்தருறும். நானும் கூட வாவா?''

''எதுக்கு, வேண்டாம். கேபியோட ஃபாமிலி டாக்டர் வீட்டுக்குத் தானே நான் போறேன்?''

''ஆமா.''

''அப்போ அட்ரசை மட்டும் சொல்லுங்க போதும்.''

''காலேஜ் ரோட்ல...''

**காலேஜ்** சாலையில் ராம் சொன்ன இடத்தில் லாவண்யா பஸ்ஸை விட்டு இறங்கினாள். நிழல் பரவிய சாலையில் சிறிது நடந்து ராம் சொன்னபடி பெட்ரோல் பங்க் அருகே சாலையைக் கடந்தாள்.

ஆவின் பாலுக்காக சின்ன க்யூ. அப்புறம் ராம் சொன்னதைப்போல வங்கி, பூங்கா. பூங்காவை ஒட்டி இடமாகத் திரும்பினாள். மஞ்சள் வீடு அங்கே காத்திருந்தது. முன்பக்கத்துத் தோட்டத்தில் ராம் சொன்னதைப் போல நிறையப் பூக்கள். நாய்கள் ஜாக்கிரதை.

ஜாக்கிரதையாக லாவண்யா முன்னேறினாள். குறுகலான போர்ட்டிகோ காலியாகக்கிடந்தது. வேலைக் காரிபோல வராந்தாவில் தோன்றிய வள், ''டாக்டரைப் பார்க்கணுமா?'' என்று கேட்டாள்.

''மிஸ்டர் விக்ரம்...''

''மாடில கேளுங்க.''

லாவண்யா மாடிப்படியை ஏறினாள்.

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

## சவீதா

**இத்தொடர்கதையைத் தொடர்ந்து படிக்கிறீர்களா?**

**இரண்டு நூறு ருபாய்த் தாள்கள் உங்களுக்காகக் காத்திருக்கின்றன.**

☆ மூன்று கேள்விகள் இனி வரும் அத்தியாயங்களின் இடையே முளைக்கும்.

☆ மூன்றுக்கும் சரியான பதில் தரும் வாசகருக்கு சவீதா ரூ. 200/- அன்பளிப்பாக அனுப்புவார்.

முதல் கேள்வி இந்த அத்தியாயத்தின் நடுவே வெளியாகி இருக்கிறது.

☆ ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் சரியான பதில்களை அனுப்பினால் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப்படும் ஒரே ஒரு வாசகர் முழுத்தொகையையும் பெறுவார்.

☆ பதில்கள் வந்து சேரவேண்டிய கடைசித் தேதி மூன்றாவது கேள்வி வெளியாகும் இதழில் சொல்லப் படும்.

☆ தொட்டதெல்லாம் பெண்ணாகும்' என்று அஞ்சல் உறை, அஞ்சல் அட்டைகளின் மீது எழுத மறக்க வேண்டாம்.

லாவண்யா ஒரு நொடி விழித்தாள்.

''எங்க விக்ரம் வேலை இல்லாதவன்னு உனக்கு யார்மா சொன்னது?'' இரண்டாவது முறையாக விக்ரமின் தாய் கேட்டாள்.

விக்ரம் வேலை வெட்டி இல்லாமல் ஊர் சுற்றுவதாக ராம்தான் அவளிடம் சொன்னான்.

''இப்போ அவருக்கு வேலை கிடைச்சிருக்கும்'' என்று இழுத்த லாவண்யா, ''படிப்பு முடிஞ்சதும் ஒரு ரெண்டு மூணு வருஷம் வேலை தேடிக் கஷ்டப்பட்டிருப்பார் இல்லையா? அந்த அனுபவங்களைக் கேட்டு எழுதலாம்னு...''



ஜஸ்ட் லிசன்.'' தோற்றத்துக்கும் முக பாவத்துக்கும் சம்பந்தமில்லாத கண்டிப்பு அந்தப் பெண்மணியின் குரலில். ''யாரோ உனக்குத் தப்பான விலாசத்தைக் கொடுத்திருக்காங்க. எங்க விக்ரம் பி.ஏ. முடிச்சு அஞ்சு வருஷம் ஆகுது. ஆனா அவன் வேலே தேடி என்னிக்கும் அலேஞ்சதில்லே.''

''டிக்ரி வாங்கினதும் வேலே தானா வந்திருச்சா?''

''என்ன சும்மா வேலே வேலேங்கறே. இன்னொருத்தர் கிட்டே கைகட்டி வேலே செஞ்சு பிழைக்கணுங்கற அவசியம் எங்களுக்குக் கிடையாது. விக்ரமோட அப்பா யாரு தெரியும்ல?''

''தெரியும். காத்தபெருமாளோட ஃபாமிலி டாக்டர்.''

''காத்தபெருமாள்னா யார்?''

''இண்டஸ்ட்ரியலிஸ்ட். மல்டி மில்லியனர்.''

"அப்புறம்?... ரோட்ல போறவனேயெல்லாம் கூப்பிட்டு வேலே போட்டுக் குடுக்கறவர், அவரோட டாக்டர் பிள்ளேக்கு இல்லேன்னு சொல்லிருவாரா?''

லாவண்யா அசடு வழிய பார்த்தாள்.

''வேலே இல்லாத் திண்டாட்டம் நாட்டில இருக்கலாம்மா. இந்த வீட்டில கிடையாது. மவுண்ட்ரோட்ல நாங்க பெரிய ஃபார்மசி திறக்கப் போறோம். இந்தியாவில எங்கயும் இல்லாத மாதிரி. வருஷத்தில முந்நூத்தி அறுபத்தி அஞ்சு நாளும் திறந்திருக்கும். ராத்திரி பகல் எந்த நேரத்திலயும் மருந்து வாங்கிக்கலாம்.''

''மவுண்ட்ரோட்ல எந்த இடத்தில?'' ஒப்புக்காக லாவண்யா கேட்டு வைத்தாள்.

''நியர் அண்ணா ஸ்டாச்சு. அந்த புராஜெக்ட்ல விக்ரம் ஒர்க் பண்ருன். அவனே டிஸ்டர்ப் பண்ணுதே. அவன் ஊர்லயும் இல்ல. நாளேக்குத்தான் டெல்லிலேர்ந்து வர்ருன்.''

''அப்ப நான் வர்றேங்க. ஸாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ்.'' எழுந்தாள்.

''நத்திங். ஃபார்மசி ஆரம்பிக்கும் போது உங்க பத்திரிகைக்கு இன்விடேஷன் அனுப்பறேம். கண்டிப்பா எழுது.''

மறுபடியும் சுவரில் தொங்கிய படத்தில் லாவண்யா பார்வையைப் பதித்தாள். அதில் கோபாலேக் கட்டிப் பிடித்துக்கொண்டிருந்த குறுந்தாடி இளேஞனின் முகத்தை ஒரு நொடி ஆராய்ந்தாள். இவனும் கோபாலேச் சேர்ந்த ப்ளேபாய்தான்.

''இரும்மா, ஏதாவது சாப்டிட்டுப் போ.''

''தாங்ஸ். ஃபார்மசி திறப்பு விழாவுக்கு வரும்போது கண்டிப்பா சாப்பிடறேங்க.''

''வேலே இல்லாதவங்களே இந்த மாதிரி பங்களாவுக்குள்ளயா தேடிப்



வர்றது? லட்சக்கணக்கில பிளாட்பாரத்திலேயே நிக்கருங்க. அதில நாலு பேரைப் பேட்டி கண்டு எழுதிட்டுப் போயேன்.''

அறை வாயிலே லாவண்யா கடக்கும் சமயம், ''லாவண்யா'' என்ற குரல் கேட்டு அதிர்ச்சியுடன் திரும்பினுள். என் பெயரை நான் சொல்லவில்லேயே. எப்படிச் சரியாகப் பெயர் சொல்லிக் கூப்பிடுகிருள்?

''விக்ரமைச் சந்திக்க இன்னொரு தடவை முயற்சி பண்ணே நீ வீண் ஆபத்தில மாட்டிக்குவே. போய்ட்டு வா... என்னைப் பாக்காதே. முதல்ல வெளியே போ.''

மாடிப்படியில் இறங்கிய லாவண் யாவின் காலடி ஓசை படிப்படியாகக் குறைந்து அமைதி ஏற்பட்டதும் அந் தப் பெண்மணி நாற்காலியைவிட்டு எழுந்தார். தொலைபேசியின் டயலில் விரலை வைத்தார்.

**ப்யூட்டி சலூனுக்குள்** தொலைபேசி ஒலித்தது. மாக்சிபோல அணிந்தவள் ஓடிப்போய் ரிசீவரைக் கையில் எடுத்தாள். காதில் பொருத்தி னாள். ''ஹோல்ட் த லைன் ப்ளீஸ்'' என்று தொலைபேசிக்குள் சொன்னவள், ''கல்பனா மேடம் உங்களுக்கு போன்'' என்று கூவினாள்.

''எனக்கா?'' என்று கேட்ட கல்பனா, யாராக இருக்கும் என ஊகிக்க முடியாமல் ரிசீவரைக் கையில் வாங்கினாள்.

''கோபாலைக் கொன்னது நீதான்.''

''என்னது?'' கல்பனா குழப்பத் துடன் கேட்டாள்.

''கோடீஸ்வரன் கோபாலை நீதான் கொலை பண்ணினே.''

''யார்டீ நீ?''

''அது உனக்குத் தேவையில்லே உன்னோட ஆள் கோபால் கழுத்தை கயித்தால இறுக்கிக் கொன்னதை



கையின் அழுத்தத்தால்கூட அதை விளக்கச் செய்யலாம்.

என் கண்ணால பாத்தேன். நீ ஆளை வெச்சுக் கொன்னதுக்கு காரணமும் எனக்குத் தெரியும். ஆதாரம் போலீஸ் கையில சிக்கிருச்சு. உடம்பக் காட்டித் தப்பிச்சுக்கலாம்னு நினைக்காதே. நீயா போலீஸ்ல சரணடைஞ்சு உண்மைகளை ஒத்துக்கோ. தண்டனை குறையும். இல்லே...''

''இல்லேன்னா?... ஹலோ... ஹலோ...''

''டொடுக்''

**கேள்வி 1: கல்பனாவைத் தொலைபேசியில் மிரட்டியது யார்?**

அடையாறு கேட்.

மர உச்சிகளில் ஒட்டிக்கொண்டிருந்த மஞ்சள் வெய்யில் விலகிக்கொண்டிருந்த அந்தி வேளை.

மாடி ஜன்னல் அருகே, தங்கப் பொட்டு போல மூக்குத்தி மின்னும் முகத்துடன் ப்ருந்தா ஓவியமாக நின்றாள். கருச்சிதைவு அவள் முகத்தை வெளுப்பாக்கியிருந்தது.

தூரத்தில் பங்களாவின் தலைவாயிலுக்குள் கல்பனா வேகமாக வருவது தெரிந்ததும் ப்ருந்தாவிடம் சின்ன உற்சாகம் பரவியது. அறையை விட்டு வேகமாக வெளியேறினாள். மாடிப்படியில் இறங்கினாள். கார்ப் பாதையில் வந்துகொண்டிருந்த கல்பனாவை நோக்கி நடந்தாள்.

''நான் வர்றதைப் பாத்துத்தான் வர்றியாடீ?'' கல்பனா கேட்டாள்.

''ஆமா. வா, அப்படிப் போய் பேசலாம்'' அவள் கையைப் பிடித்து தோட்டத்துப் பக்கம் இழுத்தாள் ப்ருந்தா.

''என்ன, ஏதாவது நியூஸ் இருக்கா, ப்ருந்தா?''

''வா சொல்றேன். நீ காபி ஏதாவ்து சாப்பிடணுமா?''

''ஒண்ணும் வேண்டாம். ஸெவன் தர்ட்டிக்குள்ள நான் வீட்டுக்குப் போகணும். ரமேஷ் காத்திருப்பான்.''

''டிஸ்சார்ஜ் ஆகி வந்துட்டாரா?''

''வந்துட்டான். உதட்டில பெரிய வெட்டு. பிளாஸ்டிக் சர்ஜரி பண்ணாத்தான் உதடு சரியாகும் போலத் தெரியுது.''

''என்னை மன்னிச்சிரு கல்பனா. என்னாலதான உங்களுக்கு இதெல்லாம்.''

புல்தரையில் இருவரும் நடந்தனர். உயரமாக எழுந்திருந்த காம்பவுண்ட் சுவரை நெருங்கி அதன் ஓரமாக நடந்தனர்.

''ஒரு முக்கியமான விஷயம் கல்பனா.''

''அப்படி ஏதாவது முக்கியமா இருந்தா சலூனுக்கு போன் பண்ண வேண்டியதுதானே.''

''போனைத் தொடுறதுக்கே பயமா இருக்கு.''

''என்ன, சொல்லு.''

''நான்தான் என் ஹஸ்பெண்டைக் கொன்னுட்டேனாம்.''

''யாரு, அந்த இன்ஸ்பெக்டர் சொன்னாரா?''

''இல்லே. அவர் வேற டெய்லி முந்நூறு கேள்வியோட வர்றார். காலேல வந்து ஒரு மணி நேரம் கேள்வி மேல கேள்வியா போட்டார். நான் அவரச் சொல்லல.''

''வேற யாரு ப்ருந்தா?''

''எவளோ ஒருத்தி. மத்தியானம் போன் பண்ணி நீதான் உன் புருஷனைக் கொன்னது, நான் என் கண்ணால பாத்தேன். ஒழுங்கா போலீஸ்கிட்ட உண்மைகளைச் சொல்லிடுன்னு மிரட்டறா...''

''உனக்கும் வந்துதா?'' என்று கல்பனா கேட்டுவிட்டுச் சிரித்தாள்.

''அப்படின்னா உனக்கும் வந்துதா?''

''அதச் சொல்லத்தானே நான் ஓடியாந்தேன். இந்த மாதிரி மிரட்ட

லுக்கு நாம பயப்பட வேண்டியதே இல்லே. நீயோ நானோ மிஸ்டர் கோபாலை கொலை பண்ணல, இல்லையா?''

ப்ருந்தா பேசாமல் இருந்தாள்.

''ஏண்டி பேசமாட்டேங்கறே? நீ கொலை பண்ணிட்டுத்தான் அர்த்த ராத்திரில காரை எடுத்துக்கிட்டு என் வீட்டுக்கு வந்தியா?''

''இல்லே. ஆனா...''

''என்ன ஆனா?''

''அவர் மேல கையில அகப்பட்டதை எறிஞ்சுட்டு ஓடிவந்தேன். ஒருவேளை அதனால...''

''அதனால இறந்திருப்பார்னு நினைக்கறியா?''

ப்ருந்தா தலையசைப்பினால் ஆமாம் என்றாள்.

''பைத்தியம். சீப்பும், புஸ்தகமும் பட்டு ஒரு ஆம்பிளை செத்திருவாரா? கழுத்தில கயிறு இறுக்கின மாதிரி கோடு இருக்குன்னு பேப்பர்ல போட்டிருக்கு. போன்ல எவளோ மிரட்டினாங்கறதுக்காக போலீசுக்குப் போயி சரணடைஞ்சு தூக்குத் தண்டனை கேப்ப போல இருக்கே. உனக்கு ரொம்ப தைரியம் வேணும் ப்ருந்தா. இன்னும் காலேஜ்ல இருந்த மாதிரித்தான் குழந்தையாட்டம் இருக்கே. கொஞ்சம்கூட மாறல. எனக்கும் தான் போன் வந்தது. நான் பயந்தா போயிட்டேன்? சரி, இன்னொரு விஷயம்...''

''இருட்டிருச்சு. மேலே ரூம்ல போயி பேசுவோமே.''

''வேண்டாம். நான் இப்படியே போறேன். அங்க வந்தா நான் ஆன்ட்டிய பாத்து ரெண்டு வார்த்தை பேசணும். நேரம் ஆயிடும். ரமேஷ் காத்திருப்பான். நான் போயிதான் நைட்டுக்கு ப்ரிபேர் பண்ணணும். அவனால சமைக்க முடியாது.''

''சரி, இன்னொரு விஷயம்னயே. என்ன விஷயம்?''

''லாவண்யாங்கற ஒரு ப்ரெஸ் ரிப்போர்ட்டரை உன்கிட்ட அனுப்பறேன்.''

''வேண்டாம் கல்பனா. இங்க யாரையும் அனுப்பாதே.''

''சொல்றத கொஞ்சம் காதுல வாங்கிக்கோயேன்.''

''சொல்லு.''

''ரொம்ப நல்ல பொண்ணு... பாலம் வீக்லில ஒர்க் பண்றா. உ... ஃபாமிலியப்பத்தி பெரிய ஆர்ட்டிக்... மூணு நாலு வாரத்துக்கு தொடர்... பாலத்துல எழுதப்போறா. கோப... இறந்ததினால உன்னைப்பத்தி ... விதமா பேசிக்கறாங்க, இல்லையா? அவகிட்ட ப்ளீஸ் பேசு.''

''என்ன பேசணும்?''

''உன்னோட காலேஜ்மேட்... முறைல உன்னைப்பத்தி எனக்... தெரிஞ்சதை நான் சொல்லிட்டே... காலேஜைவிட்டு வெளியேறின... மிஸ்டர் கோபாலும் நீயும் எப்படி... திச்சீங்க, எப்படி லவ் டெவலப் ... மேரேஜ் வரைக்கும் போச்சு, அப்பு... குடும்ப வாழ்க்கை எவ்வளவு சந்... ஷமா இருந்தது எல்லாத்தை... சொல்லிரு. போலீஸ் இன்ஸ்பெக்... கிட்ட எப்படி உண்மைகளைச் செ... னயோ அதேமாதிரி எல்லாத்தை... சொல்லிரு. எதுக்குச் சொல்றேன்... அப்படி ஒரு ஆர்ட்டிக்கிள் பா... மாதிரி பாப்புலரா இருக்கிற ... சின்ல வர்றது உனக்கு நல்லது.''

மௌனமாக யோசித்... ப்ருந்தா.

''ஒண்ணும் யோசிக்க... உண்மைகளை உலகத்துக்கு நீத... சொல்லணும். இல்லே, உலகம் ... னைப்பத்தி வாய்க்கு வந்தபடி பே... கிட்டேயிருக்கும். என்ன நீ பெ... என்ன சொல்ற?''

''லாவண்யாவ எப்ப வேணு... லும் வரச் சொல்லு. நான் எல்... தையும் சொல்லிர்றேன்.'' — தொட...

---

★ பெனிசிலின் கண் மருந்து... மத்திய அரசு தடை விதித்துவிட்ட... இம்மருந்து நோயாளிகளின் உட... சியைப் பாதிக்கும் வகையில் தூ... தலாக இருக்கிறது என்று செய்... பட்ட புகார்களின் பேரில் நிபுணர்... குழு அளித்த ஏகமனதான சிபாரி... ஏற்று இந்திய அரசின் மருந்துக்... டுப்பாடு அலுவலர் இவ்வுத்தரவி... பிறப்பித்துள்ளார்.

— அ...

# பராசக்தி பதில்கள்

பா. நாராயணன், சென்னை-5

''நம்நாட்டு அரசியல் கட்சிகள் செயல்படும் விதத்தை ஒழுங்குபடுத்தும் வகையிலும், கட்டுப்படுத்தும் வகையிலும் சட்டம் இயற்றப்பட வேண்டும்'' என்று முன்னாள் மத்திய அமைச்சர் சுப்பிரமணியம் கூறியுள்ளாரே?

மனச்சாட்சிக்கு மதிப்பளிக்கக் கூடியவர்கள் அரசியலில் இருப்பார்களேயானால் கட்சிகளைக் கட்டுப்படுத்தக்கூடிய சட்டங்களே தேவையில்லை! சந்தர்ப்பவாத அரசியல் வாதிகளை எந்தச் சட்டத்தாலும் கட்டுப்படுத்த முடியாது.

த. சத்தியநாராயணன், அயன்புரம்

மனமாற்றம் – தடுமாற்றம் – ஏமாற்றம். விளக்குக!

இருளுக்குப்பின் ஒளி என்ற நிலையில் மனமாற்றம் ஏற்பட்டால் தடுமாற்றமும் இல்லை! ஏமாற்றமும் இல்லை!

மு. சிவசுப்பிரமணியன், சென்னை-20

''மதுவின் கொடுமையிலிருந்து மக்களைக் காப்போம்'' என்று எம். ஜி. ஆர். சார்பில் அண்ணா பிறந்தநாளில் சபதம் எற்றிருக்கிறார்களே!

தெருவுக்குத் தெரு மதுக் கடைகளைத் திறந்துவிட்டு, இப்படியொரு தெளிவான(?) சபதத்தையும் எடுத்திருக்கிறார்கள்.

பூவை கே. சந்திரன், பாண்டமங்கலம்

சர்வதேச விளையாட்டுப் போட்டியில் இந்தியா பின்தங்கிய நிலையில் இருப்பதற்கு ஜனாதிபதி சஞ்சீவரெட்டி கவலை தெரிவித்துள்ளாரே! இதுபற்றி...

''விளையாட்டு வினையாகும்'' என்ற பழமொழியை இந்தியா இன்னமும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறது போலும்!

கே. பாண்டியன், திருச்சி-8

அந்துலே போய் போஸ்லே வந்திருக்கிறார். சரி; ஆனால் எனக்கென்னவோ அந்துலே பலிகடா என்றுதான் தோன்றுகிறது. உங்களுக்கு?

கொஞ்சம் உள்ளூரைப்பற்றிச் சிந்தியுங்களேன்.

மௌலானா ஜலீல், சின்னசேலம்

மனிதன் சாவை நினைப்பது எப்போது?

உயிரோடு இருக்கும் வரையில்!

இரா. ஜெகந்நாதன், மணப்பாறை

பஞ்சாயத்துத் தேர்தல் தடையை அகில உலக அதிசயங்களில் ஒன்று!

ரவி, சென்னை-23

கலைஞரின், நீதி கேட்டு நெடிய பயணம் பற்றி!...

அது ஒரு வேலையற்ற வேலை என்று நாவலர் கூறியிருக்கிறார் – அதாவது இந்த ஆட்சியில் நீதி கிடைக்காது என்ற திட்டவட்டமான முடிவோடு!

த. சத்தியநாராயணன், அயன்புரம்

பில்லா – ரங்காவின் முடிவு எதைக் காட்டுகிறது?

தூக்குத்தண்டனை, கடைசியாக நிறைவேற்றப்பட்டதை!

கே. பி. ஏ. ஜபருல்லாகான், சிவகங்கை

சரித்திரத்தினை அசைபோடும் நமக்கும், புதுமைகளை எதிர்நோக்கும் வெளிநாட்டவருக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

அவர்கள் சரித்திரத்தையும் திரும்பிப்பார்க்கிறார்கள்; புதுமைகளையும் உருவாக்குகிறார்கள் – நாமோ முற்போக்குத்துறையில்கூட இன்னமும் தரித்திரர்களாகவே இருக்கிறோம்.



# ...தெல்லாம் பெண்ணுக்கும்

## சவீதா

> ...சென்ற அத்தியாயத்தில் வெளி யான கேள்விக்குப் பதிலை ஊகித் தீர்களா? மேலும் இரண்டு கேள்விகள் இனி வரும் அத்தியா யங்களின் இடையே தோன்றும். மூன்று கேள்விகளுக்கும் சரியான பதிலை அனுப்பி வைக்கும் வாச கருக்கு ரூ. 200/- அன்பளிப்பு.

'நாக்கு இல்லாவிட்டால் ...ட கொலை பேசும்' என்று ஷேக்ஸ் ...வியரில் படித்திருக்கிறேன். ஆனால் ...ந்தக் கொலை ஊமையைப் போல ...ரட்டுப் பிடிவாதமாக வாயை மூடிக் ...காண்டிருக்கிறதே.

இரவுச் சாப்பாட்டுக்குப் பின் ...ஜை விளக்கின் வெளிச்சத்தில் ...வண்யா ஆங்கிலப் பத்திரிகையை ...விரித்து வைத்துக்கொண்டு மனம் ...குழம்பினாள். அம்மா அடுத்த அறையில் ...டுக்கையை ஆயத்தப்படுத்திக் ...கொண்டிருந்தாள்.

விக்ரமின் தாய் எப்படி என்னை ...லாவண்யா என்று பெயர் சொல்லி அழைத்தாள்? என் பெயர் அவளுக்கு ...எப்படித் தெரிந்தது? என்னைப் பற்றி ...யும், பேட்டி காண்கிற சாக்கில் நான் செய்துகொண்டிருக்கிற ரகசிய வேலை ...யைப் பற்றியும் யாரோ அவளிடம் சொல்லி உஷார்ப்படுத்தியிருக்க வேண்டும்.

விக்ரம் சொல்லியிருப்பானா? அல்லது காத்தபெருமாளின் குடும்ப டாக்டரான அவளுடைய கணவர் அந்த வேலையைச் செய்திருப்பாரா?

விக்ரமைச் சந்திக்காதே, ஆபத்தில் மாட்டிக்கொள்ளுவாய் என்று கோபத் துடன் எச்சரிக்கிறாளே. கொலைக்கு விக்ரமின் குடும்பமே உடந்தையா?

விக்ரமைச் சந்தித்தால் கொலை காரன் நிச்சயம் சிக்கிவிடுவான். ஆனால் அவனை உடனே சந்திக்கக் கூடாது. கடைசி நபராக வைத்துக் கொள்ளலாம். அந்தச் சந்திப்பு எதிர் பாராமல் திடீரென்று நிகழ்ந்த ஒரு விபத்தைப்போல அமையவேண்டும். அந்தச் சந்திப்பின்போது ராமின் பக்க பலம் மிகவும் அவசியம். தனியாக அவனை இனிமேல் சந்திக்கச் செல்வது அறிவீனம்.

குற்றவாளி அல்லது குற்ற வாளியைச் சேர்ந்த கும்பல் என்



முத்திரை பதித்துவிட்டது. எனவே ராமைச் சந்திப்பதைக்கூடக் குறைத்துக்கொள்ள வேண்டும். அல்லது அடியோடு நிறுத்திவிடவேண்டும். தொலைபேசி மூலம் நிறைய பேசிக்கொள்ளலாம்.

இதுவரை யார் யாரை பேட்டி கண்டிருக்கிறேன், என்னென்ன தகவல்களைச் சேகரித்திருக்கிறேன், உபயோகமாக ஏதாவது சிக்கியிருக்கிறதா?

மேஜை டிராயரை இழுத்தாள். புது டயரி ஒன்றை எடுத்துப் பிரித்தாள். முதல் பக்கத்தில் கோபால் என்று எழுதி அடிக் கோடிட்டாள். பால்பாயிண்ட் பேனாவின் பின்பக்கக் குமிழைப் பெருவிரலால் அழுத்தினாள்.

என்னுடைய இன்றைய தலைவலிகளுக்கு எல்லாம் இவன்தான் காரணம். உயிரோடு இருந்து தொலைத்திருக்கலாம். பணம் அழுகி நாறும் காத்தபெருமாளின் ஒரே பிள்ளை. விளையாட்டில் வீரன். காதலித்து ப்ருந்தா என்ற படித்த அழகிய பரம ஏழைப் பெண்ணை மணந்துகொண்டவன். இதற்காகப் பாஸ்ட்யுமஸ் அவார்டு வழங்கலாம். கோபால்–ப்ருந்தாவின் வெற்றிகரமான இனிய தாம்பத்யத்தைப் பற்றி பத்திரிகைகள் பக்கம் பக்கமாகக் கட்டுரைகள் வெளியிட்டிருக்கின்றன. இறப்பதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன் நாயகி க்ரியேஷன்ஸ் நாச்சியப்பன் வந்து இவனுடன் பேசியிருக்கிறார். விக்ரமுடன் வாழ்க்கையின் கடைசி நேரத்தில் தொலைபேசியில் பேசியிருக்கிறான். 'சீக்கிரமா வாடா நேரமாயிருச்சு'ன்னு விக்ரமிடம் தொலைபேசியில் சொன்னதை நாச்சியப்பன் எதிரே அமர்ந்து கேட்டதாகச் சொல்லுகிறார். நாச்சியப்பன் வெளியேறிய பிறகு மனைவி ப்ருந்தாவுக்கும் இவனுக்கும் சின்ன வாக்குவாதம் நடந்திருக்கிறது. அவள் கோபித்துக்கொண்டு சிவப்புக் காரில் வெளியேறியிருக்கிறாள். நாச்சியப்பனும் ப்ருந்தாவும் பங்களாவை விட்டு வெளியேறியபிறகு விக்ரம் வந்தானா? தெரியாது. இவனுடைய கழுத்தில் கயிறு இறுக்கிய காயம். தொடையில் ராட்சஸ நகங்களால் குழி பறித்ததைப்போல வட்டமாக ஐந்து



...பாதான் அங்கே இருக்கிறது. அ... அசிங்க அசிங்கமாக நிறைய படங்... பெயர் தெரியாத செக்ஸ் சாதனங்... ஊர்ப் பெண்களை அங்கே அழை... வந்து 'செக்ஸ் ஆர்ஜி' நடத்தியி... வேண்டும். சுட்டுத் தள்ளப்படவே... யவன். சமூகத்துக்கு மேலும் தொ... ரவு தராமல் போய்ச் சேர்ந்துவிட்ட... இனி இவனைப் பேட்டி காணமுடியா... தேவைப்பட்டால் 'இவனுடைய நுங்... பாக்கம் பங்களாவை யாருக்கும் ... யாமல் சோதனை போட வேண்டும்.

டயரியின் அடுத்த பக்கத்... புரட்டினாள், லாவண்யா. ப்ருந்... என்று எழுதி அடிக் கோடிட்டாள்.

இவள் ஸ்ரீரங்கத்தைச் சே... வள். ஏழை ஆசிரியரின் மகள். புட... உடுத்தி நெற்றிக்கு இட்டு என்... போல ஒழுங்காகக் கல்லூரியில் ப... வள். வெஜிடேரியன். தமிழ்ப்பண்... லும் பழமையிலும் கற்பிலும் நம்பிக்...



..பாலைக் காதலித்து மணந்திருக் ..ள். வாழ்க்கையில் இவள் செய் ..ருக்கும் ஒரே தப்பு, இது. கோபால் ..றப்பதற்கு சில நிமிட்ஙகளுக்கு ..ன் கணவன் கோபாலுடன் கோபித் ..க்கொண்டு வீட்டை விட்டு சிவப்புக் ..ரில் வெளியேறிவிட்டதாக சொல்லப் ..டுகிறது. அப்படி வெளியேறியதற்குச் ..ரியான காரணம்?

'கொலையும் செய்வாள் பத்தினி' ..ன்று தயாரிப்பாளர் நாச்சியப்பன் ..மல் போய்விட்டது. ஆனால் போலிஸ் விடாமல் இவளைக் கேள்விகளால் துளைத்துக்கொண்டிருக்கிறது. இவள் நல்லவள். புடவை ப்ளவ்ஸ் அணிந்து, கூந்தலில் நாள் தவறாமல் பூச்சூடும் பழக்கத்தை வைத்திருந்தவள். எனவே இவளை எனக்குப் பிடித்திருக் கிறது. இவள் கணவனைத் தெய்வமாக மதிப்பவள். கொலையுடன் இவளைச் சம்பந்தப்படுத்திக் கற்பனை செய்வது கூடப் பாவம். கணவரின் பிரிவால்



வாடும் இவளை பத்து நாள் கழித்து சாவகாசமாகப் பேட்டி கண்டு...

கொட்டாவி அடக்க முடியாமல் வரிசையாக வர ஆரம்பித்ததும்

ஹைதராபாத் – செகந்தராபாத் சிறப்பிதழுக்கு அடுத்தா
வெளிவரப்போவது **கல்கத்தா சிறப்பிதழ்**.

கல்கத்தா நகரத்து தமிழ் வாசகர்கள் தங்களது சிறந்த அனு வங்கள் / துணுக்குகள் / உண்மைச் சம்பவங்களை அனுப்பிவைக்கலாம். சி கதைகள் கல்கத்தா நகரச் சூழ்நிலையை பிரதிபலிப்பதாக இருக்கவேண்டும் உறை மீது 'கல்கத்தா சிறப்பிதழ்' என்று குறிப்பிடவேண்டும்.

லாவண்யா எழுதுவதை நிறுத்தினாள். மிச்சத்தை நாளைக்கு எழுதிக்கொள்ள லாம். டயரியை மூடி டிராயரில் வைத் தாள். தூக்கம் இமைகளை அழுத் தியது.

**பாலம்** வார இதழின் அலு வலகம் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண் டிருந்தது. நாராயணன் வால் போல நீளமாகக் கொண்டுவந்த ப்ரூஃபை லாவண்யா கையில் வாங்கி திருத்தத் தொடங்கியபோது, தொலைபேசி 'கிர்ர்ங் கிர்ர்ங்' என்றது. யார், ராமா? ரிசீவரைக் கையில் எடுத்தாள்.

''ஹலோ... ஸ்பீக்கிங்... குட்மார் னிங் கல்பனா... ஆமா. இல்லே. இனி மேத்தான்... ஓ ப்ளென்ட்டி... நிஜ மாவா?... தாங்க்யு கல்பனா. நான் என் னிக்குப் போகலாம்... சரி, இன்னிக்கு சாயங்காலமே போறேன்.''

சாயங்காலம் காத்தபெருமாளின் பங்களாவை நெருங்கி வந்துகொண்டி ருந்த லாவண்யா வராந்தா படியில் ஏறி பஸ்ஸரை அழுத்தினாள். வெளியே தலை நீட்டிய வேலைக்காரன் போன்ற வனிடம் விசிட்டிங் கார்டைக் கொடுத்து ''மிஸஸ் ப்ருந்தாவைப் பாக்கணும்'' என்றாள்.

கார்டுடன் உள்ளே சென்றவன் சில நொடிகளுக்குப் பின் தலையை வெளியே நீட்டி ''உள்ளே வரச் சொல் றாங்க'' என்றான்.

லாவண்யா உள்ளே சென்றாள்.

சோபாவில் ஷெர்வானி அணிந்த வளர்த்தியான கிழட்டு உருவம். வாயில் பைப். இவர்தான் காத்த பெருமாளா?

''ஏஸ்?'' முரட்டுக்குரல்.

''மிஸஸ் ப்ருந்தாவைப் பாக்க ணும்.''

'''ப்ளீஸ் ஸிட் டௌன். வர சொல்லிருக்கேன்.''

பேட்டியின்போது இந்தக் கிழ கூட இருக்குமா? இதை வைத் கொண்டு என்ன கேள்விகளைக் கே பது? மாமனாரைப் பக்கத்தில் வ துக்கொண்டு அவள் ஃப்ரீயாகப் வாளா?

கைப்பையைத் திறந் லாவண்யா கைக்குட்டையை வெ யில் எடுத்தாள்.

''ஷி'ஸ் டேக்கிங் பாத்''

''வரட்டுங்க. நான் வெய்ட் பண் றேன்.''

''இன்டர்வியூதானே?''

தலையை அசைத்தாள் லாவண்யா.

''மனசு புண்படாதபடி எ வேணும்னாலும் கேளுங்க. ரொம் நொந்து போயிருக்கா. பத்திரிகை காரங்க நிறைய வந்தாங்க. நா யாரையும் உள்ளே விடல. பால டீசன்டான மேகசின்.''

காத்தபெருமாள் பேசிக்கொண் ருந்தபோது மாடிப்படியில் இறங் வந்த ப்ருந்தாவின் தோற்ற லாவண்யாவை ஈர்த்தது.

விரிந்த ஈரக்கூந்தல். வெண்மை புடவை. மொட்டைக் கழுத்து. சோக தைச் சுமந்தபடி படிகளில் வழிந் இறங்கினாள், ப்ருந்தா.

ப்ருந்தா வருவதைக் கவனித் காத்தபெருமாள் ''அப்போ நீங் உங்க வேலைய ஆரம்பிங்க'' என் எழுந்தார்.

— தொடரு

# தொட்டதெல்லாம் பொன்னாகும் 19

-சவீதா-

**மே**கத்தில் மிதந்து வருவதைப்போல ப்ருந்தா மெல்ல அருகில் வந்தாள்.

லாவண்யா அவளையறியாமல் எழுந்து நின்றாள். காத்தபெருமாள் அந்தப் பிரதேசத்திலிருந்து நழுவி விட்டார்.

''கல்பனா சொன்னா... மேல மாடில போய் பேசுவோமா?'' தளிர்க் குரலில் ப்ருந்தா கேட்டாள். அவள் விழிகளின் மீது சற்றே கவிந்த இமைகள் சோகத்தைப் பூசிக் கொண்டிருந்தன.

''ம். எங்கேன்னாலும் சரிங்க'' என்றாள் லாவண்யா.

மாடிப்படியில் நிதானமாக ஏறிய ப்ருந்தாவைப் பின்பற்றினாள், லாவண்யா.

மாடியில் இருந்த படுக்கை அறை விசாலமானதாக இருந்தது. விலை உயர்ந்த பாரசீகக் கம்பளம் தரையைப் போர்த்தியிருந்தது.

கட்டிலின் விளிம்பில் ப்ருந்தா அமர்ந்தாள். மனச்சோர்வு அவள் அசைவுகளில் தெரிந்தது.

''நீங்க வசதியா உக்காந்துக்கோங்க. உங்க பேரு...''

''லாவண்யா'' என்றவள் கட்டிலுக்கு அருகே கிடந்த ஆசனத்தில் அமர்ந்தாள். குறிப்பு எடுப்பதற்காக 'ஸ்க்ராட்ச் பாட்'ஐப் பிரித்தாள்.

''அம்மா கூப்பிட்டீங்களா?'' என்றபடி வேலைக்காரன் உள்ளே வந்தான்.

அவனை எப்போது ப்ருந்தா கூப்பிட்டாள் என்று லாவண்யா யோசித்தாள்.

''ஒரு காஃபி... காஃபியா டீயா என்னசாப்பிடுவீங்க?''

''டீ இருந்தா பெட்டர்'' என்றாள் லாவண்யா.

''ஒரு டீ'' என்று சொல்லி வேலைக்காரனை அனுப்பி வைத்தாள், ப்ருந்தா.

ஒரு பாலம் வார இதழை ப்ருந்தாவிடம் நீட்டி ''இதுதான் எங்க பத்திரிகை'' என்றாள், லாவண்யா.

''நான் ரெகுலர் ரீடர். காலேஜ்ல படிச்சப்ப வாராவாரம் வாங்குவேன். ஜெயகாந்தன் கதைகள் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அப்போ இதுல நிறைய எழுதினார்.''

''இப்பக்கூட ஜேகே எழுதறார்.''

''இப்ப ஒரு மாசமா எந்தப் பத்திரிகையையும் நான் பாக்கல'' என்ற ப்ருந்தா பாலம் இதழைக் கரங்களில் விரித்தாள். ''என்னைப் பத்தி என்ன எழுதப் போறீங்க?''

''மிஸ்டர் கோபால் திடீர்னு காலமானத சாக்கா வெச்சுக்கிட்டு அவருக்கு வேண்டாத பத்திரிகைகள் உங்களைப் பத்தியும் உங்க குடும்பத்தப் பத்தியும் இஷ்டத்துக்கு எதையாவது கற்பனை பண்ணி எழுதிக்கிட்டிருக்கு...''

''ஆமா. அந்த பத்திரிகைகள் மேலே வழக்குப் போடலாம். இல்லே அட்லீஸ்ட் மறுப்பாவது எழுதி அனுப்பலாம். அங்க்கிள் எதையுமே செய்றதில்லே. போனவாரம் ஒரு பத்திரிகைல எவ்வளவு அப்ஸர்டா எழுதிருக்கான் தெரியுமா, நானும் அங்க்கிளும் சேர்ந்து என் ஹஸ்பெண்ட மர்டர் பண்ணிட்டமாம்.''

''அத நான்கூட பாத்தேன்'' புன்னகைத்த லாவண்யா, ''அதப் பத்திக் கவலைப்படாதீங்க. அதுல வர்றத யாருமே நம்பறதில்லே. அத நீங்க இக்னோர் பண்ணிடலாம்.''

''வேற என்ன பண்றது?''

''அதுக்குத்தான் இந்தப் பேட்டி. சமூகத்தோட எல்லா சந்தேகங்களுக்கும் பதில் சொல்ற மாதிரி கட்டுரையை நான் எழுதப்போறேன். உண்மைக்குப் புறம்பா இதுவரைக்கும் வெளியான எல்லாச் செய்திகளுக்கும் மறுப்புச் சொல்ற மாதிரி நடந்ததையெல்லாம் ஒண்ணு விடாம என்கிட்ட சொல்லிருங்க. பாலத்தில வர்ற எந்தச் செய்திக்கும் தமிழ்நாட்டில ஒரு மரியாதை உண்டு. இந்தக் கட்டுரை நல்லா அமையணுங்கறதுக்காக மிஸ்டர் கோபாலோட நெருக்கமா பழகினவங்களையெல்லாம் ஒர்த்தர் விடாம பேட்டி கண்டு தகவல் சேகரிச்சுக்கிட்டிருக்கேன்.''

''யார் யாரை இதுவரைக்கும் சந்திச்சிருக்கீங்க?''

வேலைக்காரன் தேநீர் எடுத்து வந்தான்.

''அப்படி வை.''

''வாவண்யா முன்னால் 'ட்ரே'யை வைத்துவிட்டு அவன் வெளியேறினான்.

''யாரையெல்லாம் பாத்திருக்கீங்க?'' கேள்வியைப் புதுப்பித்தான் ப்ருந்தா.

''சவிதாவ''

''யாரு, இந்த கதையெல்லாம் எழுதறரே...''

''அவரைத்தான். படிச்சிருக்கீங்களா அவர் கதைகளை?''

''இல்லே. அப்படி ஒண்ணும் பெரிய ரைட்டர் இல்லையே அவர். ஜெயகாந்தன் மட்டும்தான் படிப்பேன். என் ஹஸ்பெண்ட சவிதாவுக்குத் தெரியுமா?''

'இந்தியன் ரயில்வே சிக்னல் அண்ட் டெலிகம்யூனிகேஷன் இன்ஸ்டிடியூட்' இந்தியாவிலேயே இங்குதான் உள்ளது. இங்கு தமிழ் ஆசிரியர்கள் அதிகம்.



''ஃபிலிம் ஃபைனான்ஷியர்ங்கற முறையில மிஸ்டர் கோபால்கிட்ட கதை சொல்றதுக்காக ஒரே ஒரு தடவை போயிருக்கேன்னு சொன்னார். மிஸ்டர் கோபாலைப்பத்தி அவருக்கு அதிகமா ஒண்ணும் தெரியல. ஆனா ப்ரொட்யூசர் நாச்சியப்பனைப் பாக்கச் சொன்னது அவர்தான்.''

''மிஸ்டர் நாச்சியப்பனைப் பாத்தீங்களா?''

''ம்''

''அவர் என்ன சொன்னார்?''

''நான்தான் கோபாலோட கடைசியா பேசிக்கிட்டிருந்தவன். என்கிட்ட நல்லா சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்தார். அவர் இறந்திட்டார்ங்கறதை என்னால நம்ப முடியலேன்னு சொன்னார்.''

''வேற?'' ப்ருந்தாவின் குரலில் ஒருவித பதட்டம் தெரிந்தது.

'கொலையும் செய்வாள் பத்தினிங்கறது சரியாப்போச்சு' என்று ப்ருந்தாவின் மீது நாச்சியப்பன் கொலைப்பழியைத் தூக்கிப்போட்டது லாவண்யாவின் நினைவுக்கு வந்தது.

''உங்க எல்லோரையும் பத்தி ரொம்ப நல்லபடியாச் சொன்னார்'' என்று பொய் சொன்னாள், லாவண்யா.

''பணத்துக்காக மட்டும் என் கணவரோட பழகினவங்கள்ல அவர் ஒர்த்தர். அதச் சாப்பிடுங்க. ஆறிடப் போகுது.''

லாவண்யா தேநீர் தளும்பிய 'கப்'பை எடுத்து கீழ் இதழில் பதித்தாள்.

''என்னைப்பத்திச் சொல்றதுன்னா... நான் ஒரு புவர் ஃபாமிலியச் சேர்ந்தவ. எங்க ஊர் ஸ்ரீரங்கம். அப்பா டீச்சர்...''

''அதையெல்லாம் கல்பனா சொல்லிட்டாங்க. காலேஜ் படிப்பு முடிஞ்சதும் நீங்க கல்பனாவைப் பிரிஞ்சுட்டீங்க, இல்லையா?''

''ஆமா''

''அப்புறம் மிஸ்டர் கோபாலை எங்க சந்திச்சீங்க, எப்படி உங்க கல்யாணம் நடந்தது, உங்க குடும்ப வாழ்க்கையில நடந்த சுவாரஸ்யமான நிகழ்ச்சிகள்... இந்த மாதிரி



''அதுக்கு ஒரு முழு நாளை நீங்க என்னோட ஸ்பெண்ட் பண்ணணும்.''

''எத்தனை நாளானாலும் பரவாயில்லே. அப்படின்னா ஒரேயடியா நாளைக்குக் காலைல ஆரம்பிக்கலாமா?''

''அதான் நல்லதுன்னு நான் நினைக்கிறேன். ஒரே ஸிட்டிங்ல எல்லாத்தையும் சொல்லிர்றேன்.''

''நாளைக்கு எத்தனை மணிக்கு வரலாம்?'' லாவண்யா கேட்டாள்.

''நீங்க எங்க இருக்கீங்க?''

''டி. நகர்.''

''அப்ப ஒண்ணு செய்ங்க. இங்க அடையாறுக்கு வரவேண்டாம். நாளைக்கு ஸ்டர்லிங்ல இருக்கிற எங்க பங்களாவுக்கு வந்திருங்களேன்.''

''ப்ருந்தாவனுக்கா?'' என்று உற்சாகத்தை மனதினுள் அழுத்திக் கொண்டு கேட்டாள் லாவண்யா. அந்த பங்களாவை ஒரு முறை ஆராய வேண்டும் என்று மனதினுள் ஏற்கனவே அவள் திட்டம் போட்டிருந்தாள்.

''எஸ். அது எங்க இருக்குன்னு தெரியுமா?'' ப்ருந்தா கேட்டாள்.

பதில் சொல்ல வாயெடுத்த லாவண்யா கட்டிலுக்குக் கீழே எதையோ கூர்ந்து பார்த்தாள். ''கல்பனா இங்க வருவாங்களா?'' என்று கேட்டாள்.

''இல்லே.''

''வர்றதில்லையா!'' சின்ன ஆச்சரியத்துடன் மறுபடியும் கேட்டாள்.

''என்னைப் பாக்க இங்க அடிக்கடி வந்திருக்கா. ஆனா இந்த ரூமுக்குள்ள யாரும் வந்ததில்லே. நீங்கதான் முதல் விஸிட்டர்.''

லாவண்யா மறுபடியும் கட்டிலுக்குக் கீழே பார்த்தாள்.

''நாளைக்கு அங்கே வந்திர்றீங்களா'' என்ற ப்ருந்தா கட்டிலைவிட்டு இறங்கினாள். ''இருங்க. உங்களை டி. நகர்ல ட்ராப் பண்ணச் சொல்றேன்.'' தொலைபேசியிடம் சென்றாள்.

லாவண்யாவுக்கு முதுகைக் காண்பித்தபடி ப்ருந்தா, ''டிரைவர் இருந்தா பேசச் சொல்லு'' என்று தொலைபேசியில் யாரிடமோ சொன்னாள்.

இதுதான் சமயம் என்று லாவண்யா கட்டிலுக்குக் கீழே

கையைச் செலுத்தி அங்கே கிடந்த, பாதி எரிந்த சிகரெட் துண்டை லபக் என்று கைப்பற்றி கைப்பைக்குள் போட்டுக்கொண்டாள்.

இரவு உணவை முடித்த லாவண்யா மேஜை விளக்கின் வெளிச்சத்தில் சிகரெட் துண்டை கைப்பைக்குள்ளிருந்து எடுத்தா... ஃபில்டர் பகுதியில் என்ன இது, சி... பாக? ரத்தக்கறையா?

லிப்ஸ்டிக்!

— தொடரு...

ஆனந்தா சங்கர்;



நிருத்ய அகாடமியின் சார்பில் ஆந்தி... மாநிலத்தின் 'சிறந்த பரத நாட்டியக் கலைஞரா'க... தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள செல்வி ஆனந்தா சங்கருக்... வயது இருபதுதான்.

நான்கு வயதில் திருமதி சாரதா கேசவ ராவிட... நாட்டியம் பயில ஆரம்பித்தார். அதற்குப்பின் த... போது தமிழ்நாடு இசைக் கல்லூரியில் பேராசிரி...வ... இருக்கும் பக்கிரிசாமிப் பிள்ளையின் மேற்பார்வை... (ஸ்ரீபிரியாவின் அப்பா. அப்போது ஹைதராபா... ரேடியோ நிலயத்தில் பணியாற்றி வந்தார்) அனை... திந்திய இசை மற்றும் நாட்டியத்துக்கான ஜூனிய... தங்க மெடலைப் பெற்றார்.

பின் சென்னை கலாக்ஷேத்ராவில் சேர்ந்து ருக்மிணி... தேவி அருண்டேல் அவர்களால் மேலும் பயிற்சி பெற்று... பரதக் கலையில் டிப்ளமோ பட்டமும், மேற்படிப்புக்... உண்டான சான்றிதழ்களையும் பெற்றார்.

சீதா சுயம்வரம், ராம வனவாசம், ருக்மிணி... கல்யாணம், மீனாட்சி விஜயம், புத்த அவதாரம் போன்... புகழ்பெற்ற நாட்டிய நாடகங்களில் முக்கிய பங்கே... றுள்ளார்.

கீஸ் உயர்நிலைப்பள்ளியில் சுமார் ஐம்ப... குழந்தைகள் பயின்று வரும் நாட்டியப் பள்ளி ஒன்... இவரது மேற்பார்வையில் நடந்து வருகிறது.

பரதத்தில் மேலும் ஆராய்ச்சி செய்வதற்கா... மத்திய அரசு இவருக்கு ஸ்காலர்ஷிப் வழங்குகிறது... அபிநய பாரதி, நாட்டிய பாயுரி போன்ற பட்டங்களை... பெற்றதுடன்,

கலாக்ஷேத்ராவின் பழைய மாணவரான ...ரா... லிங்க சாஸ்திரி அவர்களிடமிருந்து குச்சிப்புடி... ஆனந்தா கற்றுக்கொண்டார்.

இவரது குடும்பமே இசைக் குடும்பமாக விளங்கு... கிறது. இவரது சகோதரி சுகந்தா இவருடன் நடன... மாடுகிறார். அம்மா சுபாஷிணி சங்கர் மியூசிக் டீச்சரா... கீஸ் உயர்நிலைப்பள்ளியில் பணிபுரிகிறார்.

கர்நாடக சங்கீதம் கற்றுக்கொள்வதோடு... வீணையும் கற்றுக்கொண்டு வருகிறார் ஆனந்தா. பரத... கலையை பல்வேறு நாடுகளுக்கும் சென்று பரப்ப வேண்டு... மென்பது இவரது நீண்ட நாள் ஆசை.

—'க'

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

# சவீதா

உதட்டுச் சாயத்தின் கறை
த சிகரெட் துண்டு எப்படி ப்ருந்
ின் கட்டிலுக்குக் கீழே வந்தது?
லாவண்யாவுக்குக் குழப்பம்.
கல்பனாதான் புகை பிடிக்கும்
கம் உள்ளவள்.
கல்பனா இங்கே வந்ததுண்டா
கேட்டதற்கு, இந்த அறைக்குள்
ல்லை என்று ப்ருந்தா சொல்லு

எதற்காக அப்படி ஒரு பொய்யைச்
ல்ல வேண்டும்?
ஒருவேளை சிநேகிதியிடமிருந்து
ந்தாவுக்கும் புகைபிடிக்கும் பழக்கம்
ற்றிக்கொண்டிருக்குமோ?
மேஜை டிராயரை இழுத்தாள்.
ியை எடுத்தாள். ப்ருந்தாவுக்கு
று ஒதுக்கிய பக்கத்தைப் புரட்டி

இவள் ஸ்ரீரங்கத்தைச்...... தமிழ்ப்
பிலும் பழமையிலும் கற்பிலும்
பிக்கை உள்ளவள்... வெஜிடேரி
... கோபாலைக் காதலித்து... துளைத்
கொண்டிருக்கிறது... இவள் நல்ல
. புடவை ப்ளவுஸ் அணிந்து
தலில் நாள் தவறாது பூச்சூடும்
க்கத்தை வைத்திருந்தவள். எனவே
ளை எனக்குப் பிடித்திருக்கிறது.
ள் கணவனைத் தெய்வமாக மதிப்
ள்...

வாசித்தபின் பால்பாய்ன்ட் பேனா
ன்பக்கக் குமிழை அழுத்தினாள்
வண்யா. தொடர்ந்து எழுதத்
டங்கினாள்.

இவளை இவளுடைய மாமனாரின்
ங்களாவில் சந்தித்தேன். கண
வனை இழந்த சோகம் முகத்தில்
தெரிந்தபோதிலும், புதிதாக
இறக்குமதி செய்யப்பட்ட போர்ட்
பிள் டி. வி. செட் போல லட்சண

மாக இருக்கிறாள். தயாரிப்பாளர் நாச்சியப்பனைப் பற்றி நான் பேசியபோது மிரண்ட முயல்குட்டியைப் போல 'ரியாக்ட்' செய்தாள். காரணம் தெரியவில்லை. இவளுடைய கட்டிலுக்குக் கீழே எரிந்த சிகரெட் துண்டு கிடந்தது. அதன் ஃபில்டர் பகுதியில் படிந்திருக்கும் உதட்டுச் சாயம் அது ஒரு பெண்ணால் உபயோகிக்கப்பட்ட சிகரெட்டின் மிச்சம் என்பதைத் தெரிவிக்கிறது. இவளுடைய சிநேகிதி கல்பனாவுக்கு சிகரெட் பழக்கம் உண்டு. ஆனால் கல்பனா அந்த அறைக்குள்ளே வந்ததில்லை என்கிறாள், இவள். அது உண்மை என்றால் இவளுக்கும் சிகரெட் பழக்கம் உண்டு என்றுதான் அர்த்தம். மஞ்சள் பூ குங்குமம் புடவை ஆகியவற்றை உபயோகிக்கும் பெண் புகைப்பாளா? கற்பிலும் பழமையிலும் நம்பிக்கை வைத்திருக்கும் பரிசுத்தமான தமிழ்ப்பெண் என்று ப்ருந்தாவைப் பற்றிக் கல்பனா சொன்னதெல்லாம் பொய்யா? அவள் சொன்னதைவிட மறைத்ததுதான் அதிகமோ?

கேள்விக்குறியுடன் முடித்தவள் டயரியை மூடி வைத்தாள். உறக்கம்



அடுத்த இதழ்

ஹைதராபாத் - 3

(இதுதான் கடைசி)

பாலகும்மி பத்மராஜு

தெலுங்குச் சிறுகதை – தமிழில்

ஸ்ரீதர் சுபஸ்ரீ

– சிறுகதை

டி. வி. எப்படி செய்கிறார்கள்?

ஈ.ஸி. டி.வி. நிறுவனத்தில் கண்டது

போலீஸ் கமிஷனர்

பொன்னையா

– பேட்டி

மற்றும் துணுக்குகள்

இமைகளை அழுத்தமே படுக்கைக்குச் சென்றாள்.

**மறுநாள்** காலை. ஒன்பதரைக்கு வீட்டை விட்டுக் கிளம்பிய லாவண்யா பனகல் பார்க் பக்கம் நடந்தாள். பொதுத்தொலைபேசியில் ஐம்பது பைசாவைப் போட்டாள். பாலம் அலுவலகம் காதருகே வந்தது. குட்மார்னிங் மேடம் சொன்ன நாராயணனிடம், ''காலைல ஒரு பேட்டிக்காக ஸ்டர்லிங் போறேன். ஆபீசுக்கு வர நேரமாகும். எடிட்டர் வந்ததும் சொல்லிடு'' என்றாள்.

சாலையோரம் நின்ற ஆட்டோவுக்குள் ஏறி அமர்ந்து ''ஸ்டர்லிங்'' என்றாள். சில நிமிடங்களுக்குப்பின் ஸ்டர்லிங்கின் நாற்சந்தியை ஆட்டோ நெருங்கியபோது, ''லெஃப்ட்ல போங்க'' என்றாள்.

ப்ருந்தாவன் பங்களாவின் உயரமான இரும்பு கேட் சாத்தப்பட்டிருந்ததைப் பார்த்து ஆட்டோ நின்றது. இரு கதவுகளையும் மையத்தில் ஒரு கனமான சங்கிலி ஒன்றாகச் சேர்த்துச் சுற்றிக்கொண்டிருக்க, அதிலிருந்து பெரிய பூட்டு உட்பக்கம் தொங்கியது.

''பூட்டியிருக்கும்மா'' எ
ஆட்டோவை ஓட்டியவர். மரங்
உச்சியில் பறவைகள் 'கீச் கீச்'
சண்டையிட்டுக்கொண்டிருந்தன
போது,

பெரிய 'கேட்'டின் ஒன்று
தம்பி போல குள்ளமாகப் பக்க
இருந்த சுழல் கேட் வழியாக
சுருட்டிய தினசரிப் பத்திரிகை
காக்கிச் சட்டைக்காரன் வந்
குனிந்து ஆட்டோவுக்குள் இ
லாவண்யாவைப் பார்த்தான்.

''மிஸஸ் கோபால் இருக்
களா?'' லாவண்யா கேட்டாள்.

''இப்பத்தான் உள்ள போ
நீங்க பாலம் பத்திரிகை...''

''ஆமா''

உடனே அவன் வந்த
கேட் வழியாக அவசரமாக
புகுந்தான். பூட்டைத் திற
சங்கிலியை உருவி கதவை வி
திறந்தான்.

கத்தரிக்கப்பட்ட சவுக்குச்
களுக்கு இடையே ஆட்டோ ஓ
விசிறி வாழை அருகே விலக்
உதிர்ந்து கிடந்த சருகுகள் இலை
பருவத்தின் வருகையைத் தெ
தது.

போர்டிக்கோவுக்குள் நீல
பத்மினி நின்றது. அதற்குப் பி
ஆட்டோவை நிறுத்தியவர் ''வெ
பண்ணணுமாம்மா?'' என்று
டார்.

''வேண்டாங்க'' பணத்
கொடுத்து வெட்டினாள். நீலக் கா
பார்த்தபடி நடந்தவள், இதில்
ப்ருந்தா வந்திருக்க வேண்டும்
எண்ணிக்கொண்டு படியேறி
ஹாலுக்குள் கால் வைத்தபோது

எதிரே சோபாவில் மி
ப்ருந்தா கோபால், முந்தின
காண்பிக்காத வித்தியாசமான
வெளிப்படுத்திக் கொண்டிருந்
வெள்ளைப் புடவைதான். ஆ
நேற்று அணிந்தது அல்ல. விழி
வயலெட்டின் ஆக்கிரமிப்புடன்
நீலம். எந்தக் கோடீஸ்வரனு
முதல் பார்வையில் ஹார்ட்
டாக்கை வரவழைக்கும் அழகு.

ப்ருந்தாவின் அருகே ஒரு
மலை நின்று பேசிக்கொண்டிருந்

ட்டுக்குள் முழுக்கைச் சட்டையை
பண்ணி பவ்யமாகச் சற்றே
ந்து கைகளைக் கட்டிக்கொண்டு
ற அந்த மனிதருக்கு நாற்பது





ற்பத்தைந்து வயது இருக்கும். உப் கன்னங்கள். உதடே இல்லாத ய். அகன்ற தாடையிலும் கண்களி ம பேராசை தெரிந்தது.

''குட்மார்னிங்'' என்ருள் ண்யா.

உட்காரும்படி அவளுக்குக் கை சைத்த ப்ருந்தா நின்றவரிடம் ''அப் ன்ன அதே மாதிரி டைப் பண்ணி ளைக்கு அடையாறுக்கு எடுத்துட்டு ங்க'' என்ருள்.

அவர்கள் பேச்சுக்கிடையே மூக்கை ட விரும்பாத லாவண்யா தன் பார் யை அந்த பரந்த ஹாலில் பரப் [redacted]

சுவர்களில் நவீன ஓவியங்கள். று நிச்சயம் பிகாசோதான் என்று வு கட்டினள். திரும்பிய பக்கமெல் ம் பழைய பஞ்சலோகச் சிலைகள், லைப்பாடு நிறைந்த தட்டுக்கள், ஜாக்கள், உலகின் விலை உயர்ந்த ப் பொக்கிஷங்கள்.

ஒரு ஆணும் பெண்ணும் குடும்பம் த்த இப்படி ஒரு மியூசியம் தேவையா என்று ஒருவிதக் குமட்ட லுடன் எண்ணினள். அந்த ஹாலின் அலங்கரிப்புக்களுக்குப் பின்னே கலை உள்ளம் எதுவும் அவளுக்குத் தென்பட வில்லை. பார்ப்பவர்களை அச்சுறுத்தும் ஒருவித ஸாடிஸம்தான் தெரிந்தது.

''பங்க்சுவலா வந்துட்டீங்களே.''

''அது மட்டும் இல்லேன்ன ப்ரெஸ் ரிப்போர்ட்டரா காலந்தள்ள முடியாது மேடம்.''

''சும்மா ப்ருந்தான்னே கூப் பிடுங்க.''

''ஓகே... இங்க டெய்லி வர்றீங் களா ப்ருந்தா?''

''ஊஹூம். ரொம்ப நாளைக்குப் பிறகு இன்னிக்குத்தான் வர்றேன்.''

''இங்க வேற யார் இருக்காங்க?''

''யாரும் கிடையாது. எஸ்டேட் ஆபீசர் பங்களாவக் கவனிச்சுக்கரு்ர். இப்பப் போனரே அவர். அவருக்கு உள்ளயே குவார்ட்டர்ஸ் குடுத்திருக் கோம்.''

அடுத்தபடியாக என்ன கேட் கலாம் என்று லாவண்யா யோசித்த

போது. ''மாடிக்குப் போய் பேசுவோம்'' என்றவாறு ப்ருந்தா எழுந்தாள்.

மாடியிலும் பணத்தின் நாற்றம். ஐம்பது பேர் ஏக காலத்தில் புரளக்கூடிய படுக்கை. இன்னொரு டி. வி. செட். தொலைபேசி. ரிகார்டர்கள். கோடீஸ்வரர்கள் நேசிக்கும் சகலமும் அங்கே இருந்தன.

ப்ருந்தா பேச ஆரம்பித்தாள்.

''மெட்ராஸ்ல என் கல்லூரிப் படிப்பு முடியற சமயம் ஊர்ல அப்பா ரிடையர் ஆயிட்டார்.''

''ஸ்கூல் மாஸ்டர்தானே அவர்?'' என்று கேட்ட லாவண்யா 'ஸ்க்ராட்ச் பேட்'-இல் ஏதோ குறித்துக்கொண்டாள்.

''ஆமா. டீச்சர்தான். ஊருக்குப் போயி அவங்களுக்கு சுமையா இருக்க நான் விரும்பலே. பரீட்சைக்கு தயார் பண்றதுக்காக 'ஸ்டடி லீவ்' விட்டிருந்தப்ப பத்திரிகை விளம்பரங்களைப் பார்த்து வேலைக்கு நிறைய அப்ளிகேஷன் போட்டேன். ஒரு நாள் இன்டர்வியூ கார்டு வந்தது. காலேல பத்து மணிக்கு இன்டர்வியூ. மத்தியானம் ரெண்டு மணிக்கு லாஸ்ட் எக்ஸாம். முக்கியமான பரீட்சை. துணிஞ்சு இன்டர்வியூவுக்குப் போயிட்டேன். அங்க போனா ஒரு போஸ்ட்டுக்கு இருபது பேர் சர்ட்டிபிகேட்டுகளோட வந்து நிக்கருங்க. திரும்பி ஹாஸ்டலுக்கு ஓடிரலாம்னு பாத்தேன். அப்பா அம்மா ஞாபகம் வந்தது. வந்தது வரட்டும்னு அங்கயே உக்காந்துட்டேன். என்னோட டர்ன் வரும்போது ஒன் தர்ட்டி. பரீட்சை தொடங்க சரியா அரை மணி நேரம். என் பர்ஸ்ல ஒரு ரூபாயும் சில்லறையும் இருந்தது. அத வெச்சு எக்ஸாம் ஹாலுக்கு அரை மணி நேரத்துல போய்ச் சேர முடியாது. பரீட்சையும் போச்சு, வேலையும் கிடைக்காதுன்னு முடிவு பண்ணி... சேன். அந்த ரூம்லதான் முதன் அவரை சந்திச்சேன்.''

''மிஸ்டர் கோபாலையா?''

''ஆமா. உக்கார ... கேள்விமேல் கேள்வி கேக்க ஆ... சார். எக்ஸ்யூஸ் மி சார், ... மணிக்கு எக்ஸாம், அவசரமாப் ...ணும்னு என்னையறியாமச் சொ... டேன். உடனே என்ன செ... தெரியுமா. டிரைவரைக் கூப்பிட்... இவங்களை எங்க போகணும்னு ... விட்டுட்டு வா'ன்னார். ஃபாரின் ... போய் சரியா ரெண்டு மணிக்... ஸாம் ஹாலுக்குள்ள நுழை... டேன்.''

''பாஸ் பண்ணிட்டீங்க... லையா?''

''பரீட்சையிலே பாஸ். வே... கிடைச்சிருச்சு.''

''நான்கூட கொஞ்ச நாள்... எஸ். கே. பி. என்டர்பிரை... வேலை பாத்தேன். நீங்க எங்க ... சேர்ந்தீங்க?''

''எஸ். கே. பி. இன்டர்... னல்னு டெய்லர்ஸ் ரோட்ல ஒரு கம்பெனி இருந்தது. அது... சேர்ந்தேன். ஆறு மூணு மாச... வேலை பாத்தேன்.''

''அப்புறம்?''

''அம்மாவும் அப்பாவும் ...ருக்குப் பின்னால ஒர்த்தரா இற... டாங்க. அப்பா வேலை பாத்த ஸ்... எனக்கு டீச்சர் வேலை போட்டு ... குடுத்தாங்க. ஊர்ல ஒரு சின்ன... இருந்ததினால ஊருக்குப் போக ... பண்ணினேன். ரெசிக்னேஷன் ... குடுத்திட்டேன்.''

''ஸோ, வேலையை ரிசைன் ...ணிட்டீங்க?''

லாவண்யா கேட்டாள்.

— ...



## கல்கத்தா வாசிகளுக்கு

கல்கத்தா சிறப்பிதழை அலங்கரிக்க துணுக்குகள், உண்... சம்பவங்கள், கல்கத்தா நகரச் சூழலில் எழுதப்பட்ட சிறுகதைகள் மிக... அவசரமாக வரவேற்கப்படுகின்றன.

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

-சஸீதா—




"ஆமா லாவண்யா. சென்னை வாழ்க்கைக்கு ஒரேயடியா முழுக்குப் போட்டுட்டு ஸ்ரீ ரங்கம் போயி ஸெட்டில் ஆயிடணுங்கற நோக்கத்தோடதான் ரெசிக்னேஷன் எழுதிக் கொடுத்தேன். என்கிட்ட அன்பு காட்டறதுக்கும் என்னைப் பத்திக் கவலைப் படறதுக்கும் ஊர்ல சொந்தக்காரங்க நிறையப்பேர் இருந்தாங்க. அது மட்டுமில்ல, அம்மா அப்பா கடைசி நாட்களைக் கழிச்ச வீட்டில வாழ்ந்தா ஒருவேளை அவங்களோட வாழ்ற மாதிரி ஆறுதல் கிடைக்கலாம்னு நம்பினேன். ஆனா..." என்றாள், ப்ருந்தா.

"என்ன ஆச்சு? உங்க ராஜிநாமாவைக் கம்பெனி ஏத்துக்கலே அப்படித் தானே?" என்று குறுக்கு விசாரணை செய்தாள், லாவண்யா.

"நோ நோ, இம்மீடியட்டா அக்செப்ட் பண்ணிக்கிட்டு என்னோட இடத்திலே, ரிசர்வ் லிஸ்ட்ல வெச்சிருந்த வேறொரு பெண்ணை அப்பாய்ன்ட் பண்ணிட்டாங்க. ஆனா ஆபீஸ்லேர்ந்து நான் ரிலீவ் ஆன அன்னிக்குத்தான் என் வாழ்க்கையிலேயே பெரிய திருப்பம். அன்னிக்கு மத்தியானம் ஹாஸ்டல் அறையை நான் காலிபண்ணிக் கிட்டிருந்தேன்..."

கட்டிலின் மீது மடித்து வைதத புடவைகளையும் உள்பாவாடைகளையும் சூட்கேசிற்குள் எடுத்து வைத்தாள் ப்ருந்தா. ஷெல்ஃபிலிருந்த புத்தகங்களை அள்ளி பெரிய அட்டைப் பெட்டிக்குள் அடுக்கி கயிற்றால் கட்டினாள். கடைசியாக,

மேஜைமீது சாய்ந்திருந்த ஸ் புகைப்படச் சட்டத்தைக் கையில் எ தாள். அதிலிருந்த அப்பாவும் அ வும் அவளைப் புன்முறுவலுடன் பா அவள் விழிகள் கலங்கின. சென்னை நான் படிக்க வராம இருந்திரு ஒருவேளை நீங்க உயிரோட இ திருப்பீங்க இல்லையா?

சரியாக ஆறு மணிக்கு மேனை அழைத்து வரவேண்டும். அ உதவியுடன் சாமான்களை கீழே வி டர்ஸ் ஹாலுக்கு இறக்கவேண்டு ஆட்டோ பிடிதது எழும்பூர் போ வேண்டும். ரயில் நிலையத்துக்கு எதி திருச்சி பஸ்கள் நிறைய நிற்கும்.

டக்டக்... டக்டக்...

அறைக்கதவு தட்டப்பட்ட ப்ருந்தா எழுந்து போய்க் கதவை திறந்தாள். வாட்ச்மேன் கிழவர் க நின்றார். சதுர வெள்ளைக் கவ ப்ருந்தாவிடம் நீட்டினார். "கீழ க டிரைவர் நிக்கறார். உன்கிட்ட குடுக் சொன்னார்."

வியப்புடன் சரசரவென்று கவ கிழித்தாள், ப்ருந்தா. கடிதம் அவ விரலகளுக்கு இடையே மலர்ந்த இடப்பக்க மேல் மூலையில் நீலநி தில் சிறிதாக ஆங்கிலத்தில் அச்சி பெற்ற 'கோபால்.' ப்ருந்தாவி இதயம் படபடவென்று வேகத்தி அதிகரித்தது.

'காலையில் உங்கள் ராஜிநாம கடிதம் பார்த்தேன். உங்களுட சிறிது பேச விரும்புகிறேன். எழும்பூ ஸ்டேடியத்துக்கு மாலை ஆற மணிக்கு வரவும். வருவதாக இரு தால் பதில் எதுவும் அனுப்ப வேண் டாம். விருப்பமில்லையென்றால் ஒரு வ இக்கடிதத்தின் பின்பக்கம் எழு டிரைவரிடம் கொடுத்து அனுப்பவும்.

– கோபால்'

'பரபரப்புடன் ஜன்னலுக்கு ஓடி

...தா எட்டிக் கீழே பார்த்தாள். ...யிலில் பளபளத்த நீலநிற வெளி ...ட்டுக் காரை இனம் கண்டுகொண் ...ள். மூன்றரை மாதங்களுக்கு முன் ...கே. பி. இன்டர்நாஷனல் அலு ...கத்தில் இன்டர்வியூ நடந்த அன்று, ...ந்த காரில்தான் அவள் பரீட்சை ...லுக்குச் சென்ருள்.

எதற்காக இந்த அவசரக் கடிதம்? ...படியும் வேலையில் சேர்ந்துகொள் ... சொல்லுவாரா? அலுவலக ஆண் ...ண் பணியாளர்களிடம் வார்த்தை ... எண்ணி அளந்து பேசி மூன்று ...டிகளுக்கு மேல் யாரையும் தன் ...றைக்குள்ளே நிற்கவிடாத கோபால் ...னிடம் அப்படி என்ன அவசரமா ...தனியாகப் பேசவேண்டும்?

...தற்காக என்னைக் கூப்பிடுகிருர் ...று டிரைவரிடம் கேட்க முடியாது. ...ரை நன்ருக ஒட்டி அனுப்பியிருக் ...போது கடித வரிகளை அவனிடம் ...வாதிப்பது நாகரிகமில்லை.

ஆறரைக்கு அவரைச் சந்திக்கச் ...ன்ருல் திரும்பிவர ஏழு ஏழரை ...கலாம். இந்த அறையை மாலை ...று மணிக்குக் காலி பண்ணுவதாக ...ர்டனிடம் நான் ஒப்புக்கொண்ட ...ன் பேரில் நாளையிலிருந்து இங்கே ...டியேறப்போகும் இன்னொரு பெண் ...டம் இருந்து அவர்கள் அட்வான்ஸ் ...ங்கிவிட்டார்கள்.

கடிதத்தை மீண்டும் ஒருமுறை பார்த்தாள்.

...விருப்பமில்லையென்ருல் ஒருவரி இக்கடிதத்தின் பின்பக்கம் எழுதி...

மேஜை டிராயரை இழுத்து பேனவைக் கையில் எடுத்தாள். கடிதத்தைப் புரட்டி வைத்து எழுதப் போனவள் தயங்கினாள்.

யாரிடமும் அதிகம் பேசாத கோடீஸ்வர இளைஞன், மதித்து கடிதம் அனுப்பியிருக்கும்போது அலட்சியம் செய்வதா?

பரீட்சை எழுத அன்று அவர் கார் கொடுத்து உதவியதால்தானே இன்று பெயருக்குப்பின்னே இரண்டெழுத்துப் பட்டம் சேர்ந்திருக்கிறது. எழும்பூர் ரயில் நிலையத்துக்குப் போகிற வழியில் தானே எழும்பூர் ஸ்டேடியம் இருக்கிறது.

இரண்டு நிமிடம் இறங்கி அவரிடம் பேசிவிட்டு அவர் செய்த உதவிகளுக்கு நன்றி தெரிவித்துவிட்டுச் செல்வதில் என்ன தப்பு?

மேற்கொண்டு யோசிக்காமல் கூந்தலையும் புடவையையும் ஒரு விநாடி கண்ணாடி முன் நின்று சரி பார்த்துவிட்டு அறையைவிட்டு வெளியேறினாள். மாடிப்படியில் இறங்கினாள். விசிட்டர்ஸ் ஹாலில் அவளுக்காகக்



ளாத்து நின்ற டிரைவரிடம் ''பதில் ஒண்ணுமில்லே'' என்றாள்.

இருள் அடர்த்தியில்லாத கரும் புகையாகப் பரவிய நேரத்தில் ப்ருந்தா அமர்ந்திருந்த ஆட்டோ எழும்பூர் ரயில் நிலையம் பக்கமாக ஓடியது. சூட்கேசும் பெரிய அட்டைப்பெட்டியும் இரண்டு துணிப்பைகளும் ஆட்டோவின் பெரும்பகுதியை அடைத்துக் கொண்டிருந்தது. அவள் மூலையில் தன்னை ஒடுக்கிக்கொண்டு காலை அசௌகரியத்துக்குள் சாய்த்துக் கொண்டு குழப்பங்களுடன் அமர்ந்திருந்தாள்.

கல்லூரியில் அவளைச் சேர்ப்பதற்காக நான்கு வருடங்களுக்கு முன் அவளுடைய அப்பா அவளைச் சென்னைக்கு அழைத்துக்கொண்டுவந்த நாள் அவள் நினைவுக்குவந்தது. வாழ்க்கையிலேயே முதல் முறையாக அன்றுதான் அவள் ஆட்டோவில் ஏறினாள். அப்போது அவள் அருகே அப்பா இருந்தார்.

எழும்பூர் ஸ்டேடியம் நெருங்கிய போது ''ஒரு நிமிஷம் கொஞ்சம் ஓரமா நிறுத்துங்க'' என்றாள்.

ஆடி முடித்தவர்கள் ஸ்டேடியத்துக்கு வெளியே நின்ற காரையும் ஸ்கூட்டரையும் கிளப்பிக்கொண்டிருந்தனர். மத்தியானம் விடுதிக்கு வந்த நீல நிறக் கார் அங்கே காணப்படவில்லை. திரும்பிப்பார்த்தாள். ஆட்டோ பத்திரமாக கண்பார்வையிலேயே நின்றது.

மேலும் அவள் உள்ளே நடந்த போது தனியாக ஒரு சிவப்பு ஸ்போர்ட்ஸ் கார் நிற்பது தெரிந்தது. அது கோபாலுடையதுதான் என்று முடிவு செய்து அதை நோக்கி நடந்தாள்.

காரை அவள் நெருங்குவதற்கும் டென்னிஸ் மட்டையுடன் கோபால் அங்கே வருவதற்கும் சரியாக இருந்தது.

''குட் ஈவ்னிங் சார்'' என்றாள்.

''குட் ஈவ்னிங்'' என்று ஆண்மை நிறைந்த முரட்டுக் குரலில் சொன்னவன் ''அவசரமா நீங்க திரும்பிப் போகணுமா?'' என்று கேட்டான்.

எதிர்பாராத இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தடுமாறியவள், ''இல்லே சார். அவசரம் ஒண்ணுமில்லே சார்'' என்றாள்.

காரின் மேல் சாய்ந்து நி... கோபால், ''சொந்தக் காரணங்க... வேலையில் நீடிக்க இயலாத நிலை... இருக்கிறேன்னு ராஜிநாமாக் கடி... திலே எழுதியிருக்கீங்க.''

''ஆமா சார்.''

''ஆபீஸ்லெ யாராவது உங்க... தப்பா நடந்துகிட்டாங்களா?''

''அப்படியெல்லாம் இல்லே...'' என்றவள், ஊரில் அம்மா அ... அடுத்தடுத்து இறந்ததையும், ஊ... குப் போய் உறவினர்களுடன் வ... முடிவு செய்துவிட்டதையும் தெரி... தாள். ஏனோ ஸ்டேடியத்தின் வாச... மூட்டை முடிச்சுக்களுடன் நின்ற ஆ... டோவைப் பற்றிச் சொல்லவில்லை.

''அநாகரிகமாக் கேட்கறே... நினைக்காதீங்க. நேரத்தைவிட ... மதிப்புள்ளதா எதையும் நான் நி... கிறதில்லே. சுத்தி வளைச்சிப் ... உங்க நேரத்தையும் என் நேரத்தை... வீணாக்காம நேரடியா கேட்டிர்றே... சொந்தத்திலே உங்களைக் கட்டிக்... துக்காக யாராவது காத்திருக்க... களா? இல்லே, நீங்க யாரையாவ... மனசில நினைச்சிருக்கீங்களா?'' கோபாலின் பார்வை அவன் செ... லாத அதிக விஷயங்களை அதிக வே... துடன் தெரிவித்தது.

''என் கல்யாணத்தப் பத்தி நா... நினைச்சதே இல்லே.''

''ஒரு ஸெகண்ட் நினைச்சி... பாருங்க. உங்களுக்குக் கணவராக... பெருமையையும் சந்தோஷத்தை... மனப்பூர்வமா நீங்க நினைச்சா என... குத் தரமுடியும்'' என்று அழகா... ஆங்கிலத்தில் சொன்னான்.

மின்வெட்டுப் பார்வையா... கோபால் முகத்தைப் பார்த்துவிட்... தலை குனிந்தாள், ப்ருந்தா. சிவப்... வளர்த்தியாக ஒல்லியாக கரு... வென்ற புருவங்களுடன், செல்வத்தி... செழுமையுடன் இந்தக் கோபால்.

முன்பின் தெரியாத நேரத்தி... பரீட்சை எழுதுவதற்காகக் கா... கொடுத்து உதவியவர்.

மூன்று மாதங்களுக்கு வேலை... யும் சம்பளத்தையும் தந்தவர்...

இவருக்கு நான் ஏன் மனைவியாக... கூடாது?

அவள் மனம் மேலும் படப்... வென்று அடித்தது. விழிகளில் கு...

அற்ப உதவிகளை வலியப் பெண்க்குச் செய்துவிட்டு அப்புறம் பல் காட்டிக்கொண்டு அந்தப் பெண்ப் பின்தொடரும் ஆண்களைப் பற் கல்பனு கதைகதையாக கல்லூரி விடுதி அறையில் சொல்லியிருக் ள். ஆனால் இந்தக் கோபால்,

கடந்த மூன்று மாதங்களில் றே தடவைகள்தான் – அதுவும் ர்க்க முடியாத அலுவலக விஷ களுக்காக அவருடைய அறைக்கு ளை அழைத்திருக்கிருர். அந்த ங்களில்கூட என் முகத்தை ஏறிட் பார்த்ததில்லே.

இவருக்கு ஏன் நான் மனைவியாகக் ...?

பருந்தாவின் கன்னங்களில் கண் ர் கோடு கிழித்தது.

''உங்க முகத்த நான் பாக்கற ங்கள்ல உலகத்திலேயே அதிக. ந்தோஷமான ஆண் போல நான் ல் பண்றேன். அந்த சந்தோ த்தை நிரந்தரமாக்கிக்க நான் ... ஆங்கிலம்.

''எனக்கு யோசிக்க அவகாசம் தரமுடியுமா?'' ப்ருந்தா கார் டயரைப் பார்த்துக் கேட்டாள்.

''பத்து வருஷம் போதுமா? உனக்காக நான் காத்திருக்கேன்.''

''பத்து நிமிஷம் போதும். ஆனு...''

''ஆனு?''

''தனியா நான் யோசிக்கணும்.''

''ஒ. கே. இதிலேருக்கிற போன் நம்பருக்கு போன் பண்ணுங்க'' விசிட்டிங் கார்டை அவளிடம் நீட்டினுன். மறுவினுடி,

ஸ்போர்ட்ஸ் கார் ஸ்டேடியத்தைப் பிரிந்து சென்றது. அவளை ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பி வைப்பதற்காக வெளியில் காத்து நின்ற ஆட்டோவை நோக்கி நடந்தாள். ஏறி அமர்ந்தாள். ''ஸ்டேஷன் பக்கம் போங்க,'' அவள் இதழ்கள் தன்னிச்சையாக அசைந்தன. — தொடரும




கூடற்கரையில் உற்சாகமாகப் பாடிக்கொண்டு வரும் ஆரம்பக் காட்சியிலிருந்து கமலோடு இருந்த நினைவுகளை மறந்து ரயிலில் சலனமின்றி உட்கார்ந்திருக்கும் அந்த இறுதிக் காட்சி வரை நினைத்து நினைத்து ரசிக்க வைக்கிறது ஸ்ரீதேவியின் நடிப்பு.

ஆதரவாக முகத்தை வருடிக் கொடுக்கிற கமலின் விரலை நக்கும் குழந்தைத்தனம், குரங்காட்டியைப் போல கமலின் இடுப்பில் சேலையை வாளாகக் கட்டி ஆட்டுவிக்கிற வெகுளித்தனம், சுப்ரமணிக்கு (அவ்வளவு பிரியமாக, செல்லமாக ஸ்ரீதேவியால்தான் கூப்பிட முடியும்!) பெல்ட் தருகிறேன் என்று ஆசை காட்டி மோசம் செய்ய அழைத்துப் போகிற நடராஜ் கூடப் போகிற அப்பாவித்தனம், இங்க் எடுக்கிறேன் என்று புத்தகங்களைக் கொட்டிக் கவிழ்த்து, கமலிடம் வாங்கிக் கட்டிக்கொண்டு, பாட்டியிடம் முறையிடுகிற கள்ளமில்லாத அந்தப் பேதைத்தனம் –

முழுக்க முழுக்க இது அவர் படம் என்கிற பிரமையை உண்டாக்கி விடுகிறார் ஸ்ரீதேவி. இவர் இந்த அளவுக்குப் பிரகாசிக்க கமலஹாசனின் ஒத்துழைப்பு ஒரு முக்கிய காரணம். ரயிலில உட்கார்ந்திருக்கிற ஸ்ரீதேவிக்கு தன்னை நினைவுபடுத்த அவர் படுகிற சிரமம் அனுதாபத்தை வரவழைக்கிறது.

'உனக்குக் குளிரல்லையா?' என்று பூர்ணம் கேட்கிறபோது 'There is a fire inside. அது எரிஞ்சுகிட்டே இருக்கு!' என்
ஸ்மிதா விரகத்தை வெளி
படுத்துகிற இடம் நய
ஆனால் வீட்டுக்கு வந்த க
லிடம் சிலுக்கு நடந்
கொள்கிற முறை நாகரி
எல்லையைக் கொஞ்ச
தாண்டிப் போய்விடவி
லையோ?

ஊட்டியை இதற்கு மு
பல படங்களில் பார்த்த
யிற்று. ஆனால் பாலு அ
வுக்கு வேறு யாரும் அ
எக்ஸ்ப்ளாய்ட் பண்ண
யிருக்கிறார்களா என்ப
தேகமே!

A film by Balu Mahen
dra என்று கடைசியி
போடுகிறார்கள். அப்படி
போட்டுக்கொள்கிற தகு
முழுவதுமாக இவருக்கே
உண்டு. அப்புறம் ஒரு வி
யம் –

கோகிலா,
அழியாத கோலங்கள்,
மூடுபனி,
மூன்றாம் பிறை
இதுதானா வரிசை, தாக்கி



எழும்பூர் ரயில் நிலையத்தின் எதிரே ஆட்டோவில் இருந்து ப்ருந்தா இறங்கினாள். அங்கே மதுரை, திருச்சி, புதுக்கோட்டை செல்ல பேருந்துகள் வரிசையாக நின்றன.

கோபாலின் சிவந்த கம்பீரத் தோற்றமும், என்னை மணக்கச் சம்மதமா என்று அவன் வழிமறித்துக் கேட்ட கேள்வியும் அவளுக்குள் சூருவளியைக் கிளப்பி விட்டிருந்தது. அவனுக்கு முடிவைச் சொல்லிவிட்டுத்தான் திருச்சி பஸ்ஸில் ஏற வேண்டும்.

சூட்கேஸ், பை, அட்டைப்பெட்டி எல்லாவற்றையும் இறக்கி ஓரமாக, மருந்துக்கடையின் படிக்கட்டில் வைத்தாள். சென்னை வாழ்க்கை முடிவடையும் நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்ற உணர்வால் அவள் இதயம் ஏனோ கனத்தது. இந்தச் சென்னைக்கு வர வேண்டிய சந்தர்ப்பம் வாழ்நாளில் அநேகமாக மறுபடியும் வராது. காவிரிக் கரையிலேயே ஆயுளை நிம்மதியாகக் கழித்துவிட வேண்டியதுதான்.

அழுக்கு மூட்டை முடிச்சுக்களைப் பக்கத்தில் கொண்டு வந்து வைத்த மடிசார் மாமி ப்ருந்தாவிடம், ''கொஞ்சம் இதப் பாத்துக்கோம்மா. போயி டிக்கெட் வாங்கியாந்திர்றேன்'' என்றாள்.

''எந்த ஊருக்குங்க?'' ப்ருந்தா கேட்டாள்.

''திருச்சிக்கும்மா''

''நானும் திருச்சிக்குத்தாங்க போறேன். எனக்கும் ஒரு டிக்கெட் சேர்த்து வாங்க முடியுமா?''

''குடு'' என்று மாமி பணத்துக்காகக் கையை நீட்டினாள்.

ரூபாய்த்தாளை எடுத்தாள். கோபாலின் விசிட்டிங் கார்டு கூடவே ஒட்டிக் கொண்டு வந்தது. மாமியிடம் ரூபாய்த் தாளைக் கொடுத்து அனுப்பினாள். விசிட்டிங் கார்டிலுள்ள தொலைபேசி எண்ணைப் பார்த்தாள். நுங்கம்பாக்கம் பகுதியைச் சேர்ந்த எண் போலத் தோன்றியது. இந்தத் தொலைபேசி இருக்கும் இடத்துக்கு இந்நேரம் அவன் போய்ச் சேர்ந்திருப்பான். என் பதிலுக்காகக் காத்திருப்பான்.

என்ன பதிலைச் சொல்லுவது?



மனைவியாகும் தகுதி ... யாது' என்று சொல்வதா? ஊஹூம். அப்படிச் சொன்னால் அவன் ரெடிமேடாகக் கைவசம் வைத்திருக்கும் பதில்களில் ஒன்றைச் சொல்லுவான். விவாதம் நீளும்.

ஒரே வரியில் வெட்டு ஒன்று துண்டு இரண்டாக, 'உங்களுக்கு மனைவியாக எனக்கு விருப்பமில்லை' என்று சொல்லிவிட வேண்டியதுதான்.

மருந்துக்கடைக்குள் தொலைபேசி தெரிந்தது. தொலைபேசியைச் சுற்றி நாலைந்து ஆண்கள்.

இந்தக் கும்பலுக்கு மத்தியில் நின்று எப்படி இந்தச் சமாச்சாரத்தைப் பேசுவது? ஒரு நொடி எரிச்சலுடன் தயங்கினாள். வேறு போனைத் தேடி அலைய முடியாது. பஸ்சுக்கு நேரமாகி விட்டது. மறைமுகமாக எப்படியாவது சொல்லிவிட வேண்டியதுதான் என்ற முடிவுடன் துணிச்சலைத், துணைக்குச் சேர்த்துக்கொண்டு கடைக்குள் நடந்தாள்.

''ஹலோ, ப்ருந்தா ஹியர்''

''சொல்லுங்க ப்ருந்தா. உங்க போனுக்காகத்தான் அவசரமா ஓடி வந்தேன். வந்து ஒரு நிமிஷம் கூட ஆகல. சொல்லுங்க.''

''I'm sorry sir... It won't work.''

''What won't work?'' முரட்டுக் குரலில் நிதானமாகக் கேட்டான்.

ப்ருந்தாவின் பக்கத்தில் நின்ற ஆண்கள் நல்ல வேளையாகக் கலைந்து சென்று விட்டார்கள். தொலைபேசியின் அருகே அமர்ந்திருந்தவர் எழுந்து யாரோ கேட்ட மருந்தைத் தேடி எடுக்க உள்ளே போனார். ஸ்ப்ரிங் போன்ற தொலைபேசி வயரை முடிந்த வரை ஒதுக்குப்புறமாக இழுத்துச் சென்ற ப்ருந்தா,

''எனக்கு அதுக்குத் தகுதி இல்லேங்க'' என்றாள்.

''தகுதியைப் பத்திக் கவலைப்பட வேண்டியது, நான், என்னோட அப்பா, அம்மா. உங்களுக்கு என்னைப் பிடிக்குதா, பிடிக்கலையா? அத மட்டும் சொல்லுங்க.''

''.........'' ஒரு நொடி மௌனத்தில் திணறினாள்.

''ஸாரி சார்... என்னை மன்னிச்சிருங்க.''

''என் பணத்தையும் சொத்தையும் கண்டு நீங்க பயப்படறீங்க. சில பணக்காரங்ககிட்ட இதயமும் உண்டு ப்ருந்தா. எனிவே தாங்க்ஸ், மனசில இருக்கிறத மறைக்காமச் சொன்னதுக்கு. பட் ஒன் திங். மனசுக்கும் கல்லுக்கும் ஒரு வித்தியாசம் இருக்கு. கல்லு என்னிக்கும் மாறும அப்படியே இருக்கும். உங்க மனசு அடுத்த நிமிஷத்தில அல்லது இருபது வருஷம் கழிச்சு மாறலாம். அந்த நம்பிக்கையோட உங்களுக்காக நான் காத்திருக்கப் போறேன். பய்.''

ப்ருந்தா எதிர்பாராத விநாடியில் தொடர்பை அறுத்துவிட்டான் கோபால்.

சுயநினைவில்லாமல் தொலைபேசிக்கு பணத்தைக் கொடுத்துவிட்டு வெளியே மூட்டை முடிச்சுக்களிடம் வந்து சிலையாக நின்றாள். ப்ளவ்ஸ் வியர்வையால் நனைந்து உடலோடு ஒட்டிப் போயிருந்தது.

திருப்பத்தில் பிரகாசமாக விளக்குகள் எரிந்த டிபார்ட்மென்டல் ஸ்டோருக்குள் அவள் பார்வை தன்னிச்சையாகச் சென்றது. உள்ளே, கத்தரிக்கப்பட்ட தலைமுடி வழிந்து நெற்றியையும் காதுகளையும் மறைக்க கொழு கொழுவென்று ஒரு குழந்தை. ஆணா, பெண்ணா தெரியவில்லை.

அந்தக் குழந்தை, உயரத்தில் இருந்த விலை உயர்ந்த கரடிக்குட்டி பொம்மையை பக்கத்தில் நின்ற அம்மாவுக்குக் காட்டி அதை வாங்கித்தரச் சொல்லிச் சிணுங்கியது.

பித்தளைத் தாம்பாளத்தில் பரப்பப்பட்ட கல்கத்தா வெற்றிலைகளின்மீது ஜர்தா பீடாக்காரன் சுறுசுறுப்பாக ஏலத்தையும் லவங்கத்தையும் எடுத்துப் போட்டான். பீடாவுக்காக அவனைச் சுற்றி ஒரு கூட்டம்.

கொழு கொழு குழந்தையையும் கரடிக்குட்டி பொம்மையையும் தூக்கிக் கொண்டு டிபார்ட்மென்ட் ஸ்டோருக்குள்ளிருந்து வெளிப்பட்ட பெண் கருப்பு அம்பாசடர் காரிடம் நடந்தாள். காருக்குள் ஸ்டியரிங்கைப் பற்றியிருந்த டேடியைப் பார்த்ததும் உற்சாகக் குழி பறித்தது.

ஒரு கிளார்க்கிற்கோ ஆசிரியருக்கோ நான் குழந்தையைப் பெற்றுக் கொடுத்தால் அதன் முகத்தில் இப்படி ஒரு சிரிப்பை வரவழைக்க முடியுமா?

''வா ஏறி உள்ள உக்காந்துக்கலாம். பஸ் புறப்படப் போகுது'' மூச்சு வாங்க ஓடிவந்தாள், மாமி.

டிக்கெட்டையும் பாக்கிச் சில்லறையையும் அவளிடமிருந்து வாங்கிய ப்ருந்தா, ''நீங்க போங்கம்மா, நான் இந்த பஸ்ல வரல'' என்றாள்.

மாமி அவளை ஏற இறங்கப் பார்த்துவிட்டு மூட்டை முடிச்சுக்களைத் தூக்கினாள்.

மறுநாள். சென்னைக்கு வெளியே கடற்கரை ஓரத்திலுள்ள ரெஸ்டாரென்ட். விலகி விலகிக் கிடந்த மேஜைகளுக்கு மேலே வண்ணக் குடைகள் விரிந்திருந்தன. ஆட்கள் இல்லாமல் அநேகமாக எல்லா மேஜையுமே காலி. கோடியில் தனியாகக் கிடந்த மேஜையில் ப்ருந்தா அமர்ந்திருந்தாள். அவளுடைய கசப்பான காபி டிகாக்ஷனுக்கு பாலையும், சர்க்கரைத் துண்டங்களையும் சேர்த்தான் கோபால்.

லாவண்யாவிடம் கதையைச் சொல்லி முடித்த ப்ருந்தா, ''எல்லாரும் காதலிச்ச பிறகு கல்யாணம் பண்ண முடிவு செய்வாங்க. நாங்க கல்யாணம் பண்ணிக்க முடிவு செஞ்சுட்டு காதலிக்க ஆரம்பிச்சோம். டெய்லி பீச்ல சுத்தினோம். ஒரே வாரத்தில என்னை ஆயிரக்கணக்கில அவர் போட்டோ எடுத்தார்'' என்றாள்

''பழையபடி வேலைல சேர்ந்திட்டீங்களா?'' என்று லாவண்யா கேட்டாள்.

''இல்லே. அடையாறு பங்களாவுக்கு அவர் என்னை அழைச்சுக்கிட்டுப் போனார். அம்மாவுக்கும் அப்பாவுக்கும் அறிமுகம் பண்ணி வெச்சாரு. என்னை அவங்களுக்கு ரொம்ப பிடிச்சிருச்சு. ஏழு வருஷமா கல்யாணமே வேண்டாம்னு சொல்லிக்கிட்டிருந்த மகன் கல்யாணம் பண்ணிக்கத் திடீர்னு சம்மதிச்சதுக்கு என்னோட அழகுதான் காரணம்னு நினைச்சு என்னை நன்றி

யோட வரவேற்றாங்க. ரிஜிஸ்டரார் பங்களாவுக்கு வந்து கல்யாணத்த அமைதியா நடத்தி வெச்சாரு. அப்புறம் தாஜ்ல ரிஸப்ஷன்.''

''கல்யாணத்துக்கப்புறம் இந்த பங்களாவுக்கு வந்திட்டீங்க, இல்லையா?''

''நோ. ஒரு வருஷம் அடையார்ல தான் இருந்தோம். அப்புறம்தான் இங்க வந்தோம்.''

''தனியா பிரிஞ்சு வந்ததுக்கு என்ன காரணம்?''

''தகராறு எதுவும் கிடையாது. கல்யாணம் ஆன நாள்லேர்ந்து இன்னிக்கு வரைக்கும் அத்தையும் மாமாவும் என் விருப்பத்துக்கு மாரு பேசினதுமில்லே நடந்ததுமில்லே. ஆனா அவங்களுக்கு என்மேல ஒரே ஒரு வருத்தம்.''

''எதுக்கு?''

''பணத்தைச் சேர்த்தவங்க அடுத்தபடியா தேடறது வாரிசை தான். அத என்னால தரமுடியலியேங்கற வருத்தம் அவங்களுக்கு இருந்தது. நான் ப்ரெக்னென்ட் ஆன விஷயத்தை முதல்ல அவங்ககிட்டதான் சொன்னேன். ரொம்ப சந்தோஷம் அவங்களுக்கு. மாமாவுக்கு கண்ணெல்லாம் கலங்கிருச்சு. ரெண்டு பேரும் பிறக்கப்போறது ஆண்தான்னு அடிச்சுச் சொன்னாங்க. ஆனா நான் மட்டும் பெண்ணாயிருக்கும்னு நினைச்சேன். கடைசில ரெண்டுமில்லாம போயிருச்சு'' என்றபோது ப்ருந்தாவின் விழிகள் கலங்க, பேச்சுத் தடைப்பட்டது.

— தொட...

---

டைரக்டர் எஸ்.எஸ். தேவதாஸ் (தேவிகாவின் கணவர்) வீட்டில் (இப்பொழுது டைரக்டர் என். எஸ். மணியம் வீடும் அதுதான்) 'நினைவெல்லாம் நித்யா' படத்தின் படப்பிடிப்பு நடந்துகொண்டிருந்தது. கார்த்திக், திலீப், ஜெமினி கணேசனின் மகள் ஜிஜி (ஜெயலட்சுமி) ஆகியோர் சம்பந்தப்பட்ட காதல் காட்சியை ஸ்ரீதர் இயக்கிக் கொண்டிருந்தார்.

ஜிஜி அதிக உயரம் இல்லை. மெலிந்த உடல். பார்வைக்கு அசப்பில் ரேகா போலத் தோற்றமளிக்கிறார். ஒரு ரூமைப் பார்த்து கார்த்திக், ஓடிப்பிடிச்சு விளையாடலாமே என்றார்.

'விளையாட்டு மட்டுந்தான்' என்ற வசனத்தை ஜிஜி சொல்லி நடிக்க வேண்டும். சிரிக்காமல் நடித்தார். உடன் டைரக்டர் ''ஸ்மைல் பண்ணலேன்னா இயற்கையாக இருக்காது. எங்கே சிரித்து நடி'' என்றார்.

மறுபடியும் பழையபடியே முகத்தை வைத்துக்கொண்டிருந்தார். ஒரு ஸ்மைலுக்கு ஒரு ரூபாய் என்று கூறி டேக் என்றார். ஜிஜியும் ஸ்மைல் பண்ண ஓ.கே. என்றார் ஸ்ரீதர்.

''ஏன் சார் ஒரு டேக்கிலேயே ஓ. கே. சொல்லி விட்டீர்கள்'' என்று ஜிஜி கேட்க, ''இன்னொரு டேக்குக்கு இன்னொரு ரூபாய் கொடுக்க வேண்டுமே'' என்றார் ஸ்ரீதர்.

– அன்...




'நினைவெல்லாம் நித்யா' படத்தில் ஜிஜி

வண்ணப்படம்: ரவி

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

## சுவீதா

அபார்ஷனில் பறிகொடுத்த முதல் கரு ப்ருந்தாவின் கண் முன்னே வந்தது. "எனக்கு நல்லா ஞாபகம் இருக்கு. நான் குழந்தையா இருந்தப்ப ஸ்ரீரங்கத்தில ஒரு ஓட்டு வீட்டில குடியிருந்தோம். மழைக்காலத்தில தென்னை மரம் வீட்டு மேல சாஞ்சு விழற மாதிரி தலைய விரிச்சுக்கிட்டு ஆடும். மின்னல் இடியோட காற்றும் மழையும் கலந்தடிக்கும்போது என்னை இடுப்பில தூக்கிக்கிட்டு வெளில வந்து திண்ணை மேல அம்மா நிப்பாங்க. நான் வாழ்க்கைல எதைக் கண்டும் பயப் படக்கூடாது, ரொம்ப தைரியமா இருக் கணுங்கறதுக்காக அப்படிச் செய்வாங் களாம். எங்கம்மாவோட கை இப்பக் கூட என் உடம்பைச் சுத்திக்கிட்டிருக் கிற மாதிரி ஃபீல் பண்றேன். எனக்கும் ஒரு குழந்தை பிறந்தா அதே மாதிரி தைரியம் ஊட்டி வளக்கணும்னு மன சுக்குள்ள முடிவு பண்ணிருந்தேன். ஆனா என் எண்ணம் நிறைவேறாமப் போயிடுச்சு."

"உங்க குடும்ப வாழ்க்கையைப் பத்திக் கொஞ்சம் சொல்லுங்க, ப்ருந்தா" என்றாள், லாவண்யா.

"குடும்ப வாழ்க்கை... அவரைச் சந்திக்கறதுக்கு முன்னால என் வாழ்க்கை அமைதியா இருந்தது. சம்பவங்கள் இல்லாம ஒரு மாதிரியா டல்லடிச்சுக்கிட்டு. கல்யாணத்துக்குப் பிறகு அவருக்கு நல்ல மனைவியா வாழ் றதத் தவிர வேற எதுவுமே எனக்கு உயர்ந்ததாத் தெரியல, நான் ஏழாவது படிக்கும்போது, ஜோசியம் சொல்ற ஒரு கிழவிகிட்ட என்னைக் கூட்டிக்கிட்டுப் போனாங்க. நான் பிற்காலத்தில பெரிய ராணியாகி ராஜாக்களையும் ராணிகளையும் சந்திப் பேன்னு அவ சொன்னா. உடனே என்

னோட அத்தை, சினிமாவில ராணி வேஷம் போட்டுக்கிட்டு ஆடப்போறா போல இருக்குன்னு அதுக்கு அர்த்தம் சொன்னாங்க. நான் இந்த வீட்டு மருமகளான அன்னிக்கு நிஜமாவே ராணி ஆயிட்டதைப்போல உணர்ந் தேன்.

நான் என்ன பேசினாலும் என் கணவர் அன்பா கூர்ந்து கேப்பாரு. என் அபிப்பிராயங்களை விலை உயர்ந் ததா மதிச்சாரு. ஒரு புது மனைவி மனசில ஆசைப்படறதெல்லாம் நான் வாயைத் திறந்து கேக்காமலேயே எனக்குக் கிடைக்க ஆரம்பிச்சது. மொத்தத்தில குடும்ப வாழ்க்கை ரொம்ப ஹாப்பியா இருந்தது. எனக் கும் அவருக்கும் எந்த விஷயத்திலயும் கருத்து வேறுபாடு ஏற்பட்டதில்லே. என் விருப்பத்துக்கு விரோதமா அவர் எதுவும் செஞ்சதில்லே. அவர் இறந்த அன்னிக்கு எங்களுக்குள்ள ஏற்பட்ட சின்ன வாக்குவாதத்துக்குக்கூட நான் தான் காரணம். நான் வாயை மூடிக் கிட்டு இருந்திருக்கலாம்."

"ஆக்சுவலா அன்னிக்கு என்ன நடந்ததுன்னு சொல்ல முடியுமா?"

"சொல்றேன். ஆனா நீங்க அதை யெல்லாம் பத்திரிகைல எழுத முடி யாது. போலீஸ் இன்வெஸ்டிகேஷ னுக்கு அது இடைஞ்சலாப் போயிடும்."

"அப்படி உங்களைக் கேக்காம எதையும் நான் எழுதிரமாட்டேன்,



ப்ருந்தா, மேட்டரை உங்ககிட்ட காட்டிட்டுத்தான் அச்சுக்குக் குடுப்பேன். அதனுல நீங்க கவலைப்படாம சொல்லலாம்.''

''அவர் இறந்த அன்னிக்குச் சாயங்காலம் அஞ்சரை மணிக்கு புரொட்யூசர் நாச்சியப்பன் இந்தப் பங்களாவுக்கு வந்தார். என் ஹஸ்பெண்ட் அவரோட ரொம்ப நல்லா, கலகலப்பா, சிரிச்சுப் பேசிக்கிட்டிருந்தார். He was so alive... so vibrant. அப்படி இருந்தவருக்கு இரண்டு மணி நேரத்துல முடிவு வந்திருச்சு.''

''புரொட்யூசர் எதுக்காக வந்தாரு?''

''எல்லாம் ஃபைனன்சுக்காகத்தான். நாச்சியப்பன்கிட்ட ஒரே நேரத்தில பத்துப் படம் எடுக்கற அளவுக்குப் பணம் இருக்கு. ஆனு அவர் சொந்தப் பணத்தில படம் எடுக்கறதில்லே. கடன் வாங்கித்தான் எடுப்பார். வாங்கின கடனையும் ஒழுங்கா வட்டியோடத் திருப்பிக் கொடுக்கறதில்லே. படத்தில வேலை பாக்கற ஆர்ட்டிஸ்ட், டெக்னிஷியன்களுக்கும் பேசினபடி சம்பளம் குடுக்கறதில்லே.''

''அப்புறம் எதுக்காக உங்க கணவர் அவருக்குப் பணம் குடுத்துக்கிட்டிருந்தார்?''

''நடிகைகள்னு என் கணவருக்கு ஒரு பலவீனம்னு நாச்சியப்பன் உங்ககிட்டச் சொல்லியிருப்பாரு...''

''ஆமா. அப்படித்தான் சொன்னரு. எப்படி அவ்வளவு சரியாச் சொல்றீங்க?''

''தெரியும். அவர் சொல்றதை நம்பாதீங்க. ரொம்பப் பொல்லாதவர். என்னையும் ஒரு தடவை ப்ளாக்மெயில் செய்யப் பாத்தார்.''

''எப்படி?''

''எங்க கார் டிரைவரோட என்னைச் சம்பந்தப்படுத்திக் கேவலமான ஒரு செய்தியை மஞ்சள் பத்திரிகைல போட்டார். ஆனு பத்திரிகை கடைக்கு வரல. என் ஹஸ்பெண்ட் எல்லாத்தையும் வாங்கி எரிச்சுட்டார்.''

''நாச்சியப்பனுக்கு உங்க மேல என்ன கோபம்? என் அப்படி ஒரு செய்தியை வெளியிட்டார்?''



''அவர் ஒரு ஃப்ராட், அவருக்கு எந்த உதவியும் செய்யாதீங்கன்னு என் ஹஸ்பெண்ட் கிட்டச் சொன்னேன். அது அவர் காதுக்கு எப்படியோ போயிடுச்சு.''

''நீங்க சொன்னதைக் கேட்டு அவருக்கு பணம் குடுக்கறத நிறுத்திட்டாரா, மிஸ்டர் கோபால்?''

''ஊஹூம். அவர் குடுத்துக்கிட்டுத்தான் இருந்தார் கடைசிவரைக்கும்.''

''அது ஏன்?''

''நாச்சியப்பனோட அரசியல் செல்வாக்கு.''

''அஞ்சரைக்கு வந்தவரு எவ்வளவு நேரம் உங்க கணவரோட பேசிக்கிட்டிருந்தாரு?''

''ஆறரை வரைக்கும். ஷூட்டிங்க்காக வெளிநாட்டுக்குப் போகும்போது கண்டிப்பா கூட வரணும்னு என் ஹஸ்பெண்டை அழைச்சார். அவரும் சரின்னார். அது எனக்குச் சுத்தமாப் பிடிக்கலே.''

''ஏன்?''

''நடிகைகளோட என் கணவர் வெளிநாடு போறத நான் விரும்பல. ப்ரொட்யூசர் போனதும் என்னிக்கும் இல்லாம குஷியா விசிலடிச்சுக்கிட்டு என் ரூமுக்கு வந்தார். நாச்சியப்பனோட நீங்க வெளிநாட்டுக்குப் போகக்கூடாதுன்னேன். என்னிக்குமே என் கிட்டக் கோபமாப் பேசாதவர் திடீர்னு வெறிபிடிச்ச மாதிரி நீ யார்டீ என்னைக் கேக்கறதுக்குன்னார். பூட்ஸ் காலால இந்த இடத்தில உதைச்சு போடீ வெளீலன்னு கத்தினார். என் கையில சிக்கின ஹேர்பிரஷ்ஷையும் பேப்பர் பாக் நாவலையும் அவர்மேல விட்டெறிஞ்சுட்டு வெளியேறிட்டேன்.''

''நேரே கல்பனா வீட்டுக்கு வந்திட்டீங்க?''

''நோ நோ. காரை எடுத்துட்டு எங்க போறதுன்னு தெரியாம தெருத்தெருவா சுத்தினேன். ஒரு இங்கலீஷ் படம் பார்த்தேன். திடீர்னுதான் கல்பனா ஞாபகம் வந்தது. அவ வீட்டுக்குப் போய்ச் சேரும்போது, மிட்நைட். ஒரு மணிக்கு மேல இருக்கும். அப்புறம் நடந்ததை கல்பனா உங்ககிட்ட சொல்லியிருப்பான்னு நினைக்கிறேன்.''

''சொல்லிட்டாங்க.''

''நிச்சயமா அவர் தற்கொலை பண்ணல, லாவண்யா. அது மட்டும் எனக்கு நல்லாத் தெரியும். யாரோ கொலை பண்ணியிருக்காங்க. யார், எதுக்காகப் பண்ணியிருப்பாங்கன்னு என்னால ஊகிக்க முடியலே. என்னஎனக்குத் தெரிஞ்சவரைக்கும் என் கணவருக்கு விரோதிகளே கிடையாது.''

''பாங்களூர்ல உங்களுக்கு வேண்டியவங்க யாராவது இருக்காங்களா?''

லாவண்யாவின் இந்தக் கேள்வி பிருந்தாவை உசுப்பிவிட்டது. ''இல்லையே, ஏன்?'' என்றாள் சற்றே திடுக்



கிட்டவளாக.

''பாங்ளூருக்குப் போக பெட்ரோல் பங்க்ல வழி கேட்டீங்களாமே?''

''என்னிக்கு?''

''மிஸ்டர் கோபாலோட கோபிச்சுக்கிட்டு இந்த பங்களாவை விட்டு வெளியேறின அன்னிக்கு. கல்பனு வீட்டுக்குப் போறதுக்கு முன்னல.''

''நான் யார்கிட்டயும் அப்படி வழி விசாரிக்கல. பாங்ளூர்ல எனக்கு என்ன வேலே?'' என்றப்ருந்தா சிறிது யோசனைக்குப் பின், ''பேட்டிய இத்தோட முடிச்சுக்கலாமா? சொன்னதை வெச்சு ஏதாவது எழுதுங்க'' என்ருள்.

ப்ருந்தாவின் பேச்சுத் தொனியில் மெலிதான கோபம் கலந்த சின்ன மாறுதல் தட்டுப்பட்டது.

**ப்யூ**ட்டி சலூனுக்குள் தொலைபேசி ஒலித்தது. கல்பனு ஓடிப்போய் ரிசீவரைக் கையில் எடுத்து ''ஹலோ ப்ருந்தா, இன்னிக்கு என்னுல அங்க வரமுடியல. நாளைக்கு நான் வர்றேன்'' என்ருள்.

''லாவண்யான்னு ஒரு பொண்ணை என்கிட்ட அனுப்பினயே...''

''ஆமா''

''அவ நிஜமா ப்ரெஸ் ரிப்போர்ட்டர்தானு?''

''ஆமா, ஏன் அப்படிக் கேக்கறே?''

''எனக்கென்னமோ சந்தேகமா இருக்கு.''

''என்ன சந்தேகம்?''

''போலீசோட கையாள்னு நினைக்கறேன்.''

''சேசே, அதெல்லாம் இல்லே. அவ பாலம் பத்திரிகைல வேலை பார்க்கிரு.''

''புருஷனேட கோபிச்சுக்கிட்டு வீட்டைவிட்டு வெளியேறின அன்னிக்கு பாங்ளூருக்குப் போக பெட்ரோல் பங்க்ல வழி கேட்டியான்னு ஒரு கேள்வி கேட்டா. எனக்குத் தூக்கி வாரிப் போட்டிருச்சு.''

''ஏன்?''

''போலீஸ் இன்ஸ்பெக்டரும் அதே கேள்விய என்கிட்ட கேட்டார்.''

''சரி, போலீசோட கையாளாத்தான் இருக்கட்டுமே. நீ எதுக்காகப் பயப்படறே?''

''கொலைப் பழிய எம்மேல போடறதுக்காகக் கேசை ஜோடிக்கிருங்களோன்னு பயப்படறேன், கல்பனு.''

''பைத்தியக்காரி மாதிரி பேசாத. எங்கேர்ந்து பேசறே?''

''ஸ்டர்லிங்.''

''நான் நேர்ல வர்றேன்.''

கல்பனு போனைக் கீழே வைத்தாள்.

— தொடரும்



## பழக்கமான வழக்கு!

இத்தாலிய அரசாங்கம் சமீபத்தில் வெளியிட்ட ஐம்பதாயிரம் லைர் கரன்ஸி நோட்டுகள் செல்லாதவையாக அறிவிக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தி போராடி வருகிருளாம் மரிலினு இன்னொசென்ஸி என்ற இளம் பெண். ''இந்தக் கரன்ஸி நோட்டுகளில் அச்சிடப்பட்டுள்ள முகம் என் முகத்தைப் போலவே இருக்கிறது. இது எனக்கும் பிடிக்கவில்லை, என் வருங்காலக் கணவருக்கும் பிடிக்கவில்லை'' என்கிருள் இவள்.

சில ஆண்டுகளுக்கு முன் ஓவியர் ஒருவர் மரிலினுவின் படத்தை வரைந்துகொண்டு சென்ருராம் அவளுடைய அனுமதியுடன். ஐம்பதாயிரம் லைர் நோட்டுக்கான டிசைனுக்காக என்று சொல்லவில்லையாம். தன் உருவப் படத்தை அனுமதியின்றி பயன்படுத்திவிட்டார் ஓவியர் என்பது மரிலினுவின் குற்றச்சாட்டு.

– எம். ஆர். மனோகர்

# தொட்டதெல்லாம் பொன்னாகும்

உடற்பயிற்சியை முடித்த ராம் வியர்வை ஆறியபின் குளிக்கலாம் என்று லுங்கியைக் கட்டிக்கொண்டு மேலே சட்டை இல்லாமல் வராந்தாவுக்கு வந்தான்.

தோட்டத்துச் செடிகளின் மேல் காலை வெய்யில் பிரகாசமாகச் சிதறியிருந்தது. பிரம்பு நாற்காலியில் சாய்ந்தபோது காற்று இதமாக இருந்தது. ஏன் இரண்டு நாட்களாக லாவண்யாவிடம் இருந்து போனே வரவில்லை என்று எண்ணினான்.

வேலைக்காரி கண்ணாடித் தம்ளரில் மூடி எடுத்து வந்த ஹார்லிக்சை வாங்கிப் பருகினான். ஆங்கிலப் பத்திரிகையைக் கையில் விரித்தபோது புல்லட் சப்தம் நெருங்கி வந்தது.

செந்திலாக இருக்க வேண்டும், செய்தி ஏதாவது கொண்டு வருவார் என்று எண்ணினான். செந்திலின் பைக் 'கேட்'டுக்கு வெளியே தோன்றியது.

போர்ட்டிக்கோவில் நின்று ராமிற்கு விறைப்பாக ஸல்யூட் அடித்துவிட்டு செந்தில் சுறுசுறுப்பாகப் படியேறி வந்தார்.

பத்திரிகையிலிருந்து பார்வையைப் பிரிக்காமல் ராம், ''உக்காருங்க'' என்றான். அவசர அவசரமாக மிச்சப் பக்கங்களைப் புரட்டி பத்திரிகையை டீபாயில் தள்ளினான். ''என்ன டாக்டரைப் பாத்தீங்களா?'' என்று கேட்டபடி எழுந்தான். ''ஒன் மினிட்'' சொல்லிவிட்டு உள்ளே போனான். செந்தில் பத்திரிகையைக் கையில் எடுத்தார். ராம் சட்டையணிந்து பொத்தானை மாட்டிக்கொண்டு வந்து மறுபடியும் எதிரே அமர்ந்தான்.

''பாத்திட்டேன் சார். அவரத் தனியாப் பாக்கறதுதான் ரொம்ப சிரமமாப் போயிருச்சு சார். அவர் வீடு...''

''காலேஜ் ரோட்டுக்குப் பக்கத்தில இருக்கு.''

''ஆமா சார். ஆனா வீட்டுக்குப் போயி விசாரிக்க வேண்டாம்னு பாலிக்ளினிக்குக்கு ரெண்டு தடவை போனேன்.''

''அது எங்க இருக்கு?''

''புர்ஷ்வாக்கத்தில சார். அங்கேயும் பாக்க முடியல. காத்தபெருமாளைப் பாக்க ரெண்டு நாளைக்கு ஒரு தடவை அடையாறுக்குப் போவாராம். அங்கே போயி விசாரிச்சா நல்லா இருக்காது.''

''பதிலும் சரியா வராது.''

''கடைசில ஜி. எஸ். செட்டி ரோட்ல இருக்கிற கிளப்ல புடிச்சேன், சார்.''

''அங்கே டெய்லி வருவாராமா?''

''ஒரு கான்ஸ்டபிள் அந்தத் தகவலைக் குடுத்தார். நேத்து நைட் பத்து மணிக்கு அந்தக் கிளப்புக்குப் போனேன். நாலாவது மாடிக்கு மேல மொட்டை மாடில தனியா உக்காந்து ட்ரிங்ஸ் சாப்டுக்கிட்டிருந்தார். நான்




—சவீதா—



''பத்து ரூபாய் நோட்டை பேண்ட்ல வெச்சி மறந்து அந்த லாண்டிரில போட்டுட்டேன். நல்ல காலம், சலவைல இருந்து வந்தும் பணம் பாக்கெட்லேயே இருக்கு!''

''அதானே பார்த்தேன்! அந்த லாண்டிரிக்காரன் பேண்ட்ல இருக்கற அழுக்கையே எடுக்கமாட்டானே, பணத்தையா எடுக்கப்போறுன்!''

*– வெ. சீநாராயன்*

மஃப்டிலதான் போனேன். விஷயத்தைச் சொன்னேன்.''

''மிரண்டாரா?''

''இல்லே சார். ரொம்ப நிதானமா பேசினுர். உங்களுக்கு நான் எந்த வகையில உதவ முடியும்னு கேட்டார். காத்தபெருமாளோட ஃபாமிலி டாக்டர்ங்கற முறைல உங்ககிட்ட சில கேள்விகளைக் கேட்கணும்னேன். கேளுங்கன்னுர். ஆரம்பத்தில கேட்ட சாதாரணக் கேள்விகளுக்கு மளமளன்னு பதில் சொல்ல ஆரம்பிச்சார். நீங்க கேக்கச் சொன்ன மெய்ன் கொஸ்டினுக்கு வந்தப்ப வாயை மூடிட்டார்.''

''என்ன சொன்னுர்?''

''மிஸ்டர் கோபாலுக்கு அப்நார்மல் செக்ஸ் பிஹேவியர் ஏதாவது உண்டான்னு கேட்டேன். தயங்கினுர். எதுக்காக அதை நீங்க தெரிஞ்சுக்கணும்னுர்.''

''ஸ்டர்லிங் பங்களாவிலேர்க்கிற அண்டர்கிரவுண்ட் செக்ஸ் அறையைப் பத்திச் சொல்லிட்டீங்களா?''

''இல்லே சார்.''

''அவருக்குக்கூட தெரிஞ்சிருக்கும்.''

''நான் அதையெல்லாம் சொல்லல சார். மிஸ்டர் கோபாலுக்கு ஒருவேளை அசாதாரண செக்ஸ் பசி இருந்திருக்கலாம், அதனுல பலதரப்பட்ட பெண்களோட தொடர்பு வெச்சிருந்திருக்கலாம், பொம்பளைத் தகராறு கொலைல முடிஞ்சிருக்கலாமனேன். ஒரு நிமிஷம் பேசாம இருந்தார்.

குள்ள ஊத்தினுர். இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்லணும்னு காத்தபெருமாள்கிட்ட அனுமதி வாங்கணும்னுர். எதுக்கு சார்னு நான் கேட்டேன். சட்டம் எப்படி வேணும்னுலும் இருக்கலாம். ஃபாமிலி டாக்டர்ங்கற முறைல சில ரகசியங்களைக் காப்பாத்த வேண்டியது என் கடமை. மிஸ்டர் கோபால் என்னேட முன்னுள் பேவுண்ட். அவர் உடம்பில இருந்த பலவீனங்களை நீங்க தெரிஞ்சுக்கணும்னு அவர் ஃபாமிலி கிட்ட முதல்ல நீங்க பர்மிஷன் வாங்கிக்கிட்டு அப்புறம் என்கிட்ட வர்றது தான் முறைன்னுர்.''

உடனே ராம், ''அப்நார்மல் செக்ஸ் பிஹேவியர் உண்டான்னு கேட்டதுக்கு இல்லேன்னு ஒரே வார்த்தைல பதில் சொல்லாம, காத்தபெருமாள் கிட்ட பர்மிஷன் வாங்கிட்டு வான்னு சொன்ன என்ன அர்த்தம், மிஸ்டர் செந்தில்?''

''நீங்க நினைச்சது கரெக்ட் சார். கோபால் கிட்ட கோளாறு இருந்திருக்கு.''

''வேற என்ன சொன்னுர்?''

''நான் குடுக்கற தகவல் உங்க இன்வெஸ்டிகேஷனுக்கு உதவலாம், உதவாமப் போகலாம். அது வேற விஷயம். ஆனு சொல்ற விஷயம் உங்க டிபார்ட்மென்ட் மூலமா பத்திரிகைல வந்தா அது காத்தபெருமாளோட குடும்ப கௌரவத்தைப் பாதிக்கும். அத அவர் விரும்பமாட்டார். இந்தியாவிலேர்க்கிற பத்து பெரிய பணக்காரங்களைப் பட்டியல் போட்டா அதுல நிச்சயமா காத்தபெருமாளோட பெயர் இருக்கும். டெல்லி வரைக்கும் அவருக்கு செல்வாக்கு இருக்கு. ஐ. ஏ. எஸ்., ஐ. பீ. எஸ். ஆபீசர்கள் லாம் அவருக்கு சர்வ சாதாரணம்.

''மிரட்டற தோரணை இருந்தது. கடைசில சொன்னுர், மிரட்டறதா நினைக்காதீங்க, ஃபாக்ட்சைச் சொன் னேன்னுர்.''

''அப்புறம் நீங்க என்ன சொன் னீங்க?''

''பெரியவர் எனக்குச் சகல உரிமைகளையும் கொடுத்திருக்கார், கொலையாளியைக் கண்டுபிடிக்க எங்க டிபார்ட்மென்ட் எடுத்துக்கற எல்லா முயற்சிகளுக்கும் அவருடைய முழு ஒத்துழைப்பையும் தர்றதா உறுதி சொல்லிருக்கார், அதனுல நீங்க தயங்காம பதில் சொல்லலாம்னேன். எதுக்கும் மசியல. என்னை நீங்க விசாரிக்கிறது பெரியவருக்குத் தெரியுமான்னு கேட்டார். தெரியாதுன்னேன். ஒரு வார்த்தை சொல்லிக்கறது நல்லதில்லையான்னுர். சரி, பெரியவர் கிட்ட பேசிட்டு வர்றேன்னேன். ஆமா நீங்களே கேட்டிருங்க, நான் கேக்கக்

டேன்.''

''அப்போ இன்னிக்கு அடையாறு போறீங்களா?''

''அதான் கன்ஸல்ட் பண்ணிட் டுப் போகலாம்னு வந்தேன் சார்.''

''போயி ஃபார்மாலிடிக்காக ஒரு வார்த்தை சொல்லிருங்க. டாக்டரை விசாரிக்காதீங்கன்னு சொல்லப் போறுர்?''

செந்திலின் புல்லெட் 'கேட்'டுக்கு வெளியே நகர்ந்ததும் ராம் குளிப்பதற்காக எழுந்தான். ஆட்டோ வந்து நிற்பதைப் பார்த்ததும் நின்றுன்.

லாவண்யாவா! இவ்வளவு அதிகாலையில் எதற்காக வருகிறுள் என்று



ராமேசுவரத்தில் முதல் இரவு வைத்துக் கொள்ளலாமா?

ராமேசுவரத்தில் முதல் இரவு வைத்துக் கொள்ளலாமா? ராமேசுவரம், செய்த பாவங்களைப் போக்க பக்தர்கள் வரும் புண்ணியஸ்தலம். சிவபக்தனை ராவணனைக் கொன்றதும் பிடித்துக்கொண்ட பிரமஹத்தி தோஷத்தைக் கழிக்க ராமன் பூஜை நடத்தி சிவனை வழிபட்ட இடம். மக்கள் செல்வம் இல்லாதவர்களுக்கு நாக தோஷம் இருக்கலாம் என்பது ஐதிகம். நாகதோஷம் விலகிப் போக சர்ப்ப சாந்தி செய்யவும் ராமேசுவரம்தான் வரவேண்டும்.

பாவங்களைக் கரைத்துப் போக்கும் ஸ்தலத்தில் பவித்திரமான கரு உருவாகக் கூடாது என்ற நம்பிக்கையில் ராமேசுவரத்தில் முதலிரவு வைத்துக்கொள்ளக்கூடாது என்ற பேச்சு நிலவலாம்.

ராமேசுவரம் கோவிலில் திருமணங்கள் நடப்பதில்லை. காரணம் ராமேசுவரம் பாவத்தைக் கழிக்கும் ஸ்தலம் என்பதுதான்.

அப்படியென்றால் ராமேசுவரத்தில் திருமணங்களே நடப்பதில்லையா?

உள்ளூர்க்காரர்களுக்கு அந்த நம்பிக்கை பொருந்துவதில்லை. உள்ளூர்க்காரர்களும் இதைக் கண்டுகொள்வதில்லை. காரணம், திருமணம் வைத்துவிட்டு முதலிரவு வைக்கக்கூடாது என்பது ராமேசுவரத்தில் வசிக்கும் அனைவருக்கும் பொருந்தாதே!

— பிஃமி

ஆச்சரியத்துடன் பார்த்தான்.

பச்சை காட்டன் புடவை. பச்சை ப்ளவ்ஸ். இதழ்களில் சிவப்புப் புன்னகை.

''மிஸஸ் ப்ருந்தா கோபாலை இன்டர்வியூ பண்ணிட்டியா?''

''ம். நேத்தே முடிச்சிட்டேன்.''

''எப்படிப் பேசினாங்க?''

''நம்பற மாதிரி''

''அப்போ அவுங்க சொன்னதை நீ நம்பலியா?''

''கல்பனா சொன்னதைப் போ அவ ஆர்தடாக்ஸ் டைப்தான். அதுல சந்தேகமில்லே. புருஷன் மேல அன்பும் மரியாதையும் வெச்சிருந்திருக்காங்க. அவர் இறந்தது அவங்க மனசை இன்னும் அழுத்திக்கிட்டிருக்கு ஆனா...''

''ஆனா?''

''ரெண்டு விஷயம் அவுங்க மேல எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. ஒண்ணு, அவுங்க படுக்கைக்குக் கீழே இந்த சிகரெட் துண்டு கிடந்தது.''

கைப்பைக்குள்ளிருந்து எடுத்த காகிதப் பொட்டலத்தைப் பிரித்தாள், லாவண்யா. பாதி எரிந்த சிகரெட் துண்டைப் பார்த்தான்.

''பாருங்க, சிவப்பா லிப்ஸ்டிக் கறை. கல்பனா குடிச்ச சிகரெட் ... கல்பனா அந்தப் படுக்கை அறைக்குள்ள வந்ததேயில்லேன்னு சொல்றாங்க.''

பரிசுக் கேள்வி 2: சிகரெட் துண்டில் இருந்த லிப்ஸ்டிக் கறை யாருடைய இதழ்களுக்குச் சொந்தமானது?

''வேற என்ன சந்தேகம்?''

''வீட்டை விட்டு ஓடின அன்னிக்கு பெட்ரோல் பங்க்ல பங்களூருக்கு வழி கேட்டீங்களான்னு கேட்டதும் ஸ்டன் ஆயிட்டாங்க. பங்களூருக்கு எதுக்காக வழி கேக்கணும், அங்கே யார் இருக்காங்கன்னு கோபமா கேட்டாங்க. அதிலேர்ந்து அவுங்க நிச்சயமா பங்களூருக்கு ஓடறதுக்காக வழி கேட்டிருக்காங்கன்னு தெரியுது. அப்புறம் வயிறு வலிச்சிருக்கும். அவசரத்துக்காக கல்பனா வீட்டுக்

குப் போயிருப்பாங்க. அபார்ஷன் ஆகியிருக்கு.''

''நான் எப்பவோ உன்கிட்ட சொன்னதை என்கிட்ட வந்து திருப்பிச் சொல்ற லாவண்யா.''

''லிஸ்ட் ஆஃப் ஸஸ்பெக்ட்ஸ்ல ப்ருந்தாவையும் சேர்த்திர வேண்டியதுதான்'' என்ற லாவண்யா கைப்பையிலிருந்த பாலம் இதழைக் கையில் எடுத்தாள். ராமிடம் நீட்டினுள்.

அவன் அதை வாங்கி, ''சிவப்பு ரோஜா சிந்திய கண்ணீர் - உண்மைக் கதை'' என்று வாசித்தான். ''இதுல என்ன இருக்கு லாவண்யா?'' என்று கேட்டான்.

''க்ளூ இருக்கு. கமலான்னு ஒரு பெண். அவ எப்படி ரெட் ஏரியாவுக்கு வந்து சேர்ந்தாங்கறதக் கதையாச் சொல்ரு. அவ இந்தத் தொழிலுக்கு வந்து சேர்ந்ததுக்கு ரெண்டு பணக்காரப் பசங்கதான் காரணம்னு இதுல சொல்ரு. அவ மறைமுகமா கோபாலேயும் விக்ரமையும் குறிப்பிடற மாதிரித் தெரியுது.''

ராம் சிரித்தான். ''அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்ங்கற மாதிரி இருக்குது நீ சொல்றது'' என்ருன்.

''இல்லே ராம். நல்லா படிச்சுப் பாருங்க. ரெண்டு பேர்ல ஒருத்தன் பெரிய கோடீஸ்வரனின் ஒரே வாரிசுன்னு சொல்ரு. இன்னொருத்தன் குறுந்தாடி வெச்சிருப்பான்னு சொல்ரு. குறுந்தாடி வெச்சவன் காத்தபெருமாளோட ஃபாமிலி டாக்டரோட ஸன் விக்ரம்தான்.''

''அவனே நீ பாத்திருக்கயா?''

''கோபாலும் அவனும் கட்டிப் பிடிச்சிக்கிட்டிருக்கிற மாதிரி ஒரு போட்டோ அவுங்க வீட்டில இருந்தது.''

''இந்தப் பெண் யாரு?''

''சாலிகிராமத்தில இருக்கு. அட்ரஸ் ஆபீஸ்ல இருக்கு. மத்தியானம் போன்ல சொல்றேன்.''

''இன்னிக்கு என்னே ரெட் லைட் ஏரியாவுக்கு போகச் சொல்றயா?''

குறும்பாகச் சிரித்தான்

— தொடரும்



Dr. S. R. சிவராஜ்

# சுஜாதா

எரிவதும் அணைவதுமாக இருந்த தெரு விளக்கிற்குக் கீழே ஆட்டோ நின்றது. ராம் இறங்கினான். வேட்டி சட்டை அணிந்து தலையை வித்தியாசமாக வாரியிருந்தான். ஆட்டோவை அங்கேயே நிற்கச் சொல்லி விட்டு அரை பர்லாங் நடந்தான்.

சினிமாக் கம்பெனிகளின் புரொடக்ஷன் கார்கள் மட்டும் அந்த நேரத்தில் புழுதியைக் கிளப்பிக்கொண்டு அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தன. திருநெல்வேலி சைவாள் காபி கிளப்பை ஒருவன் வாளியில் தண்ணீர் வைத்துக் கழுவிக் கொண்டிருந்தான். ராம் அவனை நெருங்கி ஒரு துண்டுச் சீட்டை நீட்டினான். உடனே அவன் உட்பக்கம் நின்ற சிறுவனிடம், ''ஏல அப்பா எங்கல?'' என்று இழுத்தபடிக் கேட்டான்.

அப்போது அப்பா தோளில் துண்டும் முகத்தில் கேள்விக்குறியுமாக ராமை நோக்கி வந்தார். ராம் துண்டுச்சீட்டை அவரிடம் நீட்டினான். அவர் அதைப் பார்த்துவிட்டு, ''சாலிக்கிராமம் பழைய அனுமார் கோவில் தெருன்னு இன்னும் கொஞ்சம் தள்ளிப் போகணும், சார். அந்த ரெண்டாவது லாந்தர்கிட்ட லெஃப்டில திரும்புங்க. அந்தாணைக்கி சின்னக் கோயில் ஒண்ணு இருக்கும். அங்கன விஜாரிங்க.''

அங்கன விஜாரிக்க ராம் ஆளைத் தேடினான். யாரும் சிக்கவில்லை. ராமைப் பின்தொடர்ந்த அரை நிஜார் அணிந்த பரட்டைத்தலைப் பையன் சிறுகச் சிறுக அவனை நெருங்கினான். அதிக வெளிச்சமில்லாத இடத்தில் ராமோடு சேர்ந்துகொண்டவன், ''நல்ல பங்களா ஐட்டம் இருக்கு சார். அல்லாம் அறியாப் பசங்க'' என்றான்.

''பங்களூர்க் கமலா வீடு எங்க இருக்குன்னு தெரியுமா?'' என்று ராம் அவனைக் கேட்டான். உடனே அவன், இருட்டில், சாத்திய கடையின் படிக்கட்டில் அமர்ந்திருந்தவனைப் பார்த்து ''குறுவா'' என்றான்.

குறுவன் பக்கத்தில் வந்தான். அவனிடம் அரை நிஜார்ப் பையன்,

''அக்கா ஊட்டுக்கு ஆள் போடறியா?'' என்று கேட்டான்.

சரி என்பதுபோலத் தலையைப் பலமாக ஆட்டிய குறுவன், ராமை ஏற இறங்கப் பார்த்தான்.

''வா சார், போலாம். நைட்டு இருக்கப் போறியா?'' என்று கேட்டான்.

''அரை அவரு இருப்பேன்'' என்றான், ராம்.

அந்த அறையில் ஒரே ஒரு கட்டில். அதன் மேல் பழைய மெத்தை, எண்ணெய் படிந்த தலையணை. தலைக்கு மேலே ஒரு மின்விசிறி முனகிக்கொண்டிருந்தது.

கமலாவின் மூக்கு அசாதாரண அகலத்தில் விரிந்திருந்தது. தலையில் நிறைய கதம்பம் வைத்திருந்தாள். ராமைப் பார்த்ததும் புடவையை அவிழ்க்க ஆரம்பித்தாள்.

''உடனே வேண்டாம். கொஞ்சம் பேசுவோம்'' என்றான், ராம்.

# தொட்டதெல்லாம் பெண்ணுதம்



''பேசணுமா! பேசறதுக்கா இங்கே வந்தே?'' இடப்பக்கமிருந்த சிங்கப் பல்லைக் காட்டிச் சிரித்தாள்.

அவன், ''ஆமா. பேசறதுக்காகத் தான் வந்தேன்'' என்ருன். ஒரு ஐம்பது ரூபாய்த்தாளை எடுத்து அவளிடம் கொடுத்தான்.

அவள் எந்தவிதத் தயக்கமும் இல்லாமல் அதை வாங்கி நான்காக மடித்து ஜாக்கெட்டுக்குள் செருகிக் கொண்டாள். ''என்ன பேசணும்?''

''பாலம் பத்திரிகைல உன்னுடை உண்மைக் கதையப் படிச்சேன்.''

''ஆமா வந்திருக்கு. நூறு ரூபா குடுத்து எப்பிடி இந்த தொளிலுக்கு வந்தேன்னு கேட்டாங்க. சொன்னேன்.''

''ரொம்ப நல்லாயிருந்தது.''

''ஒரு பொண்ணு கெட்டுப்போயி இந்தத் தொளிலுக்கு வந்த கதை உங்களுக்கு ரொம்ப நல்லாயிருக்குதா எங்க வேதனே உங்களுக்கு வேடிக் கையா இருக்கு. அப்படித்தானே?''

''படிக்க கதை மாதிரி இன்ட்ரஸ் டிங்கா இருந்ததுன்னேன்.''

''என்னை மாதிரி எந்தப் பொண் ணும் ஏமாறக்கூடாதுங்கறதுக்காக என் கதைய யார் கேட்டாலும் ஒளிக் காம மறைக்காம சொல்லிருவேன். ஆனு போட்டா எடுக்க மட்டும் வுட மாட்டேன்.''

''உன்னை ரெண்டு பேர் ஏமாத் திட்டாங்கன்னு சொல்லியிருக்கியே?''

''ஆமா''

''அவங்க இங்க வர்றதுண்டா?''

''இங்கயா? ஒருத்தனுக்கு மக மாயி கூலி குடுத்திட்டா. தாடிக்கார னும் சாகப்போருன். எவகிட்டயாவது உதை தின்னுதான் உசிரை விடுவான். இங்கயெல்லாம் அவன் வரமாட்டான். வந்தா துடைப்பக்கட்டை முறிஞ்சி ரும். உங்களை மாதிரி யோக்கியமான குடும்பத்து ஆம்பிளைங்களைத்தான் இந்த ஊட்டுக்குள்ள நான் விடுவேன்'' என்றவள் ராமின் அருகே அமர்ந்து



கையைப் பிடிக்க, அவன் அருவருப்பை வெளிக்காட்டாமல் கையை விடுவித்துக்கொண்டான்.

''என்ன சொல்லி உன்னை ஏமாத்திருங்க?''

''எம் புருசனுக்கு நல்ல சம்பளத்துல வேலை போட்டுக் குடுக்கறதாச் சொல்லி கோபாலும் தாடிக்காரனும் ராத்திரி பகல்னு பாக்காம தோட்டத்துக்குள்ள போட்டு டெய்லி என்னை ......னுங்க.''

''கடைசில புருஷனுக்கு வேலை கிடைச்சுதா?''

''எனக்குத்தான் புள்ளை கிடைச்சுது. இந்தச் சண்டாளங்ககிட்ட வேலை பாக்கறதே பாவம்னு நினைச்சு அவரு மூட்டைப் பூச்சி மருந்தக் குடிச்சுட்டாரு. ராகஷால வெச்சு பெரியாஸ்பத்திரிக்கு கொண்டு போனேன். ஆஸ்பத்திரி கேட்டாண்டையே கண்ணை மூடிட்டாரு.''



''ஏன்?''

''அவரு சூடு சொரணை உள்ளவரு. ரோசக்காரரு. அவர் ரத்தத்துல புள்ளைப் பெக்கற சத்து இல்லேன்னு டாக்டர் சொல்லிருக்காரு. அதை அவர் என்கிட்ட மறைச்சிட்டாரு. எனக்கும் அது தெரிஞ்சிருந்தா நான் உசாரா இருந்திருப்பேன். இந்த ரெண்டு பயலுகளும் சேர்ந்து ஒரே மாசத்தில என்னை வயித்துப் புள்ளைக்காரியாக்கிட்டாங்க. அது அவருக்குத் தெரிஞ்சு போச்சு. மனசு ஒடிஞ்சு தற்கொலை பண்ணிக்கிட்டாரு.''

''காத்தபெருமாள் பிள்ளை கோபால் யோக்கியமானவனாச்சே. அவனா இந்த வேலையச் செஞ்சான்?''

''அவனை யோக்கியன்னு யாராவது என்கிட்ட சொன்னா இதாலயே அடிப்பேன்!'' ஆத்திரத்துடன் ஒரு காலில் இருந்த ஹவாய் செருப்பை உதறி எறிந்தாள். ''அவனும் அவன் கூட்டாளியும் சேர்ந்து–''

''கூட்டாளின்னா?''

''அவன் ஒரு தாடிக்காரன். அப்பன் டாக்டர். அவர் பேரை இவன் கெடுத்துக்கிட்டிருக்கான்.''

''ரெண்டு பேரும் என்ன பண்ணுங்க?''

''ரெண்டு பேருமாச் சேர்ந்து பண்ண அக்கிரமங்களுக்குக் கணக்கே கிடையாது.''

''அக்கிரமம்னா?''

''உனக்கு ஒண்ணொண்ணையும் புரிய வைக்கணும். அவங்க ரெண்டு பேரும் கைவைக்காத பொண்ணே கிடையாது. கக்கூஸ் கழுவறவள்லேர்ந்து கலெக்டர் பொண்டாட்டி வரைக்கும் எல்லாரையும் பதம் பார்த்துட்டானுங்க. வீரராகவனைக் கேட்டா கதை கதையாச் சொல்லுவான்.''

''வீரராகவன் யாரு?''

''கோபால் கம்பெனில அவன் மேனேஜர். அவன்தான் இந்த ரெண்டு பயலுகளுக்கும் மாமா.''

''வீரராகவனை எப்படித் தெரியும் உனக்கு?''

''தெரியும்னா வுடு. எப்படித் தெரிஞ்சா உனக்கென்ன. சரி, நேர

மாயிருச்சு, வா'' என்று மறுபடியும் மார்பிலிருந்து புடவையை நகர்த்தினாள்.

''பணம் எதுக்காகக் குடுத்தேன்?''

''எதுக்கு?''

''புடவைய என் முன்னால அவுக்காம இருக்கிறதுக்கு.''

''அப்ப கதை கேக்கத்தான் வந்தயா?''

''இல்லே. உன்னோட கதையப் படிச்சதும் உண்மைகளை அப்பட்டமா சொன்னதுக்காக உன்னைப் பாராட்டணும் போலத் தோணிச்சு.''

''பாராட்டு விழா நாட்டில யாருக்குதான் நடத்தறதுன்னு ஒரு இது இல்லையா? சரி, போயிட்டு வா.''

**ஜி. என். செட்டி சாலை.**

புல்தரையில், எரியும் விளக்குகளைச் சுமந்து வரிசையில் நின்ற கம்பங்களுக்கு இடையே இன்ஸ்பெக்டர் செந்தில் நடந்தார். வராந்தாவில் சில அதிகாரிகள் சீட்டாடினர்.

செந்தில் லிஃப்ட் பக்கம் நடந்தார். நாலாவது மாடியில் லிஃப்டிலிருந்து வெளிப்பட்டு மொட்டை மாடிக்குப் படியேறினார். அங்கே –

டாக்டர் தனியாகக் காற்றுட அமர்ந்திருந்தார். அவர் எதிரே டீபாயில் ஒரு முழு பாட்டில் விஸ்கி, தம்ளர்கள், ஐஸ், வறுத்த கடலைப்பருப்பு.

''குட் ஈவ்னிங் இன்ஸ்பெக்டர் சார்.''

''குட் ஈவ்னிங்.''

''உக்காருங்க.''

செந்தில் உட்கார்ந்தார்.

''என்ன?''

''பெரியவர்கிட்ட பெர்மிஷன் வாங்கிட்டேன். உங்களுக்குத் தெரிஞ்ச தகவலையெல்லாம் சொல்லச் சொன்னார். உங்களுக்குப் போன் பண்றேன்னார். எப்படியாவது கொலைகாரனைக் கண்டுபிடிச்சா போதுங்கறார்.''

''பெரியவர் எனக்குப் போன் பண்ணார். அன்னிக்கு என்ன கேட்டீங்க?''

''கோபாலுக்கு அப்நார்மல் செக்ஸ் பிஹேவியர் உண்டான்னு கேட்டேன்.''

''நார்மல் செக்ஸ் பிஹேவியரே கிடையாதே. அப்புறம் அப்நார்மல் செக்ஸ் பிஹேவியர் எங்கேர்ந்து வரும்?''

''அப்படின்னா கோபால்...'' இன்ஸ்பெக்டர் இழுத்தார்.

''எஸ்... ஹி வாஸ் இம்பொடென்ட். ஒரு மோட்டார் பைக் ஆக்சிடென்ட்ல ஆண்மைய இழந்துட்டார். நான்தான் ஆபரேட் பண்ணேன்.''

''எப்போ? மேரேஜுக்கு முன்னாடியா பின்னாடியா?''

இன்ஸ்பெக்டர் ஒருவித சுவாரஸ்யத்துடன் கேட்டார்.

— தொடரும்



வியாபார விஷயமாக ஊருக்குப் போவதாகச் சொல்லிவிட்டுப் போன கணவன் இரவு விடுதிகளில் பொழுதைக் கழித்துக்கொண்டே வாரம் தவறாமல் மனைவிக்கு எழுதினான் –

''இப்போது என்னால் வர முடியாது. சரக்குகள் வாங்கிக்கொண்டிருக்கிறேன்!''

பத்தாவது கடிதத்தில் எழுதினான் –

''இன்னும் நான் பிஸி! நிறைய சரக்குகள் வாங்கிக்கொண்டிருக்கிறேன்!''

பொறுமையிழந்த மனைவி அவனுக்கு எழுதினாள் –

''நீ வாங்கிக்கொண்டிருப்பதை நான் விற்க ஆரம்பிக்கும்முன் வந்துவிடு!''

– எம். ஆர். மனோகர்
('ப்ளேபாய்' இதழிலிருந்து)

பிரிந்திருந்தமைக்காகப் பெரிதும் கலங்கி ஞயோ கண்ணே! ''இருக்கின்றேன் சாகவில்லை'' யென்று பாவேந்தர் கவிதை வரியினைத் தீட்டிக் காட்ட உனக்கு மட்டும்தான் தெரியுமோ? ''இங்கென்ன வாழ் கிறது!'' எனப் பதில் மடல் எழுதிடவில்லையே தவிர என் இதயத்தைப் பிழிந்தெடுத்தப் பிரிவுத்துன்பத்தை நீயென்ன கண்டாய்! அடடா! அப்படியேன் பார்க் கிருய்? சிறுர்கள் தெருவினில் விளையாடும் கோலிக் குண்டுகளைப்போல் உன் விழிகள் என்மீது விர்ரென்று பாய்கின்றனவே! பசலை படர்ந்திருக்கும் – பைந் தொடிகள் கழன்றிருக்கும் – ''இனிப் பார்ப்பதேயில்லை இந்த இரக்கமற்றவனை'' என்றெல்லாம் கூடச் சூளுரை; உன்னைச் சினக்காட்டின் மத்தியிலே நிறுத்தியிருக்கும் – எல்லாம் அறிவேன் அன்பே! அழகே! அமுதமே! புசத்து நிறைப் பலாச்சுளை முத்தங்களைக் கத்து கடல் ஓரத்தில் பரிமாறிக்கொண்டதையும், முத்து மொழிக் கொஞ்ச லுக்கு முற்றுப்புள்ளி வைத்து கட்டிலறைக் காவியத்தின் உச்சகட்டக் கவிதையினை மௌனமாய் இசைத்ததையும், எப்படித்தான் மறந்திட இயலும் பெண்ணே! அந்த நினைவுகளின் தித்திப்பால்தான் விநாடி யுகங்களை விரட்டிட முடிகிறது என்பது உனக்கும் பொருந்துகிற உண்மைதானே கண்ணே! சீறிடாதே! வா! ஆறிடாது அல்லும் பகலும் வருத்துகின்ற காதல்அனலைக் கட்டித் தழுவிச் சற்றுக் குளிரவைப்போம் வா! தழுவிடும்போது ஏற்படும் தகிப்பு; தண்ணிலவின் குளிர் மழை போல் இருக்குமென அறிவோம் நாம்! அதனாலே ஊடல் விடுத்துக் கூடல் கோபுரத்துக் கலசத்தில் என்னை உலவ விடு! நீயும் கைகோத்து இன்பப்பூங்காவில் நடைபயிலத் தொடங்கு! பிரிவுக்குப்பின் விளைகின்ற சந்திப்பு, பேரின்பப் பெருக்கன்றோ! அந்தக் காதல் இன்பத்திற்கு வழிவிட்டுக் கதவைத் திறந்திடுக!

காதலன், காதலியிடம் தன் நெஞ்சத்தை வளைய வைத்து முறையீடு அளித்தவுடன்; அவளும் மஞ்சத்துக் கதவுதனை மூடி – மகிழ்வால் பூத்த உதடுகளைத் திறந்து; நாமணக்க – நல்ல தேன் மணக்க – ''அத்தான்'' என்றாள்!

அத்தானா நின்றிடுவான்? ''ஆருயிரே! நாம் ஓருயிர்!'' என்று அள்ளிக்கொண்டான் அந்தப் புள்ளி மயிலை! அவள் விரும்பியதையெல்லாம் அவன் புரிந்து கொண்டு இதுவரையில் இருவரும் காணாத இன்ப மெலாம் துய்த்தனர்!

அப்போது தென்றலில் நீந்தும் அந்தத் தேன் மொழியாளின் நினைவில் ஒரு மின்னல் கீற்று! என்ன அது?

''பேரன்பு காட்டி என் பிரியம் போல் இவர் என் னைக் கூடி இன்பம் தருவதெல்லாம், மீண்டும் என்னை விட்டுப் பிரிந்து அவரது அன்பின்மையை வெளிப்படுத்தப்போகிற குறிப்பாகுமோ?''

இதோ அதற்குரிய குறள்:

''பெரிதாற்றி பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வது உடைத்து.''

அதிகாரம்: 128 குறிப்பறிவுறுத்தல் பாடல்: 1276

பெரிதாற்றி = பெரிதும் அன்பு காட்டி

பெட்ப = விரும்பியவாறு




சிறிது மௌனம் சாதித்த டாக்டர், ''ஒன் மினிட்'' என்று எதிரே அமர்ந்திருந்த செந்திலிடம் சொன்னார். எழுந்தார். பக்கத்தில் இருந்த டாய்லெட் ரூமுக்குச் சென்றார். சில நொடிகளுக்குப் பின் திரும்பி வந்து அமர்ந்தார்.

''கோபால் ஆண்மைய இழந்தது கல்யாணத்துக்கு முன்னாடியா பின்னாடியான்னு கேட்டீங்க, இல்லையா?''

''ஆமா டாக்டர்.''

''கல்யாணத்துக்கு முன்னாடி தான். ஆண்மை மட்டுமில்லே, செக்ஸ் ஆசையே போயிருச்சு.''

''முன்னாடின்னா சுமார்...''

''ரெண்டு வருஷத்துக்கு முன்னால.''

''கோபால் இறந்த நியூசை ரேடியோவில கேட்டதும் ப்ருந்தாவுக்கு அபார்ஷன் ஆகியிருக்கு.''

''இருக்கலாம். எனக்குத் தெரியாது.''

''மீனா மெடர்னிடி ஹோம்ல ப்ருந்தாவுக்கு ட்ரீட்மெண்ட் குடுத்த லேடி டாக்டரை விசாரிச்சிட்டேன். கேஸ் ஷீட்டையும் பாத்தேன். அபார்ஷன் டைம்ல ஒரு மாசக் கர்ப்பமா இருந்திருக்காங்க. அதுல சந்தேகமே கிடையாது.''

''எனக்குத் தெரியாதுன்னுதான் சொன்னேன்.''

''நீங்க அவங்க ஃபாமிலி டாக்டர் தானே?''

''ஆமா. பீரியட்ஸ் நின்னு

போனதை அவங்க என்கிட்ட சொல்லி யிருந்தா டெஸ்ட் பண்ணிருப்பேன். அவங்க என்கிட்ட சொல்லலே. வேற லேடி டாக்டர்கிட்ட போயிருக்க லாம்.''

''கல்யாணத்துக்கு முன்னுடியே கோபால் ஆண்மைய இழந்திட்டான்ங் கறீங்க...''

''அப்புறம் எப்படி ப்ருந்தா கர்ப்ப மானுன்னு கேக்கறீங்க, அப்படித் தானே?''

''ஆமா''

"ஹஹ்ஹ" என்று மெலிதான எரிச் சலுடன் சிரித்த டாக்டர், ''இதுக்கு நான் பதில் சொல்லவேண்டிய அவசிய மில்லே. எந்த டாக்டரும் சொல்ல மாட்டார். எங்க பேஷண்ட் உடம்பி லேர்க்கிற பிரச்னைகளைப்பத்தி, அதக் குணமாக்கறதப் பத்தித்தான் நாங்க கவலைப்படுவோம். அவங்க காரெக் டரை, மொராலிடியப் பத்தி நாங்க கவலைப்படறதில்லே. பணக்காரங்க எப்படி வேணும்னுலும் நடப்பாங்க...''

''அப்படின்னு மிஸஸ் கோபால் வேற ஆனேட தொடர்பு வெச்சிருந் திருக்கலாம்கறீங்க?''

''நான் சொல்லாததை சொன் னதா நீங்களே கற்பனை பண்ணிக் காதீங்க. நான் எப்போ அப்படிச் சொன்னேன்?''

''கோபால் ஆண்மைய இழந் திட்டான்னு சொன்னீங்க. ஆண்மை யில்லாதவனேட மனைவி கர்ப்பமானு, மனைவியோட நடத்தை சரியில் லேன்னுதானே டாக்டர் அர்த்தம்?''

''அது அந்தக் காலத்துல. இப்ப அப்படி இல்லே. பணக்காரனுக்கு வாரிசு ரொம்ப முக்கியம். கோபால் பணக்காரன். ஆனு அவனுல வாரிசை உருவாக்க முடியாத நிலை. கல்யாணத் துக்கு முன்னுடியே கோபால் தன் உடம்பிலேர்க்கிற பலவீனத்தை ப்ருந்தாகிட்ட ஒளிக்காமச் சொல்லி யிருக்கலாம். அவளுக்கு செக்ஸ்ல இன்ட்ரெஸ்ட் இல்லாம இருந்திருக்க லாம். இம்பொடென்டா இருந்தாலும் பரவாயில்லேன்னு அவனுக்கு மனைவி யாகச் சம்மதிச்சிருக்கலாம். நம்ம நாட் டில பெண்களையும், பெண் வீட்டுக் காரங்களையும் ஏமாத்தி, நல்ல பெண் களை நோயாளிகளுக்கும் ஆண்மையில லாதவங்களுக்கும் மனைவியாக்கிர் ளுங்க. இங்க ஒர்த்தி கழுத்தில ஒருத் தன் கயித்தக் கட்டிட்டா அப்புறம் அவ தப்பிக்க வே முடியாது., வாழ்க் கையக் காவு குடுத்து பண்பைக் காப்பாத்தி யாகணும். கல்யாண த்துக்கு முன்னுல கட்டிக்கப் போறவன் யோக்கியனு, கட்டில்ல பெண்டாட்டியத் திருப்திப் படுத்தக்கூடியவனுன்னு தெரிஞ்சுக்கற உரிமை நம்ம பெண்களுக்குக் கிடை யாது. தெரியாம ஏமார்றதவிட தெரிஞ்சு ஏமார்றது பெட்டர்னு ப்ருந்தாவுக்குத் தோணியிருக்கலாம். இம்பொடென்டா இருந்தாலும் பணக் காரனு இருக்கான்னு நினைச்சு அவ னைக் கட்டிக்கச் சம்மதிச்சிருக்கலாம். அப்புறம் வாரிசுக்காக ஆர்ட்டி ஃபிஷியல் இன்ஸெமினேஷன் முறைல ப்ருந்தாவக் கர்ப்பமாக்க கோபால் ட்ரை பண்ணிருக்கலாம்.''

''எப்படி?''

''வேற ஆனேட விந்தை ப்ருந்தாவோட கர்ப்பப்பைல செலுத் திருக்கலாம். ஆண்மையிழந்தவனேட மனைவி, கர்ப்பமாயிட்டாங்கற ஒரே காரணத்தினுல நடத்தை கெட்ட வன்னு இந்தக் காலத்துல முடிவு பண்ணிரக்கூடாது.''

''பெரியவரும் அவர் மனைவியும் ப்ருந்தாவ எப்படி நடத்தினுங்க?''

''எனக்குத் தெரிஞ்சவரைக்கும் சொந்த மக மாதிரிதான் நடத்தினுங்க. ப்ருந்தாவுக்கு சின்னத் தலைவலின்னுக் கூட பெரியவர் எனக்கு போன்மேல போன் போடுவார். கோபால்கூட மனைவிமேல உயிரையே வெச்சிருந் தான். அவன் பலவீனத்த யாரும் தெரிஞ்சுக்கக்கூடாதுங்கறதுக்காக எல்லார் முன்னுலயும் அவளைத் தூக்கிக் கிட்டு ஆடுவான்.''

''மருமக மேல அவங்க அவ்வ ளவு பிரியமா இருந்ததுக்கு என்ன காரணம் இருக்க முடியும்னு நினைக்க றீங்க?''.

''அவங்களுக்கு பெண் குழந்தை பிறக்கல. அது ஒரு காரணமா இருக்க லாம்.''

சவீதா

ஓட்டலில் தங்கியிருக்கும் விஜயகாந்த் வீடு தேடிக்கொண்டிருக்கிறார் - வாடகைக்கு.

புளியரை என்ற கிராமத்தில் 'சம்பல் காடுகள்' என்ற மலையாளப் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. அங்கு ஸ்கூல் பாய்களின் கூட்டம் அதிகம். அவர்கள் ரயிலில் இருந்த ஜெய மாலினியிடம், ஏய், வாடி எங்கப்பக் கிழங்கு பாட்டு படி என்றனர்.

ஜெயமாலினிக்கு வந்த கோபம், ''ஏய், உங்க ஆத்தாவைப் போய் படிக்கச் சொல்லுடா'' எனக் கூறிவிட்டு ரயிலின் கதவை அடைத்துக் கொண்டார். அவ்வளவுதான். பையன்களுக்கு வந்த கோபம் - கல், கம்புகளைத் தூக்கி ரெயிலை நோக்கி வீசினர். அப்பாடா! அவர்களைச் சமாதானப்படுத்துவதற்குள் போதும்மென்றாகிவிட்டது.

— ஏ. அப்துல் ரஹீம், புளியரை



''மகனோட பலவீனத்தைத் தெரிஞ்சுக்கிட்டு அவனுக்கு மனைவியாகச் சம்மதிச்சதினால அளவுகடந்த அன்பு செலுத்தியிருக்கலாம் இல்லையா?''

''யு ஆர் ராங். கோபால் ஆண்மைய இழந்தது என்னைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. ப்ருந்தா மனைவிங்கறதினால அவளுக்கும் தெரிஞ்சிருக்கும்.''

''அப்போ பெரியவருக்கும் அவர் மனைவிக்கும் தெரியாதா?''

''தெரியாது. ஆபரேஷனுக்குப் பிறகு ஆண்மை போயிடிச்சுன்னு தெரிஞ்சதும் கோபால் கூனிக் குறுகிட்டான். தன்னால ஒரு வாரிசை உருவாக்க முடியாதுன்னு அப்பா அம்மா கிட்ட சொல்ல வெக்கப்பட்டான். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் விஷயம் தெரிஞ்சா அந்த அதிர்ச்சியிலேயே இறந்திருவாங்க, யார்கிட்டயுமே சொல்லிராதீங்க டாக்டர்னு என் கையப் புடிச்சுக்கிட்டு கெஞ்சினான். அவன்கிட்ட பிராமிஸ் பண்ணபடி இன்னிவரைக்கும் நான் யார்கிட்டயும் சொல்லல. முதல் தடவையா உங்க கிட்டதான் சொல்லியிருக்கேன். நான் சொன்ன இந்த உண்மை கொலையாளிய‌க் கண்டுபிடிக்க உங்களுக்கு உதவும்னு சந்தோஷப்படுவேன். இது உங்க டிபார்ட்மென்ட் மூலமா மஞ்சள் பத்திரிகைகளுக்குப் போய் காலமான ஒருத்தரோட மனைவியப்பத்தி கேவலமான வதந்திகள் பரவினா வருத்தப்படுவேன். போலீஸ்கிட்ட ஏன் சொன்னேன்னு காத்தபெருமாள் இனிமே என்னைக் கேக்கமுடியாது. எங்கிட்ட இப்படி ஒரு ரகசியம் இருக்குங்கறது தெரியாம, கோபாலைப்பத்தித் தெரிஞ்சதையெல்லாம் ஒண்ணுவிடாம இன்ஸ்பெக்டர்கிட்ட சொல்லிடுங்கன்னு டெலிபோன்ல உத்தரவு போட்டுட்டார். அதுக்காக அவர் பின்னால வருத்தப்படலாம்.''

''ஒரு குடும்பத்தோட கௌரவத்தைக் காப்பாத்தறதவிட கொலையாளியைக் கண்டுபிடிக்கறதுதான் போலீசுக்கு முக்கியம், டாக்டர். தேவைப்பட்டா மறுபடியும் சந்திக்கறேன்.''

தோட்டத்தில் கிடந்த பிரம்பு நாற்காலியில் ராம் சாய்ந்திருந்தான். எதிரே இன்னொன்றில், லாவண்யா அமிழ்ந்திருந்தாள். வானத்தில் பௌர்ணமி நிலா உயர்ந்து கொண்டிருந்தது.

''நேத்து ரெட்லைட் ஏரியா அனுபவம் எப்படி இருந்தது?''

''நல்லா இருந்தது.''

''நல்லான்னா?''

''உபயோகமான தகவல் கிடைச்சிதுன்னேன்.''

''என்ன தகவல்?''

''கோபாலும், அவன் சினேகிதன் விக்ரமும் சேர்ந்து ஊர்லேர்க்கற பெண்களையெல்லாம் வயசு வித்தியாசம் பாராம வேட்டையாடியிருக்காங்க. அதுல ஒர்த்திதான் பங்களூர்க் கமலாவா மாறித் தொழில் நடத்திக்கிட்டிருக்கா.''

''அவ வேற என்ன சொன்னா?''

''விக்ரமையும் மகமாயி அடிக்கப் போகுதுன்னு சொன்னா.''

''என்னிக்காம்?''

''அதச் சொல்லலியே.''

''அப்போ அந்தப் பாதாள அறைல நாம பாத்த ஆபாசங்களுக்கும் இந்த இரண்டு பேருக்கும் தொடர்பு இருக்குன்னு தெரியுது.''

''எந்த ரெண்டு பேர்?''

''கோபால், விக்ரம்.''

''அப்படித்தான் நேத்து வரைக்கும் நம்பினேன்.''

''இப்ப?''

''அந்த ஆபாச அறைக்கும் கோபாலுக்கும் எந்த சம்பந்தமும் இருக்காதுன்னு நினைக்கிறேன்.''

''எத வெச்சு திடீர்னு அப்படிச் சொல்றீங்க?''

''ஒரு புதுத்தகவல் கிடைச்சிருக்கு. சொல்றேன், பத்திரிகைல எழுதித் தொலைச்சிராத. எப்படிக் கண்டுபிடிச்சீங்கன்னும் கேக்காத. கோபால் ஆண்மை இல்லாதவன்.''

''அப்படின்னு?''

''தெரியாதா? அப்பாவாக முடியாதவன். செக்ஸ் ஆசைகூடக் கிடையாதாம். கல்யாணத்துக்கு ரெண்டு வருஷத்துக்கு முன்னால நடந்த பைக் ஆக்சிடன்ட்ல எல்லாத்தையும் இழந்திட்டானும்.''

''அப்போ ஆக்சிடன்ட்டுக்கு முன்னால அந்த அறைய அவங்களோட தொழிலுக்காக உபயோகிச்சுக்கிட்டிருந்திருப்பாங்க.''

''அந்த அறையப் பாத்தா, வருஷக்கணக்கில திறக்காத அறை மாதிரியா தெரியுது? தூசி கீசி இல்லாம சுத்தமா நேத்துவரைக்கும் புழக்கத்திலேர்க்கிற அறை மாதிரில்ல இருக்குது.''

''அத வெச்சு முடிவெடுக்க முடியுமா?''









''தாராளமா முடிவெடுக்கலாம். அது மட்டுமில்லே லாவண்யா, இந்த வருஷத்தில அச்சான ப்ளோ - அப் படம்கூட அங்க இருக்கே.''

''அங்க நடந்திருக்கக்கூடிய செக்ஸ் ஆர்ஜில கோபால் கலந்துக்காம இருந்திருக்கலாம். ஆனா கோபாலுக்குத் தெரியாம அவர் பங்களாவுக்குள்ளே எதுவும் நடக்க வழியில்லே.''

''நீ நினைக்கறது தப்பு. கோபால் அனுமதியில்லாம அல்லது கோபால் விருப்பத்துக்கு விரோதமா அந்தப் பாதாள அறைல ரெகுலரா செக்ஸ் ஆர்ஜி நடந்திருக்கு.''

''யார் நடத்திருக்க முடியும்? விக்ரமா?''

''எஜமானியம்மாவா ஏன் இருக்கக் கூடாது?''

''ப்ருந்தாவயா சொல்றீங்க?''

லாவண்யாவிடம் சின்ன அதிர்ச்சி.

''அவளேதான். தமிழ்ப் பண்பையும் கலாச்சாரத்தையும் காப்பாத்திட்டிருக்கிற ஒரு பெண்ணுன்னு கல்பனாவால வர்ணிக்கப்பட்ட மிஸஸ் ப்ருந்தா கோபால்தான் அந்த ஆபாசங்கள்ல உழன்றிருக்கணும்னு தோணுது. கோபால் நிச்சயமா இல்லே.''

''நோ நோ. நான் ஒத்துக்க மாட்டேன். கல்பனா பொய் சொன்ன மாதிரித் தெரில.''

''அவ பொய் சொன்னான்னு நானும் சொல்லல. கல்பனாவுக்குத் தெரிஞ்ச மிஸ் ப்ருந்தா வேற. அவ கல்லூரி மாணவி. பூ வைப்பா. பொட்டு வைப்பா. சிகரெட் குடிக்க மாட்டா. மிஸஸ் ப்ருந்தா கோபாலை கல்பனாவுக்குத் தெரியாது. கல்பனாவே இத ஒத்துக்கிட்டிருக்கா. கல்லூரிப் படிப்பு முடிஞ்சதும் எங்க தொடர்பு அறுந்து போச்சுன்னு சொல்லியிருக்கா.''

''அதனால?''

''ப்ருந்தாவ கார்னர் பண்ண விஷயம் வெளிய வந்திரும்.''

— தொடரும்

நிச்சயமாய் இருக்க முடியாது. ராதா, அம்பிகாவின் சொந்த ஊர் கல்லற ஆகும். இது திருவனந்தபுரம் மாவட்டத்திலுள்ளது. அம்பிகாவோ நடிக்க வருமுன் படித்துக் கொண்டிருந்தார். எப்படி தீபாவின் குழுவில் எர்ணகுளத்தில் இவர்கள் இருந்திருக்க முடியும்?

– தக்கலை (குமரி),
எல். லீலா இராம்

கலைஞரின் 'தென்பாண்டிச் சிங்கத்'திற்கு 'வாசகர் விருப்பம்' இவ்வளவுதானு என்று யாராவது எண்ணிவிடப் போகிருர்கள்! எங்களின் விருப்பங்களை வெளியிட குங்குமத்தின் பக்கங்கள் பற்ருது. இது புகழ்ச்சியில்லை; உண்மை.

– மதுரை-16, நாகுவேலன்

உடனே குங்குமத்திற்கு திருஷ்டி சுற்றிப் போடுங்கள் சார்! கண் பட்டுவிடப் போகிறது. அட்டைப் படம் ரொம்ப அழகாய் இருந்தது. (இதழ் 11-4-82)

– குட்டியாறு,
சுபா பன்னீர்செல்வம்

கலைஞரின் எழுத்தோவியம் சித்திரைச் சிறப்பிதழில் ஆரம்பம் என்றவுடன் மீண்டும் தொடர்ந்து குங்குமம் வாங்க முடிவு செய்துவிட்டேன்.

– பெங்களுர்-21,
ஜி. நாராயணன்

உலக மகா முக்கிய செய்தியான 'ஸ்ரீபிரியாவின் தாயார் சினிமாவில் நடிப்பதை' எல்லா வாரப் பத்திரிகைகளும் போட்டுவிட, குங்குமம் வெளியிடாமல் இருந்துவிடப் போகிறதே என்று பயந்தேன். ஆனல் அச் செய்தியை வெளியிட்டு உலக நடப்பில் உங்களுக்குள்ள அக்கறையைக் காட்டி விட்டீர்கள்; போங்கள்...!

– மதுரை-16, வேலன்

# தவமிருக்கிறேம் ஐயா!

இளவயதுடைய, ஒன்றுமறியாத மேனகா காந்தியை மயக்கி, அவரை மாமியார் இந்திராவுக்கு எதிராகத் தூண்டிவிட்டு, அரசியல் ஆதாயத்திற்காகக் குழப்பத்தில் குளிர் காய்பவர்களின் போக்கு நெடுநாள் நீடிக்காது. இந்திராவும் அன்புடன், அமைதியாக யோசனை கூறி மேனகாவை சாமர்த்தியமாக அணைத்துக் கொண்டிருக்கலாம்.

– சென்னை-5,
எஸ். வி. ராஜசேகர்

கான்சருக்கான டாக்டர் எம். லீலா மீனுட்சி கூறிய சில யோசனைகளின் கட்டுரை எந்நாளும் பாதுகாப்பில் வைத்துக்கொள்ளப்பட வேண்டிய அருமைக் கட்டுரையாகும்.

– சிவகங்கை,
கே. பி. ஏ. ஜபருல்லாகான்

மற்ற எல்லாப் பத்திரிகைகளும் சித்திரைச் சிறப்பிதழ் அதிக பக்கங்கள் அதே விலை என்று அறிவிப்பு விட்டிருக்கின்றன. ஆனல், குங்குமமே 25 பைசா அதிகப்படுத்தி அதிக பக்கங்கள் என்று அறிவிப்பு விட்டிருக்கிறது. குங்குமம் அதிகக் காசு வாங்கினலும் அதற்கேற்ப செய்திகள் இருக்கும் என்ற நம்பிக்கையில் ரூ. 1-25-டன் சித்திரைச் சிறப்பிதழுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேம்.

– திருப்பூர்,
எஸ். ஆர். ஜி.

ஒரு பக்கத்தில் வெளியாகிக் கொண்டிருந்த 'நிறுத்தப்பட்ட செய்திகளு'க் இரண்டுபக்கமா?

– மேட்டுப்பாளைய
ஆனந்தபிரிய
கலியாணசுந்தர

என்னமோ... சில்க் வின் போஸ்களுக்காக வா கர்கள் தவமிருப்பதாக அ லவா நினைத்துக்கொண் டிருக்கிறீர்! இந்த வார வரவிருப்பதை போன வாரமே விளம்பர செய்து...

– பெங்களுர்-21
பாபுதம

சிறந்த நடிகையா ரேகா தேர்ந்தெடுக்கப்பட் ஜனதிபதி பரிசு பெறும் முல குங்குமத்தில் அவரது அ கிய படத்தை அட்டைப்ப மாக வெளியிட்டு உமது திறமையை நிரூபித்துவிட்ட உம்மைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

– திருப்பூர்-2, பி. கோ

ராமு வளர்ந்து பெரிசாக குட்டி போட்டதாம்! ராமு வோட குட்டிக்கு முன்னி யாம்! வளர்ந்து பெரிசாகி ராமுவோட சேர்ந்து அது வும் குட்டி போட்டதாம் ராமுவோட சேர்ந்து எப்படி குட்டி போடும்? குங்கும வாசகர்களெல்லாம் முட் டாள் ரசிகர்கள் என்று நினைப்பா?

– திருப்பத்தூர், மு. புவராசன்

சென்ற வாரம் வெளி வந்த ஆறு சிறுகதைகள் அருமை.

– மருதூர்.
வி. சுவாமிநாதன்

சிமிழ்: 5

18 – 4 – 82

பொட்டு: 18

அட்டை வண்ணப்படம்:
சுபா சுந்தரம்

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனை. கதை, கட்டுரைகளை தபால் மூலமே அனுப்புதல் வேண்டும். அவற்றைத் திருத்தவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குங்குமம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட்டுக்காக, கலைமகள் அச்சகத்தில் அச்சிட்டு, 93-A, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 034-லிருந்து வெளியிடுபவர்: முரசொலி மாறன், எம். ஏ., எம். பி. ஆசிரியர்: பராசக்தி.

# எப்படி இருக்கிறேன்? -அம்பிகா





படங்களுக்காக அம்பிகா எடுத்துக்கொண்ட நேரம் பத்து நிமிடங்கள். உடனிருந்து ஒத்தாசை செய்தவர் கமலஹாசன். படங்கள்: ஜேவி

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

நள்ளிரவு நெருங்கிக் கொண்டிருந்தது. மணி பதினொன்றரை இருக்கும். வாகனப் போக்குவரத்து இல்லாததால் அண்ணாசாலை மிகவும் அகலமாகப் பரந்து காணப்பட்டது. சில அசைவ ஓட்டல்கள் பிரகாசமாக விழித்திருந்தன.

இரைச்சலை எழுப்பிக்கொண்டு வந்த மூன்று பைக்குகள் ஒரு ஓட்டலைப் பார்த்ததும் வட்டமடித்து வளைந்து, ஓட்டலுக்கு எதிரே பிளாட்பாரத்தின் ஓரமாகச் சாலைக்குள் நின்றன. அவற்றிலிருந்து எட்டு இளைஞர்கள் உதிர்ந்தனர்.

ஒருவன் அந்த நேரத்திலும் கருப்புக் கண்ணாடி மாட்டியிருந்தான். எவனோ மறைத்திருந்த டேப்ரெகார்டர் கோப்பகபானா பாடியது. 'ப்ரைவேட் ஐ' என்று பதங்களைத் தாங்கிய பனியனை அணிந்திருந்தவன் சிகரெட் பற்றவைத்தான். சிகரெட் பெட்டியை மற்றவர்களிடம் சர்குலேஷனுக்கு விட்டான்.

நடிகர் சஞ்சய்கான் போல கவர்ச்சியாகத் தாடி வளர்த்திருந்தவன் சிகரெட்டை மேலே தூக்கிப் போட்டு ரஜினி போல உதட்டால் கவ்வினான். ரஜினியின் குரலில் மிமிக்ரி செய்ய 'ஹா' என்ற ஆரவாரம். 'பில் புக்'குடன் ஓட்டல் படிக்கட்டில் இறங்கி வந்த ஓட்டல் பணியாளனிடம் வெளுத்த டெனிம் அணிந்தவன் 'சிக்கன் ஃப்ரைட் ரைஸ் நாலு, மட்டன் மசாலா ஏழு...' என்று ஆர்டர் கொடுத்தான். அப்போது –

அவர்களை நோக்கி ஒருவர் வந்தார். மத்திய வயது. பச்சை ஸ்லாக்கும் அதற்குப் பொருந்தாத நீல நிறக் காட்டன் பேண்ட்டும் அணிந்து கிராப் வெட்டியிருந்தார்.

ரஜினி போலப் பேசிக்கொண்டிருந்தவன் குரலை மாற்றிக்கொண்டு ஸ்ரீதேவி போலப் பேசியபோது, "உங்க ஃப்ரெண்டு உங்களைக் கூப்பிடருப்ல இருக்கு சார்" என்று கையை ஒரு திசையில் காட்டினார்.

"யார்... என்னையா?" ஸ்ரீதேவியின் குரலிலேயே கேட்டான்.

"ஆமா சார், உங்களைத்தான்."

"பாய் ஃப்ரெண்டா, கேர்ள் ஃப்ரெண்டா" என்று கும்பலில் ஒரு



சவீதா

கேள்வி எழும்பியது. தொடர்ந்து 'ஹா' என்ற ஆரவாரம்.

''பாயா கேர்ளான்னு பக்கத்துல போய் பாருங்க சார். உங்களைக் கூப் பிட்டாங்க. சொல்லிட்டேன். அந்தக் காருக்குள்ள இருக்காங்க, போங்க.''

தாடிக்காரன் திரும்பிப் பார்த் தான்.

சாலையின் எதிர் ஓரத்தில் சற்றுத் தள்ளி நீல அம்பாசடர் நின்றது.

''போடா. போய் பாத்திட்டு வாடா.''

''கேர்ள் ஃப்ரெண்டுன்னு நீ மட் டும் தள்ளிட்டுப் போயிராத. சிக்னல் குடு. ஃபாலோ பண்றோம். இல்லே



மாடர்ன் ட்ரெஸ் போட்டுக்கொண்டு நடிக்க வேண்டும் என்று ஆசை. இப்போது அந்த ஆசை ஒரு தெலுங்குப் படத்தின் மூலம் பூர்த்தியாக இருக்கிறதாம் ராஜலட்சுமிக்கு!

...ரோட இப்படி அழைச்சுக்கிட்டு வா.. ...ன்னொரு எக் நூடில்ஸ் வித் ஸ்பெ...ல் ஜிஞ்சர் சிக்கன் ஆர்டர் பண்ணு...வோம்.''

தாடிக்காரன் சாலையின் குறுக்கே ...ந்தடித்து ஓடினான். நீல அம்பாச...ர் கண்ணாடிகளை ஏற்றிக்கொண்டு ...ன்றது. டிரைவர் சீட்டில் யாரும் ...ல்லை. காருக்குள் தலையை நீட்டி...னான். டிரைவர் சீட்டுக்குப் பக்கத்து ...ட்டில் ஓர் உருவம் போர்வையால் ...ார்த்திக்கொண்டு அமர்ந்திருந்தது.

''எவண்டா என் ஃப்ரெண்டு?'' ...ன்றான் தாடிக்காரன்.

''நாங்கதான்'' என்று வெளியே...ருந்து பதில் வந்தது. இருவர் அவன்மீது பாய்ந்தனர். காரின் பின் கதவு திறக்கப்பட தாடிக்காரன் உள்ளே திணிக்கப்பட்டான். கார் ...றந்தது.

பின் சீட்டில் முகம் தெரியாத ...ரண்டு உருவங்களுக்கு இடையே ...றைப்பட்டிருந்த தாடிக்காரன், ''...ரா நீங்கள்லாம்? என்னை எதுக்...டா கடத்திக்கிட்டுப் போறீங்க?'' ...ன்றான்.

தாடிக்காரனின் தலை வயிற்றுக்குள் ...ங்கும்படியாக ஒருவன் ஓங்கிக் ...டினான். ''வாயை மூடிக்கிட்டு வா. ...றந்தே இதே மாதிரி விழுந்துக் ...ட்டே இருக்கும்.''

அப்புறம் தாடிக்காரன் மௌன...க இருந்தான். கார் கூவத்தைக் ...ந்து பூந்தமல்லி நெடுஞ்சாலையில் ...ி அமிஞ்சிக்கரைப் பக்கமாக ஓட ...ரம்பித்தது. ஒரு பார்க்கின் எதிரே ...மாகத் திரும்பி சாலையிலிருந்து ...ருட்டுக்குள் இறங்கியது.

மரம், செடி கொடிகளுக்கு ...டையே கார் ஓடி பழைய ஜமீன் ...ங்களா போன்ற கட்டடத்தின் ...ன்னே நின்றது.

''இறங்குடா கீழே'' என்று ஒரு...ன் சொல்ல தாடி இறங்கியது. ...ார்டிகோவில் மங்கலாக பல்பு எரிந்...

''போ உள்ளே. உன்னை அரெஸ்ட் பண்ணியிருக்கோம்.''

''நீங்க யார்ரா என்னை அரெஸ்ட் பண்ண, நான் யார் தெரியுமா?''

காரின் முன்பக்கமிருந்து இறங்கிய உருவம் போர்வையை அகற்ற, காக்கி உடையில் செந்தில் நின்றார். அவரைப் பார்த்து தாடிக்காரன் ''சார், நான் உங்களோட வர்றேன். போலீஸ்ங்கறதுக்கு அத்தாட்சியக் காட்டுங்க.''

உடனே செந்தில் ''ட்ரெஸ்ல இருக்கேன். இதவிட வேற என்ன அத்தாட்சி வேணும்?''

''ட்ரெஸ் என்ன பெரிய ட்ரெஸ். நானும்தான் ட்ரெஸ்ல இருக்கேன். நிர்வாணமாவா இருக்கேன்?''

தாடிக்காரன் சொல்லி முடிப்பதற்குள் தொப் தொப் என்று அவன் முதுகிலும் பிடரியிலும் சரமாரியாக அடிகள் உதிர்ந்தன. ''நடரா உள்ளே. மரியாதை குடுத்தா வழிக்கு வர மாட்டே.''

நீளமாக ஜெயில் வராந்தா போலத் தெரிந்த பாதையில் எல்லாரும் நடந்தனர். வளைந்து வளைந்து ஏறிய மரப்படிகளில் ஏறி மூன்றுவது மாடிக்கு வந்தனர். மூலையில் ஒரு அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

செந்தில் முதலில் உள்ளே நுழைந்தார். பின்னால் தாடிக்காரனை இருவர் தள்ளிக்கொண்டு சென்றனர்.

''வெல்கம் மிஸ்டர் விக்ரம்'' என்று தாடிக்காரனை அங்கே நின்ற ராம் வரவேற்றான்.

விக்ரம் ராமை ஆச்சரியத்துடன் பார்த்தான்.

''ஸிட் டௌன், உட்காரு'' என்றான் ராம்.

விக்ரமை இழுத்துக்கொண்டு வந்த காவலர் இருவரும் அறையை விட்டு வெளியேற, அறையில் செந்தில், ராம், விக்ரம் மூவரும் நின்றனர். செந்தில்

''நீங்கள்லாம் நிஜமான போலீசா இருந்தா உங்க எல்லாருக்கும் பன்னிரண்டு மணி நேரத்தில சீட்டுக் கிழிஞ்சிரும்'' என்றான் விக்ரம்.

''அதப் பத்தி எங்களுக்குக் கவலே இல்லே. கேக்கற கேள்விகளுக்கு ஒழுங்கா எங்களுக்கு பதில் வேணும்'' என்றார் செந்தில்.

''கோபாலேப் பத்தி விசாரிக்கற துக்காக உன்னே இங்க கொண்டு வந்திருக்கோம்'' என்றான் ராம்.

''எந்த கோபால்?''

''எந்த கோபாலோட உனக்குப் பழக்கம்? எந்த கோபாலும் நீயும் பைக்ல சுத்தி பெண் வேட்டையாடினீங்க?''

பரிசுக் கேள்வி – 3: கோபால் ஆண்மையை இழந்தவன் என்று குடும்ப டாக்டர் சொன்னது உண்மையா, இல்லேயா?

''எனக்கு யாரைப்பத்தியும் எதுவும் தெரியாது. என்னே நீங்க இப்படி ராத்திரி கொண்டு வந்து சித்ரவதை பண்றது சட்ட விரோதம்.''

''சட்டத்தப்பத்தி நீ எங்களுக்குச் சொல்லித்தர்றயா? கோபாலேப் பத்தி உனக்குத் தெரிஞ்சதையெல்லாம் ஒளிவு மறைவில்லாம சொல்லிட்டா உன்னே யாரும் டச் பண்ணப் போறதில்லே'' என்ற ராம் செந்திலுக்கு ஜாடை காட்டினான். உடனே அவர் ''வா இப்படி'' என்று விக்ரமின் கையைப் பற்றி இழுத்தார். பக்கத்துக் கதவில் இருந்த தாழ்ப்பாளே விலக்கிஞர். சின்ன அறைக்குள்ளே அழைத்துக்கொண்டு போனார். ராமும் பின் தொடர்ந்தான்.

அந்த அறை தூசு துரும்பு இல்லாமல் சுத்தமாக மொசெய்க் தரையுடன் பளபளவென்றிருந்தது. ஜன்னல்கள் எதுவும் இல்லே. உட்காரக்கூட ஆசனம் கிடையாது. எட்ட முடியாத உயரத்தில் சுவரில் ஜெயில் ஸெல் போல ஒரு வென்டிலேட்டர்.

செந்தில் வெளியே போனார். வயரில் இணைக்கப்பட்ட மைக்கை இழுத்து வந்தார். ''பிடி'' என்று விக்ரமின் கையில் கொடுத்தார். மறுபடியும் வெளியேறினர். ஒரு சதுரக் கண்ணாடிப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தார். பெட்டியுடன் நீளமாக வயரும் வந்தது. ஒரு அடி உயர ஸ்டூலில் அந்தக் கண்ணாடிப் பெட்டி பதிக்கப்பட்டிருந்தது. கண்ணாடிக்குள் முக்கால் அடி நீள கருந்தேள்கள் பத்துப் பதினைந்து வதவதவென்று கொடுக்கைத் தூக்கிக் கொண்டு தயார் நிலேயில் நின்றன.

''ப்ளக்க சொருகிட்டீங்களா?'' என்று ராம் கேட்டதும் செந்தில் ''இந்தா சொருகிர்றேன்'' என்று அவசரமாக ஓடினர்.

''விக்ரம், இந்தத் தேளெல்லாம் ராஜஸ்தான் பாலேவனத்துல புடிச்சது. கொடுக்கு லேசா உரசுச்சுன்னு ஆள் காலி. உடனே காலியாக மாட்டாங்க. பன்னிரண்டு மணி நேரம் அவஸ்தைப் பட்டுச் சாவாங்க. இப்ப நாங்க என்ன பண்ணப் போறேங்கறத சொல்லிர்றேன்.''

உள்ளே வந்த செந்தில் ''ரெடி சார்'' என்றார் அவரைப் பார்த்து.

''நீங்களே சொல்லிருங்க'' என்றான் ராம்.

''உன்னே இந்த அறைக்குள்ளே வெச்சு கதவச் சாத்தப் போறேம். உன் கைல இருக்கிற மைக்ல நீயும் கோபாலும் சேர்ந்து செஞ்ச நல்லது கெட்டது எல்லாத்தையும் சொல்லணும்.''

---

''வர வர என் எழுத்துக்களுக்கு ராஙியே இல்லே!''

''ஏன்?''

'''பத்திரிகைகளுக்கு' எழுதறதுதான் திரும்பி வருதுன்னு பார்த்தா, ஃபார்மஸிகளுக்கு எழுதறதும் திரும்பி வந்துடுது, நான் எழுதிக்கொடுத்த மருந்து ஸ்டாக் இல்லேன்னு!''

– வெ. ?சுப்ரமன்



''நாங்க ரெண்டு பேரும் என்ன செஞ்சோங்கறீங்க?''

''மிச்சத்தையும் கேட்டுக்கோ. நீ பேசறது அறைக்கு வெளியே இருக்கிற டேப்ல பதிவாகும். 30 செகண்டுக்குள்ள நீ பேச ஆரம்பிக்கலே விளக்க அணைச்சு இருட்டாக்குவோம். இன்னொரு சுவிட்ச் இருக்குது. அதப் போட்டதும் பெட்டி கீழ்ப் பக்கத்திலே திறந்து தேளெல்லாம் தரையில விழுந்து ஓட ஆரம்பிக்கும். இருட்டில நீ இந்த தேள்ங்ககிட்டேர்ந்து தப்பிக்கவே முடியாது. புரிஞ்சுதா?''

''சத்தியமா எனக்கு எதுவும் தெரியாது. என்கிட்டேர்ந்து எந்த விஷயமும் உங்களுக்குக் கிடைக்காது. அநியாயமா என்னைக் கொல்லப் போறீங்க.''

அவன் பேசிக்கொண்டிருக்கும் போதே ராமும் செந்திலும் அறையை விட்டு வெளியேறினர். கதவு வெளிப் பக்கம் தாழிடப்பட்டது.

ராம் எலெக்ட்ரானிக் கடியாரத்தில் எண்கள் மாறுவதைக் கணக்கிட்டார். முப்பது செகண்டுகள் வேகமாக ஓடின. விக்ரம் பேசத் தொடங்கவில்லை.

விக்ரம் இருக்கும் அறைக்குள்ளே எரிந்த பல்பை அணைக்க செந்தில் சுவிட்சை அழுத்தினார். —தொடரும்

## ரூ. 200 காத்திருக்கிறது

'தொட்டதெல்லாம் பொன்னாகும்' தொடர்கதையின் அத்தியாயங்களுக்கிடையே இதுவரை வெளியான மூன்று கேள்விகளுக்கும் விடைகள் இவ்வலுவலகத்திற்கு வந்து சேரக் கடைசித் தேதி: 28-4-82.

மூன்றுக்கும் சரியாக விடை எழுதினால் சுவிதா ரூபாய் 200/- அன்பளிப்பாக அனுப்பி வைப்பார்.

ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் சரியான பதில்களை அனுப்பினால் குலுக்கல் முறையில் ஒரே ஒரு வாசகருக்கு முழுத் தொகையும் அனுப்பி வைக்கப்படும்.

## வட இந்தியாவில்

சர்தார்ஜி ஜோக்ஸ் என்றே ஒருவகை நகைச்சுவை உண்டு. பெரும்பாலும் அவை சீக்கியர்களைக் கிண்டல் செய்வதாகவே இருக்கும். சில பச்சையாக அமைந்திருக்கும். அவற்றை உருவாக்கியதே சர்தார்ஜியாக இருப்பது வழக்கம்.

உயர்ரக நகை இதழ்களும் அவ்வப்போது உதிர்வது உண்டு. ஹிந்துஸ்தான் டைம்ஸின் ஆசிரியர் குஷ்வந்த் சிங் அண்மையில் ஒன்றைப் படைத்திருக்கிறார்:

இந்து, இஸ்லாமிய, சீக்கியப் பூசாரிகள் மூவர் டெல்லி கன்னாட் ப்ளேஸில் நின்றிருந்தனர். உரையாடல் உலகாயதத் துறையில் திசை மாறிற்று.

பண்டிட் நாராயண் திவாரி கூறினார் — 'தினமும் வழிபாடு முடிந்து பக்தர்கள் திரும்பியதும் உண்டியல் பெட்டியைத் தலைகீழாக்கிக் குலுக்குவேன். அரை மணி நேரத்திற்குள் அதன் தொளை வழியாகக் கீழே விழுவது எனக்கு; மிகுதி ஆண்டவனுக்கு.'

மௌல்வி கமால் ஹுசேனின் வழி சற்று மாறுனது — 'பச்சைத் துணி போர்த்திய மஜாரின் குறுக்கே மெல்லிய கயிறொன்று கட்டியிருக்கிறேன். வலதுபுறம் விழுவது எனக்கு; மறுபுறம் இருப்பது இலாஹிக்கு.'

கியானி சர்தால் சிங் கையை உயர்த்திப் பேசினார் — 'எல்லாவற்றையும் மேலே உள்ளவன் அளிக்கிறான். ஆகவே உண்டியல் பெட்டியை ஒவ்வோர் இரவும் வானத்தை நோக்கி வீசுகிறேன். அவனுக்குரியதை அவனே எடுத்துக் கொள்ளும்படி மனமுருக இறைஞ்சுகிறேன். அவன் கீழே தள்ளியதை மட்டும் பெற்று நான் திருப்தி அடைகிறேன். வாஹே குரு நிறையவே படி அளக்கிறார்.'

— தி. சா. ராஜு

# ஆகவே, இதுவரை உங்களுக்குக் கிடைக்காத சுலபமாக ஓட்டிச் செல்லக்கூடிய சைக்கிளாக பிஎஸ்ஏ டீலக்ஸை டிசைன் செய்துள்ளோம்.



பி எஸ் ஏ டீலக்ஸின் மெலிந்த குழாய் அமைப்பு ஹப் களிலுள்ள கப்ஸ் சுலபமான ஓட்டத்தைத் தருகிறது.



பி எஸ் ஏ டீலக்ஸின் வட்டமான குழாய் வடிவ ஃபோர்க் திருப்பும் சக்தியை அதிகரிப்பதுடன் சுலபமான சவாரியையும் தருகிறது.



பி எஸ் ஏ டீலக்ஸின் ஃபிரேம் கோணம் விசேடமாய் டிசைன் செய்யப்பட்டுள்ளதால் உங்கள் முதுகுக்கும், கால்களுக்கும் தொந்தரவின்றி சுகமாய் அமைகிறது.



## புதிய பிஎஸ்ஏ டிலக்ஸ்—

## உங்கள் வெற்றிப் பாதைக்கு உற்ற துணை.

Rediffusion-TI-1911 TM

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

திடீர் யோசனை ஒன்று ராமைத் தாக்கியது. டு இன் ஒன் டேப் ரிகார்டரைக் கையில் எடுத்தான். விக்ரம் இருக்கும் அறையின் கதவருகே கொண்டு போய்த் தரையில் வைத்தான். FM என்ற எழுத்துக்கு நேராக இருந்த குமிழை மெதுவாக முன்னும் பின்னும் அசைத்தான். வால்யூமைக்

கூருந்தேள்களுடன் அறைக்குள்ளே அடைபட்டிருந்த விக்ரம், வெளிப்பக்கமிருந்து செந்தில்




விளக்கை அணைத்தபிறகும் மௌனம் சாதித்தான்.

அவனுடைய வாக்குமூலத்தைக் காஸெட்டில் பதிவு செய்யத் தயாராக நின்ற ராமும் செந்திலும் அடுத்து என்ன செய்யலாம் என்பது போல ஒருவரை ஒருவர் பார்த்தனர்.

குறைத்தான். 'விஷ்ஷ் விஷ்ஷ்' என்று வெகு தொலைவில் கடல் அலையடிப்பதைப் போன்ற சப்தம் எழும்பியது.

அந்தச் சப்தம், அறைக்குள்ளே இருந்த விக்ரமிற்கு இன்னும் மெலிதாக, பாம்பின் சீறலைவிட மெலிதாகக் கேட்டிருக்க வேண்டும். அவன், பெட்

கருள் இருந்த விஷஜந்துக்கள் வெளி
யறி ஊர்ந்து அவனை நோக்கி வந்து
காண்டிருக்கின்றன என்று நினைத்
ானே என்னவோ,. ''ஐயையோ
ும்மா, என்னைக் கொன்னுராதீங்க,
ான் சொல்லிர்றேன், எல்லாத்தையும்
சால்லிர்றேன், கதவத் திறங்க''
ன்று கதவைப் படபடவென்று தட்
க்கொண்டு அலறினான்.

ராம் 'விஷ் விஷ்' எழுப்புவதை
றுத்திவிட்டு உரத்த குரலில்
'சொல்லு, இன்னும் பெட்டியத்



திறக்கல. மூணு எண்றதுக்குள்ள சொல்ல ஆரம்பிக்கலே, பெட்டியத் திறந்திருவோம்'' என்றான்.

''என்ன சொல்லணும்?''

''கோபாலைப் பத்திச் சொல்லு. அவன் குடும்பத்தப் பத்தி உனக்குத் தெரிஞ்சதைச் சொல்லு. நீயும் அவனும் சேர்ந்து பண்ண எல்லா அக்கிரமங்களையும் ஒளிக்காமச் சொல்லு. உண்மையச் சொன்னா விடியக் காலமாவது நீ வீட்டுக்குப் போகலாம்.''

''எங்கப்பா காத்தபெருமாளோட ஃபாமிலி டாக்டர். நான் கோபாலோட காலேஜ் மேட்...'' என்று விக்ரம் ஆரம்பித்தான். அந்தப் பேச்சைப் பதிவு செய்வதற்காக ராம் டூ இன் ஒன்னில் ஒரு பொத்தானை அழுத்தினான்.

''ரெண்டு பேரும் ஒண்ணா சினிமாவுக்கும் ஓட்டலுக்கும் போவோம். ராத்திரில சுத்துவோம். கோபால் ரொம்ப பயந்த சுபாவமுள்ளவன். தன்னால குடும்ப கௌரவம் கெட்டுப்போகக் கூடாதுங்கறதுல ரொம்பக் கவனமா இருப்பான். அவனுக்கு எல்லா வீக்னெசும் உண்டு. எல்லாத்தையும் ரகசியமாச் செய்யணும்னு பார்ப்பான். தனியா எதிலயும் இறங்கமாட்டான். அதனால என்னைக் கூட்டாளியாச் சேர்த்துக்கிட்டு... சார் கதவத் திறந்து வெளில விடுங்க சார்... ப்ளீஸ்... எல்லாத்தையும் ஒண்ணுவிடாமச் சொல்லிர்றேன் சார். ஒரே வேக்காடா இருக்கு. மூச்சுத் திணறுது சார்'' என்று கெஞ்சினான்.

செந்தில் ராமைப் பார்த்தார். ராம் முகத்தைச் சுழற்றி ஜாடையால் கதவைத் திறக்கச் சொன்னார். செந்தில் கதவைத் திறந்தார். வியர்வையில் குளித்து எழுந்தவனாக விக்ரம் வெளியே வந்தான். அவன் முகம் பயத்தால் வெளுத்திருந்தது.

''இப்படி உட்கார்'' என்று ராம் அவனுக்கு நாற்காலியைக் காட்டினான். அவன் உட்கார்ந்தான்.

''ம், சொல்லு.''

''நான் அவன் இடுப்பில பெத்தடின் ஊசி குத்தி விடுவேன். அவன் எனக்குப் போடுவான். அப்போ ஸ்டர்லிங்ல இருக்கிற காத்தபெருமாளோட பங்களா காலியாக் கிடந்தது. பங்களாவச் சுத்திக் காடு மாதிரி மரமும், சோலையுமா இருக்கும். அந்தக் காம்பவுண்டுக்குள்ள ஒரு அண்டர்

கிரவுண்ட் ரூம் இருந்தது. ஒருநாள் அங்க விறகு பொறுக்க வந்த பன் ரெண்டு வயசுப் பொண்ணை மிரட்டி அந்த அண்டர்கிரவுண்ட் ரூமுக்குள்ளே போட்டு ரெண்டு பேரும் மாறி மாறி ரேப் பண்ணோம். மயக்கமாயிட்டா. தூக்கிட்டுப் போயி வெளில பிளாட் பாரத்துல போட்டுட்டோம். அவளால ஆபத்து ஏதாவது வருமோன்னு பயந் துக்கிட்டே இருந்தோம். ஒண்ணும் வரல. அதுக்குப் பிறகு பல பெண் களை அந்த அறைக்குக் கொண்டு போயி ஒண்ணு அனுபவிச்சோம்.''

''சுமார் எத்தனை பேரை?''

''கணக்குத் தெரியல சார். நாலஞ்சு காலேஜ் கேர்ள்ஸ், ஒரு லேடி டாக்டர், அஞ்சாறு ஸ்டெனோ, டெலி போன் ஆபரேட்டர், நர்ஸ், பஸ் ஸ்டாப்ல குழந்தையக் காட்டிப் பிச்சை யெடுத்துகிட்டிருந்த ஒருத்தி, எக்ஸ்ட்ரா நடிகைகள், ஒரு பிரபல நட்சத்திரம் -''

''யாரு?''

''    ''

''சரி, அப்புறம்?''

''ஒரு ஆடிட்டரோட ஒய்ஃப் -''

''அப்படிச் சொல்லாத, பெயர் களைச் சொல்லு.''

''எல்லாப் பெயரும் ஞாபக மில்லே.''

''ஞாபகத்தில இருக்கிறதச் சொல்லு.''

''நளினி, மீரா, விமலா... நந்தினி... பவானி, நிஷா, சந்திரிகா, எலிசபெத், கீதா, கீதா காமத், அப் புறம் இன்னொரு கீதா... ஸ்டெல்லா, ஜோதி, ப்ரீதி ஜோசப், வள்ளி, கலா வதி, மீனு குப்தா -''

''எந்த மீனு குப்தா?''

''ஏர்ஹோஸ்டெஸ்''

''கமலான்னு யாரையாவது தெரியுமா?''

''பங்களூர்க் கமலாவக் கேக்கறீங் களா?''

''ஆமா''

''சாலிக்கிராமத்தில இருக்கா. பத்தினி மாதிரி அல்ட்டிக்குவா.''

ராம், செந்திலைப் பார்த்துச் சிரித் தான். விக்ரம் தொடர்ந்தான்.

''ரெண்டு மூணு வருஷம் நானும் கோபாலும் இப்படி ஒண்ணு வே பொழுதக் கழிச்சோம்.''

''அப்புறம்?''

அட்டையில்...




ஆண்களும் பெண்களுமாகப் பத்தொன்பது பேரைக் கொண்ட சோவியத் கலாச்சாரக் குழு குடியரசு நாள் கொண்டாட்டத்துக்காக புது டில்லி வந்தது. மாஸ்கோ ஒலிம்பிக் சமயம் கலை நிகழ்ச்சிகளை நடத்திய இக்குழுவினர் தங்களுடைய பியானோ அகார்டின், விசித்திர வடிவங்களைக் கொண்ட கிடார், மாண்டலின் வாத்தி யங்களுடன் சென்னைக்கு வந்தனர்.

இக் குழுவில் வந்த 'வெரோனெஜ் மகளிர்' என்று அழைக்கப்படும் அழகிகள் கண்ணைப் பறிக்கும் உடை அணிந்து இளவரசிகளைப் போல முடி சூடி மெல்லிய கிராமியப் பாடல்களைப் சோவியத் கலாச்சார மையத்தில் தேனைப் பொழிந்தனர். கண்ணியமும் நளினமும் சேர்ந்த அசைவுகளுடன் கைகளைக் கோர்த்துக்கொண்டு களங்க மில்லாமல் கலை ஒழுங்கோடு ஆடினர். குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்து

''கம்ப்ளீட்டா அந்தத் தொழிலேயே விட்டுட்டோம்.''

''ஏன் அப்படி?''

''ஒரு நாள் ஈவ்னிங் கோபால் கம்பெனில மேனேஜரா வேலே பார்த்த வீரராகவன் அவரோட வொய்ஃப ஸ்டர்லிங் பங்களாவுக்கு அனுப்பி வெச்சாரு.''

''எதுக்கு?''

''அதா... எங்களுக்குக் கம்பெனி குடுக்கத்தான்.''

''சரி சொல்லு.''

''சாய்ந்தரம் ஆறு ஆறரைக்கு நான், கோபால், மிஸஸ் வீரராகவன் மூணு பேரும் அண்டர்கிரவுண்ட் நமுக்குள்ளே இறங்கிளும். அன்னிக்கு நான் கொஞ்சம் ஓவரா ட்ரிங்ஸ் சாப்பிட்டேன். ஒன்பதரை வரைக்கும் அவளே நாங்க ரெண்டு பேரும் எஞ்சாய் பண்ணேம். மழை திடீர்னு புடிச்சிக்கிருச்சு. நான் ஃபுல் பூஸ்ல இருந்ததினுல என்னுல பைக்க எடுக்க முடியல. கோபால் அவளே பைக்ல ஏத்திக்கிட்டு பஸ் ஸ்டாப்ல கொண்டு போயி விடப்போனுன். திரும்பி வர்றப்ப ஆக்சிடன்ட் ஆகி தொடை கிழிஞ்சிருச்சு. அன்னிக்கு ராத்திரி எங்கப்பாதான் அவனுக்கு ஒரு சின்ன ஆபரேஷன் பண்ணிஞரு. அந்த ஆபரேஷனுக்குப் பிறகு ஆம்பிளேத்தனம் அவனே விட்டுப் போயிருச்சு. ஆனு அத சாகறவரைக்கும் அவன் யார்கிட்டயும் சொல்லல. சொல்ல வெக்கப்பட்டான்.''

''உன்கிட்ட கூட சொல்லலியா?''

''இல்லே சார்.''

''அப்புறம் உனக்கு எப்படித் தெரிஞ்சது?''

''அவனேட வொய்ஃப் ப்ருந்தா கல்யாணத்துக்குப் பிறகு அதை என் கிட்டச் சொல்லி அழுதாங்க.''

''ப்ருந்தாவோட நெருக்கமாப் பழகினயா?''

''சத்தியமா இல்லே. ஊர்லேர்க்கிற எத்தனேயோ பெண்களே அனுபவிச்சேன். ஆனு சிநேகிதனேட மனேவியத் தொட எனக்கு மனசு இடம் குடுக்கல.''

''கோபாலோட ஆக்சிடன்டுக்குப் பிறகு நீ மட்டும் தனியா பழைய தொழிலே கண்டின்யு பண்ணயா?''

''இல்லே''

---

அற்புதமான கலேநிகழ்ச்சியை நடத்திக் காட்டினர். வாழ்க.

கொசுக்களே விரட்டிப் பிடிப்பதையும் அடிப்பதையுமே கதக்களி நடனம் போல, பட் பட் பட் என்று உடம்பில் அடித்துச் சப்தம் எழுப்பிக்கொண்டு அபாரமாக ஆடிக்காட்டி சிரிப்பலேகளே எழுப்பினர் கொசுதீன்; ஸாரி – கொபிதீன் என்ற இளேஞர்.

நான்கு ஆண்டுகள் மாஸ்கோ சர்க்கஸ் பள்ளியில் பிளாஸ்டிக் ஸ்டடி என்ற உடல் வளேப்புக் கலேயைக் கற்றுத் தேர்ந்த வியாத்கிஞ என்ற அழகி (அட்டை) உடலேப் பிசைந்த மைதாவைப் போல பலவித டிசைன்களில் வளேத்துக் காட்டியது மெய்சிலிர்க்க வைத்தது.

தலேகீழாக கைகளால் நின்று உடலே வளேயம் போல் உருட்டிய வியாத்கிஞ கால் விரல்களால் வில்லேயும் அம்பையும் பிடித்து பின்பக்கம் சற்றுத் தூரத்தில் இருந்த ஊதிய பலூனேக் குறிபார்த்து அம்பை அடித்தார். பலூன் 'டப்'! பிரமிப்பால் ஆடிட்டோரியத்தில் எல்லாருடைய வாய்களும் சில நொடிகளுக்குத் திறந்தபடியே இருந்தன. இப்பெண்மணியின் தாயும் இக்கலேயில் தேர்ச்சி பெற்றவராம். தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினறு அடி பாயும் என்பார்கள். வியாத்கிஞவின் பிளாஸ்டிக் வேலேகளேப் பார்த்தபோது தாயே பதினறு அடி பாய்ந்திருக்க வேண்டும் என்று தோன்றியது.

இளம் மந்திரவாதி கோந்த்சோவ் சில வளேயங்களேயும் பந்துகளேயும் வண்ணக் கைக்குட்டைகளேயும் வைத்துக்கொண்டு நன்ருகவே பூச்சுற்றிஞர். இவருடைய ஏமாற்றும் சாமர்த்தியத்தை மெச்சி பம்பாயிலுள்ள 'இந்திய மந்திரவாதிகளின் அகாடமி' இவரை கௌரவ உறுப்பினராக சுவீகாரம் எடுத்துக்கொண்டிருக்கிறது.

''ஏன்?''

''கோபால் ஆஸ்பத்திரிலேர்ந்து டிஸ்சார்ஜ் ஆனபிறகு ஒருநாள் ஒரு பூக்காரிய பைக்ல ஏத்திக்கிட்டு ஸ்டர்லிங் பங்களாவுக்குப் போனேன். கோபால் உள்ளயே வராதேன்னுட்டான். அண்டர்கிரவுண்ட் கதவை இழுத்துப் பூட்டிட்டான். உன் வழிகளே மாத்திக்கலேன்னு நீ என் நண்பனு இருக்க முடியாது, நான் கல்யாணம் பண்ணிக்கிட்டுச் சுத்தமா வாழப்போறேன்னுன். திடீர்னு திருந்திட்டான்னு நினைச்சேன். செக்ஸ் ஆசையே அவனே விட்டுப் போயிருச்சுங்கறது அப்ப எனக்குத் தெரியாது. எனக்கும் திடீர்னு உடம்பெல்லாம் அரிப்பு மாதிரி வந்து சொறிஞ்ச இடமெல்லாம் வீங்க ஆரம்பிச்சுது. டாக்டர் டெஸ்ட் பண்ணிட்டு, அலெர்ஜிதான், ஆனு லேடீஸ் விஷயத்திலே ஜாக்கிரதைய்யா இருக்கணும்னு சொன்னுர். நான் பயந்து எல்லாத்தையும் அடியோட நிறுத்திட்டேன்.''

''ப்ருந்தாவ எப்ப முதல் முதலா சந்திச்சே?''

''அவங்க கல்யாணத்துக்கு முன்னுல ஒருநாள் கோபாலும் அவங்களும் ஒரு ரெஸ்டாரென்ட்ல உக்கார்ந்து சாப்பிட்டுக்கிட்டிருந்தாங்க. இதுதா[ன்] என் வருங்கால மனைவி ப்ருந்தான்[னு] அவங்களே கோபால் எனக்கு அறிமுக[ம்] செஞ்சு வெச்சான்.''

''கல்யாணத்துக்குப் பின்ன[ால] ப்ருந்தாவ நீ தனியா சந்தி[ச்சிருக்]துண்டா?''

''நிறைய. ஆனு தப்பா நடந்து[க்]கிட்டதில்லே.''

''ஆண்மையில்லாத கோபாலுக்[கு] மனைவியான ப்ருந்தா கர்ப்பமானு[ங்]கங்கறது உனக்குத் தெரியுமா?''

விக்ரம் சிறிது தயங்கிவிட்டு ''அபார்ஷனுக்குப் பிறகுதான் அ[து] எனக்குத் தெரியும்''

''யார் சொன்னது?''

''அவங்களேதான் சொன்னுங்[க]''

''எங்க வெச்சுச் சொன்னுங்க[?] அடையாறு பங்களாவுக்குப் போயி[ரு]ருந்தயா?''

''இல்லே. கோபால் இறந்த[து]துக்கு மறுநாள் மீனு மெடர்னிட்டி ஹோம்ல சந்திச்சேன்'' என்ற வி[க்]ரமை செந்திலும் கோபாலும் ஆச்சா[ரி]யத்துடன் பார்த்தனர். விக்ரம் பேச்சைத் தொடர்ந்தான்.

— தொடரு[ம்]

என்ருல் இவரது பூச்சூடல் திறமையை நீங்கள் புரிந்துகொள்ளலாம்.

கோந்த்சோவிடம் தனியாகச் சில கேள்விகள் கேட்டபோது...

– மெஸ்மெரிசத்தில் உங்களுக்கு நம்பிக்கையுண்டா?

– உண்டு

– நீங்கள் சற்று முன் செய்ததற்கும் மெஸ்மெரிசத்துக்கும் சம்பந்தம் உண்டா?

– இல்லே. நான் செய்ததெல்லாம் ட்ரிக்ஸ். கைவேலே.

– இந்த மந்திர வித்தையெல்லாம் பொதுமக்களே ஏமாற்றுவதற்குச் சமமில்லேயா?

– அப்படிச் சொல்ல முடியாது.

– உழைப்பையே மதமாகக் கொண்ட ருஷ்ய நாட்டில் எம்ப்டி பக்கெட்டில் சில்லறையை வரவழைக்கும் இந்தப் பித்தலாட்டக் கலேக்கு எப்படி ஆதரவு தருகிறீர்கள்?

– மந்திர தந்திரம் என்பது தே[வ]தைக் கதை (Fairy tale) சொல்லி[க்] குழந்தைகளே மகிழ்விப்பதைப்போல[ப்] பிறருக்குத் தீங்கு விளேவிக்காமல் ம[க்]களே மகிழ்விக்க இக்கலேயைப் பயன்படுத்துவதில் என்ன தவறு?– என்கிரு[ர்] கோந்த்சோவ். இவரது மனைவியு[ம்] இதே குழுவில் ஒரு நடன மாது (அட்டை)

ஸ்காஸ் குவார்ட்டெட் இசை[க்] குழுவினர் வழங்கிய கிராமிய வாத்திய இசை உணர்வுகளே வருடிக் கொடு[த்]தது.

செக்ஸ், ஆபாசம், இரட்டை அர்த்தம் எதுவும் இல்லாமல் தரமா[ன] எளிய நகைச்சுவை கலந்த இ[து] போன்ற கலே நிகழ்ச்சிகளால் ந[ம்] ஊர்க்காரரின் ரசனைத் தரத்தைக்கூட உயர்த்தலாம் என்பதற்கு இந்தக் கலே நிகழ்ச்சி ஓர் உதாரணம்.

– சவீதா

# நிறுத்தப்பட்ட செய்திகள்



ஒரு மலையாள சினிமாஸ்கோப் படத்தில்
நடிக்க வந்திருந்த ராஜபார்வை
நாயகி, படப்பிடிப்பில் நல்ல மூவ்மெண்ட்
தராமல் இருந்தாராம்.
டைரக்டர் காரணம் கேட்டதற்கு
'முந்திரிப் பருப்பு சாப்பிடணும் போல
ஆசை வந்துச்சு. கேட்டேன்.
இவரை தரவில்லை;' என்று சொல்ல,
உடனே கார் அனுப்பி முந்திரிப் பருப்பை
வாங்கி வந்தபின் அந்த நடிகை
நடித்திருக்கிறார். இது நிஜமாகவே
நடந்தது.

'யாதோங்கி பாராத்' மலையாளப்
படத்திற்கான பாடல் காட்சி.
ப்ரிய நடிகையின் கையை,
ஒருதலை ராக நாயகன் ரிகர்சலில்
தொட்டு நடித்தாராம்.
ப்ரிய நாயகி, இதெல்லாம் எனக்குப்
பிடிக்காது என்று சொன்னாராம்.
நாயகனுக்கு மூடு அவுட்.
காட்சியும் இயற்கையாக அமையாமல்
போகவே, நடிகர், 'இளப்பமாக
இருக்கிறவர்களிடம் முறைச்சு என்ன
ஆகப் போகிறது? பெரிய நடிகரிடம்
காட்டியிருந்தால் நடப்பதே வேருக
இருந்திருக்கும்' என்று முணுமுணுத்துக்
கொண்டாராம்.

நீலம்தானு? என்று கேட்கும் ஒரு
இரண்டு எழுத்து டைரக்டர், 'ராமாயி'
நடிகையின் கழுத்தில் தொங்கியிருந்த
சினிமாத் தாலி அறுந்துவிடவே,
இரண்டாவது தாலியை
தானே கட்டிவிட்டாராம். இதை படத்தின்
ஸ்டில் போட்டோகிராபர் படமாக
எடுக்க, இந்தப் படம் வெளியே
வரக்கூடாதென்று டைரக்டர் உத்தரவு
போட்டிருக்கிறார். சினிமா தாலிதானே!
இதிலென்ன பயம்?

பயணங்கள் முடியாமல் போன ஒரு
இளம் டைரக்டர். இரட்டை
இசையமைப்பாளர்களை தயாரிப்பாளர்கள்
விரும்பியும், போடக்கூடாதென்று
சொல்லி விடுகிறாராம். இவர்கள்
இசையமைப்பாளர்கள் என்று
சொல்வதற்குத் தகுதி இல்லாதவர்கள்
கிறாராம்.

பத்து நாட்களாக ராமைத் தொலைபேசியிலும் வீட்டிலும் பிடிக்க முடியாதது, லாவண்யாவுக்குள் ஆச்சரியத்தையும் குழப்பத்தையும் மெலிதான சோகத்தையும் விநாடிக்கு விநாடி வளர்த்துக்கொண்டிருந்தது.

ஒரு சோம்பலான பிற்பகல். பாலம் பத்திரிகை அலுவலகத்தில், மின்விசிறி சுழலும் மாடியறையில், அடுத்த இதழுக்காக ஒரு கட்டுரையை லாவண்யா எழுதி முடித்தாள். இறுதிக் கட்ட 'டச்அப்'களைச் செய்தாள். தொலைபேசி கிணுகிணுத்தது.

ராம்தான் என்று எண்ணிக் கொண்டு மனம் படபடக்க ரிசீவரைக் கையில் எடுத்தாள். அவள் நினைத்தது சரிதான்.

''உடனே வரமுடியுமா லாவண்யா?'' என்று ராமின் குரல் கேட்டது.

''எங்கே?''

''ஆட்டோ பிடிச்சு . பூந்தமல்லி ஹைரோட்ல நேரு பார்க் பக்கம் வந்திரு. அரை மணி நேரத்தில வந்திரு. நான் காரை எடுத்துக்கிட்டு நேரா அங்கே வந்திர்றேன்.''

'எங்கேர்ந்து பேசறீங்க?''

'ஆபீஸ்லேர்ந்து.''

''சரி வந்திர்றேன்.''

''கொலையாளியக் கண்டுபிடிச்சிட்டேன். அதச் சொல்லத்தான் கூப்பிடறேன்.''

''யாரு சொல்லுங்க?''

''அரை மணி நேரம் பொறுத்துக்கக் கூடாதா?''

''ஒகே ராம். நான் வந்துக்கிட்டே இருக்கேன்.''

''பெரிய கதையே சொல்லப் போறேன், லாவண்யா. பேப்பர் பேனா எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு வா. சில போட்டோக்களும் தர்றேன். நான் சொல்றத உங்க பாலம் பத்திரிகைல அடுத்த இதழ்லயே எழுதிரலாம். கோபால் மரணத்துக்குப் பின்னால இருக்கிற ரகசியங்களை, சோகங்களை, அசிங்கங்களை முதல் முதலா உலகத்துக்கு அம்பலப் படுத்தற பெருமை பாலம் பத்திரிகைக்

சவீதா















குக் கிடைக்கும். இந்த இன்வெஸ்டிகேஷன்ல போலீசுக்கு நீ செஞ்ச உதவிக்கு நான் செய்ற கைமாறு இதுதான்.''

''இவ்வளவுதானு? கொலையாளியக் கண்டுபிடிக்க நான் உதவினு நான் கேக்கறத வாங்கித்தர்றேன்னு சொன்னிங்களே.''

''நிச்சயமா. உடனே வா.''

அரை மணி நேரத்துக்குப் பின் –

சில தினங்களுக்குமுன் விக்ரமை கருந்தேள்களுடன் அடைத்துப்போட்டு விசாரித்த அறைக்குப் பக்கத்து அறைக்குள் இரண்டு கான்ஸ்டபிள்கள் [illegible]




டபிள் செவன் புட்டிகளை எடுத்துக் கொண்டு வந்தனர். வட்ட மேஜை மீது வைத்துவிட்டு வெளியேறினர்.

ராமும், அவனுக்கு எதிரே நாற்காலிகளில் சாய்ந்திருந்த செந்திலும் லாவண்யாவும் ஓய்வு பெற்ற சில போலிஸ் அதிகாரிகளும் கைகளை நீட்டி ஆளுக்கொரு புட்டியை எடுத்தனர். ராம் குளிர்பானத்தை ஒரு முறை உறிஞ்சிவிட்டுக் கீழே வைத்தான். பேச ஆரம்பித்தான்.

''பிரமுகர் காத்தபெருமானோட ஒரே பிள்ளை கோபால் ஒரு நாள் முன்னிரவு ஸ்டர்லிங் லேர்க்கிற அவனோட பங்களாவில இறந்து கிடந்தான். போலீஸ் அங்க போனப்ப அவனோட மனைவி ப்ருந்தா பங்களாவில இல்லே. அவுட்ஹவுஸ்லே குடியிருந்த எஸ்டேட் ஆபீசரும் அவர் மனைவியும் ஒரு தோட்டக்காரனும் ஒரு காவலாளியும் அங்கே இருந்தாங்க.

கோபால் தொடையில ராட்சஸ நகத்தினால பள்ளம் பதிச்ச மாதிரி வட்டமா அஞ்சு பள்ளம். கழுத்தில கயிறு இறுக்கின அடையாளம். கார் ஷெட்ல ஒரு சிவப்பு கயிறு. அங்கே இருந்த சிவப்பு ஃபாரின் கார் காணாமப் போயிருந்தது.

ஸஸ்பிஷியஸ் டெத்னு முடிவு பண்ணி இன்வெஸ்டிகேஷனை ஆரம்பிச்சோம். இன்ஸ்பெக்டர் செந்தில் திறமையா புலன் விசாரணைய நடத்தினார். ரிடையரான நீங்களும் நிறைய உதவி பண்ணியிருக்கீங்க. ரிப்போர்ட்டர் லாவண்யா காலமான கோபாலோட சம்பந்தப்பட்டவங்களைப் பேட்டி கண்டு ஒரு டயரி நிறைய எழுதி அந்த டயரிய பத்து நாளைக்கு முன்னால என் கிட்ட குடுத்தாங்க. நானும் நேரடியா பலபேரை விசாரிச்சேன்.

கோபால் பங்களாவில இருந்த கைரேகைகள், தோட்டத்தில இருக்கிற அண்டர்கிரவுண்ட் அறைல கிடைச்ச தடயங்கள், பெரியவர், அவர் மனைவி, ப்ருந்தாவோட சிநேகிதி கல்பனா, அவளுடைய பாய் ஃப்ரெண்ட் ரமேஷ், ஃபாமிலி டாக்டர், அவருடைய பின்னையும் கோபாலோட சிநேகிதனுமான விக்ரம், அவனோட கூட்டாளியான ப்ரைவேட் ஐ. எழுத்தாளர் சவிதா, புரொட்யூசர் நாச்சியப்பன், விபசாரத்தில ஈடுபட்டிருக்கிற பங்களூர்க் கமலா, ஸ்டர்லிங் பங்களாவில குடியிருக்கிற எஸ்டேட் ஆபீசர், வேலைக்காரங்க, கார் டிரைவர் வேலுச்சாமி எல்லாருடைய ஸ்டேட்மென்ட்களையும் நான் கேர்ஃபுல்லா ஸ்டடி பண்ணேன். ப்ருந்தாவோட வாழ்க்கைய ஒரு வழியா ரீகன்ஸ்ட்ரக்ட் பண்ணிப் பார்க்க என்னால முடிஞ்சது.

ஏராளமான கேள்விகளோட நான் ப்ருந்தாவ அப்ரோச் பண்ணேன். மூனு மணி நேரம் தனியா இன்டராகேட் பண்ணேன். கடைசில வேற வழி இல்லாம அவ மனம் திறந்து உண்மைகளை ஒத்துக்கிட்டா. ஷி இஸ் வெரி இன்டலிஜென்ட். அவளோட வாக்கு மூலத்தை நேத்துத்தான் டேப்ல பதிவு செஞ்சேன்.

ஒரு காலேஜ் ஹாஸ்டல் ரூம்ல ப்ருந்தா, கல்பனான்னு ரெண்டு மாணவிகள். ப்ருந்தா கிழக்குன்னா கல்பனா மேற்கு.

ப்ருந்தா ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்தவ. வாத்தியாரோட பெண்ணு. ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவ. Morally conservative. பழமையில பிடிப்பு உள்ளவ. பூ பொட்டு மாங்கல்யம் கற்பு எல்லாத்திலயும் நம்பிக்கையுள்ள தமிழ்ப் பெண். ஆண்கள்கிட்ட பேசக் கூட கூச்சப்படறவ.

கல்யாணம் பண்ணி சாந்தி முகூர்த்த ராத்திரிலதான் வெர்ஜினிடிய இழக்கணும்னு பிடிவாதமா செக்ஸ் விரதம் இருந்தவ.

---



''விருந்தா கல்யாணம்! நம்ம பெண்ணை நிஜோர்னு காதேளுங்க! மாப்பிள்ளைக்கு தெரிஞ்சா விபரீதம் ஆயிடுமே!''

''கவலேயே வேணாம்! மாப்பிள்ளேயோடத்தான் நம்ம பெண்ணு நைட்ஷோ போயிருக்கா, பக்கத்து தியேட்டர்ல!''



# 'பிரா' இல்லாமல் வரக்கூடாது!



செக்கோஸ்லோவேகியா நாட்டின் தலை நகர் 'பிரேக்.' அங்கு உள்ள ஒரு டி. வி. நிலையத்துக்கு ஒரு கேட்கீப்பர் வேண்டுமென்று பத்திரிகைகளில் விளம்பரம் கொடுத்தார்கள். அவ்வளவுதான். நூற்றுக்கணக்கான அப்ளிகேஷன்கள் வந்து குவிந்துவிட்டன! அதில் பலர் பட்டதாரிகள். அவர்களுக்கு அந்த வேலையில் ஏன் அவ்வளவு மோகம்? டி. வி.யில் வேலை செய்யும் பெண்கள் 'பிரா' இல்லாமல் வரக்கூடாது. தினமும் டி. வி. நிலையத்துக்குள் நுழையும்போது அவர்கள் 'பிரா' போட்டுக்கொண்டிருக்கிறார்களா என்று கண்காணிக்க வேண்டியது கேட் கீப்பரின் வேலை!

*—'வீக் எண்ட்' இதழிலிருந்து அனிதா ராமச்சந்திரன்*

கல்பனா அப்படி இல்லே. எதுக்கும் கட்டுப்படாத லிபரேடட் கேர்ள். ராத்திரிதான் அவளுடைய வாழ்க்கையே ஆரம்பமாகும். டிஸ்கோ கஞ்சா சிக்கன் சிகரெட் மாட்டுக்கறி எல்லாம் அவளுக்குத் தண்ணிபட்ட பாடு. செக்ஸ்தான் அவளுக்கு பிடித்தமான பொழுதுபோக்கு, விளையாட்டு.

ப்ருந்தாவும் கல்பனாவும் சிநேகிதிகளா இருந்தாங்களே தவிர ஒர்த்தர் வாழ்க்கை முறைகளை இன்னொர்த்தர் வெறுக்கலே. மாத்தறத்துக்கு முயற்சிக்கலே.

டெய்லி ஒரு பாய் ஃப்ரெண்ட்டோட தூங்கிக்கிட்டிருந்த கல்பனா திடீர்னு ஒருநாள் ரமேஷ்ங்கறவனோட செட்டில் ஆயிட்டா. தாலி கட்டிக்காம ரெண்டு பேரும் ஒண்ணா ஒத்துமையா, கல்யாணத்திலே ஒண்ணாச் சேர்ந்த கணவன் மனைவியவிட ரொம்ப யோக்கியமா வாழத் தொடங்கினாங்க. இன்னும் அப்படித்தான் வாழ்ந்துக்கிட்டிருக்காங்க. இப்போ அவனுக்கு உதடு கிழிஞ்சு முகம் கொஞ்சம் விகாரமா இருக்கு. ஆனா இப்பக்கூட கல்பனா அவன்கிட்ட பழைய மாதிரியே அன்பு செலுத்தறா. இப்பவும் இரவுப் பார்ட்டிகளுக்கும் டிஸ்கோவுக்கும் போறாங்க. ஆனா தனியா போறதில்லே. ஒண்ணா போறாங்க. ஜோடியா மாத்திக்கற ஸ்விங்கிங் டைப்

ப்ருந்தா கோடீஸ்வரன் கோபாலுக்கு மனைவியானா. முதல் இரவு வந்தது. பெயரளவுக்குத்தான் நான் உனக்கு கணவனாக இருக்க முடியும், பைக் ஆக்சிடன்ட்லஎன் ஆண்மையும், செக்ஸ் ஆசையும் பறிபோயிருச்சுன்னு கசப்பான உண்மைகளை படுக்கை வரைக்கும் வந்த பிறகு கோபால் சொல்லியிருக்கான்.

கல்யாணம் பண்ணி சாந்தி முகூர்த்த ராத்திரில கன்னித்தனத்தை இழக்கிறதுதான் தமிழ்ப் பண்பாடுன்னு உணர்ச்சிகளை அடக்கி ஒடுக்கி முதல் இரவுக்காக பட்டினியோட காத்திருந்தவ ப்ருந்தா.

கோபால் சொன்னது அவள் நெஞ்சில் சம்மட்டி அடிகளாக விழுந்திருக்கு. ஏமாற்றமும் வெறியும் அவளுக்குள்ளே மிருக வெறியத் தூண்டிருக்கு.

சீ, மானங்கெட்டவனே, உனக்கு ஏமாத்தறதுக்கு என்னை மாதிரி ஒரு பாவமும் அறியாத ஏழைப் பெண்தானா கிடைச்சா? போடா வெளியே, என் கண்முன்னால நிக்காதேன்னு ஹிஸ்டீரியா வந்த மாதிரிக் கூச்சல் போட்டிருக்கா.

அவன், நீ சொல்றபடியெல்லாம் நான் செய்றேன்; என் பலவீனத்தை எங்க அம்மா அப்பாகிட்ட மட்டும்

சொல்லிராத; ஃபாமிலி டாக்டரைத் தவிர வேற யாருக்கும் இது தெரியாது; இந்த ரகசியத்தை மட்டும் காப்பாத்துன்னு சொல்லிட்டு வெளியேறிட்டான்.

வாழ்க்கைய அனுபவிக்கலாம் வாடீன்னு எத்தனை ராத்திரி உன்னை அழைச்சேன். கல்யாணம் ஆகற வரைக்கும் இந்தத் தப்பெல்லாம் பண்ணக்கூடாதுன்னு முரட்டுப் பிடிவாதம் பிடிச்சயே. தாலி கட்டும்போது ஆண் எப்படி இருந்தாலும் பெண் மட்டும் கன்னியாத்தான் இருக்கணும்னு வாதம் பண்ணயே. முதலிரவில தான் கன்னித்தன்மைய இழப்பேன், அதுவரைக்கும் சுத்தமா இருப்பேன்னு சபதம் பண்ணயே. என்ன ஆச்சு, பாத்தயான்னு கல்பனா அவளைப் பார்த்து ஏளனமாகச் சிரிக்கிற மாதிரி ஃபீலிங்.

இந்த இரவு உனக்கு முதல் இரவு. இன்னிக்கு ராத்திரி உனக்கு கன்னி கழிஞ்சே ஆகணும். என்ன வேணும்னாலும் செய்னு ஒரு மாதிரியான பழிவாங்கற வெறி அவளைத் துரத்தியிருக்கு.

தூரத்தில கோபால் ஓட்டிக்கிட்டுப் போன காரோட பின்பக்கச் சிவப்பு விளக்கு தெரிஞ்சிருக்கு. மாடி ஜன்னல் ஓரமாக சிலை மாதிரி நின்னு பாத்துக்கிட்டிருந்தவ மெல்ல மாடிப்படில இறங்கிருக்கா. அத்தையும் மாமாவும் சாத்தின அறைக்குள்ளே குறட்டை விட்டிருக்காங்க.

வெளிக் கதவைத் திறந்திருக்கா. வராந்தால படுத்திருந்த டிரைவர் வேலுச்சாமி திடுக்கிட்டு முழிச்சிருக்கான்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு, ப்ருந்தா தன் கன்னித்தன்மைக்கு சாட்சியா பத்திரப்படுத்தி வைத்திருந்த ஹைமென் சிதைந்து படுக்கை விரிப்பெல்லாம் ரத்தம்.

வேலுச்சாமி பயந்து அந்த அறையிலிருந்து வெளியேறினதும், இப்ப என்னடீ சொல்றே கல்பனான்னு வெறி அடங்கின திருப்தியோட அந்த ரத்தத்தை ரசிச்சிருக்கா. சிரிச்சிருக்கா. அப்புறம் ப்ருந்தாவோட வாழ்க்கை தலைகீழாயிருச்சு.

— அடுத்த இதழில் முடியும்

# செட் தோசை என்றும் பெயர் உண்டு

நான் எப்போதும் ஒரு புத்தகத்தைத் தொட்டால் அதை கடைசி பக்கத்தில் கடைசி வரியிலிருந்துதான் புரட்டுவதுவழக்கம். அதற்கு ஏற்றாற்போல், ரஜினிகாந்தின் இருபத்தெட்டு தகவல்களை, முதல் வரியை கடைசியிலிருந்து ஆரம்பித்து கடைசி வரியை முதலில் முடித்திருந்தது ரொம்பவும் வசதியாக இருந்தது!

– சாத்தூர்,
எம். செல்லையா

தீபாவின் முலைப்பால் மறுப்பும், சீமாவின் முலைப் பால் அளிப்பும், இன்னும் பிள்ளை பெற்றுள்ள நடிகையரின் வீட்டுக் கதைகளும் படிக்கக் கிடைக்காமல் குங்குமம் வாசகர்கள் போராட்டம் ஒன்றும் செய்யவில்லையே! பிறகேன் இது போன்ற செய்திக் கட்டுரைகள்!

- பெங்களூர்-21,
ப. மூர்த்தி

பெங்களூர் ஒட்டல்களில் கிடைக்கும் எண்ணெய் ஊற்றாமல் தயாரிக்கும் தோசைக்குப் பெயர் காளி அல்ல; 'காலி தோசை.' காலி என்றால் மசாலா தோசை, சாதா தோசையைப் போல் ஏதும் சேர்க்கப்படாதது என்று பொருள். இரண்டு தோசைகளை சேர்த்தாற்போல் கொடுப்பதால் சில இடங்களில் இதை 'செட் தோசை' என்று குறிப்பிடுவதும் உண்டு.

– பெங்களூர்-5, அருண்குமார்

வெளிவரும் சிறுகதைகள், தொடர் கதைகள் இவைகளையெல்லாம் படிக்க அரைமணி நேரம் போதும். ஆனால் கலைஞரின் தமிழைப் படிக்க மட்டும் அரைமணி நேரம் தேவை. காரணம், ஒவ்வொரு வாக்கியத்தையும் ஒரு முறைக்கு மூன்று முறை படிக்கவேண்டும் என்ற ஆவல் உண்டாகிறது. உவமான உவமேயங்கள் மிகவும் அருமை.

– சென்னை-7,
எஸ். சீபாஷ் டிமாஹா

சோழ்வேந்தனின் 'தென்பாண்டிச்சிங்கம்' சுந்தரச் செந்தமிழில் – சுவை சிறிதும் குன்றாது வேங்கையென வெற்றி நடை போடுவது கண்டு நான் மகிழ்ந்தேன்.

– செங்கம்புணரி,
சே. ரெ. பட்டணத்தான்

முதலில் பெண் எழுத்தாளர் வரிசை கதைப் பகுதி, அடுத்து பெண்ணின் பெருமையை விளக்கும் கதை! ஏது ஏது, பெண்களை நைஸ் பண்ண ஆரம்பித்து விட்டீர்கள். குங்குமத்தை தயவுசெய்து பெண்கள் பத்திரிகையாக மாற்றிவிடாதீர்கள். அப்புறம் ஆண்களாகிய நாங்கள் ஏமாந்து விடுவோம்.

– மதுரை-18, நாகுவேலன்

ரஜினிகாந்தின் 28 பொன்மொழிகளும் அருமை. ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் முன்னேற அவசியம் தேவை. இதுபோன்ற பகுதிகள் தொடர வாழ்த்துக்கள்?

– ஈரோடு-10, கல்யாண்குமார்

குடும்பப் பாங்காய் அமைந்த பெண் எழுத்தாளர் வரிசைக் கதைகள் எழுதிய எழுத்தாளர்கள் குடும்ப பெண்களின் பாராட்டுக்களைப் பெறுகிறார்கள். முதல் தரமான கதைகளைத் தேடிப் பிடித்துத் தருவதில் குங்குமத்திற்கு நிகர் குங்குமமே!

– சென்னை-23,
த. சத்தியநாராயணன்

'கொடுத்தால் மந்திரி பதவி கொடுங்கள். இது மாதிரி பதவி எல்லாம் வேண்டாம்' என்ற துணிச்சலுடன் சொல்லிவிட்ட செய்தியையும், கதை வசனம் எழுதுவதோடு படத்தயாரிப்பிலும் ஈடுபடத் தொடங்கிவிட்ட அமைச்சர் பற்றிய செய்தியையும் படித்தபோது சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

– தூத்துக்குடி-6,
இரணியல் கலா

சிமிழ்: 5

9 – 5 – 82

பொட்டு: 21

அட்டையில்: ரத்னா

வண்ணப்படம்: தர்மா

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனை. கதை, கட்டுரைகளை தபால் மூலமே அனுப்புதல் வேண்டும். அவற்றைத் திருத்தவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குங்குமம் பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட்டிற்காக, கலைவகம் அச்சகத்தில் அச்சிட்டு, 93-A, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 034-லிருந்து வெளியிடுபவர்: முரசொலி மாறன், எம். ஏ., எம். பி. ஆசிரியர்: பராசக்தி.

# தொட்டதெல்லாம் பெண்ணாகும்

லாவண்யாவும், செந்திலும், சதர்ன் செக்யூரிடி பீரோவைச் சேர்ந்த ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரிகளும் வட்டமாக அமர்ந்து ராமின் பேச்சை சுவாரஸ்யத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அவன் பேச்சைத் தொடர்ந்தான்:

''முதல் இரவில ப்ருந்தாவத் தாக்கின ஏமாற்றம் அவளுக்குள்ளே மிருக வெறியத் தூண்டிருக்கு. காலேஜ் ஹாஸ்டல்ல கல்பனா என்னென்ன செய்தாளோ அது எல்லாத்தையும் செய்ய ஆரம்பிச்சிருக்கா. முதல்ல ஸ்மோக்கிங். அப்புறம் வேலுச்சாமிகிட்ட ட்ரைவிங் கத்துக்கறப்ப அவன் கஞ்சா குடிக்கறதுக்கும் சாராயம் குடிக்கறதுக்கும் அவளைப் பழக்கப்படுத்திருக்கான்.

கோபாலோட ஆக்சிடென்ட்டுக்கு முன்னால அவனும் விக்ரமும் சேர்ந்து பெண்களோட விளையாடினதை வேலுச்சாமி அவகிட்ட கதை கதையாச் சொல்லிருக்கான். கோபாலும் விக்ரமும் உபயோகிச்ச பாதாள அறையப்பத்தியும் சொல்லிருக்கான். கோபால் மேல அவளுக்கு வெறுப்பு இன்னும் அதிகமாயிருக்கு. அவனைப் பழிவாங்கறதா மனசில நினைச்சுக்கிட்டு விபரீதமான செயல்கள்ல ஈடுபட்டிருக்கா. அந்தப் பாதாள அறைய ஒரு செக்ஸ் சென்டரா மாத்திருக்கா. மேல்மட்டத்து ஆண்களையும் பெண்களையும் ஒவ்வொரு சனிக்கிழமை ராத்திரியும் அங்க கூட்டமாச் சேர்த்து செக்ஸ் ஆர்ஜி நடத்தி அதுல அவ கலந்துக்காம விடிய விடிய வேடிக்கை பாத்திருக்கா.

கோபாலுக்கு இதெல்லாம் தெரிஞ்சும் அவனால அவளைத் தடுக்க முடியல.

அவனோட பலவீனம் யாருக்கும், குறிப்பா அப்பாவுக்கும் அம்மாவுக்கும் தெரியக்கூடாதுங்கறதுக்காக வாயை மூடிக்கிட்டிருந்திருக்கான். பெரியவர் காத்தபெருமாளும் அவர் மனைவியும் ப்ருந்தா அவங்க மகனுக்கு ஒரு வாரிசை உருவாக்கித் தரப் போறாங்கற நம்பிக்கைல அவகிட்ட அன்பா இருந்திருக்காங்க.

கோபாலைக் கெடுத்தவன் விக்ரம் தான்னு வேலுச்சாமி சொன்னதினால விக்ரம் மேல ப்ருந்தாவுக்கு வெறுப்பு. அவனைப் பக்கத்திலயே அவ சேர்த்துக்கலே. அதனால விக்ரமுக்கு ப்ருந்தா மேல ஆத்திரம்.

டிரைவர் வேலுச்சாமியோட மிஸிஸ் கோபால் கும்மாளம் அடிச்சதைப்பத்தி விக்ரம் ஒரு மஞ்சள் பத்திரிகைக்கு நியூஸ் குடுத்து நியூசும் பிரிண்ட் ஆயிருச்சு. கோபால் அத எப்படியோ கண்டுபிடிச்சு புரொட்யூசர் நாச்சியப்பன் மூலமா அச்சான பிரதியையெல்லாம் ரகசியமா வாங்கி பங்




சவீதா

கல்கத்தாவில் கீரை வகைகள் மலிவான விலையில் கிடைக்கும் எல்லாம் கிலோ கணக்குதான்.

- பாரத்வாஜ்.



களசவுக்குள்ளே போட்டுக் கொளுத்திருக்கான். ஸ்ரீபெரும்புதூருக்குப் பக்கத்தில கோபாலுக்கு பண்ணை இருக்குது. வேலுச்சாமிய அந்தப் பண்ணைக்கு அனுப்பிட்டான், ட்ராக்டர் ஓட்டறதுக்கு.

ப்ருந்தா காரை எடுத்துக்கிட்டு அடிக்கடி அந்தப் பண்ணைக்குப் போவா. வேலுச்சாமியோட நைட்டைக் கழிச்சுட்டு விடியற்காலம் கோபாலுக்குப் பக்கத்தில அடக்க ஒடுக்கமா உக்கார்ந்து, பேட்டி காண வந்த ரிப்போர்ட்டர் கிட்ட கோபாலுக்கு நான் மனைவியானது போன பிறவில செஞ்ச புண்ணியம்னு சொல்லிருக்கா. அவளை அவன் எல்லார் முன்னாலயும் தூக்கிக்கிட்டு மாடிப்படி ஏறியிருக்கான். சமூகத்துக்காக போலி வாழ்க்கை வாழ்ந்திருக்காங்க.

ப்ருந்தாவுக்குத் திடீர்னு பயம் வந்திருக்கு. நடத்தை சரியில்லேன்னு கோபால் துரத்திட்டா என்ன செய்யறதுங்கற பயம். பெரியவரும் அவர் மனைவியும் விரும்பறபடி ஒரு குழந்தையப் பெத்துட்டா பத்திரமா இருக்கலாம்னு நினைச்சா.''

''எப்படி சார்?'' நீண்ட நேரத்துக்குப் பிறகு ஒரு வயதான பழைய போலீஸ் அதிகாரி குறுக்குக் கேள்வி கேட்டார்.

''கோபால் அந்தக் குழந்தைக்கு நான் தகப்பன் இல்லேன்னு சொல்ல வெக்கப்படுவான். அவன் அவளை டைவர்ஸ் பண்ணி விரட்டற பட்சத்தில கோர்ட் பெண்ணுக்குச் சாதகமாத்தான் தீர்ப்பு வழங்கும், நிச்சயம் தாத்தா சொத்து குழந்தைக்குக் கிடைக்கும்னு நினைச்சிருக்கா. சீக்கிரமா ஒரு குழந்தைக்குத் தாயாகணும்னு ஆசைப்பட்டு அடிக்கடி பண்ணைக்குப் போயிருக்கிறா.

ஒரு நாள் காலைல எழுந்தவ கர்ப்பமா இருந்ததைக் கண்டுபிடிச்சு சந்தோஷப்பட்டிருக்கா. காரை எடுத்துக்கிட்டு அடையாறு போயி அத்தை மாமாகிட்டச் சொல்லி அவங்க கால்ல விழுந்து சேவிச்சிருக்கா. அன்னிக்கு சாயந்தரம் ஒரு சின்ன விஷயத்தில ப்ருந்தாவுக்கும் கோபாலுக்கும் கடுமையா வாக்குவாதம் மூண்டிருக்கு.

உன்னை டைவர்ஸ் பண்ணப் போறேன், பிச்சையெடுத்துக்கிட்டு நடுத்தெருவுல அலையப்போறேன்னு அவன் எச்சரிச்சிருக்கான். அவ, நான் கர்ப்பமாயிருக்கேன், நீ தைரியம் இருந்தா கோர்ட்டுக்கு வந்து என் வயித்திலேர்க்கிறது உன் குழந்தை யில்லேன்னு ப்ரூவ் பண்ணு, உன்னோட இம்பொடன்சியையும், நீ என்னை ஏமாத்திக் கட்டிக்கிட்டதையும் ஒப்பனா கன்ஃபெஸ் பண்ணுன்னு சொல்லியிருக்கா. அவன் போடி வெளியேன்னு கூச்சல் போட்டிருக்கான். அவ துணிமணிகளை வாரிச்சுருட்டிக்கிட்டு காரைக் கிளப்பிக்கிட்டு போயிருக்கா. அவ போனதும் தனியா இருந்த கோபாலை கோபாலே கொன்னுட்டான்.

வார்ட்ரோபைத் திறந்திருக்கான். தொங்கிக்கிட்டிருந்த நைட்கவுன்லேர்ந்து இடுப்புக் கயிறை உருவிருக்கான். ஒரு முனையை ஜன்னல் கம்பில கட்டியிருக்கான். இன்னொரு முனையை கையில சுத்திக்கிட்டு கயித்த கழுத்தில மாலையாச் சுத்தி இறுக்கியிருக்கான்.''

''அப்படிச் செய்ய முடியுமா சார்? சுவாசம் தடைப்பட்டுச்சுன்னா கை தளர்ந்திடுமே சார்?'' செந்தில் சந்தேகம் எழுப்பினார்.

மெடிக்கல் ஜூரிஸ்ப்ருடென்ஸ் புத்தகத்தைப் புரட்டி ராம் அவரிடம் கொடுத்தான். ''நான் மார்க் பண்ணிருக்கிற இடத்த சப்தமா படிங்க'' என்றான்.

''A Person determined on suicide may throttle himself by leaning with the whole weight of the body on a cord passed round the neck and attached to a fixed point...''

''போதும்'' என்றான் ராம். செந்தில் வாசிப்பதை நிறுத்தினார். ராம் பேச்சைத் தொடர்ந்தான்:

"கோபால் உயிர் பிரிஞ்ச கொஞ்ச நேரத்துக்கெல்லாம் விக்ரம் பைக்ல அந்த பங்களா காம்பவுண்டுக்குள்ள வந்திருக்கான். தோட்டத்துல செடி கத்தரிச்சுக்கிட்டிருந்த தோட்டக்காரன், இப்ப உள்ள போகாதீங்க, ஐயா ரொம்ப கோபமா இருக்கார்னு சொல்லிருக்கான். என்ன நடந்ததுன்னு விக்ரம் கேட்டிருக்கான். ஐயாவுக்கும் அம்மாவுக்கும் சண்டை நடந்தது. அம்மா கோவிச்சுக்கிட்டு காரை எடுத்துக்கிட்டுப் போயிட்டாங்க. ஐயா இவ்வளவு நேரம் வராந்தாவுக்கு வந்து கார் போறதையே கோபமாப் பாத்துக்கிட்டு நின்னுர். இப்பத்தான் உள்ள போனுர்னு சொல்லிருக்கான்.

தோட்டக்காரன் பேச்சைக் கேக்காம விக்ரம் உள்ளே போயிருக்கான். ஜன்னல் கம்பிலேர்ந்து தொங்கின கயித்துல கோபால் உடம்பு தொங்கிருக்கு. ப்ருந்தாவப் பழிவாங்க இது தான் சந்தர்ப்பம்னு தற்கொலை கொலை மாதிரி விக்ரம் ஜோடனை பண்ணிருக்கான். ஜன்னல் கம்பில கோபால் கட்டின கயித்த அவிழ்த்து கார் ஷெட்ல கொண்டுபோய் போட்டிருக்கான். ப்ருந்தா கொலை பண்ணிட்டு காரை எடுத்துக்கிட்டு ஓடின மாதிரி தெரியட்டும்னு அப்படிச் செஞ்சிருக்கான்.

மறுநாள் மத்தியானம் மீனு மெடர்னிடி ஹோம் பக்கமா விக்ரம் தற்செயலா பைக்ல போயிருக்கான். கோபாலோட சிவப்புக் காரை கல்பனு எடுத்துக்கிட்டு சாப்பிடக் கிளம்பிருக்கா. அதப் பார்த்ததும் விக்ரம் நர்சிங் ஹோமுக்குள்ள போயி ப்ருந்தான்னு யாராவது ட்ரீட்மெண்டுக்கு வந்தாங்களான்னு விசாரிச்சிருக்கான். நர்ஸ் ப்ருந்தா படுத்திருந்த அறையக் காட்டிருக்கா.

அவன் உள்ள நுழைஞ்ச சமயம் ப்ருந்தா கண்ணைத் திறந்து பார்த்திருக்கா. விக்ரம் அவனை மிரட்டிருக்கான். கோபால் கேஸ்ல போலீஸ்



திருமதி சந்திரிகா மகாலிங்கம் திருவிடை
மருதூரைச் சேர்ந்தவர். கடந்த 15 ஆண்டு
களாக வங்கத்தில் வாழ்கிருர். இவரு
டைய கணவர் ஒரு இஞ்சினியர்.
வங்கத்தில் கர்நாடக இசையில்
ஒரு சிறந்த இடத்தைப் பெற்றவர்.
சிறந்த ஓவியர். துணியில் சிறந்த
பூவேலைப்பாடுகளைச் செய்வதில் வல்லவர்.
இம்முறையை இங்கு பல வங்காளிகளுக்
கும் கற்றுக் கொடுக்கிருர். பல சிறுகதை
களும் பத்திரிகைகளில் எழுதியுள்ளார்
ஒரு சிறந்த சமூக சேவகி.



கொலேன்னு முடிவு செஞ்சா நீ மாட்டிக்குவே. தற்கொலேன்னு முடிவு செஞ்சாலும் நீ மாட்டிக்குவே. தற்கொலைக்கு என்ன என்ன காரணம்னு ஆராய்ச்சி பண்ணுவாங்க. நீ வேலுச்சாமியோட கூத்தடிச்சதெல்லாம் வெளிய வரும். அப்புறம் காத்தபெருமாள் சொத்துல சல்லிகூட உனக்கு வராது. நீ எனக்கு பணம் தந்தா உன்னைக் காப்பாத்தறதுக்கு எல்லா உதவியும் செய்றேன்னு சொல்லிருக்கான்,

என்கிட்ட நகைகூட இப்ப இல்லேயேன்னு ப்ருந்தா சொல்லியிருக்கா. அட்வான்ஸா நீ கிளப்பிக்கிட்டு வந்திருக்கிற ஃபாரின் காரை குடுன்னு கேட்டிருக்கான். அது எங்க இருக்குன்னு அவ கேட்டிருக்கா. ஒரு பெண் ஒட்டிட்டு எங்கேயோ போரு. அது எங்க நின்னலும் என்கிட்ட இருக்கிற சாவியப்போட்டு நான் கிளப்பிக்கிட்டுப் போகப்போறேன். நீ கண்டுக்காதன்னு சொல்லிருக்கான். அப்ப உள்ளே நர்ஸ் வந்திருக்கா. நான் இங்க வந்துட்டுப்போனதை யார்கிட்டயும் சொல்லாதேன்னு இரண்டு நூறு ரூபாய்த்தாளால நர்ஸ் வாயை அடைச்சிருக்கான்.

ஓட்டல் வாசல்ல சிவப்புக் காரைத் திருடிட்டு ஹைதராபாத்துக்குக் கொண்டுபோயி ஒரு வக்கீல்கிட்ட வித்திருக்கான். போலீசைக் குழப்பணுங்கறதுக்காக, பெட்ரோல் பங்க் பையனுக்குப் பணம் குடுத்து ப்ருந்தா பங்களூருக்கு வழிகேட்டதாக போலீசுக்குப் பொய்த் தகவல் குடுத்திருக்கான். கோபாலோட சம்பந்தப்பட்டவங்களுக்கெல்லாம் போன் பண்ண நீதான் கொலே செஞ்சேன்னு பெ குரல்ல பேசி மிரட்டிருக்கான். 'ப்ை வேட் ஐ'ன்னு பனியன் போட்ட ஒ ரவுடிய பாதுகாப்பா வெச்சுக்கிட் விக்ரம் இந்த வேலையெல்லா செஞ்சிருக்கான்.''

''கோபால் தொடைல இருந்த காயங்களைப் பத்திச் சொல்லலேயே?'

''அது ஒரு தனிக் கதை. கோபால் பணத்தையெல்லாம் பெண் விஷயத்தில வாரியிறைக்கிறத காத்தபெருமாள் கேள்விப்பட்டு நிறையப் பணத்த ஸூரிச் நகரத்திலேர்க்கிற சுவிஸ் பாங்க்ல போட்டார். அந்த அக்கவுண்ட் நம்பரை ஒரு சின்ன பிலிம் துண்டில படம் பிடிச்சு வெச்சிருந்தார். கோபாலுக்கு ஆக்சிடன்ட் ஆகி தொடை கிழிஞ்சப்ப ஒரு ஆபரேஷன் நடந்தது. அப்ப காத்தபெருமாள் அந்த பிலிம் துண்டை ஃபாமிலி டாக்டர்கிட்ட குடுத்து, சுலபத்தில தோலைக் கிழிச்சு எடுக்கிற மாதிரி அவன் தொடைக்குள்ள வெச்சுத் தைச்சிரச் சொன்ஞர். 'பிலிம்ல என்ன இருக்குன்னு டாக்டர் கேட்டிருக்கார். சில குடும்ப ரகசியம் அதுல இருக்கு. உயில்ல அது சம்பந்தமான விவரமெல்லாம் இருக்கு. கோபாலுக்கு நான் இறந்தபிறகுதான் இந்த பிலிம் போய்ச் சேரணும்னு பொய் சொல்லிருக்கார். ஆபரேஷன் முடிஞ்சபிறகு, உள்ள வெச்சுத் தைச்சுட்டதா டாக்டர், காத்தபெருமாள் கிட்ட சொல்லியிருக்கார். டாக்டரோட பிள்ளை விக்ரம் இத எப்படியோ தெரிஞ்சு கோபால் இறந்தபிறகு தொடையைக் கத்தியால குடைஞ்சு

பாத்திருக்கான்.. தொடைலேர்ந்த காயமெல்லாம் கோபால் இறந்தபிறகு ஏற்பட்டதுதான்னு போலீஸ் சர்ஜன் ஃபைனல் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்ல சொல்லிருக்காங்க.''

''அப்படின்னா விக்ரம் அந்த பிலிமை எடுத்துட்டானா சார்?''

''தொடைல பிலிமே இல்லேன்னு அவன் சொல்றான்.''

''டாக்டர் என்ன சொல்றார்?''

''அதக் கைல வெச்சுக்கிட்டு ஆஷ் ட்ரேல சிகரெட் சாம்பலைத் தட்டினேன், கைதவறி ட்ரேல விழுந்து எரிஞ்சுபோச்சு, ஆனால் கோபால் காலுக்குள்ள வெச்சுத் தைச்சுட்டதா காத்தபெருமாள் கிட்ட பொய் சொல்லிட்டேங்கறார். அவர் யார் கிட்ட சொன்னது பொய்யின்னு தெரில. ஆக்ஷன் பர்ஸியு பண்ணணும்.''

''ப்ருந்தாவ கோபால் கொன்னுருக்கணும். அதுக்குப் பதிலா அவன் தன்னைத் தானே அழிச்சுக்கிட்டான்'' என்றார் ஒருவர்.

அப்போது செந்தில், ''வார்ட் ரோப்ல தொங்கின ஒரு சிவப்பு நைட் கவுனுக்கு இடுப்புக்கயிறு இல்லே. கார் ஷெட்ல கிடந்த கயிறுதான் அந்த கவுனுக்குரியதுன்னு நாம சுலபமா கண்டுபிடிச்சுட்டோம். ஜன்னல் கம்பில கோபால் கட்டிக்கிட்டு ஸெல்ஃப் ஸ்ட்ராங்ளிங் பண்ணிருக்கான்ங்கறத எப்படி சார் கண்டுபிடிச்சீங்க?''

''நைட் கவுன் கயித்த நீங்க நல்லா பாத்தீங்களா? பெண்கள் ஜடைல வெச்சுக்கட்ற குஞ்சம் மாதிரி நூலு சிம்பு சிம்பா இரண்டு பக்கமும் இருக்கலே?''

''ஆமா சார்.''

''அந்த நூல்ல கொஞ்சம் ஜன்னல் கம்பியிலே சுத்திக்கிட்டிருந்தது.''

''விக்ரம் ஏன் அப்படிச் செஞ்சு கோபாலைக் கொன்னிருக்கக்கூடாது?''

''விக்ரம் கொலை பண்ணிருந்தான்னா கயித்த அவிழ்த்திருக்க மாட்டான். தற்கொலை மாதிரித் தெரியட்டும்னு பாடிய ஃபான்ல கட்டித் தொங்கவிட்டுட்டுப் போயிருப்பான்'' என்றான் ராம்.

ப்யூட்டி கிளினிக்கினுள் நஸியா ஹஸன் 'டிஸ்கோ டிஸ்கோ டிஸ்கோ டிஸ்கோ தீவானே' என்று பாடினாள்.

கல்பனா கபோர்டைத் திறந்தாள். நட்சத்திரக் கற்களைப் போல வெல்வெட் ஷாம்பூ ஸாச்செட்டுகள் சிதறிக் கிடந்தன. ஒன்றைக் கையில் எடுத்து குண்டூசியால் குத்தி, பேசினுக்கு தலையை நீட்டிக்கொண்டு அமர்ந்திருந்தவனின் தலையில் பிழிந்து பொங்கி வந்த நுரையைப் பிசைந்தாள்.

''மேடம் இதப் பாத்தீங்களா'' என்றபடி அனிடா காலைப் பத்திரிகையுடன் அவளிடம் ஓடி வந்தாள். கல்பனா பத்திரிகையின் எட்டுக் கால தலைப்பை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

'கோபால் வழக்கில் திடீர் திருப்பம். தற்கொலைதான். போலீசார் முடிவு. ப்ருந்தா வாக்குமூலம்...'

பாலம் பத்திரிகை அலுவலகம்.

போனில் ராமுடன் பேசிய லாவண்யா,

''எனக்குப் பிடிச்சத வாங்கித்தருவேன்னு சொன்னீங்களே'' என்றாள்.

''உனக்கு என்ன பிடிக்கும்னு சொல்லலியே? சொல்லு, இன்னிக்கே வாங்கித் தர்றேன்'' என்றான் ராம்.

''ஸ்ட்ரிங் ஹாப்பெர்ஸ்''

''அப்படின்னா?''

ஏதோ கோளாறினால் தொலைபேசித் தொடர்பு அறுந்தது.

(முற்றும்)

பின்னுரை :

சிகை அலங்கரிப்பில் சிறப்புப் பயிற்சி பெற கல்பனா, ரமேஷையும் அழைத்துக்கொண்டு டோக்கியோவுக்குப் பறந்தாள். ப்ருந்தாவின் நடவடிக்கைகள் அம்பலமானதும் காத்தபெருமாள் ஒரு நாள் முன்னிரவு அவள் நகைகளைக் கழற்றி வாங்கிக் கொண்டு ஸ்ரீரங்கத்திற்குச் செல்ல ஐம்பது ரூபாய் கொடுத்து பங்களாவை விட்டு வெளியேற்றி விட்டார்.

தொட்டதெல்லாம் பெண்ணாகும் போட்டி

வாசகர் விடைகள் பரிசீலிக்கப்படுகின்றன. முடிவு விரைவில் வெளியாகும்.



தாம்பரத்துக்குத் தெற்கே, வயல்கள் நிறைந்த பகுதியில் வரிசையாக ஏழெட்டு வீடுகள். அப்புறம் சிதறின மாதிரி தூர தூரச் சில வீடுகள் சவுக்குத் தோப்பு. பம்ப் செட்டுடன் ஒரு கிணறு. இருட்டுக் கிடையில் கிணற்றுப் பக்கம் வெளிச்சமாய் ஒரு டியூப் லைட். கொஞ்சம் அப்பால் வெவ்வேறு திசையில் இரண்டு குட்டைகள். தொண்டையில் பால் கதிர் கனக்கக் காற்றில் அலை வீசும் நெற் பயிர்கள்! அவ்வப்போது தூரத்து ரயிலின் எச்சரிக்கைகள்.

மணி ஒன்பதரை. கூட்ஸ் ட்ரெயின் ஒன்று ஆதி அந்தமின்றி நீளமாய் நின்று கொண்டிருந்தது. போகிறதா, வருகிறதா? தெரியவில்லை.

அந்தப் பிரதேசத்தில் சொந்த வீடு கட்டிக்கொண்டு லேவாதேவி செய்து கொண்டிருந்த திலீப்சந்த் என்ற சேட்ஜி (வயது ஐம்பத்தாறு) கொலை செய்யப் பட்டிருந்தார். நேரம் இரவு ஒன்பதிலிருந்து பத்து மணிக்குள். அவரைக் கொலை செய்தவர் ஓர் இளைஞன். வயது இருபத்தெட்டு. திருமணமானவர். ஒரு ஆண் குழந்தையும், இளம் மனைவியும், ஸ்டேஷன் அருகில் டீக்கடை ஒன்றும், அதை அடுத்த காலி நிலமும் அவனுக்குச் சொந்தம்.

அன்றிரவு அதே நேரம் வயல் வெளியில் திலீப்சந்த் வீட்டுப் பக்கம் பதுங்கி நடந்து கொண்டிருந்த ஓர் இளைஞனை தூரத்திலுள்ள தன் வீட்டிலிருந்து பாத்ரூம் ஜன்னல் வழியாகப் பார்த்ததாக அருணாசலம் என்பவன் சொன்னான். அந்தக் காட்சியைப் பார்த்த பயத்தில் கொஞ்சம் அதிகமாக ஒன்றுக்குப்போய் விட்டு 'நமக்கேன் வம்பு' என்று விளக்கை அணைத்து விட்டுப் படுக்கப் போய் விட்டானாம்.

அந்த இளைஞனின் உருவம் குட்டைப் பக்கமாக ஓடி அருகிலுள்ள சவுக்குத் தோப்பில் உட்கார்ந்துகொண்டு திலீப்சந்த் வீட்டிலிருந்து கொண்டு வந்த பணப் பெட்டியை உடைத்து அதில் கிடந்த இருபத்திரண்டு 'ப்ராமிஸரி நோட்டு'களில் ஐந்தை மட்டும் பொறுக்கி எடுத்துக் கொண்டது. பணப் பெட்டியைக் குட்டையிலே எறிந்துவிட்டு ஓடியது. புதுக் காலனி ஆயத்தங்கள் சூழ்ந்த பகுதியில் இளைஞன் ஓடி மறைந்ததை பார் அருணாசலத்தைத் தவிர வேறு யார் பார்த்ததாய்த் தெரியவில்லை.

ரயில்வே ஸ்டேஷன் திருப்ப டீக்கடையில் வழக்கமாக டீ சாப் கிறவர்களில் அருணாசலமும் ஒரு

ஓ

ருப்



ஓடிய நிழல் உருவம் டீக்கடைக்கா னுடையதுதான் என்பதில் அரு வ க்குச் சந்தேகமில்லை. ஆனா அடித்துச் சொல்ல முடியவில்லை அவனா

பொழுதைக் கொல்ல, வக்கீ ராகவாச்சாரி பென்சில் சீவிக் கொண் டிருந்தார். அதிர்ஷ்டக் கட்டையானவர்

இப்போதுதான் அபூர்வமாய் கேஸ் வந்திருக்கிறது. அது ரொம்பச் சாதாரண வழக்காய் தோன்றுகிறது.

ராகவாச்சாரியை போனில் அழைத்து இந்தக் கேஸை எடுத்து நடத்த சொன்னவர் ஸீனியர் வக்கீல் சேது ராமன்.

'இதெல்லாம் ஒரு கேஸா? ரொம்ப ல்பம்! கொசு மாதிரி. ஊதித் ள்விடுவேன். நான் ஜூனியர் தான். ருமானம் இல்லாதவன் தான். ஆனாலும் துக்காக இந்த மாதிரி பசையில்லாத ழக்கெல்லாமா என் தலையில் ட்டுவது?'

சேதுராமன் பெரிய வக்கீல். பார் புஸோஸியேஷன் பிரஸிடெண்ட். அவர் சொல்லைத் தட்ட முடியவில்லை.

திலீப்சந்த்துக்கு மனைவி மக்கள் யாரும் கிடையாது. மூன்று ஆண்டுகளுக்கு முன்பே மனைவி இறந்து போனாள். இப்போது ஒண்டி ஆள். மாடியில் ஒரு பள்ளிக்கூட வாத்தியாரையும் அவரது இளம் மனைவியையும் குறைந்த வாடகையில் குடி வைத்திருந்தான். அந்த வாத்தியாருக்கு கராத்தே தெரியும். மூங்கில் மாதிரி இருந்தார். அக்கம் பக்கத்திலிருந்து செங்கல் பொறுக்கி

# சனிக்கிழமை இரவு



## சாவி

அசோகா பாக்கு மென்று கொண்டே கேஸை எடுத்து மறுபடியும் படித்தார்.

படிக்கும்போதே இண்டிக்ட்மெண்ட், இன்வெஸ்ட்டிகேஷன், அடாப்ஸி — ஸெரிப்ரல் ஹெமரேஜ் — இந்தச் சொற்களையெல்லாம் சிவப்புப் பென்ஸிலால் கோடிட்டுக் கொண்டார்.

திலீப்சந்துக்குச் சொந்தமாக அந்தப் பகுதியில் ஏராளமான நிலங்கள் இருந்தன. அவற்றில் பாதிக்கு மேல் ஏற்கனவே நல்ல விலைக்கு விற்றுப் பணமாக்கி, அங்கேயே வசதியாக கிராதி போட்ட மாடி வீடு ஒன்று கட்டிக் கொண்டான். வெளிப்புறம் சுவரெல்லாம் மார்வாரி பச்சை வர்ணம்!

வந்து தினமும் தமது கராத்தே திறமையை அவரிடம் காண்பித்துக் கொண்டிருந்தார்!

சுற்றுப்புறத்து விவசாயிகள், ஏழைகள், தொழிலாளிகள் எல்லாருமே திலீப் சந்திடம் கடன் பட்டவர்கள் தான். சேட்ஜியை நினைக்க போதெல்லாம் இலங்கைவேந்தன் போல் கலங்கினார்கள். தங்கள் சொத்துக்களை அவனிடம் அடமானம் வைத்து விட்டு, திருப்பி வாங்க வழியில்லாமல், தவித்துக் கொண்டிருந்தார்கள். அதிக வட்டி வாங்கி அவர்கள்

உயிரைக் குடித்துக் கொண்டிருந்த திலீப்சந்த், அவர்களால் தனக்குத் தீங்கு நேரக் கூடாது என்பதற்காக, முன் ஜாக்கிரதையாக, பாதுகாப்பாக, கராத்தே வாத்தியாரை மாடியில் குடி வைத்திருந்தான்.

திலீப்சந்த் கொலையுண்டபோது அந்த வீட்டில் யாருமே இல்லை. வாத்தியாரும் அவர் மனைவியும் வெளியூர் போயிருந்தார்கள். கொலை நடந்தது அக்டோபர் 18-ம் தேதி. வாத்தியாரின் தாயாருக்கு உடல்நிலை மோசமாகி உயிருக்கு மன்றாடிக் கொண்டிருப்பதாகத் தந்தி வரவே வாத்தியார் தம் மனைவியுடன் மூன்று நாள் முந்தியே, அதாவது 15-ம் தேதியே மானாமதுரை போய் விட்டிருந்தார்.

பத்தொன்பதாம் தேதி காலை ஆறு மணிக்கு வழக்கமாகப் பால் கொண்டு கொடுக்கும் பால்காரன் அந்த வீட்டுக்குப் போனபோது வாசல் கதவு திறந்து கிடந்தது. உள்ளே நுழைந்த போது ஹால் கதவும் திறந்திருந்தது. சேட்ஜி அடுத்த அறையில் தலைகுப்புற விழுந்து கிடந்தார். பால்காரன் 'சேட்ஜி' என்று அலறிக் கூப்பிட்டுப் பார்த்தான். பேச்சு மூச்சு இல்லை. ஓடிப்போய் போலீசுக்குத் தகவல் கொடுத்தான்.

போலீஸ் வந்து பார்த்தபோது சேட்ஜி தலையில் யாரோ பலமாக அடித்திருப்பது தெரிந்தது. மண்டையில் அகலமாக அடிபட்டு, அடிபட்ட வேகத்தில் திலீப்சந்த் குப்புற விழுந்து செத்துப் போயிருக்கிறான்.



''எடிட்டர் ஏம்பா உன்னைத் திட்டினாரு?''

''சிறந்த நடிகராக கமலஹாசன் தேர்வுனு அச்சுக் கோர்க்க வேண்டியவன் என்னவோ ஞாபகத்தில் சிறந்த நடிகராக கமால் உசேன் தேர்வுனு கோர்த்திட்டேன்!''

—உ. ராஜாஜி

திலீப்சந்த் வயிற்றைப் பரிசோதனை செய்து பார்த்ததில் சாப்பிட்டு மூன்று மணிநேரத்துக்கு மேல் ஆகவில்லை என்று தெரிந்தது. ஜைன சம்பிரதாயப்படி மாலை ஏழு மணிக்குள் சாப்பிட்டுவிடுவது திலீப் சந்த் பழக்கம். எனவே கொலை நடந்தது ஒன்பதிலிருந்து பத்து மணிக்குள் என்பது ஊர்ஜிதமாயிற்று. சமையலறையில் இரண்டு சப்பாத்திகளும் கொஞ்சம் மசாலா வாசனையும் மிஞ்சியிருந்தன.

திலீப் படுத்திருந்த அறையில் எந்த களேபரமும் இல்லை. எல்லாம் வைத்தது வைத்தபடி ஒழுங்காக இருந்தன.

படுக்கை மட்டும் லேசாகக் கலைந்திருந்தது. திலீப்சந்த் படுக்கையை விட்டு எழுந்து வந்தால் எந்த அளவுக்குக் கலையுமோ, அந்த அளவுக்குக் கலைந்திருந்தது. எந்த பலாத்காரமும் தெரியவில்லை.

பீரோ மட்டும் வாயைப் பிளந்து கொண்டிருந்தது. அதிலிருந்த பணப் பெட்டியைக் காணவில்லை. அதில்தான் முக்கிய ரிக்கார்டுகளும் கடன் பத்திரங்களும் இருந்தன.

திலீப்சந்த் தினமும் ஒன்பது மணிக்குள் தூங்கிவிடுவது வழக்கமாம். (மாடியிலிருந்த வாத்தியார் தம்பதிகள் வாக்கு மூலம்!)

ஆகவே, சேட்ஜி படுக்கையைவிட்டுத் தானாகவேதான் எழுந்து போய் வாசல் கதவைத் திறந்து தன்னைத் தேடி வந்தவனை உள்ளேவிட்டிருக்கிறான். அவன் வரவை எதிர்பார்த்திருக்கிறான். வாசல் கதவின் குறுக்கே, உள்பக்கமாக ஒரு மரக் கழியால் தாளிடப்பட்டிருந்தது. அந்தக் கழியை அப்புறப் படுத்தாமல் கதவைத் திறந்துவிட முடியாது.

திலீப்சந்த் இறந்து கிடந்தபோது இந்த குறுக்குக் கட்டை கதவுக்குப் பக்கத்தில் குத்திட்டு நிறுத்தப்பட்டிருந்தது. சேட்ஜிதான் இந்தக் கட்டையை விலக்கிக் கதவைத் திறந்திருக்க வேண்டும்.

சேட்ஜியையும் அவன் பழக்க வழக்கங்களையும் அந்த வீட்டின் அமைப்புகளையும் நுணுக்கமாய் அறிந்த யாரோ ஒருவன்தான் அங்கு வந்திருக்கிறான்.

# கூடப் போகச் சம்பளம்



அமெரிக்க ஜனதிபதியின் மனைவி நான்ஸிரீக னுக்குப் பணிவிடை செய்வதற்காக பதினொரு பேர் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஆகும் செலவு ஒரு ஆண்டுக்கு 6,50,000 டாலர். அவர் களில் முக்கியமானவர் ஜேம்ஸ் ரோஷ் புஷ் என்பவர். அவருக்கு ஒரு வருடத்தில் 55,000 டாலர் சம்பளம். அவருடைய முக்கிய வேலை நான்ஸிரீகன் போகும் இடங்களுக்கெல்லாம் கூடவே பணப்பையை எடுத்துக் கொண்டு போவது தான்.



*ஆதாரம் 'பரேட்'. பார்வதி நாகராஜன்*

---

அது சரி; பேராசைக்கார சேட்ஜி ரொம்ப சந்தேகப் பேர்வழியாயிற்றே? யாரையும் இலேசில் நம்பிவிட மாட்டானே? அவன் எப்படி படுக்கையை விட்டு எழுந்து போய்க் கதவைத் திறந் தான்? எதற்காகத் திறந்தான்? அந்த நேரத்தில் அங்கே வந்தவன் யார்? திலீப்சந்த் வயதானவன். அத்துடன் பெண்ணாசைக்காகப் பணம் செலவழிக் கும் தாராளமோ வழக்கமோ இல்லாத வன். எனவே அந்த நேரத்தில் அங்கு வந்தது ஒரு பெண் அல்ல என்று தெரிந் தது. அப்படியானால் யார்? திலீப்சந்தை எழுப்ப யாரும் உரக்கச் சத்தம் போட்டு அழைத்ததாகவும் அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குத் தெரியவில்லை. உள்ளே தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்ப பலமாகச் சத்தம் போட்டுக் கூப்பிட்டால்தான் முடியும். சந்தேக மில்லை. யாரோ டெலிபோனில் தான் எழுப்பியிருக்கிறார்கள்.

திலீப் படுத்திருந்த அறைக்குள் ஒரு டெலிபோன் இருந்தது. கொலைகாரன் தான் வரப்போவதை முன் கூட்டியே சேட்ஜிக்கு டெலிபோன் மூலம் சொல்லி யிருக்கிறான். ஏதோ ஆசை வார்த்தைகள் சொல்லியிருக்கிறான். அதனால் தான் திலீப்சந்த் ஏமாந்து போய் குறுக்குக் கழியை அகற்றி கதவைத் திறந்திருக்கிறான். வந்தவன் தன்னைக் கொல்வதற்கு வந்திருக்கிறான் என்பது தெரியாமல் திறந்து விட்டிருக் கிறான்.

குட்டையில் கிடந்த பணப்பெட்டியிலி ருந்து மேலும் சில தகவல்கள் கிடைத் தன. திலீப்சந்த்துக்குப் பலபேர் எழுதிக் கொடுத்த ப்ராமிஸரி நோட்டுகள் அதில் இருந்தன. கொலைகாரனுக்கு அந்தப் பெட்டி இருந்த இடமும், அதில் தன் னுடைய பத்திரங்கள் இருக்கும் ரகசிய மும் தெரிந்திருக்கின்றன. திலீப்சந்த் தைக் கொன்று அந்தப் பணப் பெட்டியை எடுத்துக் கொண்டு ஓடி விட்டால் அப்புறம் நிம்மதியாக வாழ லாம் என்று அவன் எண்ணி யிருக்கலாம்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு போலீ ஸார் டீக்கடைக்காரனைக் கைது செய்து கொண்டு போனார்கள். அவன் பெயர் காசிராஜன். பாத்ரூம் அருணசலம் பார்த்ததாகச் சொன்னது இவனைத் தான்.

காசிராஜன் திலீப்சந்திடம் ஏராள மாய்க் கடன் பட்டிருந்தான். வட்டி கொடுக்க முடியாமல் தன் டீக்கடையை யும் பக்கத்து மனையையும் அடமானமாக எழுதிக் கொடுத்திருந்தான். மூன்று வருடங்களுக்கு மேலாகியும் அவனல் கடனைத் திருப்பித் தர முடியாமற் போகவே சேட்ஜியின் கெடுபிடி அதிக மாயிற்று.

"கடனைத் தரப் போகிறயா, இல்லை, சொத்தை ஜப்தி செய்து ஏலத்திலே விடட்டுமா?" என்று திலீப் சந்த் ஒரு நாள் மிரட்டவே, காசிராஜன் சிலிர்த்துக் கொண்டான்.

"இந்தக் கிழவனை ஒரு நாளைக்குத் தீர்த்துக் கட்டிடறேன். இல்லையா பார்" என்று தன் நண்பர்களிடம் வீராப்பாய்ச் சொல்லியிருக்கிறான்.

—தொடரும்

பட்டுக்கோட்டை பிரபாகர் எழுதும்

# தொடர்கதை

இதுதான்

**இந்தத் தொடர்கதையை இதுவரை படிக்கத் தவறியவர்களுக்காக 23 அத்தியாயங்களின் கதைச் சுருக்கம் :**

மணிவண்ணன் நல்லவர்.

பட்டி என முடியும் தமிழக கிராமம் ஒன்றில் கரும்பலகையில் அறம் செய விரும்பு என்று சாக்பீஸ் கரைத்து வந்தவர்.

மணிவண்ணனுக்கு வாழ்வில் லட்சியங்கள் நிறைய. அவையாவன எனத் தொடங்கி பட்டியல் போட்டால் இந்தச் சிறப்பிதழ் முழுக்க வரும்.

லாரி லாரியாய் லட்சியங்கள் வைத்திருந்தாலும் அதில் ஒரு டயர் அளவுக்குக் கூட சுயநலம் இல்லாதவர்.

சமுதாயம் மாற வேண்டும், நேர்மை செழிக்க வேண்டும் போன்ற மியூசியத்திற்குச் சொந்தமான வாக்கியங்களை உபயோகிப்பவர்.

சினிமா என்பது சிறப்பான ஒரு மீடியம். அதன் மூலம் சமுதாயத்தை மாற்ற முடியும் என்ற நம்பிக்கை கொண்டவர்.

எனக்கு மட்டும் லாட்டரியில் ஒரு பெரிய தொகை விழுந்தால் என பெருமூச்சு விட்டவருக்கு இருபதாம் அத்தியாயத்தில் இருபத்தைந்து லட்சம் விழுந்தே விடுகிறது. வரி, கிரி எல்லாம் போக மிச்சத்தை மூட்டை கட்டிக் கொண்டு சென்னை வந்து சேர்ந்த மணிவண்ணன் சாரைப் பார்த்த சினிமாத்துறை கழுகு ஒன்றிற்கு உடன் மூக்கு மட்டுமில்லாமல் முகமெல்லாம் வேர்க்கிறது.

தமது லட்சியங்களில் ஒன்றான சமுதாயத்திற்கு படிப்பினையூட்டும் படம் எடுத்தலில் தீவிரமாய் இறங்கி...

''நாளைக்கு ஸ்டோரி டிஸ்கஷன் சார்'' என்பது வரை வந்திருக்கிறது கதை. இனி...



## ...யாயம்-24

...யக்கும் மாலைப்பொழுதில் ...வண்ணனும், சுந்தரமூர்த்தியும் ...துறை கழுகு) காரை விட்டிறங்கி, ...படியில் பிரயாணித்து, காரிடாரில் ...து, அந்த அகலமான அறைக்குள் ...ழைந்த போது...காத்திருந்த அவர் ... ஸ்பிரிங் விடுபட்டது போல எழுந் ...கள்.

...வாங்க சார். இப்படிச் சௌகரியமா ...காருங்க."

விளம்பரப் படத்தில் தலைவலி நீங்கியவன் மாதிரி ஆளுக்கு ஆள்—கதாசிரியர் கண்ணபிரான், டைரக்டர் தயாளன் மற்றும் நான்கைந்து பேர்கள்—தனித் தனியாய்ச் சிரித்தார்கள்.

மணிவண்ணன் திருப்தியாய் ஒருதரம் சிரித்துக் கொண்டார். பின்னர் கனைத்துக் கொண்டார்.

"நண்பர்களே! கதையை விவாதிக்கும் முன்பாக சில விஷயங்களைத் தெளிவு படுத்த விரும்புகிறேன். நமது படம் மற்ற மசாலாப் படங்களிலிருந்து மாறு

# கோத்திரத் திருமண அழைப்பிதழ்

உத்திரமேரூர் தாலுகாவைச சேர்ந்த ஒரு சிற்றூரில் திருமணப் பத்தி
அச்சடிக்கிறவர்கள்,—பெண் வீட்டாரும் சரி, பிள்ளை வீட்டாரும் சரி — த
தங்களுடைய கோத்திரத்தையும் போடுகிறார்கள். அதில் ஒன்று 'பலவேட்ட
மகரிஷி' கோத்திரம் என்று போடப்பட்டிருக்கிறது. விசாரித்த
'பழவேட்டரையர் மகரிஷி' என்பதுதான் மருவி இப்படியாகி விட்டது எ
தெரிய வந்தது.

ந. சி. இராமச

---

பட்டு வெகுதூரம் விலகி வந்து 'ஓ! எத்தர்களே பாருங்கள் இதை. இது தான் திரைப்படம். இப்படித்தான் சமுதாயத்திற்கு வழிகாட்டும் ஒரு கலங்கரை விளக்கமாக இருக்க வேண்டும் படங்கள்' என்று கூறுவதைப் போல் முன்னுதாரணமாய் அமைதல் வேண்டும்.''

அவரின் தனித்தமிழ் பாதிப் பேருக்குச் சிரிப்பை வரவழைத்தது. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டார்கள். கசமுசா என்று அடுத்த அருகாமை காதில் பேசிக் கொண்டார்கள்.

''சரி, இனி நாம் கதைபற்றி விவாதிக்கலாம். சொல்லுங்கள் கண்ணபிரான், எப்படிச் சிந்தித்திருக்கிறீர்கள் கதையை?''

''டிஸ்கஸ் பண்ணலாம் சார். அதுக்கு முன்னாடி மூடு வரவழைச்சுக்கிவோம்.''

நீண்ட ட்ரேயின் அடியிலிருந்து இரண்டு முழு பிராந்திகளையும், கிளாஸ்களையும் எடுத்து வைத்தான் ஒருவன்.

இரண்டு ரவுண்டு முடிந்ததும் கண்ணபிரான் உரத்த குரலில் கனைத்துக் கொண்டார். உதவியாளன் பேடை எடுத்து வைத்து பேனாவைத் திறந்து கொண்டான்.

''புரொட்யூசர் சார். நம்ம ஸ்டோரியோட நடு மைய செண்ட்ரல் தீம் வரதட்சிணைக் கொடுமையால பாதிக்கப்படுற ஒரு பெண்ணோட வாழ்க்கையைக் கத்தரிக்கிறது... ஸாரி. ஐ மீன், சித்திரிக்கிறது.''

''மிக்க நன்று. மிக்க நன்று. இன்றைய மிக நல்ல பிரச்னை. நானும் இந்தப் பிரச்னையைப் பற்றித்தான் சொல்ல நினைத்தேன். ம். சொல்லுங்கள்.''

''கஸ்தூரின்னு அவளுக்கு பேரு''

''கதாநாயகி பேரா?'' என்றார் டைரக்டர்.

''ஆமா, நம்ம கஸ்தூரிக்கு வ இருபது. இன்னும் கல்யாணமா வீட்டில் ஒரு பாட்டி மட்டும்தான்.''

''தாய், தந்தையர் இல்லையா?''

''இல்லே. அதெல்லாம் ஸ்க்ரீன்ப்லே இடைஞ்சல் சார். ஹீரோ அவ வீட்டு வர்றமாதிரி நாலஞ்சு லவ்சீன்ஸ் வ இந்த லவ் எப்படி ஏற்படுத் துன்னு வித்தியாசமா யோசிச்சு வச்சி கேன்.

இந்தக் காதல் ஒரு மோத துவங்குது. நம்மை அவமானப் ப தின கஸ்தூரியை நாம எப்படியா இன்சல்ட் பண்ணிடணும்னு முடிவெ கறன் பாலு.'' இவங்க ரெண்டு பே யும் விட்டு விட்டு ஒரு ஹோட்ட டான்ஸிலே அடுத்த சீனை ஓப் பண்றோம். ஜானகி வாய்ஸ்ல சி ஸ்மிதாவை ஸோலோ டான்ஸ் பண் வைக்கலாம்.''

''கடவுளே! அவையெல்லாம் எதற் நமது நோக்கம் வரதட்சிணைக் கொடு யைக் காட்டுவதுதானே?''

''தான், தான். ஆனா அதை மட் காட்டினால் போதாது. கூடவே வே சிலதையும் காட்டினாதான் பட உருளும். இல்லேன்னா உக்காந்து கதைப்படி அந்த ஹோட்டல் செ காரன் சுரேஷ். நெக்ஸ்ட் சீன்ல வே முடிஞ்சு புறப்படற கஸ்தூரியை கையைப் பிடிச்சி இழுத்து ஒரு தனியா பெரிய ஹால்ல ரேப் பண்ண ட் பண்றான்.''

''இறைவனே! கற்பழிப்பு காட்சியா?''

''அதெல்லாம் ஒண்ணும் அ கடாது ஜாக்கெட் கிழிஞ்சு பிரா வன கும் போறப்போ... கண்ணாடி ஜன்ன உடைச்சிக்கிட்டு பாஞ்சு வந்து பா காப்பாத்திடுவான்.''

யேரா கிளாஸ்வேர்...
எந்த வைபவத்தையும்
ஜொலிக்கச் செய்யும்!

யேரா கிளாஸ்வேர்...
தனிச் சிறப்புள்ளவை . எழில் கொஞ்சுபவை...
ஈடு இணையற்றவை.
உங்களைப்போன்ற தனிச்சுவை
உள்ளோரின் உள்ளததைக்
கவருபவை. யேரா கிளாஸவோ
வாழ்க்கையின் உல்லாச
நேரங்களுக்கு கவர்ச்சியூட்டும்.

yera

இந்தியாவின் மிகப் பெரிய, தானே இயங்கும்
கண்ணாடித் தொழிறசாலையில் தயாரானவை



SONS AG 281

''இதில் நமது நோக்கமான வர தட்சிணைக் கொடுமை எங்கே வருகிறது?''

''வருது, வருது, தான் எடுத்தெறிஞ்சு பேசியும் நம் கற்பை காப்பாத்திட்டானே இவன்னு கஸ்தூரிக்குப் பாலு மேல் அன்பு பெருகுது. அது காதலா மாறுது. இப்படிப்பட்ட வலுவான காதலைக் காட்டி அப்படிப்பட்ட காதல் பிரியறத்துக்கு வரதட்சிணைக் கொடுமை தான் காரணம்னு காட்டறப்போ அது சிக்குன்னு மக்கள் மனசிலே நிற்கும் சார்.''

எப்படியோ ஒருவிதத்தில் நம் நோக்கம் வந்துவிட்டால் சரி என்று மணிவண்ணன் சமாதானம் ஆகிப் போனார்.

'சரி. நீங்கள் தொடருங்கள்''

''கஸ்தூரி கார் பின்னாலேயே ஓடரு. பாலு 'சீ, போடி'னு அவ வயத்திலே உதைச்சிட்டுப் போயிடறான். அவ கீழே சுருண்டு விழுந்துடரு.'' அப்புறம்...

''காதல் ஏற்பட்டப்புறம் ஸ்லோ மோஷன் வச்சு ஒரு டுயட். அப்புறம் நாலஞ்சு லவ் மீட்டிங்ஸ். ஒரு முறை பாலுவுக்கு ஜுரம். கஸ்தூரி கஞ்சி வச்சுத் தர்ரு. ஒரு முறை ஊர்ல திருவிழா. பாலு வளையல் வாங்கித் தர்றான். இப்படியே லவ் டெவலப் ஆகுது.''

''கண்ணபிரான் அவர்களே, நாம் வரதட்சிணைக் கொடுமைக்கு நேராய் வரக்கூடாதா?''

''கூடாது. கொஞ்சம் அப்படி இப்படி வளைஞ்சுதான் வரணும். இந்த பிரச்னை நெருப்பு மாதிரி. ஜாக்கிரதையா கையாளணும். லேட்டா சப்ஜெக்டை நகர்த்திக்கிட்டே வந்து கடைசியில சாட்டையிலே அறுக்கிற மாதிரி ஒரு நாலு வரியிலே சொல்லிடலாம்.''

''சரி, கண்ணபிரான், அப்புறம் சொல்லுங்க. லவ் டெவலப் ஆகுது. இன்னும் ஒரு டர்னிங்கே வரலையே கதையில்ல...''

''வச்சிடலாம். பாலுகிட்டே உதை வாங்கின சுரேஷ், என்னிக்காச்சும் உன்னை அனுபவிக்கிறேன்டின்னு ஒரு ச... எடுத்துக்கறதா ஒரு சின்ன ஜாய்... வைக்கிறோம். இங்கே வருவே... இப்போ சின் மழையிலே துவங்... சினிமா போயிட்டு வர்ற . பாலு... கஸ்தூரியும் ஒரு குடிலுக்குள்... ஒதுங்கறாங்க. அது காலி குடி... பக்கத்துக் குடிசையிலே சிரிப்புச் சட... கேக்குது. பாலு மட்டும் எட்டிப் பா... கிறான். ஒரு புருஷனும் பொண்ஜாதி... ஒரு மாதிரி நிலையிலே இருக்காங்க.''

''இங்க ஒரு போக் டான்ஸ் மா... வச்சி ஒரு சாங் வைக்கலாமே''

''வைங்களேன். படத்துக்கு இளா... கூடும். பாலு கஸ்தூரியைப் பார்க்கிற... அவ அந்தப்பக்கம் திரும்பி நி... மாராக்கை பிழியறா. வெளியில ம... பாலு அவளை நெருங்குறான். இ... அப்படியே சீனை கட் பண்ணி இண்ட... வெல் போடறோம்''

''டாப் க்ளாஸ் கண்ணபிரான். அ... என்ன செய்யப் போறான்னு டென்... லயே ஜனங்க இண்டர்வெ... வெளியில கூடப் போக மாட்டாங்க.''

''இருங்கள். இவையெல்லாம் ந... காட்டித்தான் ஆக வேண்டுமா?''

''நிச்சயமா சார். கதைப்படி கா... பிரியற சமயத்திலே அவ வயத்தி... குழந்தை இருக்கே! அப்படியும் கொ... மும் இரக்கமில்லாம ஐம்பதாயி... வரதட்சிணை கொடுத்தாதா... கல்யாணம் பண்ணிக்குவேன்னு ... அப்பா கூட சேர்ந்து சொல்லிட... பாலு.''

வரதட்சிணை என்ற சொல்... கண்ணபிரான் வாயிலிருந்து கேட்ட... சுறுசுறுப்பாக நிமிர்ந்து அமர்ந்த... மணிவண்ணன்.

''இதுவரைக்கும் நாம அப்பாவை... காட்டவேயில்லையே...''

''இதுவரைக்கும் அவர் தேவ... இல்லையே. என்ன பெரிய பிரச்னே? பா... வோட அப்பா ஒரு பெரிய கோடீஸ்வ... அப்பாவோட தகராறு பண்ணி... சுயமா சம்பாதிக்கிறேன்னு பா... பட்டணம் வந்துட்டான் அப்படின்... ஒரு பிளாஷ்பேக்கைச் சொருகுறோ... அந்த அப்பா இவனைத் தேடிக் கல... பிடிச்சிடறார்.''

'கதை கொஞ்சம் தொய்வு விழு... ட்ரையா போற மாதிரி இருக்கே...''

''சுறுசுறுப்பாக்கிடலாம். சப அ... எடுத்துக்கிட்டானே சுரேஷ் அவன்

குடிச்சுட்டு வர்றான். பாட்டி ஊர்ல இல்லை. பாலுவை நினைச்சு அழுதுகிட்டே படுத்திருக்கா கஸ்தூரி.''

"இருங்க கண்ணபிரான். பாலு மூலமா கஸ்தூரி குழந்தை உண்டாறாளே, அந்தக் குழந்தை...''

"ரெண்டு சீன் முன்னாடி இப்படி ஒரு சீன் நுழைச்சுடலாம். பாலுவோட அப்பா பாலுவை ரூமைக் காலி பண்ணி கார்ல கூட்டிக்கிட்டுப் போற சீன், அவங்க கார் பின்னாடியே ஓடறா. கஸ்தூரி சீ போடின்னு அவ வயத்திலே உதைச்சுட்டுப் போயிடறான் பாலு. கீழே சுருண்டு விழுந்துடறா. கரு கலைஞ்சுடுது. இப்போ சுரேஷ் ரேப் பண்ண வர்ற சீன்ல பிரச்னை இல்லையே?''

"மறுபடி எதற்காக இன்னொரு கற்பழிப்புக் காட்சி?''

"இதெல்லாம் எசன்சியல் சார். கதையிலே கஸ்தூரிக்கு நாம தர்ற முடிவுக்கு வலுவான காரணமா இது அமையுது. இந்த முறை தன் வெறியைத் தீர்த்துக்கறான் சுரேஷ்.''

"இப்பவும் மழை பெய்யறமாதிரி வச்சுக்கலாம். அப்பதான் போராட்டம் முடிஞ்சதும் மழை நின்னு போயி இலையிலேர்ந்து துளிகள் விழறதை சிம்பாலிக்கா காட்ட முடியும். இதை நோட் பண்ணிக்கப்பா'' என்றார் டைரக்டர் உதவி டைரக்டரிடம்.

"இப்போ கடைசி பார்ட்டுக்கு வந்துட்டோம். கஸ்தூரி வெக்ஸ் ஆயிடறா. ஆண்களையே வெறுக்கறா. வாழணுமே வயிறு இருக்கே. ரெண்டாவது எல்லா ஆண்களையும் தன் கால்ல விழ வைக்கலாம்னு தீர்மானிக்கிறா. விபசாரியாகிடறா. கடைசி சீன்ல அவன்னு தெரியாமயே கஸ்தூரியோட புதுவீட்டுக்

சிரிச்சு நாலு வசனம் பேசறா கஸ் இங்கே ஒரு கார்டு போட விபச்சாரியானது கஸ்தூரியின் குற் அவளை விபச்சாரியாக்கியது இன்னும் நாட்டில் எத்தனை எத் கஸ்தூரிகள்! நாம் ஒன்றுபட்டு வரதட்சிணையை ஒழிப்பே வாருங்கள் — அப்படின்னு கார்டு.''

மணிவண்ணன் பாதி போதையி மீதி யோசனையிலும் இருந்தார்.

"என்ன சார் யோசிக்கிறீங்க? நி நூறுநாள் ஓடும்,'' என்றார் ச மூர்த்தி.

மணிவண்ணன் பேசத் தொடங்கி

(அடுத்த இதழில் மு

சரி, சரி வேண்டாம். இங்கேயே அத்தியாயக் கதையை முன்கூட் சுருக்கி முடித்துவிடலாம்...

## அத்தியாயம் - 25

மணிவண்ணன் தயாரித்த படத் 'ஒரு லட்சம் இரவுகள்' என்று பெ டார்கள். படம் வெளியாகி, அ செண்ட்டரிலும் வெளுத்து வாங் 175 நாட்கள் ஓடியது. நமது நே படி மக்களுக்கு வரதட்சிணைக் கொ பற்றி சொல்லிவிட்டதில் மணிவ னுக்கு மிக்க சந்தோஷம். அடுத்து போது அவர் தயாரித்துக் கொண் கும் படத்தின் நடுமைய சென் தீம் — ஜாதிவெறி.

இதோ ஸ்டோரி டிஸ்கஷன்

கண்ணபிரான் மூன்றாவது ர வாயைத் திறந்தார்.

"எடுத்ததும் அருவியிலே ஜா இல்லாம குளிக்கிறா நம்ம கஸ்தூரி.

முற்றும்

## குடையின் விலை இரண்டு ரூபாய்

குருவாயூர் கிருஷ்ணன் கோயிலுக்கு முன் பலவித குடைகளை பரப்பி வைத்து விற்கிறார்கள். ஒரு குடையின் விலை இரண்டு ரூபா தான்! அதிகபட்ச விலை நான்கு ரூபாய். அவையெல்லாம் அதிக உபயோகப் படுத்தாத 'செகண்ட் ஹாண்ட்' குடைகளாம். நம்ம ஊரி பழைய துணிகளை வாங்கி விற்பது போல, அங்கு பழைய குடைக வாங்கி விற்கிறார்கள்.

— த. கி. இராமசா

# ஒரு [illegible]

2

இரவு



டீக்கடை காசிராஜன்தான் திலீப்சந்தைக் கொன்றவன் என்று போலீஸ் இன்வெஸ்ட்டிகேஷன் ரிபோர்ட் கூறியது. காசிராஜன் வாக்கு மூலமும் அத்துடன் ஒத்துப் போயிற்று.

'நான் தான் இந்தக் கொலையைச் செய்தேன்' என்று ஒருவன் சத்தியம் செய்தாலும் அவனைக் கொலைகாரன் என்று கோர்ட் தீர்ப்புக் கூறி விடுவ தில்லை. அப்படி சத்தியம் செய்வதற்கு எத்தனையோ காரணங்கள் இருக்கலாம். சூழ்நிலை, பலாத்காரம், போலீசின் ஆசை வார்த்தைகள் இதெல்லாம் கேஸ் ஜோடனையில் விளையாடியிருக்கலாம். போலீசில் மாட்டிக் கொண்ட பிறகு கேஸ் எப்படியெல்லாம் உருமாறும் என்பது ராகவாச்சாரிக்குத் தெரியாத தல்ல. எத்தனை 'க்ரைம்' கதைகள் படித்திருக்கிறார்? எத்தனை கேஸ் ஹிஸ்டரிகளைப் புரட்டியிருக்கிறார்!

மூர் மார்க்கெட்டில் பழைய புத்தகங்கள் விற்றுக் கொண்டிருந்த காசிராஜனை அந்தத் தொழில் கை விடவில்லை. பணம் சம்பாதிப்ப தற்கும், சொத்து சேர்ப்பதற்கும் ஏற்ற தொழிலாக அது அமையாததால், தாம்பரத்துக்கருகில் ஓர் இடம் பிடித்து டீக்கடை தொடங்கினான். ஏற்கனவே இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பே, அங்கு ஓர் இடத்தை வாங்கிப் போட்டிருந்தான்.

இரண்டொரு குட்டைகளும் அவற்றில் சில எருமைகளும் தவிர அந்தப் பகுதி யில் வெகு நாள்வரை சுறுசுறுப்பான மனித இயக்கம் எதுவும் இல்லை. இப்போதுதான் கொஞ்சம் கலகலப்புத் தோன்றி இருக்கிறது. அங்கங்கே சில வீடுகளும் சின்னத் தொழிற்சாலை ஒன்றும் கிளம்பி புகை விட்டுக் கொண் டிருக்கின்றன.

'அடுத்த வருஷம் வியாபாரம் சூடு பிடித்துவிடும்' என்று தனக்குள்ளாகவே அறிவித்து மகிழ்ந்தான். ஆனால் டீக்கடை அடுப்பில் பால் காய்ந்து காய்ந்து சுண்டியதுதான் மிச்சம். வியாபாரம் வீசி நடக்கவில்லை. ஒரு சின்னக் குடும்பம் வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய அளவுக்குக் கூட வரும்படி இல்லை. இந்த நிலையில் திலீப்சந்தின் கெடுபிடியும் நாளுக்கு நாள் அதிகமாயிற்று.

''கடனைக் கொடுக்கப் போகிறாயா? இல்லை; உன் கடையையும் நிலத்தையும் ஏலத்தில் விடட்டுமா?' என்று அடிக்கடி மிரட்டிக் கொண்டிருந்தான். ஒருநாள் காசிராஜனுக்கு ரோஷம் பொத்துக் கொள்ளவே, கோபம் கொதித்துச் சிலிர்த்தெழுந்தான். திலீப்சந்தை ஒழித் துக் கட்டுவது என்ற முடிவுக்கு வந்தான்.

வக்கீல் ராகவாச்சாரி நெற்றியைத் தேய்த்துக் கொண்டார். ''ம்ஹூம்! இந்தக் கேஸில் எங்கேயோ சுளுக்கு இருக்கிறது'' என்று முணுமுணுத்தார்.

காசிராஜனைப்போலவே திலீப்சந்திடம் கடன் வாங்கிவிட்டுத் திண்டாடுகிற ஆசாமிகள் அந்தப் பிராந்தியத்தில் வேறு யாருமே இருக்க மாட்டார்களா? அவர்களில் யாராவது ஒருவர் ஏன் இந்தக் கொலையைச் செய்திருக்கக் கூடாது? அதைக் கண்டு பிடிக்கும் திராணி இல்லாத போலீஸ் காசிராஜனைக் குற்றவாளியாக்கி இருக்கலாம்.



வக்கில் நினைத்தபடியே திலீப்சந்திடம் கடன் பட்டவர்கள் பல பேர் அந்தச் சுற்று வட்டாரத்தில் இருக்கத்தான் செய்தார்கள். அவர்களெல்லாம் சேட்ஜியை அடியோடு வெறுப்பவர்கள் தான். ஆனாலும் அவர்கள் மீது குற்றம் சாட்டுவதற்கோ, சந்தேகப்படுவதற்கோ போலீசுக்கு எந்த விதமுகாந்திரமும் கிடைக்கவில்லை.

மாடியில் குடியிருந்த பள்ளிக்கூட ஆசிரியரும் அவர் மனைவியும் மூன்று நாட்களுக்கு முன்பே மானமதுரை போய் விட்டிருந்தார்கள். சம்பவம் நிகழ்ந்த அன்று அவர்கள் ஊரிலேயே இல்லை.

சில கைரேகைகள் கண்டுபிடிக்கப் பட்டன. ஆயினும் அவை தெளிவில்லாமல் தேசலாயிருந்தன.

எனவே, திலீப்சந்தையும் அவன் வீட்டையும் நன்கு அறிந்த வேறு யாரோ தான் இந்தக் கொலையைச் செய்திருக்க வேண்டும். சேட்ஜியின் பின் மண்டையில் பட்டுள்ள பலமான, அகலமான அடியிலிருந்து அடித்தவன் நல் வலிவுள்ள ஆசாமியாகத்தான் இருக் வேண்டும்.

ராகவாச்சாரி வழக்கை மீண்டு ஒருமுறை படித்துவிட்டு யோசித்தார் குழப்பம்தான் மிஞ்சியது.

சேட்ஜியின் வழுக்கைத் தலையி அத்தனை பலமான அடிபட்டிருந்து துளிரத்தம் கூட இல்லாதது ஒ குழப்பம்! கதவின் குறுக்குக் கழியால் அடித்திருந்தால், அதில் துளி ரத்த கரையாவது பட்டிருக்க வேண்டுமே தலைமயிரில் ஒரு இழையாவது ஒட்டி கொண்டிருக்க வேண்டுமே! எதுவுமே இல்லை என்று போலீஸ் ரிப்போர்ட் கூறுகிறது. சேட்ஜிக்கு வழுக்கைத் தலை என்பதால் தலை மயிர் ஒட்டுவதற்கு சந்தர்ப்பம் இல்லாமலிருக்கலாம். ஆனா சேட்ஜி உடம்பில் ரத்தம் கூடவா இரு திருக்காது? உன் காயமாய் பட்டிருக்குமோ?



திலீப் சந்த் வீட்டுத் தோட்டத்தில் பெரிய பெரிய சவுக்கு உருட்டுக் கட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அந்தக் கட்டைகளில் ஒன்றுதான் சேட்ஜியின் மண்டையைப் பதம் பார்த்திருக்க வேண்டும் என்பதும் கதவின் குறுக்குச் சட்டத்தில் அந்த அளவுக்கு பலம் இல்லை என்பதும் போலீஸின் வாதம். ஆனால் தோட்டத்தில் அடுக்கி க்கப்பட்டிருந்த உருட்டுக் கட்டை ல் மேல் வரிசையில் இருந்த அத்தனை டைகளையும் எடுத்துச் சோதித்துப் ர்த்ததில் கைரேகை, ரத்தம், ரோமம் ற்றின் பாதிப்பு எங்குமே தென்பட லை. இதையும் போலீஸ் ரிபோர்ட்டில் முடிந்தது.

ா கவாச்சாரி காசிராஜனுடைய க்கு மூலத்தை எடுத்துப் படித்தார்.

மன்று வருடங்களுக்கு முன்னால் சந்திடம் ஐயாயிரம் ரூபாய் கடன் கியது உண்மை. சேட்ஜி பேராசைக் ரன். அநியாய வட்டி வசூலிப்பவன். கடை வியாபாரம் எதிர்பார்த்தபடி க்காததால் கடனைத் தீர்க்க முடியா திணறிக் கொண்டிருந்தேன். மூன்று டங்களாக அசலோ வட்டியோ ாடுக்க முடியாமல் சிரமப்பட்டேன். ீப்சந்த் என் நிலத்தையும் டீக்கடை யும் அடமானமாக எழுதி வாங்கி பத்துக் கொண்டான். கடந்த சில ட்களாக "பணத்தைக் கொடுக்கா ட்டால் என்ன செய்கிறேன் பார்" ாறு என்னை மிரட்டிக் கொண்டிருந் ன். கடனைத் திருப்பித் தர வழியில்லை. கஷ்டப்பட்டு சம்பாதித்து சிறுகச் சிறுகச் சேர்த்து வாங்கியிருந்த என் நிலத்தை இழக்கவும் மனமில்லை. இந்த நிலையில் மனம் முறிந்து போன எனக்கு தற்கொலை செய்து கொள்வதைத் தவிர வேறு வழி இருப்பதாய்த் தெரியவில்லை என் மனைவி குழந்தையோடு தற்கொலை செய்து கொள்ளும் முடிவுக்கு வந்தேன். அதற்கு முன்னால் திலீப்சந்தைத் தீர்த்துக் கட்டிவிட விரும்பினேன். அவனைக் கொன்று விட்டால் இந்த ஊருக்கே நன்மை செய்ததாகும் என்று கருதினேன். இந்த ஊரே என்னை வாழ்த்தும் என்பதும் எனக்குத் தெரியும்.

பதினெட்டாம் தேதி சனிக்கிழமை இரவு நான் என் சிநேகிதன் வீட்டுக்கு சீட்டு விளையாடப் போயிருந்தேன். என் மனைவியைக் கடையில் இருக்கச் சொல்லிவிட்டு அடிக்கடி மாலை வேளையில் சீட்டு விளையாடப் போவது என் சமீப கால வழக்கமாயிருந்தது. வியாபாரம் டல்லடித்ததே இதற்குக் காரணம். அன்று கருணாகரன், குருமூர்த்தி, கோதண்டம் என்ற என் மூன்று நண்பர்களுடன் சீட்டு விளையாடினேன். மூன்று ஆட்டத்திற்குப் பிறகு அங்கு குப்புசாமி வந்தான். அவனும் என் நண்பன்தான். "இதோ டீக்கடை வரைக்கும் போயிட்டு வந்துடறேன். அதுவரை எனக்குப்பதிலா நீ ஆடிக்கிட்டு இரு, குப்புசாமி" என்று சீட்டை அவனிடம் கொடுத்துவிட்டு எழுந்து போனேன். ஆனால் நேராக டீக்கடைக்கு போகவில்லை. மனசு அலை பாய்ந்து கொண்டிருந்தது. கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். அதன்படி ஸ்டேஷன் வரை போய் அங்கே இருந்த பப்ளிக் போனை எடுத்து திலீப்சந்த்தைக் கூப்பிட்டேன். அவன்தான் பேசினான். "யாரு?" என்று கேட்டான்.

"நான்தான் காசிராஜன்" என்றேன்.

"இப்ப இந்த வேளையிலே எதுக்குக் கூப்பிடறே? என்ன சங்கதி? மணி ஒன்பது ஆகப் போகுதே. தூங்கற நேரமாச்சே, காலம் நேரம் கிடையாதா?" என்று அதிகாரமாய்க் கேட்டான். குரலில் கோபம் இருந்தது.

"கொஞ்சம் பணம் கிடைச்சிருக்கு. அதை இப்பவே கொண்டு வந்து உன் கடனைத் தீர்த்துடலாம்னு நினைக்கிறேன்" என்றேன்.

"அப்படியா? அதுக்கு இப்பவே என்ன அவசரம்? காலையில் பார்த்துக்கலாமே!"

''ரூபாய் பத்தாயிரமாச்சே. இவ்வளவு பெரிய தொகையை ராத்திரியிலே வீட்டிலே வெச்சிருக்க பயமாயிருக்கு.''

அதுவரை கொஞ்சம் எரிச்சலாகவும் கோபமாகவும் பேசிய திலீப்சந்த் பத்தாயிரம் என்றதும் சாந்தமாகி விட்டான். ''சரி; இப்பவே வந்துடு'' என்றான். பத்தாயிரத்தின் உற்சாகம் தெரிந்தது.

''இப்பவே வந்துடறேன். பத்திரங்களை ரெடியா எடுத்து வை'' என்றேன்.

''சரி; வா, வா'' என்றான்.

டெலிபோன் பூத்திலிருந்து வேகமாக அவன் வீட்டை நோக்கி நடந்தேன். அரை மைல் தூரத்தில்தான் இருந்தது சேட்ஜி வீடு. வயல் வரப்பெல்லாம் தாண்டி அவன் வீட்டு வாசலில் போய் நின்றேன். கீழ்வானத்தில் சந்திரன் அழுது வடிந்தான். சேட்ஜியைத் தவிர வீட்டில் வேறு யாருமே இல்லை. அந்த நேரத்தில் அருணாசலம் அத்தனை தூரத்திலிருந்து பாத்ரூம் வழியாக என்னைப் பார்த்திருப்பான் என்பதை என்னால் நம்பக் கூட முடியவில்லை.

வாத்தியாரும் அவர் மனைவியும் மானாமதுரை போயிருக்கிற செய்தி எனக்கு ஏற்கனவே தெரியும். அவர் வழக்கமாக என் கடைக்கு வருகிறவர்தான். சேட்ஜி வீட்டில் வெளிச்சமே இல்லை. ஜன்னல்களெல்லாம் மூடிக் கிடந்தன. முதலில் சந்தடி செய்யாமல் தோட்டப் பக்கம் போனேன். அங்கே இருந்த உருட்டுக் கட்டைகளில் ஒன்றை எடுத்துக் கொண்டேன். வெளிக் கதவு திறந்தே வைக்கப் பட்டிருந்தது. நான் வாசல் பக்கமாய்ப் போய் லேசாகக் கதவைத் தட்டியதும், சேட்ஜி சொன்னபடியே காத்திருந்து கதவைத் திறந்து உள்ளே வரவேற்றான்.

உருட்டுக்கட்டையை நான் பின்பக்கமாக மறைச்சு வெச்சிருந்ததை அவன் பார்க்கவில்லை. வெளிச்சம் அதிகமில்லை. சின்ன விளக்கு ஒன்று தெரிந்தது. அரைகுறை இருட்டு.

''இவ்வளவு நேரத்துககு வறியே. இப்ப என்ன டைம் தெரியுமா?'' என்று கேட்டான் சேட்ஜி.

நான் பதில் ஒன்றும் சொல்லாமல் அவனைத் தொடர்ந்தேன்.

''வா, வா, திடீர்னு எப்படி பத்தாயிரம் கிடைச்சுது?'' என்று கேட்டு விட்டு மூலையில் அடுக்கி வைத்திருந்த திண்டுகளில் இரண்டை எடுத்து என் முன்னால் வீசி உட்காரச் சொன்னான். சாதாரணமாக சேட்ஜி யாருக்கும் அப்படி திண்டு கொடுத்து உபசரிப்பது வழக்கமில்லை. இது எனக்கு ஆச்சரியம் தான். பணம் பத்தும் செய்யுமில்லையா? நான் திண்டை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். உருட்டுக் கட்டையை அவனுக்குத் தெரியாமல் மறைத்துக் கொண்டேன். சட்டைப் பை நிறைய கற்றைக் காகிதங்களை அடுக்காக நோட்டுகள் மாதிரி திணித்திருந்தேன்.

''பணம் கொண்டு வந்திருக்கேன். ரசீது போட்டுத் தருவியா, சேட்?'' என்று சட்டைப் பை மீது கை வைத்தேன்.

திலீப்சந்த் ரசீது புத்தகத்தை எடுத்து வர எழுந்து அடுத்த அறைக்குப்




என். டி. ராமராவின் புதிய கட்சிக்கு தராசு சின்னம் கேட்கப்பட்டுள்ளது.
—செய்தி

பானுன். நான் ஓசைப் படாமல் எழுந்து மயம் பார்த்து அந்த உருட்டுக் கட்டை ால் ஓங்கி அவன் பின் மண்டையிலே ரு அடி போட்டேன். அவ்வளவுதான். அதே வேகத்தில் அவன் தலை குப்புறக் ழே விழுந்தான். திணறினான். நான் மேலே மேலே இன்னும் நாலைந்து அடி போட்டேன். விழுந்தவன் விழுந்தவன் தான். அப்புறம் பேச்சு மூச்சு இல்லை. ழுந்திருக்கவும் இல்லை.

உடனே, அந்த திண்டுகள் இரண்டை யும் எடுத்துப் பழைய இடத்திலேயே போட்டுவிட்டேன். அவனைக் கொல்ல வந்தவன் யாரோ திருடன் என்று போலீஸ் நினைக்கட்டும் என்பதற்காகவே அப்படிச் செய்தேன். திருடனுக்கு சேட்ஜி திண்டு கொடுத்து வரவேற்க மாட்டான் இல்லையா? உருட்டுக் கட்டை யைப் பழையபடி தோட்டத்திலேயே கொண்டு போய்ப் போட்டு விட்டேன். அப்புறம் தான் அடுத்த அறையிலிருந்த ராவிலிருந்து அந்தப் பணப் பெட்டி யைத் தேடி எடுத்துக்கொண்டு சவுக்குத் தோப்புக்கு ஓடினேன். பெட்டியை உடைத்து என் பத்திரத்தோடு வேறு நாலு பேருடைய பத்திரங்களையும் சேர்த்து எடுத்துக் கொண்டேன். நில வொளியில் என் பெயர் உள்ள பத்திரம் தெளிவாய்த் தெரிந்தது. அந்த ஐந்து பத்திரங்களையும் முதல் காரியமாகக் கொளுத்திச் சாம்பலாக்கி அந்தச் சாம்பலை மண்ணோடு மண்ணாய்த் தேய்த்து விட்டேன். என் பத்திரத்தை மட்டும் எடுத்துக் கொளுத்தியிருந்தால் போலீசுக்கு என் மீது மட்டும்தானே சந்தேகம் வரும்? அதனால் தான் இன்னும் நாலு பேர் பத்திரத்தையும் சேர்த்து சேர்த்து எடுத்துக் கொளுத்தினேன்! பிறகு அந்தப் பணப் பெட்டியைக் குட்டையிலே வீசி எறிந்து விட்டு வேக மாக அந்த இடத்தை விட்டு ஓடி விட்டேன்.

"உன் பெயருள்ள பத்திரம் பணப் பெட்டியிலேயே இருக்கிறது. சேட்ஜியின் கணக்குப் புத்தகத்திலும் நீ தரவேண் டிய கடன் தொகையை எழுதி வைத் திருக்கிறார். அவசரத்தில் நீ உன் பத்திரத்தை எடுத்துக் கொளுத்து வதற்குப் பதிலாக காசிராமன் என்ற பெயருடைய பத்திரத்தை எடுத்துக் கொளுத்திவிட்டிருக்கிறாய். காசிராஜன் என்ற உன் பெயருள்ள பத்திரம் பெட்டி யிலேயே இருப்பதை நாங்கள் பார்த் தோம். அந்தப் பணப் பெட்டியை நீ குட்டையில் கொண்டு போய் எறிந்திருக் கிறாய். அதைக் கண்டுப் பிடித்துக் கொண்டு வந்து ஜாக்கிரதையாய் வைத் திருக்கிறோம் கோர்ட்டில் தேவைப்படும் போது கொண்டு வந்து காட்டுவோம்." என்று போலீசார் இப்போது சொல் கிறார்கள். என்னால் இதை நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. ஒரு வேளை அப்படித்தான் செய்திருப்பேனோ? காசிராமன் என்ற பெயரைக் காசிராஜன் என்று படித் திருப்பேனோ?

—தொடரும்



மலர் : 3
இதழ் : 52
25 - 4 - 82

# அட ராமா ராவே!

"சென்னை ஆந்திராவுடன்தான் சேர்ந்திருக்க வேண்டும். ஆந்திர மாநிலம் பிரிந்தபோது இந்த உரிமையை நம் பழைய ஆந்திரத் தலைவர்கள் வற்புறுத்தாமல் விட்டு விட்டது தவறு" என்று புதுக் கட்சித் தலைவர் என். டி. ராமாராவ் பேசியிருக்கிறார். இந்தப் பேச்சிலேயே அவருடைய கட்சி எந்த அடிப்படையில் செயல்படப் போகிறது என்பது தெளிவாகத் தெரிகிறது.

'மதராஸ் மனதே' என்ற கோஷம் வலுப்பெற்று, பொட்டி ஸ்ரீராமுலு போன்றவர்கள் அதற்காக உண்ணாவிரதம் இருந்து உயிர் துறந்து போராடிய காலத்தில் சென்னை நகரம் தமிழ்நாட்டுடன்தான் இருக்க வேண்டும் என்று முடிவாயிற்று. அந்த முடிவு நியாயமானதுதான் என்பதை இவ்வளவு காலமாகியும் ஆந்திர சகோதரர்கள் ஜீரணித்துக் கொள்ளவில்லை என்பதையே 'தெலுங்கு தேசம்' தலைவர் ராமாராவின் பேச்சு காட்டுகிறது.

பெங்களூரில் போராட்டம் நடத்திவரும் அறிவு ஜீவிகள், கன்னடிகர்களுக்கு மட்டுமே கர்நாடகத்தில் வேலை தரப்பட வேண்டும் என்று மகஜர் சமர்ப்பித்து, ஊர்வலம் வேறு நடத்தியிருக்கிறார்கள்.

பாரதம் என்று ஒரு தேசம் இருப்பதாக யாருக்குமே இப்போது ஞாபகம் இருப்பதாய்த் தெரியவில்லை. துண்டு துண்டாய் நினைத்துப் பார்க்கிறார்கள். தேசிய ஒருமைப்பாடு என்பதெல்லாம் வெறும் பேச்சளவில்தானோ. நடைமுறையில் சாத்தியமில்லையோ என்றுகூட எண்ணத் தோன்றுகிறது.

இதற்கெல்லாம் மூலகாரணம் — மொழி அடிப்படையில் மாநிலங்கள் உருவாக்கப்பட்டதுதான். வேறு எந்த பூகோள அடிப்படையிலாவது மாநிலங்கள் பிரிக்கப்பட்டிருந்தால் இத்தகைய மனக் கசப்புகளுக்கும், போராட்டங்களுக்கும், பிரிவினை வாதங்களுக்கும் இடம் இருந்திருக்குமா என்பது சந்தேகமே!

நேருஜி செய்த எத்தனையோ நன்மைகள் நமக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தாலும் இந்த மொழிவாரி மாநில அமைப்பு மட்டும் தலைவலியாகவேதான இருந்து கொண்டிருக்கிறது என்பதைச் சொல்லாமலிருக்க முடியவில்லை.

# ஒரு சனிக்கிழமை இரவு

சாவி



## 3

"திலீப்சந்தைக் கட்டையால் அடித்துக் கொன்றதும்—ஒரு விஷப் பாம்பை அடித்துப் போட்ட திருப்தியோடு—அந்த வீட்டிலிருந்து விர்ரென்று வெளியே போய்விட்டேன். மனசிலே எந்த பயமும் இல்லை. படபடப்பும் இல்லை. அமைதியாக, ஒன்றுமே நடக்காதது போல், ரொம்ப சகஜமாக நடந்து கொண்டேன்.

மறுபடியும் சீட்டாட்டம் நடக்கிற இடத்துக்குப் போய்க் கொஞ்ச நேரம் ஆட்டத்தை கவனித்தேன். குப்புசாமி ஆடி முடித்ததும், அவனை எழுந்திருக்கச் சொல்லி விட்டு, நான் இன்னொரு ரவுண்ட் ஆடினேன். 'க்ளாவர் கிங்கை வெட்டினது தப்பு.'

அவங்க யாருக்கும் என் பேர்ல எந்தச் சந்தேகமும் வரவில்லை. ஆட்டத்தின் சுவாரசியத்தில் ஆழ்ந்து போயிருந்தார்கள், நான் டீக்கடைக்குப் போய்த் திரும்பி வந்திருப்பதாக எண்ணிக் கொண்டார்கள்.

'அடமானப் பத்திரங்களைத் கொளுத்தியாச்சு. திலீப்சந்துக்கு வாரிசும் கிடையாது. தொலைந்தான். இன்றோடு கடன்

தொல்லை தீர்ந்தது என்ற நினைப்பில் அன்று நான் ரொம்ப நிம்மதியாகத் தூங்கினேன்.

மறுநாள் அந்த வட்டாரம் முழுதும் சேட்ஜி செத்துப் போனதைப் பற்றியே பேச்சாயிருந்தது. ஆனால் யாருமே இரக்கம் காட்டவில்லை. 'செத்தான்; தொலைஞ்சான்!' 'சேட்ஜிக்கு என்ன முடிவு கிடைக்க வேண்டுமோ அந்த முடிவுதான் கிடைச்சிருக்கு' என்றார்கள். எனக்கு இது ரொம்ப ஆறுதலாயிருந்தது.

இரண்டு நாளைக்கெல்லாம் என்னைத் தேடி இரண்டு போலீஸ்காரர்கள் வந்தார்கள். சாதுவாக டீ குடித்தார்கள். பணம் கொடுத்துவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். அப்புறம் "கொஞ்சம் ஸ்டேஷன் வரைக்கும் வறியா?" என்று ரகசியமாய்க் கூப்பிட்டார்கள். என் வயிற்றில் புளியைக் கரைத்தது. அவர்களோடு நடந்தேன். எனக்குப் புரிஞ்சு போச்சு. இத்தோடு தொலைஞ்சோம். செம்மையா மாட்டிக் கிட்டோம். இவர்கள் என்னைக் குடைந்து எடுக்கப் போகிறார்கள். லாக்கப்பில் தள்ளி வதைக்கப் போகிறார்கள். மனைவியும், குழந்தையும் டீக்கடையும் "போறியா?" என்று கேட்டுக் கொண்டு அனாதையாய் நிற்பது தெரிந்தது. தப்புவதற்கு மார்க்கமில்லை. திலீப் சந்தைக் கொன்றது குற்றம்தான். போலீசிடம் சொல்லிவிட வேண்டியதுதான். ஆனால் நான் பெரிய குற்றம் ஒன்றும் செய்துவிடவில்லை என்பது போலப் பேசவேண்டும். அவன் சித்திரவதைப் படுத்தியதைச் சொல்லவேண்டும். கொலை செய்யும் அளவுக்கு என்னை எரிச்சலூட்டித் தூண்டிய குற்றம் அவனுடையதுதான் என்பதைப் போலப் பேசிச் சமரிஸிக்க வேண்டும்.

**கா**சிராஜனின் வாக்குமூலத்தை கவனமாகப் படித்து முடித்த அட்வகேட் ராகவாச்சாரி "கேஸில்



"எதுவானாலும் சரி, நல்லபடி செயல்பட்டால்தான் எனக்கு திருப்தியா இருக்கு. இல்லாவிட்டால்... வயிறு எரியுதுங்க...!"

"நல்லபடியா எரியுதா...?"

—பெ. [illegible]

சிம்பிள்! சந்தர்ப்ப
நிலையின் கட்டாய
னால் இந்தக் கெ
யைச் செய்திருக்கிற
இவனைக் கோர்ட்ட
மன்னித்துவிட வே
டும் என்று திற
யோடு வாதாடி மர
தண்டனையை ஆய
தண்டனையாக மா
வேண்டும்' என்று எ
ணிக் கொண்டார்.

மேஜையில் வழக்
சம்பந்தமான கேஸ் ர
போர்ட் இருந்த
அதில் அவருக்குச் சி
ஆச்சரியங்கள் கா
திருந்தன.

காசிராஜன் திம
பல்டி அடித்து இந்த
கொலையைத் தா
செய்யவே இல்லை என
சாதித்திருந்தால்
இந்தக் கொலைக்கு
தனக்கும் எந்த சம்பந்
மும் இடையா
'போலீஸ் என்னை நிர்
பந்தப்படுத்தி, து
புறுத்தி, கேள்விக
கேட்டு, விடுதலை வா
கித் தருவதாக ஆசை
காட்டினார்கள். அ
னால்தான் நான் அவ
கள் சொன்னபடியெ
லாம் வாக்குமூல
கொடுத் திருக்கிறேன்
என்று சொல்லியிரு
தான்.

ராகவாச்சாரி வி
லைச் சொடுக்கி விட்டு
கொண்டார். ஆச்ச
யத்தை விழுங்கி
கொண்டு, 'காசிரா
னைப் போன்ற குற்ற
வாளிகள் தண்டனைக்
பயந்து இம்மாதிரி முன்
னுக்குப்பின் முரணா
வாக்குமூலங்களை
கொடுப்பது சகஜ
தான். பட், வெ

...ட்டரெஸ்ட் டிங்
...ஸ்!" என்று சொல்
... கொண்டார்.

கேஸ் ரிப்போர்ட்
...ல் கண்டிருந்த தகவல்
...ள் என்ன?

"நான் நண்பர்க
...டன் சீட்டாடிக்
...காண்டிருந்தேன் என்
...து உண்மை. மூன்று
...ட்டங்களுக்குப்
...றகு எழுந்து வெளியே
...பானேன் என்பதும்
...ண்மை. எழுந்து
...பானவன் பப்ளிக்
...பானில் திலீப்சந்தைக்
...ப்பிட்டு, 'என் அட
...ானப் பத்திரம்
...ற்றிப் பேசவேண்டும்.
...ப்போது வரட்டுமா?'
...ன்று மட்டுமே கேட்
...டன். 'சரி வா வாசல்
...தவைத் திறந்து வைக்
...றேன்' என்றான்.
...சான்னபடி வாசல்
...தவைத் திறந்து வைத்
...துக் காத்திருந்தான்—
...அப்புறம் நான் அவன்
...வீட்டு வாசல்வரை
...போனேன். இவ்வளவு
...தான் நடந்தது. இதற்
...குப் பிறகு சொல்லி
...யிருப்பது எல்லாமே
...பொய். போலீஸ்
...ஸ்டேஷனில் கொடுத்
...துள்ள தகவல்கள் அவ்
...வளவும் நானாகச்
...சொன்னதல்ல. அத்
...தனையும் போலீஸார்
...நிர்ப்பந்தத்தின் பேரில்
...கொடுத்த வாக்கு
...மூலம்.

நான் பத்தாயிரம் பணம் வைத்திருப்பதாக திலீப்சந்திடம் போனில் சொல்லவே இல்லை. அப்படி நான் சொன்னதாகப் போலீஸார் எழுதிக் கொண்டார்கள். அவ்வளவு பணம் எனக்கு திடீரென்று எப்படிக் கிடைத்து விடும்?

நான் பத்தாயிரம் பணம் கொண்டு வருவதாகச் சொல்லியிருந்தால்தான் திலீப்சந்த் கதவைத் திறந்திருப்பானும்! முக்கியமான காரியமாய்ப் பார்த்துப் பேச வேண்டும் என்று சொல்லியிருந்தால் 'இப்ப என்ன அவசரம் நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்' என்று மறுத்துவிட்டிருப்பானும். அது மாத்திரமில்லை. என் பை நிறைய கரன்ஸி நோட்டு போன்ற காகிதங்களைத் திணித்துக்கொண்டு போனதாகவும் சொல்லச் சொன்னார்கள். 'பணம் என்றால் தான் சேட்ஜி வழிக்கு வருவான். வேறு எதற்கும் மசிய மாட்டான். கதவையும் திறக்க மாட்டான்' என்று போலீஸ் கூறியது திலீப் சந்தின் குணமறிந்த எனக்குச் சரியாகவே பட்டது. எனவே அவர்கள் சொன்னதை ஒப்புக்கொண்டேன்

★

"சேட்ஜி! எனக்கு இருக்கிற நிலமும் கடையும் போயிட்டால் அப்புறம் என் குடும்பம் நிர்க்கதியா நடுத் தெருவிலே நிற்க வேண்டி வந்துடும். அதனால் தயவு செய்து நான் கடனைத் திருப்பித் தருகிற வரை பொறுக்கணும். கடனைத் திருப்பித்தர நான் ஒரு ஏற்பாடு செஞ்சுகிட்டிருக்கேன். ஒரு திட்டம் வெச்சிருக்கேன். அதைப் பற்றி உன்னிடம் கலந்து பேசத் தான் இப்ப வரப் போறேன்." இவ்வளவுதான் நான் உண்மையில் சொன்னது.

"உன் நிலமோ டீக்கடையோ எனக்குத் தேவையில்லை. எனக்கு வேண்டியது என் பணம்தான். நீ



"ராமராவ், 'சென்னை ஆந்திராவுக்குச் சொந்தம்'னு ஏன் சொல்லுகிறார் திடீரென்று?"

"சிலோன் டி.வி. சென்னையில் திடீரென்று தெரிய ஆரம்பித்திருக்கிறதே. அதனால் ஆசை வந்திருக்கும்."

—செம்பூர் சந்துரு

அதைக் கொடுத்து விடுவதாயிருந்தால் நான் ... உன் சொத்தை ஏலம் விடப் போகிறேன்! ஏதாவது திட்டம் இருந்தால் உடனே வந்து சொல்லு. இப்பவே வா. நான் உனக்காகக் காத்திருக்கிறேன். வாசல் கதவைத் திறந்து வைக்கிறேன்.'' இவ்வளவுதான் திலீப்சந்த் சொன்ன பதில்.

*

உடனே வேகமா நடந்து அவன் வீட்டு வாசலில் போய் நின்றேன். திலீப்சந்திடம் என்ன பேசுவதென்று தெரியவில்லை. உள்ளே போக தைரியமும் இல்லை. ஒரு திட்டமும் இல்லாமல் வந்திருக்கிறேன் என்று தெரிந்தால் அவன் நாய் மாதிரி விழுவான். தயங்கித் தயங்கி வாசலிலேயே நின்று விட்டுப் பேசாமல் திரும்பி வந்து விட்டேன். அப்புறம் ஒன்றும் தோன்றாத நிலையில் வயல் வெளியிலே ஒரு மணி நேரம் சுற்றிக் கொண்டிருந்தேன். அங்கிருந்து மறுபடியும் சிநேகிதன் வீட்டுக்குப் போனேன். நான் எந்தக் குற்றமும் செய்யாததால் என்னிடம் எந்தப் பரபரப்பும் இல்லை. அமைதியாகச் சீட்டாடினேன். அமைதியாக வீட்டுக்குப் போய்த் தூங்கினேன். அன்று ராத்திரி நான் குறட்டை விட்டுத் தூங்கியதாக மறுநாள் என் மனைவி சொன்னாள். நடந்தது இவ்வளவுதான். ஆனால் போலீஸ் எனக்கு ஆசை வார்த்தைகள் சொல்லி அவர்கள் இஷ்டம் போல் என் வாக்குமூலத்தை வாங்கி வைத்துக் கொண்டார்கள்.

எடுத்த எடுப்பிலேயே நான் திலீப்சந்தைக் கொலை செய்யவில்லை என்று போலீசிடம் உண்மையைச் சொல்லியிருப்பேன். ஆனால் அதை அவர்கள் எங்கே நம்பப் போகிறார்கள்?



"இப்பதான் உமமை நினைச்சேன்; நீரே வந்து விட்டீர்! உமக்கு ஆயுசு நூறு...!"

'இனிமேல் அப்படியெல்லாம் வாழ்த்தாதீங்க. எனக்கு ஏற்கனவே வயசு 101 ஆயிட்டுது."

வொருவராய் என்னை தேடி வந்தார்கள் "காசிராஜா! பொ சொல்லாதே- உண்மை யைச் சொல்லிடு பொய் உன்னைக் கா பாற்றப் போவதில்லை அத்தோடு நடந்தது அவ்வளவும் எங்களுக் குத் தெரியும். நீதான் கொலை செஞ்சிருக்கே. அந்தப் பணப் பெட் டியை நீ எப்படி உடைத் தாய் என்பது கூடத் தெரியும். அந்தப் பெட் டிக்குள் கண்டெடுத்த ப்ராமிஸரி நோட்டு களில் உன்னுடையதும் ஒன்று. எல்லாம் குட் டைத் தண்ணீரில் நனைந்து சேறாகியிருக் கின்றன. அவசரத்தில் காசிராமன் என்பவனு டைய பத்திரத்தை காசிராஜன் என்று படித்து விட்டுக் கொளுத்தி விட்டிருக் கிறாய். வெளிச்சம் போதாததால் உனக்கு எழுத்துக்கள் தெளி வாகத் தெரியவில்லை.'' என்றார் ஒருவர்.

இன்னொரு போலீஸ் காரர் வந்தார். "இத பார்! உன்னை அன்று பாத்ரூம் ஜன்னல் வழி யாய்ப் பார்த்ததாக அருணாசலம் சொல் கிறார். 'ஒரு நாள் திலீப் சந்தை தீர்த்துக் கட்டி டறேன் பாரு' என்று நீயே நண்பர்களிடம் சொல்லியிருக்கிறாய். உனக்கு அவனைக் கொன்றுவிடவேண்டும் என்கிற எண்ணம் இருந் திருக்கிறது. இந்த உன் னுடைய நோக்கமே போதும், நீதான் கொலைகாரன் என் பதை நிரூபிக்க. ஆனா லும் உன்னைப் பார்த்

ால் பரிதாபமா இருக்கு. பிள்ளைகுட்டிக்காரன். உண்மையைச் சொல்லிடு. பப்ளிக் ப்ராஸிகியூடரிடம் சொல்லி உனக்கு விடுதலை வாங்கித் தந்துடறோம். இந்தக் கேஸை ஒன்றுமே இல்லாமல் பண்ணிடறோம். பிழைத்துப்போ! நீ நிம்மதியா வீட்டுக்குப் போய் பெண்டாட்டி பிள்ளையோட வாழலாம். என்ன சொல்றே?''

நான் என்ன சொன்னாலும் இந்தப் போலீஸார் என்னை விடுவதாயில்லை. பொய் வாக்குமூலம் கொடுக்கச் சொல்லி திருப்பித் திருப்பி வற்புறுத்தினார்கள். அவர்கள் வற்புறுத்தல் தாங்காமல் ''சரி, நான்தான் இந்தக் கொலையைச் செய்தேன். ஒப்புக் கொள்கிறேன். போதுமா? இப்படிச் சொன்னாலும் நிச்சயமா என்னை விடுதலை செய்துடறீங்களா?'' என்று கேட்டேன். இப்படி நான் சொன்னதும், போலீஸாருக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ''இந்தா சிகரெட்!'' என்று சிகரெட் கொடுத்தார்கள். மசால் தோசை வரவழைத்துக் கொடுத்தார்கள்.

அப்புறம் அவர்கள் சொன்னபடியே எல்லா விவரங்களையும் திருப்பிச் சொன்னேன். என்னைத் தங்கள் வழிக்குக் கொண்டு வந்துவிட்டதில் அவர்களுக்கு ரொம்ப திருப்தி. ''இது மட்டும் போதாது. அந்த திலீப்சந்த் வீடு எப்படி இருக்கும்னு உன் கையாலேயே ஒரு ப்ளான் போட்டுக் கொடு'' என்றார்கள். அதையும் போட்டுக் கொடுத்தேன். கடைசியாக என்னை திலீப்சந்த் வீட்டுத் தோட்டத்துக்கு அழைத்துச் சென்று ''எந்தக் கட்டையாலே அவன் மண்டையில் அடித்தாய்? அதைக் காட்டு பார்க்கலாம்'' என்றார்கள்.

நான் அவனைக் கொல்லவே இல்லையே! எனக்கு எப்படித் தெரியும்? நான் விழித்தேன். அவர்கள் அங்கே அடுக்கி வைத்திருந்த கட்டைகளில் ஒன்றைச் சுட்டிக் காண்பித்து ''இதாலதானே?'' என்று கேட்டார்கள். அவர்கள் கேள்வியே ''ஆமாம் இதாலதான்''னு நான் சொல்லணும்ங்கிற மாதிரி இருந்தது. அதைப் புரிஞ்சிகிட்டு ''இதாலதான்னு சொல்லச் சொல்றீங்களே, இதிலே துளி ரத்தம் கூடப் படலையே. ஒரு சின்னத் தலைமயிர் கூட ஒட்டிக்கொள்ளவில்லையே'' என்று சந்தேகம் எழுப்பினேன்.

''உனக்கு ஏன் அதைப் பற்றியெல்லாம் கவலை. உள் காயம்தான். அதனால் ரத்தம் வரவில்லை. அவன் தலையிலே ரத்தம் வந்திருந்தால் நாங்க சும்மாவா இருந்திருப்போம்? திலீப்சந்த் ரத்தம் மாதிரியே கொஞ்சம் ரத்தம் எடுத்து வந்து இந்தக் கட்டை மேல தடவியிருப்பமே? அவ்வளவு மக்கா நாங்க?'' என்று சிரித்தார்கள்.

''சரி; கட்டையிலே கை ரேகை இல்லையே?''

''இந்தக் கட்டையைப் பார். சொர சொரன்னு இருக்குது. பலமில்லாத கட்டை வேறே. விறகு மாதிரி இரண்டாப் பிளந்து கிடக்கிறது. இதிலே கைரேகை எப்படிப் பதியும்? படிந்தாலும் எப்படித் தெரியும்?'' என்றார்கள்.




''ஏன் உன் மானேஜர் குப்பைக் கூடையை அவ்வளவு உயரத்துல மாட்டி வெச்சிருக்கார்?''
''அவர் அந்த நாள் ''பாஸ்கட்பால்'' சேம்பியனும்.''

அந்த விறகுக் கட்டையை ஒரு துணியிலே சுற்றி பத்திரமாக எடுத்துக் கொண்டார்கள்.

அங்கிருந்து வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்கள்.

"திலீப்சந்தை அடித்துக் கொல்வதற்கு முன்னால் நீ எங்கே உட்கார்ந்திருந்தாய்? அந்த இடத்தைக் காட்டு" என்றார்கள்.

இதோ இங்கேதான். 'பத்தாயிரம் கொண்டு வந்திருக்கேன். சேட்ஜி! ரசீது தருவியா?' என்று கேட்டேன்.

'உட்காரு இதோ ரசீது புக் கொண்டு வருகிறேன்' என்று திரும்பினான். அப்பத்தான் அவன் மண்டையிலே அடிச்சேன் என்றேன்.

போலீஸார் சிரித்தார்கள்.

"அப்படி திடீர்னு அடிச்சேன்னு சொன்னா நம்ப மாட்டாங்கப்பா. நீ சொல்றது பொருத்தமா இருக்கணும். நம்பும்படியா, நடந்த மாதிரி சொல்லணும். இப்ப நாங்க சொல்லித் தரோம். அதேமாதிரி சொல்லு, பார்க்கலாம்." சொல்லிக் கொடுத்தார்கள்:

'உள்ளே வந்தனா? சேட்ஜிகிட்டே பத்தாயிரம் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னேன். அவன் உடனே எனக்கு இரண்டு திண்டு எடுத்துக் கொடுத்து உட்காரச் சொன்னான். ரசீது வேணும்னு கேட்டேன். ரசீது புத்தகம் எடுத்து வர எழுந்து அடுத்த அறைக்குப் போனான். நான் அப்பதான் அவன் பின் மண்டையிலே ஓங்கி அடித்தேன். அவன் தலைகுப்புறக் கீழே விழுந்துட்டான். நான் உடனே அந்த திண்டுகளை எடுத்துப் பழைய இடத்திலேயே வீசி விட்டு, வெளியே ஓடிட்டேன். யாரோ திருடன் வந்து சேட்ஜியைக் கொன்றுவிட்டதாக நினைத்துக் கொள்ளட்டும் என்பதற்குத் தான் அப்படிச் செய்தேன். திலீப்சந்த் திருடனுக்கு திண்டு கொடுத்து வரவேற்க மாட்டான், இல்லையா? என் பேரில் சந்தேகம் வரக்கூடாது என்பதற்காகவே அப்படிச் செய்தேன். கோர்ட்ல இதே மாதிரி சொல்லணும். எங்கே, இப்ப ஒருதரம் நாங்க சொன்னபடி திருப்பிச் சொல்லு பார்க்கலாம்." ஏறக்குறைய சரியாகவே சொன்னேன்.

"ஜாக்கிரதை! கோர்ட்ல தவறிடக் கூடாது" என்றார்கள்.

"சேட்ஜியை விறகால் எத்தனை முறை அடிச்சேன்? அதையும் சொல்லிக் கொடுத்துடுங்க" என்றேன்.

"மூணு முறை. ஒரு தடவை அடிச்சா சாகமாட்டான். ஐந்தாறு தடவை ரொம்ப அதிகம். ரத்தம் வந்திட்டிருக்கும். இந்த விறகு கனமில்லாத விறகு. அதனாலே மூணு தடவை. சரிதானு, எத்தனை தடவை? மூன்றே தடவை. ஞாபகம் வெச்சுக்கோ." என்றார்கள்.

"சரி" என்றேன்.

"அப்புறம் அந்தப் பணப் பெட்டி விஷயம். உன் கைரேகை தெரியக் கூடாது என்பதற்காக நீ அந்தப் பெட்டியைக் குட்டையிலே வீசி விடுகிறாய். அது சேத்துலே அமுங்கி கைரேகை தெரியறதுக்கு சான்றே இல்லாமல் போய்விடுகிறது."

நான் பத்திரங்களைக் கொளுத்தி மண்ணோடு மண்ணாகத் தேய்த்து விட்டதாகச் சொல்லச் சொன்னார்கள். சொன்னேன். உண்மையில் நான் எங்கே கொளுத்தினேன்? ஒரு வேளை போலீஸே கொளுத்தி அப்படித் தேய்த்து விட்டதோ என்னவோ?

இவ்வளவும் சொல்லி முடித்த பிறகு என்னை வீட்டுக்கு அனுப்பி விடுவார்கள் என்று எதிர்பார்த்தேன். போலீஸை நம்பினேன். ஆனால் அவர்கள் என்னை ஏமாற்றி விட்டார்கள்.

"இத பார், கோர்ட்டில் ஏதாவது மாற்றிச் சொன்னயோ, அப்புறம் உன்னை சும்மா விடமாட்டோம். என்ன செய்வோம்னு தெரியுமில்லே?" என்று குண்டாந் தடியை எடுத்துக் காட்டினார்கள்.

இதற்குப் பிறகு காசிராஜன் என்ன செய்ய முடியும்? பப்ளிக் ப்ராஸிக்யூடர் முன்னாலே எல்லாத்தையும் போட்டு உடைத்து விட்டான். போலீஸைப் பழி தீர்த்துக் கொண்டான். போலீஸ் அவனை பயமுறுத்தி, கேஸை ஜோடிக்க காசிராஜன் தான் கொலைகாரன் என்று எழுதி வாங்கியிருந்தார்கள். இப்போது அவ்வளவும் பொய் என்று புது ஸ்டேட்மெண்ட் ஒன்று கொடுத்து விட்டான்.

ராகவாச்சாரி குழம்பினார். காசிராஜன் முதல்லே சொன்னது நிஜமா இல்லே, இப்ப சொல்றது நிஜமா?

—தொடரும்




றகரன், திருச்சி

புகழ் மக்க டாக்டர் ரங்காச்சாரிக்கு
பிறந்த தினமாமே? அவரைப் பற்றி
ம்......

எளிய மக்களுக்கு வலிந்து
வைத்திய உதவி புரிவதில்
மிகக் கொண்டிருந்த பரோப
இதற்காகவே ரோல்ஸ் ராய்ஸ்
ன்றும், குட்டி விமானம் ஒன்றும்
ந்தில் வைத்திருந்தார். குப்பங்
ந் தாமே தம்முடைய காரில்
சிகிச்சை செய்துவிட்டு அவர்கள்
க்கும் ஒரு ரூபாய் இரண்டு
ய மகிழ்ச்சியோடு பெற்றுக்
டு வந்தார். ஓயாத உழைப்பாளி.
சுவை உணர்வு மூலம் தம்முடைய
லைகளை மறக்க முயன்றவர்.

3—ல், மதுரையிலிருந்து தமது
விமானத்தில் சென்னைக்குத்
வந்தபோது இருட்டி விட்டதால்
னத்தை திருச்சிக்கருகிலுள்ள வயல்
யில் இறக்கிவிட்டு, அங்கேயே ஒரு
றுக் கட்டிலைப் போட்டுப்
துறங்கி விட்டார்.

லையில் எழுந்து பார்த்தபோது
சட்டைப்பையைப் பணத்துடன்
ர கத்தரியால் அழகாக வெட்டி
துக் கொண்டு போய் விட்டிருப்
தக் கண்டு தமக்குள்ளாகவே
துக் கொண்டார்!

க்டர் ரங்காச்சாரி இந்தச்
தியை தமது டாக்டர் நண்பர்
சுப்பிரமணியனுக்குத் தெரியப்
தும் தமாஷைப் பாருங்கள்.

அன்புள்ள ராமசுப்பிரமணியம்,

ஒரு பெரிய ஸர்ஜன். நீ ஆபரேஷன்
யும்போது உனக்கு உதவியாக

பட்டால் எனக்கு எழுது. திருச்சி
வயல் வெளியில் மிகத்திறமையாக
ஆபரேஷன் செய்கிறவர்கள் இருக்
கிறார்கள். எந்த வலியும் தெரியாமல்
ஆபரேஷன் நடக்கிற உணர்வுகூட
இல்லாமல் செய்து விடுகிறார்கள்!''

*வித்யாசாகர், பெங்களூர்*

●● *திப்பு சுல்தான் பற்றி ஏதாவது ஒரு ஜோக் சொல்லுங்களேன்.*

ஸ்ரீரங்கப்பட்டணத்தில் திப்பு சுல்தானுக்கு ஒரு சமாதி கட்டியிருக்கிறார்கள். காவேரிக்கரையில் இயற்கை எழில் சூழ்ந்தஇடத்தில் கட்டப்பட்டுள்ள அந்த அழகிய சமாதியை ஒரு முறை பேராசிரியர் கல்கி போய்ப் பார்த்து விட்டு ''ஆகா! இவ்வளவு அழகான சமாதியை திப்புசுல்தான் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே'' என்று வருத்தப்பட்டார்!

*ந. சத்தியநாராயணன், அயன்புரம்*

●● *எலி பிடிப்பது, புலி பிடிப்பது இவ்விரண்டில் கஷ்டநஷ்டங்கள் எதில் அதிகம்?*

கஷ்டம் இரண்டிலும் உண்டு. நஷ்டம் எலி பிடிப்பதில் மட்டுமே உண்டு. எலிப் பொறியில் மசால் வடை வைக்க வேண்டுமே!

*ஆர். சண்முக சுப்பிரமணியன், திருமங்கலம்*

●● *உலகில் ஆண்டவனின் படைப்பில் கவர்ச்சிகரமான பொருள் எது? சொல்ல முடியுமா?*

பூ! — இதெல்லாம் ஒரு கேள்வியா?

*எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி*

●● *பார்த்தசாரதியை விட்டு கதிர் நழுவி விட்டதே, கவனித்தீர்களா?*

'குதிரை' விட்டவர்கள் 'சாவி'யாகி விடுவதில்லை.

*என். சக்திவேல், பழனி-1*

●● (1) *சேர்ந்து இருக்க வேண்டியது எது?* (2) *சேராமல் இருக்க வேண்டியது எது?*

(1) மேனகாவும் இந்திராவும்.
(2) தி.மு.க.வும் அ.தி.மு.க.வும்.

மேனகா



இந்திரா



# ஒரு சனிக்கிழமை இரவு

சாவி

④

'நான்தான் திலீப்சந்தைக் கொன்றவன் என்று காசிராஜன் போலீஸிடம் முதலில் ஒப்புக்கொண்டான். இப்போது இல்லை என்கிறான். இதில் எது நிஜம்? எது பொய்?'

அட்வகேட் ராகவாச்சாரி ஒரு முடிவுக்கு வந்தார். அவருடைய வழக்கறிஞர் புத்தி 'காசிராஜன் குற்றவாளி அல்ல' என்று போலீஸுக்கு எதிராகக் கோர்ட்டில் வாதாட வேண்டுமெனத் தூண்டியது. 'யெஸ்' என்றார்.

வற்புறுத்தல், ஆசை வார்த்தைகள் மூலம் பெறும் வாக்கு மூலம் போலீஸுக்குச் சாதகமாயிருந்த போதிலும் அதெல்லாம் ஒருவனைக் குற்றவாளி என்று தீர்மானித்து விடப் போதிய சாட்சியங்களாகி விடாது. அத்தகைய வாக்குமூலத்துடன் ஒத்துப் போகக் கூடிய மூன்றாம் நபர் சாட்சியமும், ஆயுதம், கைரேகை போன்ற சூழ்நிலை சாட்சியங்களும் வேண்டும்.

காசிராஜன் "சேட்ஜியிடம் அநியாய வட்டிக்குப் பணம் வாங்கியிருந்தான். சேட்ஜி காசிராஜன் சொத்துக்களை ஏலத்தில் விடப் போவதாக அச்சுறுத்தினான். அதனால் கோபமுற்ற காசிராஜன் சேட்ஜியைக் கொன்று விட விரும்பி



ஞன் என்பதெல்லாம் சூழ்நிலை சாட்சியம். கொலை நடந்த தினத்தில் காசிராஜன் ஊரில்தான் இருந்தான் என்பது மற்ருெரு ஆதாரம். ஒன்பது மணி சுமாருக்கு சீட்டாட்டத்திலிருந்து எழுந்து வெளியே போய்விட்டுப் பத்து மணிக்குத்தான் திரும்பி வந்தான் என்று அவன் நண்பர்களே போலீஸிடம் சொல்லியிருக்கிருர்கள். அருணுசலம் பாத்ரூம் ஜன்னல் வழியாகப் பார்த்ததாகச் சொல்வது இன்னெரு சாட்சி. பணப்பெட்டி, சவுக்குக் கட்டை இவ்விரண்டும் ஸ்தூலமான சாட்சியங்களாய்க் கருதப்பட்ட போதிலும் சவுக்கிலோ, பெட்டியிலோ காசிராஜனின் கைரேகை எதுவும் காணப் படவில்லை என்பது பெரிய விஷயமல்ல.

கேள்வி: சேட்ஜி மண்டையிலே அடித்ததாகச் சொல்கிருயே, எதனுல் அடித்தாய்?

பதில்: சவுக்குக் கட்டையால்...

கே: எவ்வளவு நீளம் இருக்கும்?

ப: சுமார் ஒன்றரை முழம்.

கே: அது எங்கே இருந்தது?

ப: எது?

கே: அந்தக் கட்டை?

ப: சேட்ஜி வீட்டுத் தோட்டத்தில் ஏராளமான விறகுக் கட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்று. சேட்ஜியை அந்தக் கட்டையால்தான் கொல்ல வேண்டுமென்று நான் தீர்மானித்து வைத்திருந்தேன்.

கே: அப்படின்னு சேடஜி வீட்டுக்குப் பின்னுல் கட்டைகள் அடுக்கி வைத்திருப்பது உனக்கு ரொம்ப நாளாகத் தெரியும் என்று சொல்லு.

ப: ஆமாம்.

கே: சேட்ஜியைக் கொன்ற பி
அந்தக் கட்டையை என்ன செய்தாய்

ப: எடுத்த இடத்திலேயே கொ
போய்ப் போட்டு விட்டேன்.

கே: இப்ப அந்த இடத்து
உன்னைக் கூட்டிக்கொண்டு போ
உன்னுல் அதை அடையாளம் சொ
முடியுமா?

ப: அந்தக் கட்டைகளை இதுவ
யாரும் கலைக்காமல் அப்படியே
இருந்தால் நிச்சயம் சொல்வேன்.

கொலை நடந்த மறுநாள் க
யிலிருந்து அந்த வீடு போலீஸ் காவ
தான் இருந்து வருகிறது. ஆ
எல்லாம் அப்படி அப்படியேதான் இ
ின்றன.

போலீஸார் காசிராஜனை சே
வீட்டுக்கு அழைத்துச் சென்ருர்
தோட்டத்துக்குப் போனதும் "இ
இந்தக் கட்டைதான். இதனுல்
நான் சேட்ஜியைக் கொன்றேன்" எ
அந்தக் கட்டையை டக்கென்று அ
யாளம் காட்டினுன் காசிராஜன்.

கையுறை அணிந்த போலீஸ்க
ஒருவர் அந்தக் கட்டையை எடு
கொண்டார். காசிராஜனையும் உ
போட்டுக் கொள்ளச் சொல்லி அ
கட்டையை அவனிடம் தந்
அவன் அதைத் தனது வலது கை
வாங்கி லாகவமாய் ஒரு சுழ
சுழற்றித் தரையில் தட்டினுன். "
தான்; என் கைக்குப் பழக்க
கட்டை இது. இதைத் தொடும்பே
அது எனக்குத் தெரிகிறது" என்ருன்

தங்களுக்குச் சாதகமான பயின்
களையே அவன் சொல்லிக் செ



"உங்க வீடு இப்படி கம...கம...ன்னு மணக்குதே..!"
"இருக்காதா பின்னே, சென்ட் நிலத்திலே கட்டிய வீடாச்சே...!"



''உன்னைப் பார்த்தால் ரேகா ஜாடையாயிருக்கே!''

''என்னைப் பார்க்கிறபோது என் நினைவாகவே இருங்க.''

'நினைவெல்லாம் நித்யா' படத்தில் — ஜிஜி, கார்த்திக்.

ப்பது போலீஸாருக்கு மிகுந்த
ழ்ச்சியைத் தந்தது.

அட்வகேட் ராகவாச்சாரி போலீ
ர் வசமிருந்த வாக்குமூலம் முழுவதை
படிக்காததால் அதைப் பூர்ணமாக
த்துப் பார்த்துவிட விரும்பினார்.
நாள் போலீஸ் ஸ்டேஷனுக்கே
ில் போய் முழுதும் படித்து முடித்
ர். போலீஸ் இன்ஸ்பெக்டர்
ராம்பக் கோபமாயிருந்தார்.
ராம்ப மோசக்காரன் ஸார் இந்த
ிராஜன்! முதலில் எங்ககிட்ட
ன்னதையெல்லாம் இப்போது
படியே மாற்றிச் சொல்கிறான்.
க எந்த ஆசை வார்த்தையும்
ால்லவில்லை. துன்புறுத்தவும் இல்லை.
கே போலீஸ் ஸ்டேஷனுக்கு அவனை
ல் முதல் அழைத்து வந்தபோது
ைகவேதான் சொன்னான்.

சேட்ஜியை எப்படிக் கொன்றேன்
ியுமா? எதனால் கொன்றேன் தெரி
ா? அவனிடம் என்ன பேசினேன்
ியுமா?'' என்றெல்லாம் எங்களையே
கேட்டுக் கேட்டு அவனாகவே அவ்வளவை
யும் சொன்னான். அப்புறம் அந்த வீட்டு
வரைபடம் ஒன்றை வரைந்து காட்டி
னான். எந்தக் கட்டையால் அடித்தானோ
அதை அடையாளம் காட்டி, ''நீங்க
வேணாப் பாருங்க; அதில் என் கைரேகை
நிச்சயம் இருக்கும்'' என்று கூடச்
சொன்னான். இவ்வளவு தெளிவாக
நுணுக்கமாகச் சொன்னவன், எங்க
ளோடு ஒத்துழைத்தவன், நண்பன்
போல் இருந்தவன் இப்போது இப்படி
டபுள் பல்டி அடிக்கிறானே...

''நண்பன் போல் இருந்து'' என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் கூறிய வார்த்தை ராகவாச்சாரியை உறுத்தியது.

'' 'நண்பன்போல் இருந்து' ஒத்துழைத்தான் என்றால், போலீஸார் தனக்கு விடுதலை வாங்கித் தருவார்கள் என்ற நம்பிக்கையில் செய்திருக்கிறான்'' என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டார்.

வழக்கு விசாரணை நாள் நெருங்கிக் கொண்டிருந்தது.

—தொடரும்



மலர் : 4
இதழ் : 2
9 - 5 - 82

# திருத்தணியில் ம. பொ. சி.

'ராஜாஜி வேண்டாம்' என்ற கிளர்ச்சி தமிழ்நாட்டில் எழுந்தபோது, "ராஜாஜி வேண்டும்" என்று தமிழகமெங்கும் குரல் கொடுத்து ராஜாஜியின் பெருமையை நிலைநாட்டியவர் ம. பொ. சி.

தேச விடுதலை இயக்கத்தில் பங்கு பற்றி, பல முறை சிறை சென்று ஆரோக்கியம் இழந்து, வறுமையில் வாடி, உடல் மெலிந்த போதிலும் உள்ளத்தில் உறுதி மெலியாத காந்திய வீரர்.

காமராஜருடன் கை கோத்துக் குலவிய காலமும் உண்டு. கருத்து வேற்றுமை காரணமாகப் பிரிந்து வாழ்ந்த நேரமும் உண்டு.

தமிழ், தமிழ்நாடு என்பதுதான் ம. பொ. சி.யின் பேச்சு, மூச்சு, உணர்வு எல்லாம். 'உயிர் தமிழுக்கு உடல் மண்ணுக்கு' எனச் சபதமிட்டு வாழ்ந்து வருபவர். எல்லைப் போராட்டங்களைத் தலைமை தாங்கி நடத்திப் பல தொல்லைகளை அனுபவித்தவர். தெற்கே குமரியும் வடக்கே வேங்கடமும் தமிழகத்தின் எல்லையாக அமைய வேண்டுமென முழக்கமிட்டு முரசு கொட்டியவர்.

நேரு ஆட்சியில், ராஜாஜியின் பரிந்துரையுடன் தணிகையைத் தமிழகத்தில் நிலைக்கச் செய்த பெருமை சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்களுக்கே உண்டு.

திருத்தணியில் ம. பொ. சி.க்கு உருவச் சிலை வைத்துப் பெருமைப் படுத்தியுள்ள திருத்தணிவாழ் மக்களையும் தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களையும் தமிழ் மக்கள் வாழ்த்துகிறார்கள். ராஜாஜி, காமராஜ் காலத்தில் கிடைக்காத பெருமைகளும் பதவிகளும் ம. பொ. சி.க்கு எம். ஜி. ஆர். ஆட்சியில் சிறப்பாகக் கிடைத்திருக்கின்றன.

இது சிலம்புச் செல்வருக்கு வைத்த சிலை அல்ல. தமிழ் மக்கள் அந்தத் தியாகிக்குச் செலுத்தும் நன்றியின் சின்னம்.

---

அசோக் உமா பப்ளிகேஷன்ஸுக்காக ராஜி பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட் அச்சிட்டு வெளியிடுபவர் : வி. பாலசந்திரன் (பாச்சா), 349, பூந்தமல்லி நெடுஞ்சாலை அமைந்தகரை. சென்னை 600029, ஆசிரியர்: சாவி.

# ஒரு சனிக்கிழமை இரவு

## சாவி

5

போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் செய்து "காசிராஜனைப் பார்த்துப் பேச வேண்டும். இப்போது வரலாமா?" என்று கேட்டார் வக்கீல்.

"எப்ப வேணுலும் வாங்க. ஆனால் காசிராஜன் சொல்றதையெல்லாம் மட்டும் அப்படியே நம்பிடாதீங்க. மோசக்காரன்!" என்றார் இன்ஸ்பெக்டர்.

லாக்-அப்பில் கம்பிகளுக்குப் பின்னல் உட்கார்ந்திருந்தான் காசி. அட்வகேட் உட்கார்ந்து பேச கம்பிக்கு இந்தப் பக்கம் நாற்காலி போட்டார்கள்.

ஒல்லியாக, உயரமாக, கீழ் நோக்கிய பார்வையோடு காணப்பட்ட அவன் முகத்தில் கொஞ்சம் பெண்மை இருந்தது. தாடி சுபிட்சமாயில்லை. வக்கீலை உன்னிப்பாய்ப் பார்த்துவிட்டு, தனக்காக வாதாடப் போகிறவர் என்பதைப் புரிந்துகொண்டு எழுந்து நின்றான். பரம சாதுவாய்த் தெரிந்தான்.

"இவனு கொலைகாரன்! இந்தச் சாதுவான முகத்தில் கொடூரமோ கொலைத்தனமோ மறைந்திருப்பதாய்த் தெரியவில்லையே!" என்று வியந்தவர் "ஊஹூம்; தோற்றத்தை வைத்து ஆளை எடை போடக் கூடாது. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ?" என்றும் யோசித்தார்.

"காசி! இந்தக் கேஸில் உனக்காக நான்தான் ஆஜராகப் போகிறேன், தெரியுமா? கோர்ட்ல நான் சரியானபடி வாதாடி உனக்கு விடுதலை வாங்கித் தரணும்னு நீ உண்மையை மறைக்காமல் நடந்ததை நடந்தபடி சொல்லணும்."

"சரிங்க. நிச்சயம் சொல்றேன்."

"போலீஸ்ல நீ சொன்னதாக எழுதி வைத்திருக்காங்களே, அதெல்லாம் நிஜமா, பொய்யா?"

"சுத்தப் பொய்! அவ்வளவும் நான் சொன்னதுபோல் அவங்களாவே எழுதிக்கிட்டதுதான். என்னை அந்த மாதிரி சொல்ல வெச்சவங்களும் அவங்கதான்."

"உன்னை நிர்ப்பந்தப் படுத்தினுங்களா?"

"ஆமாம்."

"விடுதலை வாங்கித் தருவதாக ஆசை காட்டினுங்களா?"

"குடுத்தாங்க."

"மசால்தோசை, சிகரெட் எல்லாம் வாங்கித் தந்தாங்களா?"

"ஆமாம்."

"நீயாகவேதான் அப்படிச் சொன்னதாகச் சொல்றுங்களே! சவுக்குக் கட்டையைக் கூட சேட்ஜி தோட்டத்திலிருந்து நீதான் எடுத்துக் காட்டினயாம்!"

காசிராஜன் தலையை இப்படியும் அப்படியும் பலமாக ஆட்டி "இல்லவே இல்லை. அபாண்டமாப் பழி சுமத்தறுங்க," என்று கோபமாய்ப் பேசினுன்.

"அதை உன்னுலே 'ப்ரூவ்' பண்ண முடியுமா?"

"நிச்சயமா முடியும்" காசிராஜனின் கண்களில் பிரகாசம் தெரிந்தது.

"திலீப் சந்தை நான் கொன்றதாகச் சொல்றுங்களே, அதற்கு முன்னல் என்ன நடந்தது, தெரியுமா?"

"சொல்லு..."

"திலீப் ரசீது புத்தகம் எடுக்க அடுத்த ரூமுக்குப் போனபோது பின் புறமாக நான் அவனை மண்டையில் அடிக்கிறேன். இந்த இடத்தில் போலீஸார் குறுக்கிட்டு "ஊஹூம், அது சரியாயிருக்காது. முதலில் திலீப் சந்த் உனக்கு திண்டுகள் எடுத்துத் தருகிறன். நீ அவற்றைப்

போட்டுக் கொண்டு உட்காருகிருய். அப்புறம் சேட்ஜி எழுந்து ரசீது புத்தகம் கொண்டு வர அடுத்த அறைக்குப் போகிறபோது நீ அவன் மண்டையில் அடிக்கிருய். உடனே திண்டுகளை எடுத்துப் பழையபடியே மூலையில் வைதது விடுகிருய். அப்பத்தான் 'இந்தக் கொலையை திலீப்சந்த் வீட்டுக்கு அவனைத் தேடி வந்தவர்கள் யாரும் செய்யவில்லை. யாரோ திருட வந்தவன் செய்திருக்கிருன்' என்று போலீசார் நினைப்பார்கள். உன் பேரில் சந்தேகம் வராமலிருப்பதற்காக நீ அப்படிப் போக்கு காட்டுகிருய் என்று சொல்லிக் கொடுத்தார்கள்.

சேட்ஜியை நன்கு அறிந்தவர்கள் இதை ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள். தன்னைத் தேடிவரும் கடன்காரர்களுக்கு அவன் எப்போதும் திண்டு கொடுத்து மரியாதை செய்ததில்லை. நான் பல முறை அவன் வீட்டுக்குப் போயிருக்கிறேன். ஒருநாள்கூட அவன் எனக்கு திண்டு கொடுத்ததில்லை. வக்கீல் ஸார்! இதைப் பற்றி நீங்களே நல்லா விசாரிச்சுப் பாருங்க. அப்பத்தான் உங்களுக்கு உண்மை புரியும்.''

''அப்படின்ஞ திலீப்சந்த் எதுக்காக அவ்வளவு திண்டுகளை அடுக்கி வைத்திருக்கிருன்?''

''சும்மா அது ஒரு ஷோ! யாருமே அந்த திண்டுகளில் உட்கார்ந்ததில்லை.



''முறுக்கு சுட்டு வெச்சிருக்கியே...என்ன விசேஷம்?''

''உங்கம்மா பல் செட்டைத் தொலைச்சுட்டாளாம்!''

உ. ராஜாஜி

உட்காரவும் விடமாட்டான் அவன். ஏன்னு வரவங்க சௌகரியமா உட்கார்ந்துட்டா அந்த சுகத்திலே சீக்கிரம் எழுந்து போக மனசு வராதாம். கடன் வாங்கறவங்க சட்புட்டுன்னு எழுந்து போயிரணும் அவனுக்கு. இல்லேன்னு அதிகநேரம் பேசிக்கிட்டே இருப்பாங்க. ஏதாவது கேட்பாங்க. வட்டி தள்ளச் சொல்வாங்க. தாட்சண்யம் காட்ட வேண்டி வரும்! போலீசுக்கு இந்த சூட்சுமமெல்லாம் எப்படிப் புரியப் போகுது?''

''வேறே 'ப்ரூஃப்' ஏதாவது வச்சிருக்கியா?''

''ஓ! பணப் பெட்டியைக் குட்டையிலேருந்து எடுத்ததாகப் போலீஸில் சொல்ருங்க. அதில் என் ப்ராமிஸ்ரி நோட்டுகள் இருப்பதாகவும் சொல்ருங்க. நான் இருட்டிலே அதைச் சரியாப் படிக்காமல் காசிராமன் என்கிறவர் பத்திரங்களை எடுத்துக் கொளுத்திட்டானும். காசிராஜனுக்கும் காசிராமனுக்கும் ஒரு எழுத்து தானே வித்தியாசம்! அதனுலே ஏமாந்துட்டனும்! போலீஸ் என் காதுலே பூ வைக்கிருங்க! நான் அந்தப் பத்திரங்களுக்காகத்தானே திலீப்சந்தையே கொலைசெய்ததாகச் சொல்ருங்க. கொலை செய்யற அளவுக்கு ஒருத்தன் துணியறப்போ அந்தப் பத்திரத்தை அவ்வளவு அஜாக்கிரதையா விட்டுட்டு வந்துருவானு? இதை நம்ப முடியுதா! கேட்டால் இருட்டானதால என்னுல் சரியாப் படிக்க முடியலையாம். சரி; நான் பத்திரங்களைக் கொளுத்தியதாகச் சொல்ருங்களே, எப்படி கொளுத்தியிருப்பேன்? தீக்குச்சியாலே தானே? அப்ப அதே தீக்குச்சியைத் கொளுத்தி அந்த வெளிச்சத்திலே படித்திருக்க மாட்டனு? அது போகட்டும் பணப் பெட்டி மேலே என் கைரேகை இருக்கணுமே, ஏன் இல்லை?''

''அப்புறம்? ... வேறே ஏதாவது?'' என்று இழுத்தார் வக்கீல்.

''இன்னெரு முக்கியமான சங்கதி. விறகுக் கட்டையாலே அடிச்சதாத் தானே சொல்ருங்க? திலீப்சந்த் மண்டையிலே பட்டிருக்கிற காயத்துக்கும் நான் அடித்ததாகச் சொல்ற விறகுக் கட்டைக்கும் ஏதாவது பொருத்தம் வேணுமா?''

''நீ என்ன சொல்றே?''



''மெடிகல் ரிப்போர்ட்டைப் படிச்சுப் ாருங்க. திலீப்சந்த் மண்டையில் ள்ளங்கை அகலத்துக்கு காயம் தெரி து. எலும்பு லேசா முறிஞ்சிருக்குது. ான் உபயோகித்ததாகச் சொல்கிற ட்டை ரொம்பச் சின்ன சைஸ்! அத் ாலே அடித்து ஒருத்தனைக் கொன்று ிட முடியுமா? அதுவும் மூணே மூணு ுடியிலே! முடியவே முடியாது. அதாலே ுடிச்சிருந்தா காயம் படற தினுசே வறே. ஆகையால் சேட்ஜியைக் கான்றது நிச்சயமா அது இல்லே. ல்லா செக் பண்ணிப் பார்க்கச் சால்லுங்க.''

காசி உறுதியோடு, உணர்ச்சியோடு ம்பிக்கையோடு பேசினான். அவன் காடுத்த தகவல்களில் கொஞ்சம் ர்த்தம் இருப்பதை வக்கீல் புரிந்து காண்டார்.

''ம்ம்ம்ம்...சரி பார்க்கலாம்'' என்று கூறிவிட்டு ஆழ்ந்த சிந்தனையுடன் வீட்டுக்குத் திரும்பிய வக்கீல் வெகு நேரம் திண்டுகள் பற்றிய நினைவாகவே இருந்தார். திலீப்சந்த் வாடிக்கை யாளர்கள் சிலரைக் கூப்பிட்டு விசாரித் தார். ''சேட்ஜி யாருக்குமே திண்டு கொடுத்து உட்காரச் சொல்கிற பழக்கம் கிடையாதுங்க'' என்றுதான் எல்லோரும் சொன்னார்கள்.

போலீஸ் இந்த விஷயத்தில் ஏமாந்து போயிருக்கிறது. காசிராஜன் முதலில் தங்களோடு பூர்ணமாக ஒத்துழைத்த சந்தோஷத்தில் சாட்சியங்கள் தயாரிப்ப தில் அசிரத்தையாக இருந்து விட்டிருக் கிறார்கள். முக்கியமான சில நுணுக்கங் களைக் கோட்டை விட்டிருக்கிறது.

''வருகிறவர்களுக்கு திண்டு கொடுத்து உட்காரச் சொல்வது பொதுவாக

யாருமே செய்யக் கூடியதுதான். அந்
நினைப்பில்தான் சேட்ஜியும் திண்(
கொடுத்திருப்பான் என்று நம்பி ஏமா
திருக்கிறது போலீஸ். தன்மீது சந்தேக
வராமலிருக்க திண்டுகளைத் திருப்பி
கொண்டு போய் அவை இருந்த இடத்
லேயே வைத்து விட்டதாகச் சொ
லும்படி காசிராஜனை வற்புறுத்தியிரு
கிறார்கள். திருடனுக்கு யாரும் திண்(
கொடுக்க மாட்டார்களல்லவா? இந்
அதிதமான கற்பனையே இப்போது அவ
களுக்கு எதிராக முடிந்திருக்கிறது

வக்கீல் மெடிகல் ரிப்போர்ட்டை
எடுத்துக் கொண்டு போய் ஒரு டாக்ட
ரிடம் காட்டினார். அந்த டாக்ட
அதைப் படித்துப் பார்த்துவிட்டு கே
யாகச் சிரித்தபடி "இந்தப் போலீே
இப்படித்தான்! சில சமயம் தங்களை
ரொம்ப புத்திசாலிகளாக நினைத்து
கொண்டு மடத்தனமாய் தவறு செய்து
வாங்க. மெடிகல் ரிப்போர்ட்
இருப்பதுதான் சரி" என்றார்.

வக்கீலின் உற்சாகம் கரைபுரண்டது
"போலீஸைப் பந்தாடிடலாம்!"

டாக்டர்களும் சாட்சி சொல்ல
வேண்டியவர்களும் கோர்ட்டி
ஆஜராகியிருந்தார்கள். திலீப்சந்திடம்
கடன் வாங்கிய வேறு சிலரும் வந்திரு
தார்கள். முதலில் காசியிடம் வாக்கு
மூலம் வாங்கிய நாலு போலீஸாரையு
வக்கில் குறுக்கு விசாரணை செய்தார்
அந்த நால்வரும் காசிராஜனே சொன்
வாக்குமூலம்தான் அது என்று சாதி
தார்கள்.

வக்கீல்: நீங்கதானே திண்டை
பழைய இடத்தில் திருப்பி வைக்கிற
'ஐடியா' சொன்னது?

போலீஸ்: இல்லே; காசிராஜனே
சொன்னது தான்.

வழக்கு விசாரணை மூன்று மாத காலம்
நீடித்தபின் ஒரு நாள் ஜட்ஜ் தீர்ப்பு
வழங்கினார்.

"காசிராஜன் குற்றவாளி அல்ல.
அவனைக் குற்றவாளி என்று கூறுவதற்
குப் போதிய சாட்சியங்கள் இல்லே."

வெற்றிப் பெருமிதத்துடன் வீடு
திரும்பிய வக்கீல் பால் பாயசம்
சாப்பிட்டார்!

—தொடரும்

# நூற்றுக்கு நூறு தரமுள்ள கூரை

"ராம்கோ" மற்றொரு அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடு அல்ல. நிரந்தரமான
பாதுகாப்பைத் தரும்
ஒரு முதல
தரமான
தயாரிப்பு.



கிராமப்புற கல்வி அபிவிருத்தித் திட்டத்தின்கீழ், தமிழகம் முழுவதும் கட்டப்பட்டு வரும் கல்விக் கூடங்களுக்கு, தரமான, மலிவான, நீடித்து உழைக்கும் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் நிரந்தரப் பாதுகாப்பைத் தருகின்றன. "ராம்கோ" முத்திரைக்கு மென்மேலும் புகழ் சேர்ப்பது, அதிநவீன தொழில் நுட்பமும், மிகக் கடுமையான தரக்கட்டுப்பாடுமே. "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெணட் தகடுகள் நிரந்தரப் பாதுகாபபைத் தருவதன் இரகசியமும் இதுவே. "ராம்கோ" — சிக்கனத்திற்கும், சீரியதரத்திற்கும், நீடிதது நிற்கும் தன்மைக்கும் எனவேதான், மாநில அரசும், உள்ளாட்சித் துறைகளும், ஊராட்சி ஒன்றியங்களும், ஏனைய கல்வி நிறுவனங்களும் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளை ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கின்றன. கட்டிடக் கலை வல்லுனர்களின் ஏகோபித்த பாராட்டினைப் பெறுவது "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள்

Ramco

"ராம்கோ" அஸபெஸ்டாஸ சிமெணட
தகடுகளும் மற்ற உபகரணங்களும—
தரமான கூரைகளுககு மட்டுமலல
நிரந்தரமான பாதுகாப்புக்குமகூ!

சதர்ன அஸ்பெஸ்டாஸ் சிமெணட லிமிடெட
739 அண்ணா சாலை,
சென்னை 600 002 . போன்: 82006

CAS SACL 1 82 TAM A

1. அந்தச் சவுக்கு விறகை நீதிபதியின் பார்வைக்கு வை
தார்கள்.

''அவ்வளவு மெலிதான ஒரு சவுக்கால் மண்டையில் அடித்
ஒருவனைக் கொன்று விட முடியாது. கட்டையின் அகலம் குறைந்த
நாலு அங்குலமாவது இருக்க வேண்டும். இது முக்கால் அங்குல
கூட இல்லை'' என்பது டாக்டர்களின் முடிவு.

2. பணப் பெட்டி, விறகு இரண்டிலுமே காசிராஜனின் கை
ரேகை இல்லை.



கொளுத்தப்பட்ட அந்த ஐந்து
நிகளும் காசிராமன் என்பவ
து. காசிராஜன் இருட்டில்
றத் தன்னுடையதென்று
ப் படித்துக் கொளுத்தியிருக்க
நம் என்பது போலீஸாரின்

ாசிராஜனுடைய வாக்குமூலங்கள்
க்குப் பின் முரணாக இருந்தாலும்
ஸார் இம்மாதிரி வழக்குகளில்
ாளியைத் தங்கள் இஷ்டம்
சொல்ல வைப்பது சகஜம்தான்.
லும் நீதிபதி அதையெல்லாம்
ட்படுத்தவில்லை. சிட்டாட்டத்தி
எழுந்துபோன காசிராஜன்
ரி நேரம் கழித்துத் திரும்பி
க்கிறான். அந்த நேரத்தில்
ம் ஜன்னல் வழியாக அருணாசலம்
ராஜனைப் பார்த்திருக்கிறான்.



இந்த சாட்சியங்களெல்லாம் காசிராஜ னுடைய முதல் வாக்குமூலத்துடன் ஒத்துப் போகின்றன. ஆனாலும் ஒருவனைக் கொலைகாரன் என்று தீர்ப்புக் கூறிவிடும் அளவுக்கு இந்த சாட்சியங் களில் பலம் இல்லாததால் நீதிபதி காசிராஜனைக் குற்றமற்றவன் என்று தீர்ப்புக் கூறி விடுதலை செய்து விட்டார்.

வழக்கு முடிந்து ஒரு வருடத்துக்குப் பிறகு ஒரு நாள் வக்கீல் ராகவாச்சாரி "Studies of Not-Guilty Verdicts" என்ற புத்தகத்தைப் படித்துக் கொண் டிருந்தார். அப்போது அதில் கண்ட சில வரிகள் அவரைத் தூக்கி வாரிப் போடச் செய்தன.

இங்கிலாந்தில் வசிக்கும் பீட்டர் என்கிற தொழிலாளி ஒருநாள் மாலை பணக்கார விதவை ஒருத்தியின் வீட்டுக் குப் போகிறான். அவளிடமுள்ள பணத் துக்கு ஆசைப்பட்டு இரும்புக் கழியால் அவள் முகத்தில் அடித்துக் கொன்று விடுகிறான். பிறகு தன் இடுப்பிலுள்ள பெல்ட்டைக் கழற்றி அவள் கழுத்தைச் சுற்றி இறுக்கி விட்டு, பணத்தையும் நகைகளையும் எடுத்துக் கொண்டு ஓடி விடுகிறான்.

போனவன் மறுபடி ஒன்பது மணிக்கு அந்தப் பணக்காரியின் வீட்டுக்குத் திரும்பிச் சென்று அந்த வீட்டையே கொளுத்தி விடுகிறான். அங்கிருந்த பீரோவின் மேல் விளிம்பில் ஒரு புத்தகத்தை வைத்து. அந்தப் புத்த கத்தின் மீது மண்ணெண்ணெய் விளக்கு ஒன்றையும் ஏற்றி வைக் கிறான்.

பீரோவின் அடியில் குப்பைக் காகிதங்களையும் கந்தல் துணிகளை யும் குவித்து வைக்கிறான். விளக்கு கீழே விழுந்தால் அந்தக் காகிதங் களும் துணிகளும் குப்பென்று தீப் பிடித்து அதன் தொடர்பாக வீடு முழு தும் எரிந்து சாம்பலாகி விடும். அப்புறம் பணக்காரியை யார் கொன்றார்கள் என்பதற்கு எந்த அத்தாட்சிகளும் கிடைக்காது.

அந்த வீட்டுக்குப் பின்னால் ஒரு ரயில் பாதை. ரயில் வரும் போதெல்லாம் அந்த அதிர்ச்சியில் அந்த வீடும் சேர்ந்து அதிரும். அடுத்தாற்போல் ரயில்

வரும்போது அந்த அதிர்ச்சியில் பீரோ மீதுள்ள விளக்கு கீழே விழுந்து தீப் பிடித்துக் கொள்ளும். பீட்டரின் திட்டம் அதுதான். அவன் திட்டப்படியே அந்த வீடு எரிகிறது. தீயணைக்கும் படையினர் வந்து நெருப்பை அணைப்பதற்குள் எல்லாமே சாம்பலாகி விடுகின்றன.

சந்தேகத்தின் மீது போலீஸார் பீட்டரைக் கைது செய்கிறார்கள். முதலில் போலீஸிடம் உண்மையைச் சொல் கிறவன் பின்னால் "நான் எங்கே அப்படிச் சொன்னேன்?" என்று கேட்டுக் கதையை அடியோடு மாற்றி விடுகிறான். பீட்டர் தான் அந்தப் பணக்காரப் பெண்ணைக் கொன்றவனா? அவள் வீட்டுக்கு நெருப்பு வைத்தவனா? என்பதைத் தீர்மானிக்க முடியாத அளவுக்குக் குழப்பி விடுகிறான்.

"அந்தப் பணக்காரி முதலில் கதவை லேசாகத்தான் திறந்தாள். கதவு முழுசாகத் திறக்கப்படும் வரை நான் காத்திருந்து அவள் தலையை நீட்டியதும் இரும்புக் கழியால் அடித்தேன்" என்று முதலில் கூறியவன், இரண்டு நாட்கள் கழித்து "அவள்தான் என்னைத் தன் வீட்டுக்கு வரும்படி அழைத்தாள். நான் போயிருந்தேன். இரண்டு பேரும் எதிர் எதிரில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந் தோம். அவள் ஏமாந்திருக்கிற நேரம் பார்த்து அடித்தேன்" என்கிறான்.

'ஒரே ஒரு முறைதான் அடித்தேன்' என்று ஒருநாள். 'இரண்டு முறை அடித் தேன்' என்று மற்றொரு நாள். பலமுறை அடித்ததாக இன்னொரு நாள். இந்த முரண்பாட்டுக்கு என்ன காரணம்?

பீட்டர் ஞாபகசக்தி இல்லாதவன் என்றும் சொல்வதற்கில்லை.

"இரும்புக் கழியால் அடித்துக் கொன்றதாகச் சொல்கிறாயே, அந்தக் கழியை உன்னால் அடையாளம் காட்ட முடியுமா?" என்று போலீஸார் கேட்ட போது, "அந்தக் கழியின் மீது என் கை ரேகை இருக்கும் பாருங்களேன்" என்று பதில் கூறுகிறான் பீட்டர்.

வீட்டைக் கொளுத்த உபயோக படுத்திய அந்த கெரஸின் விளக்கை அங்கே காணவே இல்லை. அப்படியானால் விளக்கே இல்லையா? இருந்திருந்தால் அது எங்கே போயிற்று? இப்படி மேலும் சில குழப்பங்கள்.

கொலைக் குற்றம் புரிந்தவர்கள் போலீஸை எளிதில் ஏமாற்றி வி முடியாது என்பது காசிராஜனுக்கு தெரியும். அதனால் போலீஸின் பிடி லிருந்து தப்புவதற்கு என்ன வழி என தீவிரமாக யோசித்திருக்கிறான். போதோ படித்த "Studies of Not - G Verdicts" என்ற புத்தகம் அவன் நி வுக்கு வருகிறது. பணக்காரியைக் கொ பீட்டர் கையாண்ட அதே உபாயங் சேட்டியைக் கொல்வதற்குப் ப படுத்துகிறான். பீட்டர் மாதிரியே வா மூலத்தில் அந்தர் பல்டி அடித் குழப்புகிறான்.

"அந்தப் புத்தகம் காசிராஜனு எப்படி கிடைத்தது?" வக்கீல் தவ தானே கேட்டுக் கொண்டார்.

சில வருடங்களுக்கு முன் காசிர மூர்மார்க்கெட்டில் புத்தகக் கடை இருந்ததும் அப்புறம் தாம்பரத் குடியேறி டீக்கடை வைத்ததும் லுக்குச் சட்டென ஞாபகம் வரு

## எம்மதமும் சம்மதம்



"நீங்க இந்துவாக இருந்தாலும் உ ஆபீஸில் முஸ்லிம்களுக்கும் கிறிஸ் களுக்கும் மட்டுமே வேலை தர்றீங் ஏன்?"

"ஆபீஸில் அவங்க ஸ்ரீ ராமஜெ எழுதிக்கிட்டு உட்கார்ந்திருக்க மாட் களே!"

—உ.



உலகப் புரட்சிக்கு வித்தும் புதுமை விருந்தும் அளித்த முஸ்தபா கமால் அத்தா துர்க் ஆண்ட இஸ்தான்புல் தலைநகரிலிருந்து அந்நாட்டு மக்கள் மக்கா நோக்கிப் புனிதப் பயணம் தொடங்குகிறார்கள். புனித யாத்திரைக்குப் பெயர்தான் 'கஃபா'.

அன்னை மேரி அடைக்கலம் பெற்ற இடம்—அவருக்குத் தீர்க்க தரிசிகள் புகலிடம் தந்த தலம், ஏசுநாதருக்கு ஞானஸ்நானம் வழங்கிய புண்ணியபூமி, ஏசுநாதர் கல்லறை—அவர் விண்ணுக்கு எழுந்த இடம்—மலைப் பிரசங்கம் செய்த பகுதி—'பத்துக் கட்டளை' மோஸஸ் பிறந்த பூமி—இதெல்லாம் முடிந்து கடைசியில் மதீனா, மெக்கா.

இஸ்லாமியப் படம் ஒன்றில் மற்ற மதத்தின் புனித ஸ்தலங்களையும் காட்டுகிறார்களே, இந்தப் படத்தின் சிறப்புக்கு அது ஒன்றே போதும்.

—கே. ஜி. ஜவஹர்.

---

...ரிகான்; புத்தகத்தை அப்போது ...திருக்கிறேன்!''

...ப்பெட்டியில் தன்னுடைய ...ஸரி நோட்டுகளை காசிராஜன் ...டுவிட்டு வந்தது மிகப் பெரிய ...ம். பிராமிஸரி நோட்டுகளுக்காக ...ஜன் இந்தக் கொலையைச் செய் ...என்றால் அவற்றை எடுத்துக் ...ல்லாமல் பெட்டியிலேயே விட்டு ...ப்பானா? என்ற கேள்வி எழுகிறது. ...து சந்தேகம் வரக் கூடாது என்ப ...காகச் செய்த தந்திரம் அது.

...ஜீப்சந்த் இறந்த பிறகு அவனுக்கு ...ருமே வாரிசு இல்லாத போது ...ரமிஸரி நோட்டுகள் இருந்தால் ...ன? இல்லாவிட்டால் என்ன?

வக்கீல் புத்தகத்தை மூடி வைத்து ...டு முன்னும் பின்னும் நடந்தார்.

தன்னுடைய நிலம், கடை எல்லாவற்றையும் விற்றுப் பணமாக்கிக் கொண்டு எங்கோ கண்காணாத இடமாய்ப் போய் விட்டிருந்தான் காசிராஜன்.

''இந்தக் காசிராஜன் கடப்போக்கிரியாய் இருப்பான் போலிருக்கிறதே? அயோக்கியன்! எனக்கு நன்றி கூடச் சொல்லாமல் போய் விட்டானே! இந்த மோசக்காரன், கொலைகாரன் எங்காவது விபத்தில் மாட்டிக் கொண்டு செத்துப் போயிருந்தால் அதைக் கடவுள் அவனுக்கு அளித்த தண்டனையாகக் கருதி மகிழ்ச்சி அடைவேன். ஆனால் இந்த உலகத்தில், அப்படியெல்லாம் அயோக்கியர்கள் தண்டிக்கப்படுவதில்லை'' என்று தனக்குத் தானே சமாதானம் சொல்லிக் கொண்டார் வக்கீல்.

—முற்றும்

# பதில்கள் சாவி

எல். கோவிந்தசாமி, சென்னை-17

●● தமது குழுவினர் எட்டுப் பேர் குளு பள்ளத்தாக்கு சென்று திரும்பியபோது விபத்துக்குள்ளாகி உயிரிழந்து விட்டனர். அவர்களுக்காக பாலசந்தர் கண்ணீர் விட்டிருப்பது பற்றி...

மறைந்த எட்டு பேர் செவிகளுக்கும் எட்டக் கூடிய மௌனக் கதறல் அது.

மனோபாரதி பாண்டிச்சேரி-13

●● கலைஞரின் பேச்சுக்கும், எழுத்துக்கும் நீங்கள் காணும் வித்தியாசம் என்ன?

முரசொலி படிக்கும்போது அவர் பேச்சைக் கேட்கிற மாதிரி இருக்கும். அவர் பேச்சைக் கேட்கும் போது முரசொலி படிப்பது போலிருக்கும்.

எஸ். மோகன், திருப்பத்தூர்

●● மெட்ராஸ்ல நீங்க சுத்திப் பாக்காத எடம் ஏதாச்சும் கீதா, அண்ணாச்சி?

இன்னா நயினா அப்படி கேட்டுட்டே ஒரு கேய்வி! ஏயு கணறு, தில்லக்கேணி, புளியாந்தோப்பு, செங்காங் கடை, ஒட்டேரி தெரியுமா ஒனக்கு? மண்ணடி போஷ்டாபீசைக் கொள்த்திகிறியா நீ? அரையணா ட்ராம்ல அல்டாப்பா சவாரி செஞ்ச கில்லாடிம்மா இது! அந்தக் காலத்துல ராக்ஸி கொட்டாயில அட்ச்சி புட்ச்சி ஒசில டார்ஜான் படம் பார்த்த ஆளு, தெரிஞ்சுக்க. அக்காம்! மெட்ராஸ்ல இந்த அண்ணாச்சி பாக்காத எடம் இனிமேப்பட்டு கட்டுனாதான் உண்டு.

ரா. ஜோதிராமன், நெல்லிக்குப்பம்

●● எங்காவது டூர் போய் வர வேண்டும் என்று ஆசை. நான் கோவா என்கிறேன். நண்பர்கள் கேரளா என்கிறார்கள். தங்கள் யோசனை?

கேரளத்தில் இல்லாத அழகோ, இயற்கைக் காட்சிகளோ கோவாவில் கிடையாது. ஆகையால் நண்பர்கள் விருப்பப்படி கேரளாவுக்கே 'கோ'வுங்கள். கோவாவுக்கு கோவாதீர்கள்.

என். குணசீலன், பட்டுக்கோட்டை

●● 'நாதஸ்வரம்' என்பது சரியா, 'நாகஸ்வரம்' என்பது சரியா?

எதுவானாலும் ஸ்வர சுத்தமாய் வாசிப்பதுதான் சரி.

பாலசந்தர்



# கறுப்பு ஆடு

ராமாபுரம்
சந்துரு



"பரமண்டலத்திலிருக்கும் எங்கள் பிதாவே..."

சிரத்தையுடன் தலையில் முக்காடிட்டு பெண்களும், முழங்காலிட்டு ஆண்களும் கோரஸாய் கர்த்தரை அழைத்தார்கள். முழு இரவு ஜபத்துக்கு நடுவில் பாதிரியார் லாரன்ஸின் சின்ன கவிசேஷப் பிரசங்கம்.

மந்தையினை விட்டு ஓடிப்போன ஆட்டைப் பற்றியும், காணுமல் போன காசினையும் வேதாகமத்திலிருந்து படித்துக் காட்டினுர் லாரன்ஸ்.

"ஆகவே நம் வாழ்க்கைப் பாதையின் ஜீவனையும ஒளிபாகவும் விளங்கும் கர்த்தரின் வழிச் செல்வோம். அந்த வழியினின்று தப்பி ஓடும் எவனுமே கறுப்பு ஆடுதான். கறுப்பு ஆடாய் யாரும் பிறப்பதில்லை. ஆனுலும் சாத்தானின் மயக்கத்தில், சிலர் கறுப்பு ஆடுகளாய் நடுவில இனம் மாறி விடுகிருர்கள். அப்படிப்பட்டவர்கள் பாவிகள்; அவர்கள் கர்த்தரின் பிள்ளைகள் அல்ல; சாத்தானின் எடுபிடிகள். ஆமன்."

"ஆமன்" முழு இரவு ஜபம் முடிந்ததும் பெண்களும், ஆண்களும், பிள்ளைகளுமாய் நின்று, சேர்நது குடும்பம் குடும்பமாய் சர்ச்சை விட்டுக் கலைந்தார்கள்.

ஆனல் மேரியம்மாள் தன் மகன் இருதயராசனேடு நின்றிருந்தாள். அவர்கள் அருகே வந்தார் லாரன்ஸ்.

"என்ன மேரியம்மா. ஏன் இன்னும் வீட்டுக்குப் போகலே?"

"ஃபாதர், இவனுக்குக் கொஞ்சம் புத்திமதி சொல்லுங்க...நேத்திக்குக் கூட கல்லாவிலேர்ந்து காசை எடுத்திட்டு மாதாமேலே பொய்ச் சத்தியம் போடருன்." மேரியம்மாள் விறகு மண்டியின் சொந்தக்காரி.

"ஏன் .. மகனே, நீ அப்படிச் செய்தாயா."

"இல்லே ஃபாதர், வந்து..." தயங்கி நின்ருன் இருதயம்.

"உன் அம்மாவுக்குக் கஷ்டங்கள் கொடுக்கக்கூடாது இருதயம்." லாரன்ஸ் அன்பான வார்த்தைகளை இதமான குரலில் கூறினுர்.

ரூபாய் நூறு பரிசு பெறும் இரண்டாவது வானவில் கதை



"மனைவி போகும் ரயிலை ஏன் அப்படி பரிதாபமா பார்க்கறே? பிரிவுத்துயர் தாங்கலையா?"

"ஊஹூம்! அவசரத்தில் ரயில் டிக்கெட்டை அவளிடம் கொடுக்க மறந்துட்டேன்!"

உ. ராஜ்

"ஃபாதர், நீங்க இப்ப சொன்னமாதிரி என் பிள்ளை ஒரு கறுப்பு ஆடா ஆயிடுவானோன்னு பயமா இருக்கு." மேரியம்மாள் குரல் நடுங்கியது.

"ஃபாதர், பாத்திங்களா, என்னை கறுப்பு ஆடுன்னு எங்கம்மா திட்டறுங்க அது எனக்கு எவ்வளவு வேதனையா இருக்கு தெரியுமா? ஏன் ஃபாதர் நான் கறுப்பு ஆடா?"

"இல்லை மகனே இல்லை குறைகள், பலவீனங்கள், பாவங்கள், இவற்றிற்கிடையே வித்தியாசங்கள் இருக்கிறது. உன்னிடம் உள்ள குறைகள் நீங்க, நீ கர்த்தரின் மேல் நம்பிக்கை வை. நீ என்றைக்குமே நல்ல ஆடுதான்."

சரியாகப் படிக்காமலும், சில்லறைத் தவறுகளைச் செய்தும், வளர்ந்துவிட்ட இருதயம், மேரியம்மாளுக்கு நாளடைவில் ஒரு பிரச்னையாகி விட்டான். பிறகு மண்டியினையும் கவனித்துக் கொள்ளாமல், வேறு வேலைக்கும் செல்லாமல் வெட்டியாய்ப் பொழுது போக்கி வந்த இருதயராசனுக்கு இப்பொழுது காதல் வேறும். மேரியம்மாவுக்கு எரிச்சல் எரிச்சலாய் வந்தது "இவன் கெட்ட கேட்டுக்கு காதல் வேறா?" ஆனாலும் அம்மாவின் உள்ளடங்கிக் கிடந்த தாய்மையின் வாஞ்சை "ஒரு வேளை கால்கட்டு போட்டால, எல்லாம் சரியாகி விடுமோ?" என்ற உப கேள்வியினை கேட்கத் தவறவில்லை.

பாய்த் தொலைந்தாள்.

"இதோ பாரு இருதயம், நான் உன்னை விரும்பறது நெஜந்தான். ஆனா என் அப்பா என்னை உனக்குக் கட்டி வைக்கக் கொஞ்சமும் இஷ்டப்படலை. உங்கம்மா கிட்டேயும், நீ நல்ல பிள்ளையா மாறினாத்தான் இதைப் பத்தி யோசிப்பேன்னு சொல்லியிருக்காரு."

"ரெஜினா, நல்ல பிள்ளைன்னு உங்கப்பா எதைச் சொல்றாரு? என்னையும் ஃபாதர் லாரன்ஸ் கணக்கா, வெள்ளை அங்கி போட்டு, கறுப்புக் கயிறை இடுப்பில் கத்திக்கச் சொல்றாரா?"

"ஐயோ சேசுவே" தலையில் அடித்துக் கொண்டாள் ரெஜினா.

"இதோ பாரு இருதயம், எங்கப்பாவுக்குப் பிடிச்ச மாதிரி நீ நல்ல செயல்களைச் செய்யணும்."

"புலிப்பால் கொண்டு வரணும்னு சொல்றியா?"

"அதெல்லாம் வேணும்: இப்ப எங்கப்பா சிமிண்ட் பர்மிட்டுக்கு நாயா அலைஞ்சிட்டிருக்காரு, அதுக்கு உதவி பண்ணு. அப்பாவுக்கு உன் மேலே ஒரு பிடிமானம் வந்து அவரோட அபிப்ராயத்தை மாத்தப் பாரு."

அன்றிலிருந்து சிமிண்ட் பர்மிட்டுக

காக படை எடுக்கலா ஷன் இருதயம். 'ஹா இவ்வளவுதானு' என்று முதலில் மனம் கணக்கிட்டது தவறு என்பதை நடை முறை அலைச்சல்களில், இருதயம் புரிந்து கொண்டான். அரசாங்க அலுவலகத்தில் ஒரு கிளாஸ் ஊ ழி ய னி லி ரு ந் து குமாஸ்தாக்கள், அதிகாரிகள் வரையில் ஏதோ இந்த உலகத்து சாம்ராஜ்யத்தின் சக்ரவர்த்திகளாக தங்களைக் கற்பனை செய்து வரி என்னும் சம்பள பிஸ்கட்டுகளை அளிக்கும் எஜமான பொதுமக்களை அவர்கள் 'நாய்களாக' மதிக்கும் (?) கேவலம் இருதயராசனின் பொறுமையின் எல்லைகளை சோதிப்பதாய் அமைந்தது. ஒருநாள் அது நடைமுறையில் நிஜமாகியும் விட்டது.

சரியாகப் பதிலளிக்க மறுத்த குமாஸ்தாவிடம் இவன் வார்த்தைகளைக் கொட்ட, பதிலுக்கு அவனும் எகத்தாளமாய்ப் பேச... விளைவு? சாணை பிடிக்கப்பட்டிருந்த கத்தியைக் கொண்டு குமாஸ்தாவின், வயிறு, முதுகு, தோள்பட்டை என்று பதம் பார்த்தான் இருதயம்.

அடுத்த நாள் 'சதக் சதக் என்று கத்திக் குத்து; குமாஸ்தா மரணம்'' என்ற பத்திரிகைச் செய்தியும், காப்புப் பூட்டப்பட்டு, இருதயம் குற்றவாளிக் கூண்டுக்குள் கோர்ட்டில் நின்றதும் நேற்றைய சம்பவத்தின் உக்கிரத்தைத் தெளிவாக்கின.



ரியம்மாள்.

"இந்த ஜன்மத்திலே நீதான் எனக்குக் கணவன், து சேசு மேலே சத்தியம். நான் உனக்காகக் கால மெல்லாம் காத்திருப்பேன்." சபதமிட்டாள் ரெஜினா.

அழுதவாறே கேட்டான் இருதயம். "ஏன் ஃபாதர் ான் கறுப்பு ஆடா?"

"மகனே கோபமும் உணர்ச்சியும் கட்டுப்படுத்தப் _ வேண்டியதுதான். ஆனாலும் அதன் விளைவுகளுக் ாக வருந்தப் படும் மனம், கண் கெட்ட பின்னால ரிய வணக்கந்தான் என்றாலும், பிராயச்சித்தம் தேடும் னம் ஒரு நல்ல மனமே!"

"ஃபாதர் நான் கறுப்பு ஆடு இல்லேன்னு சால்றிங்களா?"

"இருதயம்! வெறுமைய இருட்டை விடு: வெளிச் த்தை நாடு; நீ எப்பொழுதுமே நல்ல ஆடுதான்."

இருதயம் போலீஸ் வேனில் ஏறுகிறான்; ரெஜினா கையசைக்கிறாள்; இவர்கள் ஸ்தம்பித்து நிற்க, அவன் ார்வையிலிருந்து மறைகிறான்.

நள்ளிரவு. ஆந்தைகளும் கோட்டான்களும், ங்களின் பகல் பொழுதை உற்சாகத்துடன் கழித் ிருக்க ... சர்ச்சுக்குள்ளே மேரியம்மாள் நீண்ட ஜெபங் ளைத் தொடர்ந்து ஜபித்துக் கொண்டிருக்கிறாள்.



"பாதித் தூக்கத்திலே உங்களை நான் எழுப்பினதும் 'மூளையிருக்கா முனுசாமி உனக்கு?'ன்னு திட்டினீங் களே, என்ன அது?"

"ஸாரி! தூக்கக் கலக்கத்தில் ஆபீஸ் பியூன் முனுசாமினு நினைச்சு உன்னைத் திட்டிட்டேன். அடிக்கடி பாதித் தூக்கத்தில் என்னை எழுப்பி விடறது அவன் வழக்கம்!"

மரணதண்டனை விதித் திருந்தார்கள். மேரி யம்மாள் அத்துடன் விட்டு விடுவதாயில்லை. தன் சொத்துக்களையும் நகைகளையும் விற்றுக் காசாக்கி, திறன் வாய்ந்த வக்கீல்களை அணுகி ... இருதயராச னின் தண்டனை குறைக் கப்பட இப்பொழுது கர்த்தரிடம் 'வாய்தா' போட்டிருக்கிறாள். அந்த அப்பாவித் தாயின் பிரார்த்தனை யில் ஃபாதர் லாரன்ஸூம் கலந்து கொள்கிறார்.

இருதயராசனுக்கு முடிவாக எட்டு ஆண்டு கள் கடுங்காவல் தண்டனை கிடைக்கிறது. அந்தக் குறைந்த தண்டனை கிடைப்பதற் காக, மேரியம்மாள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் முதலில் இருதய ராசனுக்கு வியப்புக்கும் பெருமைக் கும் உரியதாக இருந் தாலும் வருடங்கள் ஓட ஓட அந்த முயற்சி கள் அதனின் முக்கியத் துவம், அவன் முன் சிறிது சிறிதாகக் கரைந்து விட...

அன்றைக்கு இருதய ராசனுக்கு விடுதலை.

ரெஜினா மட்டுமே வந்திருக்கிறாள்.

"அம்மா ஏன் என்னைப் பார்க்க ஒரு வருஷமா வரலை?"

ரெஜினா பதிலுக்குப் புன்னகைக்கிறாள். விடு வந்தவனுக்கு விடை கிடைக்கிறது.

மேரியம்மாள் ஓராண்டு காலமாய் 'கோமா' வில் விழுந்து கிடக்

# ஏ.வி தியேட்டரில்...



பிச்சைக்காரர்களைப் பற்றிய 'எச்சில்' இரவுகள்' திரைப் படத்தைப் பார்க்க சென்னையிலுள்ள பிச்சைக்காரர்கள் சிலர் ஒரு தியேட்டரில் பதினைந்து உயர் வகுப்பு டிக்கெட்டுகளை வாங்கிக் கொண்டு போனார்களாம். ஏ. வி. தியேட்டரில் படம் பார்த்து விட்டுத் திரும்பிய அவர்களிடம் அந்தப் படத்தைப் பற்றி அபிப்பிராயம் கேட்ட பொழுது, "எங்களை முதலிலேயே நேரில் அழைத்துக் கேட்டிருந்தால் இன்னும் சில முக்கியமான விஷயங்களையும் சொல்லியிருப்போம். இப்போது கேட்டு என்ன பிரயோஜனம்?" என்று வருத்தத்தோடு சொன்னார்களாம் —த. சி.

---

...றாள். பிரக்ஞையற்று, உடல் தளர்ந்து இருக்கும் மேரியம்மாளை ரெஜினாதான் பிள்ளைக்குப் பிள்ளையாயும், பெண்ணையும் கவனித்துக் கொள்கிறாள்.

முற்றத்தில் வெளிச்சம் மாறி மாறி விழுகிறது. காரணம் வானத்தில் முழு நிலா மேகத்துடன் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருக்கிறாள். ரெஜினா எங்கோ பார்த்து அமர்ந்திருக்கிறாள். பக்கத்தில் இருதய ராசன். அவனின் நரம்புகள் 'துறு துறு'க்கின்றன. மெதுவாய் ரெஜினாவின் முகவாயைத் திருப்பி, கைகளைப் புரளவிட்டு, அவனின் விரல்கள் லேசாய் அவள் கழுத்தின் கீழ்ப் பிரதேசத்திற்குச் செல்ல முயற்சிக்க...

'ஷ்' — ரெஜினா அவன் கைகளை நாசூக்காய் விலக்குகிறாள்.

"கல்யாணத்துக்குப் பின்னாலதான் என்னைத் தொடலாம்."

"எப்ப கல்யாணம் வச்சிக்கலாம்?"

"உங்கம்மா குணமான பின்னால."

ஆனால் நாட்கள் நகர்ந்து வருடமாய் மாறியபொழுதும் மேரியம்மாள் குணமாகவில்லை.

அகாலவேளையில் இருதயம் ஜபித்துக் கொண்டிருக்கிறான். வியப்படைந்து ஃபாதர் வாரன்ஸ் கேட்கிறார்.

"என்ன இருதயம், மனசுக்கு என்ன சங்கடம்?"

"பாதர், நான் கோர்ட்டில் ஒரு மனு தாக்கல் செஞ்சிருக்கேன். அது வெற்றியடைய கர்த்தரை வேண்டிக்கறேன்"

"என்ன மனு?"

"அம்மா குணமானாத்தான் கல்யாணம்னு ரெஜினா கண்டிப்பா சொல்லிடுச்சு. அம்மா குணமாவற வழியாய்க் காணோம். அதனால 'கருணைக் கொலை' வழியா அம்மாவோட மூச்சை நிறுத்த உத்தரவு கேட்டு..."

"ஓ, யுதனேஷியா" புருவங்களை நெறிக்கிறார் வாரன்ஸ்.

"இருதயம்" கண்டிப்பான குரலில் கூப்பிடுகிறார்.

"என்ன ஃபாதர்?"

"நீ ஒரு கறுப்பு ஆடு" அழுத்தந் திருத்தமாய்க் கடுமையாகக் கூறிவிட்டு ஃபாதர் லாரன்ஸ் தனி அறைக்குள் நுழைந்து விடுகிறார்,

ஸ்தம்பித்துச் செயலற்று நிலைகுலைந்து நிற்கிறான். இருதயராசன்; இல்லை யில்லை, அங்கே இருப்பது கறுப்பு ஆடு.

★

# பாரிஸ் மாநகரில்
# பாரதியார் கட்டுரைப் போட்டி

அன்புடையீர்,

பிரஞ்சு நாட்டின் தலை நகரமான "பாரிஸ் மாநகரில், மகா கவி சுப்பிரமணி பாரதியார் நூற்றாண்டு விழாவினை, வருகின்ற ஜூன் மாதம் 6-ந் தேதி (6-6-82), இங்குள்ள "இந்திய தூதரகத்தின்" ஒத்துழைப்போடு, சிறந்த முறையில் கொண்டாட ஏற்பாடுகள் செய்து கொண்டு வருகிறோம்,

அவ்விழாவினை யொட்டி நடக்கவிருக்கும் "பாரதியார் கட்டுரைப் போட்டியில்" தேர்ந்தெடுக்கப்படும் சிறந்த கட்டுரைகளுக்குப் பின் வருமாறு விழாவின் போது பரிசுகள் வழங்க முடிவு செய்யப்பட்டுள்ளது.

| | பரிசுத் தொகை | | |
|---|---|---|---|
| | முதல் பரிசு | 2வது பரிசு | 3வது பரிசு |
| (அ) பொது மக்கள் பிரிவு ... | 400 பிராங்க் | 200 பி | 100 பி |
| (ஆ) கல்லூரி மாணவ மாணவி பிரிவு ... | 300 பிராங்க் | 150 பி | 75 பி |
| (இ) பள்ளி மாணவ-மாணவி பிரிவு ... | 200 பிராங்க் | 100 பி | 50 பி |

(1 பிராங்க் — இந்திய ரூபாய் 1 ரூ. 50 பைசா)

## கட்டுரைப் போட்டியின் விதி முறைகள் :

(1) பாரதியாரின் கதை, கவிதைகளைச் சார்ந்தோ, அவர் தமிழுக்கு ஆற்றிய தொண்டுகளைப் பற்றியோ, தமிழ், ஆங்கிலம் அல்லது பிரஞ்சு மொழிகளில் விரும்பும் தலைப்பில் கட்டுரைகள் இருக்கலாம். (கதை, கவிதைகளும் வரவேற்கப்படுகின்றன).

(2) இவைகள் 21 X 29, 5 Cm (செண்டி மீட்டர்) அளவுள்ள தாளில் :
—தட்டெழுத்தில் அடித்து அனுப்பினால் 3 பக்கத்திற்குள்ளும்
—கையால் எழுதி அனுப்பினால் 6 பக்கத்திற்குள்ளும்
தாளின் ஒரு பக்கம் மட்டுமே நிறைவு செய்தும் இருக்க வேண்டும்.

(3) அனுப்புகின்றவரின் பெயர், வகுப்பு, பள்ளி அல்லது கல்லூரி, ஊர் அல்லது வீட்டு முகவரியைத் தெளிவாக ஆங்கிலத்தில் மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

(4) பரிசு பெறும் கட்டுரைகளைத் தேர்ந்தெடுக்கவும், அவைகளை அச்சிடவும் மலர்க்குழுவுக்கே உரிமையுண்டு.

(5) போட்டிக்கு அனுப்பும் கட்டுரைகளைப் "பாரதியார் கட்டுரைப் போட்டி" என்று குறிப்பிட்டு :
Mr. Jamal, 18—Rue Clairaut 75 017—Paris—France
என்ற முகவரிக்கு 15-5-82க்குள் கிடைக்கும்படி அனுப்ப வேண்டும்.

(6) பரிசு பெறாத கட்டுரைகளைத் திருப்பி அனுப்பப்பட மாட்டாது.

இப்போட்டியில், 'உலகின் பல்வேறு பகுதிகளிலும் வாழும் தமிழன்பர்கள், மாணவ—மாணவிகள் மற்றவரும் பெருமளவில் பங்கு கொண்டு சிறப்பிக்க, "பத்திரிகை, பள்ளி, கல்லூரி ஆசிரியர்களும், கல்வித்துறை, வானொலி, தொலைக்காட்சி இயக்குநர்களும்" தங்கள் அரிய ஒத்துழைப்பைத் தந்து உதவும்படி, மிகப் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இவண்,
பாரதியார் நூற்றாண்டு விழா, மலர்க்குழு.
பாரிஸ்





# வீடே அவள்

பாட்டியோட கல்யாணம் இந்த வீட்டுலதான் நடந்ததாம். அதுக்கப்புறம் அம்மாவோட கல்யாணம், அப்புறமா அத்தையோட கல்யாணம், சித்தப்பாவோட கல்யாணம், மாமாவோட கல்யாணம். பின்னால் என்னோட பெரியக்கா, சின்னக்கா. போன வருஷம் நடந்த விமலாவோட கல்யாணம் எல்லாமே இந்த வீட்டுலதான் நடந்திருக்கு.

ரொம்ப ராசியான வீடாம். அம்மா அடிக்கடி சொல்லுவா. அம்மா சொல்ற "ராசி" மட்டும், என் ஆசைக்குக் காரணமில்லே. நான் பொறந்தது இந்த வீட்டுலேதான்; தவழ்ந்தது, பள்ளித் தோழியருடன் பாண்டி ஆடியது, போட்டிகளில் திளைத்தது, உடன் பிறந்த சகோதரியருடன் சீராடியது, போராடியது இத்தனையும் நடந்தது இந்த வீட்டில் தான். என்னோட கல்யாணமும் இந்த வீட்டிலேதான் நடக்கணும்; நடக்கும்.

"ஏன் மண்டபம் அங்க, இங்கேன்னு அலையணும்? வீட்டுல வச்சுக்கிட்டாதான் பொண்டுகளுக்குச் சௌகரியம்"னு அம்மா அப்பாகிட்ட கண்டிப்பா சொல்லிட்டா எனக்கு ரொம்ப சந்தோஷம்.

இன்னிக்கு என்னைப் "பார்க்க" யாரோ வர்றாங்களாம். அதான் என் மனசுலே இப்படி சிந்தனைப் புரு சிறகடிச்சுப் பறக்குது, தாறுமாறு. "வரப்போற சம்பந்தம் நல்ல இடம். பையன் ராஜாவாட்டம் இருப்பான். நல்ல வேலை... நல்ல சம்பளம்; அதிகமா ஒண்ணும் கேட்டுட மாட்டாங்க. முன்னே வந்தவனுங்க எல்லாம் பணத்தாசை பிடிச்சவனுங்க. இந்த இடம் அப்படி இல்லே. அதனாலே கொஞ்சம் அனுசரிச்சுப் பேசிப் பழமாக்குங்க விஷயத்தை. இதையும் விட்டுட்டீங்கன்னு, அப்புறம் இதுமாதிரி இடம் கிடைக்காது .. ஆமா ... சொல்லிட்டேன்"னு புண்ணிய கோடி—தரகர்—அப்பா காதுலே போட்டது எனக்கும் தெரியும்.

அம்மா சமையல் கட்டுலே பஜ்ஜி, சொஜ்ஜி தயார் பண்ணிக் கொண்டிருந்தாள். என் காதுகளில் வாசலில் கார் வந்து நிக்கற சத்தம் கேட்டுது. பத்து நிமிஷம் கழிச்சு, என்னோட பெரியக்கா என்னைக் கூட்டிட்டுப் போய், "நமஸ்காரம் பண்ணுடி"னு காதில் ஓதி, நான் நமஸ்கரித்து முடிச்சதும் கூடத்தில் அவர்கள் எதிரே என்னை உட்கார வைத்தாள்.

நான் திரும்பி, அறைக்கு வந்ததும், "பிடிச்சிருக்கா?" என்று கேள்வி வேற.



# உலகம்

**முள்**

நான் தலையாட்டினேன். இதுலே என் விருப்பத்துக்கு ஒரு மதிப்பும் கிடையாதுங்கறது எனக்குத் தெரியும்; அவங்களுக்கும் தெரியும். 'வியாபாரம்' படிஞ்சு, மாப்பிள்ளை வீட்டுக்காரங்க ஒத்துக்கிட்டாத்தானே, மத்தது எல்லாம்.

வந்தவங்களுக்கும், அப்பாவுக்கும் நடந்த பேரம் வெற்றிகரமா முடிஞ்சிட்டுதாம். அக்கா ஓடி வந்து, என் கன்னத்துலே முத்தம் கொடுத்துக் கட்டிக் கொண்டாள் என்னை. ஆக என் ஆசை நிறைவேறப் போகுது. மாலையுங் கழுத்துமா, 'அவர்' கையைப் பிடிச்சு இந்த வீட்லே மணவறையைச் சுத்தப் போறேன். கோடி அறையிலேதான் 'சாந்தி' வைப்பாங்கன்னு என் மனசு சொல்லிச் சொல்லிக் குதிக்குது. இந்த வீட்டை விட்டுப் பிரியப் போறோமே'ன்னு ஒரு வருத்தமும் கூடவே வந்துடிச்சு, 'பரவாயில்லே, பிள்ளைப் பேறுக்கு இங்கதானே வரும்வோம். ஏழாவது மாசத்துலேயே வந்துடணும். பிள்ளைக்கு அஞ்சுமாசம் ஆகற வரைக்கும் இந்த வீட்டுலேயே இருக்கணும். நான் பொறந்த மாதிரி என் பிள்ளையும் இந்த வீட்டுலேதான் பொறக்கணும் யார் சொனாலும் சரி, ஆஸ்பத்திரிக்கு போய்ப் பெத்துக்கக் கூடாது''ன்னு பைத்தியமாட்டம் என்னென்னமோ கற்பனை செய்யறேன்.

அவங்க எல்லோரும் போனதுக்கப்புறம், எங்க வீட்லே சமையலறை மாநாடு கூடிச்சு. அம்மாதான் முதல்லே பேசின, ''ஏங்க பதினைஞ்சு பவுனும், பத்தாயிரம் ரூபாயும்னு சொல்லிட்டீங்களே, ரொம்ப அதிகமாத் தெரியுதுங்க.''

''என்னை வேற என்ன பண்ணச் சொல்றே? இதுக்குமுன்னே வந்தவன் எல்லாம், இது மாதிரி ரெண்டு பங்கு கேட்டாங்க, இதுக்குக் குறைச்சலா வேற எவன் வரப்போறான்?''

''அது சரிங்க, நீங்க சொல்றது நிசந்தான்; ஆனா நம்மகிட்ட ஏது இவ்வளவு பணம்? எனக்குத் தெரியாம பாங்குலே ஏதாச்சும் போட்டு வச்சிருக்கீங்களா?''

''அட நீ என்னடி புரியாதவளா இருக்கே; இருந்த காசையெல்லாம் விமலா கல்யாணத்துலே விட்டாச்சு அப்பவே பத்தாம கடன் வாங்கியிருக்கு பாங்கிலே போய்ச் கொள்ளையடிச்சா தானா பணம். நான் என்ன பண்ணப் போறேன்னா... இந்த வீடு இருக்கே இதை நம்ம சபாபதிக்கிட்டே விலைபேசி வச்சிருக்கேன், பேசினபடிக்கு வித்துட்டு, வர்ற பணத்துலே இவ ஒருத்தி காரியத்தை முடிச்சுடடா. அப்புறம் நீயும், நானுந்தானே ... ஏதாச்சும் சின்ன போர்ஷன் வாடகைக்கு... ★

# 36 சௌரிங்கி லேன்



மணிலாவில் நடந்த உலகத் திரைப் பட விழாவில் சிறந்த படத்திற்கான 'கோல்டன் ஈகிளே'ப் பரிசாகப் பெற்று, டெல்லி அரசாங்கத்தின் சிறந்த டைரக்ஷன், சிறந்த ஒளிப்பதிவு, இரண்டாவது சிறந்த படம் என மூன்று விருதுகளேயும் பெற்றிருக்கிற படம்.

சத்யஜித்ரேயால் அறிமுகப்படுத்தப் பட்டு பெங்காலியில் முன்னணிக் கதா நாயகியாய் இருக்கும் நடிகை அபர்ணா சென் எழுதி டைரக்ட் செய்திருக்கிறார்.

அன்புக்காக ஏங்கும் வயதான

[illegible] பட்டுப் போனவுடன் இவளுடைய வீட்டில் வந்து தங்கிக் கொள்ளும் இந்தக் காதல் ஜோடி உடனே உடைகளே அகற்றிச் சரசமாட ஆரம்பித்துவிட... தினந்தோறும் இது தொடர்கிறது.



கொண்டு அவர்களேத் தேடிச் செல்ல — ஆடம்பரமும், கேளிக்கைகளும், கோலாகலமுமாக நடைபெற்றுக் கொண்டிருக்கும் அந்த கிறிஸ்துமஸ் பார்ட்டியில் தான் வேண்டாதவளாக்கப்பட்டு, ஒதுக்கப்பட்டு விட்ட அவமானத்தை உணர்ந்து நெஞ்சில் சுமையுடன் கிழவி திரும்பி விட, ஒரு தெரு நாய் இவளேத் தொடர்ந்து வாலேக் குழைத்துக் கொண்டே வர...படம் முடிகிறது.

தங்களுக்குக் காரியம் ஆகவேண்டுமென்கிற வரையிலும் பயன்படுத்திக் கொண்டு, காரியம் ஆனவுடன் கொஞ்சம் கூட நன்றியில்லாமல் தூக்கியெறிந்து விடுகிற மனித புத்தியை முகத்திலடித்தாற் போல் சொல்கிறது படம்.

கல்கத்தா என்றுலே கொத்துக் கொத்தாக மனிதக் கூட்டங்களேயும், நெருக்கமான கட்டடங்களேயும், நிற்கக் கூட இடமில்லாத சந்துகளேயும், வறுமை நிரம்பிய ஜனங்களேயும், கண் முன் நிறுத்திப் பார்த்தே பழக்கப்பட்ட நமக்கு—வெறிச்சோடிய தெருக்களேயும், கண்ணுக்கு இதமான பரந்த புல்வெளிகளேயும், ஜனக் கூட்டம் இல்லாத சாலேகளேயுமாக கல்கத்தாவின் மறுபுறத்தையும் அடையாளம் காட்டுகிருர்கள்.

காதலர்கள் முத்தமிட்டுக் கொள்வதையும், சட்டென்று ஆடையைக் களேந்து விட்டுச் சல்லாபிப்பதையும் கூச்சமில்லாமல் காட்டுகிறது காமிரா. டைரக்ட் செய்திருப்பவர் ஓர் இளம் பெண் என்பதை நினேத்துக் கொள்ளும் போது கொஞ்சம் புருவம் உயர்கிறது. பாசு சாட்டர்ஜியின் படங்களேப் போலவே மழை பெய்து ஈரத்தில் கசிந்த

அந்த வயதான ஸ்கூல் டீச்சர் தனியாக வசிக்கிறாள். ஒரு பூனை மட்டும் தான் துணை. ஒரு கிறிஸ்துமஸின் விடியற் காலை மெல்லிய மாறுதலைக் கொண்டு வருகிறது. காதலிப்பதற்கும் சரசமாடு வதற்கும் கல்கத்தாவில் தனிமை கிடைக்காத ஒரு காதல் ஜோடி இவள் வீட்டிற்கு வருகிறார்கள். அன்புக்காக வும் சிநேகிதத்திற்காகவும் ஏங்கிக் கிடந்த இவளுக்கு இவர்கள் வருகை ஒரு புதிய அத்தியாயத்தைத் திறக்கிறது.

...கோலத்திலேயே அவர்களைப் பார்த்து விடுகிறாள் அந்த வயதான பாட்டி. திடீ ரென்று அந்த ஜோடி கல்யாணம் செய்து கொண்டு சொந்த வீட்டுக்குப் போய்விட மறுபடியும் கிழவிக்குத் தனிமை. ஒரு நாள் ... ஒப்புக்காகக் கூட அந்தத் தம்பதியர் இவளை வந்து சந்திப்பதில்லை. அந்த கிறிஸ்துமஸ் வருகிறது. அன்புக் காக ஏங்கும் இந்தப் பரிதாபக் கிழவி ... அவர்கள் விலாசம் கண்டு பிடித்து எளிய கேக் ஒன்றை வாங்கிக்

... சொன்னார். "இந்தி திரைப்பட உலகில் சஷிகபூர் நிறைய தப்புக்கள் செய்வ தாகச் சொன்னார்கள். இவ்வளவு கலையம்சம் நிரம்பிய தரமான இந்தப் படத்தைப் போலவே வருடத்துக்கு ஒரு படமாவது தயாரித்து விட்டு என்ன தப்பு வேண்டுமானாலும் தாராளமாய்ப் பண்ணிக் கொள்ளட்டும். மன்னித்து விடுவோம்."

ஜ. மெல்க்கியு

# சிம்லா ஸ்பெஷல்



ஒரு ஐஸ்க்ரீமுக்கோ அல்லது கோடையில் ஓடும் எக்ஸ்பிரஸ் ரயிலுக்கோ வைக்க வேண்டிய பெயர், கோபு—பாபு நாடகக் குழு என்ற போர்டு, அமெச்சூர் நாடகக் கம்பெனிக்காரர்களுக்கு நம்மை ஆயத்தமாக்குகிறது. இந்தவகை நபுக்களுக்குப் பின்னால் நடக்கும் டிராமாவே சிம்லா ஸ்பெஷல். கொஞ்சம் 'மெலோ டிராமாவும்' உண்டு.

நாடகக் கம்பெனி கணக்கில் சின்னச் சின்ன மோசடி செய்வதை நியாயப் படுத்தும் பாபுவாக எஸ். வி. சேகர். அவருடைய உற்ற நண்பனாக கமல். பாபுவின் தங்கைக்கு வக்கில் வீட்டுப் பையனுடன் கல்யாணம் செய்து வைக்க சிம்லா போகிறார்கள் நாடகம் போட்டுப் பணம் சேர்க்க.

கோபுவின் அம்மா புஷ்பலதா ஆரம் பத்திலேயே நெஞ்சுவலியால் அவதிப் படுகிறார். இந்த மாதிரி சினிமா வியாதி யஸ்தர்கள் படத்தைவிட்டு சீக்கிரமே போய்விடுவார்கள். இந்தப் படத்தில் அவர் கடைசிவரை உயிரோடிருப்பது ஒரு ஸ்பெஷாலிட்டி.

முக்தா சீனிவாசனுக்கு அழுதால் பிடிக்காது. சிரிக்க வைத்தே கண்ணில் நீர் வர வைக்கிறார்.

மனோரமா, நடிகையின் அம்மா. தெலுங்கில் 'வாயை மூடு' என்று இவர் திட்டும்போதெல்லாம் நாம் வாயைத் திறந்து சிரிக்கிறோம்.

கோபாலகிருஷ்ணன் கொஞ்ச நேரமே வந்தாலும், அவர் பேசுவதில் கடைசி யாகச் சொல்வதைத் திரும்பச் சொல்லி, தொடையில் தட்டி வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கிறார்.

பெண் பார்க்க வரும் உசிலைமணியின் குடும்பம், கப்பக் கிழங்கு பாட்டைப் பாடச் சொல்வதும், அதற்குச் சமா தானமாக, மாப்பிள்ளை பையன், தன் அண்ணனுக்கு 'ஓரம்போ' பாடிய அண்ணி கிடைத்ததையும், அதற்கு முன் தன் அக்கா 'இலந்தைப் பழம்' பாட்டுப் பாடி அத்தானை அடைந்ததை யும் சொல்லப் போக,—உசிலைமணி தான் பெண் பார்க்கப் போனபோது அவள் 'லொள்...லொள் ... லொள் ... மச்சான் உன்னைப் பார்த்து' பாடி தன்னைக் கவர்ந்தது பற்றிச் சொல்லுகிற இடத் தில் 'கப்பக் கிழங்கின் வேர்க[ளை] இழுத்து வந்திருக்கிறார்கள்.

இதைத் தவிர அறுவை ஜோக்[குகள்] அங்கங்கே தூவப்பட்டிருக்கின்[றன]. விசுவின் அமெச்சூர் நாடக வாசமோ என்னவோ?

படத்தில் சமுதாயப் பிரச்[சனை] இல்லை என்று சொல்பவர்கள் திரு[த்திக்] கொள்ள வேண்டும். ஒரு அநா[தை] குழந்தை பிறப்பது தடை செய்ய[ப்படு] கிறது. பல நாள் கொள்ளைக்க[ாரன்] ஒருவன் பிடிபடுகிறான். இதெல்[லாம்] சமுதாயத்திற்கு ஆதாயம்தானே!

அப்புறம் காமிராக் கவிதை தேடு[பவர்] களுக்கு...சிம்லாவில் காமிரா நிறை[ய] கவிதை எழுதி இருக்கிறது.

கதை எழுதும் அரைப் பைத்திய[மாக] வரும் ஸ்ரீப்ரியா, தன் கதைக[ளைச்] சொல்லியே மற்றவர்களை முழுப் பை[த்தி] யங்களாக ஆக்குகிறார். அவரது அ[ந்தக்] கண்ணாடியும் நடிப்பும் கச்சி[தம்]. கமலுக்கு சிரமமில்லாத பாகம்.

கமல் பாடி ஆடும் கடைசி நட[னம்] 'டிஸ்கோ மேனியாக்'களுக்கு விரு[ந்து]. கண்ணனிடம் கிளாஸிகல் மியூஸி[க்] தான், ஒருத்தர் குறைகளைச் சொல்[லிப்] பாட வேண்டுமா என்ன? டிஸ்[கோ] பாணியிலே கமல் ஏமாற்றிய நண்ப[ரைப்] பற்றிப் புலம்புகிறார். அது ஸ்பெஷ[ல்].

வேகம் போதாது. கொஞ்சம் ஸ்[லோ]

## வாஷிங்டனில்..



வாஷிங்டனில் ஏப்ரல் முதல் வாரம் டைட[ல்] பேஸினைச் சுற்றி செர்ரி மரங்கள் அழகாகப் [பூத்] திருக்கும். அப்போது 'செர்ரி ப்ளாஸம் பரே[ட்]' என்ற அலங்கார அணிவகுப்பு ஒன்றை ஆண்[டு] தோறும் நடத்துகிறார்கள். இதற்குப் பல ஊர்க[ளி] லிருந்து பல்வேறு வாகனங்களில் பல பேர் வ[ந்து] கூடுகிறார்கள். பனியோ, குளிரோ, மழையோ எதுவானாலும் இந்த பரேட் நடந்தே தீரும்.

இந்த ஆண்டு நடந்த பரேடில் அமெரிக்காவி[ல்] வாழும் கேரள வாசிகள் பங்கு கொண்டன[ர்]. அவர்கள் மூவண்ண தேசியக் கொடியின் வண்ண[த்] தில் உடை அணிந்து இந்தியா போன்று அ[ணி] வகுத்துச் சென்ற காட்சி கண் கொள்ளாக் காட்[சி] யாக இருந்தது.

—பார்வதி நாகரா[ஜ]

இந்த விஷயத்தைப் பத்திப் பேசிக் கொண்டிருந்த போது ஒரு டைரக்டர் சாந்தி கிருஷ்ணாவைப் பத்திச் சொன்னார்:

"அந்தப் பெண்ணுக்கு ஒரு காம்ப்ளெக்ஸ். ஆண்களோடு பழக தான் லாயக்கில்லே என்கிற தாழ்வு மனப்பான்மை. அதோடு அழகிய நிறம். நீளமாக இருந்தாலும் புஷ்டியாக இல்லே. அதை மறைக்கத்தான் கதாநாயகர்களோடு நான் நெருக்கமாக நடிக்க மாட்டேன் என்று சாக்குச் சொல்லி வருகிறார். இதை மனோ தத்துவ ரீதியில் சரி செய்தால்தான் உண்டு" என்றார்.

திருவனந்தபுரத்திலிருந்து சென்னைக்கு விமானத்தில் திரும்பிக் கொண்டிருந்தார்கள் பூர்ணிமா ஜெயராமின் தாயாரும் ஹேமமாலினியின் தாயாரும்.

ஜெயா சக்ரவர்த்தி, "உங்க பெண்ணுக்கும் வேறொரு நடிகருக்கும் காதல் என்று பேச்சு அடிபடுகிறதே!" என்று கேட்க, "அதெல்லாம் ஒன்றுமில்லே. பத்திரிகையில் செய்தி வருகிறதே தவிர ஷூட்டிங்கில் அவர்கள் இரண்டு பேரும் சந்தித்துக் கொள்வதுகூட இல்லே. படப்பிடிப்பின்போது நானும் உடனிருப்பதால் அவர்கள் அப்படிப் பழகவில்லே என்பது எனக்குத் தெரியும்" என்று கூறினார் பூர்ணிமா ஜெயராமனின் தாயார்.

"இப்படிச் சாதாரணமாக எடுத்துக் கொள்ளாதீர்கள். ஹேமா விஷயமும் அப்படித்தான் ஆயிற்று. பத்திரிகைகள் சும்மா எழுதுகிறார்கள் என்று பேசாமலிருந்து விட்டேன். எப்படியோ இப்போது நல்ல விதமாக இருக்கிறார்கள்." என்றவர் தொடர்ந்து, "இப்போ ஒரு படம் எடுக்க இருக்கிறேன். கால்ஷீட் கொடுங்களேன்" என்றார்.

"முன்பு ஏதோ படம் எடுத்தீர்கள் போலிருக்கே!"

"ஆமாம். இரண்டு படம் எடுக்க ஆரம்பித்தேன். ஒரு படம் சரியாகவே ஓடவில்லே. இன்னொரு படம் பாதியிலேயே நிற்கிறது. ஹேமா, 'உன்னை ராணி மாதிரி வீட்டிலேயே இருக்கச் சொல்கிறேன். தெரியாத தயாரிப்புத் தொழிலில் பணத்தைப் போட்டு வீணாக ஏன் வீட்டில் சும்மா என்னால தண்டச் சோறு சாப்பிட்டுக் கொண்டு உட்கார முடியவில்லே. ஆனால் தயாரிப்புத் தொழில் நெளிவு சுளிவு புரியாததால் கோட்டை விட வேண்டியிருக்கிறது. இந்தியில் 'சுவாமிஜி' எடுத்தேன். கஷ்டமே தெரியவில்லே. பல பரிசுகள் அந்தப் படத்திற்குக் கிடைத்தன. தமிழில்தான் சரிப்பட்டு வரவில்லே. இப்போது எடுக்க இருக்கும் இந்தப் படத்தையாவது வெற்றிகரமாக எடுத்து முடிக்கணும்" என்று கவலைப்பட்டார் ஜெயா.

★

ஒரு ஸ்டண்ட் மாஸ்டர் சொன்னார்:

"இனி படங்களில் சண்டைக் காட்சிகளே இருக்காது. கதாநாயகன் பலரைச் சண்டையில் ஜெயித்து தான் ஒரு பலசாலி ஆபத்பாந்தவன் என்று ஒரு 'இமேஜை'க் காட்டி மக்கள் மத்தியில் வளர்ந்து விடுகிறார்கள். அதனால் ஹீரோ ஒர்ஷிப் ஏற்பட்டு விடுகிறது. அதைச் சாக்காக வைத்து அரசியலில் குதித்து விடுகிறார்கள். இதைத் தடுக்கும்படி சென்சாருக்கு ரகசிய அறிக்கை வந்திருக்கிறதாம்."

—பாரிவள்ளல்

அட்டையில்:

"திருவனந்தபுரத்திலிருக்கும் கதாவிற்கு கடற்கரையில் கூடாரம் போட்டுக் கொண்டு நாள் முழுவதும் அங்கேயே வசிக்க வேண்டுமென்ற ஆசை தேர்வுகள் முடிந்ததும், ஒரு நாள் முகாம் போட ஆர்ப்பாட்டமாகப் புறப்பட்டுச் சென்றார். ஆனால் அன்று பார்த்து காற்றும் மழையும் வந்து விட்டதால் இவர் ஆசை நிறைவேறாமல் போய் மிகுந்த ஏமாற்றத்துக்குள்ளானார். என்னை அழைத்து, தன் வீட்டிலிருக்கும் வால் பேப்பர் பின்னணியில் டீ தயாரித்து மற்றவர்களுக்குக் கொடுப்பது போல் படமெடுக்கச் சொல்லி, அந்தப் படத்தைப் பார்த்து தன் ஏமாற்றத்தை போக்கிக் கொண்டார்."

தகவல், படம்: [illegible]




ஐ. மெல்க்யூ

அந்த விபரீதம் என் கண் எதிரிலையே நடந்தது. ஒரே கணம்தான். சட்டென்று பாய்ந்து அவள் தலைமயிரைப் பற்றி இழுத்து அறைவிட்டான். அந்த அதிர்ச்சியிலிருந்து அவள் விடுபடுவதற்குள்ளாகவே முகத்தில் ஒரு குத்து. மறுபடி அவன் கை ஓங்குவதற்குள் அவனிடமிருந்து விடுபட்டு அறைக்குள் ஓடிப்புகுந்து கொண்டாள் கனகா.

நிமிஷ நேரத்துக்குள் நான் செயலிழந்து போய் விட்டேன். ஒரு புருஷனால் இவ்வளவு அநாகரிகமாய் நடந்து கொள்ள முடியுமென்று நான் நினைத்துக் கூடப் பார்த்ததில்லை. "சார் சார், என்ன இது? எதுக்காக இவ்வளவு கோவம்? உக்காருங்க" என்று அவனை—துரைசாமியைப்—பிடித்து உட்கார வைத்தேன். ஏதோ நான் அழுத்திய அழுத்தலில் அவன் உட்கார்ந்து விட்டானே தவிர,

தடுக்காவிட்டால் திரும்பவும் அடிப்பான் போலிருக்கிறது. தலைமயிரைப் பற்றி இழுத்து உதைப்பான் போலிருக்கிறது. நாற்காலியில் உட்கார முடியாமல் திமிறிக் கொண்டிருந்தான். அவனுக்கு மூச்சு இரைத்தது. "பொட்டைச் சிறுக்கி! எதுத்தா பேசறே? கொன்னுடுவேன். பலிபோட்டுருவேன்."

மூடிய அறைக்குள்ளிருந்து கனகாவின் அழுகை கேட்டது.

துரைசாமி வியர்த்திருந்தான். கண்களில் சிவப்பு. உடம்பெங்கும் படபடப்பு. வேகமான சாராய வாசனை.

"புருஷனை எதுத்தாடீ பேசறே? பல்லை ஒடைச்சிருவேன்."

எனக்குச் சங்கடமாயிருந்தது. என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

"அவங்க எதுத்துப் பேசலே. சாதாரணமாய்த்தான் சொன்னாங்க" என்றேன்.

துரைசாமி என் பேச்சை கவனித்ததாகத் தெரியவில்லை. அடுத்த அறையின் மூடிய கதவைப் பார்த்துக் கத்தினான். இந்த முறை எழுத முடியாத வசவுகளெல்லாம் வஞ்சனையில்லாமல் வந்து விழுந்தன.

எனக்கு அளவுக்கு மீறி சங்கடமாயிருந்தது. 'என்ன இல்வளவு மோசமான ஆசாமியாயிருக்கிறானே இவன்' என்று மனசில் தேக்கிக் கொண்டு "கோவப்படாதீங்க. சாதாரணமா எடுத்துக்கங்க. எதுக்காக இப்ப இவ்வளவு கோவம்? என்னத்துக்காக இத்தனை ஆத்திரம்? நான் புறப்படறேன். என்ன ஏதுன்னு விஷயத்தை உங்க ரெண்டு பேருக்குள்ள சாவதானமாய்ப் பேசித் தீர்த்துக்கங்க" என்றேன்.

திடுதிப்பென்று வெளியேறுவதற்கும் தயக்கமாயிருந்தது. வசமாக மாட்டிக் கொண்டேன். தவறு என்னுடையது. இங்கே வந்திருக்கக் கூடாது. யார் கண்டார்கள்? இவன் வீட்டில் திடுமென்று இப்படியொரு பூகம்பம் கிளம்புமென்று?

நான் பாட்டுக்கு வாசலில் நின்று தெருவை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். எதிர்வீட்டுக் கதவு திறக்கப்பட்டு "என்ன சார் ரொம்ப நேரமாய் துரைசாமி.

"ஒண்ணுமில்ல சும்மாத்தான். வீட்டுக்குள்ள போரடிச்சது."

"வாங்களேன் பேசிக்கிட்டிருப்போம்."

'வேண்டாம் வேலையிருக்கு' என்று சொல்லி உள்ளே போயிருக்கலாம். சரி தான் பொழுதுதான் போகலையே போய்ப் பேசிக் கொண்டிருப்போமே என்று நினைத்து உள்ளே போனேன். துரைசாமி என் வீட்டுக்கெதிரில் குடி வந்து ஒருவாரம்தான் ஆகிறது. புருஷன் மனைவி இரண்டே பேர். இரண்டு பேருமே எங்கேயோ வேலை பார்க்கிறார்கள்...

இன்றைய அதிகபட்ச வெயில், பொதுத்துறை ஊழியர்களின் வேலை நிறுத்தம், விலைவாசி உயர்வு, மைக்கோ தொழிற்சாலை கலாட்டா, மெஜஸ்டிக் பகுதியில் பஸ் எரிப்பு ...என்றுதான் பேசிக்கொண்டிருந்தோம்.

வாசலில் நிழலாடியது.

"துரைசாமி வீடு இதுதானுங்களா?" என்ற கேள்வி முடியுமுன்னரே "அடே இங்கதான் இருக்கியாய்யா பத்மாஸ்..." என்றான் வந்தவன்.

சற்றும் எதிர்பாராமல் வாசல் படியேறி "வாங்கற வரைக்கும் வாங்கித் தின்னுட்டு கடன்காசைத் திருப்பித் தராமல் வீட்டைக் காலி பண்ணிட்டு ஓடிவந்துட்டா விட்டுருவேன்னு நெனச்சியா? பெங்களூர்ல எந்த மூலைக்குப் போனாலும் எனக்கு ஆள் இருக்கு தெரியுமா? என்னை ஏமாத்திட்டு எங்கேய்யா போயிடுவே? இப்ப காசை வெக்கறியா, இல்லை வீட்ல வந்து

சுத் துப்பு இல்லாதவனெல்லாம் ...
கய்யா கடன் வாங்கணும்? கொஞ்ச மாவது மானரோஷம் வேண்டாம்? சொன்ன வாக்குத் தவறினா நாக்கைப் புடுங்கிட்டுச் சாகவேண்டாம்? திருடன் மாதிரி சொல்லாம கொள்ளாம வீட்டைக் காலி பண்ணிக்கிட்டு ஏரியாவை மாத்திகிட்டு வந்துட்டியே, வெட்கமாயில்லே?'' என்று கூப்பாடு போட ஆரம்பிக்க,

முதலில் அதிர்ந்துதான் போய்விட்டான் துரைசாமி. உடனே சுதாரித்து, ''வஜ்ரவேலு, எதுக்கு இப்படிச் சத்தம் போடற? சம்பளம் வந்ததும் உன்னுடைய பாக்கியைத் தந்திடறேன்.'' என்றான்.

வஜ்ரவேலு இன்னும் அதிகமாய்க் கோபப்பட்டான். ''வேற யாருட்டியாச்சும் போய்க் காது குத்துய்யா. சம்பளம் வந்ததும் தந்திடறேன்னு இத்தோடு எத்தனையா வாட்டிச் சொல்லிட்டே...ஒரு வருஷமா இதையே சொல்லிட்டிருக்கே ... எனக்கு அதெல்லாம் தெரியாது. என்னுடைய கடனை இப்ப வெச்சாத்தான் நகருவேன்.''

சற்றும் எதிர்பார்க்காமல் முகம் மாறினான் துரைசாமி. ''இங்க பாருய்யா, சம்பளம் வந்ததும் தரேன்னு சொல்றேன் கேக்க மாட்டே? வாய்க்கு வந்தபடியெல்லாம் பேசறே...இனிமே ஒரு வார்த்தை ஏதாச்சும் பேசினயோ விஷயம் வேறமாதிரி ஆயிடும், ஆமா.''

''என்னய்யா பண்ணுவே?''

''உன்கிட்ட நான் பணம் வாங்கலே. அதனால் குடுக்க முடியாதுன்னு சொல்றேன். உன்னால என்ன செய்ய முடியும்?''

என்னடா தின்றீங்க? எவன் வீட்டுக் காசைத் தின்னுட்டு இல்லேன்றே. அந்தக் காசு எனக்கென்ன சும்மா வந்தக் காசா?''

அறைக்குள்ளிருந்து அவசரமாக வெளியில் வந்து நின்றாள் கனகா. ''இங்க பாருங்கண்ணா, இன்னும் ரெண்டு மாசத்துல உங்க காசை நானே தந்திடறேன். சம்பளம் வாங்கிட்டு நேரா உங்க வீட்டுக்கு வந்து கொடுத்திட்டுத்தான் மறுவேலை. எழுநூறு ரூபாய் தானே தரணும்? இந்த மாசம் பாதியைத் தந்திடறேன். தயவு செஞ்சு மன்னிச்சுக்கணும். நீங்க அவரைக் கேக்க வேணும். உங்க காசுக்கு நான் பொறுப்பு'' என்றாள்.

''உன்னுடைய முகம் பார்த்து விடறேம்மா. என் காசு எனக்கு வந்துட்டா துன்னு நான் ஏன் உங்க வீட்டு வாசல் தேடி வரணும்...சொல்லு'' சட்டென்று தெருவில் இறங்கி அவன் போய் விட்டான்.

நான் ஒருவன் இருக்கிறேன் என்று இங்கிதம்கூட இல்லாமல் துரைசாமி தன்னுடைய மனைவி பக்கமாய்த் திரும்பினான்.

''உன்னை எவடீ இங்கே வரச் சொன்னா?''

அவள் பதில் பேசாமல் உள்ளே நுழைய முற்பட,

''ஏய் நான் பாட்டுக்குக் கேட்டுட்டிருக்கேன்...நீ பாட்டுக்கு உள்ளே போனா என்ன அர்த்தம்? உன்னை யாரு வரச் சொன்னா?''





ருள்.

"அப்புறம் என்னடி பசறது? இப்பவே சொல்லு ... அவன் எங் ட்ட இல்ல பேசிக் ட்டிருந்தான். நீ துக்கு வந்து பதில் சொன்னே? யாரைக் கட்டு அவனுக்கு வர்ற மாசம் தர்றதா ஒத்துக் ட்டே."

"ஏன் இப்படிக் கத்த றிங்க? வாங்கின காசைத் தந்துட வேண்டாம்? நான் இந்த மாசம் சம்ப ளம் வாங்கினதும் அந்த ஆள் கடனை ஒழிச் ட்டுத்தான் வீட்டுக்கு ருவேன்."

"சம்பளம் வாங் ட்டு நேரா அவன் வீட்டுக்குப் போயிட் டுத்தான் வருவியா? அவன் என்ன வேணும் உனக்கு மாமனா?"

"ச்சி ... என்னவெல் லாம் பேசறிங்க?" ன்ருள்.

அடுத்த கணமே எம்பிப் பாய்ந்து, அவள் தலைமயிரைப் பற்றி இழுத்து, அறைவிட்டு, முகத்தில் குத்தி...

புருஷனிடம் என் எதிரில் வசவு கேட்க வும் அடி வாங்கவுமான நிலைமை ஏற்பட்டு விட்ட அவமான உணர்ச்சியில் கனகா பார்த்த பார்வை மனசில் உறுத்திக் கொண்டிருந்தது. நான் எழுந்து கொண்டேன்.

...த்தூ என்று துமட்டிக் கொண்டு வந்தது எனக்கு. என்ன ஆண்பிள்ளை இவன்?


பரத்வாஜ்


ராகவன்

சத்யஜித்ரே


மந்திரக்கோல்

கடையில் வாங்கும் ரவை,
கோதுமை மாவு போன்ற பண்டங்களில்
கண்ணுக்குத் தெரியாத
இரும்புத் தூள்களை அகற்ற
ஒரு புது வழி கண்டு பிடித்திருக்கிருர்
இந்த பரத்வாஜ்.
இவர் கையிலிருக்கும் மந்திரக்கோலால்
பண்டங்களைக் கிளறினுல்
போதும். எல்லாத் தூள்களும்
ஒட்டிக் கொண்டு
வெளியே வந்து விடுகின்றன.

## வயது முப்பத்துநான்கு

சமீபத்தில் ஒரு வெண்ணெய்க்
கடைக்கு முப்பத்து நாலு
வயதாகியிருக்கிறது. கடையின்
சொந்தக்காரர் மாம்பலம்
ராகவன். அந்தக் காலத்தில்
ஒரு வீசை வெண்ணெயை நாலு
ரூபாய்க்கு விற்ருராம். இன்றைக்கு
அதைப் போல எட்டு மடங்கு விலை!

"இத்தனை நாட்களில்
நான் சேர்த்த பணத்தைக் காட்டிலும்
வாடிக்கையாளர்களின் நட்பையே
பெரிதாகக் கருதுகிறேன்"
என்கிறர் ராகவன்.
சில வருடங்களுக்கு முன் நடத்திய
ஆள் இல்லாத பத்திரிகைக் கடையை
ஏன் மூடிவிட்டார்?
இரண்டு காரணங்கள். ஒன்று
ஒரு ஆளுக்கு வேலைவாய்ப்பு
மறுக்கப்படுகிறது. மற்றது, அது
நம்மைப் பற்றி, நம் நாணயத்தைப்
பற்றி! சொன்னுல் நன்ருய்
இருக்காது!

## கதை தேடுகிரு—ரே!

சத்யஜித்ரேயின் இரண்டு படங்களோடு
கலர் டி. வி.யின் சகாப்தம்
இந்தியாவில் ஆரம்பமாகியுள்ளது.
டி. வி.க்காக தயாரித்த
சின்னப் படம் 'சத்கதி.'
ஒண்ணுங்கிளாஸ்!
மற்றது கொஞ்சம் வழ வழா.
ரே அடுத்த டி. வி. படத்திற்காக
இப்போது நல்ல சிறு கதைகளைத்
தேடிப் படித்து வருகிருர்.

—ப்ரியாராஜ்

பெண்டாட்டியும் குடும்பமும் வேண்டிக் கிடக்கிறது இவனுக்கு?

அந்த விவகாரம் அத்துடன் முடியாமல் அதற்குப் பிறகும் தொடர்ந்தது. அன்றைய இரவு நீண்ட நேரம் வரைக்கும் எதிர் வீட்டில் ஒரே கூச்சலாக இருந்தது. சாமான்கள் தடதடவென்று உருண்டன. தொம் தொம் தொம் என்று பெண்டாட்டியைப் போட்டு அடிக்கும் சத்தமும் அவளுடைய விம்மலும் விசும்பலும் அழுகையுமாக நீண்ட நேரம் கேட்டுக் கொண்டிருந்தது.

விளக்கை அணைத்து கஷ்டப்பட்டு தூங்கிவிட முயன்றேன்.

இரண்டு நாட்கள்தாம் போயிருக்கும். எதிர் வீட்டில் மறுபடி சண்டை. மறுபடி கெட்ட வார்த்தைகள். மறுபடி அடி உதை. மறுபடி அழுகை... கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு வெளியே கிளம்பி விட்டேன். ஏதோ



யைச் சாப்பிட்டு (இந்த எதிர் வீட்(டு) காரனால் எவ்வளவு கஷ்டம்)...பத்து பத்தேகால் மணிக்கு நடந்தே வந்து வீட்டை அடைந்தால்...திக்கென்றது.

எதிர் வீட்டில் இன்னமும் வி... எரிந்து கொண்டிருக்க, இன்னமு... அதே சண்டை!

அடுத்த நாள் காலே வந்த... விடியாததுமாய் எழுந்து வந்த... பக்கத்து வீட்டு ராவ். "என்ன ச... இது அவனோட பெரிய நியூசென்ஸ... போச்சு...நான் . தலரும வீ... சண்டை போடறான். பெண்டாட்டி... அடிக்கிறான். பத்து வீடு கேக்கறமா... கெட்ட வார்த்தை பேசி இட்டரு... நாமெல்லாம் சேர்ந்து ஏதாச்... பண்ணணும் சார்."

"என்ன பண்ணலாங்கறீங்க?"

"வீட்டுக்காரனிடம் சொல்லி க... பண்ண வைக்கலாம்."

எனக்கு இதில் சம்மதமில்லே. ... பிக்கையில்லே. என்னுடைய பார்வை... வேறு. அவன் வேறு பக்கம் எங்கா... போய் எப்படியாவது கத்திக் கொ...டிருக்கட்டும். நம் காதில் விழா... நமக்குத் தொந்தரவு இல்லா... போனால் போதும் என்கிற சரா... வெகுஜனப் பார்வை இது. ...னுடையது இதுவல்ல...

அந்தப் பெண்...கனகா!

அவனுக்கு வாழ்க்கைப் பட்டுவிட்... நாளெல்லாம் சித்ரவதை அனுபவித்து கொண்டிருக்கிறாளே பாவம்!

அவமானப்பட்டுப்போய் அன்றைக்... அவள் என்னைப் பார்த்த அந்... பார்வை ... அதற்கடுத்து என்னை பார்க்க நேரும் சமயங்களிலெல்லா... சிறுத்துப் போய் தன்னை ஒடுக்கி மறை...துக் கொள்ளும் அவஸ்தை...

னும் நானும் ராவும் இன்னொரு ர்ஷனைச் சேர்ந்த சந்திரசேகரனும் டுக்காரரை ரகசியமாகச் சந்தித்து யத்தைச் சொன்னோம். "அட, இதை ல்லாம் போய்ப் பெரிசா எடுத்துக் டு...ஏதோ புருஷன் பொண்டாட் குள்ள சண்டை. ரெண்டு நாள் ஞ எல்லாம் சரியாப் போகுது. க்குப் போயா காலி பண்ணச் ல்லுவாங்க?"

வன் கவலை அவனுக்கு. நாங்க ல்லாம் நீண்ட நாட்களாக குடியிருக் றும் என்ற ஹோதாவில் நூற்று பது ரூபாய் வாடகைதான் தரு றும். துரைசாமியிடம் இருநூற் ம்பது ரூபாய் வாங்குகிறன். காலி ணச் சொல்வானு, என்ன?

வாங்க சார் எதிர்வீட்டுக்கார மே பேசிப் பார்க்கலாம்" என்று ழைத்தார் ராவ். அவனிடம் பேச ன இருக்கிறது? நான் மறுத்து டேன்.

ராவ் போய்ப் பேசிவிட்டுத்தான் தார். "அதெல்லாம் ஒண்ணுமில்லே ர். எங்களுக்குள்ளே சின்ன சண்டை. தா கோவத்துல கத்தியிருப்பேன். களுக்கெல்லாம் டிஸ்டர்ப் ஆயிருக் னு தெரியாது" என்று பொது கப் பேசி அனுப்பி விட்டான் ரசாமி.

அவனை கவனித்ததில் நிறைய குடிக் வன் என்று தெரிந்தது. ரேஸ் ஆடு ன் என்பதும் தெரிந்தது. போதாதா? ண்டு பெருக்குமாக வருகிற காசை ஷ்டப்படி செலவழிக்கிறன். ரேஸை க்குக் கூட விட்டு வைக்காமல் ணத்தைக் கொண்டு வரச் சொல் றன். மறுத்தாளானல், கணக்குக் ட்பாளானல் இருக்கவே இருக்கிறது டி, உதை, குத்து சமயங்களில் அடி ம் உதையும் தாங்காமல் அடுத்தநாள் லுவலகத்துக்குக்கூடப் போக முடியா ல் வீட்டிலிருப்பாள் கனகா. இவ்வளவு டித்த பெண்; உத்தியோகம் பார்க்கிற ண். எதற்காக இந்த முர்க்கனிடம் ட்டிக் கொண்டு சித்திரவதைப் டுக் கொண்டிருக்கிறள் என்றுதான் க்கு ஆச்சரியமாயிருக்கும்.



ஒரு பெண்ணுல் எத்தனை அடியையும் வலியையும்தான் பொறுத்துக் கொள்ள முடியும்? நிலைமை மீறிப் போகும்போது தான் வாய்விட்டு அழ ஆரம்பிப்பாள்.

அவளுடைய அழுகுரலைக் கேட்கும் போதெல்லாம் பதறும். அவளைப் போய்க் காப்பாற்ற மாட்டோமோ என்று உடம்பு பதைக்கும். ஆனாலும் முடியுமா என்ன? எந்த உரிமையில் அவன் வீட்டுக் குப் போய் அடிக்க வேண்டாம் என்று சொல்வது? "நீ எவண்டா அதைக் கேட்க?" என்பான். அவ்வளவுதானு கேட்பான். நாக்கில் நரம்பில்லாமல் "இவளை அடிச்சா உனக்கேன் பதைக் குது? நீ என்ன இவளை வெச்சுக்கிட்டிருக் கியா?" என்பான். எதற்கு வம்பு?

தாலி கட்டினவன் தன்னை என்ன வேண்டுமானுலும் செய்யலாம் என்று நினைக்கிற பத்தாம் பசலியா நீ? பெண்ணே, உன்னை அடிக்க உன் புருஷ னுக்கு உரிமையில்லையென்பது தெரியுமா உனக்கு? உன்னைக் கைதொட்டு அடித் தால் சட்டம் அதைத் தடுக்கும் என்பது தெரியுமா? நீ போலீஸ் டேஷனுக்குப் புகார் கொடுத்தாயானல் உன் புருஷனை சட்டம் தண்டிக்கும் என்பது தெரியுமா?

தெரியுமோ தெரியாதோ, அவள் பாரதி காலத்துப் புதுமைப் பெண் அல்ல. பழங்காலத்துப் பத்தினி.

ஆக்ரோஷமாகச் சண்டை நடக்கும் சமயங்களில் ரகசியமாகப் போய் போலீஸில் புகார் செய்து போலீஸை வரவழைத்து விடவேண்டும் என்று மனசுக்குள் ஒரு திட்டம் இருந்தது. அப்படி வரவழைத்து விட்டால் "சண்டையா? எங்களுக்குள்ளா? என்

என்று கனகாவே பதில் சொன்னாலும் சொல்லிவிடுவான். இவனைச் சரியானபடி தண்டிக்க வழியில்லாமல் போய்விடும்.

மாலைநேர அவசர பரபரப்பில் மெஜஸ்டிக்கின் சிக்கலான சந்தொன்றில் நுழைந்து மறுபுறம் கரையேறலாம் என்று முயன்றபோது "ஹலோ, எங்க சார் இந்தப் பக்கமா?"—துரைசாமி த்தான்.

அவன் முகத்தைப் பார்ப்பதையே கூடுமான வரை தவிர்க்கிறேன். என்ன ஆக வேண்டியிருக்கிறது இவனைப் பார்த்து...? இருந்தாலும் இப்போது நேரேதிரில் அவனாக வந்து வலியப் பேசும்போது...

சிக்கனமாகச் சிரித்து "கொஞ்சம் வேலையிருந்தது ஒருத்தரைப் பார்க்க வேண்டியிருந்தது, வந்தேன்" என்றேன். "வாங்க சார் காபி சாப்பிட்டுப் போகலாம்" என்றான்.

"தாங்க்யூ. வேணும் நான் சாப்டாச்சு."

"பர்வாயில்லை வாங்க சார்! சாப்பிட்டுப் போகலாம்" என்று சொல்லி என் கையைப் பற்றி இழுக்க, மனதுள் முகம் சுளித்து மேலுக்குச் சிரித்துக் கையை விடுவித்துக் கொண்டே "நீங்க போய்ச் சாப்பிடுங்க. நான் சாப்டாச்சு" என்று சொல்லி நகர இருந்தேன்.



என்னுடைய மறுப்பு அவனுக்கு உறை திருக்க வேண்டும் ... சற்று தூரத்தி வந்து நின்ற ஆட்டோ ரிக்ஷாவை கைதட்டி நிறுத்தினான். "வீட்டுக்கு தான் போறேன். வாங்க சார் போயி லாம்" ..

அவனுடன் போக எனக்கு இஷ் மில்லை. "நீங்க போங்க. எனக்கு வந் வேலை பாக்கியிருக்கு" என்று சொல் நான் திரும்பின சமயம்—

எவனோ ஒருத்தன் மெயின்ரோடுக்கு பக்கமிருந்து தடலடியாக ஓடிவந் என்மீது மோதி, நான் சுதாரிப்பதற்கு எழுந்து தலைதெறிக்க ஓடி ஒரு மின்ன புயல்போல் ...

நிலை உணர்ந்து பார்ப்பதற்குள் ஆளை காணவில்லை. துரைசாமியும் என்னை போலவே தாக்குற்றான் என்றாலு தடலடி ஆசாமியைப் பிடிப்பதற்கா அவன் புகுந்த பக்கமாக ஓடி ஆட்டே வுக்குள் ஏறி "சீக்கிரம்" என்றான்.

ஒரு கோபக்கூட்டம் தபதபவென் ஓடிவந்தது. "சார் சார் ஒ பிக்பாக்கெட் இந்தப் பக்கமாய் இப் ஓடிவந்தானே... கொஞ்சம் டீசன்ட்டா வெள்ளைச் சட்டையுடன்..."

நான் அந்தக் கூட்டத்தைப் பார் தேன். வெறித்தனமான பரபரப்பி இருந்தது. எவனாவது இவர்கள் கையி கிடைத்தால் கொஞ்சமும் யோசிக்க மல் ஆளுக்கொரு தர்ம அடியில் பீ பீஸாய்...

"அட பிக்பாக்கெட்டா சார் அவன் என்னை இடிச்சுத் தள்ளிக்கிட்டு ஓ வந்தானே அவனா? அதோ பாருங்க அந்த ஆட்டோவுக்குள்ள உட்கார்ந் சீக்கிரம் சீக்கிரம்னு அவசரப் படுத்தி கிட்டிருக்கான்" என்றேன். அவர்க துரைசாமியைத் துரத்திச் சென்றார்க வேணும் அவனுக்கு. செம்மையா மாட்டிக் கொண்டான். பெ டாட்டியை வதைத்தவனுக்கு ஆண்ட னாக தேடிக் கொடுத்த தண்டனை இது.

அவர்கள் ஆட்டோவைச் சூழ்ந் கொள்ள நான் அவசரமாய் மெயி ரோட்டுக்கு வந்தேன்.

# ரிபக்கல்



ம ண்டையைப் பிளக்கும் வெயிலில்... ஊருக்கு எல்லையில் இருந்த பாழடைந்த கிணற்றின் மேல் நின்று கொண்டு, உள்ளே எப்படி இறங்குவது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

எந்தக் காலத்துக் கிணறோ தெரிய வில்லை .... கொஞ்சம் ஆழமாகவும் அகலமாகவும் இருந்தது. நல்லவேளை யாக...படிக்கட்டு மறைந்து போகாமல் அப்படியே இருந்தது. சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்துவிட்டு, மெள்ள படிக்கட்டில் கால் வைத்து இறங்கினேன்.

"பசக்கானி" என்று ஒரு செடி. இந்த மூலிகைச் செடி, பெரும்பாலும் பாழுங் கிணறுகளில் தான் அதிகமாக வளரும் இதனுடைய இலைகள், இளஞ்சிவப்பாக வும் தண்டு கருப்பாகவும், பூ மஞ்சள் நிறமாகவும் இருக்கும். இதன் வேரி லுள்ள காய்கள், வெள்ளை நிறமாக இருக்கும்.

இந்த வெள்ளைநிறக் காய்களை அரைத்து, பாலுடன் கலந்து சாப்பிட் டால் பெண்களை மயக்குகிற வசீகர சக்தி கிடைக்கும் எனக் கேள்விப்பட்டு... 'லோலோ'வென ஒவ்வொரு பாழுங் கிணறாய் அலைந்து பார்த்துவிட்டுக் கடைசி யாக ... இந்தப் பாழுங்கிணற்றுக்கு வந்திருக்கிறேன்.

பசக்கானி, இந்தக் கிணற்றிலும இல்லாவிட்டால் ... ஆசைகளையெல்லாம் இந்தக் கிணற்றிலேயே கொட்டிவிட்டு, பேசாமல் வீடு திரும்ப வேண்டியது தான்.

அந்தச் செடி எங்காவது தென் படுகிறதா எனப் பார்த்தபடி, மெள்ள மெள்ள படிக்கட்டில் தவழ்ந்து தவழ்ந்து இறங்கியபடி, கல் ஒன்றின் மேல் கால் வைக்க...கால் இடறியது. தடுமாறிப் போய். பிடித்துக் கொள்ள பிடிப்பு ஏதும் இல்லாமல் ஓ...வெனக் கத்தியபடி கிணற்றுக்குள் விழுந்தேன். விழுந்தவன் எங்கேயோ. சர்ர்ர்ரென சறுக்கிக் கொண்டு போவதைப் போல் இருந்தது. அதற்குள், நினைவு என்னை விட்டுப் பிரிந்துவிட்டது.

நினைவு திரும்பி கண் விழித்த போது, ஏதோ ஒரு குடிசையில்...கயிற்றுக் கட்டி லில் படுத்திருந்தேன். பாழுங்கிணற்றில் சறுக்கி விழுந்தவன் இந்தக் குடிசைக்கு எப்படி வந்தேன்?

மெல்ல...கட்டிலை விட்டு எழுந்தேன். லேசாக தலை வலிப்பதைப் போலிருந்

ரூபாய் நூறு
பரிசு பெறும்
மூன்றாவது
வானவில் கதை

போடப்பட்டிருந்தது. புலி உறுமுவதைப் போல், கொர்...கொர்...என்று சத்தம் கேட்டது. விழிகளைச் சுழற்றினேன். ஒரு மூலையில் இருபது வயதில் திடகாத்திரமான ஒரு வாலிபன் குறட்டை விட்டபடி படுத்திருந்தான்.

நம்மைக் கிணற்றிலிருந்து தூக்கி வந்து.. தலைக்குக் கட்டுப் போட்டு... கட்டிலில் படுக்க வைத்தது இவனைத் தான் இருக்க வேண்டும் எனத் தோன்றியது!

நாம் பாழுங்கிணற்றில் விழுந்தது இவனுக்கு எப்படித் தெரியும்? ஒருவேளை பாழுங்கிணற்றில் சறுக்கி விழும் போது, ஓ...வென்று கத்தினோமே! அந்த சத்தம் கேட்டு ஓடி வந்திருப்பானோ! அல்லது... இவனும் மூலிகையைத் தேடி கிணற்றுக்குள் வந்திருப்பானோ!

கால்களை அகல விரித்துப் படுத்தபடி... படுத்துள்ள வாலிபனைப் பார்த்தபடி சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டு குடிசைக் கதவைத் திறந்து கொண்டு, வெளியே வந்தேன்.

என்னால் நம்ப முடியவில்லை. நம்பவே முடியவில்லை.

கூப்பிடு தூரத்தில் ஒரு பெண்.. இளம்பெண். உடம்பில் ஆடையேதும் இல்லாமல் ஒயிலாக நடந்தபடி மரங்களடர்ந்த காட்டுப் பகுதியை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள்.

ஒரு வேளை ... பைத்தியமோ? பைத்தியம் கூட, கந்தல் கந்தலான துணிகளை உடம்பில் தாறுமாறுகப் போட்டுக்

இவள், மறைக்க வேண்டிய இட களைப் பற்றி கொஞ்சம் கூட நினைப்பே இல்லாமல் அல்லவா இருக்கிறாள்.

சுற்றுமுற்றும் பார்த்தேன். அங்கொ றும் இங்கொன்றுமாகக் குடிசைக ஒரு குடிசையின் முன். நாலைந் வாலிபர்கள் உயிரோடு இருக்கும் ஒ எருமையின் தோலை உரித்துக் கொ டிருந்தார்கள்.

இவர்களின் கண்ணில், அவள் ப டிருப்பாளா? பட்டிருக்க மாட்டா பட்டிருந்தால், இவர்கள் எருமையை உரித்துக் கொண்டிருப்பார்கள். அ சரி..., நாம் இந்த ஊருக்கு வந்தபோது ஒரு குடிசைகூட கண்ணில் படவில்லையே இப்போது எப்படி குடிசைக தோன்றின? ஏகப்பட்ட வீடுக நெருக்க நெருக்கமாகத் தெரிந்த அப்போது ஒரு வீட்டைக் கூடக் கா வில்லையே? நாம் எங்கு இருக்கிறோ எந்தக் கிராமத்தில் இருக்கிறோம்?

சிகரெட் கையைச் சுட்டது. கை உதறிக் கொண்டு பார்த்தேன். அவ மரங்களடர்ந்த காட்டுப் பகுதிக்கு மறைந்து கொண்டிருந்தாள். இந் ஊருக்கு வந்தபோது ஒரு மரம் கூட கண்ணில் படவில்லையே!

இப்போது, ஒரு காட்டுப் பகுதி தோன்றியிருக்கிறதே! யோசிப்பதற் நேரமில்லை. சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்துவிட்டு, காட்டுப் பகுதியை நோக்கி ஓடினேன்.





மரங்களின் 'பின்னல் மறைந்து
றைந்து சென்று, குளத்தங்கரை
ரமாக ... ஒரு மரத்தின் மறைவில்
றைந்து நின்று கொண்டு பார்த்தேன்.

அவள், குளத்தில் ஆனந்தமாகக்
ளித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு
யது பதினறுதான் இருக்கும். சிவந்த
றத்தில் கொள்ளை அழகாக இருந்தாள்.

ஆசையுடன்...இல்லை, வெறியுடன்
வள் குளிப்பதையே பார்த்துக் கொண்
ருந்த போது, அவள் என்னைப் பார்த்து
ட்டாள். அவ்வளவுதான் பேயைக்
ண்டது போல்...வீலெனக் கத்திய
ு ... குளத்திலிருந்து வெளிவந்து
டத் தொடங்கினள்.

வெறியுடன் அவள் மீது பாய்ந்தேன். கத்தினள். உடனே அவள் வாயைப் பொத்தினேன்.

நீண்ட நேரத்துக்குப் பிறகு என்னிடம் சுகம் பெற்றுக் கொண்ட அவள், என்னிடமிருந்து விடுபட்டுக் கொண்டு, திரும்பித் திரும்பி பார்த்தபடி ஓடி மறைந்தாள்.

அவள் ஓடிய வேகத்தைப் பார்த்தால். ஊரிலுள்ள எல்லோரையும் கூட்டிக் கொண்டு வந்துவிடுவாள் போலிருந்தது எருமையை உயிரோடு உரித்துக் கொண் டிருந்த வாலிபர்கள் மனக்கண் முன் வந்து நின்றார்கள்.

கொண்டது. என்னையறியாமல் என் கால்கள், கால் போன போக்கில் ஓடத் தொடங்கியது. எவ்வளவு நேரம் ஓடினேன் என்று எனக்கே தெரியவில்லை. மாலை மங்கி இருள் சூழ்ந்து கொண்டது.

சோர்ந்து போய் ஒரு திட்டுப் பாறையின் மேல் சாய்ந்த போதுதான் பார்த்தேன். பளிச்சென்று நீலமாய்... நீல நிறத்தில் ஒரு நீலக்கல். ஆறடி நீளத்தில் மூன்றடி அகலத்தில் சதுர வடிவத்தில் பாறையின் மேல் சாய்ந்து கிடந்தது.

அதனருகில் சென்று வியப்புடன் பார்த்தேன். பளபளவென ... ஒரே நீலமாக இருந்தது. அதைத் தொட்டுப் பார்த்தேன்.

''யாரது?''

குரல் கேட்டு, திடுக்கிட்டவனாய் சுற்று முற்றும் பார்த்தேன். ஒருவரையும் காணவில்லை.

''பாழுங்கிணற்றிலிருந்து வந்தவனா?''

மறுபடியும் அதே குரல். சுற்று முற்றும் பார்த்தேன். சந்தேகமே இல்லை. குரல் நீலக் கல்லிலிருந்துதான் வந்தது. வியப்புடனும் திகைப்புடனும் நீலக் கல்லைக் கூர்ந்து பார்த்தேன்.

''ஆட்டுக்குட்டி கைக்குஅகப்படாமல் ஓடுகிறதே என்று, ஆட்டுக்குட்டியை துரத்திக் கொண்டு வந்த போது நான் பாழுங்கிணற்றில் இடறி விழுந்து விட்டேன். மயக்கம் தெளிந்து பார்த்த விட்டதைப் போலிருந்தது.

இரண்டு தினங்களுக்குப் பிறகுதான் பாழுங் கிணற்றின் வழியாக சறுக்கி வந்து, பூமிக்குள் இருக்கும் இந்த கிலோகத்தில் சேர்ந்து விட்டோம் என புரிந்தது.''

''பூமிக்குள் ஒரு உலகமா?'' வியப்பு மேலிடக் கேட்டேன்.

''ஆமாம். பூமியின் மேற்பரப்பில் நாம் எப்படி வாழ்கிறோமோ...அதே மாதிரி பூமியின் உள் பகுதியான இந்த கிலோகத்திலும் நம்மைப் போலவே மனிதர்கள் வாழ்கிறார்கள்.

ஆச்சரியமாக இருக்கிறதே!

''இந்தக் கிலோகத்தை நன்றாக சுற்றிப் பார். எத்தனையோ ஆச்சரியங்கள் உனக்காகக் காத்திருக்கும். ஆனால் ஒரு விஷயம். இந்தக் கிலோகத்துப் பெண்கள் ஆடையில்லாமல் நிர்வாணமாக இருக்கிறார்களே என்று, வெறி கொண்டு...எந்தப் பெண்ணையும் பலாத்காரம் செய்து கற்பழித்து விடாதே!''

பகீரென்றது எனக்கு. ''ஏன்...ஏன்?'' பதட்டத்துடன் நீலக் கல்லைப் பார்த்துக் கேட்டேன்.

''பெண்ணை பலாத்காரம் செய்து கற்பழிப்பவன் ... கற்பழித்த இரண்டு மணி நேரத்தில் என்னைப் போல் ஆகி விடுவான்.''

எனக்குத் தலை சுற்றியது.



## பிரதம மந்திரி ம.பொ.சி!



''நானும் மற்ற அரசியல் தலைவர்களும் சென்னைச் சிறையில் காவலில் இருந்த போது பார்லிமெண்ட் (மாக் பார்லிமெண்ட்) நடத்தினோம். ஒருமுறை நானும் மற்றொரு முறை இந்நாள் இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பி. இராமமூர்த்தியும் 'பிரதம மந்திரியாக' இருந்து அந்த மாக் பார்லிமெண்ட்டை நடத்தினோம். சிறையில் இருந்த சில கைதிகள்தான் பார்லிமெண்ட் உறுப்பினர்கள்!''

விழா ஒன்றில் ம. பொ. சி. பேசியது.
கேட்டவர் : —சங்கரிபுத்திரன்


ங்க பேர் என்ன?
ங்காரமா? நான்
ன்றென்றும் உங்
ளுக்கு கடன்
பட்டிருக்கேன்.
இன்று ரொக்கம்.
நாளை கடன். ரொக்
கமாவே படுங்க.
இந்த சேரை ஆட்டிப்
படைக்கிற தன்யத்தை
ஒழிக்கிறேன்
இருங்க.


சிங்காரி அமர்ந்து...
ஜெய் விஜய் மோகனை
பிரதாப் அடங்கிடு
சைத்தானே! தேவிப்ரியா
பூரணிமா சாரதா
ஒடுங்கிடு சைத்தானே!
என்னாங்க
சினிமா
நடிகை
பேரா
சொல்றீங்க!
சினிமான்னு
அலறுது
உள்ள
பேய் இது!


கொஞ்சம் கழித்து....
என் உயிரையே
காப்பாத்தியிருக்
கீங்க! உங்களுக்கு
நான் என்ன கைமாறு
செய்யப்போறேன்.
மகேஷ்குமா
ருக்குப் பதிலா
ஒரு புதுமுகம்
தேடறீங்க.
அதானே.


அட! அதெப்படி
உங்களுக்குத்
தெரியும்?
எனக்குத்தான்
முக்காலமும்
தெரியுமே...
பரங்கிமலையிலே
ஒரு சாமியார்
இன்னும் நிறைய
வித்தை சொல்
லித் தந்திருக்
கார். உதாரண
மா ஓடிக்கிட்
டிருக்கிற
இந்த ஃபேனை
இங்கேருந்தே
நிறுத்த முடி
யும். ஹெல்ப்
டெவில்!


ஃபேன் நிற்கிறது...
மின்சாரம்
வென்றான்னு
பட்டம் தர
லாம் போலி
ருக்கே....
நான் தீர்மானிச்
சுட்டேன். அதைவிட
பெரிய சூப்பர் ஸ்டார்
பட்டம் தரப் போறேன்.
மிஸ்டர் சிங்காரம்,
உங்களை பெரிய
ஸ்டார் ஆக்கப்
போறேன். என்ன
சொல்றீங்க?
வாரி அடுத்த வாரம்



ராஜேஷ் குமார்

செக்கைப் பணமாக மாற்றி, ரூபாய் இருபதாயிரத்தை, ப்ரீஃப் கேஸில் வைத்து மூடியபடி, பாங்க்கை விட்டு வெளியே வந்தோம். நானும், அக்கௌண்டண்ட் நீலதயாளனும்.

அன்றைக்குச் சம்பள தினம். மதியத்திற்குள் ஆபீஸ் ஊழியர்களுக்குச் சம்பளத்தை பட்டுவாடா செய்யச் சொல்லியிருந்தார் மானேஜிங் டைரக்டர் சுந்தர்ராஜ்.

ப்ரீஃப்கேஸை அணைத்துக் கொண்டு, ஸ்கூட்டரின் பில்லியனில் நான் உட்கார்ந்திருக்க, நீலதயாளன் படு உற்சாகமாய் ஸ்கூட்டரை காந்திபுரம் இர
கட் ரோட்டில் விரட்டிக் கொ
டிருந்தான்.

"அடேடே!" — கையைச் சொடு
வேன்.

"என்னடா?"

"பாங்க்கில் செலானை நிர
வதற்காக, ஒருத்தர் பேனா கேட்டா
கொடுத்தேன். திரும்ப வாங்கிக்க ம
துட்டேன்..."

"நல்ல மறதிடா உனக்கு? என்
பேனா குடுத்தே? பால்பாயிண்ட்தானே

"ஆமா...!"

றியுது போ...! ஒரு ரூபாதானே...? வாங்கிக்க..!"

ாக்கு மனசு ஆறவில்லே. பாழாய்ப் ல இந்த மறதி கடந்த ஒரு மாத மாய் என்னைப் பாடாய்ப் படுத்து . என் மனைவி தனு இந்தப் பத்து ாய் ஒரு 'நெய்ல் பாலிஷ்' குப்பி கிக் கொண்டு வரும்படி சொல் ...தினசரி ஸ்டேஷனரி மார்ட் யாகத்தான் ஆபீஸ் முடிந்து க்குப் போகிறேன். நெய்ல் பாலிஷ் க மட்டும் ஞாபகம் வருவதேயில்லே. தைக்குப் போட வேண்டிய ஜட்டி கையில் வைத்துக் கொண்டே, மணி நேரமாய் ஜட்டியைத் தேடி ாரியை அலசு அலசு என்று ினன். எழுதி வைத்த தபால்களே வாரம் கழித்து சாவகாசமாய் ஸ்ட் செய்தேன். எல்லாம் மறதி!

ந்த மறதியும் வியாதி மாதிரிதானும்!

ாக்டர் நடராஜனே இன்றைக்குச் ந்திரம் கண்டிப்பாய் போய்ப் க்க வேண்டும்.

ஒரு பிரண்ட் கோர்ட்ல இருக்கார். அவரைப் பார்த்து ஒரு வார்த்தை பேசிட்டு வந்துடறேன். அதுக்குள்ளே நீயும் சாப்டுட்டு ஸ்கூட்டர்கிட்ட வந்து நில்லு...!"

"உம்" தலையாட்டினேன். அவன் சரியான பிடிவாதக்காரன். சென்னுல் சொன்னதுதான். "ப்ரீஃப் கேஸை என் கிட்ட கொடு. நான் வெச்சுக்கறேன்" தினதயாளன் என்னிடமிருந்து ப்ரீஃப் கேஸை வாங்குவதற்காகக் கையை நீட்டினுன்.

"இல்லே...நானே வெச்சுக்கறேன்..." நான் மறுத்தேன்.

"வேண்டாம்...ஹோட்டல்ல கூட்டம் ஜாஸ்தியா இருக்கு...எவனுவது தட்டிடப் போருன்..."

"அதெல்லாம் நான் பார்த்துக்கறேன். நீ போய் உன்னுடை ஃபிரண்டை பார்த்துட்டு வாடா...! போ...போ...!"

"சொன்னுக் கேளுடா!" ப்ரீஃப் கேஸைப் பிடுங்க முயற்சித்தான்.

நான் விடவில்லே.

# ரூபாய் இருபதாயிரத்துடன் ஒரு பணப்பெட்டி

ஸ்கூட்டர் செஷன்ஸ்கோர்ட் பக்க வீற—அதன் திருப்பத்தில் நின் ந்த ஹோட்டல் அன்னபூர்ணு என் ணில் பட, தயிர்வடை சாப்பிடும் ச எழுந்தது.

டேய்...தயாள்! ஸ்கூட்டரை ஒட்ட த முன்னுடி நிறுத்து. இறங்கி வடையும், காப்பியும் சாப்டுட்டுப் லாம்..."

னக்கு வேண்டான்டா...! காலேல ந்து வயிறு சரியில்லே...நீ வேணும்னு டு..." தினதயாளன் ஸ்கூட்டரை ந்தினுன்.

ன் கோபமாய்க் கேட்டேன். "நான் டும் சாப்பிட, நீ அதைப் பார்த் உக்காந்திருக்கப் போறியா?" தயாளன் அவசரமாய் மறுத்தான்.

பதமாய் ஊறிய இரண்டு தயிர்வடையும், சூடாய் ஒரு காப்பியும் வயிற்றுக்குள் போனதும் உலகமே ஒரு இன்ப புரியாய்த் தோன்றியது எனக்கு.

கர்ச்சீப்பால் வாயைத் துடைத்தபடி மேஜைக்குக் கீழே என் கால்களுக்கு இடையே இருந்த ப்ரீஃப் கேஸை எடுக்கக் குனிந்தேன். அதிர்ந்தேன்.

காணவில்லே.

மேஜைக்குக் கீழே குனிந்து பார்த்தேன்.

மொத்தப் பரப்பும் காலியாக இருந்தது. நான் வியர்க்க ஆரம்பித்தேன்.

பக்கத்து மேஜையில் அமர்ந்தபடி, முந்திரி பக்கோடாவை மென்று கொண்டிருந்த ஒரு பொய்ப் பல் கிழவரிடம்

"ஸார்...! இங்கே மேஜைக்குக் கீழே ஒரு ப்ரீஃப் கேஸ் வெச்சிருந்தனே, பார்த்தீங்களா?"

"பாழ்க்கலியே...தம்ம்பி!"

எனக்குப் பரிமாறிய சர்வரைக் கேட்டேன். உதட்டைப் பிதுக்கிக் கொண்டே "ஒரு மசாலா தோசேய்!" என்று பின்பக்கம் பார்த்துக் குரல் கொடுத்தான்.

நான் பதட்டப்பட ஆரம்பித்தேன். மெல்ல . மெல்ல...

அக்கம் பக்கத்து மேஜைகளுக்கு விஷயம் பரவ, எல்லோருமாய் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். பல தொனிகளில் விசாரிக்க ஆரம்பித்தார்கள்.

"ப்ரீஃப்கேஸ் என்ன கலர் ஸார்?"

"பணம் எவ்வளவு வெச்சிருந்திங்க?"

"உங்க டேபிள்ல சாப்டுட்டு கடைசியாப் போன ஆசாமியைப் பார்த்தீங்களா?"

"ப்ரீப் கேஸை பொறுப்பா பார்த்துக்க வேணுமா ஸார்?"

என் கண்களில் நீர் தளும்பப் பார்த்தது. கனியாய் இருபதாயிரம் ரூபாய்.

ஹோட்டல் மானேஜர் அவசர அவசரமாய் என்னை நெருங்கினார்.

"போலீசுக்குப் போன் பண்ணட்டுமா ஸார்?"

"உம்" என்றேன்.

ஹோட்டல் மானேஜர் டெலிபோனை நோக்கி நகர்ந்தபடியே கூட்டத்தைப் பார்த்துச் சொன்னார். "போலீஸ் வர்ற வரைக்கும் யாரும் வெளியே போகாதீங்க ... அவங்கவங்க டேபிள் உட்காருங்க."

ஹோட்டல் முழுக்க ஒரே சல பரபரப்பு.

மானேஜர் டெலிபோனை நெ அதே நேரம்—

ஹோட்டல் வாசலில் — கூடி கூட்டத்தின் கடைசியில்-தினதயாள தலைதெரிந்தது. "டேய்! தயாள் சொன்னமாதிரியே ஆயிடுச்சடா! கேஸை எவனோ தட்டிட்டுப் பே டான்!" அவனைப் பார்த்துக் கத்தி

அவன் முகம் குழம்பியது. "என் சொல்றே?" கூட்டத்தைப் பிளந் என்னை நெருங்கினான். "நிஜ தாண்டா சொல்றேன்...ப்ரீஃப் மேஜைக்குக் கீழே வெச்சுட்டு..." பேசி முடிப்பதற்குள் அவன் அவசர குறுக்கிட்டான்.

"ஃபூல் என்னடா உளர்றே? ப் கேஸ் என்கிட்டதாண்டா இரு உன்கிட்டேயிருந்து ப்ரீஃப் கேஸை வந்தமா பிடுங்கிட்டுப்போனேனே, துட்டியா?"

கையில் ப்ரீப்கேஸோடு என்னை நெ கினான் தினதயாளன்.

நான் மனசுக்குள் தீர்மான மூன்று முறை சொல்லிக் கொண்டே இன்றைக்குச் சாயந்தரம் டா நடராஜனை மறக்காமல் போய்ப் பா வேண்டும். இன்றைக்குச் சாயந் டாக்டர் நடராஜனை மறக்காமல் போ பார்க்க வேண்டும்.

இன்றைக்குச் சாயந்தரம்...

என்ன சொல்லிக் கொண்டிருந்தே

---



கல்கி கிருஷ்ணமூர்த்தி எழுத்துத் துறையில் ஈடுபட்ட காலத்தில் ஒரு பத்திரிகை அலுவலகத்தில் வேலை பார்த்து வந்தார். அப்போது மாதம் தவறாமல் தமது சம்பளத்திலிருந்து இருபத்தைந்து ரூபாயை எடுத்து மணியார்டர் செய்து விடுவார். யாருக்கு அவருக்கு ஆரம்பப் பள்ளி ஆசிரியராக இருந்த ஓர் ஏழை ஆசிரியருக்கு!

—சென்னை பல்கலைக்கழகத்தில் கா

றந்தகாலச்
சரித்திரம்
ழுந்து வந்தது.
த்துவம் தன்னோடு
ர்க்கித்துக்
கொண்டது.
லக்கியத்தின்
ார்த்தைகள்
ாசனை பெற்றன.

# கவி ராஜன் கதை

பிற்பகல் தொடங்கும்
பெரிய விவாதங்கள்
முன்னிருட்டு
வந்தாலும்
முடிவதில்லை;
அவர்களின்
கண்களில் அடித்த
ஞான வெளிச்சத்தில்
இறந்து விட்டதோ
இருட்டு?
பாரதிக்குள்
கொதித்துக்
கொதித்துக்
கொப்பளித்த
உணர்ச்சி
வாமை மாத்தில்

விழுந்த
மழைத்துளியாய்
வழியத்தொடங்கியது.

அரவிந்தரின்
வேதாந்த விசாரணை
பாரதியின் நெஞ்சில்
பௌர்ணமி
கிரணங்களைப்
பரப்பியது.

பாரதியின்
உணர்ச்சிக் கதவுகளைச்
சாத்திவிட்டு
ஆன்மக் கதவுகளை
அரவிந்தர் திறந்தார்.

அவனது
பழைய ஞானத்தின்
பரிமாணங்கள்—
புதிய பரிணாமத்தில்
பொலிந்தன.

தனக்குள்ளேயே
முத்துக் குளிக்க
முனைந்தானவன்
நெஞ்சுக்குள்
ஒரு யாக தாகம்!
அவனது தனிமைக்கு
அவனையே தின்னும்
பசி!

எழுது எழுதென்று
இரத்த அணுக்கள்
சப்தித்தன.

தனக்குள் தான்
கரைந்து
தன்னையே தேடும்
தவம் செய்தான்.

அடிக்கடி மனம்
ஆன்ம விசாரணைக்கு
ஆசைப்பட்டது.

மனக்கண்ணில்—ஒரு
வேதாந்த வானம்
விரிந்தது.

மனதுக்குச் சிறகு
முளைத்த
அந்த
வசந்த வருஷத்தில்
மாறு வேடத்தில்
வந்தார்
ஒரு மகரிஷி.

சூரிய மரணத்திற்காய்
பூமி
கறுப்பாடை அணியும்
ஒரு
முன்னிருட்டில் அவர்
ஒரு
முசல்மான் போல்
வந்தார்.

கதவு தட்டினார்:
மண்டபம்
ஆச்சாரியார்
மருண்டார்.
வந்தவரோ—
குறிப்பு மொழியால்
தன்
வேஷத்துக்குள்ளிருந்த
விலாசம் சொன்னார்.

வ.வே.சு. அய்யரின்
வருகை—
தேச
பக்தருக்கெல்லாம்
திருவிழாவானது.

பாரதியோ
ஆனந்தத்தின்
தத்துப் பிள்ளை போல்
சித்தங்களித்தான்!

தன் தோள்கள் இனி
நான்கல்ல—
ஆறென்று சொல்லி
ஆடினான்.

—வளரும்

கவிஞர் வைரமுத்து

# அருணைச் சுற்றி 4 பெண்கள்

## உமா கல்யாணி

நெவர். என்னைப் புறக்கணிக்க உங்களுக்கு ஒரு கோணமும் கிடையாது. ப்ளீஸ் ... இப்படிப் பாருங்க. உங்க வித்யா வந்திருக்கேன். ஆமா ... உங்களோட வித்யாவேதான்...." என்றபடி, டேபிள் விளிம்பில் சின்ன உருவமாய் வந்து நின்றபடி ... என்னைப் பார்த்தபடி, சிரித்தபடி ... பெரிதாய்ப் ... பெரிதாய் வளர்ந்து கொண்டே போய் மேலே மின்விசிறியைக் கூட இடிக்கிறாற் போல...!

"வித்யா, நீ சொன்னது சரிதான். உன்னை எந்தக் கோணத்தை வைத்தும் புறக்கணிக்க முடியாது..."

முனகுகிறேன் நான்.

"நெவர் வித்யா. உன்னை மறக்கத்தான் முடியாது. மறக்கப்படுகின்ற அம்சங்கள் எதுவும் உன்னிடம் இல்லை. உள்ளும் புறமும் உன்னிடம் ஒரு கவர்ச்சிதான். ஒருவகையான ஈர்ப்பேதான். உன்னையா ... நானா ... மறப்பதா? நெவர்! நெவர்!

முனகுகிறேன்.

இந்த முனகலை எள்ளும் விதமாக ஒரு சலனம். எங்கிருந்து? யார்?

புஷ்பிக்கும் போது மெல்ல அவிழ்கிற இதழ்களாக, அதன் மணமாக, ஒரு புஷ்பமாகவே!

கண்களைப் புளகிக்க வைத்து நெஞ்சை நிறைக்கும் அழகியாய்!

"இவளை ... இவளையா விட்டுவிடுவது நெவர். புஷ்பாவை எப்படி மறப்பது தாம்" முனகுகிறேன்.

"என்ன முணுமுணுக்கிறீங்க அருண்

மணிக் குருவியின் சங்கீதம் போல புஷ்பா கேட்கிறாள்.

"ஒன்றுமில்லை."

"நான் அறியக்கூடாத ரகசியம் என்ன கூட உங்களுக்கு உண்டா? அப்படி தானா நாம் இதுவரை பழகிவந்த பழக்கமெல்லாம்.'.

கண்களே சிரிக்கின்றன.

எனக்கு எல்லாமே மறந்து போகிறது

புஷ்பாவே பூரணமாய் ஆக்ரமிக்கிறாள்.

"நம்முள் ஏது ரகசியங்கள் புஷ்பா?" என்று வழிந்தேன் நான்.

மினிச் சிரிப்பில் புஷ்பா மலர்கிறாள் புஷ்பச் சரங்களாய் அவளின் இரு கரங்களும் எனது தோள்களில் தவழ வரும் போது, கொக்கியிட்டு இழுத்தாற் போன்று பின்புறமிருந்து நகைப்பு!

நழுவி விழுந்த புஷ்பக் கூடையாய் உருண்டு மறைந்து விட்ட ஆப்பிள் கனியாய், அவளைக் காணோம்.

கட்கிறது.

சிகரெட்டை அப்படியே ஆஷ்ட்ரேயில் பாட்டு விட்டு தலையை மட்டும் திருப் பி பார்க்கிறேன்.

உதயா!

பனிமலர் போல!

பனிப் பரப்பில் விழுந்த சிவப்பு ராஜாப் போல.

சிரித்தபடி நின்றிருந்தாள். வைத்த ண்ணை மீட்க முடியவில்லை.

"என்னைப் பார்த்ததும் எல்லாமே றந்து போயாச்சா?"

"ஆமாம் உதயா!"

அவள் சிரித்தாள். ஏளனச் சிரிப்பு.

"ஏன் இப்படிச் சிரிக்கிறே உதயா?"

"பாவம் அந்த வித்யாவும் புஷ்பா ம்" என்றபடி சிரிக்கிறாள்.

நறுக்கென்று ஒரு குட்டு விழுகிறது னக்கு.

மறக்கப் பண்ணுகிறது.

"ஆமாம், இந்த உதயாவை எப்படி மறந்தேன்?"

"அதுதானே, எப்படி மறந்தீர்கள்? எனது அருண் என்னை மறக்க முடியுமா?"



என்னை நோக்கி, ... உதயா வருகிறாள். நான், அவளை நோக்கி...அவளையே நோக்கிப் போகிறேன்.

நாலுதிசையிலிருந்தும் சிரிப்பொலிகள்!

வித்யா, புஷ்பா, உதயா ... அடே நாலாவதாக ப்ரேமா!

இணைந்த சிரிப்போசைகள்!

எவளை ரசிப்பேன்?

யாருக்கு வாக்களிப்பேன்?

சிரிப்புக்கள் அடங்கிப் போயின. என்னிடம் எதிர்பார்ப்பு! என் பதிலுக்கான விழைவு!

எனது இதயம் யாருக்கு என்கிற தாபமும் மின்ன விழிகள் ஆர்வமாய் மின்னின.

நான் நால்வரையும் நோக்கினேன்.

ஒரே சீரான சிரிப்பு!

நால்வருமே இதை ரசிக்கவில்லை.

நால்வருக்குமே இது பிடிக்கவில்லை.

எப்படி முடியும்?

அவர்களுக்கோ இது போராட்டம்.

எனக்கோ பெருஞ் சிக்கல்.

இந்தப் போராட்டத்தில் தத்தமக்கே சாதகமான பதில் கிடைக்க வேண்டும் மென்று அனைவரும் எதிர்நோக்கியிருக்க, நான் திண்டாடலானேன்.

பிரச்னை சிரித்துக் கொண்டிருந்தது.

எப்படித் தீர்க்கப் போகிறேன்? எவளை நான் செலக்ட் பண்ணப் போகிறேன்?

சமமே. எவளை நான் ஏற்க முடியு என்று குழம்பாமல் எவளையும் நா ஏற்கலாம்.

ஆனால் அந்த நால்வருமே ஒரே சீரா என்னை விரும்புகிற பட்சத்தில் எவ முதலிடத்தில் வைப்பது?

சிந்திக்கிறேன்.

"ஆ ... ஐடியா!"

துள்ளிக் குதித்தேன்.

நால்வருக்கும் ஒரு டெஸ்ட் வைப்பது எவள் வெல்கிறாளோ அவளைத் தேர் பண்ணுவது.

என்ன டெஸ்ட் வைக்கலாம்!

ஆளுக்கு ஒரு கேள்வி! எவள் சரியா பதிலைத் தருகிறாளோ, அவளை செலக் பண்ணலாம்.

கேள்விகள் தயார்.

நாளை அலுவலகம் போனதுமே முத வேலையாய் ஆளுக்கு ஒரு உறையை கொடுத்து விடை எழுதச் சொல் வேண்டும்.

முதலில் எதிர்ப்பட்டவள் ப்ரேம தான். விழிகளால் அழைத்தே ஓடோடி வந்தாள்.

"ஒரு சின்ன டெஸ்ட் ப்ரேமா!"

"டெஸ்ட்டா? எதுக்கு அரு டெஸ்ட்?" கொஞ்சினாள்.

"ஒரு செலக்ஷனுக்கு."

"என்ன செலக்ஷன் அருண்?"

"அது டெஸ்ட் எழுதறப்ப தெரியும்

..."சொல்லுங்க அருண் ... ப்ளீஸ்"



"அந்தக் கடையில் டி.வி. வாங்க ஏன் இவ்வளவு கூட்டம்?"

"ஆன்டெனாவுடன் இலவசமா இடி தாங்கிக் கம்பியையும் இணைச்சுத் தருங்களாம்."

## ரீகனின் சட்டை



அமெரிக்காவில், சுபிட்சம் குறையக் குறைய பிரஸிடெண்ட் ரீகன் ஆட்சிக்கு எதிர்ப்பு அதிகமாகிக் கொண்டு வருகிறது. பணக்காரர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரஸிடெண்ட் ரீகன் இப்போழுது துப்பாக்கி ரவைகள் பாய முடியாத சட்டையைப் போட்டுக் கொள்கிருர். இதுவரை பதவி வகித்த அமெரிக்கா பிரெஸிடெண்டுகளுக்குள்ளே ரீகனுக்குத்தான் பாதுகாப்பு ஏற்பாடுகள் அதிகம்.

—பார்வதி நாகராஜன்

ஊஹூம். நீயாகத் தெரிஞ்சுக்க. பதான் இன்ட்ரஸ்ட் அதிகம்'' என்று சிமிட்டினேன். உறையை நீட்டினேன்.

செல்லமாக உதட்டைச் சுளித்தபடி ந்தேரின் உலாவாகப் போனுள் ரமா.

என்ன பதிலை எழுதுவாள்?

புஷ்பா வந்தாள்,

உறையை நீட்டி அனுப்பி வைத்தேன்.

அப்புறம் வித்யா. கடைசியில் உதயா.

புதிராகப் பார்த்தபடி விளுவாகப் போனுர்கள்.

டெஸ்ட் எழுதப் போவது அவர்கள். திக்' என்று அடித்துக் கொள்வதோ து இதயம். எவளுக்கு எந்தக் ள்வியோ? என்ன பதிலை எழுதுவார் ளா?

ப்ரேமா வந்தாள். முகமெல்லாம் ரிச்' பதிலைக் கொடுத்து விட்டு என்னை ஆழமாகப் பார்த்து விட்டுப் போனுள்.

எல்லோரும் தந்து விட்டார்கள். ஆவலுடன் உறைகளைப் பிரித்தேன். லில் ப்ரேமாவின் பதில். அப்புறம் பாவின் பதில். அதன் பிறகு உதயா பதில்.

எல்லாமே சரியான பதில்கள்தாம். கேள்விக்கேற்ற பதில்கள்தாம்.

ஆனுலும் இவை ஒன்றும் என் நெஞ்சைத் தொடவில்லையே!

சரியான பதில்களானுலும் சராசரிப் பதில்களாயிற்றே!

இன்னும் ஓர் உறை இருக்கிறது.

வித்யாவின் பதில் அதில்தான் இருக்கிறது. அதுவாவது வித்தியாசமான தாய்...நெஞ்சைத் தொடுகிற மாதிரி அமைந்துவிடாதா?

ஆவலும், நம்பிக்கையும், அவநம்பிக்கையும் ஊடாட உறையைப் பிரித்தேன்.

சற்று நீளமான பதில்.

அப்படி என்னதான் எழுதியிருக்கிருள்!

''அருண்! நீங்கள் மன்மதனுக மாறிஞல் நான் யாராக மாறுவேன் என்று கேட்டிருந்தீர்கள். முதலில் இந்தக் கேள்வியே எனக்குப் பிடிக்கவில்லை. நீங்கள் நீங்களாய் இருப்பதையே நான் விரும்புகிறேன். நானும், நானுகவே ... வித்யாவாகவே இருக்க விரும்புகிறேன். இப்படியெல்லாம் மாறி, வேறெவரது அடையாளங்களாக ... அல்லது குறியீடுகளாக வாழ எண்ணுவது அபத்தம் என்று எண்ணுகிறவள் நான். நான் விரும்புவது அருணைத்தான். மன்மதனை அல்ல. ஏனெனில் நான் வித்யா. ரதி அல்ல. உதாரணங்கள் நமக்கு வேண்டாம். ஏனெனில் நாமே உதாரணங்களாய் ஆகவேண்டும். நாமே உவமைகளாய் ஆகவேண்டும். நான் உங்களை அருணுக மட்டுமே பார்க்க விரும்புகிறேன். வேறு எவராகவும் அல்ல.''

—வித்யா

என் மனம் நிறைகிறது.

செலக்ட்! 

# ஜங்ஷன்

தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் ...
நூற்று ஐம்பது ரூபாய் முன்பணமாக வாங்கிக் கொண்டு
குலுக்கல் முறையில் வீடுகளைத் தருகிறார்கள். வீடு
கிடைக்காதவர்களுக்கு அவர்கள் கட்டிய முன்பணத்தை
திருப்பிக் கொடுப்பதில் தமிழ்நாடு வீட்டு வசதி வாரிய
துக்கு இரட்டிப்பு வேலை ஆகிறது. ஆகையால் இன
வீடுகளுக்குத் தகுந்தாற்போல்—குறைந்த அளவு பணமே
சுமார் 25, 50, 75 என்று வசூலிக்கப் போகிறார்களாம்
வீடு கிடைக்காதவருக்கு — இந்தப் பணத்தைப் பிறகு
திருப்பித் தருவதா, வேண்டாமா என்று யோசித்து
வருகிறார்கள்.

ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி தேவஸ்தானத்திற்கு
சொந்தமான கொத்தவால்'சாவடியில் சைக்கிள் பிரவேச
கட்டணமாக ஒவ்வொரு சைக்கிளுக்கும் 25 காசு வசூலி
கிறார்கள். அந்த சைக்கிள் கூப்பனில் அறிவி
பொன்றையும் வெளியிட்டிருக்கிறார்கள். "மார்க்கெட்
உள்ளே விடப்படும் சைக்கிள்கள் காணாமற் போனாலோ
அவற்றுக்கு ஏதாவது சேதம் ஏற்பட்டாலோ அதிகாரிகள்
உத்தரவாதம் இல்லை." என்பதே அந்த அறிவிப்
சைக்கிள்களுக்கு உத்தரவாதம் தரத்தானே அங்கங்கே
சைக்கிள் ஸ்டாண்ட் வைத்திருக்கிறார்கள். காசையு
வசூலித்துக் கொண்டு சைக்கிளுக்கு உத்தரவாதமு
தர முடியாதென்றால் பின் எதற்காகவாம் இந்த சைக்கிள்
ஸ்டாண்ட்?

சென்னை, உட்லண்ட்ஸ் ஹோட்டலில் 'இப்ராகி
என்னும் மலையாள மந்திரவாதியைச் சந்தித்தே
"பேய்களைக் கண்டு கொள்வதில் நாய்கள் தா
முதலிடம் வகிக்கின்றன என்று சொல்கிறார்களே. இ
பற்றி உங்கள் கருத்து என்ன?" என்று அவரிட
கேட்டேன்.

"நாய்களின் கண்களைவிட—நாய்களின் மோப்ப சக்
மிகவும் அபாரமானது. பேய்களின் உருவத்தை
தாங்கி வரும் காற்றின் வாசனையைக் கண்டு கொண்டே
அவை குரைக்க ஆரம்பிக்கின்றன. இதைப் பல சமய
களில் நானே நேரில் பார்த்திருக்கிறேன்" என்றார்.

செய்திப் பத்திரிகைகளை வெட்டி ஒட்டித் தயாரி
நவீன பாணி ஓவியங்களின் கண்காட்சி ஒன்
சென்னை லலித் கலா அகாடமியில் கலெக்டர் திரு
கரியாலி குத்து விளக்கேற்றி திறந்து வைத்த
வழக்கத்துக்குமாறாக, கண்காட்சி ஓவியங்களைச் சுற்
பார்த்துவிட்டு வந்த பிறகே குத்துவிளக்கேற்றித் திற
வைத்திருக்கிறார். ஓவியங்களுக்குச் சொந்தக்கா
எம். கே. முத்துசாமி. சேலத்தைச் சேர்ந்த இந்த ஐம்
வயதுக்காரர் அடைந்த வெற்றிகளைப் பட்டியல் போ
இங்கே இடமில்லை. ஆகவே Full stop!



எம். கே. முத்துசாமி

த. கி. இராம

# பாக்லாந்து டயரி

தென் அமெரிக்காவின் தெற்குக் கோடியிலிருந்து கிழக்கே 300 மைல் தொலைவில் ஒரு வேர்க்கடலையின் மேல் தோலை இரண்டாகப் பிரித்து எதிர் எதிரே வைத்தது போல் அமைந்திருக்கின்றன பாக்லாந்து தீவுகள். சுற்றிலும் இருநூறுக்கும் மேலான குட்டித்தீவுகள். பாக்லாந்தின் மொத்த ஜனத்தொகை 1800 தான். இவர்கள் அத்தனை பேரும் ஆங்கிலம் பேசிக் கொண்டு ஆறு லட்சம் ஆடு வளர்க்கிறார்கள். இத்தீவில் தொழில். பொழுதுபோக்கு எல்லாமே ஆடுதான். அட்லாண்டிக் பெருங்கடலின் மிக மோசமான பகுதி எனக் குறிப்பிடப்படும் இடத்தில் அமைந்துள்ள பாக்லாந்தில் ஒரே ஒரு டெலிபோன்தான் இருக்கிறது. புற்கள் மட்டுமே இந்தத் தீவின் இயற்கைச் செல்வம். மரம் வளர்வதில்லை.

16ம் நூற்றாண்டில் சீனர்கள் சிலரால் கண்டுபிடிக்கப்பட்ட இந்தத் தீவுகளில் முதல் காலடி பதித்தவர்களை 'பெங்வின்' பறவைகள் வரிசையாக நின்று வரவேற்றனவாம். முதலில் இங்கே வாழ ஆரம்பித்தவர்கள் பிரெஞ்சுக்காரர்கள். 18ம் நூற்றாண்டில் ஸ்பெயின் இத்தீவை வாங்கியது. ஆனால், கடைசியில் இங்கு குடியேறியவர்கள் பிரிட்டிஷ்காரர்கள்.

இந்தத் தீவுகள் யாருக்குச் சொந்தம் என்ற தகராறு இருநூறு வருடங்களாகவே இருந்து வருகிறது. 1828ல் அர்ஜென்டினா ஒரு கவர்னரை அங்கே நியமித்தது. ஆனால் ஐந்து வருடம் கழித்து ஒரு பிரிட்டிஷ்படை அங்கிருந்த அர்ஜென்டின் மக்களை வெளியேற்றி விட்டது. 'தீவு எங்களுக்கே சொந்தம்' என்பது அர்ஜென்டினாவின் வாதம். 'பாக்லாந்து பிரிட்டனுக்கே' என்பது பிரிட்டிஷ் வாதம். நூற்றைம்பது ஆண்டுகளாகவே இந்த குடுமிப்பிடிச் சண்டை!

இங்கே எண்ணெய் கிடைப்பதாகச் சமீபத்தில் தெரிந்ததும் இரண்டு நாடுகளுக்கும் சபலம் அதிகமாயிற்று. அமைதியாக இருந்த அட்லாண்டிக் ஏப்ரல் 2ம் தேதி முதல் போர்க் கப்பல்கள் விடும் அனல் காற்றை சுவாசிக்க ஆரம்பித்திருக்கிறது. தகராறு வளர்ந்து வந்த விதத்தை ஒரு டயரியாக எழுதினால்...

> எல்லா ஆச்சரியங்களுமே மூன்றுநாளைக்குத்தான்! அதற்குமேல் அவை ஆச்சரியங்களாயிருப்பதில்லை!

ஏப்ரல் 2

பாக்லாந்து, தெற்கு ஜார்ஜியா, தெற்கு ஸாண்ட்விச் தீவுகளைத் தனது ராணுவப் படைகள் கைப்பற்றி விட்டதாக அர்ஜெண்டினா அரசு அறிவிக்கிறது. அந்த நாட்டுடன் தான் கொண்டிருந்த தூதரக உறவுகளை பிரிட்டன் முறித்துக் கொள்கிறது.

ஏப்ரல் 3

25 ஆண்டுகளுக்கு முன் சூயஸ் கால்வாய் தகராறின்போது கூட்டப்பட்ட விசேஷ பார்லிமெண்ட் கூட்டத்திற்குப் பிறகு இப்போது மீண்டும் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் கூடுகிறது. 'பாக்லாந்தை நாங்கள் மீண்டும் அடைந்தே திருவோம்' என்று பிரதமர் தாட்சர் அறிவிக்கிறார். பிரிட்டனிலிருக்கும் அர்ஜண்டினா சொத்துக்கள் முடக்கப்படுகின்றன. அர்ஜெண்டினாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருட்களுக்கு அளிக்கப்பட்டு வந்த கடனுதவி ரத்து செய்யப்படுகிறது.

ஏப்ரல் 4

அர்ஜெண்டினா துருப்புகள் பாக்லாந்திலிருந்து விலகவேண்டும் என்று பிரிட்டன் கொண்டு வந்த தீர்மானம் 10—1 என்ற வாக்கு வித்தியாசத்தில் ஐ.நா. பந்தோபஸ்து சபையில் நிறைவேறுகிறது. தன் 'வீட்டோ' அதிகாரத்தைப் பயன்படுத்தி ரஷ்யா அந்தத் தீர்மானத்தைத் தோற்கடிக்கும் என்ற எதிர்பார்ப்பு பொய்யாகிறது. ரஷ்யா வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நிற்கிறது. அதேபோல 'வீட்டோ' அதிகாரம் பெற்ற இன்னொரு நிரந்தர நாடான சீனாவும், போலந்து, ஸ்பெயின் ஆகியவற்றோடு சேர்ந்து வாக்கெடுப் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி கொள்கின்றன. ஐ.நா.வின் இந் தீர்மானத்தை ஏற்க அர்ஜெண்டி மறுக்கிறது.

ஏப்ரல் 5

பாக்லாந்து விவகாரம் காரணம பிரிட்டிஷ் வெளி விவகார அமைச் லார்டு காரிங்டன், துணை அமைச் ஹம்ப்ரி அட்கின்ஸ், வெளி விவக அலுவலகத்தில் ஸ்டேட் மந்திரிய ரிச்சர்டு லூஸி ஆகியோர் தங் பதவியை ராஜினாமாச் செய்கிறார்க 36 போர்க் கப்பல்கள் அடங் பிரிட்டிஷ் கப்பற்படை பிரிட்ட லிருந்து பாக்லாந்து நோக்கிப் புறப் கிறது.

ஏப்ரல் 6

பாக்லாந்து பிரச்னையை முன்னி தான் பதவி விலகப் போவதில்லை என தாட்சர் அறிவிக்கிறார். என்றாலும் அ பதவி விலகுமாறு வற்புறுத்தப்பட என்ற எதிர்பார்ப்பில் லண்டன் ப மார்க்கெட்டில் விலைகள் சரி தொடங்குகின்றன. அர்ஜெண்டின லிருந்து எல்லா இறக்குமதிகளுக் ஒட்டு மொத்தமாகத் தடை விதி படுகிறது.

ஏப்ரல்—7

அமெரிக்க அதிபர் ரீகன் தன் வெ உறவு அமைச்சர் அலெக்ஸான் ஹெய்க்கை லண்டனுக்கு அனு வைக்கிறார். பாக்லாந்து பிரச்னை சுமுகமாக தீர்த்து வைக்க 'ஒரு நே யான தரகராக' அமெரிக்கா விவகாரத்தில் தலையிடுவதாக அறிவிக்கிறார். இதற்கிடை பாக்லாந்து தீவைச் சுற்றிலுமுள்ள கி.மீட்டர் கடல் மைல் பகுதியை ' மண்டலமாக' பிரிட்டன் பிரகட படுத்துகிறது.

ஏப்ரல்—8

பிரிட்டனிலிருந்த அர்ஜெண் தூதரக அலுவலகம் மூடப் படுகி பிரிட்டிஷ் அரசின் உத்தரவின் பே தூதரக அதிகாரிகள் நாட்டை வ வெளியேறுகிறார்கள்.

ஏப்ரல்—9

அர்ஜெண்டினா உடனடியாக பா தில் உள்ள தனது படைகளை வ

றுவேண்டும் என்று பிரிட்டன் தந்த
ந்தியை எடுத்துக் கொண்டு அமெரிக்க
வெளியுறவு அமைச்சர் ஹெய்க்
யோனஸ் அயர்ஸுக்குப் புறப்படுகிறார்.
க்லாந்து நெருக்கடியை பிரிட்டன்
து படைபலம் மூலம் தீர்க்க
யற்சிக்கக் கூடாது என்று பிரிட்டிஷ்
ரசுக்கு ரஷ்யா எச்சரிக்கை விடுக்கிறது.

ப்ரல்—10

பாக்லாந்தைக் கைப்பற்றிய செய்
கைக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில்
அர்ஜெண்டிஞவுக்கு அயுத விற்பனையை
டை செய்வதென ஐரோப்பியப்
பொருளாதார அமைப்பு ஒட்டெடுப்பின்
லம் முடிவு செய்கிறது.

ப்ரல்—11

யுத்தமண்டலத்துக்குள் காணப்படும்
அர்ஜெண்டிஞவின் சப்பல்கள் சுட்டு
ழ்த்தப்படும் என்று பிரிட்டன் அறிவிக்
றது. பிரச்னையை அமைதியாகத்
ர்த்துக் கொள்ளும்படி சம்பந்தப்பட்ட
ரு நாடுகளையும் போப் ஆண்டவர்
கட்டுக் கொள்கிறார்.

ப்ரல்—12

பியோனஸ் அயர்ஸிலிருந்து அமெரிக்க
மைச்சர் ஹெய்க் மீண்டும் லண்டன்
ருகிறார். அர்ஜெண்டிஞ போட்ட
ரண்டு நிபந்தனைகளை
ரிட்டனுக்குத் தெரிவிக்
றார்.

(i) பாக்லாந்து நோக்கி
ந்து கொண்டிக்கும் பிரிட்
டிஷ் கப்பற்படை திரும்பி
டவேண்டும். அப்படி
ஞல் பாக்லாந்தை விட்டு
அர்ஜெண்டிஞ துருப்புகளும்
வெளியேறும்;

(ii) பாக்லாந்து மக்க
க்கு தங்களுக்குத் தேவை
ான அரசைத்தேர்ந்
டுக்க அனுமதியளிக்க
ண்டும். ஆனால் தீவில்
அர்ஜெண்டிஞ கொடிதான்
றக்க வேண்டும்.

ப்ரல்—13

தாட்சர் பிடிவாதம்
ாட்டுகிறார். ஹெய்க்
கொண்டு வந்த நிபந்தனை
அவருக்கு உடன்பாடாக
ருக்கவில்லை.

ஏப்ரல்—14

ஹெய்க் மீண்டும் பியோனஸ் அயர்ஸ் போகிறார். 'சூழ்நிலை மிகவும் சிக்கலாகிக் கொண்டிருக்கிறது' என்று கருதுகிறார் ரீகன்.

ஏப்ரல்—15

பாக்லாந்த் தீவுக்கு அர்ஜெண்டிஞவைச் சேர்ந்த கவர்னர்தான் இருக்க வேண்டும்; அர்ஜெண்டிஞ கொடிதான் பறக்க வேண்டும்; பாக்லாந்து மீது தனக்கிருக்கும் உரிமை பற்றிப் பேச்சு வார்த்தை கூடாது; தீவில் வாழும் எல்லோருக்கும் சம உரிமை தரப்பட வேண்டும்; பிரிட்டிஷ் கப்பற்படை பின்னேக்கித் திரும்பிவிட வேண்டும்—என்று ஐந்து அம்ச நிபந்தனைகளை அர்ஜெண்டிஞ போடுகிறது.

ஏப்ரல்—16

அமெரிக்காவின் 'தரகர்' முறை வெற்றி அடையுமா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. பிரிட்டிஷ் கப்பற்படையின் மோதலைத் தவிர்க்க இதுவரை துறைமுகங்களில் நிறுத்தப்பட்டிருந்த அர்ஜெண்டிஞ போர்க் கப்பல்கள் தெற்கு நோக்கிக் கிளம்புகின்றன. அவை யுத்த மண்டலத்தின் வழியே போக வேண்டியிருக்கும். அர்ஜெண்டிஞ அதிபர்





தாட்சர்

ஜெனரல் கால்டியரி ரீகனுடன் டெலிபோனில் பேசுகிறார்.

ஏப்ரல்—17

பாக்லாந்து பிரச்னையில் சமரசத் தீர்வு சாத்தியமாகலாம் என்று ஒரு மெல்லிய நம்பிக்கை ஏற்படுகிறது. அர்ஜென்டினாவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் போர்க் கப்பல்களை நிறுத்த பிரிட்டன் சம்மதிக்குமேயானால் அர்ஜென்டினா தன் படைகளை பாக்லாந்திலிருந்து வாபஸ் பெறும் என்ற அடிப்படையில் அமைதித் தீர்வு ஏற்படக்கூடும் என்று கருதப்படுகிறது.

ஏப்ரல்—18

ஹெய்க் ஐந்து அம்சத்திட்டம் ஒன்றை வெளியிடுகிறார். பாக்லாந்து தீவு யாருக்குச் சொந்தம் என்ற தகராறை பிரிட்டனும், அர்ஜென்டினாவும் இன்னும் ஐந்து ஆண்டுகளுக்கு மூட்டை கட்டி வைக்க வேண்டும்; அதன் பிறகு தீவு யாருக்குச் சொந்தம் என்பதை நிர்ணயிக்கும் உரிமை தீவுவாசிகளுக்கே விடப்பட வேண்டும் என்பது திட்டத்தின் சிறப்பம்சங்கள். ஆனால் இதுபற்றி கருத்து தெரிவிக்க பிரிட்டிஷ் அரசு முன் வரவில்லை.

ஏப்ரல்—19

சமரச முயற்சிகளின் விளைவு பெரிய கேள்விக்குறியாகிறது. இருந்தும் முயற்சிகள் தொடர்கின்றன. ஏற்கனவே 'இன்வின்ஸிபிள்' என்ற பிரம்மாண்டமான பிரிட்டிஷ் போர்க் கப்பல் பாக்லாந்தைச் சுற்றி வளைத்துப் பாதுகாப்பாக நின்று கொண்டிருக்கிறது. அதோடு இன்னொரு ராட்சத போர்க் கப்பலும் பாக்லாந்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது. ச[illegible] முயற்சி ஒரு புறம். சண்டை முயற்[illegible] மறுபுறம்.

ஏப்ரல் 20-21-22-2.

நிலைமையில் மாற்றம் ஏதுமில்லை. அடுத்து என்ன நடக்கப் போகிறதோ என்று அனைத்து நாடுகளுமே கவனித்துக் கொண்டிருக்கின்றன.

ஏப்ரல் 24

பயங்கரப் போர் மூளும் அபாயம் அதிகரிக்கிறது. பாக்லாந்தில் அர்ஜென்டினா கொடி இறக்கப்பட்டது என்றும், தீவில் உள்ள பத்தாயிரம் துருப்புகள் தங்கள் உயிரைக் கொடுத்தேனும் கொடியைக் காப்பாற்றியே தீருவார்கள் என்றும் அர்ஜென்டினா அதிபர் ஜெனரல் கால்டியரி சபதம் செய்கிறார். இதற்கிடையில் தெற்கு ஜார்ஜியா தீவி[illegible] பிரிட்டிஷ் படைகள் இறங்குகின்றன. அர்ஜென்டினா நீர்மூழ்கிக் கப்பல் ஒன்றை பிரிட்டிஷ் ஹெலிகாப்டர்கள் தாக்குகின்றன. போர் நிச்சயம் என்ற சூழ்நிலை உருவாகிறது.

ஏப்ரல்—25

தென் ஜார்ஜியாவில் அர்ஜென்டின[illegible] தளபதி சரண் அடைந்து விட்டதாக தாட்சர் தெரிவிக்கிறார். மேலும் ஒரு துறைமுகம் பிடிபடுகிறது. 18[illegible] அர்ஜென்டினா துருப்புகள் கைதாகிறார்கள்.

ஏப்ரல்—26

தெற்கு ஜார்ஜியாவை அடுத்து பாக்லாந்தை பிரிட்டன் தாக்கக்கூடு[illegible] என்று தோன்றுகிறது. இந்தத் தீவை மீட்கும் போருக்காக இதுவரை 43[illegible] கோடி ரூபாய் செலவாகி இருப்பதா[illegible] மதிப்பிடப்படுகிறது.

ஏப்ரல்—27

எந்த நேரமும் பயங்கர[illegible] தாக்குதல்கள் ஆரம்பமாகலாம் என்[illegible] நிலை. போர் விளிம்பில் இரு நாட்டு[illegible] படைகளும் இருக்கின்றன. போரை[illegible] தவிர்க்க கடைசி நிமிட முயற்சிகளை[illegible] ஹெய்க் மேற்கொள்கிறார்.

ஏப்ரல்—28

சில துணிச்சல்கார பிரிட்டிஷ் வீரர்களை பிரிட்டன் ஏற்கனவே பாக்லாந்தி[illegible] இறக்கிவிட்டிருக்கும் செய்தி[illegible] அமெரிக்க ரகசியத் தகவல்கள் தெரிவி[illegible]

கின்றன. தாட்சருக்கு அவர் நாட்டில் ஆதரவு அதிகரிக்கிறது. ஒரு வாரத்துக்கு முன் பிரிட்டிஷ் நடவடிக்கையை 29 சதவீதம் பேர் ஆதரித்தனர். இப்போது 39 சதவீதம் ஆதரிப்பதாக ஒரு வாக்கெடுப்பு தெரிவிக்கிறது.

ஏப்ரல்—29

அமெரிக்காவின் சமரச முயற்சிகள் தோல்வியடைகின்றன. பிரிட்டிஷ் படைகளின் முற்றுகை ஆரம்பமாகிறது.

ஏப்ரல்—30

போரில் பிரிட்டனை அமெரிக்கா ஆதரிக்கும் என்று தோன்றுகிறது.

மே 1

பாக்லாந்தில் ஸ்டான்லி துறைமுகத்தில் உள்ள விமானத் திடல் பிரிட்டிஷ் விமானத் தாக்குதலுக்கு உள்ளாகிறது. நெருக்கடிக்குச் சமாதான முறையில் தீர்வு காண முடியாமற் போனதற்கு பிரிட்டனே காரணம் என்று அர்ஜெண்டினு குற்றம் சாட்டுகிறது.

மே 2

சமாதானத்துக்கான புதிய முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. அதிபர் கால்டியரி 'சமாதான வெள்ளைக் கொடியை அர்ஜெண்டினு ஏற்ருது' என்று அறிவிக்கிருர்.

மே 3

பிரிட்டிஷ் போர்க் கப்பல்கள் அர்ஜெண்டினு பெட்ரோல் படகு ஒன்றை மூழ்கடிக்கின்றன. இரண்டு கப்பல்கள் சேதப்படுத்தப்படுகின்றன.

மே 4

அர்ஜெண்டினுவின் மிகப் பெரிய போர்க் கப்பலை இங்கிலாந்தின் நீர் மூழ்கிக் கப்பல்கள் தாக்கி மூழ்கடிக்கின்றன. 1042 வீரர்கள் அப்போது கப்பலில் இருந்தார்கள். ஐந்நூறுக்கு மேலான அர்ஜெண்டின் வீரர்கள் இந்தத் தாக்குதலில் உயிரிழக்கிருர்கள்.

மே 5

இதுவரை தாக்கப்பட்டு வந்த அர்ஜென்டினு பதிலுக்குத் தாக்க ஆரம்பிக்கிறது. இருபது மைல் பறந்து சென்று குறிப்பிட்ட இலக்கை தாக்கக் கூடிய இரண்டு ஏவுகணைகளை வீசி பிரிட்டிஷ் பெரிய போர்க் கப்பலான 'ஷெஃபீல்டை' நாசமாக்கி மூழ்கடிக்கிறது. இன்னெரு பிரிட்டிஷ் பெரிய போர்க் கப்பலுக்கும் இதே கதி ஏற்படுகிறது. லண்டனில் தாட்சர் மந்திரிசபை அவசரமாகக் கூடுகிறது. ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் செயலாளர் ஜாவியர் பெரஸ்டிகுயெல்லர் புதிய சமாதான முயற்சி ஒன்றை மேற்கொள்கிருர்.

மே ப

ஐ. நாவின் சமரச முயற்சி வெற்றி பெறுகிறது. அதன் பொதுச் செயலாளர் கொண்டு வந்த சமரச திட்டத்தை அர்ஜென்டினு, பிரிட்டன் இரு நாடுகளும் ஏற்கின்றன. அதன்படி 1. இரு தரப்பினரும் உடனடியாகப் போரை நிறுத்த வேண்டும்; 2. பாக்லாந்தில் இருக்கும் ஒன்பதாயிரம் துருப்புகளையும் அர்ஜென்டினு உடனடியாக வாபஸ் பெறவேண்டும்; 3. அதே போல் தீவைச் சுற்றியுள்ள இங்கிலாந்து போர்க் கப்பல்களும் உடனடியாக திரும்ப வேண்டும்; 4. பாக்லாந்து யாருக்குச் சொந்தம் என்ற முடிவு ஏற்படும் வரை அங்கே சர்வதேச நிர்வாகம் ஏற்படுத்த வேண்டும்; மிகவும் அமைதியாக, அதே சமயம் வெற்றிகரமாக இந்த சமரசத்தை ஏற்படுத்தி இருக்கிருர் ஐ. நா. பொதுக் காரியதரிசி.

தொகுப்பு: கஸ்தூரி

---



இந்தக் கோடை விடுமுறையில் உங்கள் குழந்தைகளுக்குச் சொல்லும்படியாக அடுத்த பக்கங்களில் நாலு கதைகள் சொல்லியிருக்கிருர் உமா. உங்களிடம் இம்மாதிரி வேறு கதைகள் இருந்தால் எழுதி அனுப்புங்கள். அடுத்து வரும் இதழ்களில் அவை பிரசுரமாகும்.



ஆமைகளெல்லாம் சேர்ந்து கூட்டம் போட்டன.

"நம் குலத்துக்கே பெரிய அவமானம்! ஆமை முயலை ஜெயித்ததாக இதுவரை கதை உண்டா? இதற்கு ஒரு முடிவு கட்டியாக வேண்டாமா? எப்படியும் ஒரு நாள் முயலைத் தந்திரமாகவாவது ஜெயித்தாக வேண்டும்" என்றது ஆமைத் தலைவன்.

இதைக்கேள்வியுற்ற முயல் தலைவன் ஆமைகளைப் பார்த்து "பந்தயமா வைக்கப் போகிறீர்கள்? எப்போது? எப்படி?" என்று அலட்சியப் பார்வையுடன் கேட்டது.

"நாளைக்கே ஒரு பந்தயம் வைப்போம். இதோ இந்த ஏழுமலைகளை முதலில் கடப்பவனே ஜெயித்தவன்" என்றது ஆமைத்தலைவன். மறுநாள் போட்டி துவங்கியது. போட்டியில் கலந்து கொண்ட ஆமை வேகமாக ஓடத் தொடங்கியது. ஆனாலும்

படு வேகமாக ஓடிய முய முதல் மலையைத் தாண்டி போது ஆமை தனக்கு மு அங்கே ஓடிக் கொண்டி பதைக் கண்ட முயலுக் ஆச்சரியம் தாங்கவில் இப்படியே முயல் ஒவ்வொ மலையாக ஓடிப் போய் பார்த்தபோது அங்கங் தனக்கு முன்னால் ஆ போய்க் கொண்டிருப்பதை கண்ட முயலுக்கு பயம் வ விட்டது. அதனால் தன் மு திறமையையும் பயன்படு வேகமாய் ஓடி ஏழாவது ம யில் போய் நின்றபோ ஆமை அங்கே வெற் கோட்டில் பெருமிதம நின்று கொண்டிருந் ஆமை எப்படி வெற் பெற்றது என்று முயலு ஒரே ஆச்சரியம்!

ஆமைத்தலைவன் என் செய்தது தெரியுமா? மாதிரியான ஆறு ஆமைக தேர்ந்தெடுத்து பந்தயத் போது ஒவ்வொரு மலை உச்சியிலும் உட்கார வை விட்டது. முயல் வரும்போ

...டும் அந்த ஆமைகள் பந்தயத்தில் ...வது போல் பாசாங்கு செய்தன. ...த சூழ்ச்சி முயலுக்கு எப்படிப் ...யும்?

## மூக்குடைந்த கோழி

நவீனுக்கு கோழி வளர்க்க அலாதி ...சை. அவன் சின்னப் பையன். ...பாவைத் தூளைத்து மூன்று ...ழிகள் வாங்கிக் கொண்டான். ...ழிகள் முட்டையிட ஆரம்பித் ... அவன் தினமும் அவற்றை ...த்து ஃபிரிஜ்ஜில் வைத்து ...மாவை ஆம்லெட் செய்து ...டுக்கச் சொன்னான்.

...ஒரு நாள் முட்டைகள் உடைந்து ...ப்பதைக் கண்டு யார் உடைத் ...ப்பார்கள் என்று யோசித்தான். ...யவில்லை. பூனையாக இருக்குமோ ...று அம்மா சந்தேகப்பட்டாள்.

...முட்டைகளை யார் உடைப்பது ...று கண்டு பிடிப்பதில் தீவிரமாக ...ன்ந்தான் நவீன். சீக்கிரமே எழுந்து போய்ச் சத்தம் போடாமல் கோழிக் கூண்டின் பக்கத்தில் ஒளிந்து கொண்டான். இரண்டு கோழிகள் மட்டுமே முட்டை இட்டன. மூன்றாவது கோழி முட்டை போட வில்லை. மற்ற இரண்டு கோழிகளின் மீது பொறாமை கொண்ட அந்த மூன்றாவது கோழி அவை இட்ட முட்டைகளைத் தன் மூக்கால் கொத்திக் கொத்தி உடைத்து விட்டுச் சென்றது. இதைக் கண்ட நவீனுக்கு ஒரே ஆத்திரம். "ஓகோ! இது உன் வேலைதானா? இரு. இரு" என்று மனதிற்குள் கறுவிக் கொண் டான். அன்று பள்ளியிலிருந்து திரும்பி வரும்போது முட்டை போலவே தோற்றமளித்த சில கூழாங்கற்களைத் தெருவிலிருந்து பொறுக்கி எடுத்து வந்தான்.

மறுநாள் காலை கோழிகள் இரண் டும் முட்டை இட்டவுடன் அவற்றை எடுத்து பத்திரப்படுத்திவிட்டு அவற் றுக்குப் பதிலாக அந்த இடத்தில் கூழாங்கற்களை வைத்து விட்டு ஒளிந்து கொண்டான். வழக்கம் போல் மூன்றாவது கோழி முட்டை களை உடைக்க வந்தது. கூழாங்கற் களை முட்டையென நினைத்து மூக்கால்





குத்திக்குத்தி உடைக்கப் பார்த்தது. மூக்குதான் உடைந்ததே தவிர முட்டை உடையவில்லை. வலி பொறுக்காமல் கத்திக் கொண்டே உள்ளே ஓடிப் போய்ச் சோர்ந்து படுத்து விட்டது. நவீன் அதைப் பார்த்துச் சிரித்தான். அப்பா அம்மா தன்னை 'ஸூப்பர்மேன்' என்று புகழப் போவதை எண்ணி மகிழ்ந்தான்.

## தங்க வாத்து

**கா**ட்டில் மரங்கள் வெட்டிப் பிழைக்கும் முருகனுக்கு மூன்று பிள்ளைகள். கடைசி மகன் ராமு. கொஞ்சம் மக்கு. அப்படித்தான் அவன் அம்மா நினைத்தாள்.

அப்பா உடல் நலம் சரியில்ல
படுத்த படுக்கையாகி விட்டார்
னால் 'யாரை மரம் வெட்டச்
வது?' என்ற கேள்வி எழு
முதல் மகன் "நான் போய்
கிறேன்" என்று கோடா
எடுத்துக் கொண்டு கிளம்பி
அம்மா அவனுக்குச் சிற்று
பொட்டலம் கட்டிக் கொடு
அனுப்பினாள். அவன் காட்டு
போய் மரம் வெட்டத் தொட
முன்பே பொட்டலத்தைப்
தான். அப்போது அங்கு
வயது முதிர்ந்த பெரியவர் ஓ
"அப்பனே! எனக்கு ரொம்பப்
யிருக்கிறது. கொஞ்சம் ஏத
சாப்பிடக் கொடுப்பாயா?"
கேட்டார். அவனோ அவ
அலட்சியமாகப் பார்த்து
"ஒன்றுமில்லை போ" என்று வி
னான். சாப்பிட்டு முடிந்ததும்

ட்டத் தொடங்கினான். கோடாலி
ன் கையை வெட்டி விட்டது.
வர் சிரித்துக்கொண்டே மெளன
க நகர்ந்து விட்டார்.

று நாள் இரண்டாவது மகன்
வெட்டச் சென்றான். அவனும்
வருக்கு ஒன்றும் தரவில்லை.
ன் தன் கால்களை வெட்டிக்
ண்டான்.

ன்றாவது நாள் ராமு புறப்பட்ட
து அவன் பெற்றோர் சிரித்து
டு ''உன்னால் ஒன்றுமே
யாது'' என்றனர். ஆனாலும்
ன் 'பார்க்கலாம்' என்று
ல்லிப் புறப்பட்டான். அவன்
ார் அவனுக்குப் பழைய சோறு
டிக் கொடுத்தாள்.

வன் சாப்பிடத் தொடங்கிய
து அதே கிழவர் வந்து 'பசிக்
து' என்றார். ராமு தன்
பாட்டை அவரிடம் கொடுத்து
டு மரம் வெட்டும் வேலையில் ஈடு
டான். என்ன ஆச்சரியம்! அவன்
ட்டிய மரத்தின் பொந்திலிருந்து
க வாத்து ஒன்று பளபளவென்று
ளியே வந்தது. கிழவர் சிரித்துக்
ாண்டே மறைந்து விட்டார்.
ு தங்க வாத்தை பத்திரமாக
த்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்
டான். நன்கு இருட்டிவிட்டதால்
யிலுள்ள ஒரு கிராமத்தில்
கும் பொருட்டு ஏதோ ஒரு
டுக் கதவைத் தட்டினான். அந்த
டுக்காரருக்கு மூன்று பெண்கள்.
த மூவரும் தங்க வாத்தை அதிசய
ப் பார்த்தார்கள். ஒருத்தி மெது
க வாத்தின் இறகை எடுக்க
சப்பட்டு அதைத் தொட அவள்
அந்த வாத்துடன் ஒட்டிக்
ண்டது. அவள் கையை விலக்க
ன்ற இரண்டாவது மகளின்
யும் முதல் மகளுடன் ஒட்டிக்
ண்டது. இப்படி வரிசையாக
றாவது மகள், அவர்களின் தந்தை
லோருமே ஒட்டிக் கொண்
ர்கள்.

ராமு காலையில் எழுந்து தன் வாத்தைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டான். அப்போது அவர்களும் கூடவே சங்கிலி போல் ஒட்டிக் கொண்டு வந்தனர்.

போகும் வழியில் இன்னொரு ஊரில் தண்டோரா' சத்தம் கேட்டது. அந்த ஊர் இளவரசியை யார் சிரிக்க வைக்கிறார்களோ, அவர்களே இளவரசியை மணக்க முடியும் என்பதே அந்த தண்டோராச் செய்தி. ராமு இதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வேகமாகப் போய்க் கொண்டிருந்தான். கூடவே அந்த வாத்தும் மற்றவர்களும் தொத்திக் கொண்டு போனார்கள். மாளிகையின் உப்பரிகையிலிருந்து தற்செயலாக இந்தக் காட்சியைக் கண்ட இளவரசி விழுந்து விழுந்து சிரித்தாள். பிறகு என்ன? இளவரசி ராமுவை மணந்து கொண்டாள்.

## ராஜகுமாரி

இளவரசி ரம்யா தோழிகளுடன் தோட்டத்தில் தங்கப் பந்து விளையாடிக் கொண்டிருந்தாள். அப்போது பந்து தவறிப்போய் கிணற்றுக்குள் விழுந்து விட்டது. இளவரசி கோபித்துக் கொள்வாள் என்று எண்ணிய தோழிகள் பயந்து ஓடிவிட்டார்கள். இளவரசியோ, பந்தை எப்படி வெளியே எடுப்பது என்று தெரியாமல் விழித்துக் கொண்டிந்த போது, கிணற்றிலிருந்து வெளியே வந்த தவளை ஒன்று இளவரசியைப் பார்த்து ''நான் ஏதாவது உதவி செய்யட்டுமா?'' என்று கேட்டது. இளவரசி அந்தத் தங்கப் பந்தை கிணற்றிலிருந்து எடுத்துத் தருமாறு சொன்னாள்.



'நான் பந்தை எடுத்துத் தந்தால் எனக்கு என்ன கொடுப்பாய்?' என்று கேட்டது தவளை.

''என்ன வேண்டுமோ கேள், தருகிறேன். என் அழகிய உடைகளா, அல்லது நகைகளா?''

''அதெல்லாம் எனக்கு வேண்டாம், நான் ஒரு நாள் உன் பக்கத்தில் சரி சமமாக அமர்ந்து சாப்பிடவேண்டும். உன் பக்கத்திலேயே படுத்துத் தூங்க வேண்டும். அதற்குச் சத்தியம் செய்து கொடுத்தால் உன் பந்தை எடுத்துத் தருகிறேன்'' என்றது தவளை.

இளவரசி வேறு வழியின்றி சத்தியம் செய்து கொடுத்தாள்.

தங்கப் பந்தும் கைக்கு வந்து விட்டது. அது கிடைத்த மகிழ்ச்சியில் தவளையை அங்கேயே விட்டு விட்டு உள்ளே ஓடிவிட்டாள்.

அரண்மனையில், அவள் சாப்பிட உட்கார்ந்தபோது பக்கத்தில் ஏதோ சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். அங்கே ஜம்மென்று உட்கார்ந்திருந்த தவளை ''நானும் சாப்பிடலாமா?'' என்று கேட்டது.

இளவரசி அருவருப்புடன் அதை வெளியே போகுமாறு விரட்டினாள். அப்போது அங்கு வந்த அரசன் 'என்ன சப்தம்' என்று விசாரித்தார். இளவரசி நடந்தவற்றைக் கூறியதும் ''சத்தியம் செய்து கொடுத்த பின் வாக்கு தவறக் கூடாது. தவளை உணவளித்து அதைப் படுக்கை அழைத்துச் சென்று தூங்க என்று புத்திமதி சொன்ன இளவரசி மனம் மாறி தவளை உணவிட்டு அதைத் தன் படுக் அறைக்குத் தூக்கிச் சென்ற தவளையின் தோல் வழுவழுப்பா இருந்ததால் அப்படியே அது அ கையிலிருந்து நழுவிக் கீழே விழு விட்டது. ஆனால் கீழே தவளைய காணவில்லை. அந்த இடத் தவளைக்குப் பதில் அழகிய வரசன் நிற்பதைக் கண்டாள்.

''ரம்யா ஒரு தவளை இளவரச சந்தித்து மணப்பாள்'' என்று அ குழந்தையாக இருந்தபோது யா ஒரு ஜோசியர் கூறியிருந்தார். பலித்துவிட்டது!

திருமணத்திற்கு பிறகு ஆறு வெ குதிரை பூட்டிய தங்க ரதத் இளவரசியை அமர்த்தி, தன் யத்திற்கு அழைத்துச் சென் சற்று முன் தவளை வடிவமாயி அந்த ராஜகுமாரன்!

—

. கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்

●● பாரதிராஜாவுக்குத் துணையாக உள்ள மைசாலிகளெல்லாம் ஒவ்வொருவராகப் ந்து போய்க் கொண்டிருக்கிறார்களாமே?

ரவேற்கலாம். புதிய திறமை லிகள் தோன்றுவதற்கு அது வழி க்கும்.



பாரதிராஜா

. ராஜாஸ்ரீராம், பி. ஜி. பாளையம்

●● கோஸ்ட் ரைட்டர் என்றால் யார்?

ாலம் சென்ற சில ஆங்கில ஆசிரி கள் கூட இப்போதைய தமிழ் எழுத் ார்களின் கோஸ்ட் ரைட்டர்களா க்கிறார்கள்.

வேதாசலம், தஞ்சாவூர்

●● பிராமணர்கள் சாப்பிட உட்கார்ந் ் இலையில் படைக்கும் அன்னத்தைத் ணீரால் சுற்றுகிறார்களே, அது ஏன்?

டி. கே. சி. வீட்டில் நான் சாப் டுக் கொண்டிருந்த காலத்தில் ாமண வழக்கப்படி இலையில் னம் படைத்தவுடன் 'பரிஷேசனம்' து பஞ்ச பூதங்களுக்கும் பிரம்மத் தும் அர்ப்பணம் செய்வதாக மந்திரம் ் சாப்பிடுவேன்.

ரு சமயம் குற்றாலத்துக்கு வந்திருந்த ஜாஜி, "இது என்ன? முதலியார் டில் சாப்பிட்டுக் கொண்டு இந்த க்கத்தை விடாப்பிடியாக வைத் க்கிறாயே?" என்று கேட்டார்.

நீங்களே உபநிடதப் பலகணியில் னத்தைப் போற்றி இறைவனுக்கு பதித்து விட்டுச் சாப்பிட வேண்டும் று எழுதியிருக்கிறீர்கள். அதைத் ் நான் செய்கிறேன். இந்த திரங்களும் அதைத்தானே சொல் றன. முதலியார் வீட்டு அன்ன றல் செய்யாதே என்று தடுக்க லையே! யார் அன்னமிட்டாலும் தச் செய்வதுதான் பிராம்மணனின் மை என்று தோன்றுகிறது" றேன்.

ன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கே. சி. ஒரு பதிலும் சொல்லவில்லை.

ஜாஜி "இதுதான் கரெக்ட் டிடியூட்" என்றார்.

இதில் வேடிக்கை என்னவென்றால் நான் ஜலம் சுற்றுவதைப் பார்த்து விட்டு ராஜாஜியும் தண்ணீர் சுற்ற ஆரம்பித்து விட்டார்! ஆனால் அந்த வழக்கம் ஒரு சில நாட்களே நீடித்தது.

டி. கே. சி., ராஜாஜி இரண்டு பேரிட மும் நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்ற எஸ். வி. எஸ். எழுதியுள்ள 'நான் கண்ட டி. கே. சி.' என்ற புத்தகத்தில் வரும் இந்த வரிகளில் உங்கள் கேள்விக்கு பதில் கிடைக்கிறதே!

ராஜாஜியுடன் எஸ். வி. எஸ்.



# அட்லாண்டிக் மீண்டு
# காற்றை சுவாசி

### மே 7

ஐக்கியநாடுகள் சபையின் பொதுச் செயலாளர் அர்ஜெண்டினுவுக்கும் பிரிட்டனுக்குமிடையே இருக்கும் தகராறைத் தீர்ப்பதில் ஆர்வம் காட்டித் தம்முடைய சமாதானப் பணியை ஆரம்பிக்கிறார். பிரிட்டிஷ் தூதரும் அர்ஜெண்டினுவின் வெளி உறவு அண்டர் செகரட்டரியும் அவரைத் தனித்தனியே சந்தித்துப் பேசுகிறார்கள். இருந்தாலும் பாக்லாந்து பகுதியில் போர் நிறுத்தத்துக்கான அறிகுறிகள் எதையும் காணோம்.

### மே 8

இங்கிலாந்து தன் கடல் முற்றுகையை அதிகரிக்கிறது. அர்ஜெண்டினு பிராந்தியத்தில் இருந்து பன்னிரண்டு மைலுக்கு அப்பால் உள்ள கடல்பகுதியில் எந்தக் கப்பல் அல்லது விமானம் வந்தாலும் அது சுட்டு வீழ்த்தப்படும் என்று அறிவிக்கிறது. இருபது ஜெட் ரகப் போர் விமானங்களையும் இரண்டு வேவு பார்க்கும் விமானங்களையும் பாக்லாந்து பகுதிக்கு இங்கிலாந்து அனுப்புகிறது.

### மே 9

பாக்லாந்து தீவு மீது இங்கிலாந்து திடீர்த் தாக்குதல் நடத்துகிறது. பாக்லாந்து தலைநகர் போர்ட் ஸ்டான்லியில் உள்ள அர்ஜெண்டினு ராணுவ தளங்களை இங்கிலாந்து போர்க் கப்பல்கள் பீரங்கியால் சுடுகின்றன. ஹெலிகாப்டர்கள் தாக்குகின்றன. அர்ஜெண்டினுவும் திருப்பித் தாக்குகிறது.

### மே 10

சமரசப் பேச்சு வார்த்தை தெ... கொண்டிருக்கிறது. இன்னும் ... நாட்களில் தீர்வு ஏற்பட்டுவிடு... ஐ. நா. பொதுச் செயலாளர் ந... தெரிவிக்கிறார். இங்கிலாந்தின் ... தாக்குதலால் அர்ஜெண்டினுவி... பிடிக்கும் படகு ஒன்றும், ஹெ... விமானம் ஒன்றும் நாசமாகின்ற...

### மே 11

நான்காவது சுற்று சமரசப் ... வார்த்தைகள் நடக்கின்றன. ... டினுதான் முதலில் தன் து... வாபஸ் பெற வேண்டும் எ... பிடிவாதத்திலிருந்து இங்கி... இறங்கி வந்து, இரண்டு நாடுக... சமயத்தில் தங்கள் துருப்புகளை... பெற்றுக் கொள்ளும் யோ... பரிசிலிக்கத் தயாராக இரு... தெரிகிறது. இந்தப் போரில் "... டினுவை வெற்றி பெற அனு... கூடாது" என்ற தன் கருத்தை ... அதிபர் ரீகன் வெளியிடுகிறார்.

ரீகன்



# அமைதிக் குமா?

மே 12

தகராறைத் தீர்க்க அர்ஜெண்டின சுவாரஸ்யமான புதிய திட்டமொன்றைக் கொடுத்திருக்கிறது. ஆனால் அது பற்றிய விளக்கம் வெளியிடப்படவில்லை. அந்தத் திட்டம் விவாதிக்கப்பட்டு சமரசம் ஏற்படுவதற்கான நம்பிக்கை கிடைத்திருக்கிறது.

மே 13

வார இறுதிக்குள் தகராறு தீரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பேச்சு வார்த்தைகளில் முன்னேற்றம் ஆமை வேகத்தில் இருந்தாலும் தொடர்கிறது என்பது ஆறுதலான செய்தி. இதற்கிடையில் தெற்கு ஜார்ஜியாவை இங்கிலாந்து சில நாட்களுக்கு முன் மீண்டும் மீட்டபோது பிடித்து வைத்த 189 போர்க் கைதிகளை சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தின் வசம் பிரிட்டன் ஒப்படைக்கிறது.

மே 14

பாக்லாந்து தீவில் யுத்தம் மீண்டும் தொடங்குமா அல்லது சமாதானக் கொடி பறக்குமா என்பது இன்னும் முப்பத்தாறு மணி நேரத்தில் தெரிந்து விடும் என்று ஐ.நா. சபை பொதுச் செயலாளர் எதிர்பார்க்கிறார். இந்த முடிவுதான் பாக்லாந்து போரில் ஐ. நா. எடுக்கும் முடிவாக இருக்கும் என்றும் அவர் கருதுகிறார். சண்டை தொடர்ந்தால் 1,600 கோடி ரூபாய் வரை பிரிட்டன் இழக்க நேரிடும் என்பது ஒரு கணிப்பு. இங்கிலாந்து அனுப்பியிருக்கும் சண்டைக் கப்பல்களை பராமரிக்கவே ஒரு மாதத்துக்கு 80 கோடி ரூபாய் தேவைப்படும்.

தொகுப்பு: கஸ்தூரி

டி. வி. எஸ்.—50 'மொப்பெட்' வண்டிக்கு ஏகப்பட்ட கிராக்கி. உங்கள் பெயரை இன்று பதிவு செய்தால் வண்டி கிடைக்க இன்னும் ஆறுமாதம் ஆகலாம். ஆனால் பதிவு செய்து கொள்வது பெண்களாயிருந்தால் சீக்கிரமே கிடைத்து விடுகிறதாம். இது சரியா என்று விசாரித்ததில் வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு, இந்த 'மொப்பெட்' கொடுப்பதில் சில சலுகைகள் கொடுத்துள்ளது உண்மைதான் என்று தெரிகிறது.

ஒவ்வொரு சித்ரா பௌர்ணமியிலும் மயிலாப்பூரிலுள்ள கேசவப்பெருமாள், சைதாப்பேட்டை ஆற்றுக்கு வீதி உலா போகிறாராம். போகிற வழியில் ஒவ்வொரு ஆண்டும் பனகல் பார்க் எதிரில் உள்ள நல்லி பட்டுப்புடவைக் கடை வாசலில் நின்று, அவர்கள் செய்யும் கட்டளையை ஏற்றுக்கொண்டே செல்கிறார்.

தமிழகமெங்கும் உள்ள அரசு மருத்துவமனைகளில் உள்ள தொலைபேசித் தொடர்புகள் தேவைக்கு மிகக் குறைவாகவே இருப்பதால் மக்களுக்கு சேவை செய்ய மனம் இருந்தும் வழியில்லை என்று தொலைபேசி இணைப்பாளர்கள் வருத்தம் தெரிவிக்கிறார்கள். இவர்கள் நடத்திய கூட்டத்திற்கு வந்த மந்திரி ஹண்டே இது தம் இலாகா சம்பந்தப் பட்டதல்ல என்று கூறியிருக்கிறார்.

—ப்ரியாராஜ்



ஹண்டே

# மாலை வேளை

மயிலாப்பூர் வடக்கு
மாட வீதியில்
போய்க் கொண்டிருந்த
போது ஒரு வீட்டின்
முன்னால் சிலர்
வரிசையாக நின்று
கொண்டிருந்தார்கள்.
வெளி வாசலில்
'கிளாங்காடு தவத்திரு
அருணாசலத் தடிமை
சுவாமிகள்' என்று
எழுதப்பட்டிருந்தது.
இன்னொரு பக்கம்
ஒரு காகித போஸ்டர்
"மது, மாமிசம்
சாப்பிட்டவர்கள்
கண்டிப்பாக
வரக்கூடாது; வீட்டு
விலக்கு நாட்களில்
பெண்கள் வரலாகாது;
தம்பதிகள் தவிர
மற்றவர்கள்
தனித்தனியாக
டோக்கன் வாங்கிக்
கொண்டு வரிசையாக
வர வேண்டும்" என்று
வற்புறுத்தியது.
நான் இந்த அறிவிப்பை
என் குறிப்புப் புத்தகத்தில்
எழுதிக் கொண்டிருந்ததைப்
பார்த்த சுவாமிகளின் சீடர் ஒருவர்
'பத்திரிகைக்காரரா?' என்று கேட்டார்.
'ஆம்' என்றேன். உள்ளே போய்
சில வினாடிகளில் வெளியே வந்தவர்.
'சுவாமிகள் உங்களைக் கூப்பிடுகிறார்'
என்று அழைத்துப் போனார்.

ஒவ்வொரு பௌர்ணமியின் போதும்
சென்னை வரும் இந்தச் சுவாமிகள்
தொடர்ந்து ஒருவார காலம்
சென்னையில் தங்குகிறாராம்.
மாலை ஆறு மணிக்கு வடக்கு மாட வீதி
வீட்டுக்கு வருகிறார். நெருக்கடியான
சொந்த பிரச்னைகளை மனதில்
நினைத்துக் கொண்டு இவரைப் பலர்
சந்திக்கிறார்கள். சுவாமிகள் அவர்களைப்
பார்த்ததும் ஒரு காகிதத்தில்
அவர்கள் மனதில் இருக்கும்
பிரச்னைகளையும் அவை
எப்போது தீரும் என்ற
விளக்கமான பதிலையும் எழுதி விடுகிறார்.
மடித்த காகிதத்தை எடுத்துக்
கொண்டு வெளியில் வந்து


அருணாசலத்தடிமை

படிக்க வேண்டும்.
ஒவ்வொரு அமாவாசைக்கும்
சுவாமிகள் குற்றாலம் போய்
விடுகிறார். அன்று
நோயாளிகளைத் தன் '
விரல்களால் தொட்டே
குணப்படுத்துகிறார்.
அமாவாசையன்று அப்படித்
தொடும் போது இவர்
விரல்களிலிருந்து
நோயாளிக்கு
மின்சாரம் பாய்வது
போன்ற உணர்வு
தோன்றுகிறதாம்.
இவரிடம்
வைத்தியம் செய்து
கொண்டவர்களில் ஒருவர்
எழுத்தாளர் இந்துமதி.
சுவாமிகள்
திருநெல்வேலி
மின்சார வாரிய
அலுவலகத்தில்
பணியாற்றிக்
கொண்டிருக்கிறார்.
வாரத்துக்கு
இரண்டு மூன்று நாட்கள் மட்டுமே
வேலைக்குப் போகிறார். இவருடைய
இயற்பெயர்: பேச்சிமுத்து.

தமிழ் நாடு கலைத் தொழில்
கல்லூரியில் 'கமர்ஷியல் ஆர்ட்ஸ்'
பிரிவு மாணவ மாணவிகள் மிகத்
திறமைசாலிகள்.
'ஒரு சோப்புக்கு மேலுறை
எப்படியிருக்க வேண்டும்?' என்று
ஒரு டெஸ்ட். அதில் அவ்வளவு
பேரும் கற்பனையாகப் பெயர்
கொடுத்து அதன் மேலுறையைத்
தயாரித்துத் தரவேண்டும்.
மாணவ மாணவிகளின் தயாரிப்புகள்
சிலவற்றைப் பொதுமக்களின்
பார்வைக்கு வைக்கும்
கண்காட்சி ஒன்றை வருடா வருடம்
இந்தக் கல்லூரியில் நடத்துகிறார்கள்.
இந்த வருடம் கூட்டம் அதிகமில்லை.
நிறைய விளம்பரப் படுத்தினால்
பல கம்பெனிக்காரர்கள்
வந்து பார்த்து மாணவர்களின்
திறமையைப் பயன் படுத்திக்
கொள்ள வாய்ப்பு கிடைக்குமெனத்
தோன்றுகிறது.

தொகுப்பு: கஸ்தூ

அசோக் உமா பப்ளிகேஷன்ஸுக்காக ராஜீ பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டி
அச்சிட்டு வெளியிடுபவர்: வி. பாலசந்திரன் (பாச்சா), 349, பூந்தமல்லி நெடுஞ்சா
அமைந்தகரை, சென்னை 600 029, ஆசிரியர்: சாவி.

# மஞ்சள் பத்திரிகை



"ஜெயன், என்ன ஆச்சரியம்!"

முகமெல்லாம் சந்தோஷம் பொங்க வனிதா.

"யெஸ் வனித். எதிர்பாராததுதான். இன்னிக்குத்தான் எனக்குத் திரையேற்றம்..."

"திரையேற்றமா?"

## மது ராஜேந்திரன்

"அரங்கு ஏறினல் அரங்கேற்றம். புதுசா திரைக்கு வந்தால்..."

அவன் சொல்லி நிறுத்த, அவள் சிரித்தாள்.

ஒலிப் பதிவுக் கூடத்தை விட்டு வெளியே வந்த அவனும் அவளும் பேசிக் கொண்டே, புல் தரைக்கு நடந்தார்கள்.

அவன்—

'போனி எம்' அலற, ஆடக் கூடிய சரீரம். 'பாப்' பாடக் கூடிய சாரீரம். இருந்தும் ஈடு பாடு, கர்னடக சங்கீதத்தில்!

வானெலியில் கேட்டு மட்டுமே உருகி, அவனின் குரல் வளத்தில், பாவத்தில் சிக்கிப் பைத்திய மாகிப் போனவள் வனிதா.

அவள்—

வீணை வழி வந்தவள். வீணை அவள் அம்மா வழி வந்தது.

அம்மா போன பிறகு, வீணை அவளுக்கு நிரந்தரத் துணையாக நின்றது.

"எக்ஸ்க்யூஸ் மீ மேடம். நான் 'ஜனனம்' பத்திரிகையிலிருந்து வறேன் எனிதிங் 'ஹாட்' நியூஸ்?"

காமிராவுடன் சற்று விலகி ஃபோகஸ் செய்ய,

"நோ...ப்ளீஸ். எல்லா ப்ளோருக்கும் போயிட்டு கடைசியா வாங்க. நான் நல்ல நியூஸாகவே சொல்றேன்."

கற்பனைப்
படுவது...

ரூபாய் நூறு
பரிசு பெறும்
நான்காவது
ானவில் கதை

வனிதாவைப் பார்த்துக் கொண்டே ஜெயன் பதில் சொல்ல, நன்றி சொல்லி காமிரா நகர்ந்தது.

"எனக்கும் சொன்னால் நானும் சிரிப்பேனே..."

மெதுவாக வனிதா நினைவூட்ட,

"அவசியம் சொல்லித்தான் ஆகணுமா வனித்?"

ஜெயன் பல சந்தர்ப்பங்களில் அவளுடைய வீணை இசையை மேடையிலும், கேஸெட்டிலுமாகக் கேட்டிருக்கிறான்; லயித்திருக்கிறான்; அந்தத் திறமையை மானசீகமாக ஆராதித்திருக்கிறான்.

நெடுநாளாக சோழ—பிசிராந்தையார் நட்பாக, அவங்களுக்குள்ளான முகமறியாத நட்பு முற்றுப் புள்ளி கொண்டது வானொலி நிலையத்தில்தான்.

ஜெயன் வெட்டுப்படாது தப்பி விட்ட அந்த நீண்ட புல்லைத் தரையிலிருந்து கிள்ளி அதை இரண்டாக்கி, பின் நான்காக, எட்டாக...

"வனித், தன்னோட படத்திலே, எல்லாப் பாடல்களையும் கர்னாடக இசையிலேயே அமைக்கணும்னு தயாரிப்பாளர் அடம் பிடிச்சாராம். இசை அமைப்பாளர் என்னைப் பாட அழைச்சிருக்கார். இன்னிக்கு 'ட்ரெண்டு'லே இப்படியொரு தயாரிப்பாளர்...! படம் வேறே வெள்ளி விழா போகணுமாம்... வெள்ளி விழாவுக்கு எத்தனை நாள்னு அவருக்குத் தெரியாதோ...!"

அவர்களுக்குள் வானொ... புக்குப் பிறகு அடுத்... சந்திப்புகள்.

எல்லாமே, ஒரு மே... ல், வானொ... யில், பொது நிகழ்ச்சி...!

பேசியது எல்லாம், பந்துவரா... மோகனத்தைப் பற்றி, கரகரப்ரிய... சங்கராபரணம் பற்றி!'

குரல் வளம், இசை லயம், வீணையை... பற்றி!

செம்மங்குடி, அரியக்குடி, காயத்... யைப் பற்றி!

அவனுடைய பாடல்கள் 'எல் பி'யா... வெளியானபோது, அவள் அதை... கேட்டு, ரசித்து, விமரிசித்து எழு... யிருக்கிறாள்.

தயாரிப்பாளர் மாதிரி தெரிந்... ஒருவர் அவர்களை நெருங்கினார்.

"கொஞ்சம் பொறுத்துக்குங்க... பொறுத்துக்குங்கம்மா. மியூசிக் டைர... டரு வந்துருவாரு. இன்னொரு கம்பெ... ரீ ரிகார்டிங்காம். தாகத்துக்கு அனு... பட்டுங்களா, அனுப்பட்டுங்... ளாம்மா...?".

"சிரமம் வேண்டாங்க ... தேங்க்ஸ்..

ஏக காலத்தில் அவன், அவள் சொல்... அவர் நகர்ந்தார்.

"இப்படி ஒரே சமயத்திலே பேசி... என்ன சொல்வாங்க?"

## நெய் வழியா? நெய்வேலியா?



திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள 'நாசரேத்' ஊருக்... அருகில் ஒரு சிறிய கிராமம். அதற்குப் பெயர் 'நெய்வழி... சென்னையில் வசிக்கும் நெய்வழி ஊர்க்காரர்கள், தங்க... ஊருக்குக் கடிதம் எழுதும்போது ஆங்கிலத்தில் 'NEIVAL... என்று எழுதுகிறார்கள். இந்தக் கடிதங்கள் அனைத்து... 'நெய்வேலி'க்கே போய்ச் சேர்ந்துவிடுகின்றன. பிற... அங்கிருந்து திருப்பி அனுப்பப்படுகின்றன. இதனு... 'நெய்வழி'க்கு எழுதப்படும் கடிதங்கள் பெரும்பாலும் தாம... மாக அந்த ஊருக்குப் போய்ச் சேர்கின்றன என்று வருத்த... படுகிறார் நெய்வழி கிராமத்தைச் சேர்ந்த ஒருவர்.

—இ...

"என்ன சொல்றாங்க?" வனிதா குழந்தைடாகக் கேட்டாள்.

"நம்ம வீட்டுக்கு ிருந்தாளி வரப்பாறுங்கன்னு!"

'நம்ம' என்ற ார்த்தை நல்ல அழுத்ம் பெற்றிருந்தது.

"புரியலே."

வனிதாவுக்கு முக மல்லாம் வியர்வை பாட்டிட்டுக் கொண் ருந்தது.

"இந்த இசைக் லைஞரோட மாற்றத் க்குக் காரணம் இந்த ிசைச் செல்விதான்... நம்ம' வீடு புரியுதா னித்?"

தன்னுடைய கர்ச்சிப் ால் முகத்தை ஒற்றி யடுத்துக் கொண்டே ந்த வனிதா, விழி யாரங்களிலும் வழித் தடுத்ததைக் கவ ித்து, திடுக்கிட்டான்.

"ஜெயன், என்னை ன்னிச்சிடுங்க..."

"எதுக்கு வனிதா...?"

"உங்க மனசிலே இப் டியொரு பாதிப்பு ற்பட நான்..."

"இதிலே தப்பு ில்லேயே..."

"நான் வனிதாவா ிருந்தா இல்லே ான்..."

"வனிதா..."

"ஆமாம் ஜெயன், இப்போ நான் வனிதா ந்திரசேகர்."

"வனிதா" அதிர்ச்சி ல் அவன் முனகினான்.

"எவ்வளவு சுலபமா கட்டுட்டீங்க ஜெயன்! து சினிமாவோ கற்ப னயோ இல்லே ஜயன்... வாழ்க்கை!"



"தலைபின்னிவிட மீண்டும் மீண்டும் வருக!"

சுகாசினி சொல்லக் கேட்பவர் பிரதாப்
படம்: நன்றி மீண்டும் வருக

"வனிதா, உன்னைப் பார்க்காம நாலு நாள் காத்திருந்தா நாலு வருஷமாத் தோணுது...பத்து மணி நேரமா பேசிட்டிருந்தாலும், எனக்கு பத்து விநாடியாத் தோணுது...இப்பவும் என் மனசு புரியலையா?"

"யோசிச்சுப் பாருங்க...எப்பவாவது அழகான உங்க சாரீரம் பற்றி இல்லாம, சரீரம் பற்றி பேசியிருக்கேனா?"

"இல்லே..."

"எப்பவாவது உங்ககிட்டே அதிகப்படியான உரிமையை எடுத்திட்டிருக்கேனா?"

"இல்லே..."

"நீங்களாவது உங்களை வெளிப்படுத்திட்டிருக்கீங்களா?"

"இல்லே...இல்லே...இல்லே...ஆனால், வனிதா' நீ இன்னொருத்தரோட மனைவின்னு..."

"சொன்னதில்லே, இப்போதான் தப்புன்னு படுது. ஆனால், அதற்கு அவசியமில்லாத அளவுதான் நம்மோட

நட்பு இருந்ததுங்கறது பெருமையா இல்லையா...?''

''வனித், வீணையை நீ காதலிக்கற அளவுக்கு நான் உன்னை நேசிக்கிறேன்.''

''ஜெயன். பல கச்சேரிகள்! வானொலி, பல சந்திப்புகள் எப்பவாவது என்னோடு என் கணவரைப் பார்த்திருக்கீங்களா... என்னை அவர் எப்பவாவது கண்காணிச்சிருப்பாரா ... மாட்டார். அவர் ஜெண்டில்மேன் ஜெயன், ஜெண்டில் மேன்.''

''எந்தக் கண்ணாடியும் பெண்ணை 'அழகி' இல்லேன்னு சொல்றதேயில்லே வனித்...''

''ஒத்துக்கறேன் ஜெயன், அவர் பாணிகிரஹண மந்திரத்தைச் சொல்லி என் கையைப் பிடித்தவர்.''

''சடங்கு, சம்பிரதாயமெல்லாம் நாமா ஏற்படுத்திக்கிட்டதுதானே'' விரக்தியாகச் சொன்னான்.

''கற்பனை வாழ்க்கையாகாது ஜெயன். வாழ்க்கையைக் கற்பனையாக்காதீங்க.''

''மனத்தை மறைச்சு என்னாலே வேஷம் போட முடியாது வனிதா.''

''அந்த மனத்தை நான் பூஜிக்கிறேன். மன ஆசாபாசங்களை அப்படியே கொட்டிட்டீங்க, ஜெயன் ... இதுவும் கன்ஃபஷன் மாதிரிதான்!

''வனித். என்னை புரிஞ்சுக்க முயற்சி செய்...என்னோட பேரும் உன்னோட பேரும் மஞ்சள் தடவின பத்திரிகையிலே வரணும். ஊரே வந்து மணமேடையிலே இருக்கற நம்மை வாழ்த்தணும். என்னோட தயக்கம்தான் வாழ்க்கையிலே பல ஏமாற்றங்களை கொடுத்திட்டுது. இனியும் ஏமாந்து போக மாட்டேன்... மாட்டேன் வனிதா...''

திறமை மட்டும் ஒருவனைச் சிறந்த எழுத்தாளனாக்கி விடுவதில்லை. சிறந்த எழுத்துக்குப் பின்னால் வாழ்க்கை அனுபவங்கள் நிறைந்த ஒரு முழு மனிதன் இருக்கிறான்.

''காதல் வயப்பட்ட மனசு மத்த
மனைவியைக் கூட கேட்குமளவு
பலவீனப் பட்டுடணுமா ஜெயன்?''

''வனிதா...''

''ஜெயன், மேடையிலே பிரபல
யிருந்த நான் அப்போதான் படவுல
நுழைஞ்ச நேரம். நான் திரையிலே
யற நட்சத்திரமில்லே. ஒரு படத்து
என்னோட பங்கிலே, என்னோட
மையை நேரிலே பார்த்த இசையமை
பாளர் ஒருவர் ஒரு விழாவிலே என்னோ
இசையைப் பாராட்டிப் பேசி
பத்திரிகைகளிலே பெரிசு பெரிசா
மெல்லாம் எடுத்துப் போட்டு, எ
ளுங்க. சந்தோஷமா இருந்த
என்னோட கணவருக்கும் பெருமித
இருந்தது. அதுக்கு நடுவிலே
பத்திரிகையிலே செய்தி, என்னை
அந்த மியூஸிக் டைரக்டரை
இணைத்து! நான் நாளெல்லாம் குமு
குமுறி அழுதேன். நான் சின
வுக்குப் போனதைத் தவிர, எந்
தவறும் செய்யலே. அப்போ, அ
என்ன சொன்னார் தெரியுமா ஜெயன்

ஜெயன் பேசவில்லை.

''வனிதா, தவறி மத்தவன்
பட்டாலே ஒரு பெண்ணோட க
போயிடுதுன்னு ஆண் முடிவு பண்ண
டால், பீக் அவர்ஸ்'லே பி. டி.
பஸ்லே ஏறி அடுத்த ஸ்டாப்பில
இறங்கற அத்தனை பெண்களுமே கற்
லாதவளாத்தான் போயிடுவாங்க ...
படறதாலும், தொடுவதாலுமே கற்
போயிடாதுன்னு பெண் நினை
ஆரம்பிச்சுட்டா எவளுமே கற்புள்
ளாக இருக்க முடியாது. கற்புங்க
உடம்பிலே இல்லே வனிதா, உள்
திலேதான் இருக்கு.

''உண்மையான விஷயம் எந்
பத்திரிகையிலே வந்தாலும் அக்க
பட வேண்டியதுதான் நேர்மையா
பொய்யான விஷயம் மஞ்சள்
திரிகையிலேயே கூட வந்தால்த
என்ன நாம் அதை உண்மையாக்க
வரைக்கும் வருத்தப்பட வேண்
இல்லை. பத்திரிகையோட நிறம் பிர
யில்லே; உண்மை நிறம் மாறும இ
தாங்கறதுதான் முக்கியம். நான் உ
நம்பறேன் வனிதா என்று சொன்
அவர்.''

''அது அவரோட கௌரவத்தையும், என் பேர்லே அவருக்குள்ள நம்பிக்கையையும் காட்டுது. நீங்க என் பேரைப் போட நினைக்கிற பத்திரிகையையும், என் பெயரை ஏற்கனவே போட்ட பத்திரிகையும், ஒரே நிறம்தான். ஆனல், அதிலே அந்த நிற பேதத்தைத் தவிர்த்து, எவ்வளவு வித்தியாசம் இருக்கு.''

அவன் மௌனமாக இருந்தான்.

''ஜெயன், நிகழ்ச்சியாலே நாம் பாதிக்கப்படறதைவிட அதைப் பற்றிய நினைப்புகளால் பாதிக்கப் படறதுதான் அதிகம். கெட்ட கனவாக நெனைச்சு 'சட்'டென்று மறந்துடுங்கன்னு சொல்ல மாட்டேன். மறக்க முயற்சி பண்ணுங்க...''

''வனிதா...''

''வாழ்க்கையிலே காதல் ஒரு வாய்ப்புதான். அதுவே வாழ்க்கையாயிடாது, ஜெயன்.''

புரொடக்ஷன் மானேஜர் அவர்களை நெருங்கி வர அவள் நிறுத்தினள்.

''இன்னிக்கு ரிக்கார்டிங் கேன்சல் அம்மா. ஐயாம் வெரி ஸாரி சார்.''

''எந்த ஏமாற்றமும் எனக்கு இனி அதிகபட்சமாக இருக்காது.''

விரக்தியின் தொனி ஜெயனின் பேச்சில் விரவியிருந்தது.

மானேஜர் நகர்ந்தார்.

வனிதா கண்களைத் துடைத்துக் கொண்டு, காரில் உட்கார்ந்து, என்ஜினை ஸ்டார்ட் செய்ய...

''எக்ஸ்ச்யூஸ் மீ மேடம், நியூஸ்?''—நிருபர்.

''இன்னிக்கு ரிக்கார்டிங் கான்சல்,''

''ஸார், நல்ல நியூஸ்?''

''இந்த இசைக் கலைஞனின் முதல் பாடலே பதிவாகலே?''

''சார்... இது...''

''முகாரி, எந்த இசைக் கருவி வழியாக வந்தாலும் சோகமாத்தான் தெரியும். அது கருவியோட குற்றமில்லே!''

ஜெயன் சொல்லிவிட்டுத் திரும்பி நடக்க...

கார் நகர்ந்தது. *

# மாலைவேளை

'கலைமகள்' பொன்விழா கச்சிதமாய் நடைபெற்றது. ஆபட்ஸ்பரியின் ஹால் நிரம்பி வராண்டாவிலும் கூட்டம். மத்தியிலிருந்து ஓர் அமைச்சர், மாநிலத்திலிருந்து ஓர் அமைச்சர். ஆர்.வி.யும், ஆர்.எம்.வி.யும்!

'நான் கலைமகளின் செல்லப்பிள்ளை' என்று தன்னை வர்ணித்துக் கொண்டார் அகிலன். 'அரசியலையும், சினிமாவையும் பற்றி எழுதாமலே ஐம்பதாண்டு வாழ்ந்திருக்கும் பத்திரிகை' என்று கலைமகளைப் பாராட்டிப் பேசாதவர்களே இல்லை.

சினிமாவும், அரசியலும் பத்திரிகைகள் தீண்டத்தகாதவை அல்ல என்று தம் கருத்தைத் துணிந்து வெளியிட்டவர் ஆர். எம். வீ. மட்டும்தான்.

நிறைய இளைஞர்கள் விழாவுக்கு வந்திருந்தது நிறைவான விஷயம். கி.வா.ஜ.வின் சேவையைப் பாராட்டி கலைமகள் நிறுவனம் ஒரு தங்கச் சங்கிலியை அவரது கழுத்தில் அணிவித்தது. விழா முடிந்து மேடையை விட்டுக் கீழே இறங்கிய கி.வா.ஜ. அதைக் கழற்ற முயன்றார். முடியவில்லை. பின்புறமிருந்து அகிலனைக் கழற்றச் சொன்னார். அகிலனுக்கும் அது எளிதாக இல்லை. 'கழுத்தில் விழுந்த மாலையல்லவா? அதுதான் கழற்ற வரவில்லை' என்றார் கி.வா.ஜ.

கலைமகளுக்கு ஐம்பது வயதானதோ, ஐம்பத்தாறாயிரம் பிரதிகள் விற்பனையாவதோகூட

வந்திருந்தவர்களுக்கு ஆச்சரியமாயில்லே. ஆனல் எழுத்தாளர் ஜாம்பவான் பெ. நா. அப்புஸ்வாமி அவர்கள் தொண்ணூறு வயதைத் தோள்மீது போட்டுக் கொண்டு, கூன் இல்லாமல், கைத்தடி இல்லாமல் தெளிவான பார்வையோடு நேராக நிமிர்ந்து நடந்து மேடையில் போய் அமர்ந்த அதிசயம்தான் அத்தனே பேரையும் வியக்க வைத்தது.

லிஸ் கார்னர் சாந்தி விஹார்-ரின் பக்கத்தில் ஓர் உயரமான கட்டிடத்திலிருந்து சதங்கை ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. மாடியேறிப் பார்த்தால், வெளிநாட்டுப் பெண் ஒருத்தி பரதநாட்டிய ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தார். ஆம்ஸ்டர்டாமைச் சேர்ந்த பெண்ணும். பெயர் லிஸ்பெத்! சின்ன வயதிலேயே சாஸ்திரிய பாலே, மாடர்ன் பாலே, ஜாஸ்பாலே என்று எல்லாவற்றையும் கற்றுக்கொண்டு வந்து இப்போது நாலரை ஆண்டுகளாக பரதநாட்டியம் கற்று வருகிறர். இன்னும் சில மாதங்களில் சரித்திரத்தில் பட்டம் பெறப் போகும் லிஸ்பெத் செய்திருக்கும் ஆராய்ச்சியின் தலைப்பு: பதினேழாம், பதினெட்டாம் நூற்ருண்டுகளில் 'Mid wifery' எனப்படும் 'செவிலித் தாய்' முறை எப்படி வளர்ச்சியடைந்து வந்திருக்கிறது?'' ஆம்ஸ்டர்டாமிலேயே நடனப்பள்ளி நடத்தி வரும் திருமதி ராஜாமணிதான் (பெங்களூரைச் சேர்ந்தவர்) லிஸ்பெத்தின் குரு! ராஜாமணியின் கணவர் ஒரு டச்சுக்காரர். க்னூல்ஸ் என்று பெயர். இந்த க்னூல்ஸுக்கு இந்தியாவின் மீது ஏகப்பட்ட மோகம்! வரும் டிசம்பர் மாதம் இங்கே வந்து விரதம் இருந்து இருமுடி தாங்கி சபரிமலேக்குப் புனித யாத்திரை போகப் போகிறர்.

தி. நகர் ரங்கநாதன் தெருவில் வியாபாரம் நடத்துபவர்கள்— அதாவது முறையாக ஒரு கட்டிடத்தில் கடை வைத்து வியாபாரம் செய்பவர்கள்— தங்களுக்கென ஒரு சங்கம் அமைத்துக் கொண்டு பாம்குரோவ் ஹோட்டலில் தங்களது ஆண்டுக் கூட்டத்தை நடத்தினர்கள். இப்போது இவர்களுக்கிருக்கும் மிகப் பெரிய பிரச்னே: ''அனுமதியின்றி பிளாட்பாரங்களிலும் தங்கள் கடை வாசல்களிலும் குவிந்து போய் இருக்கும் ஏராளமான சில்லறை வியாபாரிகளே எப்படி அப்புறப்படுத்துவது?''

கடை வாசலில் வியாபாரம் பண்ணுவதை ஆட்சேபித்தால் கெட்ட வார்த்தைகளால் அசிங்கமாகப் பேசுகிறர்களாம் அந்த பிளாட்பார வியாபாரிகள்!

வழக்கமாக ரங்கநாதன் தெருவிலேயே தனது கூட்டத்தை நடத்தும் இந்தச் சங்கம் இந்த ஆண்டுதான் ஹோட்டல் ஒன்றில் ஆண்டுக் கூட்டத்தை நடத்தி பத்திரிகையாளர்களேயும் அழைத்திருக்கிறது. —கஸ்தூ

லிஸ்பெத்



# ருட்டுப் பெண்



இளம் டைரக்டர் ரவிசேகர் புதுமை டைரக்டராம்! படத் துப் படம் புதுமை செய்து ண்டே வருகிருராம்! நான் த் திரையுலகில் இருபது வருடம் ரக்ஷன் துறையில் செய்யாத மையையா இந்த ரவிசேகர் ந்த வருடத்தில் புகுத்தி டார்!''

ான் மனதிற்குள் ரவிசேகரை த்து அலட்சியமாய்ச் சிரிக் ன்.

சார்! ஹீரோ தன் அம்மாவுக்கு யஸா இருக்குன்னு வீட்டுக்குக் ம்பிப் போய்ட்டாராம்'' என்று உதவி டைரக்டர் வந்து ல்கிருர்...

டப்பிடிப்பை ரத்து செய்து டுக் கிளம்பும் நேரத்தில் டியோவின் அடுத்த ஃப்ளோரில் சேகர் ஷூட்டிங் இருப்பதாக கிறேன்.

ன்னதான் செய்கிருன் பார்ப் மே!'... நான் நேரடியாக அங்கே கிறேன்.

ண்டைக் காட்சியை ரவிசேகர் மாக்கிக் கொண்டிருப்பதைப் க்கிறேன்.

ன்னைப் பார்த்ததும் ரவிசேகர் வருகிருன்.

வாங்க ஜம்புநாதன் சார். உட் ங்க. பையா! சாருக்கு டிரிங்ஸ் கொண்டு வா' என்னை வரவேற்று விட்டு அவன் படப்பிடிப்பில் ஆழ்ந்து விடுகிருன்.

''இந்தப் படத்தில் ஏதாவது புதுமை உண்டா?'' நான் அருகில் இருப்பவரிடம் கேட்கிறேன்.

குருட்டுப் பெண் ஒருத்தியை இந்தப் படத்தில் நடிக்க வைச்சிருக் கார், சார்'' என்று பதில் வருகிறது. சண்டைக் காட்சியைப் பார்க்கிறேன்.

குருட்டுப் பெண்ணை நான்கைந்து ரவுடிகள் கற்பழிக்க முயல்கிருர்கள். எங்கிருந்தோ திடுமென ஓடிவரும் வீராங்கனை ஒருத்தி அவர்களை கராத்தே அடி கொடுத்து விரட்டு கிருள்.

படப்பிடிப்பு முடிந்து, குருட்டுப் பெண் என் அருகே வந்து உட்காரு கிருள்.

நான் அவள் நடிப்பைப் பாராட்டு கிறேன்...

ரவிசேகர் என்னிடம் சிரித்தபடி வருகிருன்.

''சார்! நீங்க நினைக்கிற மாதிரி இந்தப் பெண் உண்மையிலே குருடு இல்லை. வீராங்கனையா நடிச்ச பெண் தான் குருடு. நிஜ வாழ்க்கையில்தான் அவள் கண் தெரியாதவள். படத்தி லாவது கண் தெரிஞ்சவளாக நடித்து சந்தோஷப் படட்டுமே என்று இப்படி செஞ்சேன்'' என்று ரவிசேகர் விளக்குகிருன்.

—விஜயா கண்ணன்

...சாக மழை பெய்து கொண்டிருந்த அந்த இருட்டான சாயங்கால நேரத்தில், ராம்நகர் க்ளினிக்கிற்குள் அவன் நுழைந்தபோது டாக்டர் ஜெகதீசன் 'பேஷண்ட்டு'கள் இல்லாமல் ஹாய்யாக அன்றைய ஹிந்துவில் மூழ்கியிருந்தார்.

''வணக்கம் டாக்டர்!''

ஜெகதீசன் தலை நிமிர்ந்தார்.

வந்தவனுக்கு வயது முப்பது இருக்கலாம். கறுப்பு நிறம். முன்புறம் வழுக்கையடிக்க ஆரம்பித்துவிட்ட தலை. விழிகள் ரத்தச் சிவப்பாய் கலங்கலாய்த் தெரிய

# ஆர்.எஸ்.புரம் திவான் பகது...

மீசையை கொஞ்சம் சிரத்தையாய் வளர்த்திருந்தான்.

''வாங்க.'' என்ற டாக்டர் அவனைப் பார்த்துப் புன்னகைத்தார்.

வந்தவன் மெல்லிய குரலில் கேட்டான். ''டாக்டர்...இப்போ இந்த அறைக்கு யாரும் வரமாட்டாங்களே?''

''வரமாட்டாங்க...உங்களுக்கு என்ன உடம்பு...?'' ஸ்டெத்தோடு அவனை நெருங்கினார் ஜெகதீசன். 'பயல் எவகிட்டயாவது போய் செமத்தியா வியாதியை வாங்கிட்டு வந்துட்டான் போலிருக்கு...அதான் இப்படி முழிக்கிறான்' ஜெகதீசனின் மனசில் எண்ணம் ஓடியது.

''டாக்டர் ... என்னோட உடம்புக்கு ஒண்ணுமில்லை. உங்க கிட்ட ஒரு சின்ன கன்சல்டேஷனுக்காகத்தான் வந்தேன்.''

''என்ன விஷயம்?''

''டாக்டர் ... உங்களுக்கு கல்யாணமாகி எத்தினி வருஷம் இருக்கும்?''

ஜெகதீசன் சட்டென்று தலை நிமிர்ந்தார். முகத்தில் லேசாய்க் கோபம் உட்கார அவனைப் பார்த்தார். ''எதுக்காகக் கேட்கறீங்க?''

''ம் ... சொல்லுங்க. கல்யாணமாகி எத்தினி வருஷம் ஆச்சு!'' அவனுடைய குரலில் ஒரு வித மிரட்டல்தனம்.

... அதற்குப் ப... டாக்டர் ஜெகதீசன்.

''அஞ்சு வருஷம் ஆச்சு!''

''மூணு வயசுல ஒரு பையன் சி... வித்யாலயத்தில படிக்கிறான் இல்லை...''

''உம்...''

''உங்க மனைவி நிர்மலா மேலே... பையன் அபிஷேக் மேலேயும் உங்க... ஏகப்பட்ட பிரியம் இல்லையா...?''

''உம்''

''அவங்க ரெண்டு பேரும் ரொ... நாளைக்கு உயிரோடு இருக்கணு... நீங்க ஆசைப்படறீங்களா...?''



முகம் மாறினார் டாக்டர் ஜெகதீ... அதிர்ச்சி அவரைத் தாக்க ... வராமல் குழறினார்.

''ஏய்...நீ என்ன சொல்றே?''

''டாக்டர் பதட்டப்படாதீங்க...உ... கிட்ட ஒரு உதவியை எதிர்பார்த்து... வந்திருக்கேன். உங்களாலே மு...

ிதான் அது. அந்த உதவியை நீங்க
க்கு செஞ்சுட்டா உங்க மனைவியும்
னும் உங்களுக்குச் சொந்தம்.
லேன்னு மண்ணுக்குச் சொந்தம்.''

ாக்டர் ஜெகதீசன் சட்டென்று
ர்த்து சுற்றும் முற்றும் பார்த்தார்.
வன் மெல்லச் சிரித்தான். ''யாரை
து உதவிக்குக் கூப்பிடலாம்னு
கறீங்களா, டாக்டர்! அப்படியெல்
முட்டாள்தனமா முயற்சி பண்ணி
நீங்க...உங்க மனைவியையும், மகனை
குறி வெச்சுகிட்டு என்னோட அடி
ஒருத்தன் உங்க பங்களாவுக்கு
த்திலேயேதான் சுத்திட்டிருக்கான்.

# ரோமல்...



களாலே எனக்கு ஏதாவது ஆபத்து
நா...அங்கேயும் அவனாலே உங்க
விக்கும் மகனுக்கும் ஆபத்து வரும்.
னால புத்திசாலித்தனமா நடந்துக்
து உங்களுக்கு நல்லது.''

ாக்டர் ஜெகதீசன் அவனையே இமைக்
ல் பார்த்தார்.

என்னால் உனக்கு என்ன உதவி
ணும்...?''

''சொல்றேன் டாக்டர்...சொல்றேன். என்னோட பேரு தேவராஜன். தேவு தேவுன்னு எல்லாரும் கூப்பிடுவாங்க. அம்மா, அப்பா, பெண்டாட்டி புள்ளைன்னு எந்த பந்தமும் இல்லாதவன் நான். போன பதினஞ்சு நாளைக்கு முன்னாடிதான் ஜெயில்லயிருந்து ரிலீஸாகி வந்தேன்.''

ஜெகதீசன் முகம் கறுத்தார் ''ஜெயில்லயிருந்து வர்றியா?''

ராஜேஷ்குமார்

"உம்! நானும் என்னோட சிநேகிதன் ஆரோக்கியராஜும் ஒரு வருஷத்துக்கு முன்னாடி எஸ். ஆர். பி. காலனியில் ஒரு பங்களாவில் பூந்து நகைகளைத் திருடினோம். நகைகளை ராஜவீதி நகைக் கடையில விக்கப்போன நான் போலீஸ்ல மாட்டிகிட்டேன். ஆரோக்கியராஜை காட்டிக் கொடுக்கக் கூடாது என்று மனசில் தீர்மானம் செய்துகிட்டேன். ஆனா ஆரோக்கியராஜ் பயந்துட்டான். நான் எங்கே போலீஸ்ல அவனைக் காட்டிக் குடுத்திடப்போறேனோன்னு பயந்து போலீஸ்ல சரணடைஞ்சு அப்ரூவரா மாறிட்டான். மாறினதுமில்லாமே போலீஸாலே கண்டுபிடிக்க முடியாத, நான் கொஞ்சங்கூட சம்பந்தப்படாத ரெண்டு திருட்டை நான்தான் செஞ்சேன்னு கோர்ட்ல சொன்னான். ஒரு வருஷம் கடுங்காவல்ல போட்டாங்க... அனுபவிச்சுட்டு ரெண்டு வாரத்துக்கு முன்னாடிதான் ரிலீஸானேன்."

அவன் பேச்சை நிறுத்த டாக்டர் ஜெகதீசன் ஹீனமான குரலில் கேட்டார்.

"நான் உனக்கு என்ன உதவி பண்ணணும்! அதை முதல்ல சொல்லு!"

அவன் தொடர்ந்தான் "ம்...விஷயத்துக்கு வந்துட்டேன் டாக்டர்... ஆரோக்கியராஜோட பச்சை துரோகத்தனம் எம்மனசில எரிமலையா குமுறிக்கிட்டிருந்தது. ஜெயில்லயிருந்து வந்ததும் ஆத்திரத்தை வெளிக்காட்டாமே எப்பவும் மாதிரியே அவன்கூட பழகினேன். ஆரோக்கியராஜ் அழுதான். போலீஸோட அடிக்கு பயந்துகிட்டு கோர்ட்ல பொய் சொன்னதா மாய்மாலம் பண்ணினான். 'பரவாயில்லே; போனது

> தன்னைத்தானே புகழ்ந்து கொள்பவர்களைக் கடவுள் வெறுக்கிறார்.

போகட்டும் விடு'ன்னு நானும் பே சமாதானம் பண்ணிகிட்டே பழகி ஆரோக்கியராஜை உடனடியா கொலை செஞ்சா போலீஸோட பா பளிச்னு எம்மேலதான் அதனால அவன் கூட இந்த பதி நாளும் நல்லதனமாவே ப இன்னிக்கு—ஒரு அரைமணி நேரத் முன்னாடிதான் அவனை அவனோட வெச்சே கொலை பண்ணிட்டேன். இ இந்த 'நைலான் கயிறாலே' அவ கழுத்தைச் சுத்தி ஒரே இழு க்ளோஸ்!"

டாக்டர் ஜெகதீசனின் உடல் தில் உதறிக் கொண்டது. நெஞ்சு அசுர வேகத்தில் அடித்துக் கொ தொண்டை வறண்டது.

அவன் தொடர்ந்தான் "டாக் இந்த இடத்துலதான் உங்க எனக்கு தேவைப்படுது. போலீ எப்படியும் எம்மேல சந்தேகம் கண்டிப்பா என்னை விசாரிப்ப அப்படி அவங்க விசாரிக்கிறப்போ சொல்லக்கூடிய பொய் இது 'நெஞ்சுவலின்னு சொல்லி உங்க க் கில் கடந்த ரெண்டு நாளா படு டிருந்தேன்' போலீஸ்கிட்டே சொ போறேன். போலீஸும் உங்களை விசாரிப்பாங்க. நீங்களும் 'ஆமாம்' சொல்லி அதை ஊர்ஜிதம் செய்யணு

டாக்டர் ஜெகதீசன் ஆத்திர அவனை ஏறிட்டார். "நீ பண் கொலைக்கு என்னையும் உடந்தையா பார்க்கறியா...?"

"அந்த எண்ணம் எனக்கு இ டாக்டர்... இப்பத்தான் நான் ஜெ லேருந்து வந்திருக்கேன். திரும் மாட்டிக்க நான் விரும்பலே... போ ஸோட சந்தேகப் பார்வையிலி நான் சுத்தமா விலகிட ஆ ஆரோக்கியராஜ் கொலையான ச நான் ட்ரீட்மெண்ட்டுக்காக க்ளினிக்ல அட்மிட்டான ம இருக்கணும். நீங்க சொல்லப் போ ஒரு சின்னப் பொய்தான். அ உங்களுக்கு எந்த விதமான பாத வந்துடப் போறதில்லே. நீங்க எ உதவ மறுத்தா உங்க மனைவி மகளையும், உங்க வாழ்க்கையிலி மைனஸ் பண்றதைத் தவிர வழியே எனக்கு இல்லே." அவன் 'செய்யக் கூடிய' சாத்தியம் தெரிந்

படி ஏதும் செஞ்சு
" ஜெகதீசனின் குரல்
து.

க்டர் அநாவசியமா
ப் பறிக்க எனக்
ணும் ஆசையில்லே நீங்க
உதவி செஞ்சா உங்க
ருந்து நான் விலகிடு
நீங்க என்னே போலீசுக்குக்
கொடுக்காமே,
வே வேற ஏதாவது
போலீஸ்ல மாட்டிக்
லும் என்னலேயோ...
அடியாள் மூல
உங்க மனைவிக்கும்,
கும் எந்த ஆபத்தும்
"

.நீ சொல்ற மாதிரியே
ல சொல்லிடறேன்"
ஜெகதீசன் எங்கோ பார்த்துக்
டே சொன்னார்.

முகம் மலர்ந்தது.

ம்ப நன்றி டக்டர்! உங்க
கில எனக்கு ஏதாவது ஒரு
டை குடுங்க. நாளைக்கு சாயந்
வரைக்கும் இருந்துட்டுப் போயிட

ர் ஜெகதீசன் பலியாடு மாதிரி
சத்தார்.

ன்ஸ்பெக்டர் கோகுல் அவஸ்தை
தலையைக் கீறிக் கொண்டார்.
உட்கார்ந்திருந்த சப்-இன்ஸ்
சதானந்தத்திடம் மெல்லிய
சொல்லிக் கொண்டிருந்தார்.

லையாள் ஆரோக்கியராஜுக்கு
ற ஒரே எதிரி தேவராஜன்தான்.
செஞ்சிருந்தா அவன்தான் செஞ்
ணும். ஆனா நேற்றும் அதற்கு
ளும் அந்த தேவராஜன் 'நெஞ்சு
க டாக்டர் ஜெகதீசனோட
கில் அட்மிட்டாகி இருந்திருக்
டாக்டரும் அதைத்தான் சொன்
போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்
ரோக்கியராஜ் நேற்று சாயந்தரம்
மணியிலிருந்து ஏழு மணிக்குள்
செய்யப்பட்டிருக்கணும். அந்த
ல் தேவராஜன் க்ளினிக்கில் இருந்
றன். அவன் மேல சந்தேகப்பட
விட்டுட்டு ஆரோக்கியராஜுக்கு




புதுசா வேற யாராவது எதிரிங்க இருக்
காங்களான்னு பார்க்கணும்."

"யூ...ஆர் கரெக்ட் ஸார்"— சப்-
இன்ஸ்பெக்டர் சதானந்தம் சொல்லிக்
கொண்டிருந்த அதே நேரம் போட்டோ
கிராபர் உள்ளே நுழைந்தார்.

"ஸார் நேற்றைக்கு எடுத்த
போட்டோஸ்..." — கவரைப் பிரித்து
புகைப்படங்களை நீட்டினார் போட்டோ
கிராபர்.

விழி பிதுங்கிக் கிடந்த ஆரோக்கியராஜ்
விதவிதமான கோணங்களில் காமிரா
வில் அடைக்கப்பட்டிருந்தான். இன்ஸ்
பெக்டர் கோகுல் ஒவ்வொன்றாய்
பார்த்துக் கொண்டிருக்க — சப்-இன்ஸ்
பெக்டர் சதானந்தம் போட்டோகிராப
ரிடம் கேட்டார்.

"அதென்ன ... இடது கையில் இன்
னொரு கவர்..."

"ஒரு கல்யாண பார்ட்டியோட
போட்டோஸ் ஸார். மாப்பிள்ளை
என்னோட ஃப்ரெண்ட். நான்தான்
படம் எடுக்கணும்னு சொல்லிட்
டான். ஜானவாசம் வரைக்கும் நான்
படம் எடுத்தேன். அப்புறம் வேறொரு
போட்டோ கிராபர்கிட்டே அந்த
வேலையை ஒப்படைச்சுட்டு 'ஆரோக்கிய
ராஜ்' மர்டர் போட்டோஸ் எடுக்க
ஸ்பாட்டுக்கு போயிட்டேன். ஒரே

நால்ல கல்யாணத்துக்காகவும் மர்டர்க்காகவும் போட்டோ எடுக்க மனசுக்கு என்னமோ மாதிரி இருந்தது ஸார்.''

சதாவந்தம் புன்னகை பூத்தார்.

''ஒரு போலீஸ் போட்டோகிராபரா இருந்துட்டு இப்படியெல்லாம் ஃபீல் பண்ணக் கூடாது நீங்க! எங்கே அந்த மேரேஜ் போட்டோலை குடுங்க பார்க்கலாம்.''

கையை நீட்டினுர் சதானந்தம்.

கவரைக் கொடுத்தார் போட்டோ கிராபர்.

பத்து பதினைந்து போட்டோக்கள் இருந்தன. எல்லாமே ஜான்வாச மாப்பிள்ளை அழைப்பு போட்டோக்கள்.

அலங்கரித்த காரில் மாப்பிள்ளை சிரிப்போடு பவனி வர—உறவுக் கூட்டம் தொடர்ந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு போட்டோவையும் பார்த்துக் கொண்டு வந்த சதானந்தம் அந்தக் கடைசி போட்டோவைப் பார்த்ததும் சரேலென நிமிர்ந்தார்.

ஒரு உற்சாகத் துள்ளலோடு எழுந்தார் ''ஸார். இந்த போட்டோவைப் பார்த்தீங்களா?'' இன்ஸ்பெக்டர் கோகுலிடம் நீட்டினுர்.



''என் மனைவி பரிமாறும் போது சமையலில் எந்தக் குறையும் சொல்ல மாட்டேன்!''

''ஏன், பயமா?''

''நான் சமைத்ததைத் தானே அவள் பரிமாறு கிருள்!''

—உ. ராஜாஜி

முகத்தில் பிறந்த கேள்விக் குறி போட்டோவை வாங்கினுர் கோகு

பார்த்தார்,

மாப்பிள்ளையின் கார் ரோட்டி பெட்டிக் கடை அருகே நின் பெட்டிக் கடையின் ஓரத்தில் இ கயிற்றில் சிகரெட்டை பற்ற வை கொண்டிருந்தான் தேவராஜன். னுக்கு வலது பக்கத்திலும், இடது ப திலும் ஜனங்கள் உதிரிகளாய் நின் தார்கள்.

''தேவராஜன்!''—ஆர்வமாய்ச் ளுர் கோகுல்.

''எஸ்...ஸார்...''

போட்டோ கிராபரை பார்த் கோகுல். ''இந்த போட்டே நேற்று எடுத்தீங்க?''

''எஸ்...ஸார்.''

''எத்தனை மணிக்கு?''

''ஆறரை மணிக்கு ஸார்.''

''எந்த ரோட்ல?''

''ஆர். எஸ். புரம் திவான் ப ரோட்ல'' சதானந்தம் சொ ''ஆரோக்கியராஜ் வீட்டுக்குப் பக் ரோடு ஸார் அது.''

தனக்கு முன்னல் நீட்டப் போட்டோவைப் பார்த்ததும் செ யாய் அதிர்ந்தான் தேவராஜன்.

ஆரோக்கியராஜை முடித்து வி பதற்றமில்லாமல் வெளியே வ திவான் பகதூர் ரோடில் பிரவேசி யில் எதிரே வந்த கல்யாண ஊர் தைக் கண்டு—பெட்டிக் கடையே ஒதுங்கி—சிகரெட் பற்ற வைக்க மு போது — மாப்பிள்ளையை போட் எடுக்க ஒரு போட்டோகிர அவனுக்கு பின்புறமாய் நகர் மெல்ல நினைவுக்கு வர—

இனி தப்பிக்க வழியில்லை என் உணர்ந்து—

இன்ஸ்பெக்டரை நோக்கித் தன் கைகளையும் நீட்டினுன்.

2-5-82 இதழில்
வெளியான போட்டியில்
சிறந்த ஜோக்குக்கு
ஓட்டுப் போட்டவர்களின்
பெயர்ப் பட்டியல்
அடுத்த இதழில்...

...மோல் பாலேகர் ஒரு நடிகர் ...தரியும். ஒரு டைரக்டர் தெரியுமா? ...ராத்தியில் அவர் எடுத்துள்ள படம் ...ஆக் ரீத்' (நம்ப முடியாதது). இதில் ...இவருடைய மனைவி ...த்ரா பாலேகரும் நடித்துள்ளார். ...டம் பிரபல டைரக்டர்களுக்கே ...வால் விடும் அளவுக்குப் பிரமாதமாக அமைந்துள்ளதாம்.

எஸ். பி. பாலசுப்பிரமணியத்தின் பாடல் என்றால் ஸ்ரீப்ரியாவுக்கு உயிராம். ஐந்து நிமிடம் ஓய்வு கிடைத்தால் உடனே அவர் டேப்பைப் போட்டுப் பாட்டைக் கேட்க ஆரம்பித்து விடுகிறார். கமல் அடிக்கடி இதைப் பற்றிக் கேலி செய்வாராம் ஸ்ரீப்ரியாவிடம்.

இப்போது ஜெர்மனியில் மூன்று டைமென்ஷன் தொலைக்காட்சி வந்திருக்கிறது. ஒரு கண்ணாடியை அணிந்து கொண்டு பார்த்தால் டி. வி. உருவங்கள் 'த்ரீ'டியில் தெரியும். இதே தத்துவத்தைப் பத்து ஆண்டுகளுக்கு முன்னால் கண்டுபிடித்தார் சென்னை கிண்டி என்ஜினீயரிங் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் நித்யானந்தம். அவர் கண்டுபிடித்த தத்துவப்படி கண்ணாடி எதுவும் அணியாமலேயே 3-D பார்க்க முடியுமாம்!

தொகுப்பு: சீதா, பாலாஜி, ஜீவஜோதி

சிலோனில் படித்துக் கொண்டிருந்தபோது எனக்குப் பதினைந்து வயதிருக்கும். நண்பர் ஒருவர் இறந்து விட்டதாக துக்கம் விசாரிக்கப் புறப்பட்டார் மாமா. நானும் உடன் சென்றேன்.

பெண்கள் கும்பல் கும்பலாகச் சோகத்தில் மூழ்கியிருந்தனர். நான் இறந்தவர் உடலருகே மௌனமாக அமர்ந்திருந்த பெண்மணியோடு உட்கார்ந்திருந்தேன். சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் கணவர் இவ்வளவு இளம் வயதில் இறந்தது குறித்து என் அனுதாபத்தைத் தெரிவித்து விட்டு எழுந்தேன். சுற்றிலும் இருப்பவர்கள் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள். என்னவென்று விஷயம் புரியவில்லை.

வெளியே வந்ததுதான் தாமதம். என் மாமா பல்லைக் கடித்துக் கொண்டு சீறினார்: "முண்டம்! விஷயம் தெரியவில்லையென்றால் பேசாமலிருக்கணும்.

நீ ஆறுதல் சொல்ல வேண்டிய நபர் கும்பலுக்கு நடுவே இருந்தார். துக்கம் விசாரிப்பதற்காக வந்திருந்த கவர்னரின் மகளிடம் நீ அனுதாபம் தெரிவித்திருக்கிறாயே. அந்தப் பெண்ணுக்குத் திருமணம் ஆகி இரண்டு மாதங்கள் கூட ஆகவில்லை. அவளிடம் போயா அப்படிப் பேசுவது?" என்று கடிந்தபோதுதான் என் தவறு புரிந்தது.



# நல்லதே கண்டு நல்லதே பேசி...

லதா ராமகிருஷ்ணன்

இன்னும் இருபது நிமிடங்களில் இந்த ரயிலின் பிரயாணம் தொடங்கி விடும். பிளாட்பாரம் பூராவுமாகப் பரவி நின்ற பிரிவின் சோகக் களை என் முகத்தையும் படர்ந்து பாதித்திருக்கிறது. இதோ விழியோரங்களில் அந்த சோகம் அழுகைத் துளிகளாக மாறிக் கொண்டிருக்கிறது...

விவேக் அண்ணாவைப் பார்க்கிறேன். என்னை விட ஐந்து வயது பெரியவன். முதலிரண்டு அண்ணாக்களைப் போலப் பிறப்பால் மட்டுமல்லாமல், பாசத்தால், பழக்கத்தால், பரிவான வார்த்தைகளால் எனக்கு பந்தப்பட்டுப் போனவன்.

''என்னடா பெரிய்...ய பி.காம் படிச்சுக் கிழிக்கிறே? ஆனா, ஊனா 65 ரூபாய் ஸ்பெஷல் ஃபீஸ், அறுநூற்றைம்பது ரூபா இன்னொரு ஃபீஸ்னு கேட்டுடறது. இங்கே என்ன காசு மரத்திலேயா காச்சுக் கொட்டறது?'' —அரசாங்கக் கல்லூரியில் படிக்கும் நான் அறுநூற்றைம்பது ரூபாய் கேட்டதே இல்லை என்பதைச் சற்றும் எண்ணிப் பார்க்காமல் மூர்த்தியண்ணா கரடியாய்க் கத்தும் போதெல்லாம்—கத்திய பின், கடைக் கண்ணால் அறையினுள்ளிருந்து அவரை ஆட்டிப் படைக்கும் 'சூத்ரதாரி' மன்னியின் ஆமோதிப்பை அறியும் ஆவலில் பார்க்கும் போதெல்லாம் — பட்டென்று, ''வருகிற இரண்டாயிரம் ரூபாய் வருமானத்தில் பிச்சைக் காசு அறுபத்தைந்து ரூபாய்க்கு ஆயிரம் சுடுசொற்களை அள்ளித் தெளிக்கிறாயே — அட, சே போ'', என்று அடித்துச் சொல்ல வேண்டும் போல் மனதில் அரிப்பெடுக்கும். விவேக் அண்ணாவின் விழிப் பார்வையில் அடங்கி விடுவேன்.

அந்தப் பார்வையில்தான் அன்பின் அரிச்சுவடியை நான் அறிய முடிந்தது. காருண்யம் கனிந்து வழியும் அந்தக் கண்கள் ... மலர் மாலையாய் என் தோளில் அணைந்து விழும் அவன் கைகள் ... அன்று மாலையே எனக்கு வேண்டிய அறுபத்தைந்து ரூபாயை அவன் கொண்டு வந்து கொடுத்து விடுவான். அவன் சம்பளம் தொள்ளாயிரம் ரூபாய்தான்.



''நீ மட்டும் கஷ்டப்படணும்னு என்னண்ணா தலையெழுத்து? உன்னோட தொள்ளாயிரத்துல ஐந்நூறை வீட்டுச் செலவுக்குக் கொடுத்துடறே...மீதி பணத்துலே அண்ணா பசங்களுக்கு, வேலையில்லாத அந்தத் தம்பிக்கு, விழிகளில் விவாக ஆசையை விரித்து வைத்துக் கொண்டிருக்கிற உன் தங்கைக்கு—இப்படி எல்லாருக்கும் தானம் கொடுக்கிறே. உனக்கிருக்கிற கடமை அவங்க ரெண்டு பேருக்கும் கிடையாதா?'' எத்தனை முறை பொறுக்க முடியாமல், நானும், அவனுமாக மாடியில் அதையும், இதையுமாக, அலசிக் கொண்டிருந்த சமயத்திலெல்லாம் ஆத்திரத்துடன் கேட்டிருக்கிறேன்! அவன் சிரிப்பு ஒன்று தான் பதிலாக வரும்!

''இருக்கப் போறது கொஞ்ச நாளைக்கு சந்துரு. அதையும் ஏன் ஒருத்தரையொருத்தர் திட்டிண்டு, ஒருத்தர் மேல் ஒருத்தர் கோபப்பட்டு, குரோதம் வளர்த்துண்டு, பொறுமையில வெந்துண்டு ... முடிந்தவரைக்கும் மத்தவங்க கிட்ட நல்லதே பேசி .. நல்லதே செய்து...''

எனக்கு நினைவு தெரிஞ்ச நாளாக விவேக் அண்ணா. இந்த 'நல்லதே பேசி, நல்லதே செய்து' தான் அறிந்திருக்கிறேன்.

"ஏண்ணு இப்படி இருக்கே? ராகவன் அண்ணு 1,200க்கு மேல சம்பளம் வாங்கறுனே...அக்கா கல்யாணத்துக்கு அவனே விட நீ ஏன் அதிகம் கொடுக்கறுய்?"

"யாருக்குக் கொடுக்கறேண்டா? நம்ம அகிலாவுக்குத்தானே! ரிடையராகி நிராதரவா உட்கார்ந்திருக்கிற அப்பாகிட்டே, "உன் பெண் கல்யாணத்தை நடத்த எங்களைத்தான் நீ நம்பியிருக்கே" என்று நிர்த்தாட்சண்யமா சொல்கிற மாதிரி நாம் நடந்துக்கலாமா சந்துரு?"

அந்த ஆறுமாதம் விவேக் அண்ணு அலைந்த அலைச்சல்...! அவன்தான் அதிகம் கொடுத்தவன். அது பற்றிய பிரக்ஞையே இல்லாமல் தன் அன்றாட வாழ்க்கையைத் தொடர்ந்த போது எனக்குள்ளாக நான் அவனை அர்ச்சனை செய்து வந்தது அதிகமாயிற்று!

அக்கா கூட அவன் 'அன்பை' பயன்படுத்திக் கொண்டாள். "அது வாங்கித்தா விவேக் ... அதிக ஜரிகையிருந்தால் இந்த கலர் பட்டுப் புடவைக்கு எடுப்பா இருக்கும்..."

வீட்டின் பரம்பரைச் சொத்தாக ஒரு பழைய 'ரிகார்ட் பிளேயர்' இருந்தது. வீட்டின் மொட்டை மாடியில், விளக்கை ஏற்றுமல் இருளோடு இருளாக நானும், விவேக் அண்ணுவும், ஏனென்றே புரியாமல் நெஞ்சை நெகிழ்விக்கும் பழைய பாடல்களைப் போட்டுக் கேட்போம்.

அந்த 'ரிக்கார்ட் பிளேயர்' வீணும்! வீட்டில் ஏற்பட்ட ஏதோ அதிகப்படி செலவுக்கு அதைக் காவு கொ மாறு ஆணை பிறந்தது. அந்த ம ஆணை பிறப்பிப்பதில் அண்ணு, அ அம்மா, எல்லோருமே கட்சி சே விடுவார்கள். முடிந்தவரை நான் ரிக் டின் நட்பைக் காப்பாற்ற நாய குலைத்துப் பார்த்தேன். "படிக்க பாட்டைக் கேட்கிற பரம புத்தி இவன்!" என்று என் மீது பாய்ந்தா "படித்துப் பட்டம் பெற்ற புத்திச ளெல்லாம் என்ன கிழித்தீர்கள்?" பதிலுக்குக் கத்தினேன்.

வாயே திறக்கவில்லை, விவேக் அ அன்றிரவு அனாதையாக நீ அண்ணுவும் அண்ணாந்து பார்த் மாடியில் படுத்திருந்த போது படுகோபத்துடன் அவனைப் ப தேன். "பெரிய்ய விவேகானந் நினைப்பு உனக்கு. வாய் திறந்து என கேட்க மாட்டே. யாரையும் மாட்டே."

வருத்தத்தோடு சிரித்தான் அண்

"எதுக்குடா சண்டை பிடிக்க எல்லாரும், எல்லார்கிட்டேயும் அ அனுசரிச்சுண்டு நடந்தா வாழ் எத்தனை ஆனந்தமா போகும்?"

"உன்னோட வேதாந்தமெல் வெத்து நோட்டு அண்ணு. உன் அன்பு எத்தனை பேரோட அ பிரதியா அடைஞ்சிருக்கு? நல் பேசணும், செய்யணுங்கற கொள்கை எத்தனை பேருக்கு அ முள்ளதா படறது?"

## ஞாபகம் இருக்கட்டும்



"ஏன் வேலைக்காரியைச் சீண்டினீங்

"நீ கட்டி இருந்த புடவையை எடு அவளுக்குக் கொடுத்திட்டே போல இரு அதைப் பார்த்துட்டு அவளை நீதான் நினைச்சு சீண்டிட்டேன்!"

"நீங்க கூடத்தான் உங்க ஷர்ட்டை பேண்ட்டையும் நம்ம டிரைவருக்கு கொ திருக்கீங்க, ஞாபகம் இருக்கா?"

—வெ. சீதா

டென்று இருட்டில் என் தலையைத் தடவிச் சிரித்தான் அண்ணு! க்குப் படறதே!''

ர்த்துப் போன என் மனதில் சடாரென்று அத்தனை சந் ும் சேகரமாயிற்று!

த அண்ணுதான் ஒரு வாரத்திற்கு தாக இன்னும் பத்து நாட்களில் ிற்குச் செல்ல வேண்டும். என்ற ஸ்ஃபர் தகவல் வந்த தேதியி து மூன்ருவது நாளில்—தன் மன லிய பெண்ணை மணந்து கொண்டு ற்கு வந்தான்!

ங்கரமான பூகம்பம்!

திக்கப் பட்டவர்கள் வீட்டின் ிலும், வெளியிலுமான 'விசேஷ' த்தினர்கள்! பிறரின் சந்தோஷம் ாழுதுமே இவர்களைச் சுடும்! னம் கிடையாது.

மனதிற்குள் பெரியதாக ஒரு பூ தது!

வேக் அண்ணுவிற்கென்று ஒரு க்கை!

ழியெங்கும் பூக்களே நிரம்பியிருக் ம்' என்று நெஞ்சார வேண்டிக் ண்டேன்.

வஸ்தையில்லாமல், விவேக் ணுவை எப்படியெல்லாம் திட்டி ள். என்னைப் பெற்றவர்களும், கு முன், பின்ணுகப் பிறந்த மற்ற ளும்.

மா 'ஒப்பாரி' வைக்காத தான்.

ங்கி நின்ற அந்தப் பெண்ணை ஒரு யிரம் முறை சபித்தார்கள்.

ளீஸ் அப்பா அப்பா ... இவளும் ாதிக்கிரு. ஸோ, என் சம்பளம் க்க உங்களுக்குத்தான் அனுப்பப் றேன் ... இந்தக் கல்யாணத்துனுல ப்படையறதுக்குக் கல்யாணம் த தங்கை யாரும் இல்லை ... இவ ந்ன்னு யாரும் கிடையாதுப்பா''.

ருப்படாத கழுதை. குடி கெடுக்கிற குன்னு பொறந்திருக்கயேடா. டு பேரும் கண்காணும எங்கேயா ஒழிஞ்சு போங்கோ ... இனிமே வீட்ல காலடியெடுத்து வைக்கா கா.''










அப்பாவா இப்படியெல்லாம் அவ லட்சணமாகப் பேசுகிறார்?

அம்மா 'நாடக பாணி'யில் கிணற்றடிக்குச் சென்று தலைக்கு நீருற்றிக் கொண்டு வந்தாள்.

மன்னிகளுக்கு முகவாய்க் கட்டையில் இடித்துக் கொள்ளவே நேரம் போதவில்லை.

வாய்க்கு வந்ததைப் பேசி வந்த வழி திருப்பியனுப்பினார்கள் இருவரையும்.

அடுத்த நாள் விவேக் அண்ணாவை அவன் அலுவலகத்தில் சந்தித்தேன்.

"நான் அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்காக அலையலை சந்துரு ... சட்னு அவ அம்மா செத்துப் போயிட்டா. வேற யாருமே இல்லே. திடீர்னு டிரான்ஸ்ஃபரும் வந்து விட்டது. ரொம்ப நல்லவள் சந்துரு. கொஞ்ச நாள் முன்னாடி தான் இங்கே வேலைக்குச் சேர்ந்தா ... அம்மா, அப்பா மனசை வேதனைப்படுத்திட்டேனேன்னு வருத்தமாயிருக்குடா."

"ஸ்டாப் இட்" தாங்க முடியாமல் தெறித்தது வார்த்தைகள். "வருத்தப்பட வேண்டியது அவர்கள்தான். விவஸ்தை கெட்ட தங்கள் பேச்சுக்காக அவர்கள் தான் வருத்தப்படணும்."

"வேண்டாம் சந்துரு. ஒருவேளை அவர்கள் நிலையில் இருந்தால் நாமும் அப்படித்தான் பேசியிருப்போமோ என்னவோ?"

அதிசயத்தோடு அவனைப் பார்த்தேன்! இது என்ன பிறவி? இப்படிக் கூட எல்லாரிடமும் நல்லதே கண்டு நல்லதே பேசி ஒரு ஆத்மா வாழ முடியுமா!

அதற்குப் பிறகு இதோ இந்த சென்ட்ரல் ஸ்டேஷனில் தான் நாங்கள் சந்திக்கிறோம். இடையிலான நாட்கள் வந்த வழி தெரியாமல் விழுந்தடித்துக் கொண்டு ஓடிப் போய்விட்டன.

அண்ணா பூனாவிற்குப் போகிறான் இன்று. என் மேல் படிப்பிற்காக நான் சென்னையிலேயே தங்க வேண்டுமாம். விவேக் அண்ணாவின் வேண்டுகோள்.

சே, நேரம் ஏன் இத்தனை விரைவாக பிரிவுத் திட்டத்தை அமுல்படுத்த ஆவலாக இருக்கிறது? இன்னும் ஐந்தே நிமிடங்கள் தான்—ரயில் கிளம்ப...

"சந்துரு.. விடல் யார் [illegible] என்ன சொன்னாலும் சண்டை போடாதே. அவரவர்கள் மனநிலை யிலிருந்து அவரவர்கள் நியாயங்களை பாரு ... முக்கியமா—மனுஷ குறைகளை வெறுக்கறதை விட்டு, மனுஷங்களை வெறுக்க ஆரம்பித்து விடாதே... கால போக்கில கோபமெல்லாம் காணும போயிடும். நல்லாப் படி...உன் படிப்பு குத் தனியா பணம் அனுப்பறேன். என் வேணுமோ எழுது ... எப்பவு சந்தோஷமாயிரு."

சொற்கள் வழி சொர்க்கத்தை சுவாசிக்கிறேன். வெறுமே தலையசை கிறேன். வார்த்தைகளை உதிர்த்தா கூடவே கண்ணீரும் வழிய ஆரம்பிக்கு வேண்டாம்.

அந்தப் பெண்ணைப் பார்க்கிறே பெங்காலி. சாதாரணமான ஆ சாந்தம் ததும்பும் முகம். 'இந்தத் தம் யும் இவர் குடும்பத்தினரில் ஒருவரா என்னை ஒதுக்கி விடுவாரோ' என்ற வ கண்களில் தேங்கித் தெரிகிறது.

'பெண்ணே...என் அண்ணாவை அவன இருக்க விடு. அவனிடம் அன்பாக இ அனுசரணையாக இரு. அந்த அன்பு அனுசரணையும் ஆங்காலம், போங்கால அதிகமாகிக் கொண்டேயிருக்கட்டும்.'

வீட்டில் விசேஷங்கள் வரும் சமய களிலெல்லாம் பெரியவர்கள் கால்களி விழுந்து வணங்கச் சொல்வார்க 'போலித்தனம்' என்று பிடிவாதமா மறுத்து விடுவேன். "இதிலென்ன வந்தது? நாம் அவர்களை மதிக்கி மென்று அவர்கள் சந்தோஷப்ப வார்கள்" என்று சொல்வான் அண்ண

"அண்ணா—கொஞ்சம் மன்னிகிட் 'குளோஸா' வந்து நில்லேன்."

ஏன், எதற்கு என்று குடைந்தெடுக் மல், புன்முறுவலோடு நான் சொன் தைச் செய்தான் அண்ணா.

சட்டென்று, ஸ்டேஷன் அழுக்கெ லாம் சேர்ந்து நிறம் மாறியிருந்த அ நான்கு கால்களின் செருப்புக்களை எ முகம் முழுமையும், விரல்களைத் ஸ்பரிசிக்குமாறு—சுற்றுப்புறம் என்ன வின் மறைந்து விட — சாஷ்டாங்கமா அவர்களை நமஸ்கரித்தேன்.

ஆறு கண்கள் 'ஆறு'க அந்த ரயி பெட்டி என்னை விட்டு விலகிச் செல்ல துவங்கியது.

அட்டையில் : சுலக்ஷணா   வண்ணப்படம் : ஹரிஷ்

ரூபாய் நூறு
பரிசு பெறும்
ஐந்தாவது
வானவில் கதை

# பச்சை

தஞ்சை கு

இரவு வேளே.

கருப்புப் பெயிண்ட்டில் தோய்த்து எடுத்தது போல் எங்கும் இருள்.

நீளமாய்ப் படுத்திருந்த நெடுஞ்சாலேயில் ஒரு வெண்ணிற ஐஸ் கட்டித் துண்டமாய் வழுக்கிக் கொண்டிருந்த அந்த 'வேன்' சடாரென்று குறுக்குப் பாதையில் வளைந்து நெளிந்து உற்சாகமாய் ஓடியது. கடைசியில் பிரபல 'பயோ கெமிஸ்ட்' டாக்டர் தினேஷ் பானர்ஜியின் எஸ்டேட் பங்களா போர்டிகோவின் கிழ் சிணுங்
வந்து நின்றது.

வேனிலிருந்து 'குபீரென்று' குதித்து வெளி
அரை டஜன் முரட்டு ஆட்களில், ஒருவன்
உள்ளே சென்று 'பஸ்ஸரை' மெல்ல அழுத்தினன்

கதவை கிறீச்சிட வைத்து வந்தவனே ஏ
பார்த்தான் அஸிஸ்டெண்ட் பிரதீப். அவ
டாக்டர் தினேஷ் பானர்ஜி. அவரது கண்
அதீதமான ஓர் அவசரம். உடலுறுப்புகளில் பத
தின் ரேகைகள் படர்ந்திருந்தன.

போன வேலே ஆச்சா...?'' — வந்த
விசாரித்தார் டாக்டர்.

எஸ் டாக்டர்! போன வேலே
ஸ்...'' — வந்தவன் பூரிப்பை
லோடு இழைத்துச் சொன்னுன்.

வெரி குட்! என் ரூமுக்கு உடனே
ண்டு வாங்க...ம்ம்!'' — சொல்லி
டு பிரத்யேக அறைக்கு நடந்து
னுர் தினேஷ்.

டாக்டர் தினேஷின் விசுவாச
லக்குப்பட்ட அந்த முரட்டு ஆட்கள்
தமாய்ச் செயல் பட்டனர்.

வனுக்குள்ளிருந்த ஸ்ட்ரெட்சரில்
க்க முற்றிருந்த மூன்று பெண்களேயும்
ரமாய் தூக்கிக் கொண்டு போய்
க்டர் குறிப்பிட்ட அறையில் கிடத்
ர்.




வரும் நிறைமாத கர்ப்பிணிகள்!
ற்றுப் பிரதேசம் ஒன்பது மாத
ர்ச்சியில் வீங்கியிருந்தது. முகங்கள்
ரென்ற வெண்ணிற ஆடையால்
ப்பட்டிருந்தன.

ஓ. கே! நீங்கள் கொஞ்ச நேரம்
ளியிலே வெயிட் பண்ணுங்க. ட்ரீட்
ண்ட் முடிஞ்சதும் கூப்பிடறேன்.''—
தவர்களே வெளியில் அனுப்பிவிட்டு
புறம் 'பூட்டிக்' போட்டுக் கொண்
ன் பிரதீப்.

'பி ரதீப்! மூணு பேருக்கும்
ல்ல இந்த இன்ஜக்ஷனேப் போடு''
ஞ்ச்சை கையில் கொடுத்துப் போடச்
ன்னுர் தினேஷ்.

ஓகே...ஸார்!'' — சொல்லிவிட்டு
ஜெக்ஷனேப் போடத் துவங்கினுன்
தீப்.

சில அடி தூரத்தில் பதிந்து கிடந்த சுழல் நாற்காலியில் உட்கார்ந்திருந்த டாக்டர் தினேஷ் டேபிள் மீதிருந்த டெஸ்ட் ட்யூப்களில் ஒன்றிலிருந்து கருமையான திரவத்தை எடுத்துச் சாய்த்துப் பார்த்தார். விதவிதமான திரவங்களேக் கலந்தார். கலராய் சில மாத்திரைகளே அதனூடே திணித்தார். 'குபுகுபுவென்று' நுரைத்துப் பொங்கிய திரவத்தில் ஆஸிட்டை விட்டு தெளியவைத்தார். புதியதாய் சேகரித்து வைத்திருந்த ஹிமோகுளோபின்களே அதனுள் மிதக்க விட்டார். கடைசியில் அடர்ந்த பச்சையாய் தெளிந்திருந்த திரவத்தை சிறு பாட்டிலில் அடைத்தார். அதை ஸிரிஞ்சினுல் உறிஞ்சினுர்.

இன்ஜெக்ஷனேப் போட்டு முடித்து வந்த பிரதீப்பிடம் எடுத்துக் காட்டினுர்.

''இதுதான்! எனக்கு பேரும், புகழும் வாங்கி குவிக்கப் போற என்னுடைய பத்து வருட அபாரக் கண்டு பிடிப்பான பச்சை ரத்தம்!'' — சொல்லி விட்டு மெல்லிசாய் சிரித்தார்.

''அப்படி என்ன அபார சக்தி இதிலே இருக்கு?'' — புருவங்களே உயர்த்திக் கேட்டான் பிரதீப்.

''கொஞ்சம் பொறு! இதுகளே அனுப்பிட்டு அப்புறம் சொல்றேன்.''— புன்முறுவலோடு கூறிவிட்டு ஸ்ட்ரெட்சர் அருகே நகர்ந்தார் டாக்டர்.

சில நிமிடத்துளிகள் முழுசாய் கரைவதற்குள்...சிறு பாட்டிலில் அடைத்து வைத்திருந்த அந்த அபூர்வ பச்சை இரத்தத்தை அப்பெண்களின் வயிற்றுப் பிரதேசத்தில் பரவவிட்டார்.

மருந்து பரவிய சில நிமிடத்திற்குள் 'ரியாக்ஷன்' துல்லியமாய்த் துவங்க ஆரம்பித்தது.

ட்ரீட்மெண்ட் முடிந்து அறைக் கதவைத் திறந்து வெளியேவந்த பிரதீப், போர்ட்டிகோவின் கீழ் சிகரெட் புகை வளேயங்களுக்குள் சிக்குண்டு பேச்சில் லயித்திருந்த ஆட்களேத் திரும்பவும் அறைக்குள் அழைத்துப் போனுன்.

''திரும்பவும் இதுகளே எடுத்து கொண்டு போய் நர்ஸிங் ஹோம்லே அவங்கவங்க படுக்கையிலே போட்டுட்டு வாங்க...யாருக்கும் தெரியக் கூடாது... சீக்கிரம்...'' முரட்டு ஆட்களே

## பாம்பு இல்லா பரமசிவ



"எங்கே உங்க கழுத்துல இருக்
அந்த பாம்பைக் காணோம்?"

"அடிச்சு விரட்டிட்டேன். ரெ
திமிராயிட்டுது அதுக்கு. 'என்ன பரம
சௌக்யமானு என்னைப் பார்த்தே கே
கேட்க ஆரம்பிச்சிட்டுது!"

—வீ. வ

---

கிளப்புவதிலேயே துரிதமாயிருந்தார் டாக்டர் தினேஷ்.

அடுத்த ஐந்து நிமிடத்திற்குள் ஸ்ட்ரெட்சரில் மயக்கமுற்றிருந்த அப் பெண்களைச் சுமந்து கொண்டு 'வேன்' போர்டிகோவிலிருந்து காற்றாய்ப் பறந்தது.

தூரத்தில் சிறு புள்ளியாய்த் தேய்ந்து கொண்டிருந்த வேனின் பின்புற விளக்குகள் பார்வையில் மறைந்ததும், டாக்டர் தினேஷும், பிரதீப்பும் பால்கனிக்குச் சென்று 'குஷன்' சேரில் அமர்ந்தனர்.

"டாக்டர்! நீங்க...அந்தப் பெண்களுக்கு ஏற்றிய அந்த பச்சை ரத்தத்தில் அப்படியென்ன விசேஷமிருக்கு...ப்ளீஸ் டெல் மீ...?" பவ்யமாகக் கேட்டான் பிரதீப்.

கையிலிருந்த 555ஐ நீளமாய் இழுத்து விட்ட 'கிக்'கோடு சொல்லத் துவங்கினார் தினேஷ்.

"இப்போ நான் ஏற்றிய பச்சை ரத்தம் பத்து வருஷமாய் நான் ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்த ஒரு திரவம். இந்த திரவம் மனித உடலில் தோலின் நிறத்தை மாற்றக் கூடிய சக்தி வாய்ந்தது. இந்த இரத்தத்தை நான் ஏற்றின ஒரு மணி நேரம் கழிச்சு அந்த 'கர்ப்பிணி'ப் பெண்களுக்கு குழந்தை பிறந்து விடும். அந்தக் குழந்தைகளின் நிறம் என் சோதனையின் நோக்கப்படி தென்னாப்பிரிக்க நீக்ரோக்களை விட பத்து மடங்கு கறுப்பாய் இருக்கும். சில பெண்களின் உடம்பிலுள்ள ரத்தம் இந்த ரத்தத்தோடு 'ரியாக்ஷன்' ஆ குழந்தை சாதாரணமாகவும் பி விடும். அந்தக் குறையை தவிர்க்கத் ஒரே 'குரூப்' பச்சை இரத்தத்தை பெண்களுக்கும் ஏற்றியிருக் அட்லீஸ்ட் ஒருத்திக்காவது கற குழந்தை கண்டிப்பாய் பிறக்கும். போலவே அடுத்து எனது கண்டுபி சிவப்புக் குழந்தை...அதற்கடுத்து ப மஞ்சள்...நீலம்... வெள்ளை ... இப்ப நம்ம விருப்பத்திற்கேற்ப எந்த நிற வேண்டுமானாலும் குழந்தையை உரு கலாம். இந்தக் கண்டு பிடிப்பிற்கா எனக்கு உலக அரங்கில் அவார்டு கிடைக்கலாம்...!" பூரிப்பாய் வார் களை உதிர்த்துக் கொண்டே பே டாக்டர் தினேஷ்.

டாக்டர் கூறிய வார்த்தை கேட்டதும் நம்ப முடியாமல் அப்ப உறைந்து போனான் பிரதீப்.

அவசர அவசரமாய் கா 'சந்தோஷ் நர்ஸிங்' ஹோமுக்கு மு நிறுத்திவிட்டு படிகளேறி உ ஓடினார் டாக்டர் தினேஷ்.

"டாக்டர்! என் வொய்ப் எந்த ரூ இருக்கா ப்ளீஸ் டெல் மீ...?"—ஸ்டெதஸ்கோப் சகிதமாய் வெ கோட்டில் வெளிவந்த பரிச்ச டாக்டரிடம் கேட்டார் தினேஷ்.

"ஓ...! உங்க மிஸஸ்ஸா? ப நம்பர் ரூம்லே இருக்காங்க." செ விட்டு தலையை தாழ்த்திக் கொ போய் விட்டார் எதிரே வந்த டாக

பதட்டத்துடன் வராந்தா கடந்து, பத்தாம் நம்பர் அறை

பிடித்து, மெத்தைக் கட்டிலில் சியுடன் படுத்திருந்த ரம்யாவைக் துமே...தினேஷின் அடிவயிற்றில் பாட்டம் துவங்க ஆரம்பித்தது.

யா...! உனக்கு என்ன ஆச்சு?'' த்தில் வார்த்தைகள் வெடித்துச் ன.

ார்லிங்...! நேத்து நைட் அவசர நீங்க எங்கோ வெளியில கிளம் பிறகு சிறிது நேரத்திற்குள் த இடுப்பு வலி தாங்க முடியவில்லே. ஃபேமிலி டாக்டருக்கு போன் செஞ் ஆனு அவரு ஊர்லே இல்லேயாம். ல நம்ம வீட்டு வேலைக்காரி துணை டாக்ஸி பிடிச்சு நைட் பத்து ங்கு இந்த நர்ஸிங் ஹோம்லே ட் ஆயிட்டேன். வீட்லே வேலைக் கிட்டே நீங்க வந்தா தகவல் லும்படி சொல்லிட்டு வந்தேன். க வந்து பெட்லே சேர்ந்ததும்... பன்னிரண்டு மணிக்கு ஏதோ வாசனை ... எனக்கு மயக்கமா து. அவ்வளவு தான். அதற்கப் புறம் என்ன நடந்ததுன்னு தெரியலே... காலேல நாலு மணிக்குதான் கண் விழிச்சுப் பார்த்தேன். அதற்குள் எனக்கு ஆண் குழந்தை பிறந்திடுச்சாம். ஆனு குழந்தையை நான் இப்போ பார்க்கக் கூடாதுன்னு பெரிய டாக்டர் அவர் ரூமுக்கு குழந்தையை எடுத்துக் கொண்டு போய் விட்டார். நீங்களாவது போய்ப் பாருங்களேன் நம்ம குழந்தை எப்படி இருக்கான்னு...?'' கூறி முடித்து பெருமூச்சொன்றை உதிர்த்தாள் ரம்யா.

ரம்யாவின் வார்த்தைகள் டாக்டர் தினேஷின் மூளைக்குள் மின்னல் பொறியாக எழுந்து கோடு கிழிக்கத் துவங்கியது. ஒரு கணம் மூச்சுக் காற்றே ஸ்தம்பித்து விட்டது.

ஆசுவாசப் படுத்த முயன்று தோற்றுப் போய் வெகுவேகமாய் டாக்டரின் அறைக்குள் ஓடினார் தினேஷ்.

தொட்டிலின் அருகே சென்றார்... பளிச்சென்ற வெள்ளைத் துணியை

இது வாட்டிகன் நகரில்
போப் ஆண்டவர்
வசிக்கும் மாளிகை.
திறந்த சன்னல்தான்
அவர் படிக்கும் அறை.
ஞாயிறு தோறும்
அதில் தோன்றி
வாழ்த்துக் கூறுவார்.



இலேசாக விலக்கி விட்டு குழந்தை
பார்த்தார்.

அந்தக் கணமே...அவர் மண்டை
புதைந்திருந்த ரத்தநாளங்கள் வெ
துச் சிதறி விட்டாற் போல்...

"ஓ! மை...காட்...!" பெருங்கு
கத்தினுர்.

உலகமே உருண்டு வந்து தலை
விழுந்து விட்டது போல் தலை து
மாய் அதிரத் துவங்கியது. நெஞ்ச
மலையாய் வெடித்துச் சிதறியது...

"...என் சோதனையின் நோக்க
தென்னுப்பிரிக்க நீக்ரோக்களை
பத்து மடங்கு கறுப்பாய் இருக்கும்.
பெண்களின் உடம்பிலுள்ள ர
இந்த ரத்தத்தோடு 'ரியாக்
ஆகாமல் குழந்தை நார்மலாயும் பி
விடும். அந்தக் குறையைத் தவிர்
தான் ஒரே 'க்ருப்' பச்சை ரத்த
மூன்று பெண்களுக்கும் ஏற்றியிருக்
அட்லீஸ்ட் ஒருத்திக்காவது கற
குழந்தை கண்டிப்பாய் பிறக்கும். இ
போலவே அடுத்த எனது கண்டு பி
சிவப்புக் குழந்தை...அதற்கடுத்து ப
மஞ்சள்...நீலம் ... வெள்ளை ... இப்ப
நம்ம விருப்பத்திற்கேற்ப எந்த நிற
வேண்டுமானுலும் குழந்தையை உரு
கலாம். இந்தக் கண்டுப் பிடிப்
காகவே எனக்கு உலக அரங்கில் அவ
கூட கிடைக்கலாம்...!" நேற்று இ
எஸ்டேட் பங்களா பால்கனி
உட்கார்ந்து அஸிஸ்டெண்ட் பி
பிடம் பூரிப்புப் பொங்கக் கூறிய அ
வார்த்தைகள் இப்பொழுது அவ
காதுகளில் நாரசமாய் ஒலித்துக் கொ
டிருந்தது.

இத்தனைக்கும் காரணமாய் ... அ
எதிரிலிருந்த தொட்டிலில் அழகிற்கெ
லாம் அப்பாற்பட்டதாய்...அவருடை
பத்துவருட ஆராய்ச்சியில் விளை
பச்சை இரத்தத்தின் வீரியத்தின் வி
வாய்...அவரது நிறச்சோதனையின் மு
வெற்றியாய் ..அவரது குழந்
தென்னுப்பிரிக்க நீக்ரோக்களை வி
பத்து மடங்கு கறுப்பாய்...விழித்
கொண்டிருந்தது. ★

